தமிழ் வாழ்க

# கட்டுரைப் பொழில்




கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சாவூர்.

இரண்டாம் பதிப்பு

1981

வானூர்ந்த பொதியின்மிசை வளர்கின்ற மதியே!
மன்னியமூ வேந்தர்கள்தம் மடிவளர்ந்த மகளே!
தேனூர்ந்த தீஞ்சுனைசால் திருமாலின் குன்றம்
தென்குமரி யாயிடைநற் செங்கோல்கொள் செல்வி!
கானூர்ந்த தேனே! கற் கண்டே! நற் கனியே!
கண்ணே! கண் மணியே! அக் கட்புலம்சேர் தேவி!
ஆனாத நூற்கடலை அளித்தருளும் அமிழ்தே!
அம்மே! நின் சீர்முழுதும் அறைதல்யார்க் கெளிதே!

ஆற்றிடினும் தீயிடினும் அன்பர்தமைக் காத்தே
அவர்வேண்டும் பேறருளும் அன்பே! புன் மாக்கள்
போற்றிடினுந் தூற்றிடினும் பொருள்செய்யாப் பொறையே!
பூவிலிணை மொழியில்லாப் பொலிவுடைய பொற்பே!
மாற்றறியாப் பொன்னே! நன் மணியே! செஞ் சுடரே!
வாடாத மணமலரே! மணந்தருதென் காலே!
ஏற்றவிளங் கோலமுடன் என்றென்றும் வாழ்வாய்!
எங்கரந்தைத் தமிழ்ச்சங்கத் தினிதுறைசெந் தமிழே!

—கரந்தைக் கவியரசு **அரங்க. வேங்கடாசலம் பிள்ளை.**



## இரண்டாம் பதிப்பின்
## முன்னுரை

கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் மணிவிழாவின்போது வெளியிடப்பெற்ற கட்டுரைப் பொழிலின் பெரும் பாலான படிகள் செலவாகிவிட்டமையின், அறிஞர் பலரின் வேண்டுகோளுக்கிணங்க இப்போது இரண்டாம் பதிப்பு வெளியிடப் பெறுகிறது.

ஆய்வுத்திறன் மிக்க அருஞ்சொல் நுண்தேர்ச்சிப் புலவர் பெருமக்கள் பலரும் எழுதிய அரிய ஆய்வுக் கட்டுரைகளின் தொகுப்பாகிய இக்கட்டுரைப் பொழில் தமிழ்த்தாயின் திருவடிகளில் கிடந்தொளிரும் சிறப்புடைய அணிகலன்களுள் ஒன்றாகும். இக் கட்டுரைத் திரட்டிற்கு அணி செய்யும் கட்டுரைகளை எழுதிய டாக்டர் மு. வரதராசனார், ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, மயிலை சீனி வேங்கடசாமி, பண்ணாரய்ச்சி வித்தகர் ப. சுந்தரேசனார் ஆகியோர் இப்போது தம் பூதவுடம்பு நீத்துப் புகழுடம்பு எய்தி விட்டனர். அவர்களுக்குக் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் மதிப்பார்ந்த வணக்கத்தை செலுத்திக் கொள்ளுகிறோம்.

இந்நூலை வாங்கியும் பிறரை வாங்குவிக்கச் செய்தும் ஆதரவு நல்குமாறு அறிஞர் பெருமக்களை அன்புடன் வேண்டுகிறோம்.

நன்றி

இங்ஙனம்,
அன்புள்ள
**எஸ். நடராசன்,**
தலைவர்,
கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை.



## முதற் பதிப்பின் முகவுரை

'தமிழுயர்ந்தால் தமிழ்நாடு தானுயரும்; அறிவுயரும்; அறமும் ஓங்கும்' என்பதை நன்குணர்ந்து செந்தமிழ்த் தாயின் திருவடிகளுக்குத் தொண்டு செய்யத் தோன்றிய நமது கரந்தைத் தமிழ்ச்சங்கத்தின் மணி விழா நினைவாக இக்கட்டுரைத் தொகுதி வெளியிடப் படுகிறது. கட்டுரைப் பொழில் என்னும் பெயர் படைத்த இந்நூலில் வரலாறு, இலக்கணம், இலக்கியம் முதலிய பல துறைகளைப் பற்றிய கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. அருஞ்சொல் நுண்தேர்ச்சிப் புலவர் பெருமக்கள் தமிழ்ப் பொழிலின்கண் புகுந்து கண்டு சுவைத்த காட்சிகளை யெல்லாம் கட்டுரைகளாக்கித் தந்துள்ளனர். வேண்டுகோள் விடுத்த அளவிலேயே மகிழ்ச்சியுடன் கட்டுரைகளை எழுதி வரவிட்ட அறிஞர் பெருமக்களுக்கும், மலர் உருவாவதற்குப் பல்லாற்றானும் துணைநின்ற மலர்க் குழுவினர்க்கும், சிறந்த முறையில் இந்நூலை அச்சிட்டுதவிய தஞ்சைக் கூட்டுறவு அச்சகத்தாருக்கும் எம் நன்றி. இம்மலர் மாலையைத் தமிழன்னையின் திருவடிகளுக்குச் சூட்டி மகிழ்கின்றோம்.

13—4—'73,<br>க. த. ச.

**செ. தனக்கோடி,**<br>சங்கத் தலைவர்.

# பொருளடக்கம்





தன்னலங் கருதாப் பொதுநலத் தொண்டராய்த்
தமிழ்ப்புல வோர்கள் தம்பெருந் தோழராய்
எண்ணில் சிறுர்க்குக் கண்ணருள் அன்னையாய்
உடல்பொருள் உயிரெலாம் உரிமை யாக்கித்
தமிழ்த்தொண் டாற்றிய சங்கத் தலைவர்
செந்தமிழ்ப் புரவலர்

தமிழவேள்

**த. வே. உமாமகேசுவரம் பிள்ளை**

தோற்றம் : 7—5—1883 மறைவு : 9—5—1941

# நமது சங்கமும் தமிழ்மொழி வளர்ச்சியும்

**செ. தனக்கோடி, பி. ஏ.,**
**தலைவர், கரந்தைத் தமிழ்ச் சங்கம்.**

உலக வரலாற்றில் பெரிதும் வியப்புக்குரியதாக விளங்கும் இவ்விருபதாம் நூற்றாண்டின் தொடக்க காலத்தில் நமது சங்கம் பிறந்து, தவழ் நடையிட்டு வளர்ந்து, உரியகாலத்திற் சிறப்பாக வெள்ளி விழாக் கொண்டாடியது. முடிவேந்தர் கால முச்சங்கத்திற் கொடிவிசிப் பறந்தாங்கு நமது தமிழ்மொழி தழைத்துத் தலைநிமிர்ந்து துறைகள்தோறும் வீறுகொண்டெழுந்து ஏறுநடைபயிலும் இக்காலை தன் மணிவிழாவைக் கொண்டாடி இவ்விழா நினைவாக இக்கட்டுரை மலரைச் செந்தமிழ்த்தாயின் திருவடிகளில் சார்த்தி மகிழ்கின்றது. இதுபோது தமிழன்னையின் பொன்னார் கழலில் பொலியும் பூந்தொடைகளையும் கனிவுடைய திருமேனியில் திகழும் மணிமாலைகளையும், பிற அணிகளையும் நாம் கண்ணுற்றுக்களிப்புறுதல் தகும். என்றென்றும் கன்னியாக விளங்கும் நம் தண்ணார் தமிழ்த் தெய்வம் மூவேந்தரும், அவர் வழியினரும், பாவேந்தரும், நாவேந்தரும் இணைந்து புனைந்த முச்சங்கக் கோயிலில் முகமலர்ந்து வீற்றிருந்த செவ்விக்குப்பின், அரசியல், சமுதாயச் சமயப் பூசல்களாலும் தமிழ் மக்களின் அடிமை, மடிமை, மிடிமை முதலாய காரணங்களாலும் உற்ற பல்வேறு இன்பத்துன்பச் சூழலில் சிக்கித் தளராது அன்புசால் புலவருக்கு அருள்செய்து அவ்வக்காலத்து அறிஞரும் புலவரும் ஆர்வத்தோடு அணிவித்த அருஞ்சொற் பாமாலைகளையும் தேமலர்களையும் ஏற்று மகிழ்ந்து விளங்குதலைக் காண்கின்றோம். நமது சங்கம் தோன்றியது முதல் வெள்ளிவிழாவரை தமிழ்த்தாய் புனைந்திருந்த பன்மலர்க் கோவைகளையும் நன்மணிமாலைகளையும் நம் சங்க வெள்ளிவிழாக் கட்டுரை மலர் ஓரளவு சுட்டிக் காட்டுகிறது.

சிவஞான முனிவரின் வழிவழி வந்து பல நறுமலர்களைப் பூத்துத் தமிழ் மணம் பரப்பிய திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளையின் செந்தமிழ்ச் செய்யுள் நூல்களும், மயிலை சண்முகம்பிள்ளை காஞ்சிபுரம் மகாவித்துவான் சபாபதி முதலியார் ஆகியோர் வழிவந்த மாணவர்கள் அருளிய பெறுதகு நூல்களும், உள்ளத்தை இறையுணர்வால் நிறைத்துச் சிந்தையைக் கொள்ளை கொள்ளும் வள்ளலாரின் தெள்ளு தமிழ் அருட்பாடல்களும், தெய்வப்பேறு பெற வழங்கிய சைவை ஆறுமுக நாவலரின் பனுவல்களும், கால்டுவெல், எல்லீசு, போப்பு முதலிய மேலை நாட்டறிஞர்களின் நூல்களும், திருவனந்தைச் சுந்தரம் பிள்ளை, நெல்லை வேதநாயக சாத்திரியார் மாயூரம் வேதநாயகம் பிள்ளை, சைவ சித்தாந்த சண்டமாருதம் சோமசுந்தர நாயகர், சி. வை. தாமோதரம் பிள்ளை முதலிய நற்றமிழ்ச் சான்றோர்கள் வரைந்துள்ள பைந்தமிழ்ச் செல்வங்களும் இவ் இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் பயன்தரத் தொடங்கினமையின் அவற்றை இவ் நூற்றாண்டின் தமிழ் வளர்ச்சிக்கு அடிப்படையாகக் கருதுதல் பொருந்தும். இப் பெருமக்களுள் திரிசிரபுரம் பிள்ளையவர்களின் தலபுராணங்களும் கோவை, அந்தாதி முதலிய

சிற்றிலக்கியங்களும், தமிழ்மொழியின் சொற்செல்வத்தையும் வளத்தையும் இலக்கணச் செழிப்பையும் யாப்பணிகளின் செம்மாப்பையும் தளராமற் காத்துள்ளன எனலாம். மேலும் அவர்தம் ஆசிரியப் பணியால் வித்துவான் தியாகராசச் செட்டியார், உ. வே சாமிநாத அய்யர், தஞ்சை ஐயாசாமிப்பிள்ளை முதலாக இன்றுவரை தமிழாசிரியர் பலர் வாழையடி வாழையாகத் தோன்றித் திகழ்வதைத் தமிழ் வளர்ச்சியின் ஒரு கூறு எனவும் கருதல் வேண்டும். வடலூர் வள்ளலாரின் அருட்பாக்கள் பண்டைத் திருமுறை நூல்களுக்குக் கட்டியங் கூறிக் கற்றோர்க்கும் மற்றோர்க்கும் இறையுணர்வோடு தமிழ்ச் சுவையையும் எழுப்பி வளர்த்துப் பல ஆய்வு நூல்களையும் தோற்றுவித்துள்ளன. ஆறுமுக நாவலர் செம்மையான நூற்பதிப்பு முறையைத் தமிழ் உலகிற்கு முதன் முதலாக அறிமுகப்படுத்தியதோடு நன்முறையில் பல இலக்கண உரை நூல்களையும் விளக்க நூல்களையும் வினு விடை நூல்களையும் எழுதியுள்ளார். இவர்தம் நூல்கள் இலக்கணம் பயில்வோர்க்குப் பெரிதும் துணைபுரிந்து வருகின்றன. சைவசித்தாந்தத்தைப்பற்றி இவர் இயற்றிய எளிய விளக்க நூல்கள் சமயச்சார்பில் நின்று தமிழுக்கு ஆக்கம் புரிந்து வருகின்றன. மேலும் இவர் வழி நின்று பயின்றவர்கள் பலர் தமிழ் வளர்ச்சிக்குத் துணைபுரிந்துள்ளார்கள். இவர்காலத் தெழுந்த அருட்பா மருட்பா வாதத்தால் மேடைத் தமிழ் ஒரு கணிப்பளவிற்கு வளர்ந்த தென்பதையும் மறுக்க இயலாது. அறிஞர் எல்லீசு, போப்பு; முதலானோரால் ஆங்கிலம் முதலிய அயல் மொழி வல்லுநர் மாட்டும் தமிழ்மொழியும் தமிழ் இலக்கியங்களும் செல்வாக்குப்பெற்று வளர்ந்தன. கால்டுவெலின் **திராவிட மொழிகளின் ஒப்பிலக்கண நூல்** மொழி நூலறிஞர்களிடையே தமிழ்மொழிக்குப் பெருஞ் சிறப்பைப் பெற்றுத் தந்ததோடு தமிழ் ஆரியத்தினின்றும் தோன்றியதென்னும் பேதைமையை அகற்றித் தமிழின் தனித்தன்மையையும் தமிழ் உலகில் உள்ள பிற உயர்தனிச் செம்மொழிகளோடு ஒத்த பெருமையுடைய தென்பதையும் திராவிட மொழிகளுக்குள் மூத்தது என்னும் உண்மையையும் உறுதிப்படுத்தியுள்ளது. பேராசிரியர் சுந்தரம் பிள்ளையாலும் பரிதிமாற் கலைஞராலும் மேலைநாட்டு இலக்கிய நெறியோடு எழுதப்பெற்ற நாடக நூல்கள்; சிறப்பாகக் கல்லூரி மாணவர்களிடையே தமிழ் மொழிப் பற்றைத் தோற்றுவித்தன. பரிதிமாற்கலைஞர் ஆரியமொழி நாடக இலக்கியங்களை ஒட்டி இயற்றிய **'நாடகவியல்'** என்னும் நூல் தமிழ் நாடக இலக்கிய வளர்ச்சிக்குத் துணைபுரியவில்லையெனினும் இலக்கண நூல் வரிசையில் குறிப்பிடத்தக்கதொன்றாகும்.

இனி, **தொல்காப்பியம், கலித்தொகை வீரசோழியம். தணிகைப்புராணம்** ஆய சீர்த்திமிக்க நூல்கள் தாமோதரம்பிள்ளையால் பதிக்கப்பெற்றன. வ. உ. சிதம்பரம் பிள்ளை தொல்காப்பிய இளம்பூரணருரையை அரிதின் முயன்று செப்பனிட்டுப் பதிப்பித்துத் தொல்காப்பியப் பயிற்சிக்குத் துணைபுரிந்ததோடு திருக்குறள் பாயிர ஆராய்ச்சிக் கட்டுரையை எழுதித் திறனாய்வுத்துறையில் ஒரு புதுமையைத் தோற்றுவித்தார். மேலும் கவிதை நடையில் தன்னுடைய வரலாற்றை எழுதித் தன்வரலாற்று நூல்களுக்கோர் புது வழியும் காட்டினர். கவிஞர் எ. ஆ கிருட்டினபிள்ளை எழுதிய **இரட்சணிய யாத்திரிகம்** முதலிய நூல்கள் கிறித்தவ சமயத்தவரிடையே தமிழ்ப் பயிற்சியை ஏற்படுத்தியதோடு அவர்தம் உள்ளங்களில் தமிழ் மொழியின் பால் பெருமதிப்பையும் தோற்றுவித்தன. பிச்சை இபுராகிம் புலவரின் **திருமதீனத்துக்கலம்பகம், நாயகத்திருப்புகழ், மொகிதின் ஆண்டவர் மாலை** முதலிய நூல்கள் முகமதியரிடையே தமிழ்மொழிப்பற்றை எழுப்பிப் புலவர் பலர் தோன்றக் காரணமாயின.

**சிவஞான போதம், சிவஞான சித்தியார்** முதலான சமயதத்துவ நூல்களை ஆங்கிலத்திற் பெயர்த்தும், **சித்தாந்ததீபிகை** என்னும் இதழ் வாயிலாகத் தமிழ் இலக்கிய இலக்கணங்கள், சமயம் முதலியன பற்றி

ஆங்கிலத்தில் எழுதியும் தமிழ் வளர்த்த ஜே. எம். நல்லசாமி பிள்ளையும்-தமிழர் பழங் கலை ஆராய்ச்சிக் கழகம் ஒன்றை நிறுவித் **'தமிழர் தொன்மை தொகுப்போன்'** என்னும் தாள்வாயிலாகத் தமிழ் வளர்த்த பண்டித சவரிராயரும், சமயச் சார்பில் நின்று விரிவுரைகளாலும் கட்டுரை நூல்களாலும் சைவத்தையும் தமிழையும் வளர்த்த சைவ சித்தாந்த சண்டமாருதம் சோம சுந்தர நாயக்கரும் குறிப்பிடத் தக்கவர்களாவார்கள். இவ்வாறே எளிய முறையில் இலக்கண, இலக்கிய நூல்கள் வரைந்தும் செல்வர்களை நாடி அவர் உவக்க அவ்வப்பொழுது ஆங்காங்கே பல தனிப்பாக்களை இயற்றியும் தமிழ் வளர்த்த பெருமக்கள் பலராவர். தஞ்சையில் வாழ்ந்த குப்புசாமிராசு தமிழில் ஐந்திலக்கண நூல் ஒன்றை எழுதியும் வடமொழி நூல்கள் பலவற்றைத் தமிழில் மொழி பெயர்த்து அச்சிட்டும் வழங்கியுள்ளார். தேவகோட்டையில் அமைந்திருந்த வேதாகமசங்கம் தமிழிற் சில நூல்களை ஆக்கி உதவி மறைந்தது. இவ்வாறு தோன்றி ஓரளவு பணியாற்றி மறைந்த நிறுவனங்கள் பல.

இனி, இந்நூற்றாண்டின் தொடக்க காலத்தில் தோன்றிய இலக்கிய இதழ்கள் என்ற வகையில் ஓரளவு இலக்கியக் கட்டுரைகளையும் தாங்கி வந்த **ஆனந்தபோதினி பிரசண்டவிகடன், வாணிவிலாசனி பால பாரதி, பிழைக்கும் வழி, சனவிநோதினி, கலாநிலையம், திராவிடன் தேசபக்தன்** முதலியவற்றைக் குறிப்பிடலாம். இவற்றுள் **தேசபக்தன்** தமிழ் உரை நடையில் செய்தித் தாள் உலகிற்குப் புது நெறிகாட்டித் தமிழ் வளர்ச்சிக்குத் துணை புரிந்ததெனலாம்.

மேற்குறித்த பல்வேறு நிலைகளுக்கப் பால் தனி முறையில் பழம் பணி புதுக்கியும் புதுப்பணி குயிற்றியும் தமிழ் வளர்த்த அறிஞருள் டாக்டர். உ. வே. சாமிநாத அய்யர் சிறப்புடையவராவார். இவர் தமிழகத்துள் ஆங்காங்கே அறிவோரும் ஆய்வோருமின்றிப் பரண்களில் பழுதுற்றுக் கிடந்து மறைய விருந்த பைந்தமிழ் ஓலைச்சுவடிகளை அரிதின் முயன்று திரட்டி ஆராய்ந்து அதுகாறும் வெளிவராதிருந்த பல நூல்களை மேலை நாட்டு நூற்பதிப்பாளர்களும் பாராட்டும் வண்ணம் அச்சிட்டு வெளியிட்டார். இவர் பதிப்பித்த அரும்பதவுரை, அடியார்க்கு நல்லார் உரை ஆகியவைகளுடன் கூடிய சிலப்பதிகாரம், நச்சினார்க்கினியர் உரையோடமைந்த **சீவகசிந்தாமணி, பத்துப் பாட்டு** ஆகியவையும் பழைய உரையோடமைந்த **புறநானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து** முதலியவையும் போற்றத் தக்கவை. இவரே குறிப்புரை முதலியன எழுதி வெளியிட்ட **பெருங்கதை** முதலியவை சிறப்புடையவை. இவை எல்லாவற்றினும் அருஞ்சொல் அகரவரிசை, ஒப்பியற்பகுதி, மேற்கோள்பகுதிகள் அமைந்துள்ளமை பதிப்பு முறைக்கு வழிகாட்டின எனலாம். இவர் தம் ஆசிரியராகிய பிள்ளையவர்களின் வரலாற்றைச் சுவையோடு வரைந்தும் அவர் இயற்றிய சிற்றிலக்கியங்கள் பலவற்றைத் தொகுத்து **மீனாட்சிசுந்தரம் பிள்ளை பிரபந்தத் திரட்டு** என ஒரு நூலையும் அச்சிட்டுப் பரப்பினர். இவ்வாறே வித்துவான் தியாகராசச் செட்டியாரின் வரலாற்றையும் எழுதி வெளியிட்டார். அன்றியும் இவர் தம் வாணாளில் பெற்ற அனுபவங்களையும், தமிழ் வளர்ச்சிக்குத் துணைபுரிந்த பெரியோர்கள், வள்ளல்கள் ஆகியவர்களையும் பற்றிச் சுவை மிகு கட்டுரை நூல்கள் பல எழுதியும், **குறுந்தொகைக்குத்** தெளிவான உரை வரைந்தும் புறப்பொருள் **வெண்பாமாலை, தமிழ்விடுதூது** முதலிய பல நூல்களைக் குறிப்புரையோடு அச்சிட்டும் தமிழ் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியுள்ளார். இவர் சமய இலக்கியங்களுக்கும் தமிழ் வரலாற்றிற்கும் ஆற்றியுள்ள பணியை அடையாறு கலாச்சேத்திர நூலகம் இன்றும் மலைவிளக்காகக் காட்டாநிற்கும்.

அடுத்து, நூற்பதிப்பு, உரைவரைதல், புதிய நூலாக்கம் என்ற வகையில் **நற்றிணைக்கு நல்லுரை வரைந்து, பழையது விடுதூது** முதலிய சிற்றிலக்கியங்களைச் செய்

தளித்த, பின்னத்தூர் நாராயணசாமி அய்ய ரையும், பழந்தமிழ் நூல்கள் பலவற்றைச் சிறப்பாக அச்சிட்டு வெளிப்படுத்தியும் சென்னைப் பல்கலைக் கழகத்தில் இயன்ற வரைத் தமிழ் இடம்பெறச் செய்தும், தமி ழாசிரியர்களுக்கு மதிப்பையும் சிறப்பையும் பெற்றுத் தந்தும் விளங்கிய கா. நமச்சிவாய முதலியாரையும் குறிப்பிடலாம். இவர் முதல் வகுப்புமுதல் கல்லூரி முதுகலை வகுப்புவரையுள்ள எல்லா வகுப்புக்களுக்கும் உரிய தமிழ்ப்பாட நூல்களை எழுதித் தமிழ் வளர்ச்சிக்குப் பெருந்துணை புரிந்துள்ளார். **குறுந்தொகை** மூலத்தை முதன் முதல் அச்சிட்ட சௌரிப்பெருமாளரங்கனும், **அகநானூற்றைப்** பதிப்பித்த இராசகோபால ஐயங்காரும், ஒப்பியற் பகுதிகளோடு **கலித் தொகையை** மிகச் சிறப்பாக அச்சிட்டுதவிய வை. அனந்தராமையரும் குறிப்பிடத்தக்கவர் களாவர். கிருட்டினமாச்சாரியார், இராமா னுசாச்சாரியார், கோபாலகிருட்டினமாச்சாரி யார் ஆகியோர் **கம்ப ராமாயணம், வில்லி பாரதம். அட்டப்பிரபந்தம்** ஆய நூல்களுக்கு உரை எழுதியும், திருக்குறள் பரிமேலழகர் உரைக்கு விளக்கமெழுதியும், நன்னூலுக்கு வடமொழிச் சார்பு விளங்கக் காண்டிகை வரைந்தும் **பத்துப் பாட்டி**ற்குப் பதவுரை எழுதியும் வெளியிட்டனர். இவர்கள் எளிய இனிய தமிழ்ச் சொற்கள் இருக்கவும் வட சொற்களை மிகமிகக் கலந்து எழுதியமை தமிழ் மொழியின் சொற்பொருள் வளர்ச்சிக் குக் குறைசெய்வதாயினும் இவர்தம் பணி இலக்கியப் பயிற்சிக்கு ஓரளவு பயனுயது எனலாம்.

கற்றுரைவைகளில் சொற்பெருக்காற்றி யும், இலக்கிய இதழ்களில் ஆய்வுக் கட்டுரை கள் வரைந்தும், மறுப்புரைகள் எழுதியும், **திருக்குறள் பாயிர விருத்தி, நுண்பொருட் கோவை. தொல்காப்பியப் பாயிர விருத்தி** முதலிய நூல்களை ஆக்கியும். தமிழ் இலக்கண மாண்பை வெளிப்படுத்திய சோழவந்தானூர் அரசஞ்சண்முகனூரும்; இவ்வாறே பல கட் டுரைகள் வரைந்தும், மறுப்புரைகள் எழுதி யும் இலக்கண இமயமெனத் திகழ்ந்த மன்னார்குடி. நா. சோமசுந்தரம் பிள்ளையும், **தமிழ்ப்பொழில்** வாயிலாகத் தொல்காப்பிய அகத்திணை, புறத்திணை மெய்ப்பாட்டியல் களுக்குப் புரட்சி மிக்க புத்துரை வரைந்த நாவலர் சோமசுந்தர பாரதியாரும் இலக் கணத் துறையில் தமிழ் வளர்ச்சிக்குத் துணை புரிந்தவர்கள் ஆவர். மற்றும் நச்சினார்க்கினி யர், பேராசிரியர் உரைகளுக்குக் குறிப்புரை வரைந்து தொல்காப்பியம் முழுவதையும் வெளியிட்ட யாழ்ப்பாணம் கணேசையரும், தொல்காப்பிய எழுத்து—சொல்லதிகாரங்க ளுக்கு ஆராய்ச்சிக் குறிப்புரை எழுதிய டாக்டர் பி. சா. சுப்பிரமணிய சாத்திரியாரும் ஈண்டு கருதத்தக்கவராவார்கள். கரந்தைக் கவியரசு அரங்க. வேங்கடாசலம் பிள்ளை நமது சங்கச்சார்பாகச் செப்பனிட்டு வெளி யிட்ட தொல்காப்பியச் சொல்லதிகாரத் தெய்வச்சிலையார் உரை நூலும் ஈண்டுக் குறிப்பிடத்தக்கதாகும்.

தமிழ் இலக்கிய – இதிகாச – புராணங் களுள் வரும் சிறப்புப் பெயர்களையும் அப் பெயர்களை ஒட்டி வரும் பொருட்பெயர் களையும் அகரவரிசையில் தொகுத்து விளக்க மெழுதி **அபிதான சிந்தாமணி** என்ற பெய ரால் சிறியதொரு கலைக் களஞ்சியமாக வெளியிட்ட சிங்காரவேலு முதலியாரின் தொண்டு போற்றத்தக்கதாகும். இப்பணிக்கு அடிப்படையாக இருந்தவை ஈக்காடு இரத்தினவேலு முதலியாரின் **சிறப்புப் பெயரகராதி** என்ற நூலும், அ. முத்துத் தம்பிப்பிள்ளையின் **அபிதானகோசம்** என்னும் நூலுமெனக் கூறலாம். தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையத்திலிருந்த தமிழ் நூற் சுவடிகளின் அட்டவணையைத் தொகுத்த தோடு, **கன்றுங்கனி உதவும், கரிகால் வளவன்** முதலிய சிறு நூல்களையும் கல் வெட்டாராய்ச்சிக் கட்டுரைகளையும் எழுதிய பண்டித எல். உலகநாதபிள்ளையும் நினையத் தக்கவராவர்.

நாட்டு வரலாறு, அரசர்கள் வரலாறு என்ற வகையில் அரசாங்கச் சார்பிலும், பல் கலைக்கழகச் சார்பிலும், தனித்தும் பணி

யாற்றிய டாக்டர் உல்சு, வெங்கையர், கிருட்டின சாத்திரியார், சுப்பிரமணியஅய்யர், கோபிநாதராயர், அறிஞர் கிருட்டினசாமி ஐயங்கார், கே. சி. சேசையர், நீலகண்ட சாத்திரியார், டாக்டர் துப்ரீல், பி. டி சீனிவாசஐயங்கார், எசு. ஆர். சர்மா. எசு. கே. கோவிந்தசாமி பிள்ளை முதலானோர் எழுதிய நூல்களும் ஆராய்ச்சிக் கட்டுரைகளும், பண்டித உலகநாதபிள்ளை, மு இராகவையங்கார், தி. வை. சதாசிவப்பண்டாரத்தார், கே. கனகராசய்யர், டாக்டர் மா. இராசமாணிக்கனுர், தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர் முதலானோரின் ஆய்வு நூல்களும், அரசாங்கப் பழங்கலை ஆராய்ச்சித் துறையினர் வெளியிட்ட அறிக்கைகளும், இதழ்களும், **இந்தியக் கல்வெட்டு கர்நாடகக் கல்வெட்டு** முதலிய இதழ்களில் வெளிவந்த கட்டுரைகளும், **பண்டை இந்தியா** முதலிய நூல்களும், இதுகாறும் அரசாங்கத்துறையினரால் வெளியிடப்பெற்றுள்ள கல்வெட்டுக்களும், **''தென்னிந்திய கோயிற் சாசனங்கள்''** கனகரத்தினம் எழுதிய **''தென்னிந்திய சிற்பங்கள்''** என்னும் நூல்களும் குறிப்பிடத்தக்கவையாகும். இன்னும் வெளிவராத பல கல்வெட்டுக்கள் உள. இக் கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் தக்க முறையில் வெளிவருமாயின் தமிழக வரலாற்றைத் தெளிவாக அறிய நமக்கு இவை பெரிதும் உதவும்.

இலக்கிய வரலாறு, புலவர்கள் வரலாறு கால ஆராய்ச்சி ஆகியவற்றின் தொடர்பாக எழுந்த நூல்களை நோக்கின் **வள்ளுவர், பட்டினப்பாலை ஆராய்ச்சி** முதலியவற்றை எழுதிய மறைமலையடிகளாரின் **மாணிக்க வாசகரும் கால ஆராய்ச்சியும்** என்னும் ஆய்வு நூல் பின்னர்ப் பல ஆராய்ச்சி நூல்கள் எழக் காரணமாயிற்றெனலாம். இவர் **முல்லை, ஞானசாகரம்** (தமிழ்க்கடல்) என்னும் திங்களிதழ் வாயிலாக எழுதிய கட்டுரைகளும், செல்வகேசவராய முதலியாரின் **கம்பர், வள்ளுவர் வரலாறு** ஆகிய நூல்களும் எம். எசு. பூர்ணலிங்கம் பிள்ளை ஆங்கிலத்தில் எழுதியுள்ள **தமிழ் இலக்கிய வரலாறும்,** கு. நாராயணசாமி எழுதியுள்ள புலவர்கள் வரலாறும், நாவலர் சோமசுந்தர பாரதியாரின் **தசரதன் குறையும் கைகேயி நிறையும், சேரர்தாய முறை** முதலிய ஆய்வுக் கட்டுரைகளும், மகாவித்துவான் இரா. இராகவ அய்யங்காரின் **தமிழ் வரலாறும் வேளிர் வரலாறு** முதலிய கட்டுரைகளும், கா. சுப்பிரமணிய பிள்ளையின் தமிழ் இலக்கிய வரலாறும், பரிதிமாற் கலைஞரின் தமிழ்மொழி வரலாறும் குறிப்பிடத்தக்கவையாகும்.

எம். சீனிவாசய்யங்காரும் பீ. டி. சீனிவாசய்யங்காரும் ஆங்கிலத்தில் எழுதியுள்ள இலக்கிய ஆராய்ச்சிக் கட்டுரைகளும், கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை எழுதியுள்ள கல்வெட்டாராய்ச்சிக் கட்டுரைகளும், **மருமக்கள் மான்மியமும்.** நாவலர் ந. மு. வே. நாட்டாரின் **சோழர் வரலாறு, வேளிர் வரலாறு, கள்ளர் சரித்திரம், நக்கீரர்** முதலிய நூல்களும், ஔவை சு. துரைசாமிப் பிள்ளையின் **கபிலர், பரணர்** என்ற நூல்களும், சதாசிவம் எழுதிய **சேரநாடும் செந்தமிழும்** என்னும் நூலும், மு. இராகவையங்கார், இலக்கண விளக்கப் பரம்பரை சோமசுந்தர தேசிகர் ஆகியோரின் கட்டுரைகளும் கருதத்தக்கவையாகும்.

மொழியாராய்ச்சி என்ற வகையில் மாகறல் கார்த்திகேய முதலியாரின் மொழி நூலும், கா. சுப்பிரமணிய பிள்ளையின் மொழி நூலும், வேங்கடராயலு ரெட்டியாரின் **திராவிட மொழிகளின் மூலிடப்பெயர்** என்னும் நூலும், பி. சா. சுப்பிரமணிய சாத்திரியாரின் மொழிநூலும் யாழ்ப்பாணம் ஞானப்பிரகாசரின் சொற்பிறப்பியலகராதியும் எண்ணத் தக்கவையாகும்.

இடைக்காலத்தில் அரசியற் சூழல், அயல்மொழிச் செல்வாக்கு முதலிய காரணங்களால் புதுநோக்குடன் எழுந்த இலக்கிய வகையில் மறைமலையடிகளின், **தொலைவில் உணர்தல், மக்கள் நூற்றாண்டு வாழ்வதெப்படி, மரணத்தின்பின் மனிதன் நிலை** முதலியவையும், சாகுந்தல நாடகமொழி

பெயர்ப்பும் அதுபற்றிய ஆராய்ச்சிக் கட்டுரையும், **கோகிலாம்பாள் கடிதங்கள்** முதலிய புதினங்களும், **சிந்தனைக் கட்டுரைகளும்**, அ. மாதவையா, பண்டித நடேச சாத்திரியார் ஆகியோர் எழுதிய புதினங்களும் பொன்னுசாமிப் பிள்ளை எழுதிய நெடுங்கதைகளும் குறிப்பிடத்தக்கவை. மற்றும் முதன் முதல் வரலாற்றுப் புதினங்கள் என்ற முறையில் யாழ்ப்பாணம் சரவணப்பிள்ளையும், முத்துசாமி ஐயரும் எழுதிய கதைகளும் வடுவூர் துரைசாமி ஐயங்கார், ஆரணி குப்புசாமி முதலியார் ஆர். ரெங்கராசலு, வை. மு. கோதை நாயகியம்மாள் போன்றவர் எழுதிய நீண்ட புனை கதைகளும் கருதத்தக்கவை.

இலக்கியச் செஞ்சொற்கள் மலிந்த நறுந் தமிழைச் சுருங்கிய தொடர்களால் உணர்ச்சி தோன்றப் பேசியும் எழுதியும் அரசியலிற் செந்தமிழ் நடை செல்லாதென்ற கருத்தைக் களைந்து பொதுமக்களும், தொழிலாளர்களும் உணர்ந்து மகிழும் வண்ணம் மேடைத் தமிழை வளர்த்த திரு. வி. கல்யாணசுந்தர முதலியார் அவர்கள் **பெண்ணின் பெருமை முருகன் அல்லது அழகு, தமிழ்த் தென்றல் தன்னை வேட்டல்**, முதலிய உரைநடை நூல்களையும், **முதுமை உளறல், படுக்கைப் பிதற்றல்** முதலிய செய்யுள் நூல்களையும் எழுதி இலக்கியத் துறையில் ஒருபுத்துணர்ச்சியை ஏற்படுத்தினர். மேலும் இவர் வரைந்த **திருக்குறள் பாயிர விரிவுரையும் பெரியபுராணக் குறிப்புரையும்** தன்வரலாற்று நூலும் குறிப்பிடத்தக்கவையாகும்.

மொழிபெயர்ப்பு, புதினம், சிறுகதைகள் என்ற நிலையில் பண்டிதமணியவர்களின் **மண்ணியல் சிறுதேரும், கௌடில்யரின் பொருள்நூலும்**, சில கட்டுரைகளும், வெ. ப. சுப்பிரமணிய முதலியாரின் **சுவர்க்க நீக்கமும்**, நாவலர் சோமசுந்தர பாரதியாரின் **மாரிவாயிலும்** குறிப்பிடத்தக்கவை. கண்ணபிரான் பிள்ளை அ. மாதவையா, த. ந. குமரசாமி முதலானோர் மொழிபெயர்த்தெழுதிய சில சேக்சுபியர் நாடகங்களும், **ஆனந்த மடம், விடவிருட்சம், குமுதினி,** எரி **நட்சத்திரம் வெறுங் கோயில், கிரௌஞ்சவதம்** போன்றவைகளும் செம்மையான தமிழ் உரை நடையில் இயலவில்லையெனினும் கற்பனை, கருத்து விளக்கம் முதலிய இலக்கியப் புது நோக்கு வளர்ச்சிக்கு உதவின எனலாம். சிறுகதை கட்டுரைகள் என்ற பிரிவில் புதுமைப் பித்தன் வா. இராமசாமி ஐயங்கார், கு. ப. இராசகோபாலன் ஆகியோர் எழுதிய சிலவற்றைக் குறிப்பிடலாம். இவ்வகையில் சில கிழமை இதழ்களும் திங்களிதழ்களும் ஓரளவு துணை புரிந்துள்ளன.

ஆங்கிலம் படித்து அதனையே பெருமையாகவும் சிறப்பாகவும் கருதி வாழ்ந்த தமிழர் பலரைத் தன் சுவையுணர்வாலும் அன்பாலும் தமிழ் இலக்கியச் சுவைஞர்களாக்கியும், பலருக்கு விருப்பமில்லையாயினும் ஒரு புதுமையான மாறுதலைச் செய்து கம்பராமாயணத்தைப் பதிப்பித்தும் உலகவழக்கு நடையில் எழுதியும் பேசியும் தமிழ் வளர்த்த டி. கே. சிதம்பரநாத முதலியார் குறிப்படத்தக்கவராவர்.

செய்யுள் நடையில் தோன்றிய புதிய இலக்கியங்கள் என்ற வகையில் வெ. ப. சுப்பிரமணிய முதலியார் இயற்றிய **நெல்லைச் சிலேடை வெண்பா, கோம்பி விருத்தம், அகலிகை வெண்பா, முதலிய நூல்களும்,** ரா. இராகவையங்கார் எழுதிய **புவி எழுபது** முதலிய நூல்களும், சதாவதானம் சுப்பிரமணிய அய்யர் எழுதிய **இராமாயண வெண்பா** முதலியவைகளும் பாம்பன் சுவாமிகள் எழுதிய எண்ணற்ற பக்திப் பாடல்களும், சிற்றிலக்கியங்களும், கந்தசாமிக் கவிராயரின் **குமண சரித்திரமும்** ஐ. சாமிநாத முதலியாரின் **சாவித்திரி வெண்பாவும்** அரசஞ்சண்முகனாரின் **இன்னிசை இருநூறும், ஏகபாத நூற்றந்தாதியும்,** பரிதிமாற்கலைஞரின் தனிப்பாசுரத் தொகையும், சில தனிப்பாடற்றிரட்டுக்களும் குறிப்பிடத்தக்கன.

நாட்டு விடுதலை உணர்வு அரும்பிய காலத்து அதற்கு உணர்வு நீரூட்டி வளர்த்த

பெருமக்களுள் நாட்டு விடுதலைக்கேயன்றிச் சமுதாய விடுதலைக்கும், பொருளாதார விடுதலைக்கும், இடைக்காலப் பழமைப் போக்கில் சிக்கிக்கிடந்த தமிழ் உரைநடை, செய்யுள் நடை, பொருந்தாக் கற்பனை முதலியவற்றின் விடுதலைக்கும் முதற்கண் வன்மையான கவிதைக்குரல் கொடுத்தவர் அமரகவி சுப்பிரமணிய பாரதியாராவார். தமிழ் மொழியின் எளிமை இனிமை, உணர்ச்சி நலம், சீர்முறை, இசை நயம் தோன்றப் பாரதியார் இயற்றிய நாட்டுப்பாடல்களும், கற்பனைத் தேனருவியான **கண்ணன் பாடலும்** தத்துவச்சுரங்கமாகிய **குயில் பாட்டும்** காப்பியச் சோலையாகிய **பாஞ்சாலி சபதமும்** தமிழ் மொழியின் வளத்தையும் செம்மாப்பையும் பலர் அறிந்து பின்பற்றச் செய்துள்ளன எனலாம். பாரதியார் காலத்தெழுந்த அரசியல் சமுதாய உணர்ச்சியால் நாட்டுத்தலைவர்களைப் பற்றிப் பண்டித அசலாம்பிகை அம்மையார் எழுதிய **திலகர் மான்மியமும்,** **காந்திப்புராணமும்,** ராய. சொக்கலிங்கனார் எழுதிய **காந்தி பிள்ளைத்தமிழும்** சில தனிப்பாடல்களும் குறிப்பிடத்தக்கவை.

பொறியியல் துறைபயின்று பிறதுறைகளிலும் ஆற்றல்பெற்று விளங்கிய திரு பா. வே. மாணிக்கநாயக்கரின் தமிழ் வரிவடிவ ஆராய்ச்சிக் கட்டுரைகளும் சொற்பொழிவுகளும் நுண்மாண்புடையவை. பிற மொழிகளைத் தமிழ் எழுத்துக்களைக்கொண்டே பிழையின்றி ஒலிக்கலாம் என நிறுவியும், ஆரிய மொழியின் துணையின்றித் தனித்தமிழால் எல்லாக் கருத்துக்களையும் சுட்டி வழங்க இயலும் என்பதனைச் செயற்படுத்தியும் தமிழ்மொழி வளர்ச்சிக்குத் துணைபுரிந்த இவர் தமிழ்எழுத்துக்களின் மறைநிலை, ஒலியிலக்கணக் குறிப்புக்கள், **அஞ்ஞானம், வான்மீகரும் கம்பரும், தமிழகத் தோற்றம்** முதலிய சிறு நூல்களையும் இயற்றியுள்ளார்.

தமிழ் நூல்களைப் பிற மொழிகளில் பெயர்த்து அவ்வகையில் தமிழின் பெருமையை வளர்த்த இடைக்கால அறிஞர்களுள் திருக்குறளையும், நாலடியாரையும், திருவாசகத்தையும் மொழிபெயர்த்த போப்பும், தாயுமானவர் பாடல்கள் பலவற்றை மொழிபெயர்த்த செ. எம் நல்லசாமிப் பிள்ளையும், கம்பராமாயணத்தில் சிலவற்றை மொழிபெயர்த்த வ. வே. சு. ஐயரும், ஐசக் தம்பையாவும் குறிப்பிடத் தக்கவர்கள்,

விரிவுரைகளாற்றியும் மாணவர் பலருக்கு பாடஞ் சொல்லியும் தமிழ் வளர்த்த பெரியார்களுள் திருப்பாதிரிப்புலியூர் தவத்திரு சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாச்சாரியசுவாமிகள் அவர்கள் சிறப்புடையவர்கள். மற்றும், திருக்கோயில்கள், மன்றங்கள், மடங்கள் இவற்றின் விழாக்காலங்களில் நிகழ்ந்த திருமுறைகள்—புராண—இதிகாசங்களின் விரிவுரைகள் தமிழ் இலக்கிய உணர்ச்சியை மக்களிடையே மறையாது காத்துவந்தன.

இயற்றமிழ் வளர்ச்சி இவ்வாறாக இசைத்தமிழ் வளர்ச்சியில் இவ்விடைக் காலத்தில் குறிப்பிடத்தக்க புரட்சி தமிழிசைக்கிளர்ச்சியாகும். தமிழிசை யியக்கத்தை முன்னின்று நடத்திய பெருமை அண்ணாமலையரசரையும், அவர்தம் பல்கலைக் கழகத்தையும் சாரும். இக்கழகம் இசைப்பிரிவொன்றைத் தோற்றுவித்து அதன் வாயிலாக யாழ், முழவு, குரலிசைப் பகுதிகளைத் தக்க பேராசிரியர்களைக் கொண்டு மாணவர்களுக்குப் பயிற்சியளித்தும் இருபது தொகுதிகளுக்குமேல் தமிழிசைப் பாடல்களைச் சுரப்படுத்தி வெளியிட்டும், முழவு, இசைக்கருவிகள் பற்றி ஆராய்ச்சி நூல்கள் எழுதச்செய்தும் ஊக்கம் அளித்துவருகிறது. சென்னைத் தமிழிசைச் சங்கம் ஆண்டுதோறும் தேவாரப் பண்களைக் கருநாடக இசைமரபோடு ஒப்பிட்டு ஆராய்ந்தும் அவ்வாராய்ச்சி முடிபுகளை நன்முறையில் அச்சிட்டு வெளிப்படுத்தியும் தனித் தமிழ்ப் பாடல்களைத் தக்க இசையறிஞர்களைக் கொண்டு பாடுவித்தும் இன்றளவும் தொண்டாற்றிவருவது பாராட்டத்தக்கதாம். இவ்வியக்கம் வளர அண்ணாமலையரசர்க்குத் துணைபுரிந்தவருள் அவர்கள் மகனார் திரு. முத்தையா செட்டியாரும், வீரத்திரு ரா. க. சண்முகஞ் செட்டியாரும் குறிப்பிடத்தக்கவர்கள்.

இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் தஞ்சையில் வாழ்ந்த ஆபிரகாம் பண்டிதரின் பெருமுயற்சியால் அரிய ஆராய்ச்சிகளோடு தோன்றியது **கருணாமிர்த சாகரம்** என்னும் இசை நூலாகும். இவ்வகையில் **கந்தசாமி** சுவாமிகள் எழுதிய **மாணிக்கவாசகர் சரித்திரக் கீர்த்தனை**யும் இவர்களன்னோர் எழுதிய சில பல கீர்த்தனைகளும் நாட்டு விடுதலைபற்றி அவ்வப்பொழுது வர்ணமெட்டுக்களில் தோன்றிய சில இசைப்பாக்களும் ஈண்டுக் கருதத் தக்கவையாகும்.

நாடகத்தமிழ் என்ற முறையில் இடைக் காலத்தில் செய்யுள் வடிவில் தோன்றியவை பரிதிமாற் கலைஞரின் **மானவிசயமும்**, முத்துசாமி ஐயரின் **விசுவநாதமும்**, நடராசப் பிள்ளையின் **புகழேந்தியுமாகும்**. மேடையில் நடிக்கத்தக்க முறையில் உரை நடையில் எழுந்தவற்றுள், தமிழ்ச் சங்கப் பணிக்குப் பெருந்துணையாக இருந்த சிவ. குப்புசாமிப் பிள்ளை இனிய செந்தமிழ் நடையில் எழுதிய **வள்ளலும் வளவனும்** முதலாகக் கடையெழு வள்ளல்களைப் பற்றி எழுதிய நூல்களும் சதாவதானம் கிருட்டினசாமிப் பாவலரின் **கதரின் வெற்றி, பதிபக்தி,** ம. கந்தசாமி முதலியாரின் **சந்திரகாந்தா, மேனகா,** க. ரா. நமசிவாய முதலியாரின் **கீசகவதம்,** முத்துசாமிக் கவிராயரின் **ஞானசவுந்தரி,** ஏகை. சிவசண்முகம் பிள்ளையின் **அரிச்சந்திரன்,** பம்மல் சம்பந்த முதலியாரின் **இரத்தினாவளி, சாரங்கதரன், மனோகரன், சபாபதி** முதலியவைகளுமாகும். இவ்வாசிரியர்கள் ஒவ்வொருவரும் பல நாடகங்களை எழுதியுள்ளார்கள். இவர் தம் நாடகங்களை அரங்கேற்றி முத்தமிழின் சுவையுணர்வை ஊட்டி நாடகத் தமிழை வளர்த்த புரவலர்கள் பலர். இவர்கள் நடத்திவந்த அறுபதிற்கும் மேற்பட்ட அமைப்புக்களுள் சமரச சன்மார்க்க நாடக சபா, கிருட்டின கான சபா, ஆரிய கான சபா, சண்முகானந்த சபா, சகன்மோகன நாடகக் கம்பெனி, மதுரை ஒரிசனல் பாய்சு கம்பெனி, மதுரை தேவி பால விநோத சங்கீத சபா முதலியவை நினையத்தக்கவை, புராண இதிகாசங்களுள் வரும் நிகழ்ச்சிகளை அமைத்துக் கருநாடக இசைக் கூறுகளோடு உரையாடல்களை அமைத்துச் செய்த சங்கரதாசு சுவாமிகளின் இசை நாடக நூல்கள் குறிப்பிடத்தக்கவை. இம்முறையில் நாடகங்களை எழுதிய ஆசிரியர்களுள் பலர் ஆசுகவி, சித்திரகவிகளில் வல்லுநராகவும் சிலர் அவதானிகளாகவும் விளங்கியமை கருதத்தக்கது. இந்நாடக அமைப்புக்களால் நாடகத் தமிழும் இசைத் தமிழும், நடிப்புக் கலையும் ஓரளவு வளர்ந்தன எனலாம். இக்காலத்துத் திரைப்பட உலகில் புகழுடன் வாழ்ந்து மறைந்தவர்களுள் பலரையும் இப்பொழுது ஒளியுடன் விளங்கும் சிலரையும் மேற்கண்ட நாடக மன்றங்களே வழங்கின என்பதை நினைதல் வேண்டும்.

இவ்வாறாக, நமது சங்கம் தோன்றியதற்கு முன்னும் பின்னுமாக முற்கால இடைக் காலங்களில் வளர்ந்த முத்தமிழ் வளர்ச்சி இருக்க, நமது தமிழ்ச்சங்க வெள்ளி விழாவுக்குப் பின்னர் இன்றளவும் குறிப்பிடத்தக்க முறையில் படிப்படியாக வளர்ந்துள்ள முத்தமிழ் வளர்ச்சியை சுருக்கமாகக் காண்போம்.

தமிழகத்தில் ஆங்கிலம் ஆட்சிமொழியாகவும் ஆரியம் உயர்நிலை அலுவல்களுக்கு ஆங்கிலத்தோடொத்த தகுதிபெற்றும் விளங்கிய சூழ்நிலையில் அரசாங்க அலுவல்களில் எல்லோருக்கும் சம பங்கு வேண்டும் என்ற உணர்வும் நாட்டு விடுதலை வேட்கையும் தக்கோர் உள்ளத்தெழுந்து செயற்படத் தொடங்கிய காலத்தில் நமது சங்கம் வெள்ளி விழாவைக் கொண்டாடியது. அக்காலை தமிழ் வளர்க்கும் செயலுக்கும் சிந்தனைக்கும் அவ் அயலரசு இடையூறாக இல்லை எனினும் ஆட்சி மொழியும் அலுவல் மொழியும் பயிற்றுமொழியுமல்லாத ஒரு மொழி எத்துணைச் சிறப்புடையதாக இருப்பினும் அதனை மக்கள் கருதாது உடலோம்பும் உலக வாழ்வுப் பயனையே அவாவிச் செயற்பட்டனர். இந்நிலையில் தொன்மை வளங்கூர்ந்து சமயத்தோடு தொடர்புற்றுத் திகழும் செந்தமிழ் தன்வளத் தாலும் எழிலாலும் அயல்நாட்டறிஞர்களையும் ஆட்சிப் பொறுப்பிலிருந்த ஆங்கிலேயர்

சிலரையும் கவர்ந்தமையால் அவர்தம் தனிப் பட்ட விருப்பத்தாலும் முயற்சியாலும் வளர வேண்டிய நிலையிலிருந்து ஓரளவு வளர்ந்தும் வந்ததெனலாம்.

சென்ற நூற்றாண்டில் தோன்றி இந்நூற் றாண்டின் தொடக்கத்தில் கால்கொண்டு 1938-ல் செழித்து 1942-ல் முற்றிய நாட்டு விடுதலை உணர்ச்சி கிளர்ச்சியாகப் பழுத்த மையாலும், உலகச் சூழலினாலும், தன்னல மற்ற பெரு மக்களின் உழைப்பாலும் தியாகத் தாலும் 1947ஆம் ஆண்டில் நம்நாடு விடுதலை பெற்று ஆட்சி உரிமை எய்தி மொழிவழி மாநிலங்கள் அமைந்தன. இந்தியா முழுமைக் கும் ஒரே ஆட்சி மொழி இருப்பின் நல மென வேண்டிச் செய்த இவ் அரசியலமைப் பைத் தன்னல ஆக்கவழியில் திருப்ப முயன்ற இந்தி மொழி வெறியாளர் சிலரின் போக்கினை அறிந்துணர்ந்து வீறுகொண்டெழுந்த தமிழ்ப் பெரியார்களும் தொண்டர்களும் தமிழ் மொழியின் தொன்மை, முன்மை, தன்மை, வன்மை, வளம், நலம், வாய்மை, தூய்மை, நயன், பயன், இன்றியமையாமை முதலியவற் றை யாவரும் உணரப் பேசியும் எழுதியும், அரங்கத்தில் ஆடியும் மன்றத்தில் பாடியும் விளக்கி இந்தி மொழித் திணிப்பை எதிர்த் துப் போரிட்டனர். நமது சங்கம் இப்போ ராட்டத்தில் குறிப்பிடத்தக்க பங்கேற்றுச் செயலாற்றியது. இந்தி மொழியை வலியப் புகுத்த முயன்றமையை எதிர்த்துப் பல கட்டுரைகளும் கவிதைகளும் இசைப் பாடல் களும் தமிழகத்தில் தோன்றின. அக்காலை நமது சங்கச் சார்பில் "வெண்கோழி விடு தூது" என்னும் சிற்றிலக்கியம் ஒன்று வெளி வந்தது. தமிழ்ப்பற்றுளர் பலர் பொதுவாக இந்தி எதிர்ப்புப் போரில் கலந்து கொண்டு இடுக்கணுற்றார்கள். சிலர் சிறைப்பட்டும் பலர் அடிபட்டும், சிலர் உயிர் கொடுத்தும் தம்மைத் தீக்கிரையாக்கியும் தமிழ் மக்களுக்கு எழுச்சி ஊட்டினர். தமிழ் மக்கள் தமிழ் மொழியின் வாழ்வே தம் வாழ்வாகக் கருதிப் போற்றிக்கொண்டிருக்கும் இந்நாளில் நம் சங்கத்தின் மணி விழா நிகழ்கின்றது.

வியக்கத்தக்க அளவில் அறிவியல் துறை முன்னேறி வளர்ந்து வரும் இக்காலத்தே உலகில் உரிமை பெற்ற ஒரு நாட்டில், அந் நாட்டுமொழி வளர வேண்டிய அளவிற்கு நம் தமிழகத்தில் தமிழ் மொழி வளரவில்லை என்ற கருத்திற்கிடமுண்டெனினும் குறிப் பிடத்தக்க துறைகளில் தக்க முறையில் ஓர ளவு வளர்ந்து வருவதும் உண்மையாகும். அயலவர் ஆட்சிக் காலத்தில் பெரியோர் பலர் தனிப்பட்ட முறையிலும் சங்கம் போன்ற பல நிலையங்கள் வாயிலாகவும் தமிழை வளர்த்தனர். நமது சங்கம் சிறந்த திட்டங் களை வரைந்து தனித் தமிழ் மரபு போற்றும் உயர்ந்த குறிக்கோளுடன் தமிழ்ப் பணியாற்றி வந்ததன் பயனாகத் தமிழர் யாவர்க்கும் தமிழ் வளர்ச்சியிற் பற்றும் ஊக்கமும் பெருகின. தமிழக அரசும் நம் சங்கக் குறிக்கோள் நிறை வேறும் வண்ணம் பல துறைகளிலும் இயங் குதலால் நமது சங்கம் அவ்வுணர்வு மேலும் மேலும் ஓங்கும் வகையில் இக்காலை பணி புரிந்து வருதலோடு அவ்ஆக்கத்தின் ஒரு கூறாகச் சங்கக் கல்வி நிலையங்களைச் சிறப் பாகப் பேணி வருகின்றது.

வெள்ளி விழாவிற்குப் பின் பல துறை களிலும் முறைகளிலும் வளர்ந்துள்ள தமிழ் மொழியை பண்டைமரபிற்கேற்ப இயல், இசை, நாடகம் என மூன்று பிரிவுகளாக வகுத்து அவற்றுள் இயற்றமிழை இலக்க ணம், இலக்கியம், நிகழ்ச்சி வரலாறு, காலவர லாறு, பயிற்சிநிலை என்னும் முறையிலும், செய் யுள் நடை, உரைநடை என்னும் வகையிலும். வாய் மொழியாகிய விரிவுரைகள், மேடைப் பேச்சு என்ற நிலையிலும் காணுதல் தகும். அவ்வாறு காணுங்கால் நூல்களை எழுத்துரு வம் பெற்று விளங்கும் புதிய நூல்கள், ஆக்க நூல்கள், ஆய்வு நூல்கள், விளக்க நூல்கள், நல்ல பதிப்புகள் என்ற நிலையிலும் பயிற்சி முறையைத் தூய தமிழ் வழங்கும் கோட் பாட்டுடன் புத்துணர்வு மிளிர மாணவர் களுக்குக் கற்பிக்கும் பாங்கிலும், அரசாங்க அலுவலகங்கள், வணிக நிலையங்கள் முதலி யன மொழியைக் கையாளும் முறையிலும்

மொழி பெயர்ப்பு முறையிலும் பகுத்துக் காணுதல் நலமாகும்.

முதற்கண் பல்கலைக் கழகங்களின் வாயிலாக நிகழ்ந்துள்ள தமிழ் வளர்ச்சியை நோக்குவோம். வெள்ளிவிழாக் காலத்தில் சென்னைப் பல்கலைக் கழகத்துள் வழக்கறிஞர் பட்டம்பெற்று விருப்பத்தால் தமிழ்ப் பணி புரியவந்த பெருமக்களும் மொழியறிஞர் சிலரும் தமிழ்த் துறையில் செயலாற்றினர். அக்காலை அறிஞர் சாண்டிலர் அவர்களின் முயற்யால் அரசஞ் சண்முகனார் முதலானோரைக் கொண்டு தொடங்கப்பெற்ற தமிழகராதி வையாபுரிப்பிள்ளை தலைமைப் பதிப்பாசிரியராகப் பணிபுரிந்த காலத்தில் வெளிவந்தது. இவ் அகராதி ஆங்கிலமறிந்தோர் தமிழை அறிவதற்கென்று செய்யப்பெற்றது போன்றமைந்து ஒரு சில குறைபாடுகள் உடையதாய் இருப்பினும் இதுவே இன்றைக்குத் தமிழில் பெரிய அகராதியாக நிலவுகின்றது. மற்றும் இவர் தொகுத்த 'புறத்திரட்டு' என்னும் நூலும், வேங்கடராயலு ரெட்டியாரின் தொல்காப்பிய எழுத்ததிகார ஆராய்ச்சி, கபிலர், பரணர், திராவிட மொழிகளின் மூவிடப் பெயர் முதலிய நூல்களும் கே. என். சிவராசப்பிள்ளையின் தமிழகத்தில் அகத்தியர் புறநானூற்றின் பழமை முதலிய நூல்களும் வெளிவந்தன. மற்றும் என். சுப்பிரமணியனின் பல்லவர் கால இலக்கியமும், எசு. சங்கரராசு நாயுடுவின் திருக்குறள் இந்தி மொழி பெயர்ப்பும், எசு. கே. நாயரின் கம்பராமாயணத்துப் பாலகாண்ட, அயோத்தியாகாண்ட மலையாள மொழி பெயர்ப்பு நூல்களும், டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியார் தலைமையில் வெளிவந்த ஆங்கிலத் தமிழ் அகராதியும், டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளையின் ஒப்பியல் மொழிப் பேரகராதியும் பி. ஆர் புருடோத்தம நாயுடுவின் திருவாய்மொழி வியாக்கியானத் தமிழாக்கமும், ஆச்சார்ய இருதயமும் டாக்டர். மா. இராசமாணிக்கனாரின் தேவாரம் காட்டும் சமயமும் தத்துவமும் என்ற ஆய்வு நூலும் டாக்டர் வி. ஏ. தேவசேனபதியின் சிவஞானசித்தியார் அறுவருரை என்ற ஆங்கில நூலும், இக்கழக வாயிலாக வெளிவந்தவற்றுள் குறிப்பிடத்தக்கவை. மேலும் இக்கழகம் கால்டுவெல் எழுதிய ஒப்பிலக்கண நூலையும், எல்லிசு எழுதிய திருக்குறள் மொழிப்பெயர்ப்பையும், தமிழ் நூல்களின் அட்டவணையையும் சில பிரபந்த நூல்களையும் அச்சிட்டு வழங்கிப் பெரிதும் தமிழ் வளர்ச்சிக்குரிய முறையில் இயங்கிவருகிறது. இக்கழக வாயிலாகப் பலர் "டாக்டர்" பட்டம் பெற்று வெளிவந்தனர். தமிழ், தமிழாசிரியர் நிலை ஓரளவு உயர்ந்தது.

அண்ணாமலைப் பல்கலைக்கழகம் தமிழ் மொழிக்குச் சிறப்புத்தருவதாயினும் பெரும்பாலும் சென்னைப் பல்கலைக்கழகத்தை ஒட்டியே செயலாற்றி வருகிறதெனலாம். இஃது தமிழ்ப்புலவர் வகுப்பிற் பயில்வோர்க்குச் சிறிது பொருளுதவி புரிந்து வருகிறது. தமிழிசைக்கலை செழிக்க வகுப்புக்கள் நடத்தியும் தமிழிசை நூல்களை வெளியிட்டும் ஆராய்ச்சி செய்து வருதல் முன்பே குறிக்கப் பெற்றுள்ளது. இக்கழக வாயிலாக வெளிவந்த அ. சிதம்பரநாதச்செட்டியார் ஆங்கிலத்தில் எழுதிய பண்டைத்தமிழ் யாப்பியல் என்னும் ஆராய்ச்சிக் கட்டுரை நூலும் இ. எசு. வரதராச அய்யர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த தொல்காப்பியப் பொருளதிகாரமும், சமண பௌத்த வைணவ இலக்கிய ஆய்வு நூல்களும், க. வெள்ளை வாரணனாரின் நன்னூலும் தொல்காப்பியமும் என்னும் ஒப்புநோக்கு நூலும், 'தொல்காப்பியம்' என்னும் ஆராய்ச்சி நூலும், பரதசங்கிரகமும், ஔவை. சு. துரைசாமிப் பிள்ளையின் சைவ சமய ஆய்வு நூல்களும், ஐங்குறு நூறும், தி. வை. சதாசிவப் பண்டாரத்தாரின் பிற்காலச்சோழர் சரித்திரமும், கல்வெட்டாராய்ச்சிக் கட்டுரைகளும், இரா. இராகவையங்காரின் தமிழ் வரலாறும், குறுந்தொகை விளக்கமும், பாரி வெண்பா, சித்தன், கோசர், வேளிர் வரலாறு முதலியவையும்; சி. எசு. சீனிவாசாரியாரும் விருத்தகிரீசனும் எழுதிய தஞ்சை நாயக்கர் வரலாறும், சி. எம். இராமச்சந்திரஞ்செட்டியாரின் கொங்கு நாட்டு வரலாறும், தென்னாட்டில்

மராட்டியர் ஆட்சி என்ற நூலும், கோ. சுப்பிரமணிய பிள்ளையின் சைவசித்தாந்த வரலாறும் குறிப்பிடத்தக்கனவாம். மேலும் இக்கழகம் தக்க அறிஞர்களைக் கொண்டு கம்பராமாயணத்தை நுணுகி ஆராய்ந்து இதுவரை கிடைத்துள்ள பாடங்களில் உள்ள வேறு பாடுகளைக் காட்டிப் பொழிப்புரையோடு வெளியிட்டுள்ளது. கல்லூரியில் சில வகுப்புகளுக்கு பாடபுத்தகங்களாக்க அறிவியல் நூல்களுள் சிலவற்றை மொழிபெயர்த்துள்ளமையும் குறிப்பிடத்தக்கது. மற்றும் திருப்பனந்தாள் காசிமடத்துத் தலைவர் வழங்கிய அருட்கொடை கொண்டு சங்க இலக்கியம்–இடைக்கால இலக்கியம், சைவ சித்தாந்த நூல்கள், திருமுறைகள் ஆய வற்றைப் பரப்பு முகத்தான் அமைந்த தேர்வுகளை நடத்தியும், அக்கொடையினால் திரு. நீ. கந்தசாமி பிள்ளையவர்களைக் கொண்டு திருந்திய திருவாசக ஆராய்ச்சிப் பதிப்பை வெளியிட்டும் க. வெள்ளைவாரணனார் அவர்களைக்கொண்டு சீரிய முறையில் திருமுறை நூல்களை ஆயச்செய்து வெளியிட்டும் நடுவண் அரசின் நன்கொடையால் மொழியாராய்ச்சிப்பகுதியைச் சீரிய முறையில் நடத்துதற்கென ஒரு தனிப்பிரிவை அமைத்துத் திராவிடமொழிகள் அனைத்தையும் ஆராயும் வகையில் தமிழ்மொழியைச் சிறப்பாக ஆராயச்செய்தும் மொழித்துறையில் சிறப்பாகப்பணிபுரிந்தும் வருதல் போற்றத்தக்கதாகும்.

1966–ம் ஆண்டில் மதுரைப் பல்கலைக் கழகம் தோன்றிச் சிறப்பாகச் செயலாற்றி வருகின்றது. இப்பல்கலைக்கழகம் பண்டைத் தமிழ் முச்சங்கங்களை நினைவூட்டுவதாக அமைந்துள்ளது. இளநிலையிலிருக்கும் இக்கழகத்தின் இலக்கியப்பணி இனி அறியத்தக்கனவாம். எனினும் இக்கழகம் கலைக்கல்லூரிகளில் பிற இரு பல்கலைக்கழகங்களைக் காட்டிலும் தமிழ்மொழிக்குச் சிறப்பான இடமளித்து அதற்கேற்பப் பாடத்திட்டங்களை வகுத்து நடத்தி வருவதும் தமிழக வரலாற்றைச் செம்மையாக ஆராய்ந்து வெளியிடும் முயற்சியை மேற்கொண்டிருப்பதும் ஈண்டுக் கருதற்குரியவாகும்.

மைசூர், திருவாங்கூர், ஆந்திரா, தில்லிப் பல்கலைக் கழகங்களில் தமிழ்த்துறைகள் முன்னையினும் சிறப்பாகச் செயல்புரிந்து வருதல் மகிழ்ச்சிக்குரியதாகும். திருவாங்கூர்ப் பல்கலைக்கழகம் சேரர்கால இலக்கியங்களைத் தொகுத்து வெளியிட்டுள்ளது போற்றத்தக்கதாம்.

கல்வி, கலை இவற்றின் தொடர்பாக ஒரு நாட்டிற்குப் பெருமை தேடித்தருபவை பல்கலைக் கழகங்களேயாகும். அவ்வகையில் தமிழகத்தில் உள்ள இம்மூன்று பல்கலைக்கழகங்களும் தமிழக மக்களின் விருப்பம், குறிக்கோள், முன்னேற்றம் இவற்றை அறிந்து பண்டை மரபும் சீர்த்தியும் நெகிழா வகையில் அறிவியல் உலக விரைவிற்கேற்பப் புது நெறிகளை வகுத்துக்கொண்டு துறை தோறும் தமிழ் சிறந்தோங்கத்தக்க வகையில் பணியாற்றிவரும் என்று நம்பலாம்.

இவை இவ்வாறாக, இற்றைக்குத் திகழும் தமிழ்ச் சங்கங்களுள் பாண்டியர் வளர்த்த முச்சங்கங்களின் நினைவாக முத்தமிழையும் வளர்க்கும் குறிக்கோளோடு உயர்திரு. பாண்டித்துரைத் தேவரின் முயற்சியால் 1901ஆம் ஆண்டில் தொடங்கப்பெற்றது மதுரைத்தமிழ்ச்சங்கமாகும். இது பாடத்திட்டங்களை வகுத்துப் புலவர் தேர்வு (தொடக்கத்தில் பண்டிதப் பட்டம் வழங்கி இப்பொழுது புலவர் பட்டமாக மாற்றி வழங்கி வருகிறது) நடத்தி வருகிறது. இச்சங்கம் செந்தமிழ் என்னும் இலக்கியத் திங்களிதழ் ஒன்றை வெளியிட்டும் செந்தமிழ்க் கல்லூரி ஒன்றைப் பல்கலைக்கழகப் பாடத் திட்டத்தோடு ஏற்று நடத்தியும் வருகிறது. பல அரிய நூல்களை அச்சிட்டு வழங்கியும் கிடைத்தற்கரிய பல நூல்களைக் கொண்ட நூலகம் ஒன்றை அமைத்துப் பேணியும் சங்கத்தேர்வில் வெற்றிப்பெற்றவர்களுக்குப் பதக்கமும் பரிசுகளும் அளித்துச் சிறப்பித்தும் பணியாற்றிவருகிறது. இச்சங்கம் 1951-ஆம் ஆண்டில் அதன் பொன் விழாவைச் சிறப்பாகக் கொண்டாடியது. அது போது வெளியிடப்பட்ட பொன்விழா மலர் குறிப்பிடத்தக்க தொன்றாகும்.

அடுத்து, நமது கரந்தைத் தமிழ்ச் சங்கம் தமிழ் மரபையும் தூய்மையையும் பேணித் தனித்தமிழை வழக்கிற்குக் கொணர்தலையும் தமிழின் இசை நாடகப்பிரிவுகளைத் தக்காங்கு வளர்த்தலையும் தமிழ்மொழி பயில்வோர்க்கு ஊக்கமளித்துச் சிறந்த புலவர்களைப் பாராட்டி மக்களிடையே தமிழ்ப்பற்றினை வளர்த்தலையும் குறிக்கோளாகக் கொண்டு சங்கம் நிறுவிய துங்கன் எனப் போற்றப் பெறும் திரு. வே. இராதாகிருட்டினப் பிள்ளை அவர்களால் நல்லறிஞர் பலரின் துணை கொண்டு 1911 ஆம் ஆண்டில் தோற்றுவிக்கப் பெற்றது. செந்தமிழ்ப் புரவலர் தமிழவேள் த. வே. உமாமகேசுவரம் பிள்ளை அவர்கள் சங்கம் தோன்றியது முதல் முப்பதாண்டுகள் அதன் தலைவராக இருந்து தன்னலமற்ற தமிழ்த் தொண்டாற்றி வந்தார்கள். அக்காலத்தில் தமிழ் மக்களாலேயே தமிழ் புறக்கணிக்கப்பெற்றிருந்தது. கல்வி நிலையங்களிலும் தமிழ் மொழிக்குரிய ஏற்றமளிக்கப் பெறவில்லை. வழக்கிலும் பிறமொழிகளின் ஆதிக்கம் மிகுந்து நின்றது. தமிழின் தனிமையையும் செம்மையையும் பாதுகாக்கும் பணியை முதற்கடமையாகக் கொண்டு பல துறைகளிலும் தமிழுக்குரித்தாய இடத்தைப் பெற நமது சங்கம் பல அரும்பணிகளைச் செய்தது. 1938ஆம் ஆண்டில் நம் சங்கத்தின் வெள்ளி விழாவில் வெளியிடப்பட்ட கரந்தைக் கட்டுரை என்னும் மலர், இலக்கிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் பலவற்றைத் தாங்கி நின்றது நினைவுறத்தக்கது. இவ்விழாவின்போது தமிழ் வாழ்வே தம் வாழ்வாக எண்ணி வாழ்ந்த செந்தமிழ்ப்புரவலர் தமிழவேள் த. வே. உமாமகேசுவரம்பிள்ளை முயற்சியால் "கரந்தைப் புலவர் கல்லூரி" தொடங்கப்பெற்றது. இக்கல்வி நிலையம் சங்கத்தின் குறிக்கோளைத் திசை எட்டும் பரப்புவதாய் அமைந்து இற்றைக்கும் புலவர் (வித்துவான்) பலரைத்தமிழகத்துக்கு வழங்கி வருகின்றது. மேலும் இச்சங்கம் "தமிழ்ப் பொழில்" என்னுந் திங்களிதழைப் புதுமைப் பொலிவோடு நடத்தியும், அரிய நூல்கள் சிலவற்றை அச்சிட்டு வழங்கியும் வருகிறது. உமாமகேசுவர உயர்தொடக்கப் பள்ளியை உயர்நிலைப்பள்ளியாக வளர்த்துப் புரந்து வருதலோடு இராதாகிருட்டினத் தொடக்கப் பள்ளியையும், திக்கற்ற மாணவர் இல்லத்தையும் குழந்தைகள் இல்லத்தையும் சிறப்பாக நடத்தி வருகிறது. 1946இல் கரந்தைக் கவியரசு திரு. அரங்க. வேங்கடாசலம்பிள்ளை அவர்களின் மணிவிழா நிகழ்ந்தபோது அவரைப் பாராட்டியும் பின்னர் 1953இல் அவர் மறைந்த காலை ஒரு நினைவு மலரை வெளியிட்டும் அப்பெரியாருக்கு அஞ்சலி செலுத்திற்று. 1949இல் சென்னை ஆளுநர் பவநகர் மன்னர் சங்கத்திற்கு வருகை தந்த ஞான்று பழந்தமிழ்ப் பாக்கள் சிலவற்றை தமிழ்ப்பாமாலை என்ற பெயருடன் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து அமைத்த நூலொன்றை வழங்கிற்று. நம் சங்கம் 1951 ஆம் ஆண்டில் முத்தமிழ் விழாக் கொண்டாடி பல துறைத் தமிழறிஞர்களுக்குப் பட்டமளித்துப் பாராட்டியது. மேலும் ஆண்டுதோறும் கலைமகள் விழா முதலியவற்றை நிகழ்த்தியும் தமிழ் வளர்ச்சிக்கு ஒல்லும் வகையாற் பணிபுரிந்து வருகிறது. இச்சங்கம் பதினாயிரத்துக்கு மேற்பட்ட பல துறை நூல்களைக் கொண்ட அரும்பெரும் நூலகம் ஒன்றைத் தொடர்ந்து பேணி வருவதும் ஈண்டு நினையத் தக்கதாகும்.

தமிழ்ப் புலவர் வகுப்பு நடத்தியும் சமய நூல்களைப் பரப்பியும் பணியாற்றி வரும் திருநெல்வேலித் தென்னிந்திய தமிழ்ச் சங்கமும், தமிழ் இலக்கிய வகுப்புகள் நடத்தியும் மறைமலை அடிகள் உருவச் சிலை நிறுவி விழா எடுத்து மலர் வெளியிட்டும் தமிழ் வளர்த்து வரும் நாகைத் தமிழ்ச் சங்கமும், முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம், டாக்டர் மதுரம், திரு. தெ. துரைராசப் பிள்ளை முதலிய பெருமக்களின் ஆதரவோடு புலவர்களையும் அறிஞர்களையும் கொண்டு விரிவுரைகளாற்றித் தமிழ் வளர்ச்சிக்குத் துணை புரிந்து வரும் திருச்சித் தமிழ்ச் சங்கமும் குறிப்பிடத் தக்கவையாகும்.

தவத்திரு குன்றக்குடி அடிகளார் தோற்றுவித்த திருப்புத்தூர் தமிழ்ச் சங்கம்

சைவ சமய சீர்திருத்தத் தொண்டிலும் பல் வேறு துறைகளில் தமிழ் தலை சிறந்தோங்க வழிகாணும் பொதுத் தொண்டிலும் ஈடு பட்டுப் பணியாற்றி வருதலோடு தமிழ் மர பும் இலக்கண வரம்பும் தளராமல் சிறந்த முறையில் செய்யுளியற்றும் கவிஞர்களை ஊக்குவிக்கும் கருத்தான் கவிதைப் போட்டி ஒன்றை நிகழ்த்தி 1008 வெண் பொற் காசு களைப் பரிசாக அளித்து வருகிறது. இச் சங்கம் அறிஞர்களைக் கொண்டு தமிழ் இலக் கிய இலக்கண வரலாற்றுத் துறைகளில் ஆய்வுகள் நடத்தி அவர்தம் கருத்துக்களை வெளியிட்டும் தக்கோர் எழுதிய நூல்களை அச்சிட்டும் அச்சிட உதவியும் வருவதோடு திருக்கோயில்களில் தமிழருச்சனை புரிய வேண்டுமென்னும் இயக்கத்தைச் சிறப்புற நடத்தி அரசாங்கம் இக் கருத்தை ஏற்றுச் சட்டமாக்கும் நிலையில் செயலாற்றிவருவதும் குறித்தற்குரியவாம்

இளந்தமிழ் எழுத்தாளர்களை ஊக்கிப் பலதுறை நூல்களை வெளியிட்டு வரும் சென்னை எழுத்தாளர் சங்கமும் குறிப்பிடத் தக்கதாகும். சில ஆண்டுகளுக்கு முன்பு தேவகோட்டை தனவைசியர் சங்கம் என் னும் ஓர் அமைப்பு நல்ல நூல்கள் சில வற்றை வெளியிட்டது.

தமிழ்த் தொண்டாற்று முகத்தான் தோன்றிய கழகங்களுள் கம்பராமாயணத் தைப் பல்லாற்றுனும் பரப்பி வரும் காரைக் குடி கம்பன் கழகமும், தமிழறிஞர்களைக் கொண்டு சொற்பொழிவுகள் நிகழ்த்தியும், தமிழ்ப் புலவர் வகுப்புக்களை நடத்தியும் தமிழ் இலக்கிய உணர்வை வளர்த்து வரும் சென்னை நக்கீரர் கழகமும், தொல்காப்பியம் சங்க இலக்கியங்கள், காப்பியங்கள் ஆகியவை பற்றி வகுப்புக்கள் நடத்தியும், மொழி வளர்ச்சிக்கு ஆக்கமாக அவ்வப் பொழுது மாநாடுகள் நடத்தி நல்ல நோக்கங்களை வெளியிட்டும் தொண்டாற்றி வரும் தஞ்சைத் தொல்காப்பியர் கழகமும், சிறந்த தமிழ் இலக்கிய நூல்களையும் கட்டுரை நூல்களை யும் வெளியிட்டு வரும் புதுக்கோட்டை திருவள்ளுவர் கழகமும், தனித் தமிழ் உணர்வை எழுப்பியும் இருவகை வழக் கிலும் திருந்திய தமிழ் நடையை மேற் கொள்ளத் தூண்டும் வகையில் எழுதியும் பேசியும் தனித் தமிழ்ப் பற்றுளர்களைக் கொண்டு ஆங்காங்கே மாநாடுகள் நடத்தித் தமிழின் வளத்தைப் புலப்படுத்தியும் கட்டுரை மலர்கள் வெளியிட்டும் தொண் டாற்றி வரும் உலகத் தமிழ்க் கழகமும், **தேம்பாவணி** முதலிய நூல்களை வெளியிட் டுக் கிறித்தவ சமய இலக்கியங்களைப் பரப்பி வரும் தூத்துக்குடி இலக்கியக் கழகமும் தமிழாசிரியர் நலம் பெறவும் தமிழ் பயிற் றும் முறை செம்மையுறவும் பல் வகையிலும் பணியாற்றி வரும் மாநில — மாவட்டத் தமிழாசிரியர் கழகங்களும், சிறந்த முறை யில் விழாக்களை நடத்தியும் வகுப்புக்கள் நடத்தியும் நல்லறிஞர்களின் கட்டுரைகளைத் தொகுத்து மலராக வெளியிட்டும் தொண் டாற்றிவரும் மதுரைத் திருவள்ளுவர் கழ கமும் திருத்துவத்துறை அறநெறிக் கழ கமும், புதுச்சேரிக் கல்விக் கழகமும் தமிழில் புதிய ஆராய்ச்சிகள் தோன்றுவதற் கும் சீரிய உரை நடை வளர்ப்பதற்கும் தமிழ் மக்களின் இலக்கியப் பசியை நீக்கு வதற்கும் ஓரளவு துணைபுரிந்து வருகின்றன எனலாம்.

ஆங்காங்கே அமைந்து பணிபுரிந்துவரும் மன்றங்கள் பலவாகும். அவற்றுள் பள்ளி மாணவர்களுக்கும் கல்லூரி மாணவர்களுக் கும் தமிழ்ப்பாடங்களில் தேர்வு நடத்தி ஊக் கியும், தமிழாசிரியர் ஆக்கத்திற்கும் தமிழ் வளர்ச்சிக்கும் துணையாக அறிக்கைகள் வெளியிட்டும், **நித்திலக்குவியல்** என்னும் திங்களிதழ் ஒன்றை வெளியிட்டும் தமிழ் வளர்த்து வரும் சென்னை மாணவர் மன்ற மும், செந்தமிழில் மரபு குன்றாமல் கவிதை எழுத விரும்புவோரை ஊக்கியும், பயிற்சி அளித்தும், தேர்வுகள் நடத்திப் பாவலர் முத லிய பட்டங்கள் அளித்தும் சிறந்த கவிஞர் களைப் பாராட்டிச் சிறப்புப் பட்டங்கள் வழங்கியும் கவிதைத் துறையில் தொண் டாற்றி வரும் திருப்பனந்தாள் பாவலர் மன் றமும் குறிப்பிடத்தக்கவை.

இம்மன்றங்கள், கழகங்களைப் போலச் செந்தமிழ்ப் பற்றுமிக்க அறிஞர் பலர் விரும்பி யமைத்த சைவசித்தாந்த சமாசம் என்னும் சமயச் சார்பான நிலையம் நல்லறிஞர் பலரைக் கொண்டு பல இடங்களில் அமைந்த அவை களில் சமய இலக்கிய நூல்களைச் சொற் பொழிவு, விரிவுரைகள் வாயிலாகப் பரப்பி யும் சைவசித்தாந்த சாத்திரங்களையும் திரு முறை நூல்களையும், திருப்புகழையும் அச் சிட்டுக் குறைந்த விலையில் வழங்கியும், இலக் கிய வளர்ச்சி கருதிச் சீவக சிந்தாமணியையும் புலவர் வரிசையில் சங்க நூல்களையும் அச் சிட்டு வழங்கியும் சித்தாந்தம் என்னும் சமய இலக்கிய ஆராய்ச்சிக் கட்டுரைகளைத் தாங்கி வரும் ஒரு திங்களிதழை வெளியிட்டும் நன் முறையில் தொண்டாற்றி வருகிறது. இவ் வாறே S. பவானந்தம் பிள்ளையவர்களால் தொடங்கப்பெற்ற பவானந்தர் கழகம் தொல்காப்பியச் சொல்லதிகாரம் நச்சினார்க் கினியர் உரை, வீரசோழியம், யாப்பருங்கல விருத்தி– நன்னூல் முதலிய நூல்களையும், இலக்கியங்களையும் அழகிய முறையில் அச் சிட்டுக் குறைந்த விலைக்கு வழங்கித் தமிழ் வளர்ச்சிக்குப் பெரிதும் துணைபுரிந்துள்ளமை ஈண்டுக் குறிப்பிடத்தக்கதாகும். இம்முறை யில் நம் சங்கத்தோடொத்த பழைமையுடை யதான மேலைச் சிவபுரி சன்மார்க்க சபை சைவமும் தமிழும் வளரப் பேரறிஞர் பல ரைக் கொண்டு விரிவுரைகள் நிகழ்த்தியும் விழாக்களைச் செய்தும் வருதலோடு கணேசர் செந்தமிழ்க்கல்லூரி என்னும் பெயரால் ஒரு தமிழ்க் கல்லூரியையும் தொடர்ந்து நடத்தி வருகிறது. சொற்பொழிவுகள், விரிவுரைகள் விழாக்கள் வாயிலாகத் தமிழ்த் தொண் டாற்றி வரும் ஈரோடு தமிழ்ப் பேரவையும், சமய உணர்வோடு சமய நூல் வளர்ச்சியும் பயிற்சியும் பரவத்தக்க முறையில் பணி புரிந்து வரும் தமிழ்நாடு தெய்வீகப் பேர வையும் ஈண்டுக் குறிப்பிடத்தக்கவையாம்.

காந்திய நெறியில் கட்சி அரசியலுக்கு அப்பால் நின்று அரசியல், சமுதாயம், பொரு ளாதாரம், கல்வி, தத்துவம் முதலிய துறை களில் தமிழில் மொழி பெயர்ப்பு நூல்களை வெளியிட்டும் திங்களிதழ் ஒன்றை நடத்தி யும் பொதுத் தொண்டாற்றி வரும் சர்வோ தய நிறுவன வெளியீடுகளுள் காந்தியடிகளின் சத்திய சோதனை முதலிய நூல்களும் ஆசா ரிய வினோபா பாவேயின் பல துறை நூல் களும் தமிழில் புதிய சிந்தனை நூல்கள் வெளி வரத் துணைபுரிவனவாம். இவ்வாறே இராம கிருட்டின மடத்தார் வடமொழியினின்றும் பலநூல்களைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டும் திருவாசகத்தை நன்முறையில் வடமொழி மேற்கோளோடு அச்சிட்டும் தமிழ் மொழிக்கு ஒரு வகையில் தொண் டாற்றி வருகின்றனர். அண்மையில் நிறுவப் பெற்ற இராமலிங்க நற்பணிக் குழு வள்ளலா ரின் நூல்களுக்கு விளக்கங்களும் மொழி பெயர்ப்புக்களும் செய்து நூலாக்கித்தந்து தமிழ் மொழியினையும் இறை நிலைக்கோட்பாடு களையும் வளர்த்து வருதல் குறிப்பிடத்தக்கது

மற்றும் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர் களால் அமைக்கப்பெற்ற தமிழகப் புலவர் குழு தமிழ் ஆக்கங்கருதி அவ்வப்பொழுது இந்திய நாட்டில் உள்ள பெரிய நகரங்களிற் கூடி நடைமுறைகளை ஆராய்ந்து தக்க முடிபு களை வெளியிட்டுத் தமிழ், தமிழரின் சிறப்பை நாடு முழுதும் பரப்பி வருதல் போற்றத் தக்கதாம்.

மறைமலையடிகளின் முயற்சியால் தோன்றிய தனித்தமிழ் இயக்கம், ஞா. தேவ நேயப் பாவணர் முதலானோரை முன்னணி யிற் கொண்டு தமிழாசிரியர்களுள்ளும் மாண வர்களுள்ளும் பலரைத் தன்பால் ஈர்த்துத் தமிழ்மொழியினிடத்து ஓர் ஆராதகாதலை மக்களிடையே பரப்பி வருகிறது. இவ்வியக் கங்காரணமாக வடமொழியிலமைந்த மக் கட் பெயர்கள், ஊர்ப் பெயர்கள், பொருட் பெயர்களுள் பல தூய தமிழில் மாற்றம் பெற்று வழங்கிவருதல் மகிழத்தக்க வளர்ச் சியாகும். அடுத்துச் சமய உணர்வையும் தமிழ்வழி இறைவழிபாட்டையும் வற் புறுத்துவதன் வாயிலாகத் தமிழ் மொழிக்கும் ஓரளவு தொண்டாற்றிவரும் அருள் நெறித் திருக்கூட்டத்தாரின் பணியும் ஈண்டுக் கருதற் பாலதாம்.

மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம்பிள்ளை இருந்து புலமைப் பயிர் வளர்த்ததும் உ. வே. சாமிநாத அய்யருக்கு ஒப்புநோக்கப் பலசுவடிகளை உதவியதும் சுவாமிநாத தேசிகர், சிவ ஞானமுனிவர் போன்ற நூலாசிரியர்களை அளித்ததுமான திருவாவடுதுறைஆதீனமடம் சைவசித்தாந்த சாத்திரங்களைச் செம்மையாகப் பதிப்பித்தும் திருமந்திர நூலை விளக்கிப் பல பகுதிகளாக வெளியிட்டும் **சித்தியார் உரை விளக்கம், நவமணிகள்–நன்னூல் விருத்தியுரை-சங்கநூற்சொற்களின் அகராதி** முதலிய நூல்களை ஆக்கி அளித்தும் தமிழ் வளர்ச்சிக்குத் துணைபுரிந்து வருகிறது. இத் திருமடம் பல விழாக்களை நிகழ்த்துவதோடு திருமந்திர மாநாடு முதலிய மாநாடுகளை நடத்திக் கட்டுரை மலர் வெளியிட்டும் வருகிறது. இம்மடத்தார் நமது சங்கக் கல்வி நிலையங்களை நான்கு ஆண்டுகள் (1949—53) புரந்து வந்தமை நினையத்தக்கது.

சைவநெறியையும் தெய்வத்தமிழையும் கண்ணுகப்போற்றி வளர்த்துப் பரப்பும் குறிக்கோளோடு விளங்கும் சமயச் சார்பான மடங்களுள் முதன்மையானதான தருமபுர ஆதீன மடம் தக்க பேரறிஞர்களைக் கொண்டு சமய இலக்கிய விரிவுரைகள் நிகழ்த்துதல், வகுப்புகள் நடத்துதல், விழாக்கள் செய்தல் முதலிய பழைய முறைகளோடு திருமுறை நூல்களையும் சமய விளக்க நூல்களையும் செம்மையுற அச்சிட்டுக் குறைந்த விலைக்கு வழங்கி வருதலும் **திருக்குறள் உரைவளம், திருவாசக அகலவுரை** முதலான நூல்களையும் வெளியிட்டுள்ளமையும் பல்கலைக் கல்லூரி ஒன்றையும் 'ஞானசம்பந்தம்' என்னும் திங்களிதழ் ஒன்றையும் நடத்தி வருதலும் இதன் சார்பில் சென்னையில் நடைபெறும் சைவப்பிரசாரசபை சமய இலக்கியங்களைப் பரப்பி வருதலும் போற்றக் தக்கன.

திருப்பனந்தாள் காசிமடம் தனித் தமிழ்ப்புலவர் தேர்வில் மாநில முதல்வராகத் தேர்ச்சியுறுவார்க்கு ஆண்டுதோறும் ஆயிரம் வெண்பொற்காசுகள் பரிசு வழங்கியும், அண்ணுமலைப்பல்கலைக்கழக வாயிலாகத் திருமுறைகள் சைவசாத்திரங்கள் இலக்கியங்கள் ஆகியவற்றில் போட்டித்தேர்வுகள் நடத்திப் பரிசுகள் நல்கியும் தமிழ்ப்பணிபுரிதலோடு செந்தமிழ்க் கல்லூரி ஒன்றையும் சமய இலக்கியத்திங்களிதழ் ஒன்றையும் நடத்தி வருகிறது. மற்றும். திருமுறைகள்—புராணங்கள், குமரகுருபரரின் நூல்கள் முதலியவற்றை அச்சிட்டுக் குறைந்த விலையில் வழங்கியும் வருகிறது. இவற்றுள் **திருக்குறள் உரைக்கொத்து, நீதிநெறி விளக்கம், கந்தர் கலி வெண்பா** ஆயவற்றின் ஆங்கில மொழிபெயர்ப்புகள் குறிப்பிடத்தக்கவை. காசிப்பல்கலைக்கழகத்தில் சித்தாந்தப் பேராசிரியர் ஒருவரை அமர்த்தியும் அண்ணுமலைப் பல்கலைக்கழக வாயிலாகத் திருமுறை ஆராய்ச்சிநூல், திருந்திய திருவாசகப் பதிப்பு முதலியவற்றை வெளியிட்டும் மதுரை மீனுட்சியம்மன் கோவில் திருக்குள மண்டபச் சுவர்களில் 1330 திருக்குறட்பாக்களைக் கல்லிற் பொறித்தும் ஆராய்ச்சித்துறையில் ஈடுபடும் புலவர்களுக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்தும் பல்லாற்ருனும் தமிழ்ப்பணிபுரிந்து வருதல் போற்றத்தக்கதாகும்.

திருவண்ணுமலை ஆதீனம் குன்றக்குடி மடம் திருப்புத்தூர் தமிழ்ச்சங்கவாயிலாகச் செய்துவரும் பணிகளோடு பிரான்மலையில் ஆண்டு தோறும் பாரிவிழாவினை நடத்தி முத்தமிழிலும் தனித்தனி வல்ல புலவர்களைப் போற்றிப் பரிசளித்து ஊக்கியும் திருக்கோயில்களில் தமிழ் அருச்சனை புரியத் துணையாக நூல்களை வெளியிட்டும் பலதுறைக் கட்டுரைகளைத் தாங்கி வரும் திங்களிதழ் ஒன்றை வெளியிட்டும் தமிழ் மறுமலர்ச்சிக்கேற்பத் தொண்டாற்றி வருகின்றது.

இனி, மயிலம் சிவஞானபாலய சுவாமிகள் மடம் வீர சைவ சமயத் தொடர்புடைய நூல்களை வெளியிட்டும் தனித்தமிழ்க் கல்லூரி ஒன்றை நடத்தியும் வருகிறது. இதன் வாயிலாக வெளிவந்த சிவப்பிரகாச சுவாமிகளின் பிரபந்தத் திரட்டு குறிப்பிடத்தக்கது. பேரூரிலுள்ள சாந்தலிங்க அடிகளார் மட

மும் நூல்களை வெளியிட்டும் தமிழ்க்கல்லூரி ஒன்றை நடத்தியும் தமிழ்த் தொண்டாற்றி வருகிறது. தமிழிலக்கிய நூல்களையும் சமய நூல்களையும் மாணவர்க்குக் கற்பித்தும், சொற்பொழிவு, விளக்கவுரை வாயிலாகவும் தமிழ்ச் சுவையைப் பரப்பும் திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் மடமும் காஞ்சி ஞானப் பிரகாச சுவாமிகள் மடமும் துறையூர் தத்து வராயர் மடமும் ஈசான மடமும் குறிப்பிடத் தக்கவை. இவ்வாறே மற்றைய மடங் களும் ஓரளவு தமிழ்ப்பணி செய்து வருகின் றன.

தமிழ்த்தொண்டு செய்து வரும் சங்கங் கள், கழகங்கள், மன்றங்கள். மடங்கள் யாவும் பிற நாட்டவர் தத்தம் தாய்மொழி வளர அமைத்துத் தோண்டாற்றும் நிறுவ னங்களை ஒப்பச் சிரிய திட்டங்களை வகுத்துக் கொண்டு செயலாற்றிவரின் நம் தமிழ் மொழியும், தமிழ் நாடும் உலகம் வியக்கத் தக்க அளவில் வளர்ந்து வளந்தரும் என்ப தில் ஐயமில்லை

கோவை இராமகிருட்டிண வித்தியால யம் சமயத் தொடர்பான கருத்துக்களைப் புதியமுறையில் வெளியிட்டு வருகிறது. இவ் வாறே, இந்நாட்டில் உள்ள கிறித்துவ நிறு வனங்களும் சைன, பௌத்த மடங்களும் பஞ்சாபிலுள்ள குருகோவிந்த சிங்கு நிறுவ னமும் திருவண்ணுமலை இரமண ஆசிரமமும் தத்தம் சமய தத்துவக் கோட்பாடுகளை விளக் கும் நூல்களையும் பொது நூல்களையும் தமிழ் மொழியில் வெளியிட்டு வருகின்றன. இவற் றின் பணிகளால் சமயத்துறையில் தமிழ் மொழிக்குக் குறிப்பிடத் தக்க நூற்செல்வங் கள் கிடைத்து வருகின்றன என்பதில் ஐய மில்லை. இந் நிறுவனங்கள் மக்களினம் உய்தி பெறச் சான்றோர்களால் தோற்றுவிக்கப் பெற்று வள்ளல்களாலும், அறிஞர்களாலும் வளர்க்கப் பெற்று வருவனவாதலின் இவை அயல் நாடுகளில் உள்ள சமய நிறுவனங்கள் காலத்திற்கேற்பச் செய்துவரும் பணிமுறை களை ஒப்ப அறிவுக்கருவியான மொழி வளர்ச் சிக்கு மேலும் மேலும் ஆவன செய்து பிற நிலை யங்களுக்கு வழிகாட்டியாக விளங்க வாழ்வ ளிக்க வேண்டுமென்பது தமிழ் மக்களின் விருப்பமாகும்

தஞ்சை சரசுவதி மகால் நூலகம் மத்திய-மாநில அரசாங்க உதவியுடன் ஓலைச் சுவடிகளிலும் கையெழுத்துச் சுவடிகளிலும் உள்ள மருத்துவ-சோதிட- இலக்கண-இலக் கிய நூல்களை அச்சிட்டுப் பரப்பித் தமிழ்நூற் செல்வத்தைப் பெருக்கி வருதலோடு கிடைத் தற்கரிய நூல்களுள் சிலவற்றை அச்சிட்டு உதவி வருவதும் குறிப்பிடத்தக்கதாகும்.

சென்னை அடையாறு கலாச்சேத்திர நிலையம் தன் நோக்கமாகிய இசை, நாடகக் கலைகளை வளர்க்கும் பணியோடு சாமிநாத ஐயரவர்களின் சுவடி நிலையத்தைப் பெற்றுப் பேணியும் ஐயரவர்கள் அச்சிட்டுதவிய நூல் களுள் சிலவற்றை மறுபதிப்புக்கள் செய்து பரப்பியும் அவர் எழுதி வைத்துள்ள அரிய ஆராய்ச்சிக் கருத்துக்கள், நிகழ்ச்சிக் குறிப்புக் கள், வரலாற்றுச் செய்திகள் முதலியவற்றுள் சிலவற்றை அச்சிட்டுதவியும் ஐ. நா வின் இலக்கியப் பிரிவின் நன்கொடை உதவியோடு தேவாரப் பாக்களைச் சிறந்த பதிப்பாக வெளியிடவும் முயன்று பணியாற்றி வருவது போற்றத்தக்கது.

மலருக்காக வளர்த்த செடி மருந்துக் கும் பயன்படுதல் போல வணிக நோக்குடன் தோன்றிய நிலையங்கள், நிறுவனங்கள் பல தமிழ் வளர்ச்சிக்கும் துணைபுரிந்து வருகின் றன. அவற்றுள் சைவ சமய நூல்களையும் சமய இலக்கியங்களையும் நன்முறையில் வெளியிடும் நோக்கோடு தொடங்கப் பெற்ற தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம். அழகும் தெளிவும் கமழப் பழந் தமிழ் நூல்களையும் சங்க இலக்கியங்களையும் தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்களை யும் தக்க அறிஞர்களைக் கொண்டு குறிப் புரை, விளக்கவுரை, புத்துரை முதலியன எழுதச் செய்து அச்சிட்டுப் பரப்பி வருத லோடு இக்கால இலக்கியத்துறை நூல்களை யும் சட்டம், தத்துவம் பற்றிய விளக்க நூல்

களையும் பாட நூல்களையும் வெளியிட்டு வருகிறது. மேலும் இக்கழகம் சிறந்த தமிழ் நூல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தும் சிறந்த சொற்பொழிவுகளைத் தொகுத்தும் வெளியிட்டு வருதல் குறிப்பிடத்தக்கது. இதுகாறும் ஆயிரத்துக்கு மேற்பட்ட நூல்களை வெளியிட்டுள்ள இக்கழகம் அண்மையில் தன் பொன்விழாவை நிகழ்த்தி அதன் நினைவாகச் சிறந்த மலர் ஒன்றையும் வெளியிட்டுள்ளது. மேலும் இக்கழகம் பல அறிஞர்களையும் சிறந்த உரையாசிரியர்களையும் தமிழகத்திற்குப் புலப்படுத்தியுள்ளமை கருதத்தக்கது.

இவ்வகையில் நியூ செஞ்சரி நூல் வெளியீட்டு நிறுவனத்தார் பொது உடைமைக் கொள்கை சார்பான நூல்கள் பலவற்றையும் உரிய எழுத்தாளர்களின் நூல்களின் தமிழாக்கங்களையும் பிறவற்றையும் வெளியிட்டு வருகின்றனர். தமிழ்நாடு காந்திநிதி நினைவுக்குழுவினர் ஐம்பதுக்கு மேற்பட்ட காந்தியடிகளின் நூல்களையும், மொழிபெயர்ப்பு நூல்களையும், சர்வோதயப் பிரசுராலயம் வாயிலாகக் காந்தீயம், பொருளாதாரம், சமூகநல நூல்கள் பலவற்றையும் வெளியிட்டுள்ளனர். தில்லி சாகித்திய அகாடமியின் சார்பாக வந்துள்ள தமிழ் நூல்கள் தமிழில் புதிய துறைகளுக்கு வழிகாட்டுவனவாம்.

மலிவுப் பதிப்பு, மக்கள் பதிப்பு என்ற முறையில் சங்க இலக்கியங்கள் முதல் அட்டபிரபந்தம் வரை பல நூல்களைச் சில நிறுவனத்தார் வெளியிட்டுள்ளமை ஓரளவு யாவரும் தமிழிலக்கிய இலக்கண நூல்களைப் பயில வாய்ப்பளித்துத் தமிழ் வளர்ச்சிக்குத் துணை புரிகிறது எனலாம். இவ்வகையில் இராசம் ஐயங்கார், புலியூர் கேசிகன் ஆகிய இவர்களின் பணி குறிப்பிடத்தக்கதாகும். செடி கொடிகளுக்குப் பாய்ச்சத் தோண்டிய கிணற்று நீர் குடிப்பதற்கும் பயன் படுதல் போல் நல்ல நாளிதழ், கிழமை இதழ், திங்களிதழ்களை வெளியிட்டு வரும் நிறுவனங்களுள் சில தத்தம் இதழ்களில் வெளிவந்தவற்றையும், சிறந்த அறிஞர்களின் கட்டுரைகளையும் நூலாக்கித் தந்துள்ளன. சுயமரியாதைக் கழக வாயிலாகப் பெரியார் ஈ. வெ. இராமசாமியவர்களின் கருத்துக்களைத் தாங்கிப் பல சிறு நூல்கள் வந்துள்ளன.

இவை இவ்வாறாக, அரசாங்கத் துறைகள் வாயிலாகவும் அரசு நிறுவனங்கள் வாயிலாகவும் ஏற்பட்டுள்ள தமிழ் வளர்ச்சியை நோக்கின் நடுவணரசு அவ்வப்பொழுது நாட்டியல், அரசியல், பொருளாதாரம், சமூகவியல் பற்றி வெளியிட்டு வரும் நூல்கள், இதழ்கள், அறிக்கைகள் முதலியவை எதிர்காலத்தில் வரலாற்றுத் துறை நூல்களுக்குத் துணைபுரியும் எனக்கருதலாம்.

நமது மாநில அரசு படிப்படியாகத் தாய் மொழிக்குச் சிறப்பும் முதன்மையும் அளிக்கும் முறையில் தமிழை அரசாங்க அலுவல் மொழியாகக் கொண்டு வளர்த்து வருதலோடு கல்வித் துறையில் தமிழ் மொழிக்கு முதலிடந்தந்து பயிற்று மொழியாகச் செய்தும், பிற கலைகளைத் தமிழ்மொழி வாயிலாகப் பயில்வோருக்குச் சிறப்பளித்தும், தமிழிற் பிற நூல்கள் பெருகத்தக்க வகையில் "தமிழ் வளர்ச்சிக் கழகம்" என ஒரு தனிப் பிரிவை அமைத்து அதன் வாயிலாக உயர்நிலைப்பள்ளி கலைக்கல்லூரி வகுப்புகளிற் பயில்வோருக்குரிய அறிவியல், பொருளியல், வானியல், பயிரியல், விலங்கியல் முதலிய நூல்களைத் தக்கவர்களைக் கொண்டு எழுதுவித்தும், பிறமொழிகளினின்றும் மொழிபெயர்க்கச் செய்தும் அத்துறைகளிற் செயலாற்றும் தனிப்பட்ட ஆசிரியர்களை ஊக்கிப் பொருள் முதலிய உதவியும் புதிய துறைகளில் கருவி நூல்களும் ஆக்க நூல்களும் எழுதுவோர்க்குப் பரிசளித்துப் பாராட்டுச் செய்தும், முதல் வகுப்பு முதல் கல்லூரி வகுப்புக்கள் வரை பாட நூல்களுள் பெரும்பாலானவற்றைச் சீரிய முறையில் அச்சிட்டு வழங்கியும் தமிழைப் பேணி வருதல் போற்றத்தக்கதாகும். நமது அரசு, அண்மையில் நிகழ்ந்த இரண்டாவது உலகத் தமிழாராய்ச்சிக் கழக மாநாட்டிற்காகத் திரட்டிய தொகையினின்றும் திருக்குறளாராய்ச்சிக்காகத் தமிழகத்தில் உள்ள மூன்று பல்கலைக் கழகங்களுக்கும்

தனித்தனியாக மும்மூன்று இலட்சம் வெண் பொற்காசுகளை உதவியுள்ளமை போற்றத் தக்க நிகழ்ச்சியாகும். இவ்வுதவி பெற்றுச் சென்னைப் பல்கலைக் கழகம் இதுவரை நான் கைந்து ஆய்வு நூல்களை வெளியிட்டுள்ளது. ஏனைய பல்கலைக் கழகங்களும் தக்க அறிஞர் களைக் கொண்டு ஆய்வுகள் செய்துவருகின் றன. மற்றும் தனிப்பட்டவர்களிடமிருந்து இதுகாறும் அச்சேறுமலிருக்கும் நூல்களை அவர்கள் வெளியிட உதவியும் தனித்தமுறை யில் தமிழ் வளர்க்கும் மன்றங்களுக்கும் நிறு வனங்களுக்கும் பொருளுதவி செய்தும் போற்றிவருவது குறிப்பிடத்தக்கது. இவ் வகையில் தி. சு. அவிநாசிலிங்கம் செட்டியார் முயற்சியாலும் தொடர்ந்து திரு சி. சுப்பிர மணியம் அவர்களின் ஆதரவாலும் நல்லறிஞர் பலர் ஒத்துழைப்பாலும் பெ. தூரன் அவர் களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு வெளி வந்த **கலைக்களஞ்சியமும்**, **குழந்தைக் கலைக் களஞ்சியமும்** சிறப்பாகக் குறிக்கத்தக்கவை யாகும். இக்கலைக் களஞ்சியம் தோன்றுதற்கு வழிகாட்டியாக இருந்த நூல் மருத்துவம், இரசாயனம், தாவரவியல் ஆயதுறைகளில் வழங்கும் முக்கியப் பொருள்களின் விளக்க மாக T. V. சாம்பசிவம்பிள்ளை இரு பகுதி களாக எழுதி வெளியிட்ட **கலைக்களஞ்சியம்** என்பது ஈண்டுக் கருதற்பாலது.

நமது தமிழக அரசு இசை, நாடகம் இவற்றின் தொடர்பான நாட்டியம், கூத்து முதலிய கலைகள் தளராமல் வளர அவ்வக் கலைகளைப் பேணி வரும் மன்றங்களுக்கும் நிலையங்களுக்கும் தக்க பொருளுதவிப் புரந்து வருதலும், அக்கலைஞர்களைப் போற்றிப் பரிசு முதலிய அளித்து வருதலும் மகிழத்தக்க பணிகளாகும். அன்றியும் ஒரு சில புலவர் – கலைஞர்களுக்கு மதிப்பூதியம் வழங்கியும் இசை, நாடகத்துறையில் பணியாற்றி ஓய்வு பெற்று ஆதரவின்றி இருக்கும் கலைஞர்களுக் குக் கொடை ஊதியம் முதலிய நல்கியும் போற்றுமாற்றால் முத்தமிழையும் வளர்த்து வருதல் பாராட்டத்தக்கது.

நமது தமிழக அரசு பொது நூலகங்களை மாவட்டந் தோறும் பல கிளைகளோடு அமைத்துச் சிறப்புற நடத்தி வருவதனால் மக்களுக்குப் படிக்கும் பழக்கம் வளர்ந்து பல துறைகளிலும் அவர்கள் அறிவு விளக்கம் பெற்றுவருதல் குறிப்பிடத்தக்கது. அண்மை யில் இதற்கென ஒரு தனி இயக்குநரை அமைத்துள்ளமை போற்றற்குரியதாம்.

மக்களாட்சிக் காலத்தில் மக்களின் உள்ளப்பாங்கினை உருவாக்கி ஓரளவு செயற் பட வைப்பவை செய்தித்தாள்களும், இதழ் களுமேயாம். அவ்வகையில் இவை தமிழ கத்தில் நாள், கிழமை, திங்களிருமுறை, திங்கள், காலாண்டு இதழ்கள் என்ற வகை யிற் சிலவும் பலவுமாக வெளிவருகின்றன. நாளிதழ் என்ற அளவில் **தினமணி**, **சுதேச மித்திரன்**, **தினமலர்**, **முரசொலி**, **நவசக்தி**, **விடுதலை**, **நம்நாடு**, **சனசக்தி** முதலியன குறிப்பிடத்தக்கவை. இவை கலப்பு மொழி யையும் நாட்டுப்புற நடையையும் பெரும் பாலும் மேற்கொள்வன எனினும் ஒருசில இதழ்கள் தமிழ் உணர்வையும் இடை யிடையே எழுப்பி அரசியல், சமுதாய அறிவை வளர்த்து வருகின்றன எனலாம். இவற்றுள் சிலவற்றில் கிழமைதோறும் வரும் சிறுகதைகள், கட்டுரைகள், இலக்கிய விளக் கங்கள், திருக்கோயில் வரலாறுகள், கல் வெட்டுகள், அறிஞர்களின் வாழ்க்கைக் குறிப் புகள் முதலியவை ஓரளவு தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குத் துணைபுரிவனவாகும். **விடுதலை** இதழ் தமிழ் வரிவடிவிற் சில திருத்தங்களைக் கொண்டியங்குகிறது.

கிழமை இதழ்களுள் சிறிது தொன்மை யான **ஆனந்தவிகடன்**, சிறுகதை, தொடர் கதை, அரசியல், சமுதாயம், சமயம், கலை ஆயவைபற்றிய கட்டுரைகளோடு புதுப்புது எழுத்தாளர்களையும் சிந்தனையாளர்களையும் தோற்றுவிக்கும் முறையில் இலக்கியப் பரிசுப் போட்டிகளை நடத்தியும் பல கட்டுரைகளை யும் நூல்களையும் கொச்சை வழக்குச் சொற்கள் மலிந்த ஓர் அகராதியையும் வெளி யிட்டுள்ளது. இவ்விதழ் வாயிலாக வந்த தொடர்கதைப் புதினங்களுள் சில இலக்கிய

மதிப்புடையனவாம். **அருணாசல மகிமை** போன்ற கட்டுரைகளும் சமயச்சார்பான கருத்துக்களும் அவ்வப்போது வருகின்றன. தவிர கல்கி இதழில் கல்கி கிருட்டின மூர்த்தி எழுதிய நாட்டு விடுதலை உணர்வை ஊட்டும் சிறுகதைகள் நெடுங்கதைகள் சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியாரின் கதைகள் கட்டுரைகள் ஓரளவு இலக்கியப் பயனுடையவை எனலாம். இவ்வாறு வெளிவரும் **குமுதம் என்னும்** இதழ் **சாண்டில்யனின் கடற்புறு, யவனராணி** போன்ற வரலாற்றுக் குறிப்புக்களையுடைய புதினங்களை வெளியிட்டு வருகிறது. தமிழகத்தில் மொழி, இலக்கிய. உரைநடையில் ஒரு புது வழியையும் உணர்வையும் தோற்றுவித்த அறிஞர் அண்ணாத்துரையால் வெளியிடப் பெற்ற திராவிடநாடு மாணவர்களுக்கும் பொதுமக்களுக்கும் தமிழ் உணர்வையும் பற்றையும் உண்டாக்கியது எனலாம். மற்றும் **செங்கோல், மன்றம், தென்றல்** முதலான அரசியல் விளக்க இதழ்கள் சில பொது இலக்கியக் கட்டுரைகளையும் நயமான சில கதைகளையும் வெளியிட்டுள்ளன.

திங்களிதழ் என்ற வகையில் விளம்பரம் முதலிய வருவாய் நோக்கின்றி ஓல்லும் வகையான் இலக்கியப்பணி செய்து வரும் நமது கரந்தைத் தமிழ்ச்சங்கத்தின் வெளியீடான **தமிழ்ப்பொழிலும்** மதுரைத்தமிழ்ச் சங்கத்தின் **செந்தமிழும்** சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் **செந்தமிழ்ச்செல்வி**யும், தருமபுரம், திருப்பனந்தாள் மடங்கள் சார்பாக வெளிவரும் **ஞானசம்பந்தம், குமரகுருபரன்** ஆகியவையும் பொதுவுடைமைக் கொள்கையை மையமாகக் கொண்டு இலக்கியப் பணியும் ஓரளவு செய்து வரும் **தாமரை**யும் அயல்மொழிக் கட்டுரைகள், கதைகளைத் தமிழில் தாங்கிவரும் **மஞ்சரி**யும் குன்றக்குடி அடிகளாரைச் சிறப்பாசிரியராகக் கொண்டு வெளிவரும் **தமிழகமும்** குறிப்பிடத்தக்கவை. சிறந்த இலக்கியக் கட்டுரைகளையும் வங்காள எழுத்தாளர்களின் புதினங்களின் மொழி பெயர்ப்புகளையும் அறிவியல் விஞ்ஞானக் கட்டுரைகளையும் சாமிநாத அய்யர் போன்ற தமிழறிஞர்களின் கருத்துக்களையும் தாங்கி வந்து தற்போது ஓரளவு நல்ல தமிழில் தற்காலக் கதை, நெடுங்கதை அரசியல், இலக்கியக் கட்டுரைகளை வெளியிட்டுவரும் **கலைமகளும்** சமய இலக்கியத் தத்துவக் கட்டுரைகளைத் தாங்கிவரும் **திருக்கோயில் திருப்புகழமிர்தம், அருட்சுடர்** முதலியவற்றையும் எண்டுக் கருதலாம். மற்றும் புதிய சொல்லாக்கங்களையும் தூய **தனித்தமிழ்**நடையையும் போற்றிப் பல ஆய்வுக் கட்டுரைகளை வெளியிட்டுவரும் **தென்மொழி, அறிவியல்**, வானியல் கட்டுரைகளை மிகுதியாகக் கொண்டு திகழும் **கலைக்கதிர்** ஆகியவற்றையும் குறிப்பிடலாம். அண்மையில் தொடங்கிக் காலாண்டுக்கு ஒருமுறை வரும் **'ஆராய்ச்சி'** என்னும் இதழ் புதிய நோக்குடன் புரட்சி மிக்க ஆய்வுரைகளோடு வெளிவருவது குறிப்பிடத்தக்கது.

குழந்தை இதழ்கள் என்ற வகையில் தோன்றி மறைந்த **பூங்கா, அணில், பாப்பா மலர்**, போன்றவற்றையும் இப்பொழுது வெளிவரும் **அம்புலிமாமா, கண்ணன், கோகுலம், சிட்டு**, முதலியவற்றையும் குறிப்பிடலாம்.

தனிப்பட்ட நூலுக்கு ஆக்கமாக வந்த இதழ்களுள் திருக்குறளார் வீ. முனுசாமி அவர்களின் **திருக்குறள் மலர்** கருதத்தக்கது. கா. அப்பாதுரையார் எழுதிவரும் **முப்பால் ஒளி** திருக்குறளை விரிவாகப் புலப்படுத்தும் நோக்குடையதாகத் திகழ்கின்றது. கவிதை அரசியல், உருவகக்கதை, கட்டுரைகள் ஆகியவற்றைத் தாங்கி வந்த **கண்ணதாசன்** என்னும் திங்களிதழும் கவிதைகளை மட்டும் வெளியிட்டு வரும் **சுரதா**வும் குறிப்பிடத்தக்கவை. பல்லாண்டுகள் நிகழ்ந்து அரிய பல கவிதைகளையும், மொழிபற்றிய கட்டுரைகளையும் தாங்கிவந்த பாரதிதாசனின் **'குயில்'** என்னும் இதழ் தமிழ்க்கவிதை வளர்ச்சிக்குப் பெரிதும் துணை புரிந்தது எனலாம்.

இத்துறையில் மின்னல் போல் தோன்றி மறைந்த கவிதை இதழ்கள் பல

தமிழ் இலக்கியம் பற்றிப் பல நல்லறிஞர் களின் கட்டுரைகளைத் தாங்கி ஆங்கிலத்தில் வெளிவந்த தமிழ்ப்பண்பாடு (Tamil Culture) என்னும் காலாண்டிதழ் இடையே நின்று போனது பெருங்குறையாகும்.

இனி, முத்தமிழின் பிற கூறுகளாகிய இசை, நாடகம் ஆயவை பற்றி முற் கூறிய இதழ்களில் சில கட்டுரைகளும் ஆய்வுகளும் வெளிவந்துள்ளன. இவையன்றித் தனி இதழ்கள் இத்துறையில் வளராமை வருந்தத் தக்கதேயாம், அண்மையில் நாடகத்திற்கு முதலிடம் தந்து **நாடகக்கலை** என ஒரு திங் களிதழ் வெளிவருவது போற்றத்தக்கது. இசையையும் நாடகத்தையும் வேறு வடிவத் தில் தாங்கிப் பெரும்பாலான மக்களைத் தன் வயப்படுத்தித் திகழும் திரைப்படக்கலை தொடர்பாகப் **பேசும்படம், கலை, சினிமா, பொம்மை,** போன்ற திங்களிதழ்களும் **சித்திராலயா** போன்ற நாளிதழ்களும் வெளிவருகின்றன.

மருத்துவம், சோதிடம் ஆயவைபற்றி **மூலிகைமணி-சித்த மருத்துவம். மாத சோதிடம்** போன்ற ஒருசில இதழ்கள் வெளி வருகின்றன. இவை அவ்வக்கலைகளை ஓரளவு நினைவுபடுத்திக்கொண்டுள்ளன. அண்மைக் காலமாக நமது மாநில அரசு சார்பாக வெளி வரும் **தமிழரசு** என்னும் திங்களிதழ் அரசாங் கத்துறை அறிக்கைகள், புள்ளிவிவரங்கள் முதலியவற்றைத் தருவதோடு நல்ல கவிதை களையும் இலக்கிய விளக்கக் கட்டுரைகளையும் தாங்கிவருவது பாராட்டத்தக்கது.

இந்நூற்றாண்டின் இடைக் காலத்தில் தோன்றிச் சிறப்பாக வளர்ந்துவரும் வானொலி நிலையங்கள் வாயிலாக ஏற்பட் டுள்ள தமிழ் வளர்ச்சி பற்றிக் கருதுவோமா யின் தொடக்கத்தில் அரசியல் செய்திகள் இசை, பேச்சு, அறிக்கைகள் என்ற நிலை களில் மட்டுமே செயற்பட்டுவந்த இந்நிலை யம் பள்ளி, கல்லூரி மாணவர்களுக்குப் பயன் படும் வகையில் அவ்வத்துறை பேராசிரியர் களைக்கொண்டு விரிவுரைகள் நடத்தத் தொடங்கி நடிப்போடு கூடிய சிறுகதை, நாடகங்கள் கவிதை நாடகங்கள், கலை நிகழ்ச்சிகள் முதல், பொது விழாக்கள் வரை சிறப்பானவற்றையெல்லாம் ஒலிபரப்பி அவற்றின் வாயிலாக இலக்கிய உணர்வையும் கலை உணர்வையும் ஊட்டிவருகின்றது, இந்நிறுவனம் படிப்படியாக ஓரளவு நல்ல தமிழ் நடையைக் கையாண்டு வருவது மகிழ்ச்சிக்குரியதாகும்.

அயல்நாடுகளில் தமிழ் வளர்ச்சி என்ற முறையில் காண்போமானால் நம்நாட்டின் வடபகுதியேயன்றிச் சிங்கப்பூர்; மலேசியா, பர்மா, சைகோன், தென்னாப்பிரிக்கா, இலங்கை முதலிய நாடுகளில் வாழும் தமிழ் மக்கள் ஆங்காங்கே சங்கங்களையும் மன்றங் களையும் அமைத்து நம்நாட்டுப் பேரறிஞர் களையும் பிறரையும் அழைத்துச் சொற் பொழிவுகள், விரிவுரைகள் வாயிலாகத் தமிழைப் பரப்பியும், இதழ்கள் சிறிய நூல் கள் ஆயவற்றை வெளியிட்டுத் தமிழ் இலக் கிய-சமய உணர்வுகளைப் பாதுகாத்தும் வருவது பாராட்டற்குரியது. இவ்வகையில் இலங்கைத்தமிழ்நேசன், ஈழகேசரி, சிங்கப்பூர் **தமிழ்முரசு** முதலிய இதழ்கள் குறிப்பிடத் தக்கவை.

புதுச்சேரியில் உள்ள பிரெஞ்சு நாட்டுக் கல்விக்கழகம் சிறந்த இந்திய மொழிகளைப் பற்றி ஆராய்வதோடு குறிப்பாகத் தமிழ் இலக்கண மரபையும், நெறியையும் பழந் தமிழ் மேன்மையையும் நுணுகி ஆராயும் நோக்கோடு சங்க நூல்களின் சொற்பொருள் விளக்க அகராதி ஒன்றினைச் சீரிய முறையில் எழுதித் தொகுத்து முதற்கண் அச்சொற் களை அகரவரிசையில் அமைத்து அவை வந் துள்ள இடங்களை மட்டும் குறித்துக் காட்டும் அளவில் ஓர் அகராதியை வெளியிட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

அண்மையில் பிற நாட்டுத் தமிழ் அறி ஞர்களும், தமிழ்ப்பேரறிஞர்களும் எண்ணி யமைத்த உலகத் தமிழாராய்ச்சிக் கழகம் முதற்கண் மலேசியாவிலும், அடுத்துத் தமிழ

கத்திலும் பின்பு பிரான்சிலும் கூடித் தமிழ் இலக்கியம், இலக்கணம், பண்பாடு, கலைகள் முதலிய துறைகளைப் பற்றி ஆராய்ந்து பல கருத்துக்களை வெளியிட்டுள்ளது. இக்கழகம் தமிழகத்திற் கூடியபோது தமிழக அரசின் முயற்சியால் அயல் நாட்டறிஞர் பலர் கூடிச் சிறப்பான முறையில் கருத்தரங்கு, ஆய்வரங்கு, கவியரங்கு முதலியன நிகழ்த்தித் தமிழ் ஒளியை யாண்டும் பரவச்செய்தனர். அக்காலை மாநாட்டுச் சார்பில் வெளிவந்த கட்டுரை மலர்களும், ஆராய்ச்சிக் கட்டுரைகளும் பாராட்டத்தக்கவை. மூன்றாவது மாநாடு பிரெஞ்சு நாட்டில் நடைபெற்ற போது ஆண்டு ஒரு தமிழ்ச்சங்கம் தோற்றுவிக்கப்பெற்றுள்ளது: அயல் நாட்டுப் பல் கலைக் கழகங்களிற்பல தமிழ்த்துறைப் பகுதியொன்றை ஏற்படுத்தித் தமிழை ஆராய்ந்தும் பயின்றும் வருதல் மகிழத்தக்கதாம். உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கழகம் தோன்றக் காரணமாக இருந்த அயல் நாட்டு அறிஞர்களுள் டாக்டர் பிலியோசா, கெமில் சுவலபில் தனிநாயக அடிகள் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர் ஆவர்.

தனித்த முறையில் பிறமொழி வாயிலாகத் தமிழ் வளர்த்தவர்கள் வளர்ப்பவர்களுள் தொல்காப்பியத்தைத் தெளிவாக ஆராய்ந்து ஆங்கிலத்தில் வெளியிட்ட டாக்டர் சி இலக்குவனாரையும், திருவாசகத்தையும் திருக்குறளையும் சிறந்த முறையில் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ள திருவாசக மணி கே. எம். பாலசுப்பிரமணியத்தையும், கோ. வன்மீகநாத பிள்ளையையும் குறிப்பிடலாம். திருக்குறளைக் கவியோகி சுத்தானந்த பாரதியார் முதலாகப் பலர் ஆங்கிலத்திலும் சிலர் ஐரோப்பிய மொழிகளிலும் சிலர் இந்திய மொழிகளிலும் மொழிபெயர்த்து முப்பாலின் சிறப்பை எப்பாலும் பரப்பியுள்ளனர் இந்நூல் பற்றி வெளிவந்துள்ள விளக்கங்களும் ஆராய்ச்சிக் கட்டுரைகளும் எண்ணிறந்தன.

சிறந்த தமிழ் இலக்கியங்களுள் சில பாக்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ள நீ. கந்தசாமி பிள்ளை, பழனி அரங்கசாமி, லெனின் தங்கப்பா, மரிய சோசப்பு சேவியர், வி. பி. காந்திமதிநாத பிள்ளை ஆகியவர்களும் பாரதியின் கண்ணன் பாட்டு, குயில்பாட்டு ஆயவற்றை மொழிபெயர்த்துள்ள ஏ. துரைசாமிபிள்ளையும் கருதத்தக்கவர்களாவர். இவ்வாறே மணிமேகலையை நா. பாலுசாமியும் அருட்பாவின் பல பகுதிகளை ஏ. பாலகிருட்டினனும், பத்துப்பாட்டினை கே. வி. செல்லையாவும். நாட்டுப்பாடல்கள் பலவற்றை நா. வானமாமலையும், கலைஞர் கருணாநிதி எழுதிய சிலப்பதிகார நாடகத்தை டி. ஜி. நாராயணசாமியும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார்கள்.

டாக்டர் டி. வி மகாலிங்கத்தின் '**தென்னகத்தில் தொல்லெழுத்துக் கலையும்**, P. S. சுப்பிரமணியத்தின் ''**திராவிட மொழியின் வினைச்சொல்லமைப்பும்**'' எஸ். வி, சண்முகம் என். எஸ். அகத்தியலிங்கம் ஆகிய இருவரின் **கல்வெட்டுக்களுள் காணும் இலக்கிய மொழி**'' யும் A. V. சுப்பிரமணிய அய்யரின் '' **தமிழ்ச்சித்தர் பாடலும் தத்துவமும்**'' தா, ஏ. ஞானமூர்த்தியின் ''**சீவக சிந்தாமணி ஆராய்ச்சியும்**'' S. V. சண்முகத்தின் ''**நச்சினார்க்கினியாரின் எழுத்தொலியியலும்**'' ஆங்கில மொழிபெயர்ப்பு நூல்களுள் குறிப்பிடத்தக்கவையாம், மற்றும் பிறநாட்டு அறிஞர்களான அண்ட்ரோநோவ் எழுதிய ''**முற்காலப் பிற்காலத் தமிழின் பொதுவிலக்கணம்**'', A. H. ஆந்தென் எழுதிய ''**தமிழ் இலக்கியத்திற் படிப்படியாக வளர்ந்து காணப்பெறும் இலக்கணம்**'' என்னும் நூல்களும் குறிப்பிடத்தக்கவை. இவ்வாறே நல்லறிஞர் பலரால் மொழிபெயர்க்கப் பெற்ற தமிழ் நூல்கள் பலவாம். இம்மொழி பெயர்ப்புக்களின் வாயிலாக அயல்மொழியறிஞர்கள் தமிழின் சிறப்பை ஓர்ந்து பயிலுதல் தமிழ் மொழி வளர்ச்சியின் ஒரு கூறாகும்.

தனிமுறையில் இந்நூற்றாண்டின் பிற்பகுதி தொடங்கி இன்றுவரை தமிழ் வளர்ச்சிக்குத் தொண்டாற்றி வந்த, வருகின்ற அறிஞர், கவிஞர், புலவர், எழுத்தாளர், பேச்சா

ளர், கலைஞர் ஆகியோர் மிகப்பலராவர். இப் பெருமக்களால் தமிழ் இலக்கணம், இலக்கியம், வரலாறு முதலிய துறைகளில் மகிழத்தக்க முறையில் தமிழ் வளர்ந்துள்ளது. இதனை, எழுத்துருவம் பெற்று நூல் வடிவில் வளர்ந்துள்ள வளர்ச்சி, பேச்சு நிலையில் வளர்ந்துள்ள வளர்ச்சி என இருகூறாகப் பகுத்துக் கொண்டு நூல்களைச் செய்யுள் நடை, உரை நடை நூல்களெனவும் அவற்றுள் செய்யுள் நூல்களைத் தனிப்பாடல்கள், தொடர் நிலைச் செய்யுள்கள் எனவும், உரை நடை நூல்களைக் கட்டுரை, ஆராய்ச்சி, திறனாய்வு, சிறுகதை, நெடுங்கதை, புதினம் எனவும், பேச்சினை, மக்கள் பல்வேறு நிலைகளில் ஒருவரோடொருவர் அளவளாவிக் கொள்ளும் இயல்புப்பேச்சு, மேடைகளில் நிகழும் உணர்வுப் பேச்சு என்ற வகையிலும் கூறுபடுத்துக் காணல் தகும். அவ்வாறு காணுங்கால் அவ்வத்துறைகளில் ஒரு சில நூல்களையும், அறிஞர்களையும் மட்டுமே எடுத்துக்காட்டாகக் குறிக்கின்றது இக்கட்டுரை.

தமிழ்மொழியின் தனிமையும் தூய்மையும் நிலைபெற்று வளரக் காரணம் பெரும்பாலான நூல்கள் செய்யுள்நடையில் அமைந்துள்ளமையேயாம். அந்நடையையே தொல்லைச் சான்றோர்கள் இலக்கண வரம்பமைத்துப் போற்றி வந்துள்ளார்கள். செய்யுள் இலக்கணம் தமிழில் விரிவாக அமைந்திருப்பதற்கும் ஆசிரியர் பலர் யாப்பிலக்கண நூல் செய்திருப்பதற்கும் காரணம் அதுவேயாம். இவ்விருபதாம் நூற்றாண்டுத் தொடக்கத்திலும் இடையிலும் தோன்றிய செய்யுள் நூல்களுள் பல பழைய நடையில் பழைய கற்பனைகளையே மேற்கொண்டு பழைய செய்திகளையே கூறுவனவாய் அமைந்துள்ளன. ஆதலின் அவை பொதுமக்களிடத்தில் பரவவில்லை எனக்கருதவேண்டியுளது. அவை அறிஞர் தம் மதிப்பைப்பெறுததற்கும் அதுவே காரணமாகலாம். அவற்றுள்ளும் ஓரளவு புதுமையுடன் வெளிவந்தவற்றுள் ஆசிரியர் அ. வரதநஞ்சையப் பிள்ளையின் தமிழரசிகுறவஞ்சியும் அடிகளாசிரியரின் சான்றாண்மை முதலியவற்றையும் குறிப்பிடலாம். பழைய நெறியினின்றும் செய்யுள் முறையில் ஒரு திருப்பத்தை ஏற்படுத்தியவர் அமரகவி பாரதியாரே யாவர். எடுத்துக் காட்டாக நாட்டு விடுதலை பற்றி அவர் காலத்து எழுந்த பாக்களுள் சிலவற்றைக் குறிப்பிடலாம்.

பழமையும் புதுமையும் கலந்த நிலையில் செகவீரபாண்டியனாரின் திருக்குறள் குமரேச வெண்பா குறிப்பிடத்தக்கது. புலவர் குழந்தையின் இராவண காவியம், திராவிட ஆட்சி முறை முதலிய நூல்கள் பழைய நடையில் புதிய கண்ணோட்டத்துடன் விளங்குபவை. கவியோகி சுத்தானந்தபாரதியாரின் பாரத சக்தி மகா காவியம் முதலியவை இனிய எளிய நடையில் பண்டை மரபோடு புதிய கருத்துக்களைக் கொண்டிலங்குவன. இக்காவியம் பண்டை இதிகாச புராணங்களில் காணப்பெறும் வீரர்களின் வரலாறுகளோடு பாரதத்தில் தோன்றிய சிறந்த வீரர்களின் வரலாறுகளை எல்லாம் தொகுத்துணர்த்துகின்றது. கவிமணி தேசிக விநாயகம்பிள்ளையின் தனிப்பாடல்கள் இனிமையும் எளிமையும் கருத்தாழமும் உடையவை. இவர் எழுதிய உமர் கயாம், ஆசிய சோதி ஆகியவைகள் மொழி பெயர்ப்பு நூல்கள் எனினும் தமிழில் முதல் நூல்களே என்று மதிக்கத்தக்க அளவில் சிறப்புடையவாகத் திகழ்கின்றன. மலரும் மாலையும் என்ற கவிதை நூல் யாவரும் உணர்ந்து பாடி மகிழும் எளிமையும் சந்தச் சிறப்பும் உடையது. இவர் நூல்கள் பலரைச் சுவைஞர்களாகவும் கவிஞர்களாகவும் ஆக்கியுள்ளன. புதியசிந்தனை, சொல்லும் முறையில் ஒரு தனித்தன்மை, புரட்சிமிக்க கருத்துக்கள் தூய தமிழ் நடை ஆய சிறப்புக்களோடு விளங்குவன பாவேந்தர் பாரதிதாசனின் கவிதை நூல்கள். இவரது கவிதைகள் நூற்றுக்கணக்கான கவிஞர்களை உண்டாக்கிக் கவிதைத் துறையில் ஒரு பெரும் புரட்சியைச் செய்துள்ளன. பாரதியார் வழியில் தோன்றிய கவிஞர்களைக் காட்டிலும் பாரதிதாசனின் வழியில் தோன்றிய கவிஞர்களே மிகுதியானவர் எனலாம். இவரது முதல் கவிதைத்

தொகுப்பு தமிழின உணர்வையும் தாய் மொழிப் பற்றையும் வளர்த்துப் பகுத்தறிவுக் கொள்கை பரவத்துணைநின்றது. மற்றும் சிறிய அளவில் அமைந்து பெரிய காவியங்களின் பண்போடமைந்த **எதிர்பாரா முத்த** மும் ஆழ்ந்தகன்ற சமுதாயச் சிந்தனைகளை வெளிப்படுத்தும் **குடும்ப விளக்கும்** மிகச் சிறந்த படைப்புக்களாகும். **பாண்டியன் பரிசு, தமிழியக்கம்** முதலியவையும் போற்றத் தக்கவை. **அழகின் சிரிப்பு** இளங்கவிஞர்களுக்குப் பெரியதொரு வழிகாட்டி எனலாம். இருபதாம் நூற்றுண்டுக் கவிதை வளர்ச்சியில் பாரதியாருக்கும் பாரதிதாசனுக்கும் மிகச் சிறந்த இடமுண்டு.

பாரதியார் வழியில் தேசியப் பாடல்களோடு பிற பொருள் பற்றிய பாடல்களையும் பாடிய நாமக்கல் இராமலிங்கம் பிள்ளையின் கவிதைத் தொகுப்பும், **'அவனும் அவளும்'** என்ற கவிதைக் கதை நூலும், மொழிச் செம்மை, யாப்பமைதியைக் காட்டிலும் எளிமை நிறைந்தவை எனலாம். நிற்க. பண்டை முறையில் வெண்பா யாப்பில் திருவள்ளுவர் காப்பியத்தைக் கோவை கிருட்டினசாமி நாயுடு எழுதியுள்ளார். இவர் வேறு பல ஆய்வுக் கட்டுரைகளும் வரைந்துள்ளார். இனி பாரதி, பாரதிதாசன் ஆகிய இருவர் நெறியும் ஒருங்கு விளங்க அரிய கருத்துக்களை மிக எளிய முறையில் பாக்களாகவும் செய்யுளாகவும் எழுதி வருபவர் கவிஞர் கண்ணதாசன். இவர் தம் அரசியல் சார்பில்லாத கவிதைகள் புதிய இலக்கிய நோக்குடையவை எனலாம். இவர் கவிதைகள் இசையோடு கூடித் திரைப் பட உலகில் புகழோடு நிலவி வருதலால் கவிதையைச் சுவைக்கும் பாங்கு பொதுமக்களிடத்தில் பெருகியுள்ளதென்பதை ஈண்டுக் குறிப்பிடல் தகும். இவர் வழியில் தோன்றியுள்ள திரைப்படக் கவிஞர்கள் பலர். இக் கவிஞர்களின் பாடல்களிற் சில இலக்கிய மதிப்புடையவாகத் திகழ்கின்றன. திரைப் படக் கவிதை வாயிலாகத் தமிழகத்திற்கு அறிமுகமான உடுமலை நாராயணகவி சிறந்த பல தனிப்பாடல்களை எழுதியுள்ளார். தூய செந்தமிழ் நடையில் தனித்தமிழ் இயக்கத் திற்கு ஆக்கமாக நல்ல கவிதைகள் பலவற்றை எழுதி வருபவர் புலவர் பெருஞ்சித்திரனார். மற்றும் செவ்விய நடையில் தமிழ் மரபு பிறழாமல் எழுதிவரும் கவிஞர் முடியரசன், உவமைச் சிறப்பும் யாப்பு நலனும் மிளிர எழுதிவரும் சுரதா, புதிய இனிய கவிதைகளை எழுதிவரும் வாணிதாசன், கம்பதாசன், பொன்னிவளவன், முருகுசுந்தரம், தமிழன்பன், வேழவேந்தன், திருலோகசீதாராமன், கோவை இளஞ்சேரன், சமுதாயத் தத்துவக் கருத்துக்களைப் புரட்சி தோன்ற எழுதி மறைந்த கவிஞர் தமிழ் ஒளி முதலாயவர்தம் தனிப்பாக்களும். கவிதை நூல்களும் தமிழ்க் கவிதை வளர்ச்சிக்கு நல்ல அளவிற்கு துணைபுரிகின்றன எனலாம். இவர்களைப் போன்று பல நிலைகளில் எழுதிவரும் கவிஞர்கள் மிகப்பலராவர்.

பழைய முறையில் புதிய கருத்துக்களை எழுதியவர்கள் – எழுதிவருபவர்களுள் பண்டித இராமசுப்பிரமணிய நாவலர், சாலை இளந்திரையன், சேதுரகுநாதன், பூ. அமிர்தலிங்கன், கி. வா. செகந்நாதன், அரு. சோமசுந்தரம், ச. பாலசுந்தரம் முதலானோராவர். பழைய மரபும் புதுமைக் கருத்துக்களும் மிளிரத்தெளிவான நடையில் நயமான கற்பனையமைய எழுதிவரும் கலைவாணன் நூல்களுள் **உதயம்** என்னும் காப்பியம் குறிப்பிடத்தக்கதொன்றாகும். பொதுவுடைமைக் கொள்கையை வளர்க்கும் இதழ்களிலும் கவியரங்கங்களிலும் அக்கொள்கை சார்பாக எளிய கவிதைகளை எழுதிவரும் மு. இரகுநாதனும் திரைப்படங்களில் பொதுவுடைமைச் சார்பு விளங்க அழகிய ஆழமான கவிதைகளை எழுதி மறைந்த பட்டுக்கோட்டை கலியாணசுந்தரமும் குறிப்பிட வேண்டியவராவர். கற்பனை வளம், அணி நயம் விளங்கப் புதுநடையில் போற்றத்தக்கக் கவிதைகளை எழுதிவரும் கலைஞர் கருணாநிதியும் அவ்வழி நின்று முயலும் சிலரையும் ஈண்டுக் குறிப்பிடல் வேண்டும்.

குழந்தைப் பாக்கள் என்ற முறையில் பாரதிதாசனின் இளைஞர் இலக்கியத்திற்குப்

பின் எழுந்தவற்றுள் அழ. வள்ளியப்பாவின் **மலரும் உள்ளமும்** வாணிதாசனின் **குழந்தைப் பாடல் நூலும்** ச. பாலசுந்தரத்தின் **மழலைத் தேனும்**, பெ. தூரன், தணிகை உலகநாதன், நாக. முத்தையா ஆகியவர்களின் பாடல்களும் குறிப்பிடத்தக்கவை. இத்துறையில் நீர் மொக்குகளாகத் தோன்றியவை பலப்பலவாம். பழைய திருமுறைப் பாக்களையும் திருப்புகழ்ப் பாடல்களையும் போல இனிய அழகிய பாக்களை எண்ணிய அளவில் வரகவியாகப் பாடிவரும் அருட்கவி சேதுராமனின் பாடல்களும் ஈண்டுக் கருதத் தக்கவை எனலாம். பொதுவாகத் தமிழ் இலக்கியத்தில் கவிதைத் துறை பிறவற்றினும் மிகுதியாகவும் விரைவாகவும் வளர்ந்துள்ளது என்பதில் ஐயமில்லை. ஆயினும் இவற்றுள் நிலை பேறுடையவை இவை என்பதைக் காலந்தான் வரைந்துணர்த்தல் வேண்டும்.

இலக்கணத்துறையில் ஆராய்ச்சிக் கட்டுரைகளும் உரைகளும், உரைநடை இலக்கண நூல்களும் பற்பல தோன்றியுள்ளனவாயினும் பண்டை இலக்கணம் போன்று நூற்பாக்களால் அமைந்த இலக்கண நூல்கள் என்ற நிலையில் குறிப்பிடத்தக்கதாக ஒன்றுமில்லை எனினும் ச. பாலசுந்தரம் பழைய மரபோடு இயற்றியுள்ள செய்யுள் இலக்கண நூலை ஈண்டுச் சொல்லலாம்.

பழம்பொருள் ஆராய்ச்சி, கல்லெழுத் தாராய்ச்சி, கல்வெட்டு விளக்கம் என்ற வகையில் வை. சதாசிவ பண்டாரத்தார், வை. சுந்தரேச வாண்டையார், கா. ம. வேங்கடராமையா போன்றவர்களின் சில கட்டுரைகளையும் தி. நா. சுப்பிரமணியனின் **பண்டைத் தமிழ் எழுத்துக்கள்** என்ற நூலையும் இவ்விரு துறைகளையும் ஒருசேர ஆய்ந்து எழுதிய சி. கோவிந்தராசனாரின் **'வளரும் கலைகள்', 'தமிழக வரலாற்றுச் செய்திகள்** என்னும் நூல்களையும் இங்கே குறிப்பிடலாம்.

சங்க நூல்கள், இடைக்கால நூல்கள், காப்பியங்கள், புராணங்கள் ஆகியவற்றுக்கு உரை விளக்கம் எழுதியதன் வாயிலாகத் தமிழ் வளர்ச்சிக்குப் பணி புரிந்தோரையும் புரிந்து வருவோரையும் பற்றி எண்ணுவோமாயின் **சிலப்பதிகாரம், திருவிளையாடற் புராணம்,** நீதி **நூல்கள்** ஆகியவற்றிற்கு உரை வரைந்துள்ள நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரையும் நாட்டாரோடிணைந்து அகநானூற்றிற்கு உரை வரைந்த கவியரசு அரங்க. வேங்கடாசலம் பிள்ளையையும், **பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, யசோதர காவியம்** முதலியவற்றிற்கு உரை கண்ட ஔவை. சு. துரைசாமிப் பிள்ளையையும், **பத்துப்பாட்டு, பரிபாடல், பெருங்கதை, சிலப்பதிகாரம், புறப்பொருள் வெண்பா மாலை** முதலியவற்றிற்கு அழகார்ந்த விளக்க உரை எழுதிய பெருமழைப் புலவர் சோமசுந்தரனாரையும் திருமந்திரத்திற்கு உரை எழுதிய ப. இராமநாத பிள்ளையையும் சிற்றிலக்கியங்கள் சிலவற்றிற்கு உரை கண்ட சங்குப் புலவர், சேது ரகுநாதன் முதலியோரையும் ஈண்டுக் குறிப்பிடலாம். சிறப்பாகத் திருத்தொண்டர் புராணத்திற்கு திருமுறை விளக்கங்களோடு தலக்குறிப்பு முதலியவற்றையும் விளக்கி அருமையும் பெருமையும் மிக்க அகல உரை வரைந்த சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியாரின் தொண்டு போற்றத்தக்கதொன்றாகும். வ. சு. செங்கல்வராயரின் தேவார ஒளி நெறிக் கட்டுரைகளையும் ஈண்டுக் குறிப்பிடத் தகும்.

பெரும்புலவர் ச. தண்டபாணி தேசிகரின் **திருக்குறள் உரைவளமும் திருவாசக உரையும்** புலவர் குழந்தை, நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை, தேவநேயப் பாவணர் ஆய இவர்கள் தனித்தனி வரைந்த திருக்குறள் புதிய உரைகளும், திருக்குறள் முனுசாமியின் குறள் விளக்கக் கட்டுரைகளும், குறிப்பிடத் தக்கவையாம்.

உரைநடை வளர்ச்சியை நோக்குமிடத்துச் சென்ற நூற்றாண்டிலும் இந்நூற்றாண்டின் தொடக்கத்திலும் இதிகாச, புராணங்கள், இலக்கியங்கள் ஆகியவற்றின் மொழிப்பாகவும் உரைகளாகவுமே உரைநடை நூல்கள் எழுந்து பின்னர் சிறுகச்

சிறுகதை அயல் மாநிலம், அயல்மொழிச் சூழல் களாலும் நாள், கிழமை, திங்கள் இதழ்களின் வளர்ச்சியாலும் கல்வி நிலையங்களுக்குப் பாடநூல்கள் அமைக்கவேண்டிய இன்றி யமையாமையாலும் கட்டுரை, திறனாய்வு சிறுகதை, புதினம், மொழிபெயர்ப்பு என்ற நிலையில் உரைநடை இற்றைக்குப் பெரிதும் வளர்ந்துள்ளது என்பதில் ஐயமில்லை. தனித் தமிழ் நடையை வற்புறுத்தி எழுதிக்காட்டிய மறைமலையடிகளாரின் முயற்சியும். திரு. வி. க, போன்றவர்களின் உழைப்பும் நல்ல உரைநடை வளர்ச்சிக்குத் துணையாயின. இயல்பான எளிய நடைக்குப் பாரதியார், சாமிநாதய்யர், வையாபுரிப்பிள்ளை முதலானோ ரும். இனிமையும் எழிலும் வாய்ந்த நடைக்குக் கல்கி கிருட்டினமூர்த்தியும், தமிழின் வளத் தையும் பெருமிதத்தையும் சந்தச் செழிப் பையும் எடுத்துக்காட்டும் நடைக்குப் பண் டித எல். உலகநாதபிள்ளை ரா. பி. சேதுப் பிள்ளை ஆகியோரும், தெளிந்த செந்தமிழ் நடைக்கு ந மு. வே, நாட்டாரும், ஆற்றெ ழுக்கும் அணியழகும் மிக்க நடைக்கு டாக் டர்மு. வரதராசனாரும், டாக்டர். சிதம்பரநாத செட்டியாரும், இவற்றிற்கெல்லாம் பொது வான நடைக்கு ஔவை. சு. துரைசாமிப் பிள்ளையும், க, வெள்ளைவாரணனாரும், அ. ச. ஞானசம்பந்தனும் கோ. சுப்பிரமணியப் பிள்ளையும் டாக்டர் வ. சு. ப. மாணிக்கமும் ச. தண்டபாணி தேசிகரும், ஓட்டமும் தேட்டமும் மிக்க நடைக்குக் கி. ஆ. பெ. விசுவநாதமும், பழகுதமிழ் நடைக்குத் தெ.பொ. மீனாட்சிசுந்தரனார், மயிலை சீனி வேங் கடசாமி, கி வா. செகந்நாதன், ரா. இராகவை யங்கார், மு. இராகவையங்கார், சாமி. சிதம் பரனார், துடிசைக்கிழார் அ சிதம்பரனார், டாக்டர். சி. இலக்குவனார், குன்றக்குடி அடி களார், ம. பொ. சிவஞானம், இளவழகனார் முதலியோர் முன்னோடிகளாவார். மற்றும் சிறப்பாகக் கவிதையின் கவினும் கட்டுரை யின் தெளிவும் இசையின் சாயலும் அமைய எதுகை மோனை நயம்பட எழுதித் தமிழ் உரைநடையின் பெருமையை அருமையாக எடுத்துக்காட்டிய அறிஞர் அண்ணாத்துரை யின் உரைநடை ஆயிரமாயிரம் மாணவர் களைக் கவர்ந்து உரைநடை வளர்ச்சியில் ஒரு புதிய திருப்பத்தை உண்டாக்கியது குறிப் பிடற்குரியதாம். மிடுக்கான நடைக்கு நாவலர் சோமசுந்தர பாரதியார் முன்னோடி யாக விளங்கினார் எனலாம். புதிய சொல் லாக்கத்தோடு கூடிய தனித்தமிழ் நடைக் குத் தேவநேயப்பாவாணர், பெருஞ்சித்திர னார் போன்றாரின் நூல்களைக் கூறலாம். திரைப்படங்களில் அளவளாவல் முறையி லும் நாடக உரைநடையிலும் நல்ல தமிழைக் கவிதை உணர்வோடு வெளிப்படுத்தியவர் களுள் இளங்கோவன், கலைஞர் கருணாநிதி, ஏ. கே. வேலன், அரு. இராமநாதன் போன்ற வர்களைக் குறிப்பிடலாம். மொழித்தூய்மை முதலியவற்றை நோக்காமல் கருத்தை மட் டும் வலியுறுத்துவது போதிய கல்வி நலம் வாய்க்கப் பெறாததாகும். படித்துணர்ந்து கொள்ளும் நிலையில் சிறுகதை, நெடுங்கதை கட்டுரைகள் வாயிலாக வளர்ந்த உரை நடையை நோக்கின் அது போற்றத்தக்க அளவில் வளர்ச்சி பெற்றிருப்பதை உணர லாம்.

இனிச், செய்யுள், உரைநடை, பாடல் கள் என்னும் வகையில் வளர்ந்துள்ள இலக் கியச் செல்வங்களைக் கருதினால் பல்வேறு துறைகளில் பெருகி நாற்றிசையும் பரவித் தமிழின் சீர்த்தியை விளக்குவனவாய்ப் பல் லாயிரக்கணக்கான நூல்கள் விளங்குகின் றன. பாரதியார் கவிதைகள் சில ஆங்கிலத் திலும் பல உருசிய மொழியிலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. மொழி பெயர்க்கப் பட்டும் மொழிபெயர்ப்புக்குத் தகவானது மான கவிதைகளுள், பாவேந்தர் பாரதிதா சன், கண்ணதாசன் முதலியோரியற்றியவற் றைக் கருதலாம். சிதம்பர ரகுநாதன், செய காந்தன் முதலியோர் சிறுகதைகள், கட்டுரை கள் அயல்மொழிகளில் பெயர்க்கப்பெற்று நிலவுகின்றன. சமுதாயம், அரசியல், வரலாறு பற்றிய சிறுகதைகள், புதினங்கள் பல மேலை நாட்டு இலக்கியங்களோடு ஒப்பவும் சில உயர்ந்தும் விளங்குகின்றன. பாட நூல்கள் துணைப்பாட நூல்கள், விளக்க நூல்கள் என்ற வகையில் அறிஞர் பலரின் நூல்கள்

இலங்குகின்றன. கணக்கு, அறிவியல், நில நூல், அரசியல்நூல், உளநூல், மருத்துவ நூல் என்ற நிலையில் ஒரு சில பாடநூல்களைத் தவிரப் பெரும்பாலும் அயல்மொழியினின்றும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளவையே உள. ஊர்ச்செலவு நூல்கள், இலக்கியத்திறனாய்வு நூல்கள், வரலாற்று நூல்கள், எழுத்து, சொல் சொற்றொடர் பற்றிய இலக்கண நூல்கள், நடு நிலை ஆராய்ச்சி நூல்கள் எனக்காணின் அவை இளமைப்பருவத்தனவாய் உள்ளன. இவ் வகையில் வளரவேண்டிய முறையில் அவற்றை வளர்க்க நல்லறிஞர்கள் முயல வேண்டும்.

இவை இவ்வாறாக, இசைத் தமிழ் பற்றி ஆராயும்போது இசைவாணர்களும் இசைச் சுவைஞர்களும் ஓரளவு பெருகியுள்ள னர். எனினும், இசைத்துறை பற்றிய நூல்கள் மிக மிகக் குறைவேயாம். புதுமை பொலி யத் தமிழை வளர்க்கும் சீரிய குறிக் கோளோடு தொண்டாற்றி வரும் நம் சங் கத்தின் நோக்கினை உணர்ந்து தாம் கற் றறிந்த கணக்கறிவாலும், பைந்தமிழ் நூற் பயிற்சியாலும், தேவாரத் திருமுறைகள் மாட்டமைந்த பற்றாலும் தவத்திரு. விபுலா னந்த அடிகளாரின் சிந்தையில் தோன்றிச் செழிப்போடு பிறந்தது யாழ்நூல். இசைத் தமிழ் வளர்ச்சிப் பணியில் இந்நூல் ஒரு திருப்புமுனை எனலாம். யாழ்நூலின் தொடர் பாக அடிகள் எழுதிய கட்டுரைகளும் முத் தமிழ்ச் சிறப்பும் விளங்க வரைந்த **மதங்க சூளாமணி** என்னும் நூலும் குறிப்பிடற் பாலன. அண்ணாமலைப் பல்கலைக் கழகச் சார்பில் வெளிவந்தனவும் தமிழிசைச் சங்க ஆதரவில் வெளிவந்தனவுந் தவிர. க பொன் னையாப் பிள்ளையின் **இசையியல்** நூலும், இசைக் கருவிகளைப் பற்றிய சில நூல்களும், குடந்தை ப. சுந்தரேசனின் **ஐந்திசைப் பண்கள்** முதலியவைகளும், S. இராமநாதன் P. சாம்பமூர்த்தி ஐயர் போன்றவர்களின் கட்டுரைகளுமே வெளிவந்துள. தமிழிசைப் பாடல்களை நோக்கும்போது T. இலக்குமண பிள்ளை, பாபநாசம் சிவன், பெரியசாமித் தூரன், திருவாசகமணி பாலசுப்பிரமணியம் தேவநேயப் பாவாணர், என். எசு. சிதம் பரம், ச. பாலசுந்தரம் முதலானோரின் இசைப் பாடல்களும், தஞ்சை இராமையாதாசின் திருக்குறள் இசைப்பாடல் நூலும், சுத்தா னந்த பாரதியாரின் **கீர்த்தனாஞ்சலி, நடனாஞ் சலி** முதலிய நூல்களும், பாரதிதாசனின் **இசையமுதும், தேனருவியும்**, திருவையாறு P. V. அப்துல் கபூர் சாகிபு இயற்றிய பல் வகை இசைப் பாடல்களும் குறிப்பிடத் தக்கவை. திரைப்படங்கள் வாயிலாகத் தோன்றியுள்ளனவற்றுள் கருநாடக இசை யும் நல்ல தமிழும் கூடிய பாடல்கள் மிகச் சிலவேயாம். மெல்லிசைப் பாடல்கள் என்ற வகையில் திரைப்படங்களிலும் இசைத் தட்டுகளிலும் மிகப் பல இசைப் பாடல்கள் தோன்றியுள்ளன. இசைப் பயிற்சியும் தமிழுணர்வும் உடைய இசைப் புலவர்களுள் சிலர் தாமே அமைத்துள்ள பாடல்கள் பல சமய – சமுதாய விழாக்களி லும் – இசை மன்றங்களிலும் பாடப் பெறு கின்றன. இசைபற்றிய அறிவு மக்களுக்குக் கலை உணர்வை வளர்த்து உள்ளத்தை மென் மையாக்குந் தன்மையுடையவாதலின் இத் துறை மேலும் நன்கு வளரத் தமிழ் மக்கள் பெரிதும் முயலவேண்டும். இசைபற்றிய இலக்கணத்தெளிவு நூல்கள் வரைவதில் அத்துறை யறிஞர்கள் ஈடுபட வேண்டும்.

நாடகத் தமிழ் வளர்ச்சியைக் கருதும் போது கோடை மழை போலவும் கார் காலத்து நிலவு போலவும் சிற்சில போது செழித்தும் பலபோது செயலற்றும் இருக் கின்ற நிலைமையே காணப்படுகிறது. **மனோன் மணீயத்**திற்குப்பின்சிறந்தநாடக இலக்கியங் கள் செய்யுள் நடையில் தோன்றவில்லை என் பது பலர் கருத்தாகும். எனினும், **காலத் தேர், புலவர் உள்ளம், புரவலர் உள்ளம், ஆதிமந்தி, காமஞ்சரி** போன்ற சில நூல்கள் தோன்றாமலில்லை. உரைநடையில் படிப்ப தற்கேற்றவை எனக்கருதத் தக்க வகையில் ந. மு. கோவிந்தராய நாட்டாரின் **இராசேந் திரன்**, அ. ச. ஞானசம்பந்தனின் **நாடகக் கொத்து** மு. வ. வின் **அல்லி** முதலியனவும், மேடையில் நடிக்கத்தக்கவயையில் பலவும்

தோன்றியுள்ளன. வானொலி நாடகங்கள் பலவும் தோன்றியுள்ளன. வானொலி நாடகங்கள் பல கவிதையிலும் உரைநடையிலும் நல்லமுறையில் வந்துள்ளன. பன்முறை நடிக்கப் பெற்ற உரை நடை நாடகங்களுள் அறிஞர் அண்ணாத்துரையின் **சந்திரோதயம்**, **ஓர் இரவு**, **வேலைக்காரி**, பா. ஆதிமூலனின் **மனிதன்**, பி. எஸ். இராமையாவின் **தேரோட்டி மகன்**, ப. எத்திராசுலுவின் **ஔவையார்**, கலைஞர் கருணாநிதியின் **மந்திரிகுமாரி**, **தூக்கு மேடை**, சக்தி கிருஷ்ணசாமியின் **வீரபாண்டிய கட்டபொம்மன்**, கலைவாணர் என். எஸ். கிருஷ்ணனின் **கிந்தனார்**, **ஐம்பதும் அறுபதும்**, சின்ன ராசுவின் **போர்வாள்**, சு. டி. சுந்தரத்தின் **கவியின் கனவு**, கே. சுந்தரத்தின் **வியட்நாம் வீடு**, ''சோ''வின் **முகமது பின் துக்ளக்**, திருவாரூர் தங்கராசுவின் **இரத்தக்கண்ணீர்** ப. நீலகண்டனின் **முள்ளில் ரோஜா**, பாவலர் பாலசுந்தரத்தின் பராசக்தி, ஏ. கே. வேலனின் **சூருவளி**, **எரிமலை**, அரு. இராமநாதனின் **இராசராசசோழன்**, கி. ஆ. பெ. விசுவநாதத்தின் **தமிழ்ச் செல்வம்** முதலியனவாகும். மற்றும், வானொலியில் நிகழும் நாடக விழாக்களும், பள்ளி – கல்லூரி மன்றங்களில் நிகழ்த்தப்பெறும் விழா நாடகங்களும், பொது மக்களிடையேயும் மாணவர்களிடையேயும் நாடகத் தமிழ் உணர்வைக் காத்து வளர்த்து வருகின்றன எனலாம். எனினும் பாராட்டத்தக்க அளவில் நாடகத் துறையில் இலக்கியங்கள் வளர்ந்துள்ளனவா என்ற வினாவிற்கு விடை கூறல் எளிதன்று.

இனி, உலக வழக்காய பேச்சுத் தமிழ் இந்நூற்றாண்டின் தொடக்கத்திலும் இடைக் காலத்திலும் இருந்த நிலையோடு இற்றைய நிலையை ஒப்பிட்டு நோக்கின் பெருமைப் படத்தக்க அளவில் வளர்ந்துள்ளதைக் காணலாம். சொற்கள் செவ்வையாகவும், கூடியவரை பிறமொழிக் கலப்பின்றியும் அமைந்துள்ளது பாராட்டத்தக்கதாம், ஸ்ரீமான்கள் திருவாளர்கள் ஆகவும், நமஸ்காரம் வணக்கமாகவும், அக்கிராசனர் தலைவராகவும், சந்தோஷம் மகிழ்ச்சியாகவும், சந்தர்ப்பம் நேரமாகவும், பிரயோஜனம், பயனாகவும் பிரசங்கம் சொற்பொழிவாகவும் சுகம் நலமாகவும் வழங்கப் பெறுதலையும் நாட்டுப் புறங்களிலும் வீட்டு முற்றங்களிலும் விளையாட்டிடங்களிலும் வளமான தமிழ் நிலவுதலையும் காணுங்கால் சங்கத்தின் பணி தகவான விளைவைத் தந்துள்ளமையும் அதனைத் தமிழகம் போற்றிப் பயன்பெற்று வருகின்றமையும் புலனாகும். தொடக்கப்பள்ளி முதல் கல்லூரி வரை மாணவர்களைப் பயிற்றுவிக்கும் ஆசிரியர்களும் பேராசிரியர்களும் வழங்கும் தமிழ் நடை வனப்பும் தூய்மையும் செறிவும் நெறியும் கொண்டு திகழ்தல் குறிப்பிடத்தக்கதாம். பெருமளவிற்கு ஆங்கிலத்தைக் கலந்துவந்த அரசு அலுவலகங்களிலும், வடமொழியைப் பெய்து உரையாடியும் எழுதியும் வந்த பொது நிலையங்களிலும், வழுவும் மருவுமாக வழங்கிவந்த வணிக நிலையங்களிலும், இப்போது அழகுந் தெளிவுமிக்க பழகுதமிழ் திகழ்தலைச் செவிமடுக்கின்றோம். இந்நிலை வளரத் துணைபுரியும் அரசும், புத்தக வெளியீட்டகங்களும் நன்றிப் பெருக்குடன் பாராட்டத்தக்கன. நமது **தமிழ்ப்பொழில்** இப்பணியை மேற்கொண்டு பல இனிய தமிழ்ச் சொற்களை வெளியிட்டு வருகிறது.

புராண இதிகாச விரிவுரையளவில் நின்றிருந்த மேடைகள் சிலப்பதிகாரம், சீவக சிந்தாமணி, சங்க இலக்கியம், திருக்குறள் இவற்றின் விளக்க உரை மேடைகளாகவும், பட்டிமன்றங்களாகவும் கருத்தரங்கங்களாகவும் விரிந்து பேச்சுத் தமிழை வாழ்ச்சியுடையதாகச் செய்துள்ளன. மற்றும், அரசியல் விடுதலைவேண்டியும் அரசியல்கோட்பாடுகளில் மாற்றங்களை விரும்பியும் எழுந்த பல்வேறு அரசியல் கட்சிகள் மேடைத் தமிழ் திசை எங்கும் வளரக் காரணமாயின எனில் மிகையாகாது. மேடைப் பேச்சுப் பற்றிப் பல நூல்களும் தோன்றியுள்ளன, அவற்றுள் தெய்வசிகாமணி ஆச்சாரியார் எழுதிய **''மேடைப் பேச்சு''** என்ற நூல் குறிப்பிடத்தக்கது. சிலருடைய பேச்சுக்கள் நூல்வடிவிலும் வெளிவந்துள்ளன. இம்மேடைப் பேச்சினைப் பள்ளிகளும் கல்லூரிகளும் பல்கலைக் கழகங்களும் சில பொது மன்றங்

களும் போற்றத்தக்க வகையில் ஊக்கி வளர்த்து வருகின்றன. பேச்சு செயலாக மலர்ந்து பொன்மலர் நாற்றமுடைத்தாகித் திகழல் வேண்டும்.

இக்கட்டுரையை முடிக்குமுன் உலகில் இஞ்ஞான்று சிறந்து விளங்கும் மொழிகள் பல தோன்றுதற்கு முன்னர்த் தோன்றி இலக்கண இலக்கியச் செல்வங்களால் வனப்புமிக்க பேருருவை ஒரு கணம் முழுமையாக நோக்குவோம். ஆழி முழங்கி அலையெழுந்து மும்முறை ஊழி பிறந்த காலத்தும் தன் நிலை திரியாது பெருநாரை, பெருங்குருகு, இசை நுணுக்கம், பூதபுராணம், பரிபாடல், கலிப்பாக்கள், அகத்தியம், தொல்காப்பியம் முதலாய அரும் பெரும் ஒளிவட்டங்களைப் பூண்டும், மூவேந்தர்கள் தம்முள் முரண்பட்டுக் களம்புகுந்து வளங்குறைந்த காலத்தும் வேளிரும் மன்னரும் தம் தாளினுற் செருக்கித்தகவிழந்த போழ்திலும் பாட்டுந் தொகையுமாகிய பன்மணி மாலைகளையும், கூத்தும் இசையுமாகிய கோல நூற்கோதைகளையும் அணிந்து விளங்கியவள் நம் செந்தமிழ்த்தாய். தென்னகம் இன்னலுறத் துன்னிய வடவரின் நடைமுறையாலும் களப்பிரர் முதலியோரின் அளப்பரும் ஊறுகளாலும் களைத்திளைத்த காலத்தும் செஞ்சொற் சிலம்பையும் மின்னொளி மேகலையையும் பேரார் கதையையும் பூண்டு, சிந்தாமணி வளையாபதி குண்டலகேசிகளைத் திருக்குறளோடு உருக்கொளப் புனைந்தும் விளங்கியவள் நம் ஒண்டமிழன்னை. சாலாத்திறல் மிகு தேவாரத் திருமுறைக் கண்ணிகளையும் ஓவாப்புகழ் வினை ஆழ்வார்களின் பாமணி மாலைகளையும் நோக்குவார்க்கு ஆரமிழ்தளிக்கும் சேக்கிழாரின் தெய்வத்திருவருள் மாலையையும், மெய்கண்டார் முதல் பொய்தண்டாப் புலவர்கள் புரிந்த பொன்மலர்த் தொடையல்களையும், கச்சியப்பரின் வச்சிரக் கண்டிகையையும் பெருநெறி ஒலிக்கும் அருணகிரியாரின் திருமணித் தண்டையினையும், சிவப்பிரகாசர், குமரகுருபரர், பரஞ்சோதியார் போன்ற அறஞ்சான்ற புலவர்கள் பன்னிப்புனைந்த பொன்னரி மாலைகளையும் பூண்டு விளங்கும் புகழ்வளர் மேனியில் இவ்விருபதாம் நூற்றாண்டில் இந்நாள் வரை புதுமை என்றும், புரட்சி என்றும், வன்மை என்றும், உண்மை என்றும் வரைந்து புனைந்து பூட்டியும் சூட்டியும்உள்ள அணிகலன்களும் மணிமலர்களும் எத்துணை அழகு செய்கின்றன, ஏற்றந்தருகின்றன! இவற்றுள் வாடா மலர் மாலைகள் எத்தனை, வண்ணங்குலை பொன்னரி மாலைகள் எத்தனை, குணங்கோடா மணங்கமழ் மலர்கள் எத்தனை, ஆற்றல் குறையா ஆரங்கள் எத்தனை, எனச் செப்புதற்கு இப்பொழுதியலாது. முப்போதும் ஒப்பற்றவை இவை என இனிவரும் உலகம் துணிவோடு கூறுதல் வேண்டும், எனினும் இஞ்ஞான்று திகழும் சில பிறமொழியணங்குகள் பெற்றிருக்கும் கொற்றப்பதாகைகளையும் கோலக் குலவணிகளையும் நோக்கித் தமிழர் தம் தெய்வத்திற்குப் பரிவோடு மேலும் மேலும் ஆக்கமான அணிமணிகளைப் புனைந்து அழகு செய்தல் வேண்டும்.

எந்தக் குறிக்கோளோடு நமது சங்கம் தோன்றி இதுகாறும் ஓல்லும் வகையால் உழைத்து வருகிறதோ அக்கொள்கை செயலாக முகிழ்த்துப் பல்கலைக் கழகங்கள் வாயிலாகவும் அரசாங்க வாயிலாகவும் பூத்து மணம் பரப்பி வருவது மகிழ்ச்சிக்குரியது. எனினும் மக்களாட்சி பெற்று மாண்புடன் திகழும் தமிழர் மேலும் மேலும் காலத்தால் கதிர்ப்புற்றுக் களிப்பருளும் நெறியில் கண்ணுங் கருத்துமாகக் கடனுற்றிக் கனித் தமிழை வண்ணமுற வளர்க்க வேண்டும். வாலறிவன் துணையால் நம் தமிழ் மொழி வளம் நிறைந்து திகழ்வதாக என்று வேண்டி வாழ்த்தி அமரகவி பாரதியார் வழங்கிய வாய்மொழியோடு இக்கட்டுரையை நிறைவு செய்வோம்.

வானமளந்த தனைத்து மளந்திடும்
வண்மொழி வாழியவே
வாழ்க தமிழ்மொழி வாழ்கதமிழ்மொழி
வாழிய வாழியவே !



# இயலிசை நாடகம்

## தவத்திரு விபுலாநந்த அடிகளார்

இமிழ்கடல் வேலியைத் தமிழ் நாடாக்கி வடபாலிமயத்திலே கயலும் வில்லும் புலியும் பொறித்த மூவேந்தரின் அறமும் மறமும் ஆற்றலும் நம் உள்ளத்திலே நீங்காது நின்று ஒளிபரப்புவ வாகுக.

இயலிசை நாடக முப்பாற்பொருளை ஆராய்தல் கருதி இப்பேரவையிலே வந்திருக்கும் நாமெல்லாம் காய்தல் உவத்தல் அகற்றி, நுண்மாணுழைபுலமுடைய நம் முன்னோரைப் போல 'நடுவுநிலை நெடுநகர் வைகி', உண்மைவழிச் செல்லும் உறுதிப் பாடுடையேமாகுக.

பள்ளியிற் பயிலுந் தமிழ்ச்சிறார்முதற் பலகலைகற்றுத்தேறிய முது புலவரீறாக அனைவரும் தமிழ்க் குலத்தாரின் உண்மை வரலாற்றினை உளங்கொண்டுணர்தற்கு வேண்டிய சிறியவும் பெரியவுமாகிய வரலாற்று நூல்கள் பல தமிழ் மொழியிலே எழுதப்படல் வேண்டும். இதுவே நாம் செய்ய வேண்டிய தமிழ்த் தொண்டுகளுள்ளே முதலில் வைத்து எண்ணுதற்குரியதென்பது எனது உள்ளக் கிடக்கை.

இற்றைக்கு ஏறத்தாழப் பதினாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு நம் முன்னோர் பஃறுளியாற்றுக்கும் குமரியாற்றுக்கும் இடையே கிடந்த பெருநிலப் பரப்பிலே சீருற வாழ்ந்து எண்ணூலும், இசைநூலும், இயல் நூலும், வான நூலும், மனையமைப்பு நூலும், கலமமைப்பு நூலும், பிற நூலும் வல்லாராய், இந்நகர்க்கு மதுரைப் பெயரளித்த தொன்னகராகிய (கடல் கொண்ட) தென் மதுரையிலே நிலந்தருதிருவிற்பாண்டியனை யுள்ளிட்ட அருந்திறல் மன்னர்தம் அவைக் களத்திலே சிறந்து விளங்கினாரென்பதும், இற்றைக்கு ஏறத்தாழ ஒன்பதினாயிரம் ஆண்டுகளின் முன்னே கடல் கோளினாலே குமரிநாடு அழிந்த பின்னர் உவணன், ஓதக்கோன் என்னுந் தலைவர்கள் வழிப்படுத்தக் கலத்திற் சென்று, பாரசீகக் குடாவின் வடபாலதாகிய சுமேரு நாட்டிற் குடிபுகுந்தாரென்பதும், மேலும் அராபிய நாட்டின் தென்பாலதாகிய ஏமனாட்டிலும், நீலநதி வளம் பெருக்கும் மிசிரி என்னும் எகிப்து நாட்டிலும், சுமேரு நாட்டினையடுத்த ஏலநாட்டிலும் சிந்து நதிக் கரையில் விளங்கிய மீனாட்டிலும், ஆங்கதற்கு வடபாலதாய்ப் பனிபடர்ந்த மலைகளாற் சூழப்பட்ட மரங்கொத்தி நாட்டிலும், பிற நாடுகளிலும் வாழ்ந்தார்களென்பதும், சுமேரு நாட்டின் வடக்கே சோழர் குடியேறிச் சோழதேயம் எனப்பெயரிட்டு வாழ்ந்த நாடே மொழிச் சிதைவினாலே சால்டியா எனப்பட்டதென்பதும், பண்டைக் காலத்திலே கலத்திற் சென்று பண்டமாற்றினாலே நிதிக் குவையீட்டிய பாணிகள் தமிழ் நாட்டு வணிகரா மென்பதும் ஐரோப்பாவுக்கும் மத்தியதரைக் கடலின் இருகரையிலும் வாழ்ந்து பண்டை யவனரும் உரோமரும் வருவதற்கு முன்பு நாகரிகம் பரப்பிய மீனவர், எத்துருஸ்கர், துமிதியர், பேர்பெரியர், ஐபீரியர் ஆதியோர் தமிழ்க்குலத்தினராமென்பதும், வில்லவராகிய சேர மன்னர் கலத்திற்

---

குறிப்பு :— இக்கட்டுரை தவத்திரு. விபுலாநந்த அடிகளார் 1942 இல் மதுரை இயற்றமிழ் மாநாட்டிலாற்றிய தலைமைப் பேருரையின் சுருக்கமாகும்.

சென்று மத்திய தரைக் கடலிலுள்ள கிரீத் என்னுந் தீவினைக் கைப்பற்றி ஆளுகை புரிந்த செய்தியே 'வன்சொல் யவனர் வளநாடாண்டு' எனச் சிலப்பதிகாரத்துள்ளும் 'நயனில் வன்சொல் யவனர்ப் பிணித்து' எனப் பதிற்றுப்பத்தினுள்ளும் கூறப்பட்டதென்பதும் பிறவும் பண்டைக்கால வரலாறு (Ancient History) கூறும் நூல்களினுள்ளும் நம் நாட்டு மேனாட்டுப் பண்டையிலக்கிய நூல்களினுள்ளும் பரவிக் கிடக்கின்ற முடிபுகளாம். இம்முடிபுகளுள் ஒருசில 'உலக புராணம்' என்னுந் தலைப் பெயர்க் கீழ்ச் செந்தமிழ்ப் பத்திரிகையிலும் பிற வெளியீடுகளிலும் வெளிவந்ததனைத் தமிழன்பர்கள் அறிவார்கள். அஃதன்றியும் ஒரு சாராசிரியர் தமிழ்க்குலத்தார் பசிபிக் பெருங் கடலினைக் கடந்து சென்று மத்திய அமெரிக்காவிலே குடியேறி மெச்சிக்கோ, பீரு, யுக்காட்டன் முதலிய இடங்களிலே வாழ்ந்து மாயா நாகரிகத்தினைத் தோற்றுவித்தனரெனக் கூறுவர். இவற்றையெல்லாம் ஒருங்கு வைத்து நோக்குமிடத்து உலக சரித்திரமே தமிழ்க் குலத்தாரோடு தொடங்குகிறதென்பதும், இற்றைக்கு ஒன்பதினாயிரம் ஆண்டுகளின் முன்னே பூவலயத்தின் நடுபாகம் முழுவதிலும் தமிழ்க் குலத்தார் சீருஞ் சிறப்பு முற்று வாழ்ந்தார்களென்பதும் பெறப்படுகின்றன. கடல் கொண்ட அத்லாந்திஸ் (Lost Atlantis) தெங்க மரமும் யானையுமுடையதாயிருந்ததெனக் கூறப்படுதலின், கடல் கொண்ட குமரி நாட்டின் வரலாறே மத்திய அமெரிக்காவினின்று ஐரோப்பாவினையடைந்த ஞான்று கடல் கொண்ட அத்லாந்திஸ் வரலாறாக உருத்திரிந்ததெனக் கொள்வதும் ஒருதலை. இவை போன்ற முடிபுகளையெல்லாம் வரலாற்று நூற்றுறையிலே வல்லுநராயுள்ளோர் காய்தலுவத்தலகற்றி நடுவு நிலைமையோடாராய்ந்து பொருட்டொடர் நிலையினமைந்த நூல் வடிவாக்கித் தருதல் வேண்டும்.

காலமும் கடலும் செல்லும் கவர்ந்தன போக எஞ்சி நிற்கும் அருந்தமிழ் நூல்களின் வரலாற்றினைச் செவ்விய முறையிலே ஆராய்ந்தறிந்து நமது மொழியிலும் பிற மொழியிலும் தமிழிலக்கிய வரலாறுகள் சிறியவும் பெரியவுமாக எழுதித் தமிழ் நூல்களின் மதிப்பினை உலகிற்கு அறிவுறுத்த முயலவேண்டும். ஆங்கில மொழியிலே நிகண்டு நூல் ஒன்றினை யாத்தமைத்த ரோஜெட் (Roget) என்பார் ரோராசிரியர் அத்தகைய நூல் பிறமொழியொன்றிலுமிலதென முதற் பதிப்பிலே கூறினர். இரண்டாம் பதிப்பு முகவுரையிலே அமரசிங்கர் என்பார் இயற்றிய நிகண்டு நூலொன்று வடமொழியிலே உளதெனக் குறிப்பிட்டார். பிங்கலம் திவாகரம் முதலிய நிகண்டு நூல்கள் தமிழ் மொழியில் உளவெனும் உண்மையினை அவர் அறிந்திலர், தமிழராகிய யாம் அறிவித்திலேமாதலின்.

பாரத நாட்டு இசையினைக் குறித்து ஆங்கிலத்திலே நூலெழுதிய பக்ஸ் ஸ்டிராங்கு வேய்ஸ் என்னும் பேரறிஞரும் பிறரும் வடமொழியிசை நூல்களையே குறிப்பிட்டுச் சென்றனர். தமிழராகிய யாம் நமது இசைக்கலையினைக் குறித்து அவர் போன்றாருக்கு அறிவித்திலேமாதலின், சாரங்க தேவரியற்றிய சங்கீத ரத்நாகரம் தேவாரத்திற் பொதிந்த தெய்வ இசையினைப் பெருகக் குறிப்பிடுகிறதென அறிந்திருந்தும் நம்மவருள் ஒரு சாரார் அவ்வுண்மையினை உலகிற்குணர்த்தாது மறைக்க முயல்கின்றனர்.

இனி நம் கைக்கு எட்டாது அழிந்து போன நூல்களைக் குறித்துப் பழைய உரையாசிரியர் கூறுகின்ற வரன்முறைகளையும் மேற்கோட் சூத்திரங்களையும் பொன்னே போற் போற்றி நூல் வடிவாக்கி அச்சேற்றிப் பாதுகாக்கவேண்டும். இவ்வாறு செய்தற்குரியன குண்டலகேசி, வளையாபதி, தகடூர்யாத்திரை, இசை நுணுக்கம், சயந்தம், குண நூல் செயிற்றியம், பரதசேனாபதியம், பஞ்ச மரபு, இந்திரகாளியம், மதிவாணர் நாடகத் தமிழ் நூல், ஆசிரிய மாலை, மாபுராணம் என்றித் தொடக்கத்தன. "நாடகத் தமிழ் நூலாகிய பரதம் அகத்தியம் முதலாவுள்ள தொன்னூல்களும் இறந்தன" என அடியார்க்கு நல்லார் கூறுதலின், தமிழ் மொழியிலே பரதம் எனப் பெயரிய நூலொன்று இருந்து இறந்த உண்மை புலப்படுகின்றது. இதற்கும்

வடமொழிப் பரதத்திற்குமுள்ள தொடர்பு அறிஞர் ஆராய்ந்து அறிதற்குரியது. வரன் முறையாராய்ச்சி சிறிதும் வாய்க்கப் பெறாத அரபத்த நாவலர் என்னும் பிற்காலத்து நூலாசிரியர் தமது தமிழ் முன்னோர் வழித் தமக்குக் கிடைத்த அரும் பொருண் முடிபு தனைப் பொதிந்து தாமியாற்றிய பரதம் என்னும் நூலுக்கு வடமொழி முதனூல் கற்பிக்கும் விழைவினாலே பதின்மூன்றாம் நூற்றாண்டிலிருந்த சாரங்கதேவரை அகத்தியர்க்கு முன்னிருந்தவராக்கிச் சுத்த பௌராணிக மதத்தின் நிற்பாராய், வடமொழியிலே சாரங்கதேவ முனிவர் பரத நூலை ஓரிலக்ஷம் கிரந்தங்களால் கூறினரெனவும், அவர் நூற்கு வழி நூல் செய்த அகத்தியனார் ஆறாயிரம் சூத்திரத்தினால் அறைந்தனரெனவும் சில் வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவின் மாந்தர் பொருட்டாகத் தாம் சுருக்க நூல் செய்வதாகவும் கூறிச் செல்கின்றார். அவர் கூற்று எனது அருமை நண்பரொருவர் பௌராணிக மனப்பான்மையினை எள்ளி நகையாடுங் கருத்தினொடு வெளியிட்ட 'பள்ளியகரம் பழங்கதை' யை நினைவுக்குக் கொண்டுவருகின்றது.

பரதம் என்னும் பெயர்க் காரணத்தை ஆராய்தற்குச் சிலப்பதிகார அரும்பத வுரையாசிரியர் கூறிய முடிவுகள் நமக்கு உதவுகின்றன. ஒன்பான் சுவையும் எண் வகை மெய்ப்பாடும் என்னுமிவற்றோடு இயைபுடைய 'இரதம்' என்னும் மொழியினை அரும்பதவுரையாசிரியர் பலகால் வழங்குகின்றார். 'வடமொழி' அலங்கார நூலார் கண்ட 'ரசம்' 'பாவம்' என்னும் மொழிகளின் பொருளினை இம்மொழி தந்து நின்றது. 'பண்' 'இரதம்' 'தாளம்' எனும் மூன்றுறுப் படக்கிய பிண்டம் 'பரதம்' எனலாகும். முத்தமிழ் விரகராகிய ஆளுடைய பிள்ளையாரது தேவாரத் திருப்பதிகத்திலே

"பண்ணும் பதம் ஏழும் பல ஓசைத்
தமிழ் அவையும்
உண்ணின்றதொர் சுவையும் முறு தாளத்
தொலி பலவும்
மண்ணும் புனல் உயிரும்வரு காற்றுஞ்
சுடர் மூன்றும்
விண்ணும் முழுதானானிடம் வீழிம்
மிழலையே" என

இறைவனது இசையுருவினையும், எண் பேருருவினையும் கூறிய அருமைத் திருப்பாடலிலே 'பண்ணும் பதமேழும் பலவோசைத் தமிழிசையும்' எனப் பண்ணீர்மையும், 'உண்ணின்றதொர் சுவையும்' என இரதமும், 'உறுதாளத் தொலி பலவும் எனத் தாளக் கூறுபாடுகளும் மேற்காட்டிய முறையிலே அமைந்து நிற்றல் காண்க. பரத முனிவர் செய்தலிற் பரதமாயிற்று. அப்பெயரினார் தமிழுக்கு உரியரல்லரெனின் 'அரசகுமரரும் பரதகுமரரும்' என அரசரோடு உடன் வைத்தோதிய பரதர் குலம் தமிழுக்கு உரியது. அக்குலத்தினர் ஒருவர் தமிழ்ப் பரதத்தைச் செய்தாரெனக் கொள்ளுதலில் நேர்ந்த இழுக்கென்னை யென்போம்.

பாவம், இராகம், தாளம் எனுமிவற்றைக் கூறும் நூல் 'பரதம்' எனப் பிற்காலத்தார் கூறினர். வடமொழி நான்காம் பகரத்தை முதனிலையாகக் கொண்ட பாவம், என்னுஞ் சொல் யானறிந்த வரையில் பழந்தமிழ் வழக்கில் வந்திலது. அங்ஙனமாதலின் அடியார்க்கு நல்லார் கூறும் தமிழ்ப் பரதத்தின் முதனிலையெழுத்து இருமொழிக்கும் பொதுவாகிய முதற் பகரமேயாமென்பதும் அது 'பண்'ணைக் குறித்ததென்பதும் அறிதற்குரிய. அவ்வண்ணமே இடைநின்ற 'ர' கரம் பழந்தமிழ் வழக்கிலுள்ள 'இரத'த்தினைக் குறித்ததெனவும், அவ்வழக்கிற் காணப்படாத இராகத்தினைக் குறித்திலதெனவும் அறிதல் வேண்டும். "பண்ணும் இரதமும்" என்னும் முறையினை மறந்த பிற்காலத்தார் இரதமாகிய பாவத்தினை முன்னும் பண்ணீர்மையாகிய இராகத்தினைப் பின்னுமாக மாறி வைத்து இடர்ப் படுவாராயினர்.

வடமொழிப் பரதமும் சங்கீதரத்நாகரமும் சிறந்த முறையிலே தமிழில் மொழி பெயர்க்கப் படுவவாயின் அம் மொழி

பெயர்ப்பு நூல்கள் தமிழிசையின் மறுமலர்ச்சிக்குப் பெரிதும் உதவுவ என்பது எனது கருத்து. பல்கலைக் கொடை வள்ளலாகிய செட்டிநாட்டரசரவர்கள் தங்களது பல்கலைக்கழகத்தின் மூலமாகவோ பிற வாயிலாகவோ தமிழ் வளர்ச்சிக்கு வேண்டிய இப்பணியினையுஞ் செய்து நிறைவேற்றுவார்களெனத் தமிழுலகம் எதிர்பார்க்கின்றது.

இயற்றமிழ்த்துறைக்குத் தலைமை தாங்கும் யான் அத்துறையோடமையாது இசைத் தமிழினைக் குறித்துப்பேசப் புகுந்தது பொருத்தமாமோ என இப்பேரவையோர் ஐயுறலாம். அவ்வையுறவினை நீக்குதற் பொருட்டு இசைக் கலைக்கு உறையுள் எனப் போற்றற்குரிய தஞ்சை மாநகரிலே பரம்பரை இசைச் செல்வர் குலத்திலுதித்தவர்களும் சென்னைப் பல்கலைக்கழகத்து இசைப் பகுதியாசிரியராகக் கடமை புரிபவர்களுமாகிய திரு K. பொன்னையா பிள்ளையவர்கள் அண்மையில் வெளி வந்த குமரன் இசை மலரிலே கூறியதோர் சீரிய வாசகத்தினை எடுத்துக் காட்ட விரும்புகின்றேன். அது வருமாறு :

"இனி, இயற் புலவர்கள் இசைப் புலவர்களோடு ஒத்துழைக்க வேண்டும். இயற் புலவர்கள் இசையுணராமலும், இசைப் புலவர்கள் இயலையுணராமலும் இருந்ததுதான் தமிழிசை மறைவிற்கு முதற்காரணம். இயலின்றி இசையில்லை; இசையின்றி இயலில்லை. வாய்க்காலும் அதன் வழியே ஓடுகின்ற நீரும் போல, இயலும் இயல் வழியே ஓடும் இசையும் இருக்கின்றன. தண்ணீரில்லாதபோது வாய்க்காலிருந்தும் பயனில்லை; வாய்க்காலில்லாத தண்ணீர் சரியாகப் பயன்படாமல் பரந்தோடிக் கெட்டுவிடும். இரண்டுமிருந்தும் தண்ணீர் சரியாகப் பயன்படாமல் பரந்தோடிக் கெட்டுவிடும். இரண்டுமிருந்தும் தண்ணீர் பாயுமானால் வயல் நன்றாக விளையுமாறு போல், இயலும் இசையும் கலந்து மிளிருமானால், கேட்போருள்ளத்தை மகிழ்விக்கும். ஆகவே, இயற் புலவர்களும். இசைப் புலவர்களும் ஒன்றுபட்டால்தான் தமிழிசை யினிமையைக் காணமுடியும்.

ஆதலினாலே, இயற் புலவர்களை விளித்து, 'ஓ இயற் புலவர்களே! இசை வளர்ப்போம் வம்மின்' எனவும், இசைப் புலவர்களை நோக்கி, 'ஓ இசைப் புலவர்களே! இயல் வளர்ப்போம் வம்மின் எனவும் நாம் கூறுவோமாக. கதை தழுவிய கூத்தாகிய நாடகமானது, இயல், இசை இரண்டினையுந் தன்னுளடக்கியதாதலின், நாடகத்துறை வல்லோர் முத்தமிழ் வளர்ச்சிக்கு விரைந்து முன்னிற்பாரென்பது சொல்லாமலே யமைகின்றது.

இயற் புலவர் கற்றற்குரிய நூல்களிலே இசை நாடக முடிவுகளும் விரவி வருதலை ஒரு சிறிது காட்டப் புகுவாம். அருந்தமிழ்ப் புலவர் வகுத்துரைத்த அகத்திணைத்துறை பலவும் நிரலுறவமைந்த தஞ்சைவாணன் கோவை போல்வன தலைவன், தலைவி, செவிலி, நற்றாய், பாங்கன், பாங்கி, அறிவர், கண்டோர், காதற் பரத்தையர், காமக் கிழத்தியர் என்றின்னோர் நாடகப் பாத்திரங்களாகத் தோன்றி நடிக்கும் காதல் நாடகங்களேயாம். காளிதாசப் பெருங்கவியாத்த சாகுந்தல நாடகத்தோடு இவை ஒத்த பொருண்மைய! ஆனிரை கவர்தலும், போர் விழைந்தேகலும்; அரணங் கோடலும், மலைதலும், வென்றி மாலை சூடலும் என்றித் தொடக்கத்த புறத்துறைகளை நிரலுறக் கூறும் வெண்பா மாலை போல்வன அறனும் மறனுந் தழுவிய வீர நாடகங்களேயாம். வடநூற் புலவர் வகுத்த நால்வகை விருத்திகளுள்ளே கைசிகி, பாரதி விருத்திகள் அக நாடகங்களுள்ளும், ஆரபடி சாத்துவதி விருத்திகள் புற நாடகங்களுள்ளும் வருவன.

தொல்லாசிரியர் விரிவுறக் கூறிய மெய்ப்பாட்டியல் இயற்றமிழுக்கு அணியாந்தகைமையது, இசை நாடகங்களுக்கு இன்றியமையாத உறுப்பாந்தகைமையது. செய்யுளியலுட் கூறிய வண்ண விகற்பங்களும், எழுத்தினுட் கூறிய மாத்திரை அளபெடையென்றின்னவும் இசைப்பகுதிக்கு முரிய. வீரசோழிய நூலும் உரையும், சந்தி சுவை

யுள்ளிட்ட நாடகவியல் விலக்குறுப்புக்களை யும், செந்துறை வெண்டுறை மார்க்கங்களை யும், சிந்து, திரிபதை, சவலை, சமபாத விருத் தம், தாண்டகம் என்னும் இசைப்பா வகை களையும் வண்ணக் கூறுபாடுகளையுந் தெள்ளி தினுரைப்பன. எழுத்துச் சொற்பொருள் யாப்பு, அணியென்னும் இயற்பகுதியைந்தும், இசைநாடகத்திற்கு அடிப்படையான உண் மைகளும் தொல்லாசிரியர் வகுத்த எழுத்துச் சொற்பொருள் என்னும் மூன்றுறுப் படக்கிய பிண்டத்தினுள்ளே ஒருவாறு அடங்கி நிற்ப வாதலினன்றே, இயலிசை நாடகத் தொடர் நிலைச் செய்யுளாகிய சிலப்பதிகாரத்திற்கு உரை வகுத்த அடியார்க்கு நல்லார்.

"எழுத்தின் றிறனறிந்தோ இன்சொற் பொருளின்
அழுத்தந் தனிலொன் றறிந்தோ – முழுத்தும்
பழுதற்ற முத்தமிழின் பாடற் குரையின்
றெழுதத் துணிவதே யான்"

எனக் கூறியமைந்தார்.

அவர் அவ்வாறு கூறினுரேனும், சிலப் பதிகார நூலினை முற்றிலும் படித்து உவகை யுறும் விழைவுடையோர் இசை நாடக நூற் றுறைகளை அறிந்து கொள்வது இன்றிமை யாத தென்பதை யாவருமுணர்வர். சேரமுனி வன் செய்தளித்த சிலப்பதிகாரத்தை யுளங் கொள்ளும் ஆர்வமானது, பிடர்பிடித்துந்தப் பதினெட்டாண்டுகளின் முன்னே நாடக நூன் முடிபுகளை ஓரளவிற்குக் கூறும் மதங்க சூளாமணியினைக் குருவருளும் தமிழ்க் குல முதல்வர் தம் ஆசி மொழியும் உறு துணையாகக் கொண்டு ஒருவாறு எழுதி முடித்தேன். மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் அதனை உவந்தேற்று வெளியிட்டனர். கழிந்த பத்தாண்டுகளாகப் பழந்தமிழிசை மரபினை யான் ஆராய்ந்து கொண்டு வருதலை இப்பேரவையானது நன்கு அறியும். இமய வல்லியாகிய அங்கயற் கண்ணம்மையின் பேரருளினுலே இமயத்தில் உறைந்த நாட் களிலே முன்பு தெளிவுபடாத உண்மைகள் பல நன்கு தெளிவாயின. அதனுற் பத்தாண்டுகளாகச் செய்து வரும் ஆராய்ச்சி முற்றுப்பெறுநிலையிலிருக்கிறது. தமிழ்ப் பெரு மக்களின் உளங்களிந்த அன்பாகிய அருந் முற் துணையும் எனக்குப் பெருகக் கிடைத்துளது என்பதை யானுணருகிறேன். ஆதலினுலே, பழந்தமிழிசை மரபு விரைவிலே நாலுருவ மாக வெளிவரலாம்.

கண்டத்தினுலோ, கருவியினுலோ இசை மரபு தவருது பாடுகின்ற ஆற்றலை இயற் புல வரெல்லாரும் பெறுதல் அரிதெனினும், இசைப்புலவன் அமைத்துத் தந்த ஆளத் திக்குத் தகவாக இசைப் பாடல்களைச் சுவை யமைய ஆக்குந் திறமையினை இயற்புலமை நிரம்பும் விருப்புடையோரனைவரும் முயன்று, பெறுதல் வேண்டும். அஃதன்றியும், தமி ழணங்கிற்கு அணிகலனுகச் சேர முனிவன் செய்தளித்த சிலப்பதிகாரச் செழும் பனுவ லினை அரங்கேற்று காதை, ஆய்ச்சியர்குரவை என்றித் தொடக்கத்த புற நீங்கலாகப் படித் தோமென இயற்புலவர் சொல்வது அவருக் குப்பெருமையாகாது. முத்தமிழ்க் காப்பி யத்தினை முற்றிலும் படித்தின்புறுதற்குக் கருவியாக இசையியல், நாடகவியல்களை ஆராய்ந்து தெளிய வேண்டும்

இனி, இடைக் காலத்திலே சமண, பௌத்த ஆதிக்கம் கழிந்த பின்னர்ச் சைவ, வைணவ மதங்கள் மறுமலர்ச்சியடைதற்குக் காரணமாயிருந்த நாயன்மார்களும், ஆழ்வார் களும் இன்னிசைப் பாடல்களினுலே தொண் டர் உள்ளத்திலே அன்பு நீர் பாய்ச்சி, அருள் வெள்ளம் பரவச் செய்தார்கள். பண் ணீர்மை மொழிப் பரவையார் கொழுநராகிய சுந்தரமூர்த்தி நாயனுர் தாம் பாடிய திருக் கோலக்காத் திருப்பதிகத்திலே

"நாளும் மின்னிசை யாற் றமிழ் பரப்பும்
ஞான சம்பந்தனுக் குலகவர்முன்
தாளமீந்தவன் பாடலுக் கிரங்குந்
தன்மை யாளனை"

என்னுமிடத்து முத்தமிழ் விரகராகிய திரு ஞான சம்பந்தப் பிள்ளையாரது தமிழ்த் தொண்டினைக் குறிப்பிடுகின்றார். அத் தொண்டு எத்தன்மையது? இன்னிசையே கரு வியாக நாடெங்கும் இயற்றமிழினைப் பரப்பிய

நீர்மையது. சுருங்கிய கால வெல்லையி
லுள்ளே ஆளுடைய பிள்ளையார் தமிழ்நாடு
விழித்தெழுமாறு செய்த அற்புதச் செயலுக்கு
உறுதுணையாக நின்றன ஆண்டவனது
பேரருளும் இசையோடியைந்த இயலும்
எனக் கூறுவது மிகையாகாது. 'மருவிய
வேழிசை பொழிய மனம் பொழியும் பேரன்
பார் பெருகிய கண் மழை பொழியும் பெரும்
புகலிப் பெருந்தகையாரும்' மற்றைய குரவர்
களும் அருளிச் செய்த இன்னிசைச் செழும்
பாடல்கள் தமிழ் மக்களுடைய உள்ளத்திற்
புகுந்து ஊக்கிய காரணத்தினாலே தான்
தமிழர் மனவலியும், உடல்வலியும் பெற்றுச்
சோழ மன்னரது படைத் தலைமையிலே
கலத்தினுங் காலினுஞ் சென்று வேற்று
நாடுகளை வென்று எத்திசையிலும் தமிழ்
முழங்கச் செய்தார்கள்.

நம் முன்னோர் இயலிசை நாடக முத்
தமிழ்த் துறைகளை மாத்திரமல்ல; கலைத்
துறைகள் வேறு பல வற்றையும் போற்றி
னார்களென்பதைப் பழைய நூல்களாலறி
கின்றோம். சிற்பத்துறையிலும் ஓவியத்
துறையிலும் நம் முன்னோர் நிரம்பிய புலமை
படைத்திருந்தாரென்பதற்குத் தென்னிந்
தியாவிலுள்ள அழகிய கோயில்களே சான்று
பகருகின்றன. மருத்துவ நூலிலே அவர்
படைத்துள்ள ஆற்றலினைச் சித்த வைத்திய
முறை கண்கூடாகக் காட்டுகின்றது. மரக்
கலமமைக்கும் நூலும், வான நூலும் பிறவும்
முற்றிலும் அழிந்து போகவில்லை. ஆதலி
னாலே அவை தம்மையெல்லாம் பண்டைப்
பெருநிலைக்குக் கொண்டு வருதல் கூடும்.

கால நீரோட்டம் விரைந்து ஓடுகின்றது.
தமிழர் பழங்காலத்துச் சிறப்பினை மாத்திரம்
பறையறைந்து கொண்டிருப்பாரெனின்,
நிகழ்காலத்தையும் எதிர்காலத்தையும் முற்
றிலும் இழந்த நீர்மையராதலுங் கூடும்.
சென்ற நூற்றாண்டிலே ஐரோப்பாவிலும்
அமெரிக்காவிலும் விஞ்ஞான நூல் விருத்தி
யடைந்து விளங்குகின்றது. அந்த அறிவுச்
செல்வத்தைத் தமிழ் பெறுதற்கு ஆவன
செய்தல் சிறந்த தமிழ்த் தொண்டாகும்.
இலண்டன் மாநகரிலுள்ள வேத்தவை
(Royal Society) என்னும் அறிவு நூற்புலவர்
குழுவானது நமது தமிழ் நாட்டிலே பிறந்து
தமிழ் நாட்டுக்கலைக் கழகங்களிலே கல்வி
பயின்று கணித நூலினும் விஞ்ஞான நூலினும்
பெரும் புலமை படைத்த திரு. இராமானு
சம், திரு இராமன், திரு. கிருட்டினன் என்
றின்னோருடைய புலமையைப் பாராட்டி
அவையகத்தாராக்கிய செய்தி கேட்டு
நாமெல்லாம் பெருமகிழ்வடைந்தோம்.
கணித விஞ்ஞான அறிவு நிரம்பிய பூவுலகத்
துப் பேரறிஞர் குழுவிலே தலையணியில் இருக்
கும் ஆற்றல் தமிழனுக்கு உண்டு என்பதை
யறிந்து கொண்டோம். அண்ணாமலைப் பல்
கலைக் கழகத்தாரின் சிறந்த முயற்சியினாலே
தமிழ் மொழியிலே பூத நூல் (Physics) வேதி
நூல் (Chemistry) புதிய தருக்க நூல்
(Logic) என்றிவை வெளிவந்து விட்டன.
ஆட்சியுங் குணமும் காரணமாகக் கலைச்
சொற்கள் நாளடைவிலே செம்மையுறுந் தன்
மையின. அங்ஙனமாதலின், வடமொழி,
தென்மொழி, மேற்றிசை மொழியென்னும்
முந்நீர் மொழிகளும் இற்றை நாளிலே அறி
வுப் பெருங்கடலிலே கலத்தலை யாமெல்லாம்
விருப்பொடு ஏற்றுக்கொள்வோமாக. தமிழ்
நாடு தனக்குரிய ஆக்கத்தினைப் பெறுகிற நன்
னாளிலே அவ்வறிவுக் கடலிலிருந்து எழுப்
போகின்ற தமிழ் முகிலானது புன்மையாகிய
உவர்த் தன்மையினை முற்றிலும் நீக்கித்
தூய தமிழ் நீரினை நாடெங்கும் பொழியக்
காண்போம். அந்நன்னாள் மிகவும் அணுகிவரு
கிற தென்பதற்கு இம்முத்தமிழ் மாநாடே
சான்று பகருகின்றது. மூட நம்பிக்கை
யோடு கூடிய பௌராணிக மனப்பான்மை
யென்னும் இருள் அகல்கின்றது. அறிவுக்
கதிரோனுடைய இளவெயிலானது நம்முள்
ளத்திற்கு உவகையையும் உடலத்திற்குப்
புதிய வலிமையையும் தருகின்றது. புத்தம்
புதிய நூல்கள் பலவற்றைப் புனைந்து தமி
ழன்னையின் திருவடிகளில் காணிக்கையாக
வைப்போமாக. சேர முனிவன் செய்த
ளித்த சிலம்பினையணிந்த அச்சீறடிகள் நம்
நாவிலே களிநடம் புரிவதாகுக. உறக்கம்
நீங்கி விழித்தெழுந்த தமிழராகிய நாம் ஓய்
வின்றி உழைத்து உலகனைத்தினும் நம்

மொழிச் செல்வத்தைப் பரப்புதற்கு முயல்வோமாக.

தமிழ் நூற் பரப்பினை உளங்கொண்டு நோக்குமிடத்துக் கடைச் சங்கத்திறுதிக் காலம் முதல் இதுவரையும் தமிழ் மொழியிலே வெளிவந்த நூல்களுட் பெரும்பாலன பலவாகிய சமயங்களைத் தழுவிய நூல்களாமெனக்காண்கின்றோம். சமண பௌத்த முனிவர்களும் சைவ வைண்வப் பெரியார்களும் செய்தது போலவே அண்மையிலே இந்நாட்டினரோடு கலந்த இசுலாமிய கிறித்தவ சகோதரர்களும் தத்தம் சமய உண்மைகளைப் பொதிந்த நூல்களைத் தமிழ் மொழியிலே எழுதி வெளியிட்டனர். அங்ஙனமாதலின் தமிழ் வளர்க்கும் மாநாடுகளும் கழகங்களும் உண்மை ஞானிகளைப் போலச் சாதி மத வேறுபாடின்றி மன்பதையோரனைவரையும் ஒப்ப நோக்குமியல்பினவாதல் வேண்டும் என்பது வெளிப்படை. சமயக்கணக்கர் தந்திறங்கேட்ட மணிமேகலை பல்வேறு சமயவாதிகளும் உரைத்த பொருளினை உளங்கொளக்கேட்டதுபோல உண்மைத் தமிழன்பராயினோர். தமிழிலுள்ள தலையாய சமயப் பெருநூல்களை அவ்வந் நூலினாலுணர்த்தப்படும் சமயங்களுக்குரியராகிய அறிஞர் பாற் கேட்டமைவது சாலச் சிறப்புடையதாகும். சாதி மத வேறுபாடின்றியும் அரசியற் கட்சிப் பிரிவினையின்றியும் செய்தற்குரிய தொண்டு தமிழ்த் தொண்டு.

தமிழ் மொழியை மரபு தவறாது ஆராய்ந்து கற்றோரும், அவ்வாறு கற்றுத் தேறியவரை வழிபடுவோருமாகிய இருசாராருமே உண்மைத் தமிழ்த் தொண்டிற்கு உரியோராவர். ' கற்றலிற் கற்றாரை வழிபடுதல் சிறந்தன்று'' என்னும் அறிஞருரையும் இவ்வுண்மையினையே வலியுறுத்துகின்றது. முறையாகக் கற்றலுஞ் செய்யாது, கற்றுவல்லாரையடைந்து வழிபாடியற்றிப் பெறுதற்குரிய கேள்விச் செல்வமும் எய்தப்பெறாது தமிழ்த் தொண்டு செய்ய முற்படுதல் பயனில் செயலாகும். முன்னோர் மொழிப் பொருளையும் மரபு பட்ட இலக்கண முடிவுகளையும் ஆராய்ந்தறிந்து கொள்ளாது நெறியறியா மக்களை மயக்கி அவர் தம்மை நெறியல்லா நெறியிற் புகுத்தி ஆரவாரிப்போர் செயலானது குருடனைக் குருடன் வழி நடத்துவது போலாகும்.

தமிழ் மொழிக்கு நலனளிக்கும் பெருங்காப்பியங்களும் அந்நீர்மையவாகிய மதுரைக் காஞ்சி போன்ற சங்கச் செய்யுட்களும் காப்பியத் தலைவனது, ''அருள் வலியாண்மை கல்வி யழகறி விளமையூக்கம் திருமலி யீகை போகம் திண்புகழ் நண்பு சுற்றம் என்னும் இவை தம்மை விரித்துக் கூறும் முகத்தான் அத்தகைய செம்மை நலங்களை நாமும் நமது வாழ்க்கையிலே இயன்றவரை வெளிப்படுத்துமாறு நம்மை யூக்குகின்றன. கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பருடைய வாக்கின் வலிமையினாலே அளத்தற்கரிய பெருமை வாய்ந்த காப்பியத் தலைவனது குணமாகிய கடலிலே யாமும் படிந்தாடி நலமடைகின்றோம். இளங்கோ வேந்தன் உவந்தளித்த தொடர்நிலைச்செய்யுள் துணையாக உரைசால் பத்தினியை யுயர்ந்தோரேத்தும் உண்மையினைக் காண்கின்றோம். அஃதன்றியும் பழந்தமிழ் நாட்டினை யாண்ட சேர சோழ பாண்டியரென்னும் முடியுடைய வேந்தர் மூவரது அறனும் மறனும் ஆற்றலும் பிறவும் நம்முள்ளத்திற்கு ஒளியைத் தருகின்றன. சமயக்கணக்கர் தந்திறஞ்சாராது நடுநிலை மேவி எப்பாலார்க்கும் பொதுவாகிய நெறியினைக் காட்டிய வள்ளுவர் வாய் மொழியானது யாம் எல்லா நலனையும் அடைதற்குரிய வழியினைக் காட்டுகின்றது. இவை யிவ்வாறாதலினன்றோ அண்மையில் பெருந்தமிழ்ப் புலவராகிய சுப்பிரமணிய பாரதியார் ''யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல் வள்ளுவர் போல் இளங்கோவைப் போல் பூமி தனில் யாங்கணுமே கண்டதில்லை; உண்மை; வெறும் புகழ்ச்சியில்லை'' யென நமக்கு உறுதி மொழி கூறுகிறார். இம்மாநாடு செவ்விதின் நடக்கும் பொருட்டு ஆண்டவனுடைய திருவருளினை வேண்டித் தோற்றுவாயாக யான் சொல்லுதற்கு எடுத்துக் கொண்ட இவ்வுரையினை நிறைவு செய்கின்றேன்.

★

# சுவை

பேராசிரியர் ச. பாலசுந்தரம்,
கரந்தைப் புலவர் கல்லூரி.

1. ஒருலகில் இருசுடர்முக் காலங் காட்ட
   ஓங்குறுநாற் றிசைக்குள்ளே ஐம்பூ தத்தால்
   சீருறுமா றெழுபிறப்பை எண்குணத்தான்
   செய்துநவம் புரிந்தமைத்த உயிரின்பத்தில்
   ஆரநவ ரசம்மெய்ப்பா டெட்டும் வண்ணம்
   அகத்தெழுமா றையன்செய் அருளினாலே
   சேரஉள மூன்றியிருந் தொன்றுங் கன்னற்
   செந்தமிழ்த்தாய்த் திருவடியைச் சிந்தைசெய்வாம்.

2. சுவையுணர்வின்றேல் வாழ்வு சூனியமென்பார், ஒன்பான்
   சுவையினாற் பிறந்ததேஇச் சூழ்கடல் உலகம் என்பார்
   சுவைவழக் கின்றேல் எந்தத் தொழிலுமிங்கில்லை என்பார்
   சுவையறி விழந்தால் தொன்மைக் கல்வியும் கலையு மில்லை

3. ஒளிதரு சுவையை நோக்கி ஓரறி வுயிர்கள் ஓங்கும்
   வளிதரு சுவையால் வண்ண மலர்மணம் விரிக்கும், தேனின்
   களிதரு சுவையால் வண்டு காந்தாரம் பாடிச் சூழும்
   அளிபெறு சுவையால் தெய்வ அடியவர் தழைப்பார் என்பார்

4. பொருளெனும் சுவையை நோக்கிப் பொழுதெலாம் உழைப்பார் மக்கள்
   இருளெனும் சுவையை நோக்கி இருசுடர் விண்மீன் வாழும்
   அருளெனும் சுவையை நோக்கி அன்பர்கள் பூசிக் கின்றார்
   மருளகல் சுவையை நோக்கி மாதவர் நோற்கின் றார்கள்.

5. உயிர்க்கெல்லாம் சுவையுணரும் கருவி யாக
   உடல்படைத்தான் இறைவன்எனும் உண்மை தேறின்
   அயிர்ப்பின்றிப் பிறந்தபயன் அடைதல் கூடும்
   ஆண்டவனே சுவைப்பொருள்தான், அதனா லன்றோ
   பயிர்ப்பகன்ற ஞானிகளும் பாலே! தேனே
   பண்ணே! என் றென்றழைத்துப் பரவு கின்றார்
   உயிர்ப்பொருளாம் சுவைதேடி உலக மெல்லாம்
   உழலுவதில் வியப்பில்லை, உற்று நோக்கின்

6. மகிழ்காமச் சுவையின்றேல் வாழ்விங்கில்லை
மாண்பறிவுச் சுவையின்றேல் மதிப்பிங்கில்லை
முகிழன்புச் சுவையின்றேல் உறவிங்கில்லை
மொய்ம்பழகுச் சுவையின்றேல் கலைகள்இல்லை
புகழ்தேடும் சுவையின்றேல் பொதுத்தொண்டில்லை
புலமகிழும் சுவையின்றேல் பொருள்ஒன்றில்லை
கமழ்நட்புச் சுவையின்றேல் காதல்இல்லை
கடவுளெனும் சுவையின்றேல் அறமிங்கில்லை.

7. ஐம்புலனாற் சுவையுணர்தல் எவ்வுயிர்க்கும்
அமையும்அறி வகத்துணர்வால் துய்க்கும்மேன்மை
செம்புலத்து மக்களுக்கே சேரும், அந்தச்
சிறப்புணரா மாக்களுமிவ் வுலகில் உண்டு
வெம்புமுடல் வளர்பொருட்டுச் சுவைப்பதெல்லாம்
விலங்குநுகர் சுவையென்பார், வித்தகர்நூல்
பம்புசுவை பரம்பொருள்தேர் சுவைகாண்போரைப்
பண்புடையோர் மக்கள்உயர் தேவர் என்பார்

8. கன்னல்தமிழ் என்றும், தாய் மகவை நோக்கிக்
கண்மணியே சர்க்கரையே என்றும், சீரால்
பன்னியயாழ் இசையினைத்தேன் அருவிஎன்றும்
பரம்பொருளைப் பாலே முக் கனியே என்றும்
கன்னியரைக் காதலர்செங் கரும்பேஎன்றும்
கணவனைநற் காதலியர் உயிரேஎன்றும்
பன்னுவதிச் சுவையுணர்வா லன்றோ? சங்கப்
பாக்களிலே பயில்வதுமிச் சுவைகளேயாம்.

9. எள்ளல்முதல் எண்ணான்கு பொருளைப்பற்றி
இலங்கும்நகை உவகைவரை மெய்ப்பாடெட்டும்
கொள்ளுசுவை என்பர்சம நிலையைக்கூட்டிக்
கூறுவர்ஒன் பதுசுவைஎன் றெருசாரார், மற்
றுள்ளவடமொழிபுகலும் வீரம் ஆதி
விளங்குநவ ரசஞ்சுவையென் பாரும் உண்டு
உள்ளுறையை இறைச்சியைப்பல் குறிப்பைச் சேர்த்த
உவமைஉரு வகமுதலாம் அணியை யாப்பை

10. ஓங்குசுவை எனக்கருது வோரும் உண்டாங்
கொலிக்குறிப்பும் தொனிப்பொருளும் சேர்ப்போ ருண்டு
வீங்குசுவை இயல்முழுதும் விளக்கல்எந்த
வித்தகர்க்கும் இயலாது வியன்சுவையைத்
தாங்குபொருள் அவையன்றி அவையேஅல்ல
தனித்திதுதான் சுவையென்று சாற்ற லாது
தேங்குமலர் மணம்வீச லன்றி அந்தத்
தேமலரே மணமாமோ ? அழகும்அற்றே

11. இருசுடர்ஐம் பூதமிய மானன் எல்லாம்
இறையுணர்த்தும் இறையுறையும் பொருள்களன்றி
அருமறைசொல் இறைஅவையே என்னலாமோ ?
அழகிதெனப் பிரித்துணர்த்தற் காகாமைபோல்
மருவுசுவை இயல்புணர்த்தற் காகா சற்றே
மனம்அறிவு புலன்உயிரால் மதித்தலன்றி
ஒருவரும்நற் சுவைப்பரப்பை உணர்ந்தாரில்லை
உயிர்ப்பண்பே சுவையுணர்வை உணரும்பண்பாம்.

12. காலையிளங் கதிரில்கய மலரில், கானக்
களிபறவைத் தொகுதிகளில் காளைமெய்யில்
மாலைமுழு நிலவில்விண் மீன்கூட் டத்தில்
மதிமயக்கும் காதலிள மகமுகத்தில்
சோலையில்பல் வண்ணமுகிற் பரப்பில், சூழ்ந்து
சுற்றிவரும் கடலலையில் விழிச்சுவையும்
வேலைதரும் ஓசைவிசைக் காற்றசைவில்
வீணையில்மாங் குயிலிசையில் செவிச்சுவையும்

13. முக்கனியில் ஆன்பாலில் முதிர்ந்த தேனில்
முதிர்காதல் இதழிணையில் நாச்சுவையும்
தக்கமலர் சந்தனத்தில் மான்மதத்தில்
தகுமூக்குச் சுவையும்வான் மழையசும்பில்
முக்கியெழும் அருவியில்மென் தென்றற் காற்றில்
முகிழ்கதால் மெய்யில் உடற் சுவையும், மக்கள்
புக்குழந்து துய்க்கின்றார், புதுமையில்லை
பொலியுமிந்தச் சுவையிலெலாம் முழுமையில்லை

14. நாவின் சுவையும் உடற்சுவையும்
நாசிச் சுவையும் கடையாகும்
மேவுங் காட்சிச் சுவை இடையாம்
மேலாந்தலைமை செவிச்சுவையே
தேவர் குறளிற் செவிச் சுவையைத்
தேருர் மாக்கள் எனவுரைந்தார்
மூவாத் தமிழை மூன்றுமுச்
சுவையே பற்றி மொழிந்தார்கள்.

15. பாவலர் வழங்கும் பண்ணுர் பாடலிற் சுவைக ளின்றேல்
பூவினில் பண்பாடில்லை பொலியும்நல் லொழுக்கமில்லை
யாவரும் துய்க்கும் இன்ப ஞானமும் அறிவும் இல்லை
தேவரும் இல்லை தெய்வச் சிந்தையும் பெருமாறில்லை

16. எல்லா உயிரும் சுவை நோக்கி இயங்கல் இயற்கை யாமெனினும்
கல்லா உயிரின் வேருகக், களிக்குஞ்சுவையை மன்பதையோர்
நல்லா றுகக் கொண்டின்பம் நாட்டில் நாட்டி நயக்கின்றுர்
பொல்லாச் சுவைகள் புறம்போகப் பொலியும் சுவைநம்
குறிக்கோளாம்

17. காண்பரிய கடவுளுக்கு விளக்கங் காணும்
கணக்கில்தான் சுவைகளுக்கும் விளக்கங் கண்டார்
மாண்புடைய சுவையெல்லாம் துய்ப்போர் கொள்ளும்
மனப்படியே மாறி நிற்கும், ஒருவர்க்கொன்று
பூண்பரிய இளிவரலாம் அதுமற்றேர்க்குப்
புதுமுறுவல் தரும் நகையாய்ப் பொலிவதுண்டு
வீண்பெருமை வெறுப்பாகிப் போதல் உண்டு
வியப்பொருவர்க் கருவருப்பாய் விளங்கலுண்டு.

18. கிட்டுபொருள் புகழ்வேட்கைச் சுவையினலே
கிளர்ச்சியொடு போராட்டப் புரட்சி செய்வார்
மட்டுதரும் பெருமயக்கச் சுவையை நோக்கி
மானத்தைப் பொருளோடு வழங்குவார்கள்
பட்டமுயர் பதவிபெறும் சுவையினலே
பணிகின்றுர் பயில்கின்றுர், மழலைத்தேனைச்
சொட்டுகின்ற சுவைகருதி மகவைப் பெற்றேர்
துயர்கருதா துடல்வருந்த உழைக்கின்றுர்கள்.

19. பொருளடியிற் சுவைகாண்போர் சகலர், உற்ற
பொருள்தவிர்த்துள் ளுணர்வாலே சுவையைக் காண்போர்
பிரளயாகலர் விருப்பு வெறுப்பை மாற்றிப்
பேணுமுயிர் உணர்வாலே சுவைகொள்வோர்நற்
றிருவுடைவிஞ் ஞானகலர் என்றுகொண்டால்
தெய்வமொக்கும் சுவையினியல் ஓராற்றாலே
கருதியவ ராவோமிச் சுவையொன் றேமுக்
காலத்தும் அழியாத கடவுளாகும்.

20. 'விச்சையே இசையே யாங்கள் விழுங்குமுக் கனியே' என்றும்
'அச்சுதா அமரர்ஏறே ஆயர்தங் கொழுந்தே' என்னும்
இச்சுவை' வேண்டும் என்றும் இயற்றமிழ்ப் பாவாலன்பின்
அச்சமில் ஆழ்வார் நாயன்மார்களும் அறைந்தாரன்றே.

21. இசையும் இயலும் செவிச்சுவையாம்
இயங்குங் கூத்துக் கண்சுவையாம்
வசையில் கல்வி இரண்டாலும்
வாய்க்கும் நிலையை உணர்சான்றோர்
பசைகூர் சொல்லைப் பண்ணோடு
பாடிக் கேள்விச் சுவைதந்தார்
அசைவில் இன்பம் தருதலினால்
அருட்பா வலரை இறையென்பார்.

22. உள்ளத் தொளியால் சுவைதேர்ந்திங்
குயிரின் உணர்வால் சுவைப்போரே
தெள்ளத் தெளிந்த ஞானியராம்
தெய்வச் சுவையே மக்களுயிர்
கொள்ளத் தக்க தெனவுணரும்
குறிக்கோள் உலகிற் கூடிடுமேல்
எள்ளத் தக்க இவ்வுலகம்
இமையோர் உலகாய் இலங்கிடுமே.



# தமிழ் மக்களின் வாழ்வியல்

முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம்

கலை பலவகை. தமிழ் மக்களின் வாழ்வியல் ஒரு தனிக்கலை. கலையே வாழ்வாகவும், வாழ்வே கலையாகவும் கொண்டு வாழ்ந்து வந்தவர்கள், வாழ்ந்து வருபவர்கள் தமிழ் மக்கள்.

தமிழ்நாடு மிகத்தொன்மையானது. மக்கள் முதன்முதல் தோன்றிய லெமூரியாக் கண்டத்தின் வடபகுதியே தமிழகம். இன்றைய பரப்பளவு 50 ஆயிரம் சதுர மைல். மக்களின் எண்ணிக்கை ஏறத்தாழ 5 கோடி.

தமிழ் மொழி மிகப்பழமையான மொழி. அது என்று பிறந்தது? அது என்று பிறந்தது என எவராலும் அறிய முடியாத ஒரு மொழி. உலகின் முதன் மொழி எனவும், உலக முதன் மொழிகள் நான்கில் ஒரு மொழி எனவும் கூறப்பெற்று வருகிறது. பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சங்கம் வைத்து வளர்த்த மொழி. தமிழகத்தில் அடிக்கடி கடற்கோள்கள் தோன்றின. அப்போது தமிழ்ச்சுவடிகள் பல அழிந்தன என்பது வரலாறு கண்ட உண்மை. அப்படிக் கடற்கோள்கள் தோன்றித் தமிழ்ச்சுவடிகளை அழித்த காலமே ஐயாயிரம் ஆண்டுகளா, ஏழாயிரம் ஆண்டுகளா, பதினோராயிரம் ஆண்டுகளா, என அறிய முடியாதபோது அச்சுவடிகள் தோன்றிய காலத்தை, எவ்வாறு அறிந்து கூறுவது? கூறவேண்டுமானால் அதுதோன்றிய காலம் மனித அறிவுக்கு எட்டாத காலமென்றே கூறியாகவேண்டும். என்றாலும் இலக்கணம் தோன்றி 3000 ஆண்டுகளுக்கு மேலாயின எனத் துணிந்து கூறலாம்.

தமிழ் மக்கள் மிகப்பழங்குடியினர். கல் தோன்றி மண் தோன்றாக் காலத்திற்கு முன் தோன்றிய மூத்த குடியினர் எனத் தமிழ் இலக்கியங்கள் கூறுகின்றன. எங்கிருந்தும் குடியேறி வராமல், எந்த மொழியையும் கலந்து பேசாமல் தம் நாட்டிலிருந்து தம் மொழியைப் பேசி, தம் வழியில் வாழ்பவர் தமிழர். அளவுக்கு மீறிய பொறுமையையும், அளவுக்கு மீறிய வீரத்தையும் அன்றுங் கொண்டிருந்தனர், இன்றுங் கொண்டுள்ளனர். பொய்சொல்லுதல், புலாலுண்ணுதல், கள்ளைக் குடித்தல், களவுசெய்தல், சூது விரும்புதல் ஆகியவற்றை வெறுப்பது மட்டுமல்ல, அவற்றைக் கொலைப்பாவத்திலுங் கொடிய ஐம்பெரும் பாவங்கள் எனவகுத்தும் ஒதுக்கினர். ''ஆய கலைகள் 64'' எனக் கண்டனர். அவற்றுள் குறிப்பிடத்தக்கவை கட்டடக்கலை, சிற்பக்கலை, மருத்துவக்கலை, காவியக்கலை, ஓவியக்கலை, நாட்டியக்கலை, இசைக்கலை என்னும் ஏழுமாம். இவையனைத்தும் தமிழ் மக்களின் வாழ்வியலோடு ஒன்றி ஊறிவிட்டவை.

தமிழர் வாழ்வியல் என்பதே தமிழர் நாகரிகமாகும். தமிழர் நாகரிகம் காவிரிக் கரையிலிருந்து தோன்றியது. அது கங்கைக் கரை நாகரிகத்தினும் சிறந்தது என்பது வரலாற்றுப் பேராசிரியர்களின் முடிவு. அவர் பண்புகளே 'பண்பாடு' என உயர்ந்து தமிழ்ப் பண்பாடு, தமிழரின் பண்பாடு, தமிழகப் பண்பாடு என விரிந்தது.

தென்னன், தென்னவன், என்பன பாண்டிய மன்னனின் பெயர்கள். ஒருமொழி

வைத்துலகாண்டவன் என்று ஒரு தமிழ் மன்னனைக் கூறுவதுண்டு. பாரதப் போரில் இரு சாராருக்கும் சோறு வழங்கிய உதியன் என்பது ஒரு சேர மன்னனின் பெயர். சேர சோழ, பாண்டிய மன்னர்கள் மூவருமே இமயமலையில் தங்களின் கொடிச் சின்னங் களைப் பொறித்து ஆட்சி செய்து வந்திருக் கின்றனர். இந்தியா முழுதும் அசோகருடைய கொடி பறந்து கொண்டிருந்தபோது தமிழ கத்தில் தமிழ் மன்னர்களின் கொடியே பறந்து கொண்டிருந்தது.

உலக முழுதும் வெற்றி பெற்ற அலக் சாண்டரின் படைகூடக் காவிரிக்கரையைக் கடக்கத்துணிந்து வரவில்லை. வாழ்வியலின் பெருமை உலகில் இரு நாடுகளுக்கே உண்டு. ஒன்று அபிசீனியா. அஃது ஓராயிரம் ஆண்டு தொடர்ந்து ஒரே ஆட்சியில் இருந்தது. மற்றொன்று தமிழகம். இஃது ஈராயிரம் ஆண்டுகளுக்குமேல் ஒரே ஆட்சியிலிருந்தது.

தமிழ் மன்னர்கள் உள்நாட்டை மட்டும் ஆண்டு வாழ்ந்தவர்களல்லர். கங்கையை, கடாரத்தை, பர்மாவை, மலாயாவை, சிங்கப்பூரை, சாவாவை, இலங்கையை ஆண்டு வாழ்ந்தவர்கள். தமிழ் மொழியால் நாடாள முடியுமா என்பது கேள்வியே அன்று. ஏனெனில் அது நாடாண்ட மொழி. உள்நாட்டை மட்டுமன்று, வெளிநாடுகளை யும் ஆண்ட ஒரு வல்லரசுமொழி என நன்கு தெரிகிறது. அந்நாடுகளில் தமிழ்மன்னர் களின் காசுகள் இன்றும் கிடைக்கின்றன. தமிழகத்தின் சிற்பக்கலைகள் அங்கு உயிரோடு காணப்படுகின்றன. அங்குள்ள கல்வெட்டு களும், புதைபொருள்களும் இவ்வரலாற்றைக் கூறிக்கொண்டிருக்கின்றன. அக்காலம் தமிழ் மக்களின் வாழ்வியல் மிக உச்ச நிலையில் இருந்த காலமாகும்.

குறிஞ்சி, முல்லை, பாலை, நெய்தல், மருதம் என நிலத்தை ஐந்தாகவும், கோடை, கொண்டல், வாடை, தென்றல் எனக் காற்றை நான்காகவும், இயல், இசை, நாடகம் என மொழியை மூன்றாகவும், அகம், புறம் என இலக்கணத்தை இரண்டாகவும் ஒழுக் கத்தை ஒன்றாகவும் கண்டவர் தமிழர். இவ் வாறு கண்டு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாகியும் இன்னும் இவற்றில் மாறுதல் காணப்பெறவில்லை. ஐந்து நிலங்களுக்கும், மக்கள், மரம், பூ, விலங்கு, பறவை, உணவு பண், பறை முதலியவைகளை ஆய்ந்து, கண்டு, அவற்றைத் தொகைப்படுத்தி,வகைப்படுத்தி, பெயர்ப்படுத்தி, செயல்படுத்தி வாழ்ந்துவந்த அவர்களின் வாழ்வியலை எண்ணும்போது நம் உள்ளமெல்லாம் மகிழ்வடைகிறது.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் பிருந்தே தமிழ் மக்கள் கடல் வாணிகஞ் செய்து வாழ்ந்து வந்தனர். கிழக்கே சாவக மும், தெற்கே சிங்களமும், மேற்கே எகிப்து பாபிலோனியா போன்ற நாடுகளும் தமிழகக் கடல் வணிகத்தினாற் பயன்பெற்றவை. முதன் முதலில் கடலில் கட்டுமரத்தைக் கட்டி விட்டவன் தமிழன். அதனாலேயே அவன் அதற்குக் ‘ கட்டுமரம் ’ என்று வைத்தபெயர் இன்று உலக முழுதும் ‘‘கட்டமரான்’’ என்ற பெயரில் வழங்கப்பெற்று வருகிறது. பொன்னும், மணியும், துணியும், அகிலும், சந்தனமும், தோகையும், அரிசியும், மிளகும் கடல் வாணிகத்தின்மூலம் வெளிநாடுகளுக் குப் போனவைகளிற் குறிப்பிடத்தக்கவை.

தமிழ்ப்புலவர் பெருமக்கள் தாங்கள் எழுதும் இலக்கியங்களிலெல்லாம் முதற்பாட் டில் முதல் வரியில் உலகத்தை வைத்தே எழுதி வருகின்றனர். ‘உலகெலாம்’ என்று தொடங்குவது பெரியபுராணம், ‘உலகம் யாவையும்’ என்று தொடங்குவது கம்ப ராமாயணம். ‘உலகம் உவப்ப’ என்று தொடங்குவது திருமுருகாற்றுப்படை ‘மலர்தலை உலகத்து’ என்று தொடங்குவது நம்பி அகப்பொருள். ‘ஆதிபகவன் முதற்றே உலகு’ எனத் தொடங்குவது திருக்குறள். ‘‘உலகத்தீரே, உலகத்தீரே’’ எனத்தொடங்கு வது கபிலர் அகவல். இந்தப் பரம்பரையில் தோன்றிய திரு. வி. க. அவர்களும் தமது

படுக்கைப் பிதற்றல் என்னும் நூலின் முதலடியை "உலகை நோக்குமின், உலகை நோக்குமின்" எனத் தொடங்கியிருக்கிறார். இது தமிழ் மக்களின் வாழ்வின் ஒரு பெரு நோக்கைக் காட்டுகிறது.

இவ்வுலகிலுள்ள ஊர்களெல்லாம் என் ஊர். எல்லோரும் என் உறவினர் என்ற பொருளில் "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்பதும், மதங்கள்தோறும் கடவுள் பலர் இல்லை, மக்கள் பிறவியில் உயர்வு தாழ்வுகளில்லை என்ற பொருளில் "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்பதும் தமிழ்மக்கள் வாழ்வியலைப் படம் பிடித்துக்காட்டுவதாகும்.

மிளகு, சீரகம், கடுகு, வெந்தயம், பூண்டு, மஞ்சள் முதலிய கடைச்சரக்குகளெல்லாம் மருந்து. காய்கறிகளனைத்தும் மருந்து. கீரை வகைகள் யாவும் மருந்து. பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் அனைத்தும் மருந்து. ஆகவே, உணவுப் பொருள்களையே மருந்தாகவும், மருந்துப் பொருள்களையே உணவாகவும் கண்டு, உண்டு வாழ்பவர்கள் தமிழ் மக்கள். இது சித்த மருத்துவம் எனப்பெறும். இது தமிழகத்தில் செடி, கொடிகள் தோன்றிய காலத்தில் தோன்றிய ஒன்று. சித்த மருத்துவத்தில் ஒருபெரும் பகுதி "சாகாக்கலை" என்பது. அது "பெற்ற உடம்பு சாகடிப்பதற்கல்ல" எனக் கூறுவது.

தமிழர்தம் வாழ்வியலில் தலைசிறந்தது ஒழுக்கம். உலகம் என்பது உயர்ந்தோரை மட்டுமே குறிக்கும். உயர்ந்தோர் என்பவர் ஒழுக்கத்திற் சிறந்தோர் என்பது தமிழரின் பண்பு. அறத்தின் வழிநின்று, பொருளைத் தேடி, இன்பத்தைப் பெறு என்பது தமிழகப் பண்பு. மானத்தை இழப்பதா, உயிரை இழப்பதா, என்ற ஒருநிலை வந்துவிட்டால் "உயிரை இழந்தேனும் மானத்தைக் காப்பாற்று" என்பது தமிழர் நெறி. "எல்லாம் தலைவிதி எனச் சும்மா இராதே, முயற்சிசெய், வெற்றி பெறுவாய்" என்பது தமிழரின் திட்டம்.

"பிச்சை எடுப்பது இழிவு எனினும் இரப்பவர்க்கு இல்லையென்பதோ அதைவிட இழிவு" என்பது புறநானூறு காட்டும் புதுமை. குற்றமற்ற ஒருவனுக்குக் கொலைத் தண்டனை கொடுத்தவன் மன்னனாக இருப்பினும் அவன் பழி பரவுமுன்னே உயிர் போக்கிக் கொள்வான்" என்பது சிலம்புச் செல்வத்தின் ஒலி. "தீமை செய்தவனுக்குச் சமயம் பார்த்து ஒரு நன்மை செய்துவிடு. அதைவிட அவனுக்குக் கடுந்தண்டனை வேறில்லை" என்பது குறள்காட்டும் நெறி. தமிழ் மன்னர்கள் தங்களைவிடத் தமிழ்ப் புலவர்கள் உயர்ந்தவர் எனக் கருதி வாழ்ந்தவர். சில மன்னர்கள் புலவர்களாகவே வாழ்ந்திருக்கின்றனர். சில மன்னர்கள் தம்மைப்பாடிய புலவர்க்குப் "பொன்னும், மணியும், புகழ்ந்து கொடுத்தனர்" என்பதும், "மலையும் நிலமும் மகிழ்ந்து கொடுத்தனர்" என்பதும் பத்துப்பாட்டு வரலாறு. தமிழுக்குத் தலைகொடுத்தான் என்பது குமணன் வரலாறு. நந்திக் கலம்பகம் கேட்டுத் தமிழுக்கு உயிர்கொடுத்தான் என்பது நந்திவர்மன் வரலாறு. இதனால் தமிழ் மன்னர்களின் வாழ்வியல் தமிழோடு ஒன்றியது என நன்கறியலாம்.

## தமிழகத்தின் காதல்!

ஒருவரை ஒருவர் கண்டு, காதலித்து, பிறகே மணவாழ்க்கையில் ஈடுபடுவது என்பது பண்டைத் தமிழகத்தின் வாழ்வியல். தன்மகளொருத்தி காதலனுடன் சென்றுவிட்டதைக் கண்டு மனம் புழுங்கிய தாய் அவளைத் தேடிப்போகிறாள். அதே வழியில் வந்துகொண்டிருந்த காதலர் இருவரைக் கண்டு "என்மகள் ஒருவனோடு இவ்வழியே செல்லக் கண்டதுண்டோ?" என வினவுகிறாள். அதற்கவன் "ஆம் திரண்ட தோளும், பரந்த மார்பும், உயர்ந்த நெற்றியும், அகன்ற கண்களும் உள்ள காளையொருவன் செல்லக் கண்டேன்" எனக் கூறி "அயலே" எனத் தன் காதலியை நோக்க, அவள் கூறுனள் "ஆம், கற்பினுக்கணிகலமாகிய நற்குணங்கள் அனைத்தையும்கொண்ட கன்னியொருத்தி

உடன் செல்லக் கண்டேன்'' என. ஒருத்தியைக் காதலித்தவன் மற்றொருத்தியை ஏறெடுத்துப் பார்ப்பதில்லை என்பதையும், ஒருவனைக் காதலித்தவள் மற்றொருவனைக் கண்ணாலும் காண்பதில்லை என்பதையும் இப் பழந்தமிழ்க் காட்சி நமக்குக் காட்டிக் கொண்டிருக்கிறது. எப்படி—தமிழகத்தின் காதல்?

## தமிழ் மக்களின் காதல் !

தன் மகளைத் தேடியலையும் தாய்க்கு மற்றொருவன் கூறும் ஆறுதலைக் கேளுங்கள். ''அம்மா! வீணாகத் தேடியலைந்து வருந்தாதீர்கள். அமைதியாகவிருங்கள். அவள் சில நாட்களில் தானாக வந்து சேர்வாள். அவள் நீ பெற்று வளர்த்த மகள்தான். எனினும் அவள் உன்னிடமே இருந்தால் அவளுக்குத் தான் என்ன பயன்? உனக்குத்தான் என்ன பெருமை? குளத்திலே பிறந்த தாமரை மலர் குளத்திலேயே கிடந்து அழுகி அழியாமல் அதைவிட்டு வெளியேறி இறைவனது திருமுடியைச் சேரும்போதுதான் இறைவனுக்கும் அழகு, தாமரைக்கும் சிறப்பு. காட்டிலே பிறந்த சந்தனம் அதைவிட்டு வெளியேறி மக்களின் மார்பை அடையும் போது தான் சிறப்படைகிறது. மக்களும் மணம் பெறுகின்றனர். கடலிலே பிறந்த முத்து கடலிலேயே ஆழ்ந்து கிடப்பதால் கடலுக்குத்தான் என்ன சிறப்பு? முத்துக்குத்தான் என்ன பெருமை? அது கடலிலிருந்து வெளியேறி மன்னர்களின் மார்பையடையும்போது தான் மன்னனும் பெருமையடைகிறான். முத்தும் சிறப்படைகிறது''. என்பதே. எப்படி—தமிழ் மக்களின் காதல்?

## தமிழ் மொழியின் காதல் !

''முல்லை மலர்ந்தும் தங்கள் காதலன் ஏன் வரவில்லை''— தோழியின் கேள்வி. தலைவியின் விடை—''அதைத்தான் எண்ணிக்கொண்டிருக்கிறேன்.'' ''ஒருகால் வழியில் கள்வர்கள்...?'' ''போடி என் காதலனை எதிர்த்த எவருமே இதுவரை உயிர் பிழைத்ததில்லை''. பின் ஏன் இன்னும் வரவில்லை?— ''அதுதான் தெரியவில்லை'', ''ஒருகால் காட்டில் வனவிலங்குகள்......?'' ''போடி பைத்தியக்காரி, என் காதலன் ஏவாமலேயே அவன் கையிலுள்ள அம்புகள் அவற்றைக் கொன்றுவிடும்''. ''அப்படியா? பின் ஏன் வரவில்லை?'' ''அது தான் தெரியவில்லை.'' ''ஏனம்மா ஒருகால் சென்றவிடத்தில் வேறெந்தப் பெண்ணையாவது கண்டு அவளழகில் மயங்கி.........?'' ''போடி, என் காதலனுடைய நெஞ்சத்தில் என்னைத் தவிர வேறு எவருக்கும் இடமில்லை'' ''அப்படியானால், பின் ஏன் வரவில்லை? ''அது தான் தெரியவில்லை''. ''ஏனம்மா, தங்கள் காதலர் சென்றது மதுரைக்குத்தானே?'' ''ஆமாம்'' ''அங்குச் சங்கம் இருக்குமோ?''. ''ஆமாம், ஆமாம்''. ''சங்கத்தில் தமிழ்ச்சுவடிகள் இருக்குமே'' ''ஆமாம்,ஆமாம்,ஆமாம்''. ''ஒருகால் அவைகளைப் படித்துக்கொண்டிருப்பாரோ?'', ''ஆமாமடி'' ''ஆமாமடி, அப்படித்தானடியிருக்கும். ஐயோ! ஒண்டீந்தமிழ்த் துறைவாய்ப் புகுந்தனையோ! பின் எப்படி என் நினைவு வரும்? எப்படித் திரும்ப முடியும்? பின் என் கதி? ஐயோ, ஐயோ! என் வாழ்வு என்னாவது?'' என அழுது புலம்பத் தொடங்கிவிட்டாள். எப்படி—தமிழ்மொழியின் காதல்!

## தமிழகத்துக் கற்பியல் !

உலகின் பல பகுதிகளிலும் கற்பு விரும்பப் பெறுகிறது. சில நாடுகளில் கற்பு கணவன் மனைவி ஒற்றுமைக்காக என்றும், சில நாடுகளில் கற்பு உடல் நலத்திற்காக என்றும், சில நாடுகளில் கற்பு குடும்ப நலனைக் கருதி என்றும், சில நாடுகளில் கற்பு சமூக நலனுக்காக என்றும் வற்புறுத்தப் பெறுகிறது. ஆனால், தமிழகத்தில் அவைகளுக்காக மட்டுமல்ல., ''கற்பு வணக்கத்திற்கு உரியது'' எனப் போற்றப்பட்டு வருகிறது, ''கற்புடைய பெண்ணை விடப் பெருமையுடைய பொருள் இவ்வுலகத்தில் எதுவுமேயில்லை'' என்பது வள்ளுவரது முடிவு.

தமிழரது வாழ்வியலில் கற்பு பெண்ணுக்கு மட்டும் உரிய ஒன்றன்று., ஆணுக்கும் வற்புறுத்தப் பெற்று வருவது. ''ஆண்

மகனே! இதோ பெண்மக்களைப் பார்! அவர்கள் எப்படித் தங்களைத் தாங்களே காப்பாற்றிக் கொள்ளுகிறார்களோ அப்படி நீ உன்னைக் காப்பாற்றிக் கொள்ளாவிடில் உனக்கு ஏது பெருமை?'' என்ற பொருளில் ''ஒருமை மகளிரே போலப் பெருமையும் தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு'' எனக் குறள் கூறுவது தமிழர் நெறி!

தமிழரின் வீரம் ஒரு தனி வீரம், வந்த தூதர் வாய்த்துடுக்காகப் பேசினும் அவரைத் துன்புறுத்தார். போருக்கு அஞ்சார். போர் நிகழும் காலத்தையும் இடத்தையும் முன்னதாக அறிவித்து அந்த இடத்தைவிட்டுப் பெண்டிரும், பிள்ளைகளும், பிணியாளரும், பெரியோரும் விலகிப் போய்விட வேண்டுமென முரசறைந்து அறிவிப்பர். போர்ப் பறை கேட்டதும் புயம் வீங்கி மகிழ்வர். போரில்புறங் காட்டாது சண்டை செய்வர். முறத்தை உயர்த்திப் புலியைத் துறத்தும் பெண்கள் போர்க் காலங்களில் தமது நாட்டைக் காக்கக் கணவனை, தம்பியை, மக்களை மகிழ்வோடு பொட்டிட்டுப் போருக்கு அனுப்புவர். பிணிவாய்ப்பட்டு அரண்மனையில் இறந்த மன்னனது நெஞ்சிலும் மாற்றானது வேலைப்பாய்ச்சி அடக்கம் செய்வதும், மார்பில் காயம்படாமல் முதுகில் புண்பட்டதற்காக வருந்தி வெட்கி, உணவும் நீரும் அருந்தாமல் வடக்கிருந்து உயிர் விடுவதும் தமிழ் மக்களின் வீரம்.

நன்றியறிதல், பொறையுடைமை, இன்சொல்லோடு இன்னா எவ்வுயிர்க்கும் செய்யாமை, கல்வியொடு ஒப்புரவாற்றலறிதல், அறிவுடைமை, நல்லினத்தாரோடு நட்டல் ஆகிய இவைகள் தமிழர்களின் அறநெறி.

இந்திரர் அமிழ்தம் இயைவதாயினும் இனிதெனத் தமிழர் தனித்து உண்ணார். பாவச் செயல்களைச் செய்வதற்குப் பெரிதும் அஞ்சுவர். புகழ் எனில் உயிருங் கொடுப்பர். பழி எனில் உலகுடன் பெறினுங் கொள்ளார். தமக்கென முயலார், பிறர்க்கென முயலுவர் என்பது தமிழரின் பண்பு.

இதுகாறுங் கூறியவாற்றான் தமிழ் மக்களின் உயர்ந்த வாழ்வியலை ஒருவாறு நன்கறியலாம்.

இவை அனைத்தும் இன்றும் அழியாது நிலைத்து நிற்பவை. இவற்றைப் போற்றிப் பாதுகாத்துப் பின்பற்றி நடந்து பயனடைய வேண்டியது தமிழக மக்களின் கடமை மட்டுமன்று; உலக மக்களின் கடமையுமாகும்.

வாழ்க தமிழகம்!
வளர்க தமிழ்மொழி!!



# பின்தங்க நேரும்

டாக்டர் மு. வரதராசனார், எம். ஏ., எம். ஓ. எல்., பி. எச். டி.,

துணைவேந்தர், மதுரைப் பல்கலைக் கழகம்.

உலகத்தில் பல நாடுகளில் தாய் மொழியே கல்வி மொழியாக—பயிற்சி மொழியாக விளங்குகிறது. வரலாறு, பொருளியல், அறிவியல் முதலிய எல்லாப் பாடங்களையும் தம் மொழியின் வாயிலாகவே உயர்நிலைப் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் கற்று வருகிறார்கள். தம் தம் தாய்மொழியோடு, உலகச் செல்வாக்குப்பெற்ற இரண்டொரு மொழிகளையும் கற்று வருகிறார்கள். உரிமை பெற்ற நாடுகளில் இந்தியாவில் மட்டுமே இன்னும் தாய்மொழி அல்லாத ஆங்கிலம் பயிற்சிமொழியாக இருந்து வருகிறது. இந்தியாவிலும் மற்றப் பகுதிகளைவிடத் தென்னிந்தியாவே இன்னும் பிறமொழியைப் போற்றும் ஆர்வம் நிரம்பியதாக உள்ளது. தென்னிந்தியாவிலும் மைசூர் மாநிலத்தைவிட, ஆந்திர மாநிலத்தை விடத், தமிழ் நாட்டில்தான், ஆங்கிலமே பயிற்சி மொழியாக நீடிக்கவேண்டும் என்று கிளர்ச்சி செய்யும் அளவிற்கு ஆர்வம் மிகுதியாகக் காணப்படுகிறது,

ஆங்கிலம் வேண்டாத மொழி என்று எவரும் கூறவில்லை. பயிற்சிமொழியாக- மற்றப்பாடங்களை அதன் வாயிலாகக் கற்பிக்கும் நிலை உள்ளதாக — ஆங்கிலம் இருக்கத் தேவையில்லை என்றே கூறப்படுகிறது. ஆங்கிலம் உலகச் செல்வாக்கு உள்ள மொழியாக இருப்பதால், வரலாறு அறிவியல் முதலிய பாடங்களைக் கற்பதுபோல், ஆங்கில மொழியையும் ஒரு பாடமாகக் கற்பதில் தீங்கு ஒன்றும் இல்லை. எல்லாப் பாடங்களையும் கற்பதற்கு உரிய வாயிலாக — பயிற்சி மொழியாக — கொள்வதில்தான் தீமைகள் உள்ளன.

### தீமைகளாவன :—

(1) கற்கும் கல்வி நாட்டு மக்களுக்குப் பயன்படவல்லதாக விளங்க வேண்டுமானல், நாட்டு மக்களின் மொழியே பயிற்சிமொழியாக அமைய வேண்டும். இல்லையானல், பிறமொழி வாயிலாகக் கற்றவர்கள் ஒரு தனிச் சாதியாக அமைந்துவிடுவார்கள்; மற்றவர்களுக்குப் பயன்படாத ஒரு கூட்டமாக— மற்ற மக்களைச் சுரண்டும் கூட்டமாக-அது அமைந்துவிடும். அதனல் நாட்டு முன்னேற்றம் தடைப்படும்.

(2) குழந்தைப் பருவத்தில் — சிறப்பாக முதல் மூன்று ஆண்டுகளில் — எந்த மொழி வாயிலாகக் குழந்தையின் அறிவு வளர்கிறதோ அதுவே சிந்தனைமொழியாக அமைகிறது. அவ்வாறு அமையும் தாய்மொழியே கல்விப் பயிற்சிக்கு உரிய மொழியாக அமைந்தால், கல்வி எளிதாக அமையும்; கற்கும் கல்வி சிந்தனையோடு கூடிய கல்வியாக விளங்கும். இல்லையானல், அது போலிக் கல்வியாக, வாழ்க்கையோடு ஒட்டாத கல்வியாக நிற்கும். பிறமொழியின் வாயிலாகக் கற்பதில் காலம் மிகுதியாகச் செலவாவதால், பல நூல்களைக் கற்றுச் சிந்தனை செய்யும் ஆற்றல் குறைந்துவிடும். படித்த படிப்பு

வேறு, வாழும் வாழ்க்கை வேறு என்று இரண்டன் இடையே இடைவெளி பெரிதாகி விடும். கற்கும் கல்வி, பதவிகள் பெறுவ தற்கோ, தொழில்கள் தேடுவதற்கோ உதவக் கூடிய உரிமம் (லைசென்சு) அல்லது பயண இசைவு (Passport) போல் ஆகும்.

(3) நாட்டு மக்களின் வரிப்பணத்தால் நடத்தப்படும் கல்வி நிலையங்கள் பலர்க்கும் பொதுவாகப் பயன்பட வல்லனவாக அல்லா மல், பிறமொழியின் வாயிலாகத் தந்திரமாக முன்னேற முயலும் ஒரு சிலர்க்கு மட்டும் பயன்படுவனவாக நிற்கும். இன்னொருவகை யாகப் பார்த்தால்; நகரத்து மக்கள் சிலர்க்கு மட்டும் பயன்பட்டு, கிராமத்து மக்களைப் புறக்கணிக்கும் கல்விநிலையங்களாக ஆகிவிடும்; உழைக்காமலே தந்திரமாக வாழவல்லவர் களுக்கு மட்டும் உதவிபுரிந்து உழைத்து வாழும் மக்களுக்கு உதவாதன ஆகிவிடும். பலருடைய வரிப்பணம் இவ்வாறு சிலர்க்கு மட்டுமே பயன்படுதல் நாட்டுக்கே தீங்காக முடியும்.

(4) தாய்மொழியை எப்படியோ புறக் கணிக்கவல்லவர்கள் மட்டுமே, பிறமொழி யின் வாயிலாகக் கற்கும் கல்வியில் முன்னேற முடியும். ஆங்கிலேயர் ஆட்சியின்போது முன்னேறியவர்கள் யார் யார் என்று ஆராய்ந் தால் இந்த உண்மை விளங்கும். தாய் மொழியையும் விடாமல் போற்றி, பிறமொழி யின் வாயிலாகக் கல்விகற்க முயல்கிறவர்கள் அவர்களோடு போட்டியிட முடியாது. போட்டி முயற்சி தோல்வியிலே முடியும். ஆகவே, முன்னேற்றம் நாடுகிறவர்கள் என்ன செய்வார்கள்? படிப்படியாகத் தாய்மொழி யைப் போற்றுவதைக் குறைத்து, பிற மொழிப் பயிற்சியையும் தேர்ச்சியையும் நாடு வார்கள். தமிழ்நாட்டு நகரங்களில், ஆங்கிலப் பயிற்சிக்கு முதன்மை தரும் ஆங்கிலக் கல்வி நிலையங்களுக்குச் செல்வாக்கும் சிறப்பும் இருப்பதற்குக் காரணம் அதுவே ஆகும். ஆகவே, மறைமுகமாகத் தாய்மொழிக்குப் புறக்கணிப்பு ஏற்படும்; நாட்டுமொழிக்குப் புறக்கணிப்பு என்றால், அது நாட்டின் கலை களுக்கும் பண்பாட்டுக்கும் புறக்கணிப்பாக முடியும்; நாட்டின் நல்வளர்ச்சிக்கு இடை யூறு ஆகும்.

(5) செல்வாக்கு உள்ளவர்களும் முன் னேற்றம் பெற்றவர்களும் நாடும் பிறமொழிக் கல்விக்கூடங்கள் ஒருபுறம் வளரும்; செல் வாக்கு இல்லாதவர்களும் வழி அறியாதவர் களும் புகும் தாய்மொழிக் கல்விக்கூடங்கள் மற்றொருபுறம் பெருகும். ஆகவே, கல்விக் கூடங்களில், செல்வ நிலையங்கள், ஏழை நிலையங்கள் என இருவகை அமையும். இப் போதே அவை நகரங்களில் தெளிவாக வேறு பட்டு விளங்குகின்றன. காலை 9 மணிக்குத் தெருக்களில் நின்று பார்த்தால் செல்வக் குழந்தைகள் எல்லாம் பளபளக்கும் சலவை யாடை உடுத்து ஒருவகைப் பள்ளிக்குச் செல்ல, மற்றக் குழந்தைகள் எளிய அழுக் காடை உடுத்து இன்னொருவகைப் பள்ளிக் குச் செல்வதைக் காணலாம். கல்லூரிகளிடை யிலும், கார்கள் மிகுதியாகச் செல்லும் கல்லூரிகள் ஒருபுறமும், மற்ற ஏழைக் கல்லூரிகள் இன்னொருபுறமும் வெவ்வேறு வகையான மாணவர்களை ஈர்ப்பதைக் காண லாம். நாட்டில் இப்போது உள்ள பொறாமை பூசல் போராட்டங்களை மேலும் பெருக்கு வதற்கு இந்த நிலைமை தூண்டுகோலாக அமைகிறது. இது எவ்வளவு பெரிய தீமை என்பதை அறிஞர்கள் இன்னும் உணராதிருப் பது வருந்தத் தக்கது.

(6) இருபதாம் நூற்றாண்டின் அறிவு வளர்ச்சி இத்தனை நூற்றாண்டுகளாக இருந்து வந்ததைவிட இரண்டு பங்கு அல்லது மும் மடங்கு ஆகியுள்ளது எனலாம். ஆகவே முற்போக்கு அடைந்துள்ள நாடுகளும் இப் போது, அந்த அறிவுச்செல்வத்தைப் பலர்க் கும் வழங்கிப் பரப்பும் முயற்சியில் முன்னிற் கின்றன. இங்கிலாந்தில், மேற்படிப்புப் படிக்க விரும்பும் பலர்க்கும் உதவியாக திறவைப் பல்கலைக்கழகம் (open university) தொடங்கப்பட்டுள்ளது. அறிவியல் முன் னேற்றத்தால் பெற்ற கருவியாகிய வானொலி யைப் பயன்படுத்தி அறிவுச்செல்வத்தைப்

பலர்க்கும் வழங்குவதற்காக வானொலிப் பல்கலைக்கழகத்தை ( Radio University ) ஆத்திரேலியா அமைத்துள்ளது. உருசிய நாட்டில், உழவு முதலிய துறைகளில் முற்போக்கான கல்வியறிவைப் பல்கலைக்கழகத் தரத்துடன் வழங்குவதற்காக டெலிவிசன் என்னும் தொலைக்காட்சியைப் பயன்படுத்த ஏற்பாடுகள் செய்துள்ளார்கள். இந்தியா போன்ற வறுமைமிகுந்த நாடுகளில் எழுத்தறியாமை இன்னும் தீர்ந்தபாடு இல்லை. இங்கெல்லாம், அறிவுச் செல்வம் பலர்க்கும் எட்டும்படி செய்வது முதல் கடமையாகிறது. இந்தக் கடமையை நிறைவேற்ற வேண்டுமானால் மேற்கூறிய முறைகளின் துணைகொண்டு தாய்மொழிவாயிலாக முயன்றால்தான் முடியும். பிறமொழியின் வாயிலாகக் கற்பித்தல் இன்னும் நீடிக்குமானால், அறிவுச் செல்வம் பலர்க்கும் எட்டாமல், கற்றவர்க்கும் கல்லாதவர்க்கும் இடையே வேறுபாடும் பூசலும் பெருகி, நாட்டின் முன்னேற்றத்திற்கு இடையூறு செய்யும்.

அறிவு எங்கும் உண்டு; செல்வக் குடும்பத்திலும் அறிஞர்கள் பிறக்கிறார்கள்; ஏழைக்குடும்பத்திலும் பிறக்கிறார்கள், செயற்கையாக அறிவு வளர்ச்சிக்குத் தடைகள் ஏற்படுத்தாமல் இருந்தால்போதும். தாய்மொழியின் வாயிலாகக் கல்வி கற்பித்தலை நாடெங்கும் பொதுவாக அமைத்துவிட்டால், அறிவுக்கூர்மை உள்ள இளைஞர்கள் பலர் அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு முன்னேற முடியும். திறமை எங்கிருந்தாலும் வரவேற்றுப்போற்றும் நிலைமை ஏற்படும்.

திறமை பலவகை. எல்லோருக்கும் கணக்கில் ஆர்வமும் ஆற்றலும் அமைவதில்லை; சிலர்க்குமட்டுமே உண்டு. ஒரு சிலர்க்கே நினைவாற்றல் அளவு கடந்து அமையும். சிலர்க்கு மட்டுமே விளக்க ஆற்றல் கூடுதலாக அமைவது உண்டு. மொழித்திறனும் சிலர்க்கே அமையும்.

இருமொழி மூன்று மொழிகளில் புலமை பெறும் ஆற்றல் ஒரு சிலர்க்கே அமையும். அத்தகைய மாணவர்களைத் தேர்ந்தெடுத்து, அவர்களைப் பிறமொழி கற்றுத் தேர்ச்சிபெறுமாறு செய்யவேண்டும். உருசிய நாட்டில் அப்படித் தேர்ந்தெடுக்கப்படும் மாணவர்கள் உலகத்துப் பிறமொழிகளைக் கற்கிறார்கள். அந்தந்த நாடுகளுக்குச் சென்று தங்கியிருந்து கற்றுத் திரும்புகிறார்கள். அதனால், உலக மொழிகளுள் எந்த மொழியையும் கற்றவர்கள் அங்கே காணப்படுகிறார்கள். உருசியாவில் தமிழ் கற்றவர் சிலர் உண்டு; தெலுங்கு கற்றவர் சிலர் உள்ளனர்; மலையாளம், மராத்தி, சிந்தி, பஞ்சாபி, கற்றவர்கள் சிற்சிலர் உண்டு. உருது, இந்தி, வங்காளி கற்றவர்கள் பலர் உண்டு, சிங்களம் கற்றவர் சிலர் உண்டு; மலேய மொழி கற்றவர்கள் உண்டு; இவ்வாறே உலக மொழிகள் பலவும் அங்கே சிற்சிலர் கற்றுத் தேர்ச்சி பெறுதலால், எல்லா மொழிக்கும் அங்கே மொழிபெயர்ப்பாளர் கிடைக்கின்றனர். நம் நாட்டிலும், அவ்வாறே மொழித்திறன் உடையவர்களைத் தேர்ந்தெடுத்து, அவர்களுக்குத் தக்க பயிற்சியும், வாய்ப்பும் தந்து மொழியறிவைப் பெருக்கிக்கொள்ளச் செய்யலாம், நூற்றுக்கணக்கானவர்களை ஆங்கிலத்தில் வல்லவர்களாகச் செய்யவேண்டும். ஒரு நூறு பேரை உருசியமொழி வல்லவர்களாக ஆக்க வேண்டும். இன்னுமொரு நூறுபேரைப் பிரெஞ்சு மொழியில் புலவர்களாக ஆக்க வேண்டும். அவ்வாறே சப்பானிய மொழி, சீனமொழி முதலிய பலமொழிகளிலும் வல்லுநரைப் படைக்க வேண்டும். உலகத்து அறிவுச் செல்வங்களை எல்லாம் அப்போதைக்கப்போது தமிழில் மொழிபெயர்த்துத் தர வல்லவர்களாக அவர்கள் விளங்கவேண்டும். பிறநாட்டு அறிஞர்கள் வந்து அவரவர்களின் தாய்மொழியில் பேசும்போதும், நம்நாட்டு அறிஞர்கள் பிற நாடுகளுக்குச் சென்று பேசும்போதும், அந்த வல்லுநர்களின் மொழிபெயர்ப்பு உதவ வேண்டும். இன்று, பல லட்சம் இளைஞர்களை ஆங்கிலத்தில் பேசவும் எழுதவும் வல்லவர்களாக ஆக்கக் கனவு கண்டு, ஆங்கிலத்தைப் பயிற்சி மொழியாக வற்புறுத்துகிறோம். காணும் பயன் என்ன? விரல்விட்டு எண்ணக்கூடிய ஒரு சிலரே

பயனுள்ளவர்களாக வெளிவருகிருர்கள். செலவு மிகப்பெரிது; பயன்மிகச் சிறிது. ஆகவே, உண்மையான பயன்விளைய வேண்டு மாஞல், மாணவர்களுள் மொழித்திறன் இயல்பாகப் பெற்றவர்களைத் தேர்ந்தெடுத்து, அவர்களுக்குத் தக்க வாய்ப்பும் பயிற்சியும் தந்து பிறமொழி வல்லுநர்களாக ஆக்க வேண்டும்.

ஆஞல், இந்த நாட்டுப் பெற்ருேர்கள் பலரும் தம் மக்கள் ஆங்கிலக் கல்லூரிகளில் பயின்று ஆங்கிலத்தில் புலமை பெற்றவர் களாக ஆகவேண்டும் என்று விரும்புகிருர் கள். தம் மக்கள் தமிழில் பாடங்களைப் படிப்பதையும் அவர்கள் விரும்பவில்லை. காரணம் என்ன? பொதுவாக, அறியாமை எனலாம்; மொழிப்பற்றுக் குறைவு எனலாம். சிறப்பாக ஒரு காரணம் குறிப்பிட்டால், தம் மக்கள் எதிர்காலத்தில் நல்ல தொழில்பெற்று உயர்வு பெறவேண்டும் என்ற ஆசையே என லாம். அந்த ஆசைக்கு இடம் இல்லாமல் செய்தால்தான், தாய்மொழி வாயிலாகக் கற்கும் கல்வியில் ஆர்வம் ஏற்படும். ஆங்கிலத் தின் வாயிலாகக் கற்றவர்களுக்கு வெளிநாடு களில் வேலை கிடைக்கும் வாய்ப்புக் குறைந்து விட்டது; இன்னும் குறைந்து விடும். வட நாட்டில் அந்தந்த மாநிலங்களின் இளைஞர் களுக்கே வேலை தரவேண்டும் என்ற பற்று வளர்ந்துவிட்டதால், தமிழ்நாட்டு இளைஞர் களுக்கு அந்த மாநிலங்கள் முன்போல் வேலை தர முன்வருவதில்லை; வரவர அந்த வாய்ப்பும் குறைந்துவிடும். மக்களாட்சியின் பயஞக, தமிழ்நாட்டிலும் தமிழ்வாயிலாகக் கற்ற மாணவர்களே இந்த நாட்டுச் சிற்றூர்களுக் கும் பேரூர்களுக்கும் பயன்பட வல்லவர்கள் என்ற தெளிவு பிறந்துவிட்டால், பிறமொழி வாயிலாகப் பாடங்களைக் கற்றவர்களுக்கு இங்கும் வேலை வாய்ப்புக் குறைந்துவிடும். அதுவரையில் தான், பெற்ருேர்களுக்குப் பிற மொழிக் கவர்ச்சி இருக்கும். அதுவரையில் அவர்களின் நல்லெண்ணம், இளைஞர்களின் கல்வி வளர்ச்சிக்கு இடையூருக நிற்கும். நேரே பாடங்களைக் கற்றுப் பொருளுணர்ந்து எழுதித் தேர்ச்சி பெறுவது போய், ஆங்கில வாக்கியங்களில் வெளியிடுவதற்காகப் போராடிப் போராடித் தேர்வுகளில் தோற்றுத் தோற்றுக் கல்விமுயற்சியில் இளைஞர் பலர் சோர்வுற்றுப் பின்வாங்குமாறு நேர்கிறது.

வடநாட்டுப் பெற்ருேர்களுக்கு இந்த அளவிற்குப் பிற்போக்கு இல்லை. தம் மக்கள் அறிவுச் செல்வத்தை வளர்த்துக் கொண்டால் எப்படியும் வாழவல்லவர்களாக ஆவார்கள் என்ற நம்பிக்கை அவர்களுக்கு உள்ளது. ஆகையால், பல பல்கலைக்கழகங்களில் இவ் வகையில் மாறுதல்கள் செய்ய முடிந்திருக் கிறது. பொதுவாகவே, அங்கே மொழிப் பற்றுக் கூடுதலாக உள்ளது. தமிழகத்தில் தமிழ்ப் புலவர்கள் தமிழறிஞர் தவிர ஏனை யோரிடம் மொழிப்பற்றைக் காண்பது அரிது. வடக்கே வியாபாரிகள், தொழிலாளிகள், கணக்கு முதலிய பிறதுறை ஆசிரியர்கள், அதிகாரிகள் எல்லோருக்கும் மொழிப்பற்று உள்ளது. அங்கு உள்ள ஆங்கிலப் பேராசிரி யர்கள் பலரும் தாய்மொழியில் ஆர்வம் மிகுந் தவர்கள்; தம்தம் தாய்மொழியில் சிறந்த எழுத்தாளர்களாகவும் அவர்கள் விளங்கு கிருர்கள். ஆகவே, பல்கலைக்கழகங்களில் இவ்வகை மாறுதல்களுக்கு அவர்கள் துணை புரிந்திருக்கிருர்கள்.

வடநாட்டில் உதயபூர், விக்ரம், சாகர் என்னும் பல்கலைக்கழகங்களில் எம். எஸ்சி. வகுப்புத் தவிர மற்ற வகுப்புகளில் தாய் மொழி ஆங்கிலம் ஆகிய இருமொழிகளும் பயிற்சிமொழிகளாக உள்ளன. ரவிசங்கர் பல்கலைக்கழகத்தில் எம். எஸ்சி. தவிர மற்ற எல்லா வகுப்புகளிலும் இந்தி ஒரு மொழி வாயிலாகவே பாடங்கள் கற்பிக்கப்படு கின்றன. சௌராட்டிரா பல்கலைக்கழகத்தில் குசராத்தி மொழியே எல்லா வகுப்புகளிலும் பயிற்சி மொழியாக உள்ளது. தென் குசராத்திப் பல்கலைக்கழகத்தில் குசராத்தி, இந்தி, ஆங்கிலம் மூன்றன் வாயிலாகவும் எந்த வகுப்பிலும் கற்கலாம். ஆக்ரா, காசி, போபால், இந்தோர், சபல்பூர், சோத்பூர், கான்பூர், மீரட், இராசத்தான், ராஞ்சி, முதலிய பல பல்கலைக்கழகங்களில்

எல்லா வகுப்புகளிலும் இந்தி ஆங்கிலம் ஆகிய இருமொழியும் பயிற்சிமொழிகளாக உள்ளன. சில இடங்களில் மட்டும், எம். எஸ்சி. வகுப்பை ஆங்கிலத்தின் வாயிலாக நடத்துகிறார்கள். மாணவர்கள் விரும்பினால் இந்தியில் விடை எழுத இசைவு தருகிறார்கள். பீகார், கோரக்பூர், சபல்பூர், பாட்னா பல்கலைக்கழகங்களில் பி. ஏ., பி. எஸ்சி. வகுப்புகள் எல்லாம் இந்தியில் மட்டுமே நடைபெறுகின்றன; இவற்றுள் சிலவற்றில் எம். எஸ்சி. வகுப்பினை இந்தியில் நடத்துகிறார்கள்.

இவ்வாறு அவர்கள் செய்துள்ள மாறுதலால், அந்தந்த நாட்டு இளைஞர்கள் அறிவை நேராக வளர்த்துக்கொள்ளவும், வளர்த்த அறிவை அந்தந்த நாட்டு மக்களுக்குப் பயன்படுத்தவும் வல்லவர்கள் ஆவார்கள். மொழித்திரையால் இடையூறு படாமல் அறிவு வளர்ச்சி அமைவதால் அதில் வேகமும் பெறுவதற்கு அவர்களுக்கு வாய்ப்பு உள்ளது. அறிவுத்துறையில் முன்னணியில் நின்ற தமிழ்நாடு, இப்போதே பின்தங்கி விட்டதாகக் குறைகூறப்படுகிறது. மேற்குறித்தவாறு, மற்ற மாநில இளைஞர்கள் அறிவுவளர்ச்சியில் வேகம் கொண்டால், தமிழ்நாடு மேலும் பின்தங்க நேருமே என்று அஞ்சவேண்டியுள்ளது.



# தமிழ்நாடு-பெயர் வரலாறு

சித்தாந்த கலாநிதி, உரைவேந்தர்,
பேராசிரியர் ஔவை சு. துரைசாமி,

இந்தியப் பெருநாட்டின் தென்பகுதியில் தமிழ்மொழி வழங்கும் நாட்டுக்குத் தமிழ்நாடு என்பது பெயர். இதனைத் " தமிழ் கூறும் நல்லுலகம் " என்று தொல்காப்பியத்தின் பாயிரம் குறிக்கிறது. இதனைச் சுருங்கிய வடிவில் " தமிழகம் " என்று சங்கச் சான்றோர் வழங்கினர். " வையக வரைப்பில் தமிழகம் கேட்ப " (1) என்பது காண்க. இதனையும் குறுக்கித் " தமிழ் " என்பதும் வழக்கு. " தமிழ் அகப்படுத்த இமிழிசை முரசின் வருநர் " (2) என்பது காண்க.

தமிழகம் தொல்காப்பியக் காலத்துக்கு முன்பே சேர பாண்டிய சோழநாடு என மூன்றாகப் பிரிந்திருந்தது; இம் மூன்றையும் சேரர், பாண்டியர், சோழர் என்ற மூன்றரசர் ஆண்டு வந்தனர். அவர்களை " வண்புகழ் மூவர் " (3) எனத்தொல்காப்பியர் தொகுத்துரைப்பர்; பின்னர் வந்த சங்கச் சான்றோர். அம்மூவரையும் " தமிழ் கெழு மூவர் " (4) என்றும், மண்டிணி கிடக்கைத் தண்டமிழ்க் கிழவர் " (5) என்றும் குறிப்பர்.

தமிழகம் என்பது பெயராயினும், சங்கச் சான்றோர் தமிழ்நாடு என்றும் வழங்கியதுண்டு. " தண்டமிழ் வேலித் தமிழ் நாட்டகம் எல்லாம் " என்று பரிபாடற் பாட்டொன்றால் அறிகின்றோம்.

சங்க காலத்தை அடுத்து' வந்த இளங்கோவடிகள் " தமிழகம் " " தமிழ் நாடு " என்ற பெயர் இரண்டையும் மேற்கொள்கின்றார். எனினும், தமது நூலாகிய சிலப்பதிகாரத்தின் தொடக்கப் பகுதிகளில் " இமிழ்கடல் வரைப்பில் தமிழகம் " (6) என்பவர், பிற்பகுதிகளில், " தென்றமிழ் நன்னாட்டுத் தீது தீர் மதுரை " (7) என்றும் " தென்தமிழ்நாடு " (8) என்றும், தென்றமிழ் நாடாளும் வேந்தர் " (9) என்றும் குறிப்பிடுகின்றார், இதனால் பின் வந்த சான்றோர் பலரும் தமிழ்நாடு என்ற பெயரையே பெரிதும் மேற்கொண்டு வழங்கி வருவாராயினர்.

இத் தமிழ்நாட்டுக்கு எல்லை தொல்காப்பியர் காலம் முதல் இந்த நூற்றாண்டின் முற்பகுதி வரை ஒருதன்மையாகவே உரைக்கப்பட்டு வந்தது. " வட வேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகம் " எனத் தொல்காப்பியப் பாயிரம் கூறிற்று. அதனையே இளங்கோவடிகள் " நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும், தமிழ் வரம்பறுத்த தண்புனல் நன்னாடு (10) என்று கூறினர். இந்த நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த தேசிய கவி பாரதியாரும்,

" நீலத் திரைக்கடலோரத்திலே நின்று
நித்தம் தவம் செய் குமரி எல்லை வட
மாலவன் குன்றம் இவற்றினிடையே புகழ்
மண்டிக் கிடக்கும் தமிழ்நாடு "

என்றே பாடினார்; வடவேங்கடம் தென்

குமரி என்பவை தமிழகத்தின் வடக்கிலும் தெற்கிலும் உள்ள மலைகள். ஏனை இரு மருங்கும் கடல்கள் எல்லையாயின. ஆந்திர மாநிலத்துக் கடப்பை மாவட்டத்தின் தென்னெல்லையாகவும் கிழக்கெல்லையாகவும் நிற்கும் மலைத்தொடர் தமிழுக்கு எல்லையாகக் கூறப்படும் வடவேங்கடமாகும். அதன் வடகோடியில் மேற்கிலிருந்து கிழக்கில் ஓடிக் கடலோடு கலக்கும் வடபெண்ணையாறு தமிழகத்தின் வடவெல்லையை வரம்பறுக் கின்றது. தென்குமரிக்கோடும் அதற்குத் தெற்கில் அதன் அடியில் கிழக்கு நோக்கி யோடிய பஃறுளியாறும் தமிழின் தென் னெல்லையை வரம்பிட்டன என்பர். தொல் காப்பியர் காலத்துக்குப்பின் குமரி நாட்டுக் குமரிக்கோடும் பஃறுளியாறும் தென்கடற்கு இரையாயின. கடல் கோட்குப்பின் வந்த வராதலின் இளங்கோவடிகள், தமிழ் நாட்டுக்குத் தென்னெல்லை "தொடியோள் பௌவம்" என்றார்.

இக்கூறிய எல்லைக்குட்பட்ட தமிழகம் தொல்காப்பியத்துக்குப் பன்னூறு ஆண்டு கட்கு முன்பே, சோழநாடு பாண்டியநாடு சேரநாடு என்று மூன்ற நாடுகளாகப் பிரிந் திருந்தது. இந்நாட்டு மூவேந்தரையும் தொல்காப்பியர் "வண்புகழ் மூவர்" என்றார். இம்மூவருள் ஓரொரு காலத்தில் கருத்து வேறுபட்டு ஒருவர் நாட்டை ஒருவர் கைப்பற்றினும், இந்நாடுகளின் எல்லை மாறியதில்லை. சோழநாடு பாண்டிய நாடாகவோ, பாண்டியநாடு சேரநாடாகவோ மாற்ற மடையாது பொதுமைப்படவே நின்றன. அவ்வுண்மை விளங்கவே சங்கச் சான்றோர் தமிழகத்தைப் "பொதுமை சுட்டிய மூவருலகம்" என்றே மொழிந்தனர். வடவேங்கடத்தையும் வடபெண்ணையையும் வடக்கெல்லையாகக் கொண்ட சோழநாடு சிறுமலைத் தொடர்களையும், அவற்றின் அடி யில் தோன்றி இன்று புதுக்கோட்டை நகர்க்கு அண்மையில் கிழக்கு நோக்கிச் சென்று கடலோடு கலக்கும் தென் வெள்ளாற்றையும் எல்லையாகப் பெற்று விளங்கிற்று. அதன் தெற்கில் குமரி வரையில் கிடப்பது பாண்டிநாடு. மேலைக்கடற்கும் அதன் கரையில் தொடர்ந்து சுவர்போல் நிற்கும் மலைத் தொடர்க்கும் இடைப்பட்டது சேரநாடு.

சேர நாட்டில் கிழக்கெல்லையாகும் மலைத்தொடர் சங்க காலத்துக்கு முன்பே வானமலை என்று விளங்கிற்று. அதனால் அந் நாட்டை ஆண்ட சேரமன்னரை வானவர் என்றும் வானவரம்பர் என்றும் சிறப்பித் துரைப்பது சங்கச் சான்றோர் மரபு. இது பிற்காலத்தே மலைத் தொடர் என்ற பொரு ளில் வடமொழியாளரால் சஃகியாத்திரி என்று மொழிபெயர்க்கப்பட்டது. வானமலையில் தோன்றும் ஆறுகளிற் பெரும்பாலான வானி என்ற பெயர் தாங்கியிருப்பதே போதிய சான்று பகர்கின்றது. இப்போது ஜோக் என்னுமிடத்தில் மலையினின்று இழிந்து மேற்கே யோடிக் கடலோடு கலக்கும் வானவாறு சேரநாட்டின் வடக்கெல்லை; இவ்வானவாறு காலமாறுதலால் தொடக்கத் தில் ஹோனவாறாகி, பின்பு சேரவாறாகி, சிராவதியெனத் திரிந்து சாராவதி என்ற பெயருடன் இன்று நிலவுகிறது. சேர நாட்டின் தென்னெல்லை இன்று வக்கலை (11) எனப்படும் பகுதியாகும். வக்கலைக்கும் தெக்கலை (12) க்கும் இடைப்பட்ட பகுதி சங்க காலத்தில் வேள் ஆய் என்பவனுக்குரிய தாயிருந்தமையின், வேணாடு என்றும் ஆய் நாடு என்றும் பெயர் பெற்றிருந்தது. தெக்கலையில் தென்பகுதி பாண்டிநாடு. பிற்காலத்தே அப்பகுதியை ஆண்டது பற்றித் திருவிதாங்கூர் என்ற பெயரைத் திருவதங் கோடு என்றுக் கூறிக் கொண்டனர். திருவிதாங்கூர் என்ற பெயரும் திருவதங் கோடு என்பதன் மரூஉ. அதங்கோடு பாண்டி நாட்டுக்குரிய தென்பது தொல்காப்பியப் பாயிரத்தால் உணரக்கிடக்கிறது.

மேலும், சேரநாடு சங்க காலத்தில் தெற்கிற் குட்டநாடும், வடக்கிற் குடநாடும், இடையிற் பொறைநாடும் என மூன்றாகப் பிரிந்திருந்தது. சேர நாட்டின் தலைநகர் வஞ்சி, கடற்கரை நகரம் முசிறி, கருவூர்

தொண்டி, மரந்தை, மாந்தை, நறவூர் என்பனவாகும். சேரர் தம்மைச் சேரலர் என்று கூறிக் கொண்டமையின், பிற் காலத்தே சேரலர் கேரளர் எனவும், சேரலர் நாடு கேரளநாடு எனவும் மாறின. மாற்றத் துக்கு ஒப்ப அவர்கள் வழங்கிய மலையாளத் தமிழ் மொழியும் கேரளமாகிவிட்டது.

பாண்டிநாடு ஒரு மாற்றமும் எய்தாது தொல்காப்பிய காலத்துக்கு முன்பிருந்த வண்ணம் குலையாது இருந்து வருவதாயிற்று. அதற்கு மேற்கெல்லையும் கிழக்கெல்லையும் கடல்கள். மேலைக் கடற்கரையை யொட்டித் தென் குமரியினின்றும் வடக்கு நோக்கிச் செல்லும் மலைத்தொடர் "தென்னம் பொருப்பு" என்பது; அது வடக்கில் பாலைக் காடு வரையில் செல்லுகிறது. அதன்கண் தோன்றும் ஆறுகள் பலவும் பொருநை என்று குறிக்கப்படுகின்றன. திருப்பொருநை ஆன்பொருநை, தண்ணான் பொருநை என்பனவே இவ்வுண்மைக்கு ஏற்றமளிக்கும் சான்றுகளாகும். பாண்டிநாட்டின் வடக் கெல்லை, பொருப்பிலிருந்து பிரிந்து கிழக்கு நோக்கி வரும் கோடை மலைத்தொடரும் சிறிது இடையிட்டுத்தொடரும் சிறுமலைத் தொடருமாகும். இதன் தலைநகர் மதுரை; கடற்கரை நகரம் கொற்கை. தமிழகத்தின் தென்பகுதியாவது பற்றிப் பாண்டி நாட்டை தென்னாடு, தென் தமிழ்நாடு என்றும், பாண்டியரைத் தென்னவர், பொருப்பு மலையையுடைமை பற்றிப் பொருப்பர் என்றும் குறிப்பதுண்டு. இவற்றின் வேறாக, வழுதியர் என்றும் செழியர் என்றும் பல பெயர்களால் சங்கச் சான்றோர் பாராட்டிக் கூறுவர்.

தமிழ்நாட்டின் வடபகுதியாக விளங் கும் சோழநாட்டின் கிழக்கெல்லை கடலையும் மேற்கெல்லை திருச்சிராப்பள்ளி தென் ஆர்க்காடு மாவட்டங்களில் தொடர்ந்து நிற்கும் விச்சிமலைத் தொடர்களையும், வட ஆர்க்காடு மாவட்டத்தில் நின்று தொடரும் பவளமலைத் தொடரையும் கொண்டு உள்ளது. விச்சிமலை இந்நாளில் பச்சைமலை யென்றும், பவளமலை சவ்வாதிமலைத் தொடர் என்றும் பெயர் பூண்டுள்ளன. சோழநாட்டில் சங்ககாலத்தே காவிரிக்கரை யில் உள்ள உறையூர் தலைநகரமாகவும், காவிரிப்பூம்பட்டினம் கடற்கரைநகரமாகவும் விளங்கின.

பின்பு சோழநாட்டின் வடபகுதி தொண்டைநாடு எனப் பிரிந்தது. அதனைச் சோழர் குடித்தோன்றல்கள் தொண்டையர் என்ற பெயரால் ஆட்சி புரியத் தொடங்கினர். தொண்டை நாட்டின் வடக்கெல்லை தமிழ் நாட்டின் வடவெல்லையான வேங்கடமும் வடபெண்ணையுமாயின; தென்னெல்லை தென்பெண்ணையின் வடகரையிலுள்ள தொண்டைநாட்டுப்பகுதி ஒய்மாநாடு எனச் சங்க காலத்தேயே பெயரெய்தி நின்றது.

தொண்டைநாட்டுக்கு அந்நாளில் கச்சி நகர் தலைமை நகரமாகும்; கடற்கரை நகரம் பவத்திரி என்பதாம். அதனைச் "செல்லா நல்லிசைப் பொலம்பூண்திரையன், பல்பூங் கானற் பவத்திரி" (13) என்று சங்க இலக்கியம் உரைக்கின்றது. சோழநாட்டுக் கடற்கரையைக் கடல் பொங்கி எழுந்து தாக்கிக் காவிரிப்பூம்பட்டினத்தை விழுங்கிக் கொண்டபோது பவத்திரி நகரும் கடற்கு இரையாயிற்று. அந்நகரம் இருந்த பகுதி இப்போதைய நெல்லூர் மாவட்டத்தின் பகுதியாகும். இன்று கடூர் வட்டத்திலுள்ள ரெட்டிபாளையம் என்ற ஊரில் பாண்டுரங்கர் கோயில் கல்வெட்டு அவ்வூரைக் காகந்தி என்றும், அது கடல் கொண்ட பவத்திரி கோட்டத்தைச் சேர்ந்தது என்றும் (14) கூறுகிறது. இக்கல்வெட்டு சுங்கம் தவிர்த்த சோழனை முதற்குலோத்துங்க சோழ தேவரது 32ஆம் ஆண்டில் தோன்றியதாகும்.

சங்க காலச் சோழ பாண்டியராட்சி கட்குப்பின் தொண்டைநாடு பல்லவராட்சி யைப் பெறுவதாயிற்று. அவர்கள் காலத்தில் தென்பெண்ணைக்கும் விச்சிமலைத் தொடரில் தோன்றிக் கிழக்கேயோடிக் கடலோடு கலக்கும் வெள்ளாற்றுக்கும் இடையிற்

கிடக்கும் சோழ நாட்டுப் பகுதி நடுநாடு என்று பிரிந்தது. இதன் மேலைப் பகுதி மகதைநாடு, சேதிநாடு எனவும், கீழைப் பகுதி திருமுனைப்பாடி நாடு எனவும் பெயர் கொண்டு விளங்கின. மேலைப்பகுதியில் இதன் தலைநகர் திருக்கோவிலூர்; சங்க காலத்தில் இப்பகுதிக்கு மலாடு என்று பெயரிட்டு மலையமான்கள் என்ற அரசர் குடியினர் ஆண்டு வந்தனர்.

இங்கே கூறிய விச்சிமலைத்தொடர்கட்கும் மேற்கில் வானமலை வரையில் பரந்து கிடக்கும் நாட்டுக்குக் கொங்குநாடு என்று சங்க காலத்தேயே பெயரெய்தி விளங்கிற்று. இதற்குக் கிழக்கெல்லையாய் நிற்பது கொல்லி மலை. இதன் அடியில் கொங்குநாட்டில் வடக்குத் தெற்காய் ஓடிவரும் காவிரி ஆறு கொல்லியின் தென்கோடியில் கிழக்கே திரும்பி அக்கொங்குநாட்டிற்கு வடவெல்லையாய் ஓடிச் சோழநாட்டுட்புகுகின்றது. அங்கே தெற்கிலுள்ள பொருப்பின் கிளையான கோடைமலைத் தொடரில் தோன்றிவரும் ஆன்பொருநை கொங்கு நாட்டிற்குக் கிழக்கெல்லையாய் வந்து காவிரியோடு கலந்து கொள்கிறது. கொங்குநாட்டின் வடக்கெல்லையும் ஓர் ஆறு. அது மேற்கில் வானமலையில் தோன்றிக் கிழக்கே ஓடிப் பூவானி என்ற பெயர் கொண்டு காவிரியோடு கலந்து கொள்கிறது. இந்நாளில் ஆன்பெருநை அமராவதி என்றும் பூவானி பவானி என்றும் பெயர் மாறி வழங்கிவருகின்றன. சங்க காலத்துத் தமிழ் மூவேந்தருள் வலியுடையார் பக்கல் இக்கொங்குநாடு மாறி வந்தது. வரலாற்றுத் தொடக்க நிலையில் இது சேரர் பக்கல் இருந்தது; அந்நாளில் ஆன்பொருநைக் கரையில் இதற்குத் தலைநகர் கண்டு கொங்கு வஞ்சி எனச் சேரர் பெயரிட்டனர். சேர நாட்டு வஞ்சிமாநகரின் வடக்கில் கருவூர் நின்றது போலக் காவிரித் தென்கரையில் ஒரு கருவூரும் வடகரையில் ஒரு முசிறியும் நகரங்களாகத் தோன்றின. இடைக்காலச் சோழர் காலத்தில் கொங்குநாடு சோழர் பக்கல் வந்த போது கொங்கு வஞ்சி இராசராசபுரமாயிற்று. இந்நாளில் இராசராசபுரம் தாராபுரம் என்று பெயர் கொண்டு பிறங்குகிறது.

கொங்கு நாட்டின் வடக்கில் வானமலைக்கும் வடவார்க்காடு மாவட்டத்துப் பவளமலைக்கும் இடையில் விரிந்து கிடக்கும் நாடு தகடூர் நாடாகும். அதன்கண் தகடூரைத் தலைநகராகக் கொண்டு அதியமான்கள் என்ற வேந்தர் ஆட்சி புரிந்தனர். அவர்கள் மேலைச் சேரவேந்தர் குடியின் ஒரு கிளையினராவர். சேரர்க்குரிய அடையாள மாலையே அதியமான்களுக்கும் உண்டு. தலைநகரான தகடூர் இந்நாளில் தருமபுரி என்று பெயர் பூண்டு கொண்டது. தகடூர் நாட்டுக்கு வடக்கில் உள்ளது எருமைநாடு. அதனைக் கங்கர் என்ற வேந்தர் ஆட்சி செய்தனர். (ஏ) கங்கர்கட்கு முன்னோனை கங்கன் என்பவன் சங்க காலத்தே விளங்கிய குறுநில மன்னன் என அகநானூறு கூறுகிறது. அவன் வழிவந்த கங்கர் ஆண்டதால் அந்நாடு கங்க நாடு எனப்படுவதாயிற்று. அந்நாட்டு எருமையூர் மகிஷூராகி இடைக்காலத்தே மைசூராகிவிட்டது. அப்பகுதியிற் காணப்படும் பழங்கல்வெட்டுக்கள் கங்கை நாட்டை எருமை நாடு என்றே (14) குறிக்கின்றன.

இவ்வாறு தொண்டைநாடு சோழநாடு முதலாகப் பலநாடுகளாகப் பிரிந்திருந்த தமிழ்நாட்டின் வடபகுதியான தொண்டை நாடு இருபத்து நான்கு கோட்டங்களாகப் பிரிந்து தொண்டை வேந்தரின் ஆட்சியில் இருந்து வந்தது.

(பி) தொண்டை நாட்டின் வடக்கெல்லை வடபெண்ணையாறு என முன்பே கூறப்பட்டது; நெல்லூர் மாவட்டத்தின் தென்பகுதியிலும் செங்கற்பட்டு மாவட்டத்தின் வடபகுதியிலும் காணப்படும் கல்வெட்டுக்கள் குறிக்கும் நாட்டுப் பிரிவுகள் பழைய தொண்டை நாட்டுக்குரியவை என்பது தெளிவாம். நெல்லூர் மாவட்டத்து நெல்லூர்த் தாலுகாவில் அடங்கிய வெங்கூரில் சகம் 1165 இல் (15) தோன்றிய கல்வெட்டு

அதனைச் " சயங்கொண்ட சோழ மண்டலத்துப் பையூர் இளங்கோட்டத்து நெல்லூர் நாட்டு முண்டை நாட்டு வெங்கூர் " (16) என்றும் கூறுகிறது. நெல்லூர் மாவட்டத்தில் தென்கோடியில் உள்ள சூளூர்ப்பேட்டைக் கல்வெட்டு அவ்வூரைப் " பையூர் இளங்கோட்டத்து வெங்கா நாட்டுக் குரளூர் " (16) என்று கூறுகின்றது. சூளூர்ப்பேட்டைத் தாலூகாவைச் சேர்ந்த தும்பூரிலுள்ள கல்வெட்டு அதனைப் " பையூர் இளங்கோட்டத்து மேலைப் பட்டைய நாட்டுத் தும்பையூர் " (17) எனக் குறிக்கின்றது. நெல்லூர்த் தாலூகாவுக்கும் சூளூர்ப்பேட்டைத் தாலூகாவுக்கும் இடையே கூடூர்த் தாலூகாவுக்குரிய மல்லம் என்றவூரில் உள்ள கல்வெட்டு " சயங்கொண்ட சோழ மண்டலத்துப் பையூர் இளங்கோட்டத்துக் கிழைப்பட்டைய நாட்டுத் திருவான்பூர் " என்று கூறுகிறது.

நெல்லூர் மாவட்டத்தின் தென்னெல்லையாகக் கிடக்கும் செங்கற்பட்டு மாவட்டத்துப் பொன்னேரி தாலூகாவில் சத்தியவேடு என்னும் ஊரில் இருக்கும் மதங்கேச்சுவரர் கோயில் கல்வெட்டு அவ்வூரைப் " பையூர் இளங்கோட்டத்துத் தெக்கூர் நாட்டு மதங்கள் பள்ளி " (18) என்றும், அத்தாலூகாவைச் சேர்ந்த திருப்பாலைவனத்துக் கல்வெட்டு, " சயங்கொண்ட சோழ மண்டலத்துப்பையூர் கோட்டத்துத் திருப்பாலைவனம்" (19) என்றும் குறிக்கின்றன. இப்பையூர் இளங்கோட்டமும் பையூர்க்கோட்டமும் சேர்ந்த பையூர்க் கோட்டத்தை வடகரையாகவும் தெற்கிலுள்ள புழற்கோட்டத்தைத் தென்கரையாகவும் கொண்டு அப்பகுதியில் ஓடும் ஆரணியாறு விளங்குகிறது. (20)

இவ்வாறு வடபெண்ணைக்கும் தென்பெண்ணைக்கும் இடையிற் பரந்து கிடக்கும் தொண்டைநாடு பலப்பல கோட்டங்களாகப் பல்லவர் ஆட்சி தோன்றுதற்கு முன்பே பிரிந்திருந்தது. அக்கோட்டங்கள் ஆமூர்க் கோட்டம், இளங்காட்டுக்கோட்டம், ஈக்காட்டுக்கோட்டம். ஈத்தூர்க்கோட்டம், ஊற்றுக்காட்டுக்கோட்டம், எயிற்கோட்டம், கடிகைக்கோட்டம், களத்தூர்க்கோட்டம், காலியூர்க்கோட்டம், குன்றவத்தனக்கோட்டம், சிறுகரைக்கோட்டம், செங்காட்டுக் கோட்டம், செந்திருக்கைக்கோட்டம், செம்பூர்க்கோட்டம், தாமற்கோட்டம், படுவூர்க் கோட்டம், பல்குன்றக்கோட்டம், புழற் கோட்டம் புலியூர்க்கோட்டம், பையூர்க் கோட்டம், மணவிற்கோட்டம், வெண் குன்றக் கோட்டம் வேங்கடக்கோட்டம், வேலூர்க்கோட்டம் என இருபத்து நான்காக விரிந்தன. இவற்றைத் தொண்டை மண்டல சதகமும் குறிக்கின்றது. இதனை வலியுறுத்தும் பழம் பாட்டு.

" அழகுறு மேழிக் கொடியார் தொண்டை
 மண்டலத்தார்
அருள் ஞானப்பிரகாசர் அடியார்
 கோட்டம்
புழல் புலியூர் ஈக்காடு மணவூர்
 செங்காடு
புகழ்பையூர் எயில் தாமல் புனல்
 ஊற்றுக்காடு
விழைவுறுகளத்தூர் செம்பூர்
 ஆமூர் ஈதூர்
வெண்குன்றம் பல்குன்றம் இளங்காடு
 படுவூர்
தழைசோலைக் காலியூர் சிறுகாரை
 கடிகை
சந்திரிகை குன்ற பத்திரம் வேங்கடம்
 வேலூரே "

என வருகிறது. இப்பாட்டு மிக்க பிற்காலத்தே தோன்றியதாகலின், இதன்கட் குறிக்கப்படும் கோட்டங்களின் பெயர்கள் கல்வெட்டுக்களிலும் செப்பேடுகளிலும் காணப்படும் பெயர்களில் வேறுபடுகின்றன.

இவற்றுள், மணவூர்க்கோட்டம் மனையிற்கோட்டம் மணவிற்கோட்டம் என்றும், ஈதூர்க்கோட்டம் ஈந்தூர்க்கோட்டம் என்றும் காலியூர்க்கோட்டம் காளியூர்க்கோட்டம் காழியூர்க்கோட்டமென்றும், சந்திரிகைக் கோட்டம் செந்திருக்கைக்கோட்டமென்றும் குன்றபத்திரக்கோட்டம் குன்றவத்தனக்

கோட்டம் என்றும் காணப்படுகின்றன. வடபெண்ணையின் தென்கரை நெல்லூர்த் தொடங்கி அதன் தென்பகுதியிலுள்ள சூலூர்ப்பேட்டைப் பகுதியடங்கக் கிடக்கும் நாடு பையூர் இளங்கோட்டம் எனப்படுகிறது. கடூர் வட்டத்திலுள்ள செட்டிபாளையம் முதலியன கடற்கரைப் பகுதியைப் பவத்திரிக் கோட்டம் என்று அங்குள்ள கல்வெட்டுக்கள் குறிக்கின்றன. ஆனால் இவை மேலே காட்டியபழம் பாட்டில் காணப்படவில்லை. சூலூர்ப் பேட்டைக்குத் தெற்கில் உள்ள பொன்னேரி வட்டத்திற் காணப்படும் கல்வெட்டுக்கள் அப்பகுதியைப் பையூர்க் கோட்டம் என்று கூறுவது காணலாம். பவத்திரி கடல் கொள்ளப்பட்டதாயினும், அப்பகுதி "கடல் கொண்ட பவத்திரிக் கோட்டம்" என்றே வழங்கியுளது.

இவற்றுள் வடபெண்ணை முதல் ஆரணியாறு வரையுள்ள பகுதி பையூர்க் கோட்டமாகும். ஆரணியாற்றுக்கும் கூவம் ஆற்றுக்கும் இடைபட்டது புழற்கோட்டம்; இதன் தெற்குப்புலியூர்க்கோட்டம்; இதன் தெற்குக் களத்தூர்க்கோட்டம், இதற்கும் தெற்குச் சங்க காலத்து ஓய்மானாடு, இதற்கு மேற்கிலிருப்பது வெண்குன்றக் கோட்டம்; அதன் வடக்குக் காலியூர்க்கோட்டம்; அதற்கும் வடக்குத் தாமற்கோட்டம்; இதன் மேற்குப் படுவூர்க்கோட்டம்; தாமற்கோட்டத்தின் கீழ்ப்பாலது எயிற்கோட்டம்; இதன் வடக்கு மணவிற்கோட்டம்; இதற்கு வடக்குக் குன்றவத்தனக்கோட்டம்; இதன் வடக்குத் திருவேங்கடக் கோட்டம்; படுவூர்க் கோட்டத்துக்குத் தெற்கில் இருப்பது பல்குன்றக்கோட்டம். களத்தூர்க்கோட்டத்துக்குக் கிழக்கு ஆசிர்க்கோட்டம், புலியூர்க் கோட்டத்துக்கு மேற்குச் செங்காட்டுக் கோட்டம், எயிற்கோட்டத்துக்குக் கீழ்ப்பால் ஊற்றுக் காட்டுக் கோட்டம்; களத்தூர்க் கோட்டத்துக்குத் தெற்குச் செம்பூர்க் கோட்டம், படுவூர்க் கோட்டத்துக்கு வடக்குப் பெரும்பாணப்பாடிநாடு. கோட்டப்பிரிவுகள் தோன்றுதற்கு முன்பே இருப்பவை பெரும்பாணப்பாடிநாடு, ஓய்மானாடு என்ற இரண்டுமாகும்.

1. பையூர்க் கோட்டத்தில் இன்றைய நெல்லூர் மாவட்டமும் செங்கற்பட்டு மாவட்டத்துப் பொன்னேரி தாலூகாவும் அடங்கும்.

2. புழற்கோட்டத்தில் பொன்னேரியும் திருவொற்றியூரும் அடங்கும்.

3. புலியூர்க்கோட்டத்தில் மயிலாப்பூர், எழுமூர், திருவான்மியூர் குன்றத்தூர் முதலியன உள்ளன.

4. களத்தூர்க் கோட்டம் திருக்கச்சூர் மதுராந்தகம், நென்மலி முதலிய ஊர்களைக் கொண்டுள்ளது.

5. வென்குன்றக் கோட்டம் பெருநகர், தெள்ளாறு, இரட்டணைபாதூர் முதலிய ஊர்களைக் கொண்டது.

6. காலியூர்க் கோட்டம் திருவோத்தூர் (செய்யாறு) உத்தரன் மேரூர் உக்கல், ஐயங்குளம் முதலிய ஊர்களைக் கொண்டது.

7; தாமற் கோட்டம் கீழ்வீதி களத்தூர், சக்கரமல்லூர் முதலிய ஊர்கள் அடங்கியதாகும்.

8. எயிற்கோட்டம் காஞ்சீபுரம், புழலூர், மாகறல் முதலியவை அடங்கியதாகும்;

9. மணவிற் கோட்டத்தில் தக்கோலம், திருமாற்பேறு, செஞ்சி முதலிய ஊர்கள் காணப்படுகின்றன.

10. குன்றவத்தனக் கோட்டம் திருத்தணி, வளர்புரம், நாராயணவரம் முதலிய ஊர்களைக்கொண்டுள்ளது.

11. திருவேங்கடக் கோட்டம் திருப்பதி, திருச்சானூர், சந்திரகிரி, திருக்காளத்தி முதலிய ஊர்களைக் கொண்டது.

12. படுவூர்க் கோட்டத்தில் திருவல்லம் காவனூர், காரை முதலிய ஊர்கள் உள்ளன.

13. பல்குன்றக் கோட்டம் திருவண்ணாமலை செங்கம், காப்பலூர், எண்ணாயிரம் மேல் சேவூர் முதலிய ஊர்களைக் கொண்டது.

14. ஆமூர்க் கோட்டத்தில் திருப்போரூர் மகாபலிபுரம் தையூர் காயார் முதலிய ஊர்கள் உள்ளன.

15. செம்பூர்க் கோட்டத்தில் பாக்கம், வயலூர், புரையூர் முதலிய ஊர்கள் அடங்குகின்றன. இதன் உட்பிரிவுகளில் பட்டின நாட்டின் ஒரு பகுதி ஓய்மாநாட்டில் சேர்ந்துள்ளது.

16. செங்காட்டுக் கோட்டம் சீபெரும்பூதூர் பிள்ளைப்பாக்கம், சோமங்கலம் முதலிய ஊர்களைக் கொண்டது.

17. ஊற்றுக் காட்டுக் கோட்டம் ஆற்றூர் பழைய சீயவரம், வெண்பாக்கம் தென்னேரி முதலிய ஊர்களைக் கொண்டது.

18. ஈக்காட்டுக் கோட்டத்தில் திருப்பாசூர் காக்களூர் முதலியன அடங்கும்.

19. வேலூர்க் கோட்டம் திருவரசிலி, திருவிரம்பை, வேலூர், மாத்தூர் முதலிய ஊர்களையுடையது; இதன் ஒரு பகுதி ஓய்மாநாட்டில் ஒடுங்கி விட்டது.

20. கடிகைக் கோட்டத்தில் நாகவேடு, பாராஞ்சி, முதலிய ஊர்கள் உள்ளன. இக் கோட்டம் பிற்காலத்தே மணவிற் கோட்டத்திலும் குன்றவத்தனக் கோட்டத்திலும் ஒடுங்கி விட்டது.

21. செந்திருக்கைக் கோட்டத்தில் ஆலத்தூர் அருங்குளம் முதலியவூர்கள் உள்ளன.

22. இளங்காட்டுக் கோட்டம் பொன்னூர், தென்னூற்றூர் மரகுணம் முதலியவூர்களைக் கொண்டது. பிற்காலத்தே தென்னூற்றூர் பல்குன்றக் கோட்டத்தில் ஒடுங்கியது. (21)

23. சிறுகரைக் கோட்டம் பிற்காலத்தே எயிற்கோட்டத்தில் ஒடுங்கி விட்டது.

24. ஈத்தூர்க்கோட்டம் இருக்கும் திறம் இன்னும் புலப்படவில்லை.

இக்கோட்டம் இருபத்து நான்கனுள் சில அடுத்துள்ள கோட்டங்களில் ஒடுங்கினமையின் பல்லவ பாண்டியர் காலத்தில் இருபத்திரண்டு கோட்டங்களே இருந்துள்ளன. விசயநகர வேந்தர் காலத்தில் இக் கோட்டங்களும், நாடுகளும் அமைந்திருந்த நிலையை வீரப்பிரதாப வீரகிருட்டின தேவமகாராயர் சாசனங்களில் ஒன்று (சகம் 1438—கி. பி. 1516) பின் வருமாறு கூறுகிறது:—

தொண்டை நாடு போலவே ஏனைச் சோழ நாடும் பாண்டி நாடும் கொங்கு நாடும் பல நாடுகளாகப் பிரிந்திருந்தன. தொண்டை நாட்டின் தென்பகுதியான ஓய்மாநாடு முதல் சோழ நாட்டின் தென்னெல்லையாக ஓடும் தென்வெள்ளாற்றுக்கும் அதன் கரையிலுள்ள கோநாட்டுக்கும் இடையிற் கிடந்து மேற்கில் கொல்லி மலைத் தொடரையும் கிழக்கிற் கடலையும் எல்லையாகக் கொண்டு விளங்கியது சோழ நாடு. தென்பெண்ணைக்கும் வடவெள்ளாற்றுக்கும் இடைபட்டது நடுநாடு; இதனைத் திருமுனைப்பாடி நாடு என்பதும் வழக்கு. இதன் மேலைப்பகுதி மலையமான் நாடாகிய மலாடு. பிற்காலத்தே இதன் கீழைப்பகுதி சேதிநாடு என்றும் மேலைப்பகுதி மகதை நாடு என்றும் மகதை மண்டலம் என்றும் பிரிந்தது. காவிரியாற்றின் வடகரை மழநாடு என விளங்கிற்று. ஓய்மாநாடு கோநாடு, மழநாடு, மலாடு என்பவை சங்க காலத்திருந்தே வழங்கி வருகின்றன. எஞ்சிய பகுதிகள் இடைக் காலச் சோழர் காலத்தே விருதராசபயங்கர வளநாடு, இராசராச வளநாடு, இராசாதிராச வளநாடு, உய்யக்கொண்டார் வளநாடு, நித்தவிநோத வளநாடு என்ப போலப் பல வளநாடுகளாகப் பிரிந்து ஒவ்வொன்றும் பல உண்ணாடுகளைக் கொண்டு நிலவின எனினும் ஒரொருகால் பெயர் மாற்றம் எய்தி நிலைபேறு இழந்தன.

பாண்டி நாடும் சோழ நாடு போல மதுரோதய வளநாடு, வரகுண வளநாடு, கேரளசிங்க வளநாடு, திருவழுதி வளநாடு, சீவல்லப வளநாடு, பராந்தக வளநாடு எனப் பிரிந்திருந்ததுண்டு. பின்னர் அவை மறைந்தன. எனினும், பலசிறு நாடுகளாகப் பிரிந்து பல நூற்றுண்டுகள் இருந்து வந்தன. அவற்றுள் அளநாடு, அதலையூர் நாடு, ஆசூர் நாடு, ஆன்மாநாடு, ஆரிநாடு, இரணியமுட்ட

நாடு, இடைக்குளநாடு, கருநிலக்குடிநாடு, களக்குடிநாடு, காளந்திருக்கைநாடு. கானப் பேர்க்கூற்றம், கிரனூர்நாடு, கீழ்க்களக் கூற்றம், கீழ்ச் செம்பிநாடு, கீழ்வெம்பநாடு, குடநாடு, குறுமலைநாடு, குறுமறைநாடு, கொழுவூர்க்கூற்றம், கோட்டூர்நாடு, குரங்குடிநாடு, செவ்விருக்கைநாடு, திருமல்லிநாடு, திருமலைநாடு, திருவழுதிநாடு, தும்பூர்க் கூற்றம், துருமாநாடு, துறையூர்நாடு, தென் கல்லகநாடு, தென்களவழிநாடு, தென்பறம்பு நாடு, தென்வாரிநாடு, நெச்சுரநாடு, பருத்திக் குடிநாடு, பாகனூர்க்கூற்றம், புறப்பறநாடு, புறமலைநாடு, பூங்குடிநாடு, பொங்கலூர்நாடு, மிழலைக்கூற்றம், முத்தூர்க்கூற்றம், முரப்பு நாடு, முள்ளிநாடு, மேல் வெம்பநாடு, வட பறம்புநாடு, வடதலைச் செம்பிநாடு, வடவாரி நாடு, வானவன்நாடு, வெண்புலநாடு, வெண்பைக்கடிநாடு முதலியன கல்வெட்டுக் களில் பரந்து காணப்படுகின்றன. இவற்றுள் இணிரயமுட்டநாடு, பறம்புநாடு, மல்லிநாடு, மிழலைக்கூற்றம், முத்தூர்க்கூற்றம், ஆகியவை சங்க காலத்தே இருந்து வருவனவாகும். முத்தூர்க் கூற்றம். முத்தூற்றுக் கூற்றம் எனவும் வழங்கும்.

கொங்கு நாடு, மீகொங்கு, கீழ்கொங்கு, வடகொங்கு, தென்கொங்கு என நான்காகப் பிரிந்திருந்தது. கீழ்கொங்கின் தென்பகுதி வையாவிநாடு. கீழ்கொங்கு கிழங்கு நாடு எனப் பிழைப்பட்டு வழங்குவதுண்டு. பூந் துறைநாடு, பூவானி நாடு எனப் பல உண்ணாடுகளும் இருந்தன. பூந்துறையின் பழம் பெயர் புன்துறை; பூவானிநாடு பூவா னிய நாடு எனத்திரிந்து வழங்கும். இதன் வடக்கிலுள்ளது தகடூர் நாடு. சங்க காலத் திருந்தே வழங்கிவருவது.

சங்க காலத்துக்குப் பின் அரசு நிலையிட்டு நெடுங்காலம் ஆட்சி புரிந்தவர் பல்லவர்கள் என்பது வரலாறு காட்டும் உண்மை. அவர்களின் கல்வெட்டுக்கள் சில காவிரிக் கரையிலும் அதன் தெற்கிலுள்ள சில இடங் களிலும் காணப்படுகின்றவெனினும், அவரது ஆட்சி பெரும்பாலும் தொண்டைநாட்டோடு ஒடுங்கியே இருந்தது.

இத்தொண்டை நாட்டுக்குச் சயங் கொண்ட சோழ மண்டலம் என்றொரு பெயர் உண்டு. இப்பெயரொன்றே இது பல்லவர் காலத்தில் தோன்றியதுமன்று; வழங்கியதுமன்று என்று தெளிவாக்கும். பல்லவர்க்குப் பின்வந்த சோழ வேந்தருள் முதல் இராசராசனுக்கு முன் சிறப்புற்றுத் தொண்டை நாட்டிற் புகழ் பரப்பி வாழ்ந் தவன் முதற் பராந்தகன்; வடார்க்காடு மாவட்டத்துக்கோவிந்தபாடியிலுள்ள அவன் கல்வெட்டு (22) அவ்வூரைத் தன்னகத்துக் கொண்ட தாமற் கோட்டத்தைத் தொண்டைநாட்டுத் தாமற்கோட்ட மென்றே குறிக்கின்றன. பின்னர் வந்த முதல் இராசராசன் காலத்தும் இப்பகுதி தொண்டைநாடு என்றே வழங்கிவந்துள்ளது. ஆனால், அவனது ஆறும் ஆண்டுக் கல்வெட் டொன்று நெல்லூர் மாவட்டத்தில் இப் போது தும்மூரு என வழங்கும் தும்பை யூர்க்கு, ''பையூர் இளங்கோட்டத்துப் பட்டைய நாட்டுச் சயங்கொண்ட சோழச் சதுர்வேதி மங்கலம்'' என்று (23) பெயர் குறிக்கின்றது. அதே வட்டத்து உதயகிரிப் பகுதியிலுள்ள பாண்டரங்கம் என்னும் ஊரிலுள்ள சிவன் கோயில் கல்வெட்டு (24) அவ்வூரை இராசேந்திர சோழ மண்டலத்துப் பவத்திரிக்கோட்டத்துப் பேரூர் நாட்டுப் பாண்டரங்கம் என்று கூறுகிறது' முதல் இராசராசன், முதல் இராசேந்திரன் என்ற வேந்தர்கட்குப் பின்னோர் காலத்தில், இரா சேந்திர சோழ மண்டலம் என்ற பெயர் மறைந்தது. முதல் இராசராசன் குறித்தபடி, தொண்டைநாடு சயங்கொண்ட சோழ மண்டலம் என்ற பெயரெய்தி வழங்கி வருவ தாயிற்று. பின்னோருள் சிறப்புமிகுந்து கலிங்க நாடு வரையிற் புகழ் விரித்த முதற் குலோத்துங்கனுடைய கல்வெட்டுக்கள் பலவும் தொண்டை நாட்டைச் சயங் கொண்ட சோழ மண்டலம் என்று ஓரிடத்தும் மறவாமல் வழங்கியுள்ளன. பிற்காலத்தே பாண்டியர் போர் வலிமிகுந்து

தொண்டை நாட்டில் தமது புகழ் நிறுவி வாழ்ந்தபோதும், சயங் கொண்ட சோழ மண்டலம் என்ற பெயரே நிலையிட்டுச் சென்றனர். வடார்க்காடு மாவட்டத்து நரசமங்கலத்துச் சிவன் கோயிலில் காணப் படும் சடையவன்மறுன முதற் சுந்தர பாண்டிய (கி. பி. 1251 — 61) னுடைய ஏழாம் ஆண்டுக் கல்வெட்டு அவ்வூரைச் "சயங்கொண்ட சோழ மண்டலத்துக் காளியூர்க் கோட்டத்து மாவண்டூர் நாட்டு நரசிங்க மங்கலம்" (25) என்று உரைக் கின்றது. இப்பாண்டியர்க்குப்பின் விசய நகர வேந்தரது ஆட்சி தொண்டை நாட்டில் பரந்து இடம் பெற்றது. அவர்களுடைய கல்வெட்டுக்கள் பலவும் "சயங் கொண்ட சோழ மண்டலம்" என்ற பெயரைப் பொன்னேபோல் போற்றி வந்துள்ளன. கி. பி. பதினைந்காம் நூற்றுண்டில் இறுதியில் வாழ்ந்த விசயநகர வேந்தர் வீரதேவராயர் மகன் பூபதிராயவுடையாரது சகம் 1329-ல் தோன்றிய கல்வெட்டொன்று, வடார்க்காடு மாவட்டத்து வெடால் என்ற ஊரைக் குறிக்கும் போது "சயங் கொண்ட சோழ மண்டலத்து வெண்குன்றக் கோட்டத்துச் சிங்க புரநாட்டுப் பொன்னூர்ப் பற்று விடால் (26)என்றது காணலாம். இங்ஙனம் பன்னூறு ஆண்டுகளாக வழக்கிலிருந்து வந்த சயங் கொண்ட சோழ மண்டலம் என்ற பெயர் பின்னர் மறைந்தொழிந்தது.

விசயநகர ஆட்சிக்குப்பின் முகமதியரும் ஆங்கிலேயரும் பிரெஞ்சு மக்களும் தமிழ் நாட்டிற் புகுந்து இடம் பெற்று அரசியல் பொருளியல் துறைகளில் பெரு மாற்றத்தை விளைவித்தனர். அவர்களிடையே அரசு நிலையிட வேண்டியெழுந்த போரும் பூசலும் நாட்டவர் வாழ்வைக் கலக்கி விட்டன. முடிவில் 19-ஆம் நூற்றுண்டின் இடையில் ஆங்கிலேயர் வெற்றி மேம்பட்டு அரசு நிறுவித் தமது நாட்டு முறையில் அரசியலை அமைத் தனர். பழங்கால ஆட்சி முறையும் முகமதியர் புகுத்திய ஆட்சி வகையும் தமது அரசியல் நெறியும் ஆங்கிலேயர்க்குத் துணை செய்தன. வடக்கில் வடபெண்ணைக்கு வடக்கிற் கிடக்கும் ஆந்திர நாட்டையும், தெற்கில் திருவிதாங்கூர் ஒழிந்த மலையாளம் கன்னடம் என்ற பகுதிகளையும் ஒருங்குக் கூட்டிச் சென்னை ராசதானி என்று பெயரிட் டனர்; தாம் புதிது படைத்த சென்னையைத் தமது மொழியில் மதராசு என்று பெயரிட்டு இவ்விராசதானிக்குத் தலைநகரமும் கடற்கரை நகருமாக்கினர்.

தமிழகத்துக்கு இங்ஙனம் புதிது தோன்றிய பெயர் இந்த இருபதாம் நூற்றுண் டின் செம்பாதி வரையில் திகழ்ந்து வந்தது. பின்பு நமது இந்தியப் பெருநிலம் புரிந்த அரசியல் உரிமைப் போராட்டம் அண்ணல் காந்தியடிகளின் அறம் தழுவிய தலைமையில் வெற்றி கண்டது. நாடு மக்களாட்சி பெற்றது. அக்காலை, சென்னை ராசதானியில் அடங்கியிருந்த ஆந்திர நாடும் கேரள நாடும் கன்னட நாடும் தனித்தனியே பிரிந்து அரசியல் வாழ்வு மேற்கொண்டன. எஞ்சியிருந்த தமிழ்நாடு சென்னை மாநிலம் என்றும் சென்னை ராஜ்யம் என்றும் பெயர் எய்திற்று. இவ்வாறு சுமார் இருபது ஆண்டு கள் கழிந்தன.

1967இல் சென்னை இராச்சியத்தில் ஆளும் கட்சி மாறிற்று. வரலாறு புகழும் பழைய தமிழகம் என்ற பெயரைப் புதுக்கினர். அப்பெயரை இனிது ஒலிக்கும் திறம் பிற மாநிலத்துப் பிறமொழி வழங்கும் மக்களுக்கு இல்லாமை கண்டு தமிழ்நாடு என்று சட்ட வாயிலாக மாற்றியுள்ளனர். இன்று பண்டு போல் தமிழகம், தமிழ்நாடு என்ற பெயர்கள் நிலவுகின்றன.

ஆங்கிலேயரது ஆட்சி, தமிழ் நாட்டைப் பல மாவட்டங்களாக ஜில்லா என்னும் பெயரால் வகுத்திருந்தது. மக்களாட்சி தோன்றினும் ஆட்சி இனிது இயலுதற்கு மாவட்டப் பகுப்பு நன்கு அமைந்திருப்பது பற்றி அதுவே இன்றும் நடை முறையில் இருந்து வருகிறது.

மேற்கோள் குறிப்புகள்

(1) — (புறம். 168)
(2) — (அகம். 227)
(3) — (தொல். பொ.)
(4) — (அகம். 31)
(5) — (புறம். 35)
(6) — (சிலப். அரங்)
(7) — (சிலப். நாடுகாண்)
(8) — (சிலப். கட்டுரை)
(9) — சிலப். வாழ்த்து)
(10) — சிலப் VIII 1-2)
(11) — (வடக்கெல்லை)
(12) — (தெற்கெல்லை)
(13) — (அகம். 340)
(14) — (நெல்லூர்க் கல்வெட்டு கடூர் 87)
(14) — (கல். ஆண், பத்தி 1/1907; எபி. கர். Vol X பெங்களூர் 21)
(15) — (இ. பி. 1243)
(16) — (நெல்.கல். நெல்லூர்த் தாலூகா 121)
(16) — (நெல். சூலூர். 4)
(17) — நெல். சூலூர். 12)
(18) — (கல். ஆண்டறிக்கை 31/1912)
(19) — (கல். ஆண்.307/1928-9)
(20) — (மீஞ்சூர், கல். ஆண், 133/1916)
(21) — (கல். ஆண். 219/1919)
(22) — (வ. ஆ. கல். 115, 120)
(23) — (நெல். கல். 440)
(24) — (நெல். கல். 759)
(25) — (வ, ஆ. கல். 242)
(26) — வ. ஆ. கல். 735)



# திருக்குறளும் கீழ்க்கணக்கு நூல்களும்

புலவர் க. வெள்ளைவாரணர்,

துணைப் பேராசிரியர், தமிழ்த்துறை, அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

அறநெறியில் நின்று பொருளையீட்டி ஈட்டிய பொருளின் துணைகொண்டு வையத்து வாழ்வாங்கு வாழும் நெறிமுறையினை விரித்துரைப்பது தெய்வப்புலவர் திருவள்ளுவர் அருளிய திருக்குறளாகும். இந்நூல் நாடு, மொழி, சமயம் முதலிய வேற்றுமையின்றி உலகமக்கள் அனைவரும் ஒருகுலத்தாராக அன்பினாற் கலந்து வாழும் நெறிமுறையினை அறிவுறுத்தலால் இதனைப் பொதுமறை யெனவும் இந்நூலிற் கூறப்படும் அறங்கள் எந்நாட்டினர்க்கும் எக்காலத்தார்க்கும் மாறாது பயனளிக்கும் நிலைத்த உண்மைகளாகத் திகழ்தலின் இதனைப் பொய்யாமொழி எனவும் பண்டைச் சான்றோர் பாராட்டியுள்ளார்கள். உலகப் பொதுமறையாகிய இத்திருக்குறளின் பொருள்களையும் தொடர்களையும் கருத்துக்களையும் கடைச்சங்க காலமுதல் இன்றுவரை தோன்றியுள்ள தமிழ் நூல்கள் யாவும் பொன்னேபோற் போற்றியுள்ளன. கடைச்சங்ககாலத்தில் வாழ்ந்த கபிலர் முதலிய சங்கப்புலவர் பலரும் திருக்குறள் நன்கு பயின்று அந்நூலின் அரிய உண்மைகளை நாட்டு மக்களுக்குத் தெளிய அறிவுறுத்தியுள்ளார்கள். இச்செய்தி, அவர்கள் பாடிய சங்கச் செய்யுட்களில் திருக்குறளின் சொல்லும் பொருளும் அவ்வாறே இடம்பெற்றுள்ளமையால் இனிது புலனும்.

தமிழ் நிலைபெற்ற மதுரையில் இருந்த தமிழ்ச் சங்கம் களப்பிரர் என்னும் அயலவர் பாண்டி நாட்டிற் புகுந்து பாண்டியர் ஆட்சியைக் கைப்பற்றினமையால் கி. பி. மூன்றும் நூற்றாண்டில் அழிவுற்றது. தமிழ் மக்களது கல்வி வளர்ச்சிக்கு இன்றியமையாத தமிழ்ச் சங்கம் அழிவுற்ற நிலையில் தமிழ் மக்களின் தாய்மொழியாகிய தமிழ் வளர்ச்சியும் தமிழ் மக்களது நாகரிக வாழ்வும் தெய்வ வழிபாட்டு முறைகளும் சிதைவுறும் நிலையை அடைந்தன. கடைச்சங்க காலத்திற்குப் பிறகு தமிழகத்தில் ஏற்பட்ட அரசியல் மாறுதலால் தமிழர் வலிகுன்றினர். அயலவர்களின் கொள்கைகளும் சமயங்களும் மேலோங்குவனவாயின. தமிழர்களுள் சிலர் புறச் சமயங்களிற் பெரிதும் ஈடுபட்டு அவற்றைச் சார்ந்தொழுகத் தலைப்பட்டனர். இந்நிலையில் தமிழ்மொழியும் தமிழர் வாழ்வியலும் வளம் பெறுதற்குரிய நெறிமுறைகளைப் போற்றிக் காத்தல் கற்றறிந்த தமிழ்ச் சான்றோர்களின் கடமையாயிற்று. அக்காலத்தில் நிலவிய தமிழ்ப் புலவர்கள் நாட்டு மக்கள் எளிதில் உளங்கொள்ளும் முறையில் பொருளினிது விளங்கும் எளிய வெண்பா யாப்பில் சிறு சிறு நீதி நூல்கள் இயற்றியுதவினர். கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் வச்சிரநந்தி என்பவரால் தோற்றுவிக்கப்பெற்ற திரமிள சங்கம் சமண சமய வளர்ச்சி கருதியமைந்த சங்கமாயினும் அச்சங்கத்தைச் சார்ந்த தமிழ்ப் புலவர்கள் தம் சமய வளர்ச்சிக்குத் துணையாகும் வகையிலும் எல்லா மக்களுக்கும் பயன்படும் வகையிலும் பொது வறங்களை விரித்துரைக்கும் சிறந்த நீதிநூல்களை இயற்றியுதவினர். இங்ஙனம் சங்க காலத்தையடுத்துச் சாதிசமய வேற்றுமை

யின்றித் தமிழர் எல்லார்க்கும் பயன்படும் முறையில் இயற்றப்பெற்ற நூல்கள் கீழ்க் கணக்கு நூல்கள் எனப் போற்றப்பெறுவன வாயின.

கணக்கு என்பது கற்றற்குரிய நூல் களைக் குறித்த பெயர். அது மேற்கணக்கு கீழ்க்கணக்கு என இரு வகைப்படும். அக வல், கலிப்பா, பரிபாடல் முதலிய விரிந்த பாடல்களால் 50 முதல் 500 இறுதியாக அமைந்த பத்துப்பாட்டு எட்டுத்தொகை ஆகிய சங்க நூல்களை மேற்கணக்கு எனவும், அடிநிமிர்வில்லாத வெண்பாக்களால் அறம் பொருள் இன்பம் பற்றியமைந்த நாலடியார் முதலிய நூல்களைக் கீழ்க்கணக்கு எனவும், பிற்காலத்தார் பகுத்துரைத்தனர்.

'அகவலும் கலிப்பாவும் பரிபாடலும்
பதிற்றைந்தாதி பதிற்றைம்பதீறு
மிகுத்துடன் தொகுப்பன மேற்கணக்
கெனவும்
வெள்ளைத் தொகையும் அவ்வகை எண்
பெறின்
எள்ளறு கீழ்க்கணக் கெனவும்
கொளலே'

எனவும்,

'அடிநிமிர்வில்லாச் செய்யுள் தொகுதி
அறம் பொருள் இன்பம் அடுக்கி
அவ்வத்
திறம்பட வருவது கீழ்க்கணக்காகும்

எனவும் வரும் பன்னிருபாட்டியற் சூத்திரங் களில் இவற்றின் இலக்கணம் கூறப்பட்டிருத் தல் காணலாம். அவற்றுள் கீழ்க்கணக்கு நூல்கள் நாலடியார், நான்மணிக்கடிகை, இனியவை நாற்பது, இன்னா நாற்பது, கார் நாற்பது, களவழி நாற்பது ஐந்திணையைம் பது, ஐந்திணையெழுபது, திணைமொழியைம் பது, திணைமாலை நூற்றைம்பது, திருக்குறள், திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி நானூறு, சிறு பஞ்சமூலம், முதுமொழிக் காஞ்சி, ஏலாதி, கைந்நிலை என்பனவாம். இதனை

'நாலடி நான்மணி நானாற்பதைந்திணை
முப்
பால்கடுகங் கோவை பழமொழி
மாமூலம்
மெய்ந்நிலைய காஞ்சியோ டேலாதி
யென்பவே
கைந்நிலையவாங் கீழ்க்கணக்கு'

எனவரும் வெண்பாவினால் அறியலாம்.

இப்பதினெட்டு நூல்களும் கல்வி பயி லும் மாணாக்கர்கள் இளமையிலே இன்றி யமையாது கற்றற்குரிய அடிப்படை நூல்க ளாதலின் சுருங்கிய அடிகளால் இயன்ற இந் நூல்களைத் தொகுத்துப் பதினெண் கீழ்க் கணக்கு எனப் பயிலும் வழக்கம் தொல்காப் பிய வுரையாசிரியர்கள் காலத்திலேயே நில வியதெனத் தெரிகிறது. அடிநிமிர்வில்லாச் செய்யுள் நூல்களாகிய இவற்றைக்கீழ்க் கணக்கு என வழங்கிய வழக்கத்தை அடி யொற்றி இவற்றைக் கற்றபின் மேலும் கற் றற்குரிய பெருநூல்களாய் அடிநிமிர்வுடை யனவாய் விரிந்த செய்யுட்களாகிய பத்துப் பாட்டும் எட்டுத்தொகையும் ஆகிய சங்கச் செய்யுட்களை மேற்கணக்கு என வழங்கும் வழக்கமும் உரையாசிரியர்கள் காலத்தை யொட்டி ஏற்பட்டிருத்தல்வேண்டும் என்பது மேற்கணக்கு, கீழ்க்கணக்கு என இவற்றின் இலக்கணங் கூறும் பன்னிருபாட் டியற் சூத்திரங்களால் இனிது புலனும்.

மாணவர்கள் இளம் பருவத்திலேயே இன்றியமையாது கற்றற்குரிய அடிப்படை நூல்களாயமைந்த பதினெண் கீழ்க்கணக்கு நூல்களை வெளியிட்டோர் சிலர் இவற்றைச் சங்கமருவிய நூல்கள் எனக் குறித்துள்ளனர்.

'மாப்புலவர் எல்லாரும் மாக்கூடற்
கண்ணிருந்து
பாற்பகுத்த தென்றமிழின் பாநான்கின்—
வாய்ப்புடைத்தாய்ப்
பண்பாய்ந்துரைத்த பதினெட்டுக்கீழ்க்
கணக்கும்
வெண்பாவின் பாலுரைத்தார் மிக்கு

எனக் கீழ்க்கணக்கு ஏடொன்றிற் காணப்

படும் பாடல் தமிழ்ச்சங்கம் நிலைபெற்ற மதுரையில் இருந்த புலவர்களால் ஆக்கப் பெற்றவை இந்நூல்கள் என்பதனை அறி வுறுத்துகின்றது. இதுகொண்டு இவற்றைச் சங்கமருவிய நூல்கள் எனக்கூறும் வழக்கம் பிற்காலத்தில் உளதாயிற்றெனக் கொள்ள வேண்டியுளது.

பத்துப்பாட்டு எட்டுத் தொகையாகிய சங்க இலக்கியத்துடன் பதினெண்கீழ்க் கணக்கினையும் இயைத்துரைக்கும் வழக்கம் நாட்டில் தொடர்ந்து நிலைபெற்று வருகின் றது. இவ்வழக்கு,

> 'மூத்தோர்கள், பாடியருள் பத்துப் பாட்டும் எட்டுத்
> தொகையும், கேடில் பதினெட்டுக் கீழ்க்கணக்கும்'

எனவரும் தமிழ்விடுதூதில் இடம் பெற்றுள் ளமை காணலாம்.

கீழ்க்கணக்கு நூல்களாகிய இவை தொல்காப்பியர் கூறிய எண்வகைச் செய்யுள் வனப்புக்களில் அம்மை என்னும் வனப் பமைந்தனவாகும். சிலவாய் மெல்லியவாய சொற்களால் அடிநிமிர்வில்லாத செய்யுள் அம்மை என்னும் வனப்புடையதாகும்.

> 'சின்மென் மொழியாற் றாய பனுவலோ
> டம்மைதானே அடிநிமிர்பின்றே'
> (செய்—229)

என்றார் தொல்காப்பியனார்.

" அம்மை என்பது குணப் பெயர்; அமைதிப்பட்டு நிற்றலின் அம்மையென்றா யிற்று' என்பர் பேராசிரியர். அடி நிமிராமை —ஆறடியின் மேற்படாமை. சிலவாதல்— சுருங்கிய எண்ணினவாகிய சில சொற்களால் இயன்று வருதல். மெல்லியவாதல்—சிலவா கிய சொற்களும் பல எழுத்துக்களால் இயன்று விரிந்தனவாகாமல் சிலவெழுத்துக் களால் அமைந்து சுருங்கி நிற்றல். அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றற்கும் இலக்கணங் கூறுவன போன்றும் அன்றாகி யும் இடையிட்டு நிற்கும் இயல்பினது என் பார், 'தாய பனுவல்' என்றார். தாவுதல்— இடையிடுதல், அம்மை என்னும் இவ்வனப் பிற்கு,

> 'அறிவினு ளுருவதுண்டோ பிறிதினோய்
> தன்னோய்போற் போற்றாக் கடை' (315)

எனவரும் திருக்குறளை உதாரணமாகக் காட் டினார் இளம்பூரணர். " அங்ஙனம் வந்தது பதினெண்கீழ்க் கணக்கு. அதனுள் இரண் டடியானும் ஐந்தடியானும் சிறுபான்மை ஆறடியானும் ஒரோ செய்யுள் வந்தவாறும். அறம் பொருளின்பத்தினிலக்கணங்கூறிய பாட்டுக்களும் பயின்று வந்தவாறும் இடை யிடையே கார் நாற்பது, களவழி நாற்பது முதலியன வந்தவாறும் காண்க" என நச்சி னார்க்கினியர் விளக்குதலால் திருக்குறளும் அதனை அடியொற்றியமைந்த நாலடியார் முதலிய கீழ்க்கணக்கு நூல்களும் அம்மை என்னும் வனப்பமைந்த இலக்கியங்கள் என் பது நன்கு புலனும்.

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களைத் தொகுத்துரைக்கும் 'நாலடி நான்மணி' எனத்தொடங்கும் பாடல் அந்நூல்கள் தோன்றிய காலமுறைபற்றியமைந்ததன்று. அடிநிமிர்வில்லாச் செய்யுள் நூலாதல்பற்றிக் கடைச்சங்க காலத்து நூலாகிய திருக்குறளை யும் சங்க காலத்திற்குப் பின்தோன்றிய ஏனைய கீழ்க்கணக்கு நூல்களுடன் பிற்காலச் சான்றோர் இயைத்துரைத்தனர். எல்லோரும் இன்றியமையாது கற்றற்குரிய அடிப்படை நூல்கள் என்ற முறையில் நாலடியார் முதலிய நீதி நூல்களுடன் வைத்துப் பதி னெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்றாகத் திருக்குறள் எண்ணப்பட்டிருத்தல் கொண்டு அதனைச் சங்க காலத்திற்குப் பிற்பட்ட தெனக் கருதுதல் பொருந்தாது.

சங்க கால நூல்கள் பெரும்பாலும் ஆசிரியப் பாக்களினல் அமைந்திருக்க, தெய் வப்புலவர் அருளிய திருக்குறள் குறள் வெண்பா யாப்பில் அமைந்திருத்தல் கொண்டு இந்நூல் சங்க காலத்திற்குப் பிற் பட்டதெனக் கருதுவர் சிலர். இக்கருத்தும் பொருத்தமுடையதன்று. திருவள்ளுவர்

அருளிய குறள் வெண்பா யாப்பு குறுவெண் பாட்டு என ஆசிரியர் தொல்காப்பியனாரால் குறிக்கப்பட்ட தொன்மை வாய்ந்ததாகும்.

நெடுவெண்பாட்டிற்கு எல்லை பன்னிரண்டடி. குறுவெண்பாட்டிற்கு அளவு, அளவடியுஞ் சிந்தடியுமாகிய எழுசீராம் என்பர் தொல்காப்பியர். குறுமையும் நெடுமையும் அளவியலொடு படுத்துக்கொள்ளப்படுமாதலின், அளவியல் வெண்பாட்டும் உளவென்பதும், அதுவே சிறப்புடையதென்பதும் பெறப்படும். நெடுவெண்பாட்டிற்குப் பேரெல்லை பன்னிரண்டடியெனவே, அதனிற் பாதியாகிய ஆறடி அளவியல் வெண்பாவிற்கு உயர்ந்த எல்லையெனவும், நெடுவெண்பாட்டின் சிற்றெல்லை ஏழடியெனவும், அளவியல் வெண்பாவின் சிற்றெல்லை நான்கடியெனவும் கொள்ள வைத்தாராயிற்று. அளவியல் வெண்பாச் சிறப்புடைத்தாதல் நோக்கிப் பதினெண்கீழ்க்கணக்கினுள்ளும் முத்தொள்ளாயிரத்துள்ளும் ஆறடியின் ஏறுமற் செய்யுள் செய்தார், பிற சான்றோரும். இக் கருத்தினால் அம்மையென்னும் வனப்புடைய செய்யுளுக்கு நெடுவெண்பாட்டு ஆகாதென விலக்குவார், 'அம்மை தானே அடிநிமிர் பின்று' (செ-227) என்றார் தொல்காப்பியனார். செப்பிக் கூறுஞ் செய்யுட்கு நான்கடியே மிக்க சிறப்புடைத்தெனவும், 'சிறப்புடைப் பொருளைப் பிற்படக்கிளத்தல்' என்பதனால் குறுவெண்பாட்டும் (குறள் வெண்பாவும்) சிறப்புடைமை பெறுதும் எனவும் கூறுவர் நச்சினார்க்கினியர். எனவே, திருக்குறள் யாப்பு கடைச் சங்க காலத்திற்குப் பின்தோன்றிய தன்றென்பதும் ஆசிரியர் தொல்காப்பியனார் காலத்திலேயே வழங்கிய தொன்மையுடையதென்பதும் நன்கு பெறப்படும்.

இனி, கபிலர் முதலிய கடைச் சங்கப் புலவர்கள் திருக்குறளை நன்கு பயின்றவர்கள் என்பதை அவர்கள் பாடிய பாடல்களில் திருக்குறளின் சொற்பொருள்களை அவ்வாறே அமைத்துப் பாடியிருத்தலால் நன்கு உணரலாம். இவ்வுண்மையினை சங்க நூல்களைப் பயின்றோர் யாவரும் நன்கறிவர். கடைச் சங்கப் புலவராகிய ஆலத்தூர் கிழார்,

'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு'

எனவரும் திருக்குறளின் பொருளைத் தாம் பாடிய 34-ஆம் புறப்பாடலில் தெளிவாக விளக்கியிருப்பதுடன், தெய்வப்புலவர் அருளிய திருக்குறளை 'அறம்' எனவும் சிறப்பித்துள்ளார்.

பத்துப்பாட்டு, எட்டுத்தொகை ஆகிய சங்க இலக்கியங்களில் திருவள்ளுவர் அருளிய திருக்குறளின் சொற்றொடர்களும் பொருள்களும் ஆங்காங்கே எடுத்தாளப் பெற்றிருத்தலைக் கூர்ந்து நோக்குங்கால் கடைச் சங்கத்தின் இறுதிக் காலத்திற்குச் சில நூற்றாண்டுகளுக்கு முன்னரே தெய்வப்புலவர் திருவள்ளுவரால் திருக்குறள் என்னும் செந்தமிழ் மாமறை இயற்றப் பெற்றிருத்தல் வேண்டும் என்பது நன்கு தெளியப்பெறும்.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் நாலடியார், நான்மணிக்கடிகை, இன்னாநாற்பது, இனியவை நாற்பது, திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி நானூறு, சிறுபஞ்சமூலம், முதுமொழிக் காஞ்சி, ஏலாதி என்னும் இந்நூல்கள் பத்தும் நீதி நூல் வகையைச் சார்ந்தன. திணைமாலை நூற்றைம்பது, ஐந்திணையெழுபது, ஐந்திணை ஐம்பது, திணைமொழி ஐம்பது, கைந்நிலை என்னும் ஐந்தும் சங்கச் செய்யுட்களை அடியொற்றியமைந்த அகப்பொருள் இலக்கியமாகும். கார் நாற்பது என்பது முல்லைத்திணை பற்றியமைந்த அகப்பொருள் நூல்; கார் காலத்தைப் பொருளாகக் கொண்டு பாடப் பெற்றமையால் கார் நாற்பது எனக் காலம் பற்றிய பெயர் பெற்றது. இனிக் களவழி நாற்பது என்பது புறத்திணை பற்றிய நாற்பது பாடல்களைக் கொண்ட நூல். இது போர்க் களமாகிய இடத்தினைப் புனைந்துரைக்கும் முறையில் அமைந்ததாதலின் களவழி நாற்பது என இடம்பற்றிய பெயர் பெற்றது.

பொய்கையார் பாடிய களவழி நாற்பதும், கூடலூர் கிழார் பாடிய முதுமொழிக் காஞ்சியும் கடைச் சங்க காலத்தையொட்டியமைந்த தொன்மையுடையனவாகும். விளம்பி நாகனார் பாடிய நான்மணிக்கடிகையும், கபிலர் பாடிய இன்னா நாற்பதும், மதுரைத் தமிழாசிரியர் மகனார் பூதஞ் சேந்தனார் பாடிய இனியவை நாற்பதும், மதுரைக் கண்ணங் கூத்தனார் பாடிய கார் நாற்பதும், நல்லாதனார் பாடிய திரிகடுகமும், மதுரைத் தமிழாசிரியர் மாக்காயனார் மாணாக்கர்களாகிய முன்றுறையரையர் இயற்றிய பழமொழி நானூறும், காரியாசான் பாடிய சிறுபஞ்சமூலமும், கணிமேதையார் இயற்றிய ஏலாதி, திணைமாலை நூற்றைம்பது என்பனவும், மாறன் பொறையனார் பாடிய ஐந்திணைஐம்பதும், கண்ணன் சேந்தனார் பாடிய திணைமொழி ஐம்பதும், மூவாதியார் பாடிய ஐந்திணை எழுபதும், முள்ளி நாட்டு நல்லூர்க் காவிதியார் மகனார் புல்லங்காடனார் பாடிய கைந்நிலையும் கி. பி. மூன்றாம் நூற்றாண்டு முதல் ஆறும் நூற்றாண்டு முடியவுள்ள இருண்ட காலப் பகுதியில் தோன்றிய நூல்களாகும். நாலடியார் என்ற நூலில் 200, 296-ஆம் பாடல்களில் முத்தரையர் என்னும் பட்டத்துடன் விளங்கிய குறுநில மன்னர்களின் கொடைத் திறமும் செல்வ வளமும் பாராட்டப் பெற்றுள்ளன. முத்தரையர் என்னும் இக்குறுநில மன்னர்களைப் பற்றியகுறிப்பு கி. பி. எட்டாம் நூற்றாண்டில் தான் கல்வெட்டுக்களில் முதன்முதற் காணப் படுகின்றது. எனவே முத்தரையரைப் பாராட்டிய நாலடியார் என்ற நூல் தமிழகத்தின் வடபகுதியில் பல்லவரும் தென் பகுதியிற் பாண்டியரும் பேரரசர்களாகச் சிறப்புடன் ஆட்சிபுரிந்த காலப்பகுதியாகிய கி. பி. எட்டாம் நூற்றாண்டில் இயற்றப் பெற்றதாதல் வேண்டும், என்பது ஆராய்ச்சியாளர் முடிபாகும்.

கீழ்க்கணக்கு நூல்களிற் பெரும்பாலன திருக்குறளை அடியொற்றியமைந்தன வாதலின் நீதி நூல்களாகிய அவற்றில் திருக்குறளின் சொற்களும் பொருள்களும், கருத்துக்களும் பொன்னேபோற் போற்றி யாளப் பெற்றிருத்தல் காணலாம். எடுத்துக் காட்டாக ஒருசிலவற்றை ஈண்டுக் குறிப்பிடுதல் ஏற்புடையதாகும்.

சமண முனிவர்கள் பாடிய நாலடி நானூறு என்னும் நூல் திருக்குறளைப் போன்றே அறத்துப்பால் பொருட்பால் காமத்துப்பால் என்னும் மூவகைப் பகுப்புடையதாய்ப் பத்துப்பாடல்கள் கொண்டது ஒவ்வொறு அதிகாரமாக நாற்பது அதிகாரங்களாகப் பகுத்தமைக்கப் பெற்றுளது. இந்நூலின் செய்யுட்கள் யாவும் தெய்வப்புலவர் அருளிய திருக்குறட் பொருளை எல்லா மக்களும் தெளிந்துணரும் முறையில் சுருக்கியும் விரித்தும் விளக்கும் முறையில் அமைத்துள்ளமை இவ்விரு நூல்களையும் ஒப்பு நோக்கிப் பயில்வார்க்கு இனிது புலனாம். இது பற்றியே 'நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி' என்னும் பழமொழியும் வழங்குவதாயிற்று.

செய்யத்தகாத கொடுந்துன்பங்களைத் தன்கண் பிறர் செய்தாராயினும் அவர்க்கு அதனால் வருந்துன்பத்திற்குத்தாம் வருந்தி, அவர்பால் தாம் அறனல்லாத செயல்களைச் செய்யாதிருத்தல் சான்றோர்க்கு நன்று எனப் பொறுமையின் சிறப்பினை வற்புறுத்துவது,

'திறனல்ல தற்பிறர் செய்யினு நோநொந்
தறனல்ல செய்யாமை நன்று' (157)

என்னுந் திருக்குறள் இதன் பொருள் நலங் களைவிரித்து விளக்கும் முறையில் அமைந்தது

"தம்மை யிகழ்ந்தமை தாம் பொறுப்ப தன்றி மற்
றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தால் — உம்மை
எரிவாய் நிரயத்து வீழ்வர் கொல் என்று
பரிவதூஉம் சான்றோர் கடன்"

என்னும் நாலடியார் செய்யுளாகும்.

'பகைபாவ மச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண்' (146)
— என்ற குறளில்

பிறனில்விழைவானுக்கு உளவாகுங் கேடுகள்

நான்கு எனத் திருவள்ளுவர் குறித்தார். நன்மக்கள் வாழ்விற் பெறுதற்குரிய அறம், புகழ், கேண்மை, பெருமை என்னும் நால் வகைப் பயன்களும் பிறன்மனை நச்சுவாரைச் சேரமாட்டா என்பதனையும் அதனோடு இணைத்துக்கூறும் முறையில் அமைந்தது.

" அறம்புகழ் கேண்மை பெருமை இந் நான்கும்
பிறர்தாரம் நச்சுவார்ச் சேரா—பிறர்தாரம்
நச்சுவார்ச் சேரும் பகைபழி பாவம் என்று
அச்சத்தோ டிந்நாற் பொருள் "

எனவரும் நாலடியாராகும்.

அறிவுடையார் நட்புக்கள் பிறைமதி நாடோறும் வளர்ந்து பெருகுமாறு போல நாடோறும் நிறையுந்தன்மையன எனவும் அறிவிலார் நட்புக்கள் நிறைந்த மதியானது பின் குறையுந் தன்மை போல நாடோறுங் குறையுந் தன்மையன எனவும் விளக்குவது,

" நிறைநீர நீரவர் கேண்மை; பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு " (782)

எனவரும் திருக்குறளாகும்.

பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும்—வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலும் தேயுமே
தானே சிறியார் தொடர்பு. (125)

எனவரும் நாலடியார் பாடல் மேற்காட்டிய திருக்குறளுக்கு அமைந்த விளக்கவுரையாதல் காணலாம்.

'கரவா துவந்தீயும் கண் அன்னார் கண்ணும்
இரவாமை கோடி யுறும்' (1061)

'இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள
உள்ளதூஉ மின்றிக் கெடும்' (1069)

எனவரும் இருகுறள்களையும் ஒருங்கு இணைத்துக்கூறும் நிலையில் அமைந்தது,

கரவாத திண்ணன்பின் கண்ணன்னார் கண்ணும்
இரவாது வாழ்வதாம் வாழ்க்கை —இரவினை
உள்ளுங்கால் உள்ளம் உருகுமால் என்கொலோ
கொள்ளுங்கால் கொள்வார் குறிப்பு (305

எனவரும் நாலடியார் செய்யுளாகும். இவ்வாறே நாலடியார் செய்யுட்களிற் பெரும்பாலான திருக்குறளின் சொல்லையும் பொருளையும் அப்படியே அடியொற்றியமைந்துள்ளமை காணலாம்.

இனி முன்றுறையரையனார் பாடிய பழமொழி நானூற்றிலும் திருக்குறளின் சொல்லும் பொருளும் ஆங்காங்கே எடுத்தாளப் பெற்றுள்ளன.

'சிறைகாக்குங் காப்பெவன் செய்யும் மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை' (57)

எனவரும் திருக்குறட் பொருளை விளக்கும் முறையில் அமைந்தது,

நிறையான் மிகுகலா நேரிழையாரைச்
சிறையான் அகப்படுத்தல் ஆகா —அறையோ
வருந்த வலிதினின் யாப்பினும் நாய்வால்
திருந்துதல் என்றுமே இல். (30)

எனவரும் பழமொழிப் பாடலாகும்.

யாம் இதுபொழுது இளையமாக வுள்ளோம். இறக்குங் காலத்துச் செய்வோம் எனக்கருதாது அறத்தினை நாள் தோறும் செய்தல் வேண்டும். அவ்வாறு செய்த அறமானது இவ்வுடம்பினின்றும் உயிர் பிரியுங்காலத்து அதற்கு அழிவில்லாத துணையாகும் என அறிவுறுத்துவது,

அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை (36)

எனவரும் திருக்குறள். இதன் பொருளை இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை என்பவற்றுடன் இணைத்து விளக்கும் முறையில் அமைந்தன.

மற்றறிவாம் நல்வினை யாமிளையம்
என்னாது
கைத்துண்டாம் போழ்தே கரவாதறஞ்
செய்ம்மின்
முற்றியிருந்த கனியொழியத் தீவளியால்
நற்காய் உதிர்தலும் உண்டு (29)

எனவும்,

புன்னுனிமேல் நீர்போல் நிலையாமை
யென்றெண்ணி
இன்னினியே செய்க அறவினை
—இன்னினியே
நின்றானிருந்தான் கிடந்தான் தன்
கேளலறச்
சென்றா னெனப் படுதலால் (39)

எனவும் வரும் நாலடியார் பாடல்களாகும்.

யாக்கை நிலையாமையினை உவமையில் வைத்து வற்புறுத்தும் முறையில் அமைந்தது,

குடம்பை தனித்தொழியப் புட்
பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு. (348)

என்ற திருக்குறளாகும். இதற்குப் பொருள் விளக்கம் செய்வதுபோல் அமைந்தது,

கேளாதேவந்து கிளைகளாய் இல்
தோன்றி
வாளாதே போவரால் மாந்தர்கள்
—வாளாதே
சேக்கை மரனொழியச் சேணீங்கு
புட்போல
யாக்கை தமர்க்கொழிய நீத்து. (30)

எனவரும் நாலடியார் பாடலாகும். திருவள்ளுவர் குறித்த குடம்பை என்ற சொல்லுக்கு இப்பாடலில் கூடு எனப்பொருள் கொண்டிருத்தல் கூர்ந்துணரத்தக்கதாகும்.

'கூட்டை விட்டுயிர் போவதன்
முன்னமே
காட்டுப்பள்ளி யுளான்கழல் சேர்மினே'

எனவரும் அப்ப ரருள்மொழியும் இங்கு ஒப்புநோக்குதற்குரியதாகும்.

'யாதானும் நாடாமால் ஊராமல்
என்னொருவன்
சாந்துணையுங் கல்லாதவாறு'

என்ற திருக்குறட் பொருளை யடியொற்றிய நிலையில்

'ஆற்றவுங்கற்றார் அறிவுடையார்
அஃதுடையார்
நாற்றிசையும் செல்லாத நாடில்லை
அந்நாடு
வேற்று நாடாகா தமவேயாம் ஆயினால்
ஆற்றுணா வேண்டுவதில்' (55)

என்ற பழமொழிப் பாடலும்,

'ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை
இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி'

என்பதனை அடியொற்றிய நிலையில்

கல்லாதவரிடைக் கட்டுரையின் மிக்க
தோர்
பொல்லாத தில்லை ஒருவற்கு—நல்லாய்
இழுக்கத்தின் மிக்க இழிவில்லை இல்லை
ஒழுக்கத்தின் மிக்க உயர்வு (64)

என்ற பழமொழிப் பாடலும் அமைந்துள்ளன. இவ்வாறே திருக்குறளில் அமைந்த 'கெட்டார்க்கு நட்டாரில்' (1293) அச்சமுடையார்க்கரணில்லை, (534) யாப்பினுள் அட்டியநீர் (1093) முதலிலார்க்கு ஊதியமில்லை (449) எனவரும் தொடர்கள் பழமொழி நானூற்றில் 59, 254, 296, 312 ஆம் பாடல்களில் பண்டைப் பழமொழிகளாக முறையே எடுத்தாளப்பெற்றுள்ளன.

நான்மணிக்கடிகையாசிரியர் விளம்பிநாகனாரும் தம் நூலிற் பலவிடங்களிலும் திருக்குறளை எடுத்தாண்டுள்ளார்.

வானோக்கி வாழும் உலகெல்லாம்
மன்னவன்
கோல் நோக்கி வாழுங்குடி (542)

எனவரும் திருக்குறட் பொருளை,

கோல்நோக்கி வாழும் குடியெல்லாம் தாய்முலையின்
பால்நோக்கி வாழும் குழவிகள்—வானத்
துளிநோக்கி வாழும் உலகம் உலகின்
விளிநோக்கி இன்புறாஉம் கூற்று (26)

எனவரும் பாடலில் முதல்அடியிலும்மூன்றும் அடியிலும் இருமணிகளாக எடுத்தாண்டுள்ளார்.

இன்மை யிடும்பை யிரந்து தீர்வா மென்னும்
வன்மையின் வன்பாட்ட தில். (1063)

எனவரும் திருக்குறளை

இன்மையின் இன்னாததில்லை இலம் என்னும்
வன்மையின் வன்பாட்ட தில்.
(நான்மணிக்—29)

என விளம்பிநாகனுர் எடுத்தாண்டுள்ளமை அவரது திருக்குறட் பயிற்சியை நன்கு புலப் படுத்துவதாகும்.

நல்லாதனுர் இயற்றிய திரிகடுக நூலிலும் திருக்குறட் கருத்துக்கள் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன.

'பாத்துண்டாங்கு இல்லறமுட் டாதி யற்றலும்' (31)

எனவரும் திரிகடுகத் தொடர் 'பகுத்துண்டு பல்லுயிரோம்புதல்' என்னுந் திருக்குறள் தொடரை அடியொற்றியமைந்ததாகும்.

'தெய்வந்தொழாஅள் கொழுநற் றொழு தெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை'

எனவும்,

'இயல்புளிக் கோலோச்சு மன்னவ னுட்ட
பெயலும் விளையுளுந் தொக்கு'

எனவும் வரும் திருக்குறளையுளத்துட் கொண்டு இயற்றப் பெற்றது,

கொண்டான் குறிப்பறிவாள் பெண் டாட்டி கொண்டன
செய்வகை செய்வான் தவசி கொடி தொரீஇ
நல்லவை செய்வான் அரசன் இவர்மூவர்
பெய்யெனப் பெய்யும் மழை (96)

எனவரும் திரிகடுகச் செய்யுளாகும்.

காரியாசான் என்னும் புலவர் தாம் பாடிய சிறுபஞ்சமூலத்தில் திருக்குறளிற் சொல்லப்பட்ட அறங்களைத் தொகுத்துக் கூறியதுடன் சிலவிடங்களில் திருக்குறளின் முழுப் பொருளையும் விரித்துங் கூறியுள்ளார்.

நல்லாறெனினுங் கொளல் தீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று.

எனவரும் திருக்குறளை

'ஈவது நன்று தீது ஈயாமை' (சிறுபஞ் 99

எனத் தொகுத்தும்,

மனநலம் மன்னுயிர்க்காக்கம் இனநலம்
எல்லாப் புகழுந் தரும் (456)

என்ற திருக்குறளை,

தக்கார் வழிகெடாதாகும் தகாதவர்
உக்க வழியராய் ஒல்குவார்—தக்க
இனத்தினன் ஆகும் பழிபுகழ், தம்தம்
மனத்தினன் ஆகும் மதி (சிறுபஞ்—79)

என விரித்தும் கூறியுள்ளமை நோக்கத்தகுவதாகும்.

நன்றுந்தீதும் பகுத்துணரவல்ல கல்வியறிவினைப் பெருதானது எழுச்சியும் அழகும் பயனில என்பதனை விளக்குவது,

'நுண்மா ணுழைபுல மில்லான் எழில் நலம்
மண்மாண் புனைபாவையற்று' (407)

எனவரும் திருக்குறள். கல்வியே உண்மை

யான அழகினை விளைப்பது என்னும் இக் கருத்தினை ஏலாதி ஆசிரியர் கணிமேதாவியார்

இடை வனப்பும் தோள் வனப்பும் ஈடின்
வனப்பும்
நடை வனப்பும் நாணின் வனப்பும்
—புடைசால்
கழுத்தின் வனப்பும் வனப்பல்ல
எண்ணோ
டெழுத்தின் வனப்பே வனப்பு.
(ஏலாதி–74)

என்ற பாடலில் விரித்துக் கூறியுள்ளார். குஞ்சி வனப்பும் எனத் தொடங்கும் நாலடியார் பாடலும் இங்கு ஒப்புநோக்கற்பாலதாம்.

கபிலர் பாடிய இன்னா நாற்பதில் வரும் தொடர்கள் திருக்குறள் தொடர்கள் பலவற்றை அடியொற்றிய நிலையில் உள்ளன.

ஆற்றலிலாதான் பிடித்த படை இன்னா, (7)
ஆன்றவிந்த சான்றோருட் பேதை புகல் இன்னா (17)
அறைபறை யன்னர் சொல் இன்னா (23)
இன்னா, கெடுங்காலைக் கைவிடுவார் நட்பு (36)
பிறன்மனையாள் பின்னோக்கும் பேதைமை இன்னா (38)

என வரும் தொடர்கள் முறையே

'பேடி கை வாளாண்மை போலக்கெடும்
'கழாக்கால் பள்ளியுள் வைத்தற்றால்
சான்றோர் குழாத்துப் பேதை புகல்
'அறைபறை யன்னர் கயவர்'
'கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை
அடுங்காலை
உள்ளினும் உள்ளஞ் சுடும்'
'பிறன்மனை நோக்காத பேராண்மை'

எனவரும் திருக்குறட் பகுதிகளை நினைவு படுத்தும் முறையில் அமைந்திருத்தல் காணலாம்.

இவ்வாறே பூதஞ்சேந்தனார் தாம் இயற்றிய இனியவை நாற்பதில்,

'நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
ஒட்டாரை ஒட்டிக் கொளல்' (679)

என்னும் திருக்குறளை

'நட்டார்க்கு நல்லசெயல் இனிது
எத்துணையும்
ஒட்டாரை ஒட்டிக்கொளல் அதனின்
முன்னினிதே

எனவரும் பதினோழாம் பாடலில் எடுத்தாண்டுள்ளார். இவ்வாறே

'மானம்பட வரின் வாழாமை
முன்னினிதே' (27)
'ஒற்றினான் ஒற்றிப் பொருள்தெரியும்
மாண்பினிதே (35)
அவ்வித்தழுக்கா றுரையாமை
முன்னினிதே (36)

என இந்நூலில்வரும் தொடர்கள் திருக்குறளில் முறையே 969, 583, 167 ஆம் குறள்களை அடியொற்றியமைந்தனவாகும்.

மதுரைக் கூடலூர்கிழார் பாடிய முதுமொழிக்காஞ்சிப் பத்தில் திறக்குறட் கருத்துக்கள் விரவியுள்ளன.

'ஆர்கலியுலகத்து மக்கட் கெல்லாம்
ஓதலிற் சிறந்தன் றொழுக்கமுடைமை'

எனவரும் தொடர்,

'மறப்பினும் ஒத்துக் கொளலாகும்
பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்'

என்ற திருக்குறட் கருத்தினைத் தழுவியதாகும்.

'நசையிற் பெரியதோர் நல்குரவில்லை'
இசையிற் பெரியதோர் எச்சம் இல்லை'

எனவரும் தொடர்கள் திருக்குறளில் உள்ள 'நல்குரவென்னும் நசை' (1043) 'இசையென்னும் எச்சம்' (238) என்ற தொடர்ப் பொருளை முறையே விரித்துரைப்பனவாம்.

மாலைப்பொழுது கண்டு ஆற்றாளாய தலைமகள், ஆற்றல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியதாக அமைந்தது.

காதலரில்வழி மாலை கொலைக்களத்
தேதிலர் போல வரும். (1224)

எனவரும் திருக்குறளாகும். இதனை மூவாதியார் என்னும் ஆசிரியர் தாம்பாடிய ஐந்திணை எழுபதில்,

தண்ணறுங் கோடல் துடுப்பெடுப்பக்
கார் எதிரி
விண்ணுயர் வானத் துருமுரற்றத்
—திண்ணிதின்
புல்லுநர் இல்லார் நடுங்கச் சிறுமாலை
கொல்லுநர் போல வரும். (17)

என்ற பாடலில் எடுத்தாள்கின்றார்.

மாறன் பொறையனார் பாடிய ஐந்திணை ஐம்பதில்

தேரோன் மலைமறைந்த செக்கர்கொள்
புன்மாலை
ஊர் ஆன்பின் ஆயன் உவந்தூதும்
—சீர்சால்
சிறுகுழல் ஓசை செறிதொடி வேல்
கொண்
டெறிவது போலும் எனக்கு (7)

எனவரும் பாடல்,

அழல்போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்
குழல் போலுங் கொல்லும்படை (1228)

எனவரும் திருக்குறட் பொருளை விரித்துரைப்பதாகும். இவ்வாறே,

ஊடற்கட் சென்றேன்மன் தோழி அது
மறந்து
கூடற்கண் சென்றதென் நெஞ்சு (1284)

எனவரும் திருக்குறளை,

ஒல்லென் ஒலிபுனல் ஊரன் வியன்
மார்பம்
புல்லேன்யான் என்பேன் புனையிழையாய்
புல்லேன்
எனக்கோர் குறிப்பும் உடையேனே
ஊரன்
தனக்கேவல் செய்தொழுகுவேன் (29)

என இந்நூலாசிரியர் விரித்துக் கூறியுள்ளார்.

மயில்கொள் மடவாள்கொல் மாநீர்த்
திரையுள்
பயில்வதோர் தெய்வங்கொல்கேளீர்
—குயில் பயிரும்
கன்னி இளஞாழல் பூம்பொழில் நோக்கிய
கண்ணின் வருந்தும் என்னெஞ்சு (49)

எனவரும் திணைமொழி ஐம்பதில்

அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ
கனங்குழை
மாதர்கொல் மாலுமென்னெஞ்சு (1081)

எனவரும் திருக்குறளைக் கண்ணஞ்சேந்தனார் எடுத்தாண்டுள்ளார்.

இதுகாறும் எடுத்துக் காட்டியவற்றால் அறநூலாகிய திருக்குறட் கருத்துக்களும் தொடர்களும் சங்கமருவிய நூல்களாகிய கீழ்க்கணக்கு நூல்களில் பல இடங்களிலும் விரவியுள்ளமை நன்கு புலனாதல் காணலாம்.



# ஆத்திசூடியும் எழுத்தியலும்

டாக்டர் வ. சுப. மாணிக்கம்,
தமிழ்ப் பேராசிரியர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

ஔவையார் பாடிய ஆத்திசூடி ஏத்தி ஏத்தி ஆராய்வதற்கு உரியது. காரணம் இந்நூல் சிறிதாயினும் புதுமையும் ஒழுங்கும் உடையது. ஆத்திசூடிக்கு உரைகளும் கதைகளும் பலவுள; இலக்கிய விளக்கங்களும் சமய விளக்கங்களும் பல தோன்றியுள்ளன; பாரதியார் ஆத்திசூடி, பாரதிதாசன் ஆத்திசூடி என வழி நூல்களும் எழுந்துள. ஆங்கில மொழிபெயர்ப்புக்களும் உண்டு. பிற மொழிகளிலும் இச் சூடி மொழி பெயர்க்கப்படும் என்று எதிர்பார்க்கலாம். நீதிநூல்களில் திருக்குறளுக்கு அடுத்த சிறப்பை ஆத்திசூடி பெற்று வருகின்றது. வள்ளுவர்போல் ஔவையும் நாடும் வீடும் அறியப்பெற்றவர்.

ஆத்திசூடி பலநிலையில் ஆராயப்பட்டிருந்தாலும் இலக்கண நோக்கில் எழுந்த ஆராய்ச்சி இல்லை. 108 ஆத்திசூடிகளும் எவ்வகைப்பா ஆகும்? சூத்திரம் அல்லது நூற்பா என்று பெயரிடுகின்றோம். 'சூத்திரம் யாப்பினுள் தோன்ற யாத்தமைப்பதுவே' என்று தொல்காப்பியம் கூறுவதன்றி எவ்வகை யாப்பு என்று சுட்டவில்லை. 'சில்வகையெழுத்திற் பல்வகைப் பொருளை' என்ற நூற்பாவிலும் சூத்திரத்தின் தன்மை கூறப்படுவதன்றிச் செய்யுள் வகை குறிக்கப்படவில்லை. ஆசிரியப்பாவிலும் வெண்பாவிலும் கட்டளைக்கலித்துறையிலும் இலக்கண நூற்பாக்கள் அமைந்திருப்பதைக் காண்கின்றோம். ஆத்திசூடியுள் நூறு, அறஞ்செய விரும்பு, ஆறுவது சினம் என இரு சீர்களால் அமைந்தவை. ஏனை எட்டும் நப்போல் வளை, நெற்பயிர்விளை என ஒருசீர்கொண்டு மேலும் ஓரசையால் முடிபவை: ஆனால் முழுதும் ஒருசீர் ஆத்திசூடியோ முச்சீர் ஆத்திசூடியோ இல்லை.

எதுகை மோனை முதலான தொடை விகற்பம் பற்றியும் ஆராய்தற்கு உரியது இச் சிறு நூல். தொடை என்பதன் பொது விலக்கணம் என்ன? ஓர் ஒழுங்கான இயக்கம். நாற்சீர்களிலும் ஓர் ஒழுங்கு இருப்பின் முற்றுகும்; இறுதிச்சீர்களின் ஒழுங்கு இயைபாம்; முதற்சீர்களின் ஒழுங்கு மோனையாம்; 'அந்தம் முதலாத் தொடுப்பது அந்தாதி' என்று காரிகை ஒரு பாட்டிற்குள் அந்தாதித் தொடை வகுக்கின்றது. இவ் விலக்கணத்தை விரிவுபடுத்தித் திருவாய்மொழி போன்ற தொடர்நிலைச் செய்யுட்களையும் அந்தாதி நூல் எனக் கொள்கின்றோம். ஆத்திசூடியின் அமைப்பிலும் ஒரு மொழியொழுங்கு உண்டு. உயிரெழுத்துக்களையும் மெய்யெழுத்துக்களையும் உயிர்மெய்யெழுத்துக்களையும் முதலாகக் கொண்டு 108 செய்யுட்களை நிரல்படக் கூறுகின்றதே; யாப்பில் இதற்கோர் பெயர் வைக்கவேண்டாவா? ஏற்கனவே உள்ள பெயர் வகையில் இது அடங்கவில்லை. ஔவை ஆத்திசூடியும் கொன்றைவேந்தனும் பின் எழுந்த ஆத்திசூடிகளும் நெடுங்கணக்குத் தொடையுடையவை என்று ஒரு புதுத்தொடை கொள்ளலாம். ஆத்திசூடியின் செய்யுள் தொடை பற்றிப் பின் எழுந்த யாப்பிலக்கணங்கள்

கருத்துச் செலுத்தவில்லை என்பது மேல் எழுதிய சில குறிப்புக்களால் போதரும்.

இக்கட்டுரை, ஆத்திசூடி நூலில் காணத் தகும் மொழி முதலெழுத்துக்கள் குறித்து ஓர் ஒப்பீட்டாராய்ச்சி செய்ய முற்படு கின்றது. ஒரு மொழியில் காலந்தோறும் மாறும் இலக்கணங்களும் உள. மாருத இலக்கணங்களும் உள. மாறும் இலக்கணத் திலிருந்து மொழிவரலாறு அறியமுடிகின்றது. எழுத்தியலில், மொழிக்கு முதலில் வரும் எழுத்துக்கள், இறுதியில் வரும் எழுத்துக் கள், இடையில் வரும் எழுத்துக்கள் என மூன்று நிலைகள் உள. தொல்காப்பியத்தி லும் நன்னூலிலும் முதலெழுத்து இறுதி யெழுத்துக்கள் பற்றி வேறுபாடுகள் உண்டு. இடைநிலை மயக்கம் பற்றி யாதும் மாற்றம் இல்லை. இதனுல் காலத்தில் மாறும் இலக் கணக் கூறு எது? மாருதது எது என்று தெரிந்து தெளிய முடிகின்றது. முதனிலை யிலும் ஈற்று நிலையிலும் பழையன கழித்துப் புதியன தழுவிய நன்னூலார் இடைநிலை மயக் கத்தில் காலமாறுதலை ஏற்றுக் கொண்டிலர்.

> இணைந்தியல் காலை யரலக் கிகரமும்
> மவ்வக் குகரமும் நகரக் ககரமும்
> மிசைவரும் ரவ்வழி யுவ்வு மாம்பிற
> (நன். 149)

என்று தொல்காப்பியத்தின் மரபைக் காத்து வலியுறுத்துவர்.

தமிழ் மொழி வரலாற்றில் முதலெழுத் துப் பற்றிய மாறுதல்களை ஆராயப்புகும் நாம் தொல்காப்பியம், வீரசோழியம், நேமி நாதம், நன்னூல் இவற்றின் உரைகள் ஆகிய வற்றை மேற்கோளாகக் கொள்கின்ருேம். முதலெழுத்தின் ஆராய்ச்சி இலக்கண நூலள வில் சுருங்கி நிற்கின்றது. இவ்வாராய்ச் சிக்கு முதலெழுத்துக்களையே அடிப்படை யாகக் கொண்டு பாடிய ஆத்திசூடியும் அதனையொத்த கொன்றை வேந்தனும் உரிய நூல்கள் ஆம் என்பது என் கருத்து. இலக் கணம் இலக்கியம் என்ற ஈரமைப்பும் கொண்ட ஆத்திசூடியின் முதலெழுத்து அமைப்பு பின்வருமாறு: கொன்றை வேந் தன் அமைப்பையும் உடன் காணலாம்.

ஆத்திசூடியின் செய்யுட்கள் 108

கொன்றை வேந்தன் செய்யுட்கள் 91

| | ஆத்திசூடி | கொன்றை |
|---|---|---|
| உயிர்முதன் மொழி | 12 | 12 |
| ஆய்தம் | 1 | 1 |
| மெய்கள் | 9+9 | — |
| ககரவினம் | 11 | 12 |
| சகரவினம் | 11 | 11 |
| தகரவினம் | 11 | 11 |
| நகரவினம் | 11 | 11 |
| பகரவினம் | 11 | 11 |
| மகரவினம் | 11 | 11 |
| வகரவினம் | 7+4 | 7+4 |
| கூடுதல் | 108 | 91 |

1. பன்னீருயிரும் முதன் மொழியாக வரும் என்ற நிலையில் இந்நூலுக்கும் இலக் கண நூல்களுக்கும் மாறுபாடில்லை.

2. ஔவியம் பேசேல், கண்டொன்று சொல்லேல் என்ற இருசெய்யுட்கும் இடை யில் அஃகம் சுருக்கேல் என்ற செய்யுள் உள்ளது. இதனுல் ஔவையார் உயிருக்கும் மெய்க்கும் நடுவே ஆய்தத்தைக் கொண்டார் எனவும் முதலெழுத்தை முப்பத்தொன்ருக எண்ணினுர் எனவும் கருதலாம்.

> "அறிந்த வெழுத்தம்முன் பன்னிரண்
> டாவிகளான கம்முன்
> பிறந்த பதினெட்டு மெய்; நடுவாய்தம்"

என்ற வீரசோழியம் ஔவையின் கருத்துக்கு ஒத்திருத்தல் காண்க.

3. மெய்யெழுத்து முதன்மொழி பற்றி ஆத்திசூடியில் பல சிக்கல்கள் உள. 14–31 வரையுள்ள பதினெட்டுச் செய்யுட்கள் 18 மெய்களும் மொழி முதலாக வந்தனபோல் எழுதப்பட்டவை. இவை நுணுகிய ஆய்வுக்கு உரிய ஆதலின், அவற்றினை ஈண்டு எடுத்தெழுதிக் கொள்வது நல்லது.

1. கண்டொன்று சொல்லேல்
2. ஙப்போல் வளை
3. சனி நீராடு
4. ஞயம்பட உரை
5. இடம்பட வீடெடேல்
6. இணக்கமறிந்திணங்கு
7. தந்தை தாய்ப்பேண்
8. நன்றி மறவேல்
9 பருவத்தே பயிர் செய்
10. மன்று பறித்துண்ணேல்
11. இயல்பலா தனசெயேல்
12. அரவமாட்டேல்
12. இலவம்பஞ் சிற்றுயில்
14. வஞ்சகம் பேசேல்
15. அழகலா தனசெயேல்
16. இளமையிற் கல்
17. அறனை மறவேல்
18. அனந்தலாடேல்

இப்பதினெட்டும் ககர முதல் னகர இறுதியாகவும் இனவெழுத்து அடுத்தடுக்து வரவும் அமைந்துள. நெடுங்கணக்குப்படி றகரனகரம் இறுதியில் உள்ளன. இதனல் பதினெட்டு மெய்யினையும் முதனிலையாக ஒளவையார் கொண்டார் என்று சொல்லு வதைவிட அப்பதினெட்டினையும் நெடுங் கணக்குப்படி நிரல்பட வைத்துக்காட்ட எண்ணினர் என்று கொள்வதே பொருத்தம். அங்ஙனம் காட்டியவர் மொழிமுதலில் வாரா என்று கருதிய ட ண ய ர ல ழ ள ற ன என்ற ஒன்பது மெய்யெழுத்துக்களை ஒற்ருகவே வைத்துக் காட்டியிருக்கலாம். இடம் பட, இணக்கம், அரவம் என உயிர் மெய் நிலையில் ஏன் கூறினர் என்பது தெரியவில்லை. ஆனல் பதினெட்டுச் செய்யுட்களிலும் உள்ள முதலெழுத்துக்கள் எல்லாம் குற்றெழுத்துக் களாம் என்பதும் அவற்றை உயிர்மெய்க் குற்றெழுத்து, உயிர்க்குற்றெழுத்து என இருவகைப்படுத்தலாம் என்பதும் பெறப் படும். உயிர்மெய்க்குற்றெழுத்து ஒன்பதும் (க ங ச ஞ த ந ப ம வ) உண்மையான மொழி முதனிலைகளாம் என்பதும் தனிஉயிர்க் குற்றெழுத்துடைய ஒன்பதும் (இட இண இய, அர, இல, அழ, இள, அற, அன) மொழிமுதல் வாராதவற்றை நெடுங்கணக்கு முறைப்படி சொல்லுதற்குக் கையாண்ட நெறி என்பதும் தெற்றெனப்புலப்படும். இந் நெறிக்கு இகரம் அகரம் என்ற இரு குற் றுயிரைத் தவிர வேறு ஒலிகளைக் கொள்ள வில்லை என்பதும் நோக்கத்தகும்.

ரவ்விற் கம்முத லாமுக் குறிலும்
லவ்விற் கிம்முதல் இரண்டும் யவ்விற்கு
இய்யும் மொழிமுத லாகிமுன் வருமே

மொழி முதல் வாராத மெய்யெழுத்துக் களுக்கு முன் முக்குறில் வந்து மொழி முத லாகும் என்ற நன்னூல் விதியையும் நினைக.

4. மொழிமுதல் வரும் க ங ச ஞ த ந ப ம வ என்ற ஒன்பது மெய்களில் ஙகரம் தன்னைச் சொல்லும் வழி மொழி முதல் வந்த தல்லது ஒரு சொல்லில் வந்ததன்று. எனவே ஙனம் மொழி முதலாம் என்ற நன்னூற் கொள்கை ஒளவைக்கு இல்லை. ஆனல் ஞகர முதனிலை பற்றி எல்லா இலக்கண நூலுக்கும் ஆத்திசூடிக்கும் வேறுபாடு உண்டு.

ஆ எ ஒ எனும் மூவுயிர் ஞகாரத் துரிய
(தொல். 31)
அ ஆ எ ஒவ்வொ டாகு ஞம்முதல்
(நன். 105)

இங்ஙனம் தொல்காப்பியம் ஞகரம் மூவுயிரோடும் நன்னூல் நாலுயிரோடும் மொழி

முதலாகி வரும் என்று நூற்பித்திருப்பவும் ஞயம்படவுரை என்று ஒரு முதன்மொழியே கூறுவர் ஔவையார். ஞகரமாவது அகரத்தோடு கூடிவரும் என உடன்பட்ட இவர் யகரம் எதற்கும் மொழி முதலாகாது என்று கருதுகின்ருர். ஆவொடு கூடிவரும் எனத் தொல்காப்பியமும் அ ஆ உ ஊ ஒ ஔ என்ற ஆறுயிரோடும் வரும் என வீரசோழியமும் நன்னூலும் கூறியிருப்ப, ஆத்திசூடி யகரத்துக்கு ஒரு முதனிலேயும் கொடாதது வியப்பாக உள்ளது. 'இயல்பலாதன செயேல்' என்று மொழி முதலாகா எழுத்துக்களில் ஒன்ருகக் கொண்டு இகரவுயிரை இணைக்கின்றது. எனவே க ச த ப ஞ ந ம வ என்ற எட்டு மெய்களே உண்மையாக மொழி முதலாக வரும் என்பது ஔவையின் எழுத்தியல்.

5. முன்னர்க் கூறியபடி உயிரெழுத்து வரிசையும் ஆய்தநடுவும் வைத்தபின் பதினெட்டு மெய்களுக்கு ஒருவரிசை வைப்பதே ஔவையின் நோக்கம். இது வேருெரு வகையாலும் தெளிவுபடும்.

| | |
|---|---|
| கண்டொன்று சொல்லேல் | ... 14 |
| கடிவது மற | ... 32 |
| சனி நீராடு | ... 16 |
| சக்கர நெறிநில் | ... 43 |
| தந்தை தாய்ப் பேண் | ... 20 |
| தக்கோ னெனத்திரி | ... 54 |
| நன்றி மறவேல் | ... 21 |
| நன்மை கடைப்பிடி | ... 65 |
| பருவத்தே பயிர்செய் | ... 22 |
| பழிப்பன பகரேல் | ... 76 |
| மன்று பறித்துண்ணேல் | ... 23 |
| மனந்தடுமாறேல் | ... 87 |
| வஞ்சகம் பேசேல் | ... 27 |
| வல்லமை பேசேல் | ... 98 |

இங்ஙனம் ககரம் முதல் வகரம் வரை ஒவ்வொன்றிற்கும் இரண்டு ஆத்திசூடிகள் உள்ளன. முதலாவதாக இருப்பவை தனி மெய்வரிசைக்கென எழுதப்பட்டவை. இரண்டாவதாக இருப்பவை க, கா, கி, கீ என வரும் உயிர்மெய் வரிசைக்கு எழுதப்பட்டவை.

6. ஆத்திசூடியின் முதலெழுத்து அமைப்பு எவ்வளவு சிக்கலானது என்று இதுகாறும் செய்த பாகுபாட்டிலிருந்து ஓரளவு தெரிந்தது. இதே ஔவை பாடிய கொன்றைவேந்தன் நெடுங்கணக்கு வரிசையிற் பாடப்பட்டது என்ருலும் தனிமெய் வரிசைப் பதினெட்டு எழுத்துக்களேயும் மேற்கொள்ளவில்லே. உயிர்வரிசை, ஆய்தநடு, உயிர்மெய்வரிசை என மூன்றே அங்கு உள்ளன. ஆத்திசூடி நூற்றெட்டாக, கொன்றைவேந்தன் 91 ஆகக் குறைந்ததற்குக் காரணம் தனிமெய் வரிசை இன்மையே. பாரதியார் புதிய ஆத்திசூடியிலும் பாரதிதாசன் முதலாத்திசூடியிலும் ஆய்தத்தையும் தனிமெய் வரிசையையும் கொள்ளவில்லே. இளேயார் ஆத்திசூடியில் பாரதிதாசன் ஆய்தத்தைக் கொள்ளாவிட்டாலும்,

கணக்கில் தேர்ச்சி கொள்
சரியாய் எழுது
தமிழ் உன் தாய் மொழி
நல்லவனுய் இரு
பல்லினைத் தூய்மை செய்
மற்றவர்க்கு உதவிசெய்
வண்டி பார்த்து நட

என்று ஏழு தனிமெய்வரிசை பாடியுள்ளார். இவரும் ஔவையார்போல உயிர்மெய்க் குறிலேப் பின்பற்றியிருப்பது நினேயத்தகும்.

7. உயிர் ஆய்தம் மெய் என்ற வரிசையாய்வுக்குப்பின், இனி ககர உயிர்மெய் முதலான இனவரிசைகளே ஆராய்வோம். ஔவையார் கருத்துப்படி, மொழிக்கு முதலில் ஒன்பது மெய்கள் வரும் எனினும் ஙகரம் தன்னே எடுத்து மொழியும் அளவில் வருவதால் ஏனேயவை எட்டே. எட்டினுள்ளும் ஞகரம் ஞயம்படவுரை என்ற அளவில் அடங்கிவிட்டது. அது ஞ ஞா ஞி போன்ற

இனவரிசைக்கு உரியதில்லை என்பது ஔவையார் கருத்துப்போலும். ஞண்டு – நண்டு; ஞாயிறு–நாயிறு; ஞாதி–நாதி என்று இடைகாலத்துப் பல்கிவந்த வழக்கை நோக்கி, ஞகரவினத்தை மதியாது விட்டாரோ ஔவையார்? யகரத்தை முதன் மொழியாகக் கொள்ளாமைக்கும் இதுவே காரணமாக இருக்கலாம். யாடு–ஆடு, யானை–ஆனை, யாளி–ஆளி; யுத்தம்–உயுத்தம் என யகரம் தன்னிலை இழந்து வருதல் காண்க. தொல்காப்பியம் யா ஒன்றே மொழி முதல் வரும் எனக்கூறவும், வீரசோழியம் நன்னூல் ய யா யு யூ யோ யௌ என்று ஆறு மொழி முதலாம் என விரித்திருப்பவும் யகரம் எதுவும் வராது என அவ்வினத்தையே ஔவையார் அடியோடு ஒழித்திருக்கிறார் என்பதனை மொழிவரலாற்றுளர் உணர வேண்டும்.

8. ஙகரம் ஞகரம் யகரம் இம்மூன்றின் நீயும் ஆத்திசூடியில் இவ்வாறாக, ஏனை உயிர்மெய் வரிசைகளும் இலக்கண நூல்களுக்கு ஒத்தனவாக இல்லை. க த ந ப ம வ என்னும் ஆறு மெய்யும் ஔகாரத்தோடு முதலாகும் என்பர் தொல்காப்பியர். இவற்றொடு சய என்னும் இரண்டையும் கூட்டி எட்டுமெய்யொடு ஔ முதலாம் என்பர் புத்தமித்திரனாரும் பவணந்தியாரும். ஔ என்ற உயிரைத் தன் பெயருக்கு முதலாகப் பெற்ற நம் ஔவையாரோ எனின், ஔவியம் பேசேல் என்று ஔகாரம் தனியுயிராக மொழி முதலாவதன்றி எந்த மெய்யோடும் சேர்ந்து வாராது என்று இலக்கியம் செய்து விட்டார். யகரத்திற்குச் செய்த புரட்சி போன்றது இது. கவ்வை தவ்வை மவ்வல் பவ்வம் நவ்வி சவுக்கியம் வவ்வால் என்று எழுதலாம் என்பது இவர் கருத்துப்போலும். செய்யுள் வழக்கைப் பின்பற்றாமல் மக்கள் வழக்கிற் கூறும் பேச்சொலியை முழுதும் தழுவிக்கொண்டாரோ ஔவையார் என்று கருத வேண்டியிருக்கின்றது. முதலெழுத்தில் இவ்வளவு ஒழிவு செய்தவர் ஆத்திசூடி போல ஈற்றெழுத்துக்கும் ஒரு சூடி பாடியிருந்தால், அவர் காலத்தின் ஒலி வழக்கினை எவ்வளவோ தெரிந்துகொள்ள முடியும். மொழிமுதலாக உயிர்மெய் ஔகாரத்தைக் கொள்ளாமையினால் ககரமுதல் மகரம்வரை இனவரிசை 11 ஆயின. வகரமும் முன்னர்க் கூறியபடி எட்டு ஆகாது ஏழாயிற்று. கொன்றை வேந்தனில் ஒரே ஒரு வேறுபாடு. கௌவை சொல்லின் எவ்வருக்கும்பகை என்ற செய்யுளில் ககரம் ஔகாரத்தோடு முதலாகி வந்திருக்கின்றது.

ஆத்திசூடி 108

கொன்றைவேந்தன். 108 — தனி மெய் 18 = 90 + கௌ = 91.

9. மொழிமுதல் எழுத்துக்களில் பலவற்றைக் குறைத்த ஔவையார் ஆத்திசூடியின் இறுதியில் வகரவினத்தை வைக்கும் போது,

வல்லமை பேசேல்
வாதுமுற் கூறேல்
வித்தை விரும்பு
வீடு பெறநில்
உத்தமனாயிரு
ஊருடன் கூடி வாழ்
வெட்டெனப் பேசேல்
வேண்டி வினைசெயேல்
வைகறைத் துயிலெழு
ஒன்னாரைத் தேறேல்
ஓரஞ் சொல்லேல்

என்று 11 செய்யுட்கள் கூறிமுடிப்பர். இவற்றுள் வ வா வி வீ வெ வே வை என்ற ஏழுமே வகரவினவரிசை முதல்கள், உத்தமன், ஊருடன், ஒன்னார், ஓரம் என்ற நான்கும் உயிரெழுத்துக்கள். இவ்வெழுத்துக்களுக்கு உடையது விளம்பேல், ஊக்கமது கைவிடேல், ஒப்புரவொழுகு, ஓதுவதொழியேல் என்ற முன்பே சூடிகள் தனியுயிர் வரிசையில் உள. மீண்டும் இவற்றுக்குச் சூடி பாடுவது எவ்வகையிற் பொருந்

தும் ? ககரம் முதல் வகரம் வரை எல்லாம் 11 என்ற ஓர் ஒழுங்கு வேண்டி இவ்வாறு வலிந்து செய்திருப்பாரா ? கொன்றை வேந்தனிலும் இவ்வொழுங்கு காணப்படு கின்றது. மக்கள் வழக்கில் உகர ஊகார ஒகர ஓகாரங்கட்கு வகரவொலி இணைத்துப் பேசுவது உண்டு. இந்நான்கும் இதழ் குவி யொலிகள்; வகரமோ பல்லிதழ் இயையப் பிறப்பது. இதழியைபுக்கும் இதழ் குவிவுக் கும் நெருக்கம் ஊண்டு. ஆதலின் மக்கள் வாயொலிக்கு மதிப்புக்கொடுத்த ஒளவைப் பெருமாட்டி ஆத்திசூடியை ஏட்டில் எழுதிய காலை இந்நான்கு சூடிகளையும்,

வுத்தமனுயிரு
ஊருடன் கூடிவாழ்

வொன்னுரைத் தேறேல்

வோரஞ் சொல்லேல்

என்று எழுதியிருப்பாரோ? பின்னர் இது இழிவழக்கு, மொழிக்கு அழிவழக்கு என்று எண்ணி எழுதுவோரால் விடப்பட்டது போலும். 108 என்ற ஒரு மெய்ப்பொருள் எண்ணிக்கைக்காக இவ்வாறு சேர்த்திருப் பார் என்று கருத இடமில்லை. அவ்வாறு எண்ணியிருப்பரேல் ஞகர வினத்தையே தழுவியிருத்தல் எளிதாகவும் முறையாகவும் இருக்கும். கொன்றைவேந்தன் 91 ஆக இருத்தலின் ஒளவை 108 நம்பிக்கையுடைய வர் இல்லை என்பது பெறப்படும்.



# கவிதை விருந்து

பேராசிரியர் வ. பெருமாள், எம். ஏ., பி. டி., எம். ஆர். ஏ. எச்.
தமிழ்ப் பேராசிரியர், முதல்நிலைக் கல்லூரி, கோலார்தங்கவயல்.

முன்னுரை :

மனிதனுக்கு முக்கூறுகள் உண்டு. அவையாவன — உடல், அறிவு, உள்ளம். ஓட்டமும் ஆட்டமும் உடலை உறுதிப் படுத்துகின்றன. அறிவியல் அறிவைக் கூர் மையாக்குகின்றது. கலை உள்ளத்தைப் பண் படுத்துகின்றது. கலைகளை அறுபத்துநான்கு என நம் முன்னோர் வகுத்தனர். ஆடல், பாடல், அழகு, சிற்பம், ஓவியம் ஆகியவை கவின்கலைகள் எனப்படும். அவற்றை நுண் கலைகள் என்றும் சொல்லலாம். இலக்கியம் பொதுக்கலை என்று கருதப்படுகின்றது. கவிதை, காப்பியம், சிறுகதை, நெடுங்கதை, கட்டுரை, உரை, நாடகம் முதலியவை இலக் கியத்தின் பிரிவுகளாகும். இவற்றுள் கவிதைக் கலையை மட்டும் ஈண்டு ஆராய்வோம்.

## கவிதைத் தெய்வம்

"மூவேந்தர் தாலாட்ட முச்சங்கத்
தேகிடந்து
பாவேந்தர் செந்நாவில் நடைபழகி
மொழிபயின்று
மங்குலுறை வேங்கடமும்
வான்குமரிப் பேராறும்
தங்குமிடைத் தமிழுலகம் அரசுபுரி
தமிழ்த்தாயே."

(நவாலியூர் க. சோமசுந்தரப் புலவர்)

நம் தாய்மொழியாகிய தமிழை அன்னை யாக மனத்தில் மதித்து மகிழ்ச்சியோடு நாம் போற்றுகின்றோம். மக்களுக்குப் பயன்தந்து வாழ்வளிக்கும் எல்லாவற்றையும் பெண்ணாக வும் தாயாகவும் உருவகித்து, அவற்றைத் தூய உணர்வோடு மதித்தும் போற்றியும் வருவது நம் பண்பாகும்.

"மங்கை யராகப் பிறப்ப தற்கே—நல்ல
மாதவம் செய்திட வேண்டும் அம்மா
பங்கயக் கைந்நலம் பார்த்தலவோ—இந்தப்
பாரில் அறங்கள் வளரும் அம்மா"

என்று பெண்ணின் பெருமையை அருமை யாகப் பாடுகின்றார் தேசிக விநாயகம் பிள்ளை.

நிலத்தை நிலமடந்தை, பூமாதேவி, புவிமாது என்னும் பெயர்களால் அழைக்கின் றோம். கல்விக்கடவுளை நாமகள், நாமடந்தை நாமாது, வாணி, கலைவாணி, கலைமடந்தை, கலைமகள், சரசுவதி என்னும் அருமையான பெயர்களால் அழைக்கின்றோம். செல்வக் கடவுளை இலக்குமி, பூமகள், பூமாது, திருமகள், திருமடந்தை, தாமரையாள், தாமரைச்செல்வி போன்ற இனிய பெயர் களால் குறிப்பிடுகின்றோம். வீரக்கடவுளைக் கொற்றவை, துர்க்கை, காளி முதலிய பெயர்களால் குறிப்பிடுகின்றோம். கங்காதேவி என்ற சொல் ஆற்றைத் தாயாக மதிக்கின்ற மனப்பான்மையைக் காட்டுகின்றது.

இளங்கோவடிகள் காவிரியாற்றைத் தாயாக உருவகித்து அன்புடன் பாடுவதைச் சிலப்பதிகாரத்தில் தெளிவாகக்காணலாம். தொட்டிலை ஆட்டும் கை தொல்லுலகத்தை ஆளக் கூடிய தன்மையும் ஆற்றலும் வாய்ந்தது. இறைவனையும் மக்களையும் குறிப்பிடும் பெயர்களில் பெண்மைக்கும் தாய்மைக்கும் முதலிடம் கொடுத்திருப்பதை நாம் அறியலாம். சீதா இராமன், சானகி இராமன், இலக்குமி நாராயணன், உமை ஒருபாகன், மீனாட்சி சுந்தரன், கௌரிசங்கரன், வள்ளிமணாளன், இராதா மணாளன், இராதா கிருட்டினன், அம்பிகைபாகன், அம்மை அப்பன் ஆகிய பெயர்களின் முதற்பகுதி பெண்ணின் பெயராக இருப்பது நமக்குத் தெளிவாகின்றது. செல்வம் படைத்த நற்செல்வி ''பாக்கியம்'' என்றும், பாக்கியவதி என்றும், பாக்கிய லட்சுமி என்றும், சௌபாக்கியவதி என்றும், தனஇலக்குமி என்றும் அழைக்கப்படுகிறாள். அன்னதானம் புரியும் அறச்செல்வியை அன்னபூரணி என்னும் அழகான பெயரால் அழைக்கின்றோம்.

''அன்னையும் பிதாவும் முன்னறி
தெய்வம்''
''மாதா பிதா குரு தெய்வம்''

ஆகிய முதுமொழிகள் தாய்மையின் முதன்மையையும் பெருமையையும் நன்றாகப் புலப்படுத்துகின்றன. அன்பிற் சிறந்தது தாயன்பு, பாசத்தில் உயர்ந்தது தாய்ப்பாசம். நமக்கு உரிய நாட்டைத் தாய்நாடு என்றும் தாயகம் என்றும் சொல்கின்றோம். நம் மொழியைத் தாய் மொழி என இனிது அழைக்கின்றோம். நம் தாய்மொழியின் இனிமையையும் ஏற்றத்தையும் இனிது இயம்பும் பாட்டுக்கள் பல. அவற்றுள் இதோ ஒன்று.

வானார்ந்த பொதியின்மிசை வளர்கின்ற
மதியே
மன்னிய மூவேந்தர்கள்தம்
மடிவளர்ந்த மகளே
தேனார்ந்த தீஞ்சுனைசால் திருமாலின் குன்றம்
தென்குமரி ஆயிடைநற்
செங்கோல்கொள் செல்வி
கானார்ந்த தேனே கற்கண்டே நற்கனியே
கண்ணே கண்மணியே அக்
கட்புலஞ்சேர் தேவி
ஆனாத நூற்கடலை அளித்தருளும் அமிழ்தே
அம்மேநின் சீர்முழுதும்
அறைதல்யார்க் கெளிதே ?

(கரந்தைக் கவியரசு
வேங்கடாசலம் பிள்ளை)

திருமணத்தைக் குறிப்பிடும் போதும் பெண்ணுக்கு ஏற்றம் அளிப்பது நம் மரபு. வள்ளித்திருமணம், சீதாகல்யாணம், கௌரி கல்யாணம் என்று குறிப்பிடுகிறோமே தவிர, முருகன் திருமணம், இராமன் கல்யாணம், சங்கரன்கல்யாணம் என்று குறிப்பிடுவதில்லை. அதுபோலவே, மீனாட்சி திருமணம், உருக்குமணி கல்யாணம், இலட்சுமி கல்யாணம் என்று குறித்தல் மரபு. சுருங்கக் கூறுமிடத்துப் பெண்ணின் பெருமையையும் தாயின் மாண்பையும் தமிழ்ப் பண்பாடு இனிது விளக்குகின்றது. ''சக்தி இருந்தால் செய். இல்லாவிட்டால் சிவனே என்று இரு'' என்னும் பழமொழி தாய்மையின் சிறப்புக்கு முத்தாய்ப்பு வைத்தது போல் இருக்கின்றது.

தமிழைத் தாய் எனப் போற்றிய நம் புலவர் பெருமக்கள், அவர்கள் இயற்றிய நூல்களைத் தமிழ்த்தாய்க்கு அணிகலன்களாகப்பூட்டி மகிழ்ந்தனர். பொன்மாலையும் பூமாலையும் அழியும், பாமாலை அழியாது. பொன்மாலைக்கும் பூமாலைக்கும் விலையுண்டு. பாமாலைக்கு விலையில்லை. பாமாலையின் அழியாத் தன்மையை ஔவையார் தம் பாடலில் தெளிவு படுத்தியுள்ளார். இதோ அப்பாடல்

நூற்றுப்பத்தாயிரம் பொன்பெறினும்
நூற்சீலை
நாற்றிங்கள் நாளுக்குள் நைந்துவிடும்
— மாற்றலரைப்
பொன்றப் பொருதடக்கைப்
போர்வேல் அகளங்கா
என்றுங் கிழியாதென் பாட்டு.

பாமாலையின் சிறப்பைச் செம்மையாகஅறிந்த தமிழ்ச் சான்றோர் பொன்மாலைக்கும்

பூமாலைக்கும் மாறாக, என்றும் அழியாப் பாமாலையைத் தமிழ்த்தாய்க்கு அணிவித்துத் தாய்மொழியை வளப்படுத்தினர்.

தமிழின் மிகப்பழைய நூலான தொல் காப்பியம் தமிழ்த் தாயின் பொன்முடியாகத் திகழ்ந்து அழகு புரிகின்றது. அவள் செங் கையில் சீரிய செங்கோலாகத் திருக்குறள் விளங்குகின்றது. கழுத்தை அணி செய் கின்றது சீவக சிந்தாமணி, காதில் அமைந்து ஒளி வீசுகின்றது குண்டலகேசி, கையில் ஒளியுடன் விளங்குகின்றது வளையாபதி, இடையில் ஒளிர்கின்றது மணிமேகலை, காலில் ஒலிக்கின்றது சிலம்பு. இவ்வாறாகத் தமிழ்த் தாய் இலக்கிய நலம் திகழச் சீருடனும் சிறப் புடனும் செம்மையாகக் காட்சியளித்து, நமக்கு இனிமையையும் பெருமையையும் உண்டாக்கியவண்ணம் இருக்கின்றாள்.

கவிதை எனுமோர் பெண்தெய்வம்
— அவள்
கவிஞர் பரவும் அருந்தெய்வம்
புவியை இயக்கும் புகழ்த்தெய்வம்
— அவள்
புலவர் தமக்குக் குலதெய்வம்
கையில் வளைகள் ஆடிடுமே — அவள்
காலிற் சிலம்பும் பாடிடுமே
மெய்யில் மின்னல் வீசிடுமே — அந்த
மேனி கவிதை பேசிடுமே.

(மீ. ப. சோமசுந்தரம்)

## கவிதையும் பெயரும்

சிற்பி படைப்பது சிற்பம். ஓவியன் படைப்பது ஓவியம். அதுபோல் கவி அல்லது கவிஞனின் படைப்பு கவிதை என்ற பெயர் பெறுகின்றது. கவிதை என்னுஞ் சொல் கவின் என்னும் அடிச்சொல்லிலிருந்து தோன்றியிருக்கலாம். கவின் என்னுஞ் சொல்லுக்கு அழகு என்று பொருள். அழகு பட அமைந்து இருப்பது கவிதை. அழகு படப் பாடுபவனே கவிஞன். குயில் இனிமை யாகக் கூவுவதைப் போல, உணர்ச்சியுடன் பொருள்படக் கூவுவதே (பாடுவதே) கவிதை. அழகுடனும் கற்றோர் வியக்கும் வண்ணமும் அமைந்திருப்பதே கவிதை. ஓவியத்தில் வண்ணம் தீட்டப்பட்டிருப் பதைப் போலச் சீரிய கூரிய தீஞ்சொல்லால் வண்ணம் தீட்டப்பட்டிருப்பதே கவிதை. தமிழ்மொழியில் கவிதையைக்குறிப்பிடப் பல பெயர்கள் உள்ளன. செய்யுள், யாப்பு, பா, பாட்டு, பாடல், தூக்கு, தொடர்பு, உரை, நூல், வாய்மொழி, அங்கதம், பிசி, முது சொல், கவி, பனுவல், நூற்பா, சூத்திரம், முதலிய சொற்கள் இவண் நோக்கத்தக்கன. இவையனைத்தும் நுண்பொருளில் வேறுபட் டாலும், பொதுப் பொருளில் ஒத்திருக் கின்றன. செய் என்னும் வேர்ச் சொல்லி லிருந்து பிறந்தது செய்யுள். செய்யப்படுவது செய்யுள். செய் என்னும் சொல் வயலையும் குறிக்கும். கவிதையைக் கழனியாகவும் உழவாகவும் குறிப்பிடுவது இலக்கிய மரபு. திருவள்ளுவர் புலவரைச் சொல்லேர் உழவர் என்று குறிப்பிடுகின்றார்.

வில்லேர் உழவர் பகைகொளினும்
கொள்ளற்க
சொல்லேர் உழவர் பகை.

(குறள் 872)

(செய் — வயல், உள் — உள்ளே விளைவது)

வயலுக்குள் பயிர் விளைவதைப் போல் கவி தையாகிய வயலுக்குள் கருத்தாகிய பயிர் வளர்கின்றது.

"இன்சொல் விளைநிலமா ஈதலே
வித்தாக
வன்சொற் களைகட்டு வாய்மை
எருவட்டி
அன்புநீர் பாய்ச்சி அறக்கதிர்
ஈன்றதோர்
பைங்கூழ் சிறுகாலைச் செய்"

என்னும் பாடலில் இன்சொல்லை விளைநிலமாக உருவகித்திருப்பதைக் காணலாம். தோல், இரத்தம், தசை, கொழுப்பு, எலும்பு, மூளை, சுக்கிலம் முதலிய ஏழு தாதுக்களால் ஆக்கப் பட்டிருப்பதால் உடம்புக்கு யாக்கை என்று

பெயர். அதுபோல எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை, பாஓசை முதலிய ஏழு உறுப்புக்களால் ஆக்கப்படுவது யாப்பு.

"பல்வகைத் தாதுவின் உயிர்க்குடல் போற்பல
சொல்லாற் பொருட்கிட னாக உணர்வினின்
வல்லோர் அணிபெறச் செய்வது செய்யுள்"
(நன்னூல்)

கவிதை இன்னிசையுடன் அமைந்திருப்பதால் பா (rhythm) என்னும் பெயர் பெற்றது. பாவென்பது சேட்புலத்திருந்த காலத்தும் "ஒருவன் எழுத்துஞ் சொல்லும் தெரியாமல் பாடம் ஓதுங்கால், அவன் சொல்லுகின்ற செய்யுளை விகற்பித்து இன்ன செய்யுளென்று உணர்தற்கேதுவாகிப் பரந்து பட்டுச் செல்வதோர் ஓசை" என்று தொல்காப்பிய உரையாசிரியராகிய பேராசிரியர் தெளிவாக விளக்குகின்றார். கவிதை பண்ணுடன் பாடுவதற்கு ஏற்றமுறையில் அமைந்திருப்பதால் அது பாட்டு என்றும், பாடல் என்றும் குறிக்கப்படுகின்றது.

"பாட்டினைப் போல் ஆச்சரியம்
பாரின்மிசை இல்லை யடா"

என்று பாட்டின் பெருமையைப் பாடிக் காட்டினார் பாரதியார். தூக்கு என்பது துணித்தல், நிறுத்தல், பாடுதல் முதலிய பொருளைக் குறிக்கும். தூக்குதல் என்பதற்குத் தராசில் எடை போடுதல் என்று பொருள். தராசில் பண்டத்தை வைத்துக் கணக்காக அளவிடுவதைப் போல் எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை, பா, கருத்து ஆகியவற்றைக் கணக்காக அளந்து அளவோடு பயன்படுத்துவதால் கவிதைக்குத் தூக்கு என்னும் பெயரும் ஏற்பட்டது. கவிதையில் எழுத்து முதலிய உறுப்புக்கள் யாவும் ஒன்றுடன் ஒன்று தொடர்புடன் இருப்பதாலும் ஒரு கவிதைக்கும் அதை அடுத்த கவிதைக்கும் சொல் தொடர்போ பொருள் தொடர்போ அல்லது இருவகைத் தொடர்போ இருப்பதாலும் கவிதையைத் தொடர்பு என்றும் குறிப்பதுண்டு. பதவுரை, பொழிப்புரை, கருத்துரை, தெளிவுரை, விளக்கவுரை, விரிவுரை, குறிப்புரை முதலிய அனைத்துவகை உரைக்கும் மூலகாரணமாக இருந்து இடமளிப்பதால், கவிதை உரை என்றும் வழங்கப்படுகின்றது. சொல்லைப் பஞ்சாகவும் செய்யுளை இழையாகவும் கொண்டு நூற்கும்போது நூலாக மாறுகின்றது. எனவே, நூல் உவமை ஆகுபெயராய் அமைந்து கவிதையை உணர்த்துகின்றது.

"பஞ்சிதன் சொல்லாப் பனுவல் இழையாகச்
செஞ்சொற் புலவனே சேயிழையா — எஞ்சாத
கையேவா யாகக் கதிரே மதியாக
மையிலா நுன்முடியு மாறு"
(நன்னூல்)

வாய்மொழி என்பது கவிதைக்குள்ள மற்றொரு பெயர். வாய்மை மொழி பண்புத்தொகையாக அமைந்து வாய்மொழி என்று விளங்குகின்றது. வாய்மை என்பது உண்மை. உள்ளத்திலிருந்து பிறப்பது உண்மை. எனவே உள்ளத்திலிருந்து எழுகின்ற உண்மையாகிய வாய்மொழி கவிதையாக மலர்கின்றது. சிற்சில கவிதைகட்கு அங்கதம் என்று பெயர். அங்கதம் என்பது வசைமொழியைக் குறிக்கும். ஒரு பொருளை வெளிப்படையாகச் சொல்லாமல் குறிப்பில் தோன்றுமாறு கவிதை இயற்றுவதால் கவிதை பிசி என்று பெயர்பெற்றது. இக்காலத்தில் பிசி என்பது பிதிர், புதிர், விடுகதை என்றெல்லாம் வழங்கப்படுகின்றது. முதுசொல் என்பதும் கவிதையைக் குறிப்பிடும். முது என்பதற்குப் பேரறிவு என்று பொருள். பேரறிஞரால் இயற்றப்பட்டு ஆழ்ந்தகன்ற கருத்தைத் தர வல்லதே கவிதை என்பது நன்கு விளங்கும். கவிஞனையும் கவிதையையும் குறிக்கும் பொதுச்சொல்லாகக் கவி விளங்குகின்றது. பன்னல் பன்னுதல் ஆகிய சொற்கள் ஆராய்ச்சியைக் குறிக்கும். இவற்றை அடியொற்றி எழுந்

ததே பனுவல். ஆராய்ச்சியுணர்ச்சியுடன் ஆராய்ச்சிக்கருத்தை வெளியிடுவதே பனுவல். கவிதைக்குப் பனுவல் என்றும் பெயர். பாவால் அமைந்த நூல் நூற்பா—நூல்—பா எனப்படும். இதைச் சூத்திரம் என்றும் சொல்வதுண்டு. மிகப்பெரிய பொருளையும் தன்னுள் அடக்கித் தெளிவாகக் காட்டுகின்ற கண்ணாடிபோல் சில சொற்களில் பல்வேறு பொருளை அடக்கிக் கருத்துச் செறிவுடனும் ஆழத்துடனும் விளங்கித் தெளிவாக விளக்கு வதே நூற்பா. நூற்பாவின் இலக்கணத் தைப் பவணந்தி முனிவர் பின்வருமாறு இனிது விளக்குகின்றார்.

"சில்வகை எழுத்திற் பல்வகைப் பொருளைச்
செவ்வன் ஆடியிற் செறித்தினிது விளக்கித்
திட்ப நுட்பம் சிறந்தன சூத்திரம்"

கவிதைக்குத் தமிழ்மொழியில் பல பெயர்கள் உண்டு என்பதைக் கண்டோம். இச்சொற் கள் யாவும் தமிழ்மொழியின் வளப்பத்தை நன்கு விளக்குவதுடன் தமிழ் மக்களின் கவிதைப் பண்பையும் கவிதையுணர்ச்சியை யும் இனிது இயம்புகின்றன.

## கவிதைக் குடும்பம்.

கவிதையைப் பெண்ணாக உருவகிப்ப தும் கற்பனை செய்வதும் நம் மரபு என்பது எல்லாரும் அறிந்த உண்மை. ஒரு குடும்பத் தில் தந்தை, தாய், சகோதரன், கணவன் ஆகியோர் இருப்பதைப் போலக் கவிதைக் கும் குடும்பம் உறவு முதலியன உண்டு. இவ்வுண்மையைப் பலபட்டடைச் சொக்க நாதப் புலவர் தெளிவு படுத்துகின்றார். கவிதைப் பெண்ணுக்குக் கவிஞனே தந்தை, அக்கவிதையைக் கற்றவள் தாய், கற்றவன் கவிதையைச் சொல்ல அதனைக் காதாரக் கேட்டுப் பொருள் உணர்பவன் சகோதரன், செந்தமிழுக்கு ஆக்கம் அளித்துக் கவிதை யின் அருமை பெருமையினை அறிபவன் கணவன். அவன் இல்லாவிட்டால் கவிதை யாகிய பூங்கொடிக்கு வேறு என்ன வலிமை இருக்கின்றது? கவிதைக் குடும்பத்தைப் பற்றிய இக்கருத்தைப் பலபட்டடைச் சொக்கநாதப்புலவர் தம் கவிதையில் வைத்து இனிது பாடுகின்றார். இதோ அவர் பாடல்.

"கவியாகும் மாதினைப் பெற்றோன் புலவன்கற் றோன்அனையாம்
செவியாரக் கேட்டங்கு உணர்வான் சகோதரன் செந்தமிழ்க்குத்
தவியா அருமை அறிவான் பதிஅவன் தான்இலையேல்
புவியாகும் மண்ணுக்குள் என்பல மாம்அந்தப் பூங்கொடிக்கே"

கவிதையின் தோற்றம் வளர்ச்சி வாழ்வு ஆகியவற்றைச் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் கவிஞர்திறன் பாராட்டுதற்குரியது.

## கவிதையும் கலையும்.

தெருவில் பிச்சைக்காரன் ஒருவன் பசி யால் வாடுகின்றான். அத்துயரக் காட்சியை ஓவியன், சிற்பி, நடிகன், கவிஞன் ஆகிய நால்வரும் காண்கின்றார்கள். அக்காட்சி அந்த நால்வர் உள்ளத்தையும் உருக்கு கின்றது. நெகிழச் செய்கின்றது, அவர்கள் உள்ளத்தில் ஆழமாகப் பதிகின்றது. ஓவியன் அக்காட்சியைத் தன் கலையுணர்வு தோன்ற ஓவியமாக வரைகின்றான். சிற்பி தான் கண்ட பிச்சைக்காரனைச் சிற்பமாக வடித்தெடுக் கின்றான், நடிகன் அப்பிச்சைக்காரனைப்போல் நடித்துக் காட்டிக் காண்போர் உள்ளத்தை உருகுமாறு செய்கிறான். கவிஞன் அக்காட்சி யை ஓர் கவிதையாக — சொல்லோவியமாக — ஆக்கி நூல் படித்தவர்க்கு விருந்து வைக் கின்றான். ஓவியன், சிற்பி, நடிகன், கவிஞன் ஆகிய நால்வரும் கலைஞர்களே. அவர்களின் படைப்புக்கள் உண்மையான கலைகளே. ஓவியம், சிற்பம், நடிப்பு ஆகியவற்றில் கலை நுட்பமும் அழகும் அமைந்திருத்தல் போலவே கவிதையிலும் அவை அமைந் திருக்கின்றன. எனவே. பொருளாதாரம், வரலாறு, மெய்ப்பொருளியல் ஆகிய பொதுக்

கலைகளுக்கு நிகராகக் கவிதையைக் கருது வதை விட ஓவியம், சிற்பம், நடிப்பு முதலிய நுண்கலைகளுக்குச் சமமாக வைத்து மதிப் பதே சாலப் பொருந்தும். ஏனைய நுண்கலை கள் கண்ணுக்கு விருந்தாக அமைகின்றன. ஆனால் கவிதைக்கலை செவி வழியாக நுழைந்து உள்ளத்திற்கும் கருத்திற்கும் விருந்தளிக்கின்றது. கவிதைக் கலை தரும் கலையின்பத்தை நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை பாடுகின்றார்

'' கலையென்றால் உணர்ச்சிகளைக் கவர
வேண்டும்
களிப்பூட்டி அறிவினைப் போய்க்கவ்வ
வேண்டும்
நிலைகொள்ளாச் சிந்தனையை நிற்கச் செய்து
நீதிநெறி தெய்வநினைப் பூட்டற் கன்றோ
விலையில்லாப் பெருமைபல உடைய தேனும்
விளங்காத பாஷையிலே பாட்டைக்
கேட்டுத்
தலையெல்லாம் சுளுக்கேற அசைத்திட்
டாலும்
தனக்கதுவோர் கலையின்பம்
தருவதுண்டோ''

கவிதைக் கலை உள்ளத்தைப் பண்படுத்தி உணர்ச்சியைத் தூய்மையாக்க வல்ல உயர் கலையாகும்.

## கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும்.

கவிதையே மனிதன் பழங்கால இலக் கியம். பாமர மக்களுக்குரிய நாடோடிப் பாடல்களே கவிதைக்கு வித்து என்று சொல்லலாம். பல்வேறு சுவைகள் அடங்கிய உணர்ச்சிக்குரலே கவிதையாகத்தோன்றிற்று. பாமர மக்கள் பாட்டே பலகாலம் பயின்று பயின்று பண்பட்டுப் பண்பட்டு மெருகு ஏறி உயர்ந்த கவிதையாக வளர்ந்தது எனலாம். மனிதனுக்கும் கவிதைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. குழந்தை பிறக்கின்றது, கவிதையும் கூடவே பிறக்கின்றது. குழந்தை வளர்கின்றது, கூடவே கவிதையும் வளர் கின்றது. இறைவனையும் உயர்ந்தோரையும் குழந்தையாக மதித்துக் காப்பு, செங்கிரை, தால், சப்பாணி, முத்தம். வருகை, அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறுதேர் என்னும் பத்துப் பருவங்களையும் அமைத்துப் பாடுதல் ஆண் பாற் பிள்ளைத் தமிழ். முதல் ஏழு பருவங் களுடன் கழங்கு அம்மானை ஊசல் மூன்றை யும் சேர்த்துப் பத்துப் பருவங்களால் சிறப் பித்துப் பாடுதல் பெண்பாற் பிள்ளைத்தமிழ். இவ்வாறு பாடுதல் கவிஞர் மரபு. மனித வளர்ச்சியின் ஒவ்வொரு பருவத்துடனும் கவிதையும் ஒருங்கே வளர்ந்து வருவதைப் பிள்ளைத் தமிழ் மிகத்தெளிவாக உணர்த்து கின்றது. பாட்டாளிமக்கள் ஏர் உழும் போதும் நாற்று நடும்போதும் ஏற்றத்தி விருந்து நீர் இறைக்கும்போதும் பாடிக் கொண்டே உழைப்பதை நாம் இன்றும் காணலாம். ஏற்றப்பாட்டுக்கு எதிர்ப்பாட் டில்லை என்பது தமிழ்ப் பழமொழி. மூங்கில் இலைமேலே தூங்கும் பனிநீரே என்னும் ஏற்றப்பாட்டு ஈங்கு நினைவு கூறத்தக்கது. தினைப்புனத்தில் மகளிர் பரண் மீது அமர்ந்து கொண்டு கிளி முதலிய பறவைகளைப் பாட் டுப் பாடிக்கொண்டே ஓட்டுவர். அப்பாட்டு ஆலோலம் எனப்படும். மகளிர் நீராடும் போதும் பந்து விளையாடும்போதும் பாடிக் கொண்டே ஆடுதல் இயல்பு. பந்தாட்டத் தின்போது பாடப்படுகின்ற பாட்டு கந்துக வரி எனப்படும். மகளிர் பாடிக்கொண்டே பந்தாடுகின்ற அழகான காட்சியொன்றைப் பாருங்கள்.

'' பொன்னிலங்கு பூங்கொடி
பொலஞ்செய்கோதை வில்லிட
மின்னிலங்கு மேகலைகள் ஆர்ப்ப
ஆர்ப்ப எங்கணும்
தென்னன் வாழ்க வாழ்க என்று
சென்றுபந்தடித்துமே
தேவரார மார்பன்வாழ்க என்றுபந்
தடித்துமே ''

(சிலப்பதிகாரம்)

பாட்டிற்கு ஏற்றமுறையில் பந்தாட்டமும் பந்தாட்டத்திற்கு ஏற்றமுறையில் பாட்டு

அமைந்து பாட்டொலியும் பந்தொலியும் கலந்து கற்போர்க்குச் செவிவிருந்து அளித்த வண்ணமிருக்கின்றன. மகளிர் நெல் குற்றும் போதும் பாடுவதுண்டு. அப்பாட்டுக்கு வள்ளை என்று பெயர். மகளிர் நெல் முதலிய தானியங்களை உரலில் இட்டு வள்ளைப் பாட்டைப் பாடிக்கொண்டே குற்றுகிறார்கள். தாலாட்டுப் பாட்டைக் கேட்டுக்கொண்டே குழந்தைகள் கண்ணுறங்குவதைப் போல, வள்ளைப் பாட்டைக் கேட்டுக்கொண்டே வீட்டிலுள்ள பறவைகள் உறங்கிவிடுகின்றன என்று திருவள்ளுவ வெண்பாமாலை பாடுகின்றது. காதல் உணர்ச்சியிலும் பாட்டு பிறக்கின்றது. வீர உணர்ச்சியிலும் பாட்டு எழுகின்றது. திருமணத்தின்போது பாடப்படுவது நலங்கு. மனிதன் இன்பத்திலும் பாடுகிறான். துன்பத்திலும் பாடுகிறான். புகழும் போதும் பாடுகின்றான். இகழும் போதும் பாடுகின்றான். ஆண்டவன் பாலுள்ள பக்தியால் பாடும்போது அப்பாடல் தெய்வீக மணமும் பக்திச்சுவையும் கலந்து விளங்குவதைக் காண்கின்றோம். அத்தகைய ஆன்மீகக் கவிதை கல்நெஞ்சத்தையும் கனிநெஞ்சமாக உருக்கிவிட வல்லது.

“ சிந்தனை உனக்குத் தந்தேன்
திருவருள் எனக்குத் தந்தாய்
வந்தனை உனக்குத் தந்தேன்
மலரடி எனக்குத் தந்தாய்
பைந்துணர் உனக்குத் தந்தேன்
பரகதி எனக்குத் தந்தாய்
கந்தனைப் பயந்த நாதா கருவையில்
இருக்கும் தேவே ”

... அதிவீரராம பாண்டியர்,

இத்தகைய தெய்வீகக் கவிதைகள் மனிதனுக்கும் இறைவனுக்குமுள்ள ஆன்மீக உறவை வலுப்படுத்தவல்லன.

மனிதன் கவிதையுடன் பிறக்கின்றான். கவிதைக்கிடையே — கவிதை பாடியே வாழ்கின்றான். கவிதைக்கிடையே மறைகின்றான். சுருங்கக் கூறுமிடத்து மனித வாழ்க்கை தாலாட்டில் தொடங்கி படிப்படியாக வளர்ந்து ஒப்பாரியில் முடிகின்றது. கவிதை வாழ்வில் மலர்கின்றது. வாழ்வுக்கு உரியது. வாழ்வுக்காகவே நிலைபெற்றிருக்கின்றது என்று மேனாட்டு அறிஞர் அட்சன் கூறுவது ஈண்டு நோக்கத்தக்கது. [1]

**கவிஞர் வகை.**

கவிஞர்களைப் பொதுவாக ஐந்து வகையாகப் பிரிக்கலாம். கொடுக்கப்பட்ட குறிப்பை வைத்துக்கொண்டு கவிதைக்குரிய அழகுடன் இம்மென்றால் எண்ணூறும் அம்மென்றால் ஆயிரமுமாக விரைந்து பாடுகின்றவன் ஆசுகவி.

“ மூச்சு விடுமுன்னே முந்நூறும்
நானூறும்
ஆச்சென்றால் ஐந்நூறும் ஆகாதோ
— பேச்சென்ன
வெள்ளைக் கவிக்காள மேகமே
உன்னுடைய
கள்ளக் கவிக்கடையைக் கட்டு ”

என்னும் புலவர் அதிமதுரகவி பாடலும்,

“ இம்மென்னு முன்னே எழுநூறும்
எண்ணூறும்
அம்மென்றால் ஆயிரம்பாட் டாகாதோ
— சும்மா
இருந்தால் இருப்பேன் எழுந்தேனே
யாயிற்
பெருங்காள மேகம்பிள் ளாய் ”

என்னும் காளமேகப் புலவர் பாடலும் ஆசுகவியின் கவிபாடும் விரைவைத் தெளிவாகப் புலப்படுத்துகின்றன. இனிய ஓசையும் கவிதையழகும் அமைய மதுரமாக (இனிமையாக)ப் பாடுபவன் மதுரகவி.

1. Poetry is made out of life, belongs to life, exists for life – Hudson, an introduction to the study of literature.

மாலைமாற்று, சக்கரம், சுழிகுளம், ஏகபாதம், எழுகூற்றிருக்கை, காதைகரப்பு, கரந்துறை பாட்டு முதலிய நுட்பங்களை அறிந்து பாடுகின்றவனுக்குச் சித்திரகவி என்று பெயர். பொருளை மிகவும் விரிவாக்கி விளக்கமாகப் பாடுபவன் வித்தார கவி. கேட்போரும் படிப்போரும் சிரிக்கச் சிரிக்கப் பாடுகின்றவன் விகடகவி. காளமேகப் புலவர் ஆசுகவியாகவும் விகடகவியாகவும் திகழ்ந்தவர். விகடராமன் குதிரையின் வேகத்தைக் காளமேகப் புலவர் நகைச்சுவை தோன்றப் பாடியுள்ள கவிதை நவில்தொறும் நகை பயக்கவல்லது. குதிரையின் ஓட்டத்தைப் பாருங்கள்.

" முன்னே கடிவாளம் மூன்றுபேர்
போட்டிழுக்கப்
பின்னே இருந்திரண்டு பேர்தள்ள
— எந்நேரம்
வேதம்போம் வாயான் விகடரா
மன்குதிரை
மாதம்போம் காதவழி "

கவிஞன் பிறக்கின்றான். ஆக்கப்படுவதில்லை என்பது மேல்நாட்டார் கருத்து [2].

## கவிஞனும் புலவனும்.

கவிஞன், புலவன் ஆகிய இரு சொற்களும் ஒரே பொருளில் வழங்கப்படுவதைக் காண்கின்றோம். அது தவறு. கவி என்னும் அடிச்சொல்லினின்று பிறந்தது கவிஞன் எனும் சொல். புலமை என்னும் சொல்லின் அடியாகப் பிறந்தது புலவன் என்னும் சொல். கவி இயற்றுபவன் கவிஞன் (Poet). புலமை உடையவன் புலவன் (Scholar). கவிஞன் வேறு, புலவன் வேறு. கவிஞன் புலவனாகவும் புலவன் கவிஞனாகவும் இருக்கலாம். ஆனால், அவ்வாறு இருத்தல் வேண்டும் என்று நியதியில்லை. கவி பாடுபவன் கவிஞன். அவனியற்றிய பாடல்களை நுண்மாண் நுழைபுலத்துடன் கற்று ஆராய்ந்து தெளிபவனே புலவன். கவிஞனுக்குக் கவிதையுணர்ச்சி மேலோங்கி நிற்கும். புலவனுக்கு அறிவு கூர்மையாகப் பணிபுரியும். கவிஞனது உள்ளத்திலிருந்து தோன்றிய கவிதைகளைப் புலவன் தன் உள்ளத்தால் உணர்வதுடன் தன் அறிவின் துணைக்கொண்டு ஆராய்ந்து பார்க்கின்றான்.

## கவிஞனும், வறுமையும்.

கவிஞனுக்கும் வறுமைக்கும் உள்ள உறவு பிரிக்கமுடியாத உறவாக அமைந்து விட்டது. சங்கக் காலக் கவிஞர் பெருஞ்சித்திரனார் முதல் இருபதாம் நூற்றாண்டுக் கவிஞர். ஈறாகவுள்ள தமிழ்க் கவிஞர்கள் அனைவருடைய பொருளாதார நிலையையும் ஆராய்ந்தால் இவ்வுண்மை நன்கு புலப்படும். ஒவ்வொரு கவிஞரும் புரவலரின் ஆதரவின் கீழ் வாழ்ந்தனர் என்பதைத் தமிழ் இலக்கிய வரலாறு உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளக்குகின்றது. (இவற்றிற்கு விதி விலக்காகச் சிலர் விளங்கினார்கள்). சத்திமுற்றப் புலவர் கூடல் நகரில் உறைந்த போது வாடைக்காற்றால் அவர் மெலிந்து, போதிய ஆடையின்றிக் கையினால் மெய்யைப் பொத்திக்கொண்டு துன்புற்ற நிலையில் அவர் பாடிய உருக்கமான பாடல் வறுமையின் கொடுமையையும் துயரத்தின் எல்லையையும் சொல்லோவியமாக விளக்கும் நாரை விடு தூதாகக் காட்சியளிக்கின்றது. இராமச்சந்திர கவிராயர் வறுமையின் கொடுமையை விளக்கும் பாடலில் தம் வாழ்க்கையில் பட்ட துன்பத்தையே எடுத்துக் கூறுகின்றார் என்று கருதலாம். துன்பங்கள் தனியாக வருவதில்லை. அவை கூட்டம் கூட்டமாக வருகின்றன என்பது சேக்ஸ்பியர் கருத்து. பட்ட காலிலே படும் கெட்ட குடியே கெடும், என்பது தமிழ்ப் பழமொழி. இராமச்சந்திர கவிராயர் வாழ்க்கை இத்தகைய வறுமைக்

2. A poet is born not made.

குட்பட்டிருக்க வேண்டும் என்பதைக் கீழ்க் காணும் பாடலால் அறியலாம்.

ஆவின மழைபொழிய இல்லம் விழ
அகத்தடியார் மெய்ந்நோவ அடிமை சாவ
மாவீரம் போகு தென்றுவிதை கொண்டோட
வழியிலே கடன்காரர் மறித்துக் கொள்ளச்
சாவோலை கொண்டொருவன் எதிரே செல்லத்
தள்ளவொண்ணு விருந்துவரச் சர்ப்பம் தீண்டக்
கோவேந்தன் உழுதுண்ட கடமை கேட்கக்
குருக்களோ தட்சணைகள் கொடுவென் றூரே.

தமிழ் மொழியிலுள்ள எண்ணற்ற கவிதை கள் வறுமையைப் பிறப்பிடமாகக்கொண்டவை என்பது தெளிவு.

## கவிதை வகை.

பயனிலையை அடிப்படையாகக் கொண்டு கவிதையை முத்தகம், குளகம் என இருவகையாகப் பிரிக்கலாம். ஒவ்வொரு செய்யுளும் ஒவ்வொரு பயனிலையைக் கொண்டு முடிந்தால் அதற்கு முத்தகம் என்று பெயர். பல பாடல்கள் ஒரே பயனிலையைக் கொண்டு முடியும்போது குளகம் என்று பெயர்பெறும். நிலை அடிப் படையில் தனிநிலை, தொகை, தொடர்நிலை என்று கவிதையை மூன்று பெரும் பிரிவு களாகப் பிரிக்கலாம். தனித்தனியே அமைந்த பாடல்களைத் தனிநிலைச் செய்யுள் என்றும், தனித்தனிப் பாடல்களை ஏதேனும் ஓர் அடிப்படையில் தொகுத்து அமைத்தால் அவற்றைத் தொகை என்றும், ஏதேனும் ஒரு பொருள் குறித்துப் பல பாடல்கள் தொடர்ந்து வந்தால் தொடர் நிலை என்றும் குறிப்பது மரபு. தொடர்நிலைச் செய்யுளைப் பொருள் தொடர் நிலை, சொல் தொடர் நிலை என இருவகையாகப் பிரிக்கலாம். பொருள் அமைப்பில் தொடர்ந்து வருவது பொருட் டொடர்நிலைச் செய்யுள். சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவக சிந்தாமணி முதலிய காப்பியங்களும், இராமாயணம், பாரதம் ஆகிய இதிகாசங்களும் இவ்வகையைச் சேர்ந் தவை. சொல் அமைப்பில் தொடர்ந்துவரும் பாடல்களுக்குச் சொற்றொடர்நிலைச் செய்யுள் என்று பெயர். இவ்வகைப் பாடல்களில் முதல் பாட்டின் அந்தம் அடுத்த பாட்டில் ஆதியில் வருவதால், இவற்றிற்கு அந்தாதி என்று பெயர். பொருள் அடிப்படையில் அகம் (Subjective) புறம் (Objective) என்று கவிதைகளை இரு வகையாகப் பகுப்பது தமிழ் மரபு. அகப்பொருள் கவிதைகளை உரிப்பொருள் அல்லது நில அடிப்படையில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று ஐந்து வகையாகப் பாகுபாடு செய் வது தமிழுக்கு உரிய இலக்கியப் பண் பாகும். புறப்பாடல்களிலும் பல பிரிவுகள் உண்டு. அவற்றில் கொடை வீரம் ஆகிய இரண்டும் கருத்துக் கருவூலங்களாகத் திகழும். கலை கலைக்காகவே என்பதைப் போலக் கவிதை கவிதைக்காகவே என்னும் நோக்குடன் இயற்றப்படும் கவிதை தனிக் கவிதை (Pure literature poetry) எனப் படும். பிரச்சாரம் பயன் முதலிய நோக்கு டன் இயற்றப்படும் கவிதை சார்புக் கவிதை (Applied poetry) எனப்படும். கவிதைப் பாகுபாடு எல்லா மொழிகளிலும் ஒரே மாதிரியாக அமைவது இல்லை. கவிதைப் பாகுபாட்டில் தமிழ் ஆங்கிலம் ஆகிய இரண் டிற்கும் இடையே வேறுபாடு உண்டு. எடுத்துக்காட்டாகப் பதினுன்கு அடிகள் கொண்ட கவிதை (Sonnet) என்ற ஒரு தனிப்பிரிவு ஆங்கில மொழியிலுள்ள யாப்பில் உண்டு. ஆனால் அத்தகைய கவிதை வகை தமிழில் இல்லை. ஆங்கிலேயர் உணர்ச்சிக் கவிதை (lyric) காப்பியம் (epic) நீதிக் கவிதை (Didactic poetry) முல்லைக் கவிதை (Pastoral poetry) பக்திக் கவிதை (hymns) அங்கதக்கவி (satiric poetry) மெய்யறிவுக் கவிதை (reflective poetry) என்று கவிதை களைப் பாகுபாடு செய்வார். கவிதைப் பாகு

பாட்டைப் பொறுத்தவரை தமிழுக்கும் ஆங்கிலத்திற்கும் வேறுபாடு உண்டு என்ரு லும், இரு மொழிகளுக்குமிடையே ஒற்று மையுமுண்டு என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. குறள் அல்லது ஈரடிக் கவிதை (coup!et) நாலடிக் கவிதை அல்லது நாலடி வெண்பா (quatrain) அகவற்பா (blank verse) நெடும்பாட்டு (idyll) போன்ற யாப்புகள் பெரும்பாலும் தமிழுக்கும் ஆங்கிலத்திற்கும் பொதுவானவை. அவை போன்று, இரங்கற்பா அல்லது கையறம் (elegy) என்னும் கவிதை வகையும் இரு மொழிகளுக்கும் பொதுவானது. நாடோடிப் பாடல்கள் (ballad) தாலாட்டுப் பாடல்கள் (lullaby) போன்ற மக்கள் கவிதைகள் எல்லா மொழிகளிலும் உண்டு.

## யாப்பு அமைப்பு.

யாப்பு என்னுஞ் சொல் செய்யுளைக் குறிப்பதுடன் செய்யுள் இலக்கணத்தையும் குறிக்கும். தொல்காப்பியச் செய்யுளியலை யாப்பதிகாரம் என்று குறிப்பிடுவதுமுண்டு. அவிநயனுர், காக்கைபாடினியார், சிறுகாக்கை பாடினியார், கையனுர், நத்தத்தனுர், பல் காயனுர், பல்காப்பியனுர், மயேச்சுரனுர் முத லிய புலவர் பலர் தனித்தனியே யாப்பிலக் கணம் இயற்றினர். அவை இப்போது வழக்கில் இல்லை. அமிதசாகரரால் இயற்றப் பட்ட யாப்பருங்கலம் யாப்பருங்கலக் காரிகை என்னும் இருநூல்களே பிற்காலத்த வரால் யாப்பிலக்கணப் பயிற்சிக்குச் சிறந்த நூல்களாகக் கொள்ளப்பட்டன. இவ்விரண் டினுள்ளும் யாப்பருங்கலக்காரிகையே பெரு வழக்கிலிருக்கின்றது. காரிகை வழிநின்று யாப்பின் அமைப்பை ஈண்டுச்சற்று நோக்கு வோம். குறில், நெடில், உயிர். குற்றியலி கரம், குற்றியலுகரம், ஐகாரக்குறுக்கம், ஆய்தம், மெய், உயிர்மெய், வல்லினம், மெல்லினம், இடையினம், அளபெடை (உயிர் அளபெடை ஒற்றளபெடை) என்று எழுத்து பதின்மூன்று வகைப்படும். நேரசை, நிரையசை என்று அசை இருவகைப்படும். இயற்சீர், வெண்சீர், வஞ்சிச்சீர், அசைச்சீர், பொதுச்சீர் என்று சீருள் ஐந்துவகை உண்டு. தளை ஏழு வகைப்படும். அவை, நேரொன்ரு சிரியத்தளை, நிரையொன்ருசிரியத்தளை, இயற்சீர்வெண்டளை, வெண்சீர் வெண்டளை, ஒன்றிய வஞ்சித்தளை, ஒன்ருத வஞ்சித்தளை, கலித்தளை ஐவகை அடிகளாவன. குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி, அடிக்கு அடுத்து அமைந்திருப்பது தொடை. மோனைத்தொடை. இயைபுத்தொடை, எதுகைத்தொடை, முரண்தொடை, அளபெடைத்தொடை, அந்தாதித்தொடை, இரட்டைத்தொடை, செந்தொடை எனத் தொடை எட்டு வகைப்படும். இவற்றுள் முதல் ஐந்து தொடைகளுள் ஒவ்வொன்றி லும் எட்டு உட்பிரிவுகளுண்டு. பாட்டில் நான்கு பெரும் பிரிவுகள் உண்டு. அவை யாவன, வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா. எல்லாவகைப் பாக்களையும்விட வெண்பாப் பாடுவதே மிகக்கடினம். ஆசிரி யப்பா மிக எளிது. இதனைப் புலவர்க்கு வெண்பாப் புலி ஆசிரியப்பா அவசரப்பா என்ற பழமொழிகளால் அறியலாம். ஒவ் வொரு பாவிற்கும் ஒவ்வொரு ஓசை உண்டு. வெண்பாவிற்குரியது செப்பலோசை, ஆசிரி யப்பா அகவல் ஓசையில் வரும். தூங்க லோசை வஞ்சிப்பாவிற்குரியது. கலிப்பா வுக்கு உரியது துள்ளலோசை. இங்குக்குறித்த ஒவ்வொரு ஓசையிலும் மூன்று உட்பிரிவுகள் உண்டு என்பது குறிப்பிடத்தக்கது. அதைப் போல் இங்குக் குறிப்பிட்ட நால்வகைப் பாக் களுக்கும் ஒவ்வொன்றுக்கும் இனம் உண்டு. இந்நால்வகைப் பாக்களைத் தவிர மருட்பா வும் உண்டு. புறநிலை வாழ்த்து, கைக்கிளை, வாயுறை, செவியறிவுறூஉ என மருட்பா நான்கு வகைப்படும். யாப்பின் அமைப்பை ஒருவாறு சுருக்கமாகக் கண்டோம். யாப்பி லக்கணத்தைப் பொறுத்த வரையில் தொல் காப்பியத்திற்கும் யாப்பருங்கலக் காரிகைக் கும் வேறுபாடு உண்டு.

> ''பழையன கழிதலும் புதியன புகுதலும்
> வழுவல கால வகையி னனே''

என்னும் நன்னூல் விதிக்கு ஏற்பத் தொல் காப்பியத்தில் கூறப்பட்ட கட்டளையடி

முதலிய சில யாப்பு வகைகள் காரிகையில் இடம்பெறவில்லை. காரிகையில் இலக்கணம் வரையறுக்கப் பட்டுள்ள பாவினங்கள் தொல்காப்பியத்தில் இடம்பெறவில்லை. இவ்வாறு இன்னும் பல வேறுபாடுகள் இருக்கின்றன.

## யாப்பும் கவிதையும்.

யாப்பு வயலைக் காக்கின்ற வரப்பு போன்றது. கவிதை வயலுக்குள் வளரும் பயிரைப் போன்றது. யாப்பு தோட்டத்தைச் சுற்றியுள்ள வேலி போன்றது. கவிதை தோட்டத்தில் கனிந்த பழம் போன்றது. யாப்பு ஆற்றங்கரை போன்றது. கவிதை ஆற்றில் பாய்கின்ற நீரைப்போன்றது, யாப்பு கண்ணாடிச் சட்டம் போன்றது, கவிதை கண்ணாடிச் சட்டத்துள் இருக்கும் ஓவியம் போன்றது. வரப்பு வயலைக் காப்பது போலவும், வேலி தோட்டத்தை காத்தல் போலவும். கரை ஆற்றைக் காப்பது போன்றும், கண்ணாடிச் சட்டம் ஓவியத்தைக் காப்பதைப் போன்றும், யாப்பு, கவிதையை இலக்கண அமைதி குறைந்திடாமலும் சிதைந்துவிடாமலும் காக்கின்றது. உருவத்தைக் கொடுப்பது யாப்பு. உணர்ச்சியைக் கொடுப்பது கவிதை. யாப்பை உடலுக்கும் கவிதையை உயிருக்கும் ஒப்பிடலாம். எப்படி அமைய வேண்டும் என்பதை அறிவிப்பது யாப்பு. எப்படி விளங்க வேண்டும் என்பதை உணர்த்துவது கவிதை. யாப்பு இலக்கணமாக இருக்கிறது. கவிதை இலக்கியமாய்த் திகழ்கின்றது. கவிதை இயற்ற யாப்பிலக்கண அறிவு துணைபுரியும். ஆனால், யாப்பிலக்கணத்தை மட்டும் கற்றுவிட்டால் கவிதை இயற்றிவிட முடியாது. காரிகை கற்றுக் கவிபாடுவதிலும் பேரிகை கொட்டிப் பிழைப்பது நன்றே என்னும் பழமொழி இங்கே கருதத்தக்கது.

## கவிதையும் இறையருளும்.

இறையருள் இருந்தால் தான் கவி பாடலாம் என்று ஒரு சாரார் கருதுகின்றனர். இறைவன் அருளால் தான் மனிதன் கவிஞனாகின்றான். எனவே கவிஞன் கடவுளைப் பாடவேண்டும். வேறொன்றையும் பாடக்கூடாது என்று இவர்கள் எண்ணுகிறார்கள். கவிதைக்கும் இறைவனுக்கும் தொடர்பு உண்டு என்றும் கவிதைக்குத் தெய்வீக ஆற்றல் உண்டு என்றும் இவர்கள் கருதுகின்றார்கள். இதற்கு முற்றிலும் மாறுபட்ட வகையில் மற்றொரு சாரார் எண்ணுகின்றார்கள். கவிதைக்கும் இறைவனுக்கும் தொடர்பே இல்லை. கவிஞன் தன் மொழிப் புலமை, கவிதை உணர்ச்சி, கவிதைத் திறன், யாப்பிலக்கணப் பயிற்சி, அழகுணர்ச்சி, பரந்த அறிவு, அனுபவம், கற்பனை வளம் ஆகியவற்றின் துணைக்கொண்டு தான் கவி பாடுகின்றானே தவிர இறைவன் அருளால் பாடுவதில்லை, என்பது இவர்கள் கருத்து. தெய்வீக நம்பிக்கையுடன் பாடப் பெற்ற பாக்கள் யாவும் அருட்பாக்களாகவும் இறைப்பாக்களாகவும் கமழ்ந்திருக்கின்றன. அறிவைத் துணைக்கொண்டு பாடப்பெற்ற கவிதைகள் யாவும் பொதுக் கவிதைகளாகவும் புரட்சிக் கவிதைகளாகவும் மலர்ந்திருக்கின்றன.

## கவிதையின் பிறப்பிடம்.

ஏன், எப்படி, எதனால். எங்கு, யார், எது போன்ற வினாக்களின் நற்பயனாகப் பிறப்பது அறிவியல். உணர்ச்சியிலிருந்து பிறப்பது கவிதை. அறிவியலின் பிறப்பிடம் மூளை. கவிதையின் பிறப்பிடம் உள்ளம். கவிஞனது உள்ளத்தின் ஆழத்திலிருந்து எழுகின்ற உணர்ச்சியே ஒலிநயத்துடன் வெளிப்படும்போது கவிதையாகின்றது. எனவே, கவிதை அறிவிலிருந்தோ, மூளையிலிருந்தோ தோன்றுவதன்று. மாறாக உள்ளத்தின் அடித்தலத்திலிருந்து தோன்றுகின்றது. கவிதைக்கு நல்லதொரு இலக்கணம் வகுத்த கவிமணியவர்கள்

> " உள்ளத் துள்ளது கவிதை – இன்பம்
> உருவெ டுப்பது கவிதை
> தெள்ளத் தெளிந்த தமிழில் – உண்மை
> தெளிந் துரைப்பது கவிதை "

என்று கவிதையின் பிறப்பிடத்தை அழகாகக் கூறுகின்றார். கவிதை என்பது இயல்பாகப் பெருக்கெடுத்து வெளிப்படுகின்ற அழுந்திய உணர்ச்சி. அமைதியாக இருந்து நினைக்கும் போது எழுகின்ற உணர்ச்சியே கவிதையின் பிறப்பிடம் என்று ஆங்கிலக் கவிஞர் வேர்ட்சுவர்த் கூறுகின்றார்.[3] கவிஞன் உள்ளத்திலிருந்து பிறக்கின்ற கவிதை சுவைஞன் உள்ளத்தைத் தொடுகின்றது; உருக்குகின்றது; கிளர்ந்தெழச் செய்கின்றது; உவகையில் ஆழ்த்துகின்றது. அவ்வுவகையே கவிதை விருந்து; அதுவே கவிதையின் தலையாய பயன்.

3. "poetry is the spontaneous overflow of powerful feelings; it takes its origin from emotion recollected in tranquillity" — Wordsworth.



# கானல்வரி ஒரு திருப்பு மையம்

டாக்டர் சா. வே. சுப்பிரமணியன், எம். ஏ., பி. எச். டி.,
தமிழ்த்துறைத் தலைவர், கேரளப் பல்கலைக் கழகம்.

மெய்யில் பொடியும், உள்ளத்தில் தெளிவும், விரித்த கூந்தலும், செருக்கிய நெஞ்சும், கண்ணில் நீரும், கருத்தில் கலக்கமும், கையில் சிலம்பும் ஏந்தி, பாண்டியன் கடை வாயிலில்,

''அறிவு அறை போகிய பொறியறு செஞ்சத்து
இறை முறை பிழைத்தோன்
வாயிலோயே'' ... என

அரசன் கோயிலுள் நுழைந்து,

'தேரா மன்னா செப்புவதுடையேன் ...' எனத் தொடங்கி வழக்குரைக்கின்றாள், மறத்தை நீக்கி அறத்தை நாட்டிய மடந்தையாம் கண்ணகி. அவ்வாறு வழக்குரைக்க ஏதுவாக இருந்தது அவள் கணவனைக் கள்வனென்று கொலை செய்தது. அக்கொலை நிகழக் காரணம் கோவலன் கண்ணகி சிலம்பை விற்றுப் பொருளீட்ட மதுரை சென்றது. அவர்கள் மதுரை செல்லக் காரணம் கோவலன் மாதவியைப் பிரிந்தமை, மாதவியைப் பிரியக் காரணம் கானல்வரிப் பாடல்கள்.

கானல்வரி, சிலப்பதிகாரத்தில் ஏழாவது காதையாய் அமைகின்றது. சிலம்பு இசைப் பாக்கள் இடையிடையே கலந்து வரும் நாடகக் காப்பியம். கானல் என்பது கடற்கரைச் சோலை. வரிப்பாடல்கள் என்பன இசைப்பாடல்களே. கானல்வரி. சிலம்பின் இசைச் சுவைக்கு ஏற்றம் தந்து நிற்பது, இக்காதையிலமையும் வரிப்பாடல்கள், ஆற்றுவரி, சார்த்துவரி, முகமில்வரி, கானல்வரி, நிலைவரி, முரிவரி, திணைநிலைவரி, மயங்குதிணை நிலைவரி, சாயல்வரி என்ற பிரிவுகளில் அமைபவை. இவை, அடிகள் தம் காலத்து வழங்கப்பெற்ற இசை தழுவிய நாடோடிப்பாடல்களாக இருந்திருக்கலாம். இவற்றைக் கோவலன் யாழில் இசைத்தான். மாதவி, யாழொடு தன் குரல் கூட்டிப் பாடினாள். கலையார்வம் மிக்க இருவர் கடலாடும் விழவின் ஞான்று; காவிரி கடலோடு மயங்குமிடத்து எழுப்பிய இவ் இனிய இசை, காப்பியம் முழுதும் எதிரொலிக்குமாறு அடிகளால் அமைக்கப்படுகின்றது.

வாழ்க்கையில் எத்தனையோ நிகழ்ச்சிகள் கடலலைபோல எழுந்து வீழ்கின்றன. சில நிகழ்ச்சிகளே வாழ்வின் ஓட்டத்தைத் திசை திருப்புகின்றன, தனி மனிதன் வாழ்வில் இவற்றை விரல்விட்டு எண்ணிவிடலாம். வாழ்வின் பெருங் கோலமாகப் புனையப் பெறும் காப்பியங்களும் திருப்பங்கள் சில பெற்றே அமைகின்றன.

சிலப்பதிகாரத்தில் இளங்கோ அடிகள் மூன்று உண்மைகளை வலியுறுத்தவிரும்பினார். ஒன்று முதன்மையானது, ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும் என்பது. பிறிது, அரசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற்றாகும் என்பது. மற்றொன்று உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்துவர் என்பது. ஊழ் உருத்து வந்து ஊட்டியது கோவலன் கொலையால் நிறைவுற்றது. இக்கொலை, அரசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற்றாகும் என்பதை விளக்க

அடிப்படைக் காரண நிகழ்ச்சியாயிற்று. அது மட்டுமன்று, உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்தியமைக்கும் இதுவே காரணமாயிற்று. இம்மூன்று உண்மைகளையும் நிலைபெறுத்தக் காப்பியத் தலைவனுகும் கோவலன் வாழ்வில் ஒரு திருப்பம் தேவைப் பட்டது.

பெருங்குடி வணிகன் மகனுகப் பிறந்து, வணிகர் புகழ் ஓங்கி வாழ்ந்த காவிரிப்பூம் பட்டினத்து அவன் வாழ்ந்த வாழ்வு, அவனது ஊழ்வினையின் உருவம் வெளிப்படும் காலமாகவும், களமாகவும் அமையுமாறு பொருந்தவில்லை.

அயலான் ஒருவனைக் காரணமின்றிக் கொன்ற பழியை முற்பிறப்பில் ஈட்டிக் கொண்டவன் கோவலன். அப்பழியின் பிழிவை நுகர்தற்கு ஏதிலனுய் ஏக வேண்டியது ஊழின் ஆணை. எனவே காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து, அவன் பிறந்து வளர்ந்த சோழ மண்ணிலிருந்து அவனை இயக்க ஓர் நிகழ்ச்சியைக் காப்பியம் வேண்டியது. அதற்கு அமைந்ததே கானல்வரி.

கானல்வரியில், அவனும் மாதவியும் இசையுடன் கலந்த கலையுணர்வில் கனன்று தெறித்தது ஓர் ஊடற்பொறி; இதைத்தான், இளங்கோ அடிகளும், 'யாழிசை மேல் வைத்துத்தன் ஊழ்வினைவந் துருத்ததாகலின்' என எடுத்துரைக்கின்றுர்;

காப்பியம் அல்லது நாடகத்தில், முகம்-பிரதிமுகம்-கருப்பம்-விளைவு-துய்த்தல் என ஐந்து கூறுகள் அமைந்திருத்தல் இயல்பு. அவற்றுள் பிரதிமுகத்தையே திருப்புமையம் எனக் கருதுகின்றனர். இராமாயணத்தில், கைகேயியின் தூய மனத்தின் திரிபுக்கும், அதனுல் இராமன் காடு ஏகற்கும் அதன் பின் நிகழ்ச்சிகளான அரக்கர் அழிவுக்கும் காரணமாக அமைவது கூனியின் கொடுமனப் புத்தியே. அதுவே, அங்குப்பிரதிமுகமாக நிகழ்கின்றது. இங்குக் கானல்வரியில் எழுந்த காதற்பூசல், இசைப்பூசல் காப்பியத்தின் ஓட்டத்தைத் திசை திருப்புகிறது.

கோவலனும் மாதவியும், ஏறத்தாழப் பன்னிரு ஆண்டுகள் ஒன்றுக வாழ்ந்தனர். மாதவி மணிமேகலை என்ற குழந்தையையும் பெற்றுள். கண்ணகிக்குக் குழந்தைப் பேற்றைத் தராத அடிகள், மாதவிக்குத் தருகிறுர். பிறவியறுத்தலுக்குப் பற்றுக்கூடாது என்பதே கண்ணகிக்குக் குழந்தைப் பேற்றைத் தராத காரணமாக இருக்கலாம். பன்னிராண்டு ஒன்றுக வாழ்ந்த கோவலனும் மாதவியும் ஏன் பிரியவேண்டும்? அதற்குக் காரணம் என்ன? அதற்கு விடையாக அமைவதே கானல்வரி.

கடலாடுகாதையில் இந்திரவிழவின்போது மாதவி ஆடிய பதினேராடலையும் விளக்கும் அடிகள், அச்செய்தியோடு இவ்விழவின் போதே கோவலன் ஊடல் கொண்டிருந்த நிலையைப் புலப்படுத்துகின்றுர். அவனை மகிழ்வித்து மனங்குளிரச்செய்யுமாறு தனக்கு நறுநெய்யாட்டி, புகையூட்டி, மணக்குழம்புகள் பூசி ஒப்பனைகளால் கனிந்து கடலாட வருகின்றுள் மாதவி. அவள் மனத்தில் அவனைக் கனிவிக்கும் ஆர்வம். அவன் கடலாடும் காவிரி தீரத்தருகில் அமர்ந்தான். அவள் அளித்த யாழை வாங்கி இசைத்தான்.

திங்கள் மாலை வெண்குடையான்
சென்னிசெங்கோல் அதுவோச்சிக்
கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவாய்
வாழி காவேரி
கங்கை தன்னைப் புணர்ந்தாலும்
புலவாதொழிதல் கயற்கண்ணுய்
மங்கை மாதர் பெருங்கற்பென்று
அறிந்தேன் வாழி காவேரி.

சோழன் காவிரிக்குத் தலைவன். வடநாடு சென்று வாகை கொள்கின்றுன். அங்கு கங்கையொடுஉறவு கொள்கின்றுன். அதற்குக் காவிரி புலக்கவில்லை. தெற்கே அன்று குமரிக்கடலில்லை. நதி ஓடியது. அந்த குமரி நதி என்ற நங்கையொடு கலக்கின்றுன். அதற்கும் புலந்து ஊடவில்லை. கோவலன் கருத்தில் நிலைநிறுத்துப் பாடிய காவிரி கண்ணகியே. கணவன் பிற பெண்ணொடு

உறவாடினுலும் புலவாத அவள் பொறுமை யைப் பெருங்கற்பு என்று புகழ்கின்ருன்.

கோவலன் தொடர்பு கொண்டவர்கள் இருபெண்டிர்; அவ்விரு வரையும் எடை போட்டுப் பார்க்கின்றது அவன் உள்ளம். அது இயல்பு. இருவரும் கற்புடையவர்கள் தான். ஆயின் பெருங்கற்பு உடையவள் யார்? என நினைத்துப் பார்க்கின்ருன் கோவலன். கண்ணகியிடம் மிகுதியாக ஊடும் தன்மையில்லை, உரிமை பாராட்டும் பண்பும் இல்லை. அவை அவளுக்குத் தேவை யில்லை. மாதவி நேர்மாருக, மிகுதியாக ஊடல் கொள்கிருள், உரிமையும் பாராட்டு கின்ருள். இவ் ஊடல் மிகுதியான காரணத் தால் தான் பிரிவு ஏற்படுகின்றது. மாதவி—கோவலன் ஊடல், இவர்களைப் பிரித்தது—பாண்டியன் — பாண்டிமாதேவி ஊடல் கோவலன் உயிரைக்குடிக்கக் காரணமாய் அமைந்தது. அதனுல்தான் வள்ளுவர் நல்ல உவமையோடு, 'உப்பமைந்தற்ருல் புலவி, அது சிறிது மிக்கற்ருல் நீளவிடல் எனப் பேசு கின்ருர், உப்பில்லாப் பண்டம் குப்பையில் தான். சிறிது உப்பு அதிகமாகிவிட்டாலும் அப்பண்டத்தை உண்ணமுடியாது. அதே நிலையில்தான் மாதவியின் ஊடல் கோவலன் வாழ்வாகிய உணவிற்கு மிகுதியான உப்பாக அமைந்து விட்டது. அப்பண்டத்தை எறிந்துவிட்டுச் செல்கின்ருன்.

இருவருமே காவிரியைப்பற்றியும், புகார் நகரைப் பற்றியும், நெய்தல் நிலத் தலைவன் தலைவியர் ஒழுக்கம் பற்றியும் பாடுகிருர்கள். எல்லாப் பாடல்களும் உள்ளுறைப் பொருள் அமைந்த பாடல்களாக அமைந்துள்ளன.

இதே பாடலுக்கு மாதவி கொள்ளுகின்ற பொருள் வேருக அமைகின்றது. அவளும் கோவலனையே சோழனுக நினைக்கின்ருள். ஆயின் தன்னையே காவிரியாக நினைக்கின்ருள். கங்கையையும் கன்னியையும் கோவலன் தொடர்பு கொண்ட வேறு பெண்டிராகக் கொள்கிருள். காவிரி போன்று ஊடாது, சினக்காது கண்ணகி வாழ்வதாகக் கோவலன் நினைக்கின்ருன்—மாதவியோ காவிரி போன்று தான் ஊடாது இருத்தல் வேண்டும், எனக் கோவலன் எதிர்ப்பார்ப்பதாகக் கொள் கின்ருள்.

மாதவியும் ஆற்றுவரிப்பாடல்கள் பாடு கின்ருள். அவளும் காவிரியின் சிறப்பினையே பாடுகின்ருள்; கா என்பது சோலை. காக்களை விரிப்பதாலேயே காவிரி எனப் பெயர் பெற்றது. காவிரியின் பெருமையனைத்தும் அவள் கணவனின் பெருமிதத்திலும் வீரத் திலும் அமைந்திருப்பதாகக் கருதுகின்ருள். காவிரியின் வளம் காரணமாக இயற்கையின் மாற்றமான செயற்கை நிகழ்ச்சிகளும் நடை பெறுகின்றன. இவர்கள் கானல்வரி பாடு கின்ற காலம் வேனிற்காலம். வேனிற்காலத் தில் குயில் கூவும், ஆயின் மயில் ஆடுவதில்லை. மயில் கார்காலத்தில் தான் ஆடும். அது இயற்கையின் நியதி. தாமரை காலையில் மலர்ந்து மாலையில் குவிவதே இயற்கையின் நியதி. தாமரை மாலையில் மலர்ந்து காலையில் குவிய முடியாதல்லவா? இங்கு, மயில் ஆடக் குயில்பாடக் காவிரி நடந்து வருகின்ருள். இளங்கோ அடிகள் இயற்கையை மாற்ற முயன்ருர். பழங்காலத்தில் கலைப்பெண்ணு கிய பொது மடந்தைக்குக் கற்பில்லை—அவ் வெண்ணத்தை மாற்றிப் பொதுமகளாம் கலை மடந்தை மாதவிக்குக் கற்பைத் தந்து, துறவும் பூணச் செய்கின்ருர் அடிகள்.

> பூவர் சோலை மயிலாலப் புரிந்து குயில்கள் இசைபாடக்
> காமர் மாலை அருகசைய நடந்தாய் வாழி காவேரி
> காமர் மாலை அருகசைய நடந்தவெல்லாம் நின்கணவன்
> நாம வேலின் திறம் கண்டே யறிந்தேன் வாழி காவேரி

கதிரவன் கதிர்கள் நுழையமுடியாத, மரங் கள் அடர்ந்த, செறிந்த சோலை. காலம் வேனில் ஆனதால் இயல்பான எழுச்சியால் குயில்கள் பாடுகின்றன. வெயில் நுழை கல்லாச் சோலையில் நுழைந்த மயில், மர அடர்த்தியே மேகக்கூட்டம் எனக் கருதி

ஆடத்தொடங்கிவிட்டது. இச் சோலைகளை விரித்த காவிரி எதைப் பற்றியும் கவலையுறாது, தன் கணவன் பெருமிதத்தில் நடந்து கொண்டிருக்கின்றாள்.

கோவலன் பாடலில் கற்பின் எண்ணமே தலைதூக்கி நிற்கின்றது. மாதவியின் பாடலில் கலையுணர்வே – மயில் ஆடலும் குயில் பாடலுமே – மேலோங்கி நிற்கின்றன.

பின்பு, சார்த்துவரிப் பாடல்கள் எனப் புகார் நகரத்தைத் தொடர்புபடுத்தி இருவரும் பாடுகின்றனர். கோவலனின் சார்த்து வரிப்பாடல்கள் ஒரு தலைவி அல்லது தோழியின் கூற்றாகவே அமைகின்றன. அப்போதும் கண்ணகியின் எண்ணமே அவன் நெஞ்சின் மேல்தளத்தில் நின்று கொண்டிருக்கின்றது. ஒரு காலத்தில் மாசறு பொன்னே வலம்புரி முத்தே காசறு விரையே கரும்பே தேனே என்று பேசியவன் இன்று அயலான் போன்று நிற்கின்றான்–அவள், இவன் வருகைக்காக, அன்புக்காக ஏங்கி நிற்கின்ற வடிவமே இவன் உள்ளத்தில் தோன்றுகின்றது. கண்ணகியே நின்று இவனிடம் கேட்பதுபோல் இவனுக்குத் தோன்றுகிறது. அதுமட்டுமன்று. இவன் எப்போதும் வண்டாகவே நிற்கின்றான். நல்ல பொய்கை–பெண்டிர் நீராடிக் கொண்டிருக்கின்றனர் – பொய்கையில் நிலமலர்களும் மலர்ந்திருக்கின்றன – இரவுக் காலம், பொய்கை நீரில் நிலவின் நிழற்கோலம் – அந் நிழலிலே இரு நீலமலர்–அருகே பெண்டிரின் சந்திர வதனத்தில் நீலக்கண்கள் – பொய்கையில் மலரை நுகர்ந்து தேனையுண்டு மகிழும் வண்டு இப்போது, உண்மையான நீல மலரெவை– மாதர்விழி எவை எனத் தெரியாது திணறுகின்றது. செயற்கைக்கும் இயற்கைக்கும் வேறுபாடு தெரியாத நிலையில் மயங்குகின்றது. வண்டாகக் கோவலன், இயற்கையே கண்ணகி-செயற்கையே மாதவி. இன்னும் இயற்கை எது செயற்கை எது என்று தெரியாது திணறுகின்ற வண்டு போன்றே அவன் அமைவதாகப் பாடுகின்றான்.

காதலராகிக் கழிக்கானல் கையுறை
கொண்டு எம்பின் வந்தார்
ஏதிலர் தாமாகி யாமிரப்ப நிற்பதை
யாங்கறிகோமைய
மாதரார் கண்ணும் மதிநிழல் நீரிணை
கொண்டு மலர்ந்தநீலப்
போது மறியாது வண்டூசலாடும் புகாரே
எம்மூர்.

இங்குக் கோவலன் கண்ணகியை நினைத்துப் பாடினாலும், மாதவி, அவன் வேறொரு பெண்ணை நினைத்துப் பாடுவதாகவே கருதுகின்றாள்.

இருவரும் கடற்கரையில் தான் பாடிக் கொண்டு இருக்கின்றனர். அவன் நெய்தல் நிலத் தலைவன்– நிலத்தைப் பழங்காலத்தில் நானிலமாகப் பகுத்தனர். கடலும் கடல் சார்ந்த இடத்தையும் நெய்தல் எனக் குறிப்பிட்டார்–அத்தலைவன் மிகவும் தூரத்திலிருந்து வந்துகொண்டிருக்கிறான். முதலில் அவனுக்குக் கடல் தெரிகின்றது. கடல் போன்ற பரந்த ஆழமான அன்புடையவனவன். இன்னும் சிறிது அக் கடற்கரையை நெருங்குகின்றான். மணற்பரப்பு தெரிகின்றது–இன்னும் அருகே வருகின்றான்– அருகிலுள்ள பொழிலின் மணம் அலையலையாய் அவனை அணுகுகிறது, பின்பு அவனுக்குப் பொழில் தெரிகிறது. பின்பும் நெருங்கும்போது கூந்தல் மணம் அவனை இழுக்கின்றது. தலைவி, கடலை நோக்கி நின்றவள், ஆளரவம் கேட்டுத் திரும்புகின்றாள் – அவள் மதிமுகம் தெரிகின்றது. இன்னும் அருகே செல்லும்போது அவள் கயற்கண்கள் தெரிகின்றன. இவைகளை எல்லாம் நினைத்துப் பாடுகின்றான்.

திரைவிரி தருதுறையே திருமணல்
விரியிடமே
விரைவிரி நறுமலரே மிடைதரு
பொழிலிடமே
மருவிரி புரிகுழலே மதிபுரை திருமுகமே
இருகயல் இணைவிழியே எனையிடர்
செய்தவையே

இத்தகைய தலைவி ஒருத்தி அவனுக்குத் துன்பத்தைத் தந்ததாகக் கோவலன் பாடுகின்றான். மாதவி இவ்வருணனை அனைத்தையும் பிறிதொரு பெண்ணைக் குறிப்பதாக நினைக்கின்றாள். ஆயின், கோவலன் கண்ணகியை நினைத்துக் கொண்டிருக்கின்றான். கண்ணகியின் ஏக்கம் பொருந்திய விழிகளே அவன் மனக்கண்ணில் இவ்வாறு ஒரு தலைவியாகத் தோன்றி அவனை இத்தகைய நிலையில் பாடச் செய்கின்றன.

ஊடல் கோலமோடு இருந்தவனைக் களிப்புறுத்தக் கலை ஆர்வத்தோடு கவினுறப் புனைந்து வந்தவள், கோவலன் இசையில் நிழலாடும் கண்ணகியின் சாயலைப் பிறிதொரு பெண்ணாக நினைத்து மறுகுகிறாள். அவள் பாடும் எதிர்ப்பாடல்கள், ஒரு தலைவனை நினைத்துப்பாடும் முறையில் அமைகின்றன. அவன் பலநாட்கள் இவளுக்காக அலைந்து கொண்டிருந்தவன், அன்பைப்பொழிந்தான்—அருளைச் சொரிந்தான்—தினந்தோறும் தேரில் வருவான். மிகவும் விரைந்து செல்லக்கூடிய தேர்—தேர்க்குதிரை பறவைபோன்று பறக்கும். இத்தகைய விரைவில் வந்து சென்று கொண்டிருந்தவன் விரைவிலேயே பிரிந்து விட்டான். பொதுவாக, எந்தப் பொருளும் எளிதாகக் கிடைத்தால் எளிதாக நீங்கிவிடும்—வருந்திப் பெற்றால் தான் அப்பொருளின் அருமை தெரியும்—அது என்றும் இருக்கும் அவன் தேர்ச்சக்கரச்சுவடும், குதிரைச் சுவடுகளும் கடற்கரை மணலில் பதிந்துள்ளன. அவை, இவள் நெஞ்சில் அவன் பதித்துச் சென்ற எண்ணங்களை நினைவூட்டுகின்றன. அவன் இவளை அடையும் போது கடற்கரையில் உடன் இருந்தவை அங்கு வாழுகின்ற அன்னங்களும், அடும்பங்கொடிகளுமே. இப்போது அவன் தன்னை மறந்து வாராது நின்று விட்டானே என ஏங்கித் தவிக்கின்றாள். அத்தலைவி, இவ்வாறு பாடுகின்றாள் மாதவி—

> தம்முடைய தண்ணளியும் தாமும் தம்
> மான்தேரும்
> எம்மை நினையாது விட்டாரோ
> விட்டகல்க
> அம்மென் இணர அடும்புகாள்
> அன்னங்காள்
> நம்மை மறந்தாரை நாம் மறக்க
> மாட்டேமால்

நெய்தற் தலைவியின் கூற்றாக அமையும் பாடல் மாதவியின் நெஞ்ச ஓலமாக ஒலிக்கின்றது. கோவலன் அருகில் இருப்பினும், அவன் நெஞ்சம் தன்னை விட்டு அகன்று செல்வதை அவள் உணர்ந்தாள். உணர்வால் ஒன்றியோர் நெஞ்சம் பிரிவைத் தாங்குதல் இல்லை. ஒருகால் அவன் நினைவு கண்ணகிபால் சென்றது என்பதை அறிந்திருந்தால் மாதவியின் கலக்கம் நீங்கியிருக்கும். பிரிவின் மேகங்கள் கறுத்து இருண்டமையை அவள் உள்ளுணர்வு கண்டது. எனவே தான் அதற்கு அவள் வழங்கிய பதிலாக நம்மை மறந்தாரை நாம் மறக்க மாட்டேமால் என்ற அடி அமைந்தது. இவ் உறுதி மொழியை உரைத்தவள் பின்னர் வாழ்ந்தும் காட்டினாள்.

மேலும், அவள் பாடல் தொடர்கின்றது. பிரிவின் பேரச்சம் கவிய, பிரிந்து வாடும் தலைவி ஒருத்தியின் அவல ஓவியத்தை அவள் பாடல் வழங்குகின்றது.

தலைவனைப் பிரிந்த ஒரு தலைவி—பிரியேன். பிரியில் தரியேன் என்றெல்லாம் கூறியவன், இருப்பினும் விரைவில் கற்றுத் திரும்பிவிடுவேன் எனக் கூறிச் சென்றவன், இன்னும் திரும்பினானில்லை. அவன் உடன் வாழ்ந்த போது கூறிய அருட்சொற்களின் நிழலிலே இத்தலைவி வாழ்ந்து கொண்டிருக்கின்றாள். மால் என்றாலே மயக்கம். அதோடு 'ஐ' யையும்—சிறப்பையும்—சேர்த்துக் கொண்டு மாலையாகிப் பிரிந்தோர்க்குத் துன்பத்தை மிகுவிக்கின்றது மாலைக் காலம். அம்மாலை இவர் உயிர் உண்ணும் கூற்றாக அமைகின்றது. தலைவனைப் பிரிந்த மாலைக் காலத்தைத் தனிமையில் போக்குவது பெருந்துன்பமாக இருக்கின்றது. பொருந்தும் உவமையொன்றால் அதை விளக்குகின்றார் அடிகள். இருவேந்தர் போர் புரிகின்றனர்—ஒருவன் மதிலினுள் இருக்கின்றான்—மற்றவன் வெளியி

லிருந்து போர் செய்கின்றான். உள்ளிருக்கின்றவன் ஆற்றல் இருந்தால் வெளியே வந்து போர் செய்வானே. அவன் உள்ளிருப்பதே அவன் ஆற்றலின்மையைக் குறிக்கின்றது. இதனை உணர்ந்த பின்னும் வெளியிலிருப்பவன் உள்ளிருப்பவனை மறுபடியும் மறுபடியும் முற்றுகையிடுகிறான்-எத்துணைக் கொடியவன். அதுபோன்றது இம்மாலைக் காலம். பிரிவுத்துயர் பொறுது வாடும் தலைவியரை மாலை மயக்கம் மிகுக்கும் பொழுது கொல்லாது கொல்கின்றது.

பிரிந்தார் பரிந்துரைத்த பேரருளின் நீழல்
இருந்து ஏங்கி வாழ்வார் உயிர்ப் புறத்தாய் மாலை
உயிர்ப் புறத்தாய் நீயாகில் உள்ளாற்று வேந்தன்
எயிற் புறத்து வேந்தனோடு என்னாதி மாலை

எனப் புலம்புகின்றாள்.

மாதவியின் எதிர்ப் பாடல் கண்ணகியின் பெருங்கற்பை நாடிய கோவலனுக்கு நொந்த புண்ணில் பாய்ச்சிய நெடு வேல் போல் துன்பம் தருகின்றது. ஊடற் கோலமோடு இருந்தவன் பிரிதற்கு அடிகோலுகின்றது.

பன்னிரு ஆண்டுகள் இணைந்து வாழ்ந்தோர்—வாழ்க்கையின் பல்வேறு சூழல்களை இணைந்து கடந்தோர் – ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளாப் பிழையால் பிரிகின்றனர். கோவலன் வறுமையும், தன்னைப்பற்றிய தாழ்வு மனப்பான்மையும், கலையைப் பொதுப் பொருளாகக் கருதாது தன் உடைமைப் பொருளாகக் கருதியதுமே அவன் பிரிவுக்குக் காரணமாக அமைகின்றன எனலாம். அத்துடன் மாதவியின் உரிமை நெஞ்சமும் ஊடலும் ஊக்குவித்தன என்றும் உரைக்கலாம்.

அடிகள் இக்காரணங்களால் அவ்விரு கலை நெஞ்சங்களின் பிரிவைக் காட்ட எண்ணாது காப்பியம் முழுவதிலும் பரந்து நிற்கும் ஊழின் பெரு நாடகத்தையே காரணமாக்குகின்றார்.

கானல் வரியில், ஊழ் தன் இயக்கத்திற்கு வலக்கால் நகர்த்தியது. இதனையே மாடலன் வாயிலாக அடிகள் நீர்ப்படை காதையில் நமக்கு மீண்டும் நினைவுறுத்தி வலியுறுத்திச் செல்கின்றார்.

கண்ணகி கணவனுடன் விண்ணகம் சென்ற விந்தையைத் தன் நாட்டுக் குறவர் கூறக் கேட்ட செங்குட்டுவன், பத்தினிப் பெருங்கடவுளைப் பரசுதற்குக் கல் கொண்டு வர இமையம் செல்கின்றான். இமையத்து எடுத்த கல்லைக் கனகவிசயர் தம் முடித் தலை ஏற்றிக் கங்கையில் நீர்ப்படுத்தித் தன் வாகையை வரலாற்று ஏட்டில் பொறிக்கின்றான். வாகைச் செம்மல் முன் வந்து தோன்றுகின்றான் மாடலமறையோன்–சொல் வன்மைமிக்கவன். அழகுற அவன் வாயிலாகக் காப்பியக் கதையை ஒரு சொல் தொகுதியில், சிற்றுளியால் உருப்பெறுத்தும் சிற்பம் போல் நம் மனத்தில் எழுதுகின்றார் இளங்கோவடிகள்–

மாதவி மடந்தை
கானற் பாணி கனகவிசயர்தம்
முடித்தலை நெரித்தது.

மென்மையிலும் மெல்லிய இசை, அடக்க இயலாத மதயானையையும் அடக்கும் வலி பெறுவதுபோல், ஊழின் திறம்பட்ட கைகளில், கானல்வரியின் இசை, கனகவிசயர் தம் முடித்தலை நெரிக்கும் வன்மை பெறுகின்றது.

கானல்வரி அடுத்தடுத்து நிகழும் காப்பிய நிகழ்ச்சிகளின் முதல் இயக்கம், இதுவே கதையின் திருப்பு மையம்.



# பல்லவர் கால வரலாறு

பேராசிரியர் அ. மு. பரமசிவானந்தம், எம். ஏ., எம். லிட்.,
தமிழ்த்துறைத் தலைவர், பச்சையப்பன் கல்லூரி, சென்னை.

உலக நாடுகள் அனைத்தும் தத்தமக்கெனக் கடந்த கால வரலாறுகளைப் பெற்றிருக்கின்றன. சில நாட்டு வரலாறுகள் பழமை வாய்ந்தனவாகவும், சில காலம் கணிக்க முடியாதனவாகவும் சில இடையிடையே இருளடைந்த நிலையிலும் உள்ளமையை வரலாற்று ஆய்வாளர் நன்கு அறிவர். ஒரு சில மறைந்த வரலாறுகளைப் பற்றியும் அவற்றின் அடிப்படையில் காணும் பண்பாடு, நாகரிகம், சமயம், பிற வாழ்வு நிலைகள் பற்றியும் தொல்பொருள் ஆய்வாளர்கள் அகழ்ந்து அறிந்து-ஆழ்ந்து உணர்ந்து உலகுக்கு உணர்த்துகின்றனர். இந்திய நாட்டுச் சிந்துவெளி நாகரிகமும் தமிழ்நாட்டுப் பழம்பெரு நாகரிகமும் அந்த அடிப்படையில் ஆய்வுக்கு நிலைக்களன்களாக அமைந்து, பலப்பல புதுப்புது உண்மைகளை நமக்கு உணர்த்தும் வரலாற்றுச் செல்வங்களாக அமைகின்றன. அந்த அடிப்படையில், வாழ்ந்து மறைந்த சின்னங்கள், வடித்தெடுத்த சிற்பங்கள், செதுக்கி வைத்த எழுத்துக்கள், புதைத்து வைத்த தாழிகள் போன்றவை பலப்பல உண்மைகளை நமக்கு உணர்த்துகின்றன.

வரலாறு என்பது, மேலை நாட்டு அறிஞர்கள் காட்டியபடி வெறும் அரசர் பரம்பரையினையும், அவர்கள் அரண்மனை வாழ்வையும், ஆற்றிய போரையும் மட்டும் குறிப்பிடுவதாகாது. அது மக்கள் வாழ்வொடு பிணைந்த ஒன்றாகும். ஆயினும், இவை மாறுவதற்குப் பெரும்பாலும் அரசியலே காரணமாக அமைந்தமையின் வரலாற்றை அந்த அந்த அடிப்படையிலே கணக்கிடுவர். அந்த உண்மையில் பார்க்கும் போது தமிழ் நாட்டு வரலாற்றில் – மக்கள் வாழ்வில் உண்டான எத்தனையோ மாற்றங்களை நம்மால் எண்ணாதிருக்க முடியாது. அவற்றுள் ஒன்றே சங்க காலத்துக்கும் பிற்காலப் பல்லவர் காலத்துக்கும் இடையில் உண்டான பெருமாற்றம்.

சங்க காலம் பெரும்பாலான வரலாற்று அறிஞர்கள் ஏற்றுக்கொண்ட முடிவின்படி கி. பி. முதல் நூற்றாண்டோடு முடிவடைவதாகும். அக்காலத்திய மக்கள் வாழ்விற்கும் ஏழாம் நூற்றாண்டில் அப்பர், சம்பந்தர் வாழ்ந்த கால மக்கள் வாழ்விற்கும் எத்தனையோ வேறுபாடுகளைக் காண்கிறோம். ஏன் இந்த மாற்றம்?

இந்த நான்கைந்து நூற்றாண்டுக் காலத்தைத் தமிழக வரலாற்றை ஆராய்வோர் தமிழக இருண்ட காலம் என்றோ, களப்பிரர் இடையீட்டுக் காலம் என்றோ கூறுவர். தெளிந்த சமுதாய வாழ்வைக் காட்டும் சங்க காலத்துக்கும் ஏழாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட வரலாற்றை வரையறை செய்ய முடியாமையே இதற்குக் காரணம். ஏன் செய்யவில்லை? நாடு என்னாயிற்று?

கடைச்சங்க காலத்து இறுதி நிலையினையோ அன்றி முடிந்த நிலையினையோ

# ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும்

வித்துவான் அ. மா. பரிமணம், எம். ஏ., எம். லிட்.,
தமிழ்ப் பேராசிரியர், பழனியாண்டவர் பண்பாட்டுக் கல்லூரி, பழனி.

ஒருவன் பிறந்து வளர்ந்து என்றே ஒரு நாள் இறந்துவிடுவதோடு அவன் ஆன்மாவும் அழிந்து விடுவதில்லை என்றும், பிறப்பதற்கு முன்னும் இறந்த பின்னும் அவ்வான்மாவிற்கு நிலைபெறும் பிறவித் தொடர்பும் உண்டு என்றும், இந்திய மெய்ப்புணர்வாளர்களில் *(Indian Philosophers)* மிகப் பெரும்பாலோர் கருதினர். இப்பிறப்பில் நிகழும் நிகழ்ச்சிகட்கு முற்பிறப்பின் வினைகள் காரணமாகும் என்றும், மேலும் இப்பிறவி நிகழ்ச்சிகள் இனிவரும் பிறவிக்குக் காரணமாகும் என்றும் அவர்கள் கருதினர். இவ்வகையிலமைந்த விதி அல்லது வினைக் கொள்கையினை இந்தியச் சமயங்கள் பலவும் ஏற்றுக் கொண்டுள்ளன. இந்தியச் சமய வாழ்வில் விதி அல்லது வினை தவிர்க்க முடியாத ஒன்றாகச் சிந்திக்கப்படலாயிற்று. அதனால், இந்தியாவில் பண்டுதொட்டு எழுந்த சமய சாத்திர தோத்திர இலக்கியங்களிலேயேயன்றி அறநூல்களிலும் கூட விதிக் கோட்பாடு குறிப்பிடத்தக்க இடம் பெறலாயிற்று.

சமயப் பொறுமை பேணி வாழ்வறங்கூற வந்த வள்ளுவமும் மனித முயற்சியின் மாட்சியினை ஆள்வினையுடைமை எனப் போற்றிக் கூறியிருந்தாலும், ஊழ்வினைச் சிந்தனையைப் புறக்கணிக்க முடியாமல், அதன் ஆற்றலை, அறத்துப்பாலில் 'ஊழ்' என ஓரதிகாரப்படுத்திக் காட்டியுள்ளது; அந்த ஓரதிகாரமே ஒரு தனித்த இயலாக அமைக்கப்பட்டுள்ளமை கொண்டு அதன் செல்வாக்கினை நன்குணரலாம். நற்குணமும் செயலுமுடையவர்கள் நற்பயனையும், தீக்குணமும் செயலுமுடையவர்கள் தீயபயனையும் நுகர்வர் என்னும் பொதுக் கொள்கைக்கு மாறாகப் பயன் விளையக் காணும்போது, வினைக் கோட்பாடு அமைதி காட்டுகிறது. பொறாமை முதலிய மனக்கோட்டமுடையவன் ஆக்கமடையவும், செம்மைநலம் சான்றவன் கேடடையவும் காணும்போது, இவற்றுக்குக் காரணம் ஆராயப்படும் என்னும் கருத்தில் வள்ளுவம்,

> 'அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும்
> செவ்வியான்
> கேடும் நினைக்கப் படும்'
> —(குறள் 169)

எனக் கூறுகின்றது. இதன் விளக்கவுரையில் பரிமேலழகர் ''ஆக்கக் கேடுகள் கோட்டமும் செம்மையும் ஏதுவாக வருதல் கூடாமையின் அறிவுடையரால் இதற்கேதுவாகிய பழவினை யாதென்றாராயப்படுதலின் நினைக்கப்படுமென்றார்; 'இம்மைச் செய்தன யானறி நல்வினை—உம்மைப்பயன் கொல் ஒரு தனி உழந்தித்—திருத்தகு மாமணிக்கொழுந்துடன் போந்தது' (சிலப்—அடைக். 91–93) எனநினைக்கப்பட்டவாறறிக'' என்று எழுதிக் காட்டியது குறிப்பிடத்தக்கதாகும். தமிழர் வாழ்வியல் கூறும் தொல்காப்பியத்திலும் 'பால் வரை தெய்வம்' என வினை குறிப்பிடப்பட்டுள்ளது.

தமிழ் முதற்காப்பியம் எனத் திகழும் சிலப்பதிகாரம் எழக் காரணமாக இருந்த

அடிப்படைக் குறிக்கோள்கள் மூன்றில் ஒன்ருக வினைக்கோட்பாடு திகழுகின்றது. குணவாயிற்கோட்டத்து அரசு துறந்திருந்த இளங்கோவடிகள் மனித குலத்திற்கு உணர்த்த விரும்பிய முப்பேருண்மைகளை வெளிப்படுத்தற்காகும் செவ்வியை எதிர் பார்த்திருந்தார். செங்குட்டுவனேடு மலை வளங்காணச் சென்றிருந்த அடிகள், சாத்தனுர் வாயிலாகக் கண்ணகி-கோவலன் வரலாற்றினை அறிந்தபோது, அதனை, தான் வெளியிட நினைத்த உண்மைகளை உரைப்பதற்கான செவ்வி கிடைத்ததெனக் கொண்டு ''சூழ்வினைச் சிலம்பு காரணமாகச் சிலப்பதிகாரம் என்னும் பெயரால் நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்'' என்று கூறிக் காப்பியஞ் செய்ய முன்வந்ததாகப் பதிகம் கூறுகின்றது. சிலப்பதிகாரத்தின் பதிகத்தை மட்டும் பயில்கின்றவர்களும், அக் காப்பிய நிகழ்ச்சிகளிலும் முடிவிலும் வினை அல்லது விதியின் ஆட்சி எந்த அளவில் இடம் பெற்றிருக்கிறது என்பதை நன்கு உணர் வார்கள். கண்ணகி கோவலன் வரலாறு கூறி வந்த தண்டமிழ்ச் சாத்தனுர் ''வினை விளை காலம் ஆதலின் யாவதும் சினையலர் வேந்தன் தேராளுகி''ச் செயல்பட்டதாகக் கூறியதைக் கேட்ட இளங்கோவடிகள், ''வினைவிளை காலம் என்றீர், யாதவர் வினை விளைவு'' என்று அதனை விளக்கக் கேட்கின்றுர். கோவலன் கொலையுண்ணக் காரணமான அவனுடைய பண்டை வினையினை, கொதியழற்சீற்றம் கொங்கையின் விளைத்த கண்ணகிக்கு, மதுராபுரித் தெய்வம் வெளிப்பட்டு விளக்கிக் கூறியதை' தான் வெள்ளியம்பல மன்றப் பொதியிலில் நள்ளிரவில் இருந்தபோது நேரே கேட்டறிந்ததாகச் சாத்தனுர் விடையிறுக் கின்றுர். கண்ணகி-கோவலன் வாழ்க்கையில் விதி வெற்றிகரமாகச் செயல்பட்டதைக் கேட்டறிந்த இளங்கோவடிகள் தாம் உணர்த்த விரும்பிய வினைக்கோட்பாட்டிற்கு அவ்வரலாறு பொருத்தமாக அமைந்ததைத் தக்கவாறு பயன்படுத்திக் கொள்கின்றுர். அவர் மக்கட்கு உணர்த்த விரும்பிய முப் பேருண்மைகளில் மூன்ருவதாகத் திகழ்வது 'ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும்' என்பதாகும். இவ்வுண்மையை, ஏனைய அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்ருகும், உரைசால் பத்தினியை உயர்ந்தவர்கள் ஏத்துவர் என்னும் உண்மைகளைப் போலவே-ஏன் அவற்றிலும் மேலாகவே தம் காப்பியத்தில் விளக்கி நிலைநாட்டியுள்ளார். இளங்கோவடிகளின் காப்பிய வெற்றிக்கு ஊழ்வினை ஆற்றலைக் காவியத்தில் நயம்படக்காட்டியுள்ள மாட்சியும் ஒரு சிறந்த காரணமாகும் என்பதில் ஐயமில்லை.

அடிகள் அமைத்த சிலப்பதிகாரம் என்னும் மணி ஆரத்தின் சரடாக வினை அமைந்திருக்கிறது என்ருல் மிகையாகாது. மணியாரத்தின் சரடு எங்கும் புலப்படாமல் இரு முனைகளும் கூடுமிடத்துப் புலப்பட்டு நிற்கும். ஒரு சில மணிகளினூடே அச்சரடு செல்லுங்கால் அம்மணிகளின் நிறத்திற்கேற்ப மங்கிய நிறத்தில் புலப்படவும் கூடும். அவ் வாறே சிலம்பு நிகழ்ச்சிகளில் வெளிப்பட்டுத் தோன்ருது இறுதியில் வெளிப்பட்டு நிற்கும் வினையும் ஒரே வழி நிகழ்ச்சிகளின் வாயிலாகவும், ஆசிரியரின் புலமைத் திறத்தாலும் மங்கலாக—ஆனுல் உறுதியாகப் புலப்பட்டுக் காப்பியத்திற்குச் சுவையூட்டுகின்றது.

திருமணத்தில் தொடங்குகின்ற கண்ணகி-கோவலன் வாழ்க்கை சில காலம் வரை 'யாண்டு சில கழிந்தன இற்பெருங் கிழமையிற்—காண்டகு சிறப்பிற் கண்ணகி தனக்கு'' என்று அடிகள் கூறுமாறு இன்பமாகவே கழிகின்றது. வரலாற்று முடிவினை அறிந்தவர்கள் மங்கல வாழ்த்துப் பாடலில் காணும் 'மன்னே' என்னும் இடைச்சொல் 'கவவுக்கை நெகிழாமல்' என்னும் வாழ்த்துரை, 'மனையறம் படுத்த காதை' என்ற தலைப்பில் படுத்த என்னும் சொல்லாட்சி ஆகியவற்றைச் சிந்திக்கின்றபோது எழும் எண்ணங்கள் தவிர, வினைவிளைவிற்கு எந்த விதத் தடையங்களும் இருப்பதாகக் கருத முடியாது. அரங்கேற்று காதையில் மானமர்நோக்கி ஓர் கூனியிடமிருந்து மாலையை வாங்கிக் கோவலன் விடுதல் அறியா விருப்போடு மாதவி மனையில் தங்கிவிடுகின்றுன்.

ஒரு பெண்குழந்தையைப் பெற்று மாதவி யோடு கோவலன் வாழ்ந்த சில ஆண்டுக் கால வாழ்க்கையில் மணந்தவளைப் பிரிந்து மற்றொருத்தியோடு வாழ அனுமதித்த சமுதாய நிலையைக் காண்கின்றோமேயன்றி வினை விளைவிற்கான எதனையும் காணவில்லை. வழக்கம் போலக் கடற்கரையில் எடுக்கும் இந்திர விழாவிற்கு மாதவியும் கோவலனும் செல்ல விருக்கின்றார்கள். கணவனைப் பிரிந்துறையும் கண்ணகி, காதலனைக்கூடி வாழும் மாதவி ஆகிய இருவர் வாழ்க்கையிலும் மாற்றம் ஏற்படவிருக்கும் குறிப்பினை .

கண்ணகி கருங்கணும் மாதவி செங்கணும்
உண்ணிறை கரந்தகத் தொளித்துநீர்
உகுத்தன
எண்ணுமுறை இடத்தினும் வலத்தினும்
துடித்தன
(இந்திர. 237–39)

என அடிகள் காட்டுகின்றார். இப்பகுதி கண்ணகிக்கு இன்பமும் மாதவிக்குத் துன்பமும் உண்டாகும் என்னுமளவு நினைக்கவே இடந்தருகிறது. கண்ணகி மாதவி இருவரும் பெருந்துயருழக்கும் கோவலன் முடிவினைச் சுட்டும் குறிப்பாக இதனைக் கருத முடியவில்லை. இருவருக்கும் வலக்கண் துடித்தன என்று கூறியிருந்தால் அவ்வாறு கொள்ளலாம்.

கோவலனும் மாதவியும் விழாக்கோலங் கொண்ட கடற்கரைக்குச் சென்று, புன்னை நிழற் புதுமணற்பரப்பில் தமக்கென அமைக்கப்பட்ட இடத்தில் இருக்கின்றனர். மாதவியிடமிருந்து யாழை வாங்கிய கோவலனும் மாதவி மனம் மகிழ வரிப்பாட்டிசைத்தான். அதனைக்கேட்டுப் புலவியுற்ற மாதவியும், தானோர் குறிப்புக் கொண்டவள் போல, நிலத்தெய்வம் வியப்பெய்த நீள் நிலத்தோர் மனம் மகிழப் பாடினாள். கேட்பவரை மகிழ்விக்கும் இசைப்பாட்டு, கேட்ட மாதவி கோவலன் இருவரையும் மகிழ்விக்கவில்லை; மாதவி மனம் மகிழப் பாடிய கோவலன் பாடல், மாதவி உள்ளத்தில், ''தன் நிலை மயங்கினான்'' எனக் கருதிப் புலவி கொள்ளச் செய்தது; நிலத்தெய்வமும் நீள்நிலத்தோரும் வியக்கப் பாடிய மாதவியின் பாடல் கோவலன் உள்ளத்தில் 'மாயப்பொய் பல கூட்டும் மாயத்தாள் பாடினாள்' என்று கூறிப் பிரியும் அளவிற்குச் சினத்தை எழுப்பியது! இவ்வாறு கானல் வரிப்பாடல்கள் கோவலன் மாதவி இன்பத்தினைக் கானல் நீராக்கிவிட்டன. முன்னர்க் கோவலன் கண்ணகியைப் பிரிந்தபோது இப்பிரிவு அவளுடைய இல்லறத்திற்கு இடையூறாய் அமைந்ததேனும் மீண்டும் அவள்பால் திரும்பிவருவதற்கான பிரிவாக இருந்தது. இப்போது மாதவியை விட்டுப் பிரிந்த பிரிவு மீண்டும் அவள்பால் வாராப் பிரிவாக அமைந்துவிட்டது; இப்பிரிவினை அடிகள்

''யாழிசைமேல் வைத்துத்தன்
ஊழ்வினைவந் துருத்ததாதலின்
உவவுற்ற திங்கள் முகத்தாளைக்
கவவுக்கை நெகிழ்ந்தனனாய்ப்
பொழுதீங்குக் கழிந்ததாகலின்
எழுதுமென் றுடனெழாது
ஏவலாள ருடன்சூழ்தரக் கோவலன்தான்
போனபின்னர்''
(கானல் 226–229)

என்னும் வரிகளில் காட்டியுள்ளார். எவரும் அறியாது கோவலன் வாழ்வினைத் தொடர்ந்து நடத்தி இறுதியில் கொலைப்பயன் விளைக்கும் அவன் தன் ஊழ்வினை உண்மையை அடிகள் முதன் முதலாக இங்குத்தான் நாமறியக் குறிப்பிடுகின்றார்.

கோவலன் ஊழ்வினை இப்பிரிவில், முளைவிட்டு வளரத் தொடங்குகிறது. கோவலன் வாழ்வில் இலங்கிய எந்தக் கலைக்கூறு அவன் மாதவியை நாடிய காரணங்களில் ஒன்றாகத் திகழ்ந்ததோ–எந்தக் கலைக்கூறு மாதவிபால் நாளும் கேட்டு இன்புறக் காரணமாக இருந்ததோ–எந்தக்கலைக் கூறினால் அவன் மாதவியை மகிழ்வித்து வந்தானோ அந்தக் கலைக்கூறாகிய யாழிசையினைக் கருவியாகக் கொண்டு ஊழ்வினை கால் கொண்டதாக அடிகள் காட்டி

யுள்ள திறம் போற்றத்தக்கதாகும்; இந்த ஊழ்வினை அறிமுகத்திற்குப் பின்னர், காப்பியத்தில் பலவிடங்களில், பல்வகை உத்திகளை மேற்கொண்டு ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும் பாங்கினை அடிகள் நன்கு காட்டியுள்ளனர். முழுமதி போன்ற முகத்தை உடைய மாதவியைக் கோவலன் பிரிந்திருந்தான் என்னும் கருத்தில் ''உவவுற்ற திங்கள் முகத்தாளை''ப் பிரிந்ததாகக் கூறுகின்றார். மறுநாள் முதல் கலை குறைந்து ஒளி இழக்கும் முழுமதியினை உவமங் கூறிய முகத்தால் மாதவியும் இனி கலை வளங் குறைந்து, அழகு நலங்கெடுவாள் என்னும் குறிப்பினை உய்த்துணர வைத்த அடிகளின் புலமை நுட்பம் அறிந் தின்புறத் தக்கதாகும். 'மாதவி மடந்தை கானற்பாணி கனக விசயர்தம் முடித்தலை நெரித்தது' என்னும் புதிரை விளக்கிய விளக்கமாக அமைந்த மாதவி மடந்தை வரிகளில் பாணியோடு ஊடற் காலத்து ஊழ்வினை உருத்தெழக் கூடாது பிரிந்து........'' (நீர்ப்படை 49. 51) என்ற மாடலன் கூற்றிலும் இவ் வினைக்கால்கோள் காட்டப்பெறுகிறது.

இவ் வினைக் கால்கோளுக்குப் பின்னர்க் கோவலன், கண்ணகி செயல்கள் அனைத்தும் வினையின் ஆட்சிக்கு உட்பட்டு, அதன் ஏவுதலால் நடைபெறுவனவாகவே அடிகள் காட்டுகின்றார். மாதவியைப் பிரிந்து இரவில் கண்ணகியை அடைந்த கோவலன். இழந்த பொருளையெல்லாம் மதுரையிற் சென்று, சிலம்பு முதலாக ஈட்டுவோம் என உரைத்துக் கண்ணகியோடு பொழுது புலர்வதற்குமுன் வீட்டை விட்டுச் செல்கின்றான். வினையால் ஒருப்படுத்தப்பட்ட நெஞ்சுடன் அவ்வினையின் கட்டளையினை—ஏவலை (வியம்—ஏவல்) ஏற்றுச் செல்கின்ற தன்மையினை

'வினைகடைக் கூட்ட வியங்கொண்டான் கங்குல்
கனைசுடர் கால் சியாமுன்'

(கனாத்—78-79)

என அடிகள் காட்டியுள்ளார். இவ்விரண்டு வரிகளும் அக்காதை இறுதி வெண்பாவின் பிற்பாதியாகவும் அமைந்துள்ளன. பின்னர் விளையவிருக்கும் வினைப்பயனை முன்னர்க் குறிப்பாக அறிவிக்கும் ஏதுக்களாக இரண்டு கனவுகள் காப்பியத்தில் இடம் பெறுகின்றன. கோவலனும் கண்ணகியும் புகார் நகரை விட்டுப் புறப்படுமுன்னர்க் கண்ணகியும் (கனாத். 46–55) மதுரைப் புறஞ்சேரியை அடையுமுன்னர்க் கோவலனும் (அடைக், 95–106) கனவு காண்கின்றனர். இவ்விரு கனவுகளும் தீய பயன்தரும் கனவுகளாகக் கருதப்பட்டனவேயன்றி, அவை அவர்தம் பழவினைப் பயனைப் பழுதின்றி உரைக்கும் அறிவிப்பாகக் கொள்ளப்படவில்லை. கனவு நிகழ்ச்சி பற்றிக் கூறிய கண்ணகி ''கடுக்கும் என் நெஞ்சம்'' எனத் துணுக்குற்றாளேனும், 'நற்றிறம் கேட்கின் நகையாகும்' (கனாத். 54) என்று கூற, கோவலன் 'கடிதீங்குறும்' (அடைக். 106) என—உரைத்து மேற்செயல்படுவாராயினர்.

'வியங்கொண்டான்' என்னுமாறு, கோவலனை ஏவிய வினை அங்கேயே நின்று விடாது, கடாவிக் கொண்டே வருதலால், அவன் உள்ளம் முடிவினை நோக்கி அவனைச் செலுத்திக்கொண்டே இருக்கிறது. இதனை,

''காரிருள் நின்ற கடைநாட் கங்குல்
ஊழ்வினை கடைஇ உள்ளந்துரப்ப''

(நாடு. 3–4)

என அடிகள் குறிப்பிடுகின்றார். வினைப் பயனை நுகரச் செல்லும் கோவலன் மதுரைப் பயணம், 'உலந்த பொருள் ஈட்டுதலுற்றேன்' (கனாத். 75) என்னும் நம்பிக்கையில் மகிழ்வோடும் தடையின்றியும் சென்று கொண்டிருக்கிறது.

வினை விளைவு பற்றிய சிந்தனையின்றி, மீண்டும் வாழவேண்டும் என்ற குறிக்கோளில் செல்கின்ற கோவலன் கண்ணகியின் நல்வாழ்வில் நாட்டம் கொண்ட கவுந்தியடிகட்கும் அவர்களுடைய வினையின் பயனை அறியக் கூடவில்லை. ஆனால், இம்மூவரும் வழியிடையில் சந்திக்கும் சாரணர், அதனை அறிந்தனரா

யினும் ஆர்வமும் செற்றமும் அகல நீக்கிய வீரராதலின் அதற்காகத் துயர் கொள்ள வில்லை. அப்போது சாரணர் கவுந்திபால்,

> ''ஒழிகென ஒழியாது ஊட்டும் வல்வினை
> இட்ட வித்தின் எதிர்வந்து எய்தி
> ஒட்டுங்காலை ஒழிக்கவும் ஒண்ணு'
> (நா. 171–173)

எனக்கூறிய அறிவுரை வினைவலி பற்றிய பொது அறிவுரையாகவே கருதப்பட்டது. அறிவுரை கோவலன் கண்ணகிக்கு நேரவிருப் பதறிந்து கூறப்பட்டதாகக் கவுந்தி அடி களும் உணரவில்லை. தம்மை வழிபட்ட வர்க்கு அறங்கூறப்போந்த சாரணர், அருகன் புகழ் கூறுமுன்பே வினைவலிமையைக் கூறிய தற்கு வேறென்ன காரணம் இருக்கக்கூடும்? விளைவினைத் தவிர்க்க முடியாது துய்க்கும் போது இவ்வறிவுரையால் ஆறுதல் கொள்ளக் கூடும். வையை நீர்க்காட்சி, அகழியின் மலர்க்காட்சி, ஆரெயிலின் கொடிக்காட்சி ஆகியவற்றில் இளங்கோவடிகள் அமைத்துக் காட்டியுள்ள தற்குறிப்பேற்றங்கள் காப்பி யம் பயில்வோர்க்கு வினையின் விளைவினை முன்னுணர்த்தும் வாயிலாக அமைகின் றனவேயன்றிக் காப்பிய மாந்தர்கட்கு ஒன் றும் உணர்த்துவனவாக இல்லை.

புறஞ்சேரியில் தங்கிய கோவலன் தன் மனைவி துயருழக்குமாறு, சிறுமையுற்ற தன் நிலையைக் கூறக் கேட்ட கவுந்தி, அவனுக்கு ஆறுதல் கூறும் வாயிலாக,

> ''தீதுடை வெவ்வினை உருத்த காலைப்
> பேதமை கந்தாப் பெரும் பேதுறுவர்
> ஒய்யா வினைப்பயன் உண்ணுங் காலைக்
> கையாறுகொள்ளார் கற்றறி மாக்கள்''
> (ஊர். 31–34)

எனக்கூறி, இராமன் நளன் வரலாற்றைச் சான்ருகக் காட்டுகின்ருர். நளன் தன் மனைவியை இடையிருளில் பிரிந்தது வல்வினைப் பயனே என்றும் கூறுகின்ருர். இவையனைத் தும், இதுவரை கோவலனுக்கு நடந்த நிகழ்ச் சிகளுக்குச் சமாதானமாக அமைகின்றனவே யன்றி, இனிவரும் விளைவினை உணர்த்துவன வாக இல்லை. வழியிடையில் கோவலன் கண்ணகியைக் கண்ட மாடலன், கோவலன் உற்ற நிலைக்கிரங்கி'

> ''இம்மைச் செய்தன யானறி நல்வினை
> உம்மைப் பயன்கொல் ஒருதனி உழந்தித்
> திருத்தகு மாமணிக் கொழுந்துடன்
> போந்தது''
> (அடைக். 91-93)

எனக் கூறும் இரக்க உரையும் இவ்வகையி லமைந்ததேயாகும்.

இவ்வாறே மாதரி மனையில் கண்ணகி சமைத்திட உணவினை உண்ட கோவல னும் கூட, தன் மனைவியும் தானும் அடைந்த துன்பத்திற்கு இரங்கி,

> ''மாயங் கொல்லோ வல்வினை கொல்லோ
> யானுளங் கலங்கி யாவதும் அறியேன்''
> (கொலை. 61–62)

என வருந்தி உரைக்கிருன்.

ஆயர்பாடியில் மாதரியின் வீட்டில் கோவலனும் கண்ணகியும் தங்கியிருந்த ஒரு நாள் வாழ்வு, அணையுமுன்னர்ச் சுடர்மிக் கொளிரும் விளக்கினைப்போன்று காணப்படு கின்றது.

அங்கிருந்து கோவலன் தன் மனைவியி னுடைய சீறடிச் சிலம்பின் ஒன்று கொண்டு மதுரையில் விற்றுவருவதாகச் செல்கின்ருன். யாழிசையில் கால்கொண்டு, அவனை இயக்கி வந்த ஊழ்வினை, இனிச் சிலம்பினைத் தன் நிலைக் களனகக் கொண்டு செயல்படுகின்றது. மாதவியிடமிருந்து கோவலனைப் பிரிக்க, அவர்கள் தம் கலைத் தொடர்பிற்கு ஏதுவான யாழிசையைக் காரணமாகவும் இறுதியில் கண்ணகியிடமிருந்து கோவலனைப் பிரிப்ப தற்கு அவர்கள் தம் கரணத்தொடர்பிற்கு ஏதுவான சிலம்பினைக் காரணமாகவும் கொண்டு விதி புரிந்த விளையாட்டு காப்பியத்

தில் அழகுறக் காட்டப்பட்டுள்ளது. இரட்டையாக விற்கவோ வாங்கவோ வேண்டிய பொருள்களைப் பிரித்து ஒன்றாகக் கொண்டு செல்ல நேர்ந்ததும் வினையின் பயனே போலும்.

அரண்மனைச் சிலம்பினைத் திருடிய கள்வன் தன் வீட்டில் இருப்பதாகப் பொற்கொல்லன், அந்தப்புரம் செல்லும் அரசனிடம் கூறுகின்றான். கூறக்கேட்ட மன்னன் ஊர்காப்பாளரைக் கூவி,

''தாழ்பூங் கோதை தன்காற் சிலம்பு
கன்றிய கள்வன் கையதாகில்
கொன்றச் சிலம்பினைக் கொணர்க''
(கொலை. 151–153)

எனக் கையெழுத்திட்டு வெற்றுக் காசோலை கொடுப்பதுபோலக் *(Blank Cheque)* கட்டளையிட்டுவிடுகின்றான். காவலர்கள் கோவலன் கையில் சிலம்பைக் கண்டவுடன் கள்வன் என முடிவுசெய்து, அரசாணையை நிறைவேற்ற முடிந்தது இக்கட்டளையால்தானே; இங்கு

''வினைவிளை கால மாதலின் யாவதும்
சினையலர் வேம்பன் தேரா னாகி''
(கொலை. 149–150)

செயல்பட்டதாக அடிகள் குறிப்பிடுகின்றார். இங்கு வினைவிளைகாலம் என்றது கோவலனுடைய வினைவிளை காலமேயன்றி நெடுஞ்செழியன் வினைவிளை காலமுமாகும். பாண்டி மன்னன் வினைவிளைவிற்கும், ஒரு சிலம்பே காரணமாக அமைந்துவிட்டது. ஊர்காப்பாளர் கோவலனைக் கண்டபொழுது அவன் தீவினையாகிய முதிர்ந்த வலையில் அகப்பட்டிருந்ததாகத் 'தீவினை முதிர்வலைச்சென்று பட்டிருந்த கோவலன்' என அடிகளே தம் கூற்றாகக் கூறுகின்றார். இப்போது விதி பொய்வினைக் கொல்லன் வாக்கினைத் துணைக்கொண்டு விரைந்து, கல்லாக் களிமகன் கை வாளின் வழித் தன் பலனை ஊட்டிவிடுகின்றது. கோவலன் உயிர் துறப்பதும், காவலன் கோல் கோடுவதுமாகிய இரு வகையில் விதியின் வெற்றி அமைகிறது. இது கொண்டு கொலைக்களக் காதை இறுதி வெண்பா

''நண்ணும் இருவினையும் நண்ணுமின்கள் நல்லறமே
கண்ணகி தன்கேள்வன் காரணத்தால்— மண்ணில்
வளையாத செங்கோல் வளைந்ததே பண்டை
விளைவாகி வந்த வினை'' யென
அறமுரைக்கின்றது

கோவலன் கொலையுண்ட பின்னர்க் கண்ணகியை உள்ளிட்ட கதை மாந்தர் அனைவரும் அச்செயலை விதியின் விளைவாகவே கொண்டு இரங்கவோ, சினக்கவோ, சபிக்கவோ செய்கின்றனர். கோவலன் கொலையால் வளைந்த செங்கோலையும், பாண்டியன் இறப்பால் அது செம்மையுற்றதையும் அறிந்த சேரன் செங்குட்டுவன்,

'வல்வினை வளைத்த கோலை மன்னவன்
செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோ லாக்கியது'
(காட்சி. 98–99)

என வியந்து போற்றுகின்றான். சென்ற கணவன் வரக்காணாது தடுமாற்றமெய்திய கண்ணகி, கோவலன் கொலைச்செய்தி அறிந்து, நிலமிசைப்புரண்டு, செங்கண் சிவப்ப, அழுதேங்கி மாழ்குகின்றாள். தன் கணவன் கொலைக்குப் பாண்டியனே காரணமாவான் எனக் கருதிக் கதறுகின்றாள். தன் கணவன் கள்வனல்லன் என வானக் குரல் கேட்டுக் கொலைப்பட்ட தன் கணவனைக் காணப் புறப்படுகின்றாள். செய்தி அறிந்த நகரமாந்தர்களும்

''களையாத துன்பம் இக்காரிகைக்குக் காட்டி
வளையாத செங்கோல் வளைந்த திதுவென்
கொல்''

என மருட்கை எய்தினர். கொலையுண்டு குருதிசோரக் கிடக்கும் தன் கணவனைக்

கண்டு கதறி, இக்கொலைக்குக் காரணமான முன்வினையை யாரேனும் காட்டிக் கூறுவார் களாவென வினவி அழுது வெகுள்கிறாள். பின்னர்த் தன் கணவனைக் கொன்ற பாண்டி யன் முன் வழக்காடச் செல்கின்றாள். யாரென வினவிய மன்னனுக்கு

'வாழ்தல் வேண்டி ஊழ்வினை துரப்ப'
(வழக். 59)

நின்னகரடைந்து, நின்னால் கொல்லப்பட்ட கோவலன் மனைவி என்கின்றாள். உண்மை உணர்ந்த பாண்டியன் உயிர்விட, மீண்ட கண்ணகி, அரசையும் மதுரையையும் அழிப்பேன் எனச் சூளுரைத்து எரித்த நிலை யில் மதுராபுரித் தெய்வம் தோன்றிக் கட் டுரைக்கிறது. அதனால், தன் கணவன் கொலைக்கான முன்வினை வரலாற்றோடு மதுரை நகரம் தீயுண்ணுதற்காம் சாபத்தை யும் அறிகிறாள். கொடியோடு குடைதாழ மன்னன் இறந்த நிலையில், அவன் வினை அவனை வீழ்த்தியது என்னும் கருத்தில் அரசியிடம்,

முற்பகல் செய்தான் பிறன் கேடு தன்கேடு
பிற்பகல் காண்குறூஉம் பெற்றிய காண்.
(வஞ். 3–4)

என்று கூறிய கண்ணகி, தன் கணவன் வீவிற்கும் அவ்வாறே அவன் வினை காரணமா கும் என்றறியாமல், 'ஒட்டேன் அரசோடு ஒழிப்பேன் மதுரையும்' (வஞ். 37) எனக் கூறி எரிக்கின்றாள். எரித்தபின், மதுராபுரித் தெய்வம்,

''மாதராய் ஈதொன்று கேளுன் கணவற்குத்
தீதுற வந்த வினை''
(கட்டு. 29–30)

எனக்கூறி,

''உம்மை வினைவந்து உருத்தகாலைச்
செம்மையிலோர்க்குச் செய்தவ
முதவாது
(கட்டு. 171–172)

என்று தெளிவிக்கிறது. அதனால், ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும் என்னும் தெளி வுரையை நன்குணர்ந்த கண்ணகி இரங்கி அமைவுறுகின்றாள்.

மலை நாடு சென்ற கண்ணகி குன்ற மொன்றில் வேங்கை மர நிழலில் நின்றகாலை, மலைக் குறமகளிர் யாரென வினவுகின்றனர். அவர்கட்கு விடையாக

மணமதுரையோடு அரசு கேடுற வல்வினைவந்
துருத்தகாலைக்
கணவனை அங்கிழந்து போந்த கடுவினையேன்
யான்''
(குன்றக். 5, 6)

என்று கூறுவதில் அவள் அவல வரலாறு முழுவதையும் காணலாம். வல்வினை வந் துருத்தல், இடைநிலைத் தீவகமாக முன்னும் பின்னும் இயைந்து பொருள் விளக்குகிறது. இவ்விடையில், கண்ணகியின் கடுஞ்சினம் பழிவாங்கும் உணர்ச்சி அனைத்தும் நீங்கி, இரக்கமும் அமைதியும் கொண்டு நிற்கும் நிலையினைக் காண்கின்றோம். அவள் வானகத் தெய்வமாகத் தடையாய் நிற்கும் செற்ற மும் சினமும் இங்கு நீங்கிவிடுகின்றன.

கோவலன் கண்ணகியின் ஊழ்வினைப் பயன் விளைந்தவாற்றை அவர்தம் வாழ்க்கை யினைத் திருமணத்திலிருந்து காட்டுவதன் மூலம் அடிகள் காட்டியுள்ளார். பாண்டிய மன்னன் ஊழ்வினை விளைவினைச் சுருக்கமாக வும் நன்கு பதியுமாறும் கூறியுள்ளார். மாட லன் செங்குட்டுவன் முதலியவர்களும் ஏன் கோவலனே கூடப் பாராட்டும்படியாக அமைந்த பாண்டியனுடைய இம்மை வாழ் வின் திடீர் வீழ்ச்சிக்கான முன்வினைவிதந்து கூறப்படாவிடினும் அஃதொரு பழவினையின் பயனே என நம்புமாறு காட்டப்பட்டுள்ளது. தீவினையின் தீயபயன் விளையும் பாங்கினைக் காட்டிய அடிகள், நல்வினை நல்ல பயன்தருவ தனையும் குறிப்பாக உணர்த்தியுள்ளார். தெய் வக் கண்ணகிக்கு வஞ்சிமாநகரில் கோயில் எடுத்துப் பலரும் கூடிய நிலையில் அங்கு நிகழ்ந்ததாகக் காட்டிய நிகழ்ச்சி ஒன்றில் இது நன்கு விளங்குகிறது. இவ்வற்புதத்தை

விளக்க முற்பிறப்புணர்த்தும் நீர் பயன்படு கிறது. அரட்டஞ்செட்டி சிறுமியர் வாயிலாக முற்பிறப்பு—முன்வினைப்பயன் விளக்கப் படுகிறது. பிறவி அடிப்படையும், இருவினைப் பயனும் மாடலனுடைய விளக்க உரையால் தெளிவாக வலியுறுத்தப்படுகின்றன. மாடல மறையோன்

நற்றிறம் புரிந்தோர் பொற்படி எய்தலும்
அற்புளம் சிறந்தோர் பற்றுவழிச் சேரலும்
அறப்பயன் விளைதலும் மறப்பயன்
விளைதலும்
பிறந்தவர் இறத்தலும் இறந்தவர் பிறத்தலும்
புதுவதன்றே தொன்றியல் வாழ்க்கை
(வரந்தரு)

என்று செங்குட்டுவற்குக் கூறி வினைப் பயன் மறுபிறப்பு ஆகியவற்றைத் தெளிவுறுத்துகின்றான். ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும் மிகமிகப் பழங்காலந் தொட்டே உள்ள நிகழ்ச்சியாகும் என்பதைப் புறநானூறு

'புதுவதன்றிவ் வுலகத் தியற்கை'
(புறம். 76)

என்று கூறுகிறது. அவ்வாறே சமயங்கள் விளக்கமுற்ற நிலையில் மறுபிறப்புண்மையும் வினைப்பயன் விளைவும் தொன்று தொட்டு வருவனவாகும் என்னும் கருத்தினைப் 'புதுவ தன்றே தொன்றியல் வாழ்க்கை' என்னும் அடியால் சிலப்பதிகாரம் அழகுறக் காட்டு கிறது.

இப்பிறவிக்கு முற்பிறப்பு நிகழ்ச்சிகள் ஏதுவாகும் என்பதும், இனிவரும் பிறப்பிற்கு இப்பிறப்பு நிகழ்ச்சிகள் ஏதுவாகும் என்பதும் வினைக்கொள்கையை ஏற்றுக்கொண்ட சமயங்கள் உடன்பட்ட கருத்தாகும். கோவலன் முற்பிறவியினையும், இம்மைப் பிறவியினையும் அவனொடு தொடர்பு கொண்ட சிலருடைய மறு பிறவியையும் காட்டி அதன் வாயிலாக, ஊழ்வினை பயன் விளைக்குமாற்றை இளங்கோவடிகள் தம் காப்பியத்தில் திறம் படக் காட்டியுள்ளார். மேலும், தனி மனித வாழ்வில் வினைக்குள்ள செல்வாக்கினைப் போலவே, பொது வாழ்வில்—அரசியல் வாழ்விலும் அது செல்வாக்கு மிகக்கொண்டு பயன்விளைக்கின்றது என்பதனையும் தெளிவுறுத்தியுள்ளார். அகவாழ்விலும், புறவாழ்விலும் ஊழ்வினை செயல்படுமாற்றினைக் கவின் மிக்கதொரு பின்னல் திரையாக (*Tapestry*) அடிகள் பின்னிக் காட்டியுள்ள திறத்தால், உலக இலக்கிய வரிசையின் முன்னணியில் இடம் பெற்றுத் திகழ்கிறது—சிலப்பதிகாரம். அதனால் ''சிலப்பதிகாரம் என்றோர் மணி யாரம் படைத்த தமிழ்நாடு'' என்னும் புகழுரை பொருளுரையாகக் காண்கிறோம்.



# காய் மாண்ட தெங்கின் பழம்

வித்துவான் செ. வேங்கடாராமச் செட்டியார்,
தமிழ் விரிவுரையாளர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

தமிழ் இலக்கியச் சுவையை நுகர எண்ணும் தமிழ்ச் சான்றோர் எவரும் 'சீவக சிந்தாமணி' என்னும் செந்தமிழ்க் காப்பியத்தைப் படிக்காமல் இருத்தல் இயலாது. சங்கத் தமிழ் நூல்களைப் போலவே பழுத்த சுவையுடைய முழுத்தமிழ்ச் சொற்களாலியன்று, கற்பனைவளங் கனிந்து, ஓசைநயம் மிக்குக் கற்பவர் நெஞ்சுக்குக் கற்கண்டுபோல் இனிப்பது சீவகசிந்தாமணி. சோழன் அநபாயன் இந்தக் காப்பியத்தின் சுவையில் ஈடுபட்டு மற்றை நூல்களையெல்லாம் நோக்காதிருந்தான் என்பதே இந்நூலின் சிறப்பிற்குப் பெரிய சான்றாகும். நச்சினார்க்கினியர் இதற்கு எழுதியுள்ள உரை, இந்நூலில் வரும் ஐயங்களைப்போக்கி நயங்களை நன்கு புலப்படுத்தும் நல்லுரையாக அமைந்துள்ளது. அருகசமயத்தின் சிறந்த கொள்கைகளைப் புலப்படுத்தும் நூலாகச் சீவகசிந்தாமணி அமைந்திருப்பினும் அந்தச் சமய வேறுபாட்டை உளங்கொளாமல் தமிழிலக்கியச்சுவை ஒன்றையே கருதி அதைப் பன்முறை படித்து மகிழ்தல் சைவப் பெருமக்கட்கும் வைணவப் பெரியார்கட்கும் இயல்பாகும்.

திருத்தக்கதேவர் என்ற செந்தமிழ்ப் புலவர் தம்புலமை நலம் முழுதும் தோன்ற, எல்லாவகையான அழகு நலங்களும் அமைய இக்காப்பியத்தை அமைத்துள்ளார். கதையின் போக்கும், கற்பனை நோக்கும், சுவைமிகு வாக்கும் நிறைந்து, படிப்போரை மீண்டும் மீண்டும் படிக்கத்தூண்டும் சிறப்பினது சீவக சிந்தாமணி. சீவகசிந்தாமணியைப் படிக்காத புலவர்களைக் குறைபாடுடைய புலவர் எனக் கருதியகாலமும் உண்டு. அத்தகைய சிறப்புச் சீவகசிந்தாமணிக்கு உண்டு.

இந்தக் காப்பியத்தைப் படித்து மகிழும் வாய்ப்பையான் பெற்றதுண்டு. சிற்சில பகுதிகளை ஆழ்ந்து சிந்தித்ததுமுண்டு. அந்த ஆழ்ந்த சிந்தனையில் ஒரு பகுதியையே இங்கு எழுதுகின்றேன்.

நாமகள் இலம்பகம் முதல் முத்தியிலம்பகம் ஈறாகப் பதின்மூன்று, இலம்பகங்களையுடையதாக இப்பெருங்காப்பியத்தை விரித்துக் கூற விரும்பிய திருத்தக்கதேவர், இசையால் திசைபோய ஏமாங்கதம் என்னும் நாட்டின் வளத்தைக் கூறத் தொடங்குகின்றார்.

''காய் மாண்ட தெங்கின் பழம்
வீழக் கமுகினெற்றிப்
பூமாண்ட தீந்தேன் தொடை கீறி
வருக்கை போழ்ந்து
தேமாங் கனிசிதறி வாழைப் பழங்கள்
சிந்தும்
ஏமாங் கதமென் றிசையாற்
றிசைபோய துண்டே''
(நாமகள்–2)

என்று கூறுகின்றார். இப்பாடல் ஏமாங்கத நாட்டு மருதநிலத்து வளத்தை நமக்குக் காட்டுவதாக அமைந்துளது. எழில் பொங்கும் தெங்கும், கவின்மிக்க கமுகும், பயன்

மிக்க பலாமரங்களும், தேனினுமினிய தேமா மரங்களும், வளங்கனிந்த வாழைகளும் செறிந்துள்ள ஒரு சூழலைத் திருத்தக்கதேவர் நம் மனக்கண்முன் நிறுத்துகின்றார். விண்ணை முட்டும் தென்னையிலிருந்து தேங்காய் நெற்று காம்பற்று வீழ்கின்றது.

தெங்கு மிகவுயர்ந்து வளர்ந்திருப்பது. கமுகு அந்தத் தெங்கினும் சிறிது குறைந்த வளர்ச்சியுடையது. பலாமரம் கமுகினும் குறைந்த உயரமுடையது. தேமா மரம் பலா மரத்தினும் சிறிது குறுகியது. வாழை மரம் தேமா மரத்தினும் தாழ்ந்துள்ளது. இங்ஙனம் தெங்கும், கமுகும், வருக்கையும், தேமாவும், வாழையும் ஓரிடத்தே நெருங்கி வளர்ந்துள் ளனவாயினும் முறையே ஒன்றின் ஒன்று தாழ்ந்துள்ள நிலைமையை நாம் உளங்கொளல் வேண்டும். தெங்கின் பழம் வீழும்போது அதன் அருகிலுள்ள கமுகின் நெற்றியில் படு கின்றது. அதனால், அந்தக் கமுக மரத்தில் தேனீக்கள் கட்டியிருந்த தேனிறால் கிழி கின்றது. தேனிறாலைக் கிழித்த தெங்கின் பழம் கமுகின் அருகிலுள்ள பலாமரத்தில் படுகின்றது. அதனால், பலாப்பழம் பிளவு படுகின்றது. பலாப்பழத்தைப் பிளந்த தெங்கின் பழம் பலாவின் அருகில் வளர்ந் துள்ள தேமா மரத்தில் படுகின்றது. தேமாங் கனியைச் சிதறவடிக்கின்றது. அதன்பின் மாமரத்தின் அருகிலுள்ள வாழை மரத்தில் படுகின்றது. வாழைப்பழங்கள் சிந்துகின்றன.

தெங்கின் பழம் இப்படித் தேனிறாலைக் கீறிப் பலாப்பழத்தைப் பிளந்து தேமாங் கனியைச் சிதறவடித்துக்கொண்டு வாழைப் பழங்களைத் தரையில் சிந்தும் இயல்புடையது ஏமாங்கத நாடு. இந்த ஐவகை மரங்களும் ஒரே இடத்தில் நெருங்கி வளர்ந்துள்ள வள மிக்க நிலையைத் திருத்தக்க தேவர் நமக்குக் காட்டுகின்றார். எந்த நாட்டிலும் காணப் படாத இந்த வளத்தைப் பெற்றிருப்பதால் ஏமாங்கதநாடு இசையினால் (புகழினால்) திசை யுள்ள அளவுவரை போய்ப் பரவியுள்ளது என்கின்றார் தேவர். முக்கனிகளும் கனிகின்ற வேனிற்காலத்து மருதநிலத்துக் காணப்படும் காட்சியையே இங்குக் கூறுகின்றார் என்பது தெளிவு. நாட்டுவளம் காட்டத் தொடங்கும் போதே மிக இனிமையான காட்சியை நமக் குக் காட்டுகின்றார். தேனும், பலாப்பழ மும், மாம்பழமும், வாழைப்பழமும், தேங் காய் நெற்றோடு நம் மனக்கண்முன் காட்சி யளிக்கின்றன. தேங்காய்த் துருவலும் தேனும் முக்கனிகளும் கலந்த கலவையை-பஞ்சாமிர் தத்தை உலக வடிவாகிய இறைவனுக்குத் திருமஞ்சனமாட்டுகின்றாரோ தேவர் என்ற எண்ணம் உண்டாகின்றது அன்றோ !

மேலிருந்து கீழ்வீழ்கின்ற தெங்கம்பழம் இவ்வாறு தேனிறால்களைக்கீறி, வருக்கை போழ்ந்து, தேமாங்கனி சிதறி, வாழைப்பழங் களைச் சிந்தும் இந்தக் கற்பனை தேவர்க்கு எப்படித் தோன்றியிருக்கலாம் என எண்ணிய போது வன்பரணர் பாடிய பாடல் ஒன்று நினைவிற்கு வந்தது.

வல்வில்லோரி என்ற வள்ளல் காட்டில் வேட்டையாடுகின்றான். ஓரியின் வலிய வில்லினின்று புறப்பட்ட அம்பு யானையை நோக்கித்தான் விடப்பட்டது. ஆனால், யானையை வீழ்த்திய அந்த அம்பு அதனோடு அமையாமல் அந்த யானையைக் கொல்லத் திறந்த வாயொடு நின்றிருந்த புலியையும் கொன்றுவிட்டது. புலியைக் கொன்றதோடு அமையாமல் பின்னும் விரைகின்றது. அப் புலியைக்கண்டு அஞ்சிநடுங்கிக்கொண்டிருந்த புள்ளிமானையும் தரையில் உருளச் செய்தது. அதனோடுமமையாது அந்தப் புள்ளிமானைக் கொல்லக் குறிபார்த்திருந்த உரல்போன்ற தலையையுடைய காட்டுப்பன்றியின் உடம் பில் நுழைந்து அதனை வீழ்த்தியது. அதன் பின்னும் விரைந்து சென்று, அப்பன்றிக்குப் பயந்து ஆழ்ந்த புற்றில் ஒளிந்திருந்த உடும்பின் உடம்பில் தைத்து அமைந்தது என்ற கருத் தமைந்த—

"வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி
பேழ்வா யுழுவையைப் பெரும்பிறி
துறீஇப்
புழற்றலைப் புகர்க்கலை யுருட்டி
யுரற்றலைக்

கேழற் பன்றி வீழ வயல
தாழற் புற்றத் துடும்பிற் செற்றும்
வல்வில் வேட்டம் வலம்படுத்
திருந்தோன்''
(புறநா-152)

என்ற பாடற் பகுதியில் வரும் அம்பின் செயலோடு காய்மாண்ட தெங்கின் பழத்தின் செயல் ஒத்திருத்தலைக் காணலாம். வல்வில் லோரி தேரிலிருந்து யானையின்மேல் அம்பினை விடுகின்றான். தேர் யானையினும் உயர்ந்திருப் பது ஆதலின் அங்குநின்று விடப்பட்ட அம்பு அதனினும் தாழ்ந்துள்ள யானையின் உடம்பில் புகுந்து வெளிப்பட்டு அவ் யானையினும் குறுகி யதாக இருக்கும் புலியைக் கொல்லுதலும், புலியினுடம்பிலிருந்து உருவி அப்புலியினும் குள்ளமாக இருக்கும் புள்ளிமானையுரட்டு தலும், பின்பு அம்மானினும் குள்ளமாகிய காட்டுப்பன்றியைத் தாக்கிக்கொன்றுசென்று பின் தரையில் ஆழ்ந்துள்ள புற்றில் இருந்த உடும்பின் உடம்பில் தைத்து அமைதலும் ஆகிய செயல்கள் அந்த அம்பினை எய்த வல்வில்லோரியின் வில்வலியையும் மெய்வலி யையும் காட்டுகின்றன. தேர்மேலிருந்து யானையிருந்த திசை நோக்கி விட்ட அம்பு அவ்யானையை யுருவிப்பின் புலியை யுருவிப் புள்ளிமானையும் யுருவிப் பன்றியை யுருவிப் புற்றில் உள்ள உடும்பில் தைத்தது என்ற இப்பாடற் கருத்தே கம்பரை,

''உலையுருவக் கனலுமிழ்கட் டாடகைதன்
னுரனுருவி
மலையுருவி மரமுருவி மண்ணுருவிற்
றொருவாளி''
(கம்ப-பால-குலமுறை-26)

என இராமனது அம்பைப்பற்றிக் கூறச் செய்தது எனலாம்.

மேலும் குறிஞ்சிக் கலியில் கபிலர்,

''யானை, அடியொதுங் கியக்கம் கேட்ட
கானவன்
நெடுவரை ஆசினிப் பணவை யேறிக்
கடுவிசைக் கவணையிற் கல்கை
விடுதலின்
இறுவரை வேங்கையின் ஒள்வீ சிதறி
ஆசினி மென்பழம் அளிந்தவை
யுதிராத்
தேன்செய் இறாஅல் துளைபடப் போகி
நறுவடி மாவின் பைந்துணை ருழக்கிக்
குலையுடை வாழைக் கொழுமடல்
கிழியாப்
பலவின் பழத்துள் தங்கும் மலைகெழு
வெற்பனைப்
பாடுகம் வா வாழி தோழி''
(கலித்-41)

எனக் கூறியுள்ள கவணின் செயலும் நினை விற்கு வந்தது.

''யானையின் அடியோசையைக் கேட்ட கானவன் உயர்ந்த மலையில் ஆசினிப்பலாவின் மேல் இட்ட பரணிலே ஏறிக் கடிய விசை யினையுடைய கவணில் கல்லை எறிகையினாலே அக்கல் முறிந்த வரையிடத்து நின்ற வேங்கையினது ஒள்ளிய பூக்களைச் சிதறி, ஆசினிப் பலாவினது மெத்தென்ற பழம் நெகிழ்ந்தவற்றை உதிர்த்து, தேனினம் வைத்த இறாலைத் துளையுண்டாம் படி உருவி நறிய வடுவையுடைய மாவினது பசிய கொத் துக்களை உழக்கிக் குலையை யுடைத்தாகிய வாழையினுடைய கொழுவிய மடலைக் கிழித் துப் பலவினது பழத்துக்குள்ளே தங்கும் சிறிய மலைகள் பொருந்தின பெரிய மலையினை யுடையவனைப் பாடுவோமாக'' என்பது இப் பாடற் பகுதியின் பொருள்.

வன்பரணர் வல்வில்லோரியினது அம்பின் வலிமை புலப்படக் கூறிய பாடலின் அமைப்பும் கபிலர் கானவனது கவண் கல்லின் வலிமை தோன்றக் கூறிய இயற்கை வருணனையின் அமைப்பும், காய்மாண்ட தெங்கின் பழம் வீழ்ந்தமையால் நிகழ்ந்தன வாகத் திருத்தக்கதேவர் கூறியுள்ள அமைப்பும், தம்முள் ஒப்புமையுடையன வாகக் காணப்படுதல் காணலாம். வன் பரணர் பாடலுக்கும் திருத்தக்க தேவரின் பாடலுக்கும் இருக்கின்ற ஒப்புமையைக் காட்டிலும் கபிலரின் பாடலுக்கும் தேவரின்

பாடலுக்கும் உள்ள ஒப்புமை பெரிதாகத் தோன்றுகின்றது.

வல்விலோரியின் அம்பு தன் வலியாலும் விரைவாலும் யானை, புலி, மான், பன்றி, உடும்பு என்ற உயிர்களை முறையே ஊடுருவிச் சென்று கொன்றது. ஆனால், கபிலர் காட்டும் கானவன்விட்ட கவண்கல் குறிவைத்த யானையின்மேல் படவே இல்லை. கானவன் யானையைக் கண்ணால் பார்க்கவேயில்லை. யானை நடக்கும் ஒலியையே கேட்டுப் பரணில் ஏறி விரைந்து எறிந்த கவண்கல், மரச்செறிவு மிக்கிருத்தலால் யானைமேல் படுவதற்குமுன் பூத்த வேங்கையின் ஒளிமிக்க மலர்களைச் சிதறடித்தது; பின்பு வேங்கை மரத்தை அடுத்திருந்த ஆசினிப்பலாவின் அளிந்த கனியை உதிர்த்தது; அம்மரத்தின் மற்றோர் மருங்கில் தேனீக்கள் கட்டியிருந்த தேனிறாலைத் துளைத்துக்கொண்டு சென்று, அதன் அருகேயிருந்த மாமரத்தின் பசுமையான மாவடுக்களின் கொத்துக்களை அலைத்தது; அந்த மாமரத்தின் அருகிலிருந்த குலை வாங்கிய வாழையின் கொழுவிய மடலைக் கிழித்தது; அதற்கருகே நின்ற வேர்ப்பலவின் அடியில் பழுத்து வெடித்திருந்த பலாப்பழத்தில் தங்கிவிட்டது.

கவண்கல், தினைக்கதிரை மேய வந்த யானைகளை ஒன்றுமே செய்யவில்லை. எனவே, கபிலர் காட்டிய கானவன் கவண்கல் ஒருயிர்க்கும் ஊறுசெய்யவில்லை. வேங்கையின் மலர்களைச் சிதறுதலும், தேனிறாலைத் துளைத்தலும், பலவின் கனியை உதிர்த்தலும், மாவடுக்களின் கொத்துக்களை உழக்குதலும். வாழையின் மடலைக் கிழித்தலும், வேர்ப்பலவின் பழத்தில் தங்குதலும் கொலையாகாமை தெளிவு. எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு புலவுத் துறந்த அந்தணராகிய கபிலர் தாம் கூறும் இயற்கை வருணனையிலும் கொலைச் செயலைக் கூறவில்லை என்றுதான் கொள்ளவேண்டும். வன்பரணர் அம்பின் ஐந்து செயலைக் குறிப்பிடக் கபிலர் கவண் கல்லின் ஏழு செயல்களை இயம்புகின்றார். ஆனால், கொலையொடுபடாத செயல்களாகவே கூறியுள்ளார்.

எனவே, வல்விலோரியின் அம்பு செய்த செயலினும் கானவன் கைவிடு கவண்கல் செய்த செயல் கொடுமையுடையதன்று என்பது தெளிவு. பெரும்பாலும் ஓரறிவுயிர்களையே மேலிருந்து கீழாக-படிப்படியாகச்-சிதைத்துச் சென்று இறுதியாகத் தரையில் பழுத்திருந்த வேர்ப்பலாப்பழத்தில் தங்கிவிட்டது. திருத்தக்கதேவரின் தெங்கின் பழம் செய்த செயல்கள், கபிலர் காட்டிய கானவன் விட்ட கவண்கல்லின் செயல்களைப் பெரிதும் ஒத்துக் காணப்படுகின்றன.

வன்பரணர் காட்டும் அம்பு வல்விலோரியின் முயற்சியால் விடப்பட்டுப் படிப்படியே யானை முதலிய ஐந்துயிர்களைக் கொன்றது. கபிலர் காட்டும் கானவன் கவண்கல், கானவனது முயற்சியால் புறப்பட்டுக் குறிபார்த்த யானையை ஒட்டுதலும் செய்யாது ஓரறிவுயிர்களாகிய வேங்கை மரம் முதலியவற்றை அலைத்துவிட்டுப் பலவின் பழத்தில் தங்கிவிட்டது. ஆனால், கொல்லாநோன்பு மேற்கொண்ட திருத்தக்கதேவர் காட்டும் தெங்கின் பழத்தை யாரும் தள்ளவில்லை. தானே பழுத்து வீழ்கின்றபோது கமுகிலிருந்து தேனிறாலில் படுகின்றது; அந்த இறால் கிழிகின்றது; பின்பு பலாமரத்தின்மேல் வீழ்கின்றது; பலாப்பழம் பிளக்கின்றது. பின்பு மாமரத்தின்மேல் வீழ்கின்றது; தேமாங்கனி சிதறுகின்றது; பின்பு வாழையின்மேல் வீழ்கின்றது; வாழைப்பழங்கள் சிந்துகின்றன. இறுதியில் அந்தத் தெங்கின் பழம் எங்குத் தங்கியது என்பதைக்கூடத் தேவர் சொல்லவேயில்லை, வாழைப் பழங்களைச் சிந்திய நிலையில் அவ்வாழைப் பழங்களோடு தரையில் வீழ்ந்து அமைந்தது என்று கொள்ளலாம். திருத்தக்கதேவர் தம் காப்பியத்தில் சிறந்த பழைய இலக்கியக் கருத்துக்களை எடுத்தாளும் போதும் தம் சமயநெறி கடவாது கொலையொடு படாத செயல்களையே எடுத்தாண்டுள்ள சிறப்பு நினைத்தொறும் வியத்தகும் நீர்மையதாகும். வன்பரணரின்

பாடலமைப்பைப் பின்பற்றியதாக இப் பாடலைத் தேவர் அமைத்திருந்தாலும் அப் பாடலில் அமைந்த கொலைச் செயல்களை யறவே நீக்கி ஓரறிவுயிர்களின் இயல்பான செயல்களாகவே அமைத்துள்ளமை காண லாம்.

தெங்கின் பழத்தால் தேனிறால் முதலி யன சிதைவுற்றன என்ற பொருளும் இச் செய்யுளில் தோன்றுமாயினும், நச்சினார்க்கினி யர், தெங்கின் பழத்திற்கும் அக்கொடுஞ் செயலை ஏற்றிக்கூற விரும்பாது கீறுதல் முதலிய வினைகள் தேன்தொடை முதலிய வற்றிற்கேயேற்றிப் பொருள் கூறியுள்ளார். ''‘வீழ’ என்னும் எச்சம் காரண காரியப் பொருட்கண் இறந்தகாலம் உணர்த்திற்று, ஒழிந்த எச்சம் ஈண்டுச் செய்வதன் தொழில் மேலன'' என்று இலக்கணக் குறிப்பு எழுதி யுள்ளார். இவ்விலக்கணக் குறிப்பின்படி நோக்கினால் தேன்தொடை கிழிவுற்றது; வருக்கை பிளவுற்றது; தோமாங்கனி சிதறி யது; வாழைப்பழங்கள் சிந்தின என அவ் விறால் முதலியவற்றின் தொழில்களாகவே கூறவேண்டும் என்பது பெறப்படும்.

தெங்கின் பழம் வீழ்தலால்தானே தேனி றால் முதலியன சிதைந்தன எனின்? அஃதொக் கும். தெங்கின் பழம் வீழ்ந்தபோது கமுகின் மடல் சிதையவில்லை; பலாவின் இலை உதிர வில்லை; மாவின் காய் சிதறவில்லை; வாழை யின் காய் சிந்தவில்லை; என்பதையும் சிந்தித் தல் வேண்டும். இவ்விடத்தில் பரிமேலழ கரின் உரைத்திறம் நினைத்தற்குரியது, ''என் பிலதனை வெயில் போலக் காயுமே அன்பில தனை அறம்'' (திருக்குறள் 77) என்ற குறளு ரையில், வெறுப்பின்றி எங்கும் ஒரு தன்மைத் தாகிய வெய்யின் முன் என்பில்லது தன்னி யல்பாற் சென்று கெடுமாறு போல, அத் தன்மைத்தாகிய அறத்தின்முன் அன்பில்லது தன்னியல்பாற்கெடும் என்பதாம்'' என்று எழுதியுள்ளார். இந்த உரையைத் தெளிந் தால் நச்சினார்க்கினியர் உரையும் நன்கு தெளி வாகும். தெங்கின்பழம் வீழ்கின்ற போது அவ்வீழ்ச்சியைத் தாங்கிக் கொள்ளும் வன்மையின்மையால் தேனிறால் முதலியன சிதைந்தனவேயன்றி தெங்கின்பழ வீழ்ச்சி யால் மட்டுமன்று; ஆதலின் அவை அவற் றின் தொழில்களேயாம். தெங்கின்பழம் வீழ்தலும் ஒருவகையில் காரணமாகலாம். அவ்வளவே. இயல்பாக முதிர்ந்து வீழ்கின்ற தெங்கம் பழத்திற்குத் தேனிறால் முதலிய வற்றைச் சிதைக்கும் தீச்செயலை ஏற்றிக் கூற லாகாது என்ற எண்ணத்தால் நச்சினார்க்கினி யர் கீறி முதலிய எச்சங்களைச் செய்வதன் தொழிலாகக் கூறினர் என்பது தெளிவு. இத னால் திருத்தக்க தேவரின் குறிப்பை நச்சினார்க் கினியர் எவ்வளவு நன்றாகத் தெளிந்து எழுது கின்றார் என்பது புலனும். திருத்தக்க தேவர் இப்பாடலில் தாவரங்களுள்ளும் ஒன்றை ஒன்று வருத்தின என்ற கருத்திற்கு இடமில் லாதபடி செய்துள்ளார் என்ற நுட்பமும், அந்நுட்பத்தை அறிந்து நச்சினார்க்கினியர் எழுதியுள்ள இலக்கணக் குறிப்பும் நினைந்து நினைந்து உருகத்தக்கன, காணு உயிர்க்கும் கையற்றேங்கும் இயல்பினரல்லரோ தேவர்!

இனி, அகப்பொருள் துறையமைந்த கபிலரின் கலிப்பாட்டில் தலைவனுடைய வெற்பிற்குத் தோழி கூறிய அடைமொழி களில் ஆழ்ந்து கிடக்கும் கருத்துக்களைச் சிந் தித்து நச்சினார்க்கினியர் விளக்கம் தந்துள் ளார். இப்பாடற் பகுதியை வெறும் இயற்கை வருணனையாகக்கொள்ளாமல் இவ்வியற்கை வளத்தைப் புலப்படுத்தும் முகத்தால் தோழி, உள்ளுறுத்துப் புலப்படுத்திய வேறு கருத்தும் இருத்தல் வேண்டும் என்று கொண்டு-ஆழ்ந்து சிந்தித்து அகப்பொருள் துறைக்கேற்றவாறு நுண்ணிய கருத்துக்களை நுவன்றிருக்கின்றார். அவற்றைக் காண்போம்.

இயக்கம் கேட்ட கானவன் கல் கை விடுதல் என்பது, தலைவன் தலைவியொடு புணர்ந்த நிலைமையை அவரால் அறிந்த செவிலி, தன் மனையிடத்தே இருந்து கடுஞ் சொற் சொல்லித் தலைவியை இற்செறித்தலை யுணர்த்தியதாகவும், கானவன் கைவிட்ட கல் வேங்கையினது செவ்விப்பூவைச் சிதறின என்பது செவிலியின் கடுஞ்சொல் தலைவனது

மனவெழுச்சியைக் கெடுத்ததாகவும், ஆசினிப் பலவின் பழத்தைப் பயன்படாமல் உதிர்த்தது என்பது, அத்தலைவன் நுகர்கின்ற களவின்பத்தைக் கெடுத்ததாகவும், அக்கல் இருலின் தேனைப் பயன்படாது உகுத்தமை, தலைவி நலம் தலைவற்குப் பயன்படாது கெடுத்தாகவும், அந்தக்கல் மாவின் குலையைச் சிதறச் செய்தமை, செவிலியின் கடுஞ்சொல் ஆயவெள்ளம் தலைவியொடு கூடி விளையாடாமல் நீக்கினதாகவும், கவண்கல் வாழை மடலைக் கிழித்த தன்மை, செவிலியின் அக்கடுஞ் சொல் தோழியை வருத்தியதாகவும், அக்கல் வேர்ப்பலவின் பழத்துள் தங்கினது என்பது, அக்கடுஞ்சொல் இன்புறுதற்குரிய தலைவியின் நெஞ்சத்தே தங்கியதாகவும் கொள்ள வேண்டுமென உள்ளுறை உவமத்தைப் பொருத்தமாக விரித்துக்கூறியுள்ளார். கபிலர் காட்டிய கல்லை நச்சினார்க்கினியர் கடுஞ்சொல்லாக அமைத்துக் கொண்டு காட்டும் உள்ளுறை உவமப்பொருளைப் படிக்குந்தோறும் நச்சினார்க்கினியரின் புலமை நலத்தை—நுட்பத்தை — பாராட்டாமல் இருத்தல் இயலாது.

கபிலரது கலிப்பாட்டில் காணப்பட்ட இயற்கை வருணனையைக் கொண்டு கூர்ந்து நோக்கி நச்சினார்க்கினியர் கூறிய உள்ளுறையைப் படிக்கும்போது திருத்தக்கதேவர் கூறிய 'காய் மாண்ட தெங்கின் பழம்' எனத் தொடங்கும் பாடலிலும் ஏதேனும் நுண்ணிய கருத்து மறைந்து இருக்குமோ என எண்ணிப் பார்க்கலானேன். சீவகசிந்தாமணி என்ற காப்பியத்தின் தொடக்கப் பாடலாக இது அமைந்துள்ளது. காப்பியம் செய்யும் கவிஞர்கள், தாம் செய்யப்புகும் காப்பியத்தின் குறிக்கோளாக உள்ள கருத்தினை முதற் செய்யுளில் குறிப்பாக அமைத்தல் இயல்பு. கம்பரும் ஆற்றுப்படலத்து முதற் செய்யுளில் தாம் உணர்த்தக் கருதிய உயர்ந்த கருத்தைக் குறிப்பாக அமைத்துள்ளார் என்பர்.

“ ஆசலம்புரி ஐம்பொறி வாளியும்
காசலம்பு முலையவர் கண்ணெனும்
பூசலம்பு நெறியின் புறஞ்செலாக்
கோசலம்புனை ஆற்றணி கூறுவாம் ”

என்பது அப்பாடல். “குற்றங்களை நிறையச் செய்கின்ற மெய் வாய் கண் மூக்குச் செவி என்கின்ற ஐம்பொறிகளாகிய அம்புகளும், பொற்காசுகள் ஒலிக்கின்ற மார்பினையுடைய மகளிர் தம் கண் என்கின்ற போர் செய்யும் இயல்புடைய அம்பும் நல்ல நெறியினின்று புறத்தில் செல்லாமைக்கு இடமாகிய கோசல நாட்டை அழகு படுத்துகின்ற சரயு என்னும் ஆற்றின் அணி நலனைச் சொல்வோம். ” என்பது இப்பாடலின் பொருளாகும். கோசல நாட்டில் வாழும் ஆடவரும் பெண்டிரும் நன்னெறியில் திறம்பாதவர் எனக் கூறி இக் காப்பியத்தில் வற்புறுத்தும் சிறப்புடைய கருத்து. ஆடவர்க்கு ஏகதார விரதமும் பெண்டிற்குக் கணவன் சொற்பிறழாக் கற்புமே என்பது குறிப்பால் பெற வைத்துள்ளமை காணலாம்.

இம்முறையை யுளங்கொண்டு நோக்கின் சீவகசிந்தாமணியின் தொடக்கச் செய்யுளாகிய இப்பாடலில் திருத்தக்கதேவர் தாம் செய்யும் காப்பியத்தின் குறிக்கோளாக உள்ள சிறந்த கருத்தைக் குறிப்பால் புலப்படுத்தியே யிருத்தல் வேண்டும். திருத்தக்கதேவர் இளமையிலேயே சமணத் துறவியாக வாழ்ந்தவர். இவர் தம் வாழ்க்கைக்கு ஏலாத, இழிந்த சிற்றின்ப நிகழ்ச்சிகளே மிகுதியாகச் சீவகசிந்தாமணியில் பேசப்பட்டுள்ளன.

சச்சந்தன் என்னும் அரசன் எழில் நலமிக்க விசயை என்பவளை மணந்து அவள்பால் பெறும் இன்பத்தின் வேட்கை மிகுதியால் தன்னரசாட்சியையே தன்னமைச்சன் கட்டியங்காரனிடம் கொடுத்துவிட்டு அந்தப்புரத்தைவிட்டகலாது இன்புற்றுப் பின் கட்டியங்காரனுடைய சூழ்ச்சியால் கொல்லப்படுகின்றான். மயிற்பொறியில் ஏற்றி அனுப்பப்பட்ட விசயை புறங்காட்டில் சென்று கருவுயிர்க்கின்றாள். சீவகன் பிறக்கின்றான். கந்துக்கடன் என்ற வணிகனால் எடுத்துச் செல்லப்பெற்று அவன் வீட்டில் வளர்கின்ற சீவகன்

அரசனுக்குரிய கலைகளையெல்லாம் கற்று வலிமை மிக்கவனும்—எழில் மிக்கவனும் விளங்குகின்றான். எல்லாக் கலைகளிலும் வல்ல சீவகன் காந்தருவதத்தை, குணமாலை, பதுமை, கேமசரி, கனகமாலை, விமலை, சுரமஞ்சரி, இலக்கணை என்ற மகளிர் எண்மரை மணந்து கொள்கின்றான். கட்டியங்காரனை வென்று தன் தந்தைக்குரிய அரசபீடத்தை யடைந்து மனைவியர் எண்மரோடு பல்வகையான இன்பங்களைத் துய்த்து வாழும் வாழ்க்கையைத் திருத்தக்கதேவர் மிக விரிவாகக் கூறுகின்றார். அப்பகுதிகளைப் படிப்போர் இது காமநூலே என்று கருதுவர் என்பது திண்ணம். எப்புலவருங் கூறாத சிற்றின்ப வகைகளையெல்லாம் அப்படி விவரிக்கின்றார் தேவர்.

இளமையிலேயே துறந்து துறவுநெறியில் பிறழாது வாழ்ந்த திருத்தக்கதேவர், சீவக சிந்தாமணி என்ற பெருங்காப்பியத்தின்மூலம் உலகுக்கு உணர்த்தக் கருதிய உயர்ந்த கருத்துப் பனிமலர்க்குழல் பாவை நல்லார் இன்பமாகவோ, தனி முடி கவித்தாளும் அரச இன்பமாகவோ, இருத்தல் இயலாமை தெளிவு. தீரா நோயைத் தீர்க்கும் மருந்தைக் கொடுக்கும் மருத்துவர் அக்கசப்பான மருந்தை இனிப்புச் சுவையுள்ளவற்றால் மறைத்து உண்பிப்பது போலத் திருத்தக்க தேவர் தாம் உலகுக்கு உணர்த்தக் கருதியது துறவறமேயாயினும், அதனை உலகவர் பெரிதும் விரும்பும் காமச்சுவையென்னும் கட்டியை மிகுதியாகப் பூசி உலகவர்க்கு ஊட்டுகின்றார் என்பதுதான் உண்மை. நாமகள் இலம்பகம் முதலிய பன்னிரண்டு இலம்பகங்களிலும் மகளிர்பால் நுகரும் சிற்றின்பத்தையும் மணிமுடி சூடி மாநிலத்தை ஆளும் அரச இன்பத்தையுமே பரக்கக் கூறியவர், முத்தி இலம்பகத்தில்தான் தாம் கருத்திற்கொண்ட துறவின் சிறப்பை உணர்த்துகின்றார். சிற்றின்பத்தையே விரும்பிச் செல்லும் சிந்தையுடையாரும் இக்காப்பியத்தைக் கடைபோகப் படிப்பாராயின் சிற்றின்பத்தின் இயல்புகளை யுணர்வதுபோலவே அச்சிற்றின்பம் நிலையிலாதது என்பதையும் உணர்வார்கள். இவ்வுலக இன்பம் நிலையாது என்பதை யுணர்ந்தபின் நிலைத்த இன்பம் எது என்பதையும் அதைப் பெறும் வழி எது என்பதையும் ஆராய்ந்துணரத் தலைப்படுவார்கள் என்பது தேவரின் எண்ணம்

சீவகன் எழில்மிக்க மங்கையர் எண்மரை மணந்து அவர்களோடு அனுபவித்த பலவகை இன்பங்களினும் சிறப்பாக இவ்வுலகில் யாருமே இன்புறல் இயலாமை காட்டி, அங்ஙனம் நுகர்ந்த சீவகன், நாற்பத்தைந்து ஆண்டுகளுக்குப்பின் அவ்வின்பங்களை எல்லாம் அறவே துறந்து பேரின்ப நிலையை யெய்தினான் என்பதே முத்தியிலம்பகத்தில் தேவர் குறிப்பிடும் சிறந்த கருத்தாகும்.

தன் தந்தையாகிய சச்சந்தனைக் கொன்ற கட்டியங்காரனை வென்று அரசுகட்டிலேறி அறநெறியில் நின்று செங்கோலோச்சிக் கொண்டு எழில்மிகு மனைவியர் எண்மரோடும் ஈடிலா இன்பம் துய்த்துக் கொண்டிருந்த சீவகன், துறவு மேற்கொண்டது எப்படி? என்பதைச் சிந்திக்க வேண்டும். சீவகனைப் புறங்காட்டில் பெற்று விட்டுச் சென்ற விசயை மீண்டும் சீவகனைக் கண்டு தாயன்பு புலப்பட அவன் பக்கல் வாழ்ந்து தான் விரும்பிய நல்லறங்களையெல்லாம் செய்கின்றாள். முன் தன் கணவனை இழந்தமையால் யாக்கை நிலையாமையையும் இன்பம் நிலையாமையையும் செல்வம் நிலையாமையையும் நன்குணர்ந்திருந்த விசயை, தன் மகனது ஆட்சியைக் கண்டு மகிழ்ந்திருந்த நிலை நீடிக்கவில்லை. வயதின் முதிர்வாலும் நிலையாமையை அனுபவித்துணர்ந்தமையாலும் துறவு பூணுதலையே விசயையின் உள்ளம் விரும்பிற்று. தன் அன்புறு மகனாகிய சீவகனை அருகழைத்து இருக்கச் செய்து தன் கருத்தைத் தெரிவிக்கின்றவள், தன் கணவன் சச்சந்தன் சிற்றின்ப வேட்கையால் அடைந்த கேடுகளையெல்லாம் விளக்குகின்றாள். 'நின் தந்தைபோல நீயும் சிற்றின்பத்தில் மயங்காது அறம்மேற்கொண்டு ஒழுகுதல் வேண்டும். யான் துறவு மேற்கொள்ளப் போகின்றேன் '' என்று நல்லுபதேசம் செய்துவிட்டுப் பெண்டிர் பல

ரோடு சிவிகையில் ஏறிப் பம்மை என்னும் தவமுது மகளின் தவப்பள்ளிக்குச் சென்று சேர்கின்ருள். அங்குப் பம்மை கூறிய அற வுரை கேட்டுக் கூந்தலை நீத்துத் துறவு மேற் கொண்டு தவத்தில் இருக்கின்ருள் விசயை.

சீவகன் சிலநாள் கழித்துத் துறவு மேற் கொண்ட தாயின் திருவடியில் மலர்தூவி வழிபட்டுவர விரும்பித் தன் தேவிமார் எண் மரோடும் தம்பி நந்தட்டனேடும் தோழரோ டும் சேனையோடும் சேர்ந்து பம்மையின் தவப் பள்ளிக்குச் செல்கின்ருன். தாயின் திருவடி யில் மலர்தூவி வழிபட்டு, " யான் அடிக்கடி வந்து கண்டு வணங்குமாறு சின்னுள் இந்நக ரத்திலேயே இருத்தல் வேண்டும் " என்று கேட்டுக்கொள்கின்ருன். விசயையோ தன் மகனைக் கண்ணெடுத்தும் பாராமல் செய்து வைத்த பாவைபோல் தியானத்திலிருக்கின் ருள். அவள் குறிப்பறிந்த பம்மை

" காதல னல்லை நீயும் காவல! நினக்கு
யாமும்
ஏதில மென்று கண்டாய் இருந்தது
நங்கை "

என்று சீவகனுக்கு விளக்கம் தருகின்ருள். 'அரசே! நீயும் எம்மால் காதலிக்கப் படுபவனல்லை; நினக்கு யாங்களும் சுற்றம் அல்லம்; என்றுகாண் நங்கையிருந்தது " என்று விளக்கியவுடனே சீவகன், தேவியரு டன் கண்ணீர்விட்டுப் புலம்புகின்ருன். 'யான் தேவிக்குச் சுற்றம் அன்றேனும் இறைவர் அறத்தைத் துணிந்து நிற்கின்ற நிலைமையைப் பார்க்க அதனுல் காதலிக்கும் தன்மையுடை யேன்" என்று உளம் நெகிழ்ந்து கூறுகின் ருன். அவன் துயர்கண்டு பொருத மாதவ மகளிர் எல்லாம் மனமுருகி, விசயையை நோக்கி, " நீங்கள் நம்பிக்கு மறுமொழி கொடுங்கள்; அதனுல் ஏதமொன்றுமில்லை " என்று வேண்டுகின்ருர்கள். பின்பு விசயை, "வேலோய்! வேண்டிய வேண்டினேம்" என்று சுருக்கமாகக் கூறிச் சீவகன் விரும்பிய படி அந்நகரை விட்டகலாது சிலநாள் தங்கு வதாக உடன்படுகின்ருள்.

தன் தாய் முன் செய்த உபதேசங்களும் அவர் நிற்கும் துறவறத்தின் உறுதியும் சீவ கன் உள்ளத்தில் பெரிய மாற்றத்தைத் தோற்றுவித்துவிட்டன. உலகையாளும் அரச வாழ்வும் மனைவியரோடு துய்க்கும் இன் பமும் நிலையிலாதன என்பதும் துறந்து இறை வனடி சேர்தலே நிலைந்த பேரின்பமாகும் என்பதும் அவன் உள்ளத்தில் நிலைத்த எண்ணங்களாகிவிட்டன. மனைவியரோடு மகிழ்ந்து அரசனுக வாழ்வதுபோல வெளிக் குத் தோன்றினுலும் சீவகன் உள்ளம் துற வறத்தையே நாடி நின்றது. அவனுட னிருந்த தேவிமார்களும் தம்பி நந்தட்டனும் தோழர்களும் அங்ஙனமே மனமாற்றம் பெற்ருர்கள். பின்பு அரண்மனையடைந்து வாழுங்காலத்து ஒரு நாள், எழில்மிக்க பொழில் பூத்துக் குலுங்கும் இனிய காட்சி யைக் காண மனைவியரோடு சென்று கண்டு மகிழ்ந்திருந்தபோது ஒரு நிகழ்ச்சியைக் காண்கின்ருன் சீகவன்.

ஒரு கடுவன், தன்னைப் புலந்து நின்ற பெண்குரங்கு மகிழும் வண்ணம் அங்குப் பழுத்திருந்த பலாப்பழத்தைக் கொணர்ந்து பிளந்து சுவை மிக்க சுளைகளை எடுத்து அதற்கு ஊட்டிக்கொண்டிருந்தது. அப் போது அப்பொழிற் காவலன், ஓடிவந்து அந்த மந்தியையும் கடுவனையும் அடித்து ஓட்டிவிட்டு அவை தின்றுகொண்டிருந்த பலவின் பழத்தை அவன் உண்பதைச் சீவகன் பார்க்கின்ருன். அந்நிகழ்ச்சியோடு தன் வரலாற்றையும் ஒப்பிட்டுக் காண் கின்ருன்.

" கைப்பழம் இழந்த மந்தி கட்டியங்
காரன் ஒத்தது;
இப்பழம் துரந்து கொண்ட சிலதனும்
என்னை ஒத்தான்;
இப்பழம் இன்று போகத்து இன்பமே
போலும் "

என்று எண்ணுகின்ருன். மேலும்,

"மெலியவர் பெற்ற செல்வம் வேரொடுங்
கிழ்ந்து வெளவி
வலியவர் கொண்டு மேலை வரம்பிகந்து
அரம்பு செய்யும்
கலியது பிறவி கண்டாம்! காலத்தால்
அடங்கி நோற்று
நலிவிலா வுலகம் எய்தல் நல்லதே
போலும்"

என்று தெளிகின்றான். பொழிலிலிருந்து இக்காட்சியைக் கண்டு தெளிந்த சீவகன் அரண்மனை சென்று தங்கிப் பின் அருகன் கோயிலை வணங்கி அங்கிருந்த சாரணர்பால் நல்ல கேள்வியையுணர்ந்து பிறப்பின் பயன் துறவு மேற்கொள்ளுதலே என்பது தேறித் தம்பி நந்தட்டனை அழைத்து, "வளமிக்க இந்த நாட்டைநீ யாள்க" என்று கூற, நந்தட்டன், "எனக்கு அரசு வேண்டாம் நீ விரும்பும் துறவையே யானும் விரும்புகின்றேன்" என்று கூறிவிட்டான்.

பின்பு, சீவகன் தன் மக்களில் மூத்தவனாகிய சச்சந்தனை அழைத்து அரசேற்கச் செய்து வாழ்த்திவிட்டு, மனைவியரிடம் சென்று தன் துறவை யுணர்த்த, அவர்கள் சீவகனைப் பிரிய இயலாது பெரிதும் வருந்தவும், தன் மனம் நெகிழாமல் துறத்தலிலே உறுதி கொண்ட அவன் நிலைமையை அறிந்து யாமும் நின்னோடு துறக்கின்றோம் என்கின்றனர்கள். அவர்களை யெல்லாம் தன் தாய் விசயைபால் சென்று துறவேற்கச் செய்துவிட்டுப் பின்பு மலையுச்சியில் நின்று தவஞ்செய்து வீடு பெறுகின்றான் சீவகன். சீவகன் மனைவிமார்கள் அங்ஙனமே துறந்து தவஞ்செய்கின்றனர்கள். சீவகன் தம்பி நந்தட்டன் துறந்து தவஞ்செய்கின்றான். சீவகன் தோழர்கள் அவ்வாறே துறந்து தவஞ்செய்கின்றனர்கள். இவர்கள் அனைவரும் முறையே வீடுபேறு அடைகின்றனர்கள் என்பது முத்தியிலம்பகத்தில் கூறப் படும் வரலாறு.

இந்த வரலாற்றின் குறிப்பு மேற்குறிப்பிட்ட 'காய் மாண்ட தெங்கின் பழம்' என்ற பாடலில் அமைந்திருத்தலை நுணுகிக் காணலாம். இயல்பாகவே பழுத்துக் காம்பற்றுத் தெங்கின் பழம் வீழ்தல் என்பது, வயதும் அனுபவமும் முதிர்ந்த விசயை நிலையாமையுணர்ந்து பற்றற்றுத் துறத்தலையும், அத் தெங்கின் பழம் விழக் கமுகினெற்றிப் பூ மாண்ட தீந்தேன் தொடை கீறுதல் என்பது, விசயையின் துறவு வலிமையையறிந்து மனம் மாறி எல்லோர்க்கும் இனிமை செய்கின்ற சீவகன் தான் துறத்தலையும், பின்பு இனிமை மிக்க பலவின் சுளைகளையுடைய வருக்கை போழ்தல் என்பது, கொண்டானுக்கு இன்பந்தரும் தேவிமார் எண்மரும் துறவு பூணுதலையும், 'தேமாங்கனி சிதறி' என்றது, சீவகன் தம்பி நந்தட்டன் துறத்தலையும்'வாழைப் பழங்கள் சிந்தும்' என்றது, சீவகன் தோழர்கள் துறவு பூணுதலையும் உணர்த்தின என்க.

தெங்கின் பழம் விசயை, தேன்தொடை சீவகன்; வருக்கை, தேவிமார்; தேமாங்கனி நந்தட்டன்; வாழைப்பழங்கள் சீவகன் தோழர் எனக் கொள்க. தேன்தொடை கிறுதற்கும், வருக்கை போழ்தற்கும், தேமாங்கனி சிதறுதற்கும், வாழைப்பழங்கள் சிந்துதற்கும் தெங்கின் பழம் முதிர்ந்து காம் பற்று வீழ்ந்ததே காரணம் ஆயிற்று. அது போலவே, எல்லோர்க்கும் இனியனாய் அரசாண்டுகொண்டிருந்த சீவகன் துறப்பதற்கும், அவன் மனைவிமார் துறப்பதற்கும், நந்தட்டன் துறப்பதற்கும், சீவகன் தோழர் துறப்பதற்கும் நிலையாமையை அனுபவித்துணர்ந்த மூதாட்டியாகிய விசயையின் கடுந் துறவே காரணமாயிற்று என்பதையுணர்தல் வேண்டும்.

விசயை முதலிய அரச குடும்பத்தைச் சேர்ந்த ஐவகையோர் துறந்து வீடுபெறும் நிகழ்ச்சியையே இக்காப்பியத்தின் சிறந்த குறிக்கோளாகக் கொண்டு கூறக் கருதிய திருத்தக்க தேவர், அந்தச் சிறந்த உயிர் போன்ற கருத்து இக்காப்பியத்தின் தொடக் கப்பாடலாகிய இப்பாடலில் குறிப்பால் தோன்றுமாறு அமைத்துத் தம் நுண்ணிய

புலமையைப் புலப்படுத்தியுள்ளார். பின் கூறப்போகும் துறவு நிகழ்ச்சிகளைக் குறிப்பிடும் நோக்கம் திருத்தக்க தேவர்க்கு இல்லையாயின் தெங்கின் பழம் வீழ்தலையும் தேன் தொடை கீறுதலையும் வருக்கை போழ்தலையும் தேமாங்கனி சிதறுதலையும் வாழைப் பழங்கள் சிந்துதலையும் நாட்டுவளம் கூறப்புகும் முதற் பாடலிலே கூறியிருப்பாரோ? தெங்கு குலையீன்றன; கமுகு குலையீன்றன; தேனடைகள் முதிர்ந்துள்ளன; மாம்பழங்கள் பழுத்துள்ளன; வாழைக் குலைகள் பழுத்துள்ளன என்றன்றோ கூறியிருப்பர்.

தெங்கின் பழம் வீழ்தல் முதலியவற்றையே இத்தொடக்கச் செய்யுளில் குறிப்பிட்டதால் இக்காப்பியத்தின் கருவாயமைந்த கருத்தையே நுண்ணிதின் உணர அமைத்துக் கூறியுள்ளார் என்பது தெளிவு. ஓரறிவுயிர்களாகிய தெங்கு முதலியவற்றின் பற்றறுதல் கூறி ஆறறிவுடைய அரச குடும்பத்தார் ஐவகையினரின் பற்றறுதலை யுணர்த்திய தேவரின் புலமை நுட்பம் நினையுந்தொறும் தேன் சுரக்கும் நீர்மையதாகும். இந்த நுண்ணிய கருத்தை யுணர்ந்தபோது என்னுள்ளம் மகிழ்ச்சிக் கடலில் திளைத்தது.



# தமிழ்நாடும் கம்பண உடையாரும்

டாக்டர் A. கிருட்டினசாமி, எம். ஏ., எல். டி., பி. எச். டி.,
பேராசிரியர், வரலாற்றுத்துறை, அண்ணுமலைப் பல்கலைக் கழகம்.

சோழ, பாண்டிய மன்னர்களின் ஆட்சிக்குப் பிறகு தமிழ்நாடு, துங்கபத்திரை நதிக்கரையிலிருந்து தென்னுடு முழுவதும் பரவியிருந்த விசய நகரப் பேரரசின் ஒரு பகுதியாயிற்று. விசய நகரப் பேரரசைச் சங்க வமிசத்தைச் சேர்ந்த அரிகரர், புக்கர் எனும் இரு சகோதரர்கள், சிருங்கேரிச் சாரதா பீடத்துச் சங்கராச்சாரியாராகிய மாதவ வித்யாரண்யருடைய ஆசியுடன் கி.பி. 1336-ஆம் ஆண்டில் இப்பொழுது அம்பி என்று அழைக்கப்பெறுவதும், இராமாயண காலத்தில் பம்பாசரசு என்ற பெயருடையதுமாகிய ஓரிடத்தில் அமைத்தனர். அவர்களுடைய முக்கிய நோக்கம் நதிக்குத் தெற்கே வட நாட்டிலிருந்து படையெடுத்து வந்து தென்னுட்டு மக்களின் சமயம், சமூகம், கலாச்சாரம் முதலியவற்றை இசுலாமியர்கள் முற்றிலும் அழித்து விடாமல் காப்பாற்றுவதேயாகும். அதில் அவர்கள் பெருமளவு வெற்றியும் பெற்றனர். விசயநகரப் பேரரசு ஏற்படாமல் போயிருப்பின் தென்னுட்டின் கலாச்சாரமும் கோயில்களும், மடாலயங்களும் அழிந்து போயிருக்கக்கூடும். அவ்விதமான பேராபத்துத் தமிழ்நாட்டுக்கு உண்டாகாமல் என்று முள தென்றமிழ் போலக் காப்பாற்றியது இந்திய வரலாற்றில் விசயநகர மன்னர்கள் புரிந்த பெரும் சேவையாகும்.

மாலிக்காபூர், குசுருகான், துக்ளக் முகம்மது முதலிய இசுலாமியத் தலைவர்கள் படையெழுச்சிகளால் தமிழ்நாட்டு மக்கள் சொல்லொணுத் துன்பங்களை அனுபவித்தனர். தமிழ்நாட்டில் முக்கிய கோவில்களாகிய திருப்பதி, காஞ்சிபுரம், சிதம்பரம், திருவானைக்கா, திருவரங்கம், மதுரை, இராமேச்சுரம் முதலிய இடங்களின் மீது படையெடுத்து அவற்றின் செல்வங்களை வாரிச்செல்ல வேண்டுமென்பதும் அவர்களுடைய நோக்கங்கள். திருவரங்கப்பெருமானின் திருவுருவத்தையும் மாலிக்காபூர் டெல்லிக்கு எடுத்துச் சென்றதாகக் கோயிலொழுகு, திவ்வியசூரி சரிதம் முதலிய நூல்கள் கூறுகின்றன. இச்செய்திகள் இசுலாமிய வரலாற்று ஆசிரியர்களாகிய பரானி, இசாமி முதலியவர்களாலும் வலியுறுத்தப்பெறுகிறது. முகம்மது துக்ளக் காலத்தில் காவிரி ஆற்றிலிருந்து தெற்கே மதுரைமாநகர் வரையில் இசுலாமிய ஆட்சி வேரூன்றியது. வடக்கே இலாகூரிலிருந்து தெற்கே மாபார் *(Mabar)* வரையில் அவருடைய பேரரசு பரவியிருந்ததாகவும், அப்பேரரசின் 23 மாகாணங்களில் மாபார் அல்லது பாண்டிய நாடும் ஒன்ருக இருந்ததாகவும் நாம் அறிகிறோம். (1) மதுரைத் தல வரலாறு என்னும் நூலும் பாண்டியர் வரலாறு (*Pandyan Chronicle*)

---

(1) *Elliot and Dowson. History of India as told by her own historians. Vol. III PP. 574—75*

என்றநூலும் கி. பி. 1324ஆம் ஆண்டில் முகம் மது துக்ளக் மதுரையைப் பிடித்ததாகக் கூறு கின்றன. புதுக்கோட்டையைச் சேர்ந்த இராங்கியம் என்னும் இடத்தில் கிடைத்த ஒரு கல் வெட்டு முகம்மது துக்ளக் தமிழ்நாட் டின் மீது படையெடுத்ததையும் மக்கள் பட்ட துன்பத்தையும் கூறுகிறது. ''பாண் டிய நாட்டில் இசுலாமியப் படையெடுப்பின் போது அராசகம் தலை தூக்கியது. ஆதிசூரத் தன் என்ற இசுலாமியத் தலைவன் சோழ பாண்டிய நாடுகளைச் சூறையாடினான். அப் பொழுது பொன்னமராவதி நாட்டைச் சேர்ந்த குளமங்கலம், பனையூர் என்ற இரு கிராமங்களைச் சேர்ந்த மக்கள் இசுலாமியச் சேனையில் கூலிப்படையினராகச் சேர்ந்தனர்'' எனக் கூறுகிறது. (2)

சோழ, பாண்டிய நாடுகளை வென்ற பின் முகம்மது துக்ளக் சலால்–உதீன் அக் சன் சா என்பவரை மாபார் அல்லது பாண்டிய நாட்டிற்குத் தலைவனாக நியமித் தார். (3) அவர் கி. பி. 1334ஆம் ஆண்டு வரை யில் முகம்மது துக்ளக்கிற்கு அடங்கி அவரு டைய பிரதிநிதியாக ஆட்சி செலுத்தினார். ஆனால் அடுத்த ஆண்டில் சுயேச்சையடைந்து தம் பேரிலேயே நாணயங்களை வெளியிட்டு மதுரைச் சுல்தான்களுடைய ஆட்சியை நிலை பெறச்செய்தார். அவருடைய சந்ததியார்கள் கி. பி. 1371-ஆம் ஆண்டு வரையில் மதுரை யைத்தலைநகராகக்கொண்டு சோழ,பாண்டிய நாடுகளை ஆண்டுவந்தனர். இந்தச் சலாலுதீன் அக்சன் சாவை பரானி *(Barani)* ஃபெரிச்டா *(Ferishta)* என்ற இரு இசுலாமிய வரலாற்று ஆசிரியர்களும் 'சையது ஆசன்' என்று அழைக்கின்றனர் (4) இவருக்குப் பிறகு ஏழு சுல்தான்கள் மதுரையை ஆண்டனர். இவர் களுடைய ஆட்சிக்கு ஆதாரமாக இவர்களால் வெளியிடப்பட்ட நாணயங்கள் இன்றும் கிடைக்கின்றன. இவர்களில் ஏழாவது சுல்தான் *(Fakhruddin Mubarak Shah)* பக்ருதீன் முபராக் சா என்பவர். இந்த சுல்தானை விசயநகர வேந்தராகிய முதலாம் புக்கரின் மகன் குமார கம்பண உடையார் என்பவர் வென்று சோழ, பாண்டிய நாட்டி லிருந்து இசுலாமிய ஆட்சியை நீக்கித் தமிழ் நாட்டின் துன்பத்தைப்போக்கி நீதி முறையை நிலைபெறச் செய்தார். இந்தக் குமார கம்பண ருடைய அருஞ்செயல்களைப் பற்றிய ஓர் ஆராய்ச்சியே இக்கட்டுரையாகும்.

குமார கம்பணருடைய வரலாற்றை அவருடைய மனைவியாகிய கங்காதேவியார் எழுதிய 'மதுரா விசயம்' என்னும் வட மொழிக் காவியத்திலிருந்தும், குமாரகம்பணர் தமிழ்நாட்டை ஆண்டபொழுது எழுது விக்கப்பெற்ற கல்வெட்டுக்களிலிருந்தும் நாம் தெளிவாக உணரக்கூடும். அந்தக் கல்வெட்டு கள் தமிழ்நாட்டில் காணப்பெறும் கோவில் களில் திருமதில்களிலும் கோபுரங்களிலும் எழுதப்பெற்றுள்ளன. இதுவரையில் 132 கல் வெட்டுக்கள் கண்டுபிடிக்கப்பெற்றுள்ளன. அவற்றுள் பெரும்பாலானவை செங்கற்பட்டு வடவார்க்காடு, தென்னார்க்காடு மாவட் டங்களில் உள்ளன. மற்றவை தஞ்சை, திருச்சி, இராமநாதபுரம் மாவட்டங்களில் கிடைக்கின்றன. மதுரைச் சுல்தான்களுடைய ஆட்சியில் தமிழ்நாட்டின் அவல நிலைமையை கங்காதேவியார் எழுதிய 'மதுரா விசயம்' என்னும் நூல் மிகத் தெளிவாகக் கூறுகிறது. அக்காவியத்தின்படி குமார கம்பணர் தன் னுடைய தலைநகரமாகிய 'முல்பாகல்' (5) அல்லது 'முள்வாய்' என்னும் இடத்திலிருந்து புறப்பட்டுத் தமிழ்நாட்டிற்குள் புகுந்து விரிஞ்சிபுரத்திற்கு அருகில் பாலாற்றைக் கடந்து இராசகம்பீர ராச்சியம் என்னும் நாட் டைத் தனக்கு அடிபணியும்படி செய்தார்.

---

*(2)* புதுக்கோட்டைச் சமத்தானக் கல்வெட்டுத் தொகுதி. எண் 670

*(3)* மாபார் *(Mabar)* பாண்டிய நாட்டின் கடற்கரைக்கு வழங்கிய அராபியச் சொல்

*(4) Elliot and Dowson. Ibid. Vol. III P. 243 and John Briggs. Ferishta Vol. I P. 423*

*(5) Mulbagal is near Kolar in Mysore State*

இந்த இராச கம்பீர இராச்சியம் காவிரியாற்றிற்கு வடக்கே தொண்டைமண்டலம் என்று அழைக்கப்பெற்றதும், தற்காலத்தில் தென்னுர்க்காடு, வடவார்க்காடு, செங்கல்பட்டு, சித்தூர் மாவட்டங்களைத் தன்னகத்தே கொண்டதுமாகிய ஓர் நாடு. இந்த இராச்சியத்தை அமைத்தவர்கள் படைவீட்டுச்சம்புவராயர்கள் என்னும் குறுநில மன்னர்கள். இவர்களில் வென்று மண்கொண்ட ஏகாம்பரநாதச்சம்புவராயன் என்பவரும் அவருடைய மகன் இராச நாராயணச் சம்புவராயன் என்பவரும் மிக்க புகழுடன் ஆட்சி செலுத்தினர். இவர்களுடைய தலைநகர் படைவிடு என்னுமிடத்தில் ஒரு குன்றின்மீது அமைந்திருந்தது; அது இப்பொழுது வடவார்க்காடு மாவட்டத்தில் வேலூருக்குத் தெற்கே சந்தவாசல் என்னும் இடத்திற்கு அருகில் ஒரு சிறிய கிராமமாக இருக்கிறது. இச்சம்புவராய மன்னர்கள் வன்னிய குலத்தைச் சார்ந்தவர்கள். ஏகாம்பரநாதச் சம்புவராயனுக்கு இராசகம்பீரன் என்ற பெயரும் இருந்ததனுல் அவருடைய இராச்சியத்திற்கு இராச கம்பீர இராச்சியம் என்ற பெயரும் வழங்கியது. பதினைன்காம் நூற்ருண்டின் முற்பகுதியில், வடக்குத் தமிழகத்தில் இவர்கள் ஆட்சி செலுத்தித் தமிழ் மொழியை ஆதரித்தனர். அங்கிருந்த முசுலீம் ஆட்சியை அழித்து, சுயாட்சியை ஏற்படுத்திய பிறகு 'வென்று மண்கொண்டான்' என்ற பட்டத்தைக் கொண்டனர். இரட்டைப் புலவர்கள் என்ற சிறந்த தமிழ்ப் புலவர்களை ஆதரித்துத் தமிழ் மொழியின் வளர்ச்சிக்கு உதவி செய்தனர். இச்செய்தி இரட்டைப் புலவர்கள் இயற்றிய கச்சிஏகாம்பரநாதருலா, கச்சிக் கலம்பகம், தில்லைக்கலம்பகம் முதலிய நூல்களிலிருந்து நாம் உணரலாம்.

கி.பி. 1361ஆம் ஆண்டில் குமார கம்பணன் இராச நாராயணச் சம்புவராயருடைய இராச கம்பீர இராச்சியத்தை வென்று காஞ்சிபுரத்தில் தங்கியிருந்தபொழுது அதிசய நிகழ்ச்சியொன்று நிகழ்ந்ததாக மதுராவிசயம் என்னும் நூல் கூறுகிறது. குமார கம்பணர் தன்னுடைய சேனையோடு காஞ்சிபுரத்தில் தங்கியிருக்கையில் அவருடைய கனவில் ஒரு பெண் தெய்வம் தோன்றித் தமிழ் நாட்டின் அவல நிலைமையைப் பின்வருமாறு எடுத்துரைத்தது. ''புக்கபூபதியின் மகனே, துருக்கர்களுடைய ஆட்சியில் புலியூர் என்று கூறப்பெறும் தில்லையம்பதி உண்மையில் புலியூராகவே ஆகிவிட்டது. (புலிகள் வசிக்கும் காடாகி விட்டது) திருவரங்கத் திருக்கோவிலின் விமானம் சீரழிந்து விட்டது. ஆதிசேடனுடைய நிழலில் பள்ளி கொண்டிருந்த அரங்கநாதருடைய ஆலயத்தில் இப்பொழுது பாம்புகள் குடிகொண்டுள்ளன. திருவானைக்காவில் கோவில்கொண்டுள்ள சிவபெருமான் முன்ஒரு காலத்தில் யானையின் தோலை உரித்து அணிந்துகொண்டதாகக் கூறுவதுண்டு இப்பொழுது அப்பெருமானுக்கு யானைத் தோலாடைகூட இல்லை, அவரைச் சிலந்திக் கூடுகள் மூடிக்கிடக்கின்றன. தமிழ்நாட்டில் உள்ள பல கோவில்களின் மண்டபங்களும் கருப்பக்கிரகங்களும் கேட்பாரற்ற நிலையில் செடி கொடிகளும், புற்புதர்களும் நிறைந்து இடிந்து விழுகின்றன. அக்கோவில்களின் கோபுர வாயில்களெல்லாம் மூடிக்கிடக்கின்றமையால் செல்லரித்துப்போகின்றன. முன்னர்த் தேவாரங்களின் இசையும், வேதத்தின் ஒலியும், மிருதங்கத்தின் இனிய நாதமும் முழங்கிய இடங்களில் நரிகள் ஊளையிடுகின்றன. துளி நீரும் வீணுகாமல் மக்களுக்குப் பயனூட்டிய காவிரியாற்றின் நீர்ப் பெருக்கம் உபயோகமின்றிப் பாய்ந்து வெள்ளக்காடாகி நாட்டைச் சீரழிக்கிறது. அக்கிரகாரங்களில் வேத விதிப்படி செய்யப் பெற்ற யாக தூமத்திற்குப் பதிலாக, துருக்கர்கள் பசுவின் மாமிசத்தை நெருப்பில் பொசுக்குவதால் துர்நாற்றமிக்க புகைதான் ஆகாயத்தில் கிளம்புகிறது. மதுரையில் அங்கயற்கண்ணியின் கோவிலும், பதினைன்கு கோபுரங்களும், இடிந்து கிடக்கின்றன. நகரத்தைச் சுற்றியிருந்த தென்னை மரங்களெல்லாம் வெட்டப்பெற்று, அவையிருந்த இடத்தில் திரிசூலம் போன்ற கம்பங்கள் நடப்பெற்றுள்ளன. அவற்றில் தென்னங்குலைகளைப் போல் மக்களுடைய தலைகளைக் கொய்து குலைகளாகக் கோத்துத் தொங்கவிட்டுள்ளனர்.

பொதிய மலையில் தோன்றி நாட்டை வளப் படுத்திய தாமிரபரணியாற்றின் நீர், அதில் நீராடும் மக்கள் உபயோகிக்கும் சந்தனக் குழம்பின் கலவையால் வெண்மை நிறம் பெற்று நறுமணம் வீசுவது இயல்பு. ஆனால் இப்பொழுது துருக்கர்களால் கொல்லப் பெற்ற அந்தணர்களின் இரத்தமும் பசுக் களை வதை செய்வதனால் சிந்தும் இரத்தமும் சேர்ந்து அவ்வாற்றின் நீர் செந்நிறமாக மாறி விட்டது.'' (6)

மேற்கூறியவாறு தமிழ்நாட்டு மக்களின் இன்னல்களை அத்தெய்வம் குமார கம்பண ருக்கு எடுத்துரைத்ததாக மதுரா விசயம் என் னும் நூலில் கங்காதேவியார் கூறுகிறார். இக் கூற்று அந்த நூலாசிரியையின் திறமை மிக்க கற்பனையென்று நாம் கூறிவிட முடியாது. ஏனெனில், மதுரைத் தல வரலாறு என்னும் வரலாற்று நூலும், குமார கம்பணருடைய கல் வெட்டுக்களும் இச்செய்திகள் உண்மை யானவை என்று நாம் உணரும்படி செய் கின்றன. மதுரா விசயத்தில் சொல்லப்படும் மற்றொரு செய்தி வரலாற்று உண்மைக்குச் சிறிது மாறுபட்டுள்ளது. தமிழ்நாட்டின் துன்பத்தை எடுத்தியம்பிய பிறகு அப்பெண் தெய்வம் குமார கம்பணரிடத்தில் அதிச யமான வாள் ஒன்றை வழங்கி அவ்வாளைக் கொண்டு மதுரையில் கொடுங்கோலாட்சி நடத்திய சுல்தானை அழிக்கும்படி ஆணையிட் டதாகவும் மதுரா விசயத்தில் கூறப்பெற்றுள் ளது. ''ஓ, அரசனே முற்காலத்தில் இவ் வாள் விசுவகருமனால் செய்யப்பெற்று, அசுரர் களை அழிப்பதற்காகச் சிவபெருமானிடம் அளிக்கப்பெற்றது. இவ்வாளை மதுரைச் சோமசுந்தரக் கடவுள் ஒரு பாண்டிய மன்னனுடைய தவச் சிறப்பினை உணர்ந்து அவனுக்கு அளித்தார். நான் அதை உன்னிடம் கொடுக்கிறேன். இஃது உன் கையில் இருப் பின் உன்னை வெல்ல யாராலும் முடியாது. தென் மதுரைக்குச் சென்று கொடுங்கோ லோச்சும் துருக்க மன்னனை, கிருட்டின பக வான் கம்சனை வெட்டி வீழ்த்தியது போல் வெட்டி வெற்றிபெறுக'' (7) என்று வாழ்த்தி யதாக நாம் உணருகிறோம். இவ்வாறு தெய் வத்தின் அருள் பெற்ற குமார கம்பணர் காஞ்சிபுரத்திலிருந்து மதுரையின்மீது படை யெடுத்துச் சென்றார். அவருடைய படைப் பெருக்கத்தினாலும், தோள் வலிமையினாலும் அப்பொழுது மதுரையை ஆண்ட *(Fakhru-ddin Mubarak Shah)* பக்ருதின் முபாரக் சா என்பாரைப் போரில் புறங்கண்டு, மதுரை யைத் தன் வசப்படுத்தினார். இப்படையெ டுப்பில் குமார கம்பணருக்கு உறுதுணையாக நின்று உதவி செய்த சாளுவ மங்கு என்பவர் மதுரைச் சுல்தானைக் கொன்று வீழ்த்தியதாக ராம அப்யூதயம் என்னும் தெலுங்கு வர லாற்று நூலில் கூறப்பெற்றுள்ளது. (8)

குமார கம்பணருடைய மதுரா விசயம் எந்த ஆண்டில் நடந்தது என்பது பற்றி வர லாற்று ஆராய்ச்சியாளர்களிடையே மிகுந்த வேற்றுமை எழுந்துள்ளது. அவற்றுள் ஐந்து ஆசிரியர்கள் கொடுத்துள்ள ஆண்டுகளைப் பின்வருமாறு வரிசைப்படுத்தலாம்.

(1) Dr. S. கிருட்டினசுவாமி அய்யங்கார் — கி. பி. 1358ஆம் ஆண்டுக்கு முன்
(2) பேராசிரியர் K. A. நீலகண்ட சாத்திரியார் — கி. பி. 1364ஆம் ஆண்டில்
(3) திரு. சதாசிவப் பண்டாரத்தார் — கி. பி. 1364ஆம் ஆண்டில்
(4) Rev. ஈராசு பாதிரியார் — கி. பி. 1377ஆம் ஆண்டில்
(5) Dr. தே. வே. மகாலிங்கம் — கி. பி. 1361—1363

மேலே கொடுக்கப்பெற்ற ஆண்டுகளில் எது ஏற்புடைத்து என்று வரலாற்று இலக்கியங்

*(6) Dr. A. Krishnaswami. The Tamil Country under Vijayanagar. PP. 22—23.*
*(7) S. Tiruvenkatachari—Madura Vijayam. Translated into English PP. 62—63*
*(8) Dr. S. K. Iyengar. Sources of Vijayanagar History P. 32*

கள், கல்வெட்டுக்கள் ஆகியவற்றின் துணை கொண்டு நாம் ஆராயவேண்டும். முதலாவதாக Dr. S. கிருட்டினசுவாமி அய்யங்கார் அவர்கள் கொடுத்துள்ள ஆண்டை எடுத்துக் கொள்வோம்.

(1) தாம் எழுதிய தென்னிந்தியாவின் மீது இசுலாமியப் படையெடுப்புகள் என்னும் நூலில், குமார கம்பணர் மதுரையின் மீது கி. பி. 1358-இல் படையெடுத்ததற்கு ஆதாரவாக இராமநாதபுரம் மாவட்டத்தில் திருக்காளக்குடிக் கோவிலிலுள்ள ஒரு கல்வெட்டைக் கொண்டுள்ளார். மாறவர்மன் வீர பாண்டியன் என்னும் பாண்டிய அரசனுடைய 31ஆம் ஆட்சியாண்டில் பொறிக்கப் பெற்ற இக்கல்வெட்டு "இப்பொழுது எங்கும் துருக்க ஆட்சியாக இருக்கிறது. தேவதானங்களும் பிரமதேயங்களும் அழிந்து விட்டன. இந்தச் சமயத்தில் கம்பண உடையார் வந்து மதுரை நகரத்தைச் சுல்தான்களிடமிருந்து மீட்டு மறுபடியும் தேவாலயங்களை நிலைபெறச் செய்தார்" எனக் கூறுகிறது. (9) இக்கல்வெட்டினைப் பற்றி ஆராய்ச்சி செய்தவர் இது 1358-ஆம்ஆண்டில் ஏற்பட்டதெனக் கூறியுள்ளார். ஆனால், இந்த ஆண்டில் குமாரகம்பணர் மதுரையின் மீது படையெடுக்கவில்லையெனக் கீழ்க்கண்ட ஆதாரங்களால் நிரூபிக்கலாம்.

(*a*) மாறவர்மன் வீரபாண்டியனுடைய 31-ஆம் ஆட்சியாண்டு கி. பி. 1358 என்று சாதிப்பதற்கு ஏற்ற சான்று ஒன்றுமில்லை.

(*b*) தஞ்சை, திருச்சி, மதுரை ஆகிய மூன்று மாவட்டங்களிலும் குமார கம்பணருடைய பெயர் வருகின்ற கல்வெட்டுக்கள் எல்லாம் கி. பி. 1371ஆம் ஆண்டிற்குப் பிறகே காணப்பெறுகின்றன.

(*c*) கி. பி. 1358 முதல் 1363 வரையில் குமார கம்பணர் இராச கம்பீரஇராச்சியத்தை வென்று அடக்குவதில் ஈடுபட்டிருந்தாரேயன்றி மதுரையின் மீது படையெடுக்கவில்லை. ஆகையால், அவர் கி. பி. 1358-இல் மதுரைச் சுல்தானை வென்றார் என்ற கூற்றுப் பொருந்தாது.

(2) இரண்டவதாகப் பேராசிரியர் K.A. நீலகண்ட சாத்திரியார் தாம் எழுதிய பாண்டிய அரசு என்னும் நூலில் குமார கம்பணன் 1364ஆம் ஆண்டிலாவது அதற்குச் சற்று முந்திய காலத்திலாவது வென்றிருக்க வேண்டுமென உத்தேசமாகக் கூறுகிறார். அதற்கேற்ற வரலாற்று ஆதாரங்களை எடுத்துக் கூறவில்லை. (10)

(3) திரு. சதாசிவப் பண்டாரத்தார் அவர்களும் கி.பி. 1364ஆம் ஆண்டில் குமார கம்பணன் மதுரையின் மீது படையெடுத்திருக்கலாம் என உத்தேசமாகக் கூறியுள்ளார். அதற்குரிய ஆதாரங்களை எடுத்துக் கூறவில்லை. (11)

(4) திரு. ஈராசு பாதிரியார் எழுதிய ஆரவீடு வம்சம் என்னும் நூலில் குமார கம்பணர் மதுரையின்மீது படையெடுத்தது கி. பி. 1377ஆம் ஆண்டில் எனக் கூறுவர். (12) இதுவரையில் கிடைத்த கல்வெட்டுக்களின் துணைகொண்டு குமார கம்பணர் 1374ஆம் ஆண்டில் நவம்பர் மாதத்தில் இயற்கையெய்தியதாகத் தெரிகிறது. திருவண்ணமலை அண்ணமலையார் கோவிலில் உள்ள சாசனம் ஒன்று, "சகாப்தம் 1296-இன் மேல் செல்லாநின்ற ஆனந்த வருதனுர் ஞாயிற்றுப் பூர்வ பட்சத்துத் திரயோதசியும் ஞாயிற்றுக்கிழமையும் பெற்ற ரோகணி நாள் உடையார் திருவண்ணமலையுடைய நாயனுர்க்கு, கம்பண உடையார்க்குச் சிராத்த

---

*(9) Madras Epigraphical Report. No. 64 of 1916*

*(10) Prof. K. A: N. Sastry. The Pandyan Kingdom. P. 244*

*(11) T. V. S. Pandarattar. History of the Pandyas in Tamil P. 156*

*(12) Father. Heras. The Aravidu Dynasty of Vijayanagar P. 106*

பூர்வமாக அத்தியயனம் பண்ணச் சர்வ மானிய இறையிலியாகவிட்ட ஆடையூர் கம்பராயச் சதுர்வேதி மங்கலம்'' என்று கூறுகிறது. (13) ஆகையால் குமார கம்பணர் 1374-ஆம் ஆண்டில் தவறிவிட்டார். அவர் இறந்த பிறகு மதுரையின்மீது படையெடுத்திருக்க முடியாது.

(5) கல்வெட்டு இலாகா ஆராய்ச்சியாளர்களின் கொள்கையைப் பின்பற்றி மாறவர்மன் விரபாண்டியனுடைய 31ஆம் ஆட்சியாண்டு கி.பி. 1364 என்றும், அதனுல் குமார கம்பணன் கி. பி. 1361 இலிருந்து 1363-இல் மதுரையைப் பிடித்திருக்க வேண்டுமென்றும் Dr. தே. வி. மகாலிங்கம் அவர்கள் கூறுவர். ஆனுல், இந்த ஆண்டை அவர்கள் எவ்விதம் நிச்சயம் செய்தார்கள் எனக் கூறவில்லை. தமிழ்நாட்டில் காவிரியாற்றிற்குத் தெற்கே இதுகாறும் கண்டுபிடிக்கப் பெற்ற குமார கம்பணருடைய கல்வெட்டுக்களெல்லாம் 1371-ஆம் ஆண்டுக்குப் பிறகு தான் காணப் பெறுகின்றன. திருச்சி, இராமநாதபுரம் மாவட்டங்களில் உள்ள கண்ணனூர், திருவரங்கம், திருப்பராய்த்துறை, திருவரன் குளம், திருப்புல்லணை முதலிய இடங்களில் கிடைக்கும் குமார கம்பணருடைய கல்வெட்டுக்கள் 1361 — 1370ஆம் ஆண்டுகளுக்கிடையே ஒன்றுகூடப் பொறிக்கப் பெறவில்லை. குமார கம்பணர் மேற்படி ஆண்டுகளுக்கிடையே மதுரையைப் பிடித்திருந்தால் ஏதாவதொரு கல்வெட்டு அந்த ஆண்டுகளில் கிடைத்திருக்கும். அவ்விதம் கல்வெட்டுக்கள் ஒன்றும் கிடைக்காமையால் இந்த ஆண்டுகளுக்கிடையே அவர் மதுரையின் மீது படையெடுக்கவில்லை என்பது உணரப் பெறும்.

பின்னர் எந்த ஆண்டில் குமார கம்பணர் மதுரையை வென்று சுல்தானைக் கொன்றுர் ? இக்கேள்விக்குரிய பதிலை அவருடைய கல்வெட்டுக்களின் துணைகொண்டே நாம் கூற வேண்டும். அதற்குத் துணை செய்பவை மூன்று முக்கிய கல்வெட்டுக்களாகும். அவை யாவன.

| கல்வெ. எண். | சக ஆண்டு | தமிழ் ஆண்டு | கிறித்த வாப்தம் |
|---|---|---|---|
| (1) | 1293 | விரோதிகிருது | 4-6-1371 |
| (2) | 1293 | ஷை | 15-7-1371 |
| (3) | 1293 | ஷை | 20-9-1371 |

இந்த மூன்று கல்வெட்டுக்களும் இராமேசுவரத்திற்கு அருகிலுள்ள திருப்புல்லணையில் சகந்நாதப் பெருமாள் கோவிலிலிருந்து கிடைக்கின்றன. இவை அக்கோவிலுக்கு குமார கம்பணர் செய்த தருமங்களைப்பற்றிக் கூறுகின்றன. அவற்றுள் முதலாவது 1371ஆம் ஆண்டில் ஜுன் மாதத்திலும், இரண்டாவது ஜுலை மாதத்திலும், மூன்றுவது செப்டம்பர் மாதத்திலும் ஏற்படுத்தப் பெற்ற நிபந்தங்களைக் கூறுகின்றன. இந்தத் தருமங்களைக் குமார கம்பணர் மதுரைச் சுல்தானை வென்று மதுரையைக் கைப்பற்றிய பிறகு தான் ஏற்படுத்தி இருக்க முடியும். போரில் வெற்றி பெற்ற பிறகு இராமேச்சுரத்திற்குச் சென்று புண்ணிய நீராடிய பின் மேற்கூறப் பெற்ற தருமத்தைச் செய்திருக்க வேண்டும் இவற்றுள் முதல் சாசனம் 1371-ஆம் ஆண்டு ஜுன்மீ 4ஆம் தேதியன்று பொறிக்கப்பெற்றுள்ளது. ஆகையால் 1371ஆம் ஆண்டில் மே மாதத்தில் குமார கம்பணர் மதுரையைக் கைப்பற்றிய பின் இராமேச்சுரத்திற்குச் சென்று இறைவனை வழிபட்டிருக்க வேண்டும்.



*(13) No. 573 of 1902*

# கல்வெட்டுக்களும் சைவத் திருமுறைகளும்

திரு. ச. திருஞானசம்பந்தன், எம். ஏ.,
வரலாற்றுத்துறை, அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

நம் தமிழகம் தொன்று தொட்டுக் கடவுட் கொள்கையுடையதாக நிலவிவரும் ஒரு நாடாகும். அதனை நம் தாய்மொழியாகிய தமிழில் கடவுள், இறைவன், இயவுள் முதலான சொற்கள் இருத்தலால் நன்குணரலாம். அத்தூய தமிழ்ச் சொற்களும் தமிழ் மக்கள் அறிந்துள்ள கடவுளின் இயல்புகளைத் தெள்ளிதின் உணர்த்துவனவாக அமைந்திருத்தல் பெரிதும் போற்றற்குரியதாகும். அன்றியும்,

'கொடிநிலை கந்தழி வள்ளி யென்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றுங்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே'

என்ற தொல்காப்பியச் சூத்திரமும் தமிழ் மக்கள் தெய்வக் கொள்கையுடையவர் என்பதை வலியுறுத்துதல் காண்க. எனவே, கடவுட் கொள்கையுடைய நம் முன்னோர்கள், கடவுள் வழிபாட்டிற்குரிய கோயில்களை நகரங்களிலும் பேரூர்களிலும் சிற்றூர்களிலும் முற்காலத்திலேயே அமைத்திருத்தல் வேண்டும் என்பது ஒருதலை. சேர, சோழ, பாண்டியர்களின் தலைநகரங்களிலும் பல கோயில்கள் அக்காலத்தில் இருந்தன என்பது சங்கத்துச் சான்றோர் பாடல்களாலும் சிலப்பதிகாரம் முதலான பெருங் காப்பியங்களாலும் அறியப்படுகின்றது. கடைச்சங்க நாளில் விளங்கிய கோச்செங்கணான் என்ற சோழ மன்னன்' எண்டோ ளீசர்க் கெழில் மாடம் எழுபது செய்துல காண்டான்'' என்று திருமங்கையாழ்வார் கூறியுள்ளனர். தமிழ் வேந்தர்களும் அரசியல் தலைவர்களும் பிற அன்பர்களும் தமிழ்நாட்டில் யாண்டும் பல பல கோயில்களை எடுப்பித்துள்ளனர் என்பது ஆராய்ச்சியால் அறியக்கிடக்கின்றது. ஆகவே, தமிழகம் கோயில்கள் மிகுந்துள்ள ஒரு பெருநாடு என்று கூறலாம். அக்கோயில்களை நோக்குங்கால், சிவன் கோயில்களே எல்லா ஊர்களிலும் மிகுதியாகக் காணப்படுகின்றன. அதற்குக் காரணம் பண்டைக் கால முதல் தமிழ் மக்களுள் பெரும் பகுதியினர் சைவ சமயத்தைக் கைக்கொண்டு ஒழுகி வந்தமையே யாகும். அவ்வுண்மையை, எல்லாச் சமயங்களையும் காய்தலுவத்தலின்றிப் பாராட்டும் இயல்புடைய ஆசிரியர் இளங்கோவடிகள் காவிரிப்பூம்பட்டினத்திலும் மதுரை மாநகரிலும் தம் காலத்தில் இருந்த கோயில்களைக் குறிக்குமிடத்து, முறையே 'பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்' எனவும் 'நுதல்விழி நாட்டத் திறையோன் கோயிலும்' எனவும் சிவபெருமானுக்குரிய கோயில்களை முதலில் வைத்துக் கூறியிருத்தலால் நன்கறிந்து கொள்ளலாம். அன்றியும் புலவர் பெருமானாகிய மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனார், காவிரிப்பூம்பட்டினத்திலிருந்த கோயில்களை 'நுதல்விழி நாட்டத் திறையோன் முதலாப்—பதிவாழ் சதுக்கத்துத் தெய்வ மீறாக' என்று மணிமேகலை விழாவறை காதையில் கூறியிருப்பது அச்செய்தியை உறுதிப்படுத்துதல் காண்க. இனி அச்சிவன் கோயில்களை எடுப்பித்த அரசர்களும் பிற அன்பர்களும் அவற்றின் நாள்வழிபாடு, திங்கள் விழா, ஆண்டு விழா, முதலான வற்றிற்கு நிவந்தமாக இறையிலி நிலங்களும்

பெரும் பொருளும் வழங்கியுள்ளனர். அன்றியும் அவற்றின் படிகளைக் கற்றளிகளாக உள்ள கோயில்களின் பிரகாரங்களில் கருங்கல்லின்மேல் வரைந்து வைக்கும்படியும் செய்துள்ளனர். அக்கல்வெட்டுக்கள் கோயில்களில் இன்றும் இருத்தலை யாவரும் காணலாம். அவைகள் எல்லாம் நம் தாய் மொழியாகிய தமிழில் எழுதப் பெற்றவை என்பதை உணர்தல் வேண்டும். அக்கல் வெட்டுக்களை மிகப் பொறுமையாக ஆராய்ந்தால் நம் நாடு, சமயம், வரலாறு முதலான வற்றைப்பற்றி எத்தனையோ உண்மைச் செய்திகளைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம். அக்கல்வெட்டுக்களின் துணைகொண்டு சைவம் எத்தகைய உயர்நிலையில் முற்காலத்தில் இருந்தது என்பதையும் தமிழ்மக்கள் அச்சமயத்தின்பால் எத்துணை ஈடுபாடுடையவராக அந்நாளில் இருந்துள்ளனர் என்பதையும் காண்போம். அக்காலத்தில் வாழ்ந்த சைவ நன்மக்கள் பன்னிரு திருமுறைகளையும் நன்கு பயின்று அவற்றின்பால் அளவற்ற அன்புடையவர்களாய் அவற்றில் காணப்படும் சொற்றொடர்களைத் தம் மக்கட்கும் ஊர்களுக்கும் நிலங்கட்கும் பெயர்களாக வைத்து வழங்கியுள்ளர் என்பது பல கல்வெட்டுக்களால் வெளியாகின்றது. எடுத்துக்காட்டாகச் சிலவற்றை ஈண்டுக் குறிப்பிடுதல் பொருத்தமுடையதேயாம்.

1. திருநாவுக்கரசு அடிகள் தமது திருநாகேச்சுரப் பதிகத்தில், 'இச்சையால் மலர்கள் தூவி இரவொடு பகலுந் தம்மை **நச்சுவார்க்கினியர்** போலும் நாக ஈச்சரவனாரே, என்று கூறியுள்ளனர். திருநாகேச்சுரத்திற்கு அண்மையிலுள்ள திருநறையூரில் அரையன் மூவேந்தவேளான் என்ற பட்டங்கள் பெற்ற அரசியல் அதிகாரி ஒருவன் நச்சினார்க்கினியன் என்ற பெயருடன் அந்நாளில் இருந்தனன் என்பது, 'இந்நாட்டுச் சுங்கந் தவிர்த்த சோழநல்லூரில் நறையூர் கிழவன் அரையன் **நச்சினார்க்கினியன்** தில்லையம்பல மூவேந்த வேளானும், என்னும் திருநாகேச்சுரக் கல்வெட்டினால் (1) அறியப்படுகிறது. அப்படிகள் கூறியுள்ள 'நச்சுவார்க்கினியர்' என்ற தொடரை உளத்திற்கொண்டே பெற்றோர்கள் அத்தலைவனுக்கு நச்சினார்க்கினியன் என்று பெயரிட்டிருத்தல் வேண்டும் என்பது தேற்றம்.

2. அவ்வடிகள் திருமழபாடித் திருத்தாண்டகத்தில் பாடல் தோறும் 'மழபாடி **வயிரத்தூணே** யென்றென்றே நானரற்றி நைகின்றேனே' என்றருளிச் செய்திருத்தலைத் திருமுறைப் பயிற்சியுடையார் யாவரும் அறிவர். திருமழபாடியில் பொறிக்கப் பெற்றுள்ள கல்வெட்டொன்றில் (1) "ஆணை மங்கல முடையான் பஞ்சநதி **வயிரத்தூண்** பக்கல் விலைகொண்ட மனைகுழி இருபத்தொன்றரையும்" என்ற தொடர்கள் காணப்படுகின்றன. அவற்றால் அந்நாளில் **வயிரத்தூண்** என்ற பெயர் மக்கட்கு இடப்பட்டுள்ள செய்தி வெளியாதல் காண்க. வயிரத்தூண் என்னும் தொடரைப் பிற்காலத்தில் வடமொழியாளர் வச்சிரத் தம்பேசுவரர் என்று மொழி பெயர்த்து வழங்கி வருதல் அறியத்தக்கது.

3. சோணாட்டுப் பெருவேளூரில் எழுந்தருளியுள்ள இறைவனை அவ்வடிகள்.

"மறையணி நாவினானை மறப்பிலார் மனத்துளானைக்
கறையணிகண் டன்தன்னைக் கனலெறி யாடினானைப்
பிறையணி சடையினானைப் பெருவேளூர் பேணினானை
நறையணி மலர்கள்தூவி நாடொறும் வணங்குவேனே"

என்று பாடிப் பரவியிருத்தலை நான்காம் திருமுறையில் காணலாம். திருமழபாடியிலுள்ள

(1) *South Indian Inscriptions, Vol. VI No. 34*
(1) *Do Do Vol. V No. 632*
(2) *Do Do Do No. 634*

'பெருமருதூர் **மறையணி நாவினன்** பட்டன் பக்கல் விலைகொண்டு திருமஞ்சனப் புறமாகவிட்ட வெள்ளான் வரிசை நிலம்' என்ற கல்வெட்டுப் பகுதியால் அக்காலத்தில் மறையணி நாவினன் என்ற பெயர் மக்கட்கு இடப்பெற்று வழங்கி வந்தது என்பது நன்கு புலனாகின்றது. இப்பெயர் அப்பரடிகள் காலத்திற்குப் பிறகு வழங்கியுள்ளமை உணரற்பாலதாம்.

4. சமய குரவர்களுள் முதல்வராகிய திருஞானசம்பந்தப்பெருமான்,

" தானுறுகோளு நாளுமடியாரை வந்து
நலியாத வண்ண முரைசெய்
ஆனசொல் மாலையோது மடியார்கள்
வானில் அரசாள்வர் ஆணை நமதே "

என்று கோளறு பதிகத்தின் திருக்கடைக்காப்பில் கூறியுள்ளமை, அப்பதிகத்தை ஓதியவர் உணர்ந்ததேயாம். அதிலுள்ள 'ஆணை நமதே' என்ற தொடரின் அருமை பெருமைகளை நன்குணர்ந்த நம்பியாண்டார் நம்பி, தாம் பாடியுள்ள ஆளுடைய பிள்ளையார் திருத்தொகையில் திருஞானசம்பந்தப் பெருமானை **'ஆணைநமதென்ன வலான்'** என்று பாராட்டியிருத்தலை,

' முத்தி பகவன் முதல்வன் திருவடியை
அத்திக்குந் தொண்டரெதிர் ஆணை
நமதென்ன வலான்'

என்ற அடிகளால் அறியலாம். முற்காலத்தில் அத்தொடர் மற்ற அறிஞர்களின் உள்ளத்தையும் பெரிதும் கவர்ந்துள்ள தென்பது **'ஆணை நமதென்ற பெருமாள்'** என்ற பெயர் மக்கட்கு இடப் பெற்றிருத்தலால் தெள்ளிதிற் புலப்படுகின்றது. அவ்வுண்மையைத் தென்பாண்டி நாட்டுத் திருக்கொடுங் குன்றத்தில் காணப்படும் கல்வெட்டொன்றில் 'பட்டமுடையார் ஆணை நமதென்ற பெருமாள்' என்று ஒருவர் குறிக்கப்பட்டிருத்தலால் நன்கறிந்துகொள்ளலாம்.

(1) *South Indian Inscriptions, Vol. VIII No. 442.* (பிரான்மலைக் கல்வெட்டு) இராமநாதபுரம் மாவட்டம் திருப்புத்தூர்க் கூற்றத்திலுள்ள பிரான்மலையே திருக்கொடுங்குன்றமாகும். இதுவே வேள்பாரி இருந்த நகரம்.



# சார்பெழுத்து

டாக்டர் சோ. ந. கந்தசாமி, எம். ஏ., எம். லிட்., பி. எச். டி.,
தமிழ் விரிவுரையாளர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

மொழிக்குப் பயன்படும் எழுத்துக்களை முதலென்றும் சார்பென்றும் பழந்தமிழ் இலக்கணம் பகுத்துரைக்கும். தமக்கெனப் பிறப்பிடம் கொண்டவை முதலெழுத்தென்பதும் முதலெழுத்தின் பிறப்பிடத்தையே சார்பாகக்கொண்டு தோன்றுவன சார்பெழுத்து என்பதும் தொல்காப்பியரின் துணிபு (தொல். 1. 191). முதலெழுத்துக்களின் பிறப்பிடத்தைச் சார்ந்து, முதலெழுத்துக்களையே பற்றுக்கோடாகக் கொண்டு பிறப்பன சார்பெழுத்துக்கள் என்று உரையாசிரியர்கள் விளக்கம் கண்டனர். (தொல். 34–39 உரை.) இவற்றை மொழியின்கண் வைத்தன்றித் தனித்து ஒலித்துக் காட்டல் ஒண்ணாது. மொழியைச் சார்ந்து வருதலே தமக்கு இலக்கணமாக உடைமையின் சார்பெழுத்தாயின எனக் கூறுவர் சிவஞான முனிவர். ஒன்றிலிருந்து தோன்றுவதையே சார்பு (நிதானம்) எனத் தத்துவ நூலாரும் குறிப்பர்.

## தொல்காப்பியரும் சார்பெழுத்தும்:

ஒல்காப் புலமைத் தொல்காப்பியனார் உரைக்கும் சார்பெழுத்துக்கள் 1. குற்றியலிகரம் 2. குற்றியலுகரம் 3. ஆய்தம் என மூன்றாகும். இவை தனிமொழியிலும் தொடர்மொழியிலும் வரும் என வரையறுத்தனர்.

| சார்பு | தனிமொழியில் | |
|---|---|---|
| 1. குற்றியலிகரம் | –மியா | (தொல். எழுத்து 34) |
| 2. குற்றியலுகரம் | நாகு | ( ,, 36) |
| 3. ஆய்தம் | எஃகு | ( ,, 38) |

### தொடர் மொழியில்

நாடியாது (35)
கொக்குக்கடிது (37,409)

கஃறீது, அஃகடிய (39, 369, 379, 399) இவற்றுள் தொடர்மொழியில் வரும் வன்றொடர்க் குற்றியலுகரத்தினைக் குற்றியலுகரக் குறுக்கம் என்பர் பிற்காலத்தார். முதற்கண் குற்றியலுகரம் குறித்து நோக்குவோம்.

## 1. குற்றியலுகரம் உயிரா? மெய்யா?

நெட்டெழுத்தின்பின், உயிர், வலி, மெலி, இடை, ஆய்தம் என்ற ஐவகைத் தொடர்மொழியின் இறுதி என்ற அறுவகை இடத்தும் வல்லெழுத்து ஆறனையும் சார்பாகக்கொண்டு பிறப்பது குற்றியலுகரம் (தொல். எழுத்து 36). நெடில், உயிர், தவிர்ந்த நான்கு இடமும் அறுவகைப் பற்றுக்கோடும் மெய்யாக இருத்தலின், குற்றியலுகரம் மெய் தழுவிய ஒலியே எனலாம். நெடில், உயிர் என்ற இருவகையிடத்தும் கூட, குற்றியலுகரத்திற்குப் பற்றுக்கோடாகத் திகழ்வது வல்லெழுத்தேயாகலும்

காண்க. குற்றியலுகரம் மெய்போல உயி ரேற இடம் கொடுத்தலும், புள்ளி பெறுத லும், அரையளவு ஒலித்தலும் மெய்யோ என எண்ணத்தூண்டும் எனின், எகர ஒகர மும் புள்ளி பெறுதலும், இயல்பான உகர மும் உயிரேற இடம் கொடுத்தலும் காண் கிறோம். தொல்காப்பியர் எல்லா மொழிக் கும் இறுதியும் முதலும் உயிர், மெய் என்ற இரண்டில் ஒன்றுதல் வேண்டும் என ஆணை கூறினார் (தொல். 103). பின், அவரே இவ்விரண்டின் வேறாகக் குற்றியலுகரத்தி னைக் கொண்டு நடத்துகிறார். நூன்மரபில் உயிர், மெய், குற்றியலுகரம் முதலிய சார்பு எழுத்துக்கள் பெறும் மாத்திரைகளைத் தனித் தனியே ஓதினார்.

மொழிக்கு முதலாகும் எழுத்துக்கள் 22, இறுதியாவன 24 ஆகும். (தொல். 103). இவற்றை மொழிமரபில் விரித்துரைத்தார். மொழிக்கு முதலில் வரும் உயிர் 12, (தொல். 59), மெய் 9 (தொல். 61-65) என விதித்துப் பின் மொழிக்கு முதலில் வரும் குற்றிய லுகரம் பற்றியும் தனியே எடுத்துரைத்தார். (தொல். 67). இப்படியே மொழிக்கு இறு தியில் வரும் உயிர் 12, (தொல் 69, 70, மெய் 11 (தொல். 78,) குற்றியலுகரம் 1 (தொல். 36) எனக் கூறினார். ஈண்டு ''எல்லா மொழிக்கும் இறுதியும் முதலும் மெய்யே உயிரென் றாயீரியல'' என்ற ஆணை நூற்பாவை மறத்தல் கூடாது. எழுத்துக் கள் அனைத்தும் உயிர், மெய் என்ற இரண் டில் அடங்கும் என்றவர் குற்றியலுகரத்தி னைத் தனியே ஓதிச் செல்லும் ஒழுங்கினைப் பிறாண்டும் பார்க்கிறோம்.

தொகை மரபில்.

'' உயிரீ றாகிய முன்னிலைக் கிளவியும்
புள்ளி இறுதி முன்னிலைக் கிளவியும்
இயல்பா குநவும் உறழாகுநவு மென்
றாயீரியல வல்லெழுத்து வரினே ''

(தொல். 151).

எனவரும் நூற்பாவில் உயிர், மெய் இறுதிக்கு இலக்கணம் வகுத்து, அடுத்துவரும் நூற் பாவில்,

''ஔவென வருஉம் உயிரிறு சொல்லும்
ஞநமவ என்னும் புள்ளி இறுதியும்
குற்றிய லுகரத் திறுதியும் உளப்பட
முற்றத் தோன்று முன்னிலை மொழிக்கே''

(தொல். 152)

எனக் குற்றியலுகர இறுதியினைத் தனியாக எண்ணினார். புணரியலிலும் உயிர், மெய், குற்றியலுகரம் என மூன்றாகவே குறித்தார். (தொல். 103, 104, 105). உருபியலில் முதல் 9 நூற்பாக்கள் உயிரீற்றுப் பெயரும், அடுத்த 13 நூற்பாக்கள், மெய்யீற்றுப் பெய ரும், பின்வரும் 9 நூற்பாக்கள் குற்றியலுக ரப் பெயரும் உருபேற்கும் முறையினை விளக்குகின்றன. இம்முறையில்தான். மேல் வரும் உயிர்மயங்கியல், புள்ளிமயங்கியல், குற்றியலுகரப் புணரியல் அமைந்துள்ளன. ஆயினும், ''எல்லா மொழிக்கும் இறுதியும் முதலும், மெய்யே உயிரென் றாயீரியல'' என எச்சரிக்கை செய்கிறார். இவ்வாற்றான் ஆசிரியர் அரியதோர் அறிவு விளையாட்டு நிகழ்த்துகிறார் !

இறுதி இயலாக இருப்பதால், குற்றிய லுகரப் புணரியலில் எழுத்ததிகாரப் புறனடை அமைத்தல் ஏற்றதே. எனின், புள்ளிமயங்கியலில் புகன்ற புறனடை போதாமல், இவ்வியலிலும் மெய்யீற்றுச் சொற்களுக்குப் புறனடை வகுத்தல் (தொல் 481) குற்றியலுகரம் மெய்யீறுபோல் புணர்ச்சி பெறும் என்ற கருத்திற்கு அரண் செய்கிறது. எனவே, குற்றியலுகரம், மெய் தான் எனக்கொள்ளின், மொழியிறுதியில் எஃக், கொக்க், என வல்லொலி யீறுயின என்று எண்ண நேரிடும். – ஃக், – க்க், என்ற இறுதி மெய்மயக்கம் தமிழின் நீர்மைக்கு ஒவ்வாமையாலும், ''அப்பதினொன்றே புள்ளி இறுதி'' (தொல். 78) எனத் தேற்றே காரம் சாற்றிய மெய் பதினொன்றில்

வல்லொலி வாராமையாலும், மொழிக்கிறுதி வல்லொலியை விடுவிக்கப் பயன்படும் குற்றியலுகரம் விடுநிலை உயிரொலியே *(Vowel Release)* எனக் கருதுதல் வேண்டும். தொல்காப்பியனார் குறியதன் முன்னர் உயிரொடு புணர்ந்த வல்லாறன் மிசைத்தாய் ஆய்தம் வரும் என்றனர் (தொல். 38). எனவே, குற்றுகரங்களான எஃகு, கஃசு, கஃறு, கஃபு முதலியவற்றின் இறுதியினை உயிரெனவே ஆசிரியர் கருதினார் என்க.

குற்றியலுகரம் உயிரீறுதான் எனத் தொல்காப்பியர் சொல்லதிகாரத்திலும் தெளிவுறுத்துகிறார். பெயர்ச்சொற்கள் உயிரீற்றில் நான்கும், மெய்யீற்றில் நான்கும், விளியேற்கும் முறையினை விளிமரபில் விளக்கினார். உயிரில் இ, உ, ஐ, ஓ என்னும் நான்கு ஈறுகளும் விளியேற்கும் என்றார் (தொல். சொல். 120). இந்நான்கில்,

> ''ஓவும் உவ்வும் ஏயொடு சிவணும்''
> (தொல் சொல். 122) எனவும்,

> ''உகரம் தானே குற்றிய லுகரம்''
> (தொல். சொல். 123) எனவும்

ஆசிரியர் விதித்தல் குற்றியலுகரம் உயிரீறுதான் என்பதை உறுதிப்படுத்துகிறது. பொருளதிகாரத்தில், ''தாமே தூதுவர் ஆதலும் உரித்தே'' (தொல். பொருள். 117), ''கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே'' (தொல். பொருள். 140)) எனக் குற்றியலுகரம் உயிர் வருங்கால் உடம்படுமெய் பெறுதலின் அதனை உயிராகவே தொல்காப்பியர் மதித்தனர் என்க.

குற்றியலுகரம் உயிரே எனினும், மெய்யீறுபோல் புணர்ச்சி பெறும் என்பதை இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் கூற மறந்திலர் (தொல். எழுத்து 105). ''உயிர் வரின் உக்குறள் மெய்விட்டோடும்; உடல் மேல் உயிர்வந்தொன்றுவ தியல்பே'' என்ற பவணந்தியார் கருத்தினைத் தொல்காப்பிய உரையாசிரியர் ஒத்துக்கொள்ளவில்லை. ''அங்ஙனம் உயிரேறுங்கால் குற்றுகரம் கெட்டுப்போக நின்ற ஒற்றின்மேல் உயிரேறிற்றென்று கொள்ளற்க. நாகரி தென் புழி முன்னர்க் குற்றுகர ஓசையும் பின்னர் உயிரோசையும் பெற்று அவ்விரண்டும் கூடி நின்றல்லது அப்பொருள் உணர்த்தலாகாமையின், இஃது உயிரோடுங் கூடிநிற்கும் என்றார் (தொல். எழுத்து. 105 உரை)'' என வருதல் காண்க. இங்ஙனம், உருவு திரியாதே குற்றியலுகரம் புணர்தலை

> ''ஒன்பான் இறுதி உருவுநிலை திரியா
> தின்பெறல் வேண்டும் சாரியை
> மொழியே''
> (தொல். எழுத்து. 459)

என ஆசிரியர் சுட்டினார். தொல்காப்பியரின் உள்ளக் குறிப்பினைத் தெள்ளிதின் உணர்ந்த பவணந்தியாரும் குற்றியலுகரம் உயிரென்றே கொண்டு உயிரீற்றுப் புணரியலில் குற்றியலுகர ஈற்றினை அடக்கி ஓதினார்.

தமிழில் குற்றியலுகர ஈற்றுச் சொற்கள் மிகுதி. எண்ணுப் பெயர்கள் பலவும் அவ் விற்றனவே. ஆதலின், அவற்றிற்குத் தனி மதிப்புக் கொடுத்துத் தொல்காப்பியர் தனி இயல் அமைத்தார். அதிகாரந்தொறும் ஒன்பானியல் அமைக்கப் புகுந்த தொல்காப்பியனார்க்குக் குற்றியலுகரப் புணரியலை உயிர் மயங்கியலில் அடக்கியிருப்பின், எட்டியலாய் இலங்கி, அமைப்பொழுங்கு சிதைதற்கேதுவாகும் என்க.

'உண்டு' என்ற குறிப்புவினை ஒன்றினைத் தவிர, குற்றியலுகரப் புணரியலில் பெயர்ச் சொற்களையே எடுத்தோதி இலக்கணம் கூறினார். ஆயினும், உரைகாரர், ''எல்லா மொழியும் என்றதால் வினைச்சொல்லும் வினைக் குறிப்புச் சொல்லும் கொள்க'' (தொல். 425) என்றார். வினைச்சொற்களின் விகுதிகளைத் தனியே பிரித்துவிடின் அவை குற்றியலுகர ஈறுதல் இல்லை. ''கொள்வதுவே'' எனத் தொல்காப்பியரே வினைச்சொல் குற்றியலுகர ஈற்றில் வருதலை ஆண்டுள்ளார் (தொல். பொருள். 140)

## முற்றியலுகரத்தின் குறுக்கமா ?

இயல்பான இகரம் குவியிதழிடமாகப் பிறத்தலும், குற்றியலுகரம் வல்லொலியின் விடுநிலை உயிராய்ப் பிறத்தலும் இவ்விரண்டும் வேறுவேறெனக் காட்டும். ஆதலின், இயல்பிலேயே குறுகியொலிக்கும் குற்றியலுகர குற்றியலிகரங்களை, முற்றியலுகர முற்றியலிகரங்களின் குறுக்கங்களாகக் கொள்ளுதல் கூடாது. ஐ, ஔ, ம, குறுக்கங்களை அவ்வவற்றின் முதலெழுத்துக்களுடன் இணைத்துவிடும் தொல்காப்பியர், குற்றியலுகர, குற்றியலிகரங்களையும், முற்றியலுகர, முற்றியலிகரங்களில் அடக்கிவிட்டிருப்பார். அங்ஙனம் அடக்கியிருப்பின், எழுத்தின் தொகை, 30 + 1 (ஆய்தம்) —31 என்றுருகுமேயன்றி முதலெழுத்து 30 + சார்பு 3 = 33 ஆகாமை காண்க. எனவேதான் சிவஞான முனிவர் "இக் குற்றியலுகரக் குற்றியலிகரங்களை முற்றியலிகர உகரங்களின் குறுக்கம் என்றவர் ஆய்தத்தினையும் அவ்வாறு ஒன்றன் குறுக்கம் எனக் கூறமறந்தார் போலும்!" என எழுதினர் (தொல். சூ. வி. பக்.39), இவர் மறுப்பு இளம்பூரணரையும் நச்சினார்க்கினியரையும் நோக்கிற்று. ஏன் எனின், இகர உகரம் குறுகின்றன—சந்தனக்கோல் குறுகினால் பிரப்பங்கோல் ஆகாது. அது போல உயிரது குறுக்கமும் உயிரேயாம்' (தொல். 2 உரை), என்று அவர் எழுதியிருத்தலின் என்க.

குற்றியலுகரம் தமிழிற்கே உரிய சிறப்பொலி எனச் சிவஞான முனிவரும் டாக்டர் பி. சா. சுப்பிரமணிய சாத்திரியாரும் எழுதியிருத்தல் காண்க.

## குற்றியலுகரம் உகரத்தின் மாற்றொலியன் (Allophone)

குற்றியலுகரம் உயிரீறுதான் எனக் கண்டோம். இதற்கு வழங்குமிடம் வரையறுக்கப்பட்டமையான் இதனை இயல்பான உகரத்தின் மாற்றொலியன் எனக் கருதலாம். உகரத்தின் மாற்றொலியன் குற்றியலுகரம் என்றும், குற்றியலுகரத்தின் மாற்றொலியன் குற்றியலிகரம் என்றும் எழுதினர் சிலர். *(Naccinarkkinyar's conception of phonology pp. 53, 55.)* மாற்றொலியனுக்கோர் மாற்றொலியன் யாண்டும் கேட்கப் பெறுமையின், அவர் கருத்தின் பொருத்தமின்மை காண்க. மேல்வரி ஒலியனைப் போலவே *(Supra-segmental phoneme)* குற்றியலுகரத்தைத் தனியே ஒலித்துக்காட்டல் அரிது.

## மொழி முதற் குற்றியலுகரம் :

நுந்தை என்ற சொல்லில் வரும் உகரம் மொழி முதற் குற்றியலுகரம் எனத் தொல்காப்பியர் கருதினர் (தொல். எழுத்து 68). நுந்தை என்பது நிம் தந்தை என்பதன் திரிபாகும் என்றும், நிம் இல் உள்ள இதழ் ஒலி மகரம், மொழி முதல் இகரத்தையும் இதழொலியாகிய உகரமாக மாற்றியது என்றும் பேராசிரியர் தெ. பொ. மீ. கூறுவர். ஈண்டு, உகரத்தை இதழ் குவித்துக் கூறினும் இதழ் குவியாமல் கூறினும் பொருள் ஒன்றே. மொழி முதல் குற்றியலுகரத்தினைப் பிற்கால இலக்கண ஆசிரியர் ஒருவர்கூடக் குற்றியலுகரம் என ஒத்துக்கொள்ளவில்லை.

## நச்சினார்க்கினியர் கருத்து :

நச்சினார்க்கினியர் காலத்தில் குற்றியலுகரம் வேறொரு நிலையும் எய்திற்று. அதனை விடுநிலை ஒலியாக எண்ணாமல் குவிஇதழ் ஒலியாக ஒலிப்பின் ஏவற்பொருண்மை பயக்கும் என்றும், இதழ் குவியாமல் ஒலிப்பின் பெயர்ப்பொருண்மை பயக்கும் என்றும் ஒரு குறிப்பினை எழுதியுள்ளார். (தொல். 68 உரை).

எ. டு :– கட்டு–கட்டுவாய் (முற்றியலுகரம் இதழ்குவித்துக் கூறுதல்)
கட்டு–(வைக்கோல்) கட்டு (குற்றியலுகரம் இதழ் குவியாமல் ஒலித்தல்)

எனவே, அவர் காலத்தில் குற்றியலுகரம் ஒலியன் நிலையினை *(Phoneme)* அடைந்ததெனலாம்.

## 2. குற்றியலிகரம் மாற்றொலியனா? ஒலிமாற்றமா? Allophone or phonetic change)

குற்றியலிகரத்தின் வழங்குமிடம் வரையறுக்கப்படுதலின் அதனை முற்றியலிகரத்தின் மாற்றொலியனாக மதிக்கலாம். ஆயினும் குற்றியலுகரமே யகரத்தின் புணர்வால் இகரமாகத் திரிகிறது. எனவே, அதனை ஒலிமாற்றமாகக் கருதுதல் கூடும். 'ய' இடையண்ண ஒலியாதலின், குற்றியலுகரத்தினையும் தன் மயமாக்கிற்று. 'இ' இடையண்ண ஒலியாதல் காண்க. இம்மாற்றம் 'முன்னோக்கி இயைதல்' *(Progressive Assimilation)* என்ற ஒலிவிதியால் விளைகிறது. எ. டு. மூத்து + யாது = முத்தியாது. குற்றியலுகரத்தின் ஒலிமாற்றமாகக் குற்றியலிகரம் விளங்குதலின் குற்றியலிகரப் புணர்ச்சிக்குத் தனி இயல் வகுக்காமல் குற்றியலுகரப் புணரியலில் அடக்கி ஓதினார் என்க.

### கேண்மியா, சென்மியா – குற்றியலிகரமா ?

கேண்மியா, சென்மியா என்ற சொற்களில் வருவன குற்றியலிகரமா? என ஆராய்தல் வேண்டும். கேளும், செல்லும் என்பனவே கேண்மீ சென்மீ என ஈரொற்றுடனிலையாய் நின்று, 'யா' என்னும் இடைச்சொல்லினை எய்திக் கட்டுரைச் சுவைபட வியங்கோள் பொருள் பயந்து விளங்கின. கேண்ம் + யா, சென்ம் + யா என்பன விட்டிசையின்றி இணைந்தொலிக்க இகரம் பெற்றன. ஈண்டும் 'யா' வின் உந்துதலாற்றான், இகரம் தோன்றுகிறது. கேண்ம்+இ+யா, சென்ம் + இ + யா. இகரம் இம்மின் ம்–இன் விடுநிலை ஒலியாகப் பணிபுரிதலின் அரையளவு பெற்று ஒலிக்கிறது. இங்கு இகரம் சாரியை ஒத்தது எனலாம். நல் + யாழ் > நல்லியாழ் என வருதல் காண்க. சாரியை என்ற சொல்லும் சார்பு என்ற சொல்லும் ஒரே வேரிற் பிறத்தலும் காண்க. எனவே கேண்மியா, சென்மியா என்ற சொற்களைப் பிழைபடப் பிரித்தலான் *(Metanalysis;* கேண் + மியா, சென் + மியா), மியா என்ற இடைச்சொல் தோன்றிற்று. 'யா' தான் உரிய இடைச்சொல். இதுவே 'ஏ' ஆதலும் உண்டு. எனவே, சென்ம் + யா, நின்ம் + யா என்பன சென்ம் + ஏ > சென்மே, நின்ம் + ஏ > நின்மே என்றுயின. இனி, 'இயா' என்பதுதான் தொல்பழஞ் சொல் என்று கூறுவாரும் உளர். செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று, மூவிடத்திற்கும் உரியதாய்ச் சங்கப் பாக்களில் வழங்குதலின் சென்ம், கேண்ம் என்பனவற்றைச் செய்யும் வாய்பாட்டு வினைமுற்றாகக் கொள்ளுதல் தக்கதே.

## 3. ஆய்தம் :

### ஆய்தம் – வடசொல்லா ?

தொல்காப்பியர் கூறும் மூன்றாவது சார்பெழுத்தாகிய ஆய்தத்தினை அணுகுவோம். ஆஸ்ரதம் என்ற வட சொல்தான் தமிழில் ஆய்தம் ஆயிற்றெனப் பலர் கருதினர்[1]. இவர் கருத்தினை மறுத்து 'ஆய்தல்' என்ற தமிழ்ச் சொல்லடியாகப் பிறந்த நுண்ணொலி எனப் பொருள்தரும் ஆய்தம் தமிழே என அறிஞர்கள் விளக்கினர்[2]. பின்னர், தம் கருத்தினைத் திருத்திக்கொண்டு மொழியியற் பேராசிரியர் சி. ஆர். சங்கரன் 'ஆய்தம்' தமிழ்ச் சொல்லே என்று விரித்துரைத்தனர். *(Vide, Tamil Culture, Vol. IX pp 27–29).*

---

1. அ) மு. இராகவையங்கார், செந்தமிழ்த் தொகுதி 25, பக். 153
   ஆ) *Dr. P. S. S. History of Grametical Theories in Tamil, pp. 63–64*
   இ) *Prof. C. R. Sankaran, Phonemics of Old Tamil, pp. 21–22*
2. *Annamalai University Journal (1941) pp. 110–111*

ஆய்தவோசை நிரம்பிய பாடல் நலிபுவண்ணம் உடையதெனத் தொல்காப்பியர் கூறுதலான் ஆய்தத்தின் மென்மைத் தன்மை புலனாகும்.

## ஆய்தம்—மெய்யா ? உயிரா ?

பேராசிரியர் சி. ஆர். சங்கரன், ஃக், ஃச், ஃட், ஃத், ஃப், ஃற் என்ற அறுவகை நுண் ணொலிகளும் *(Micro-phonemes)* ஆய்தம் என்ற பருஒலியாக *(Macro-phoneme)* விளங்கும் என விளம்பினர். அவர் கருத்து, க்க், ச்ச், ட்ட், த்த், ப்ப், ற்ற், என்பவற்றின் மாற்று வடிவங்களே அவ்வாறும் என்பதாம். பஃது—பத்து, அஃதை—அத்தை, முஃடீது—முட்டீது, கஃறீது—கற்றீது என மேற்கோளும் காட்டினர். ஆயின், ஃக், ஃச், ஃப், என்பன மாறியொலித்தற்கு மேற்கோள் இல்லை. எனினும், *அக்கடிய, *கச்சு, *கப்பு என்ற தொல்வடிவங்கள் இருந் திருத்தல் கூடுமென வந்தன கொண்டு வாராதன முடித்தார். மெய்பிறிதாதற்கு இம்மேற்கோள் காட்டப்படுதலாலும், ஆய் தம் அதன்பின் வரும் வல்லொலியின் பிறப் பிடமே கொண்டு தோன்றுதலாலும்,.அரை மாத்திரை பெறுதலாலும் மெய்த்தன்மை மிகுந்தது எனத்துணியலாம். ''ஈண்டுப்புள்ளி என்றதனுன் ஆய்தமும் மெய்யாயிற்று'' (தொல். எழுத்து. 38—உரை) என்றார் நச்சி னார்க்கினியர். நன்னூலாரும் ஆய்த அள பெடையினை ஒற்றளபெடை என்றே உரைத் தமை நோக்குக. (நன். எழு. 92) எனினும், ஆய்தம், ''ஏனை ஒற்றுக்கள்போல் உயிரே றுது ஓசை விகாரமாய் நிற்பது'' (நச். உரை. பக். 20). இவ்வேறுபாட்டாற்றான் அது தனியாக எண்ணப்பட்டது. ஏனை இரண்டு சார்பிற்கும் இடமும் பற்றுக்கோடும் உண் டென விளக்கிய உரையாசிரியர் இருவரும் ஆய்தம் குற்றெழுத்தின்மேல் வரும் வல் லெழுத்தின் இடமாகப் பிறக்கும் என்றனர். எனவே, தனக்குப் பற்றுக்கோடின்றித் தான் சார்ந்து வரும் வல்லோசையின் விகா ரமாய் வரும் என்பது பெற்றாம்.

## ஆய்தம்—பிறப்பிடம் :

இளம்பூரணர், பெருந்தேவனர், பவணந் தியார் முதலியோர் ஆய்தம் தலைவளியாற் பிறக்கும் என்றனர். நச்சினார்க்கினியரோ நெஞ்சுவளியாற் பிறக்கும் என்றனர். மிடற்றுவளியால் பிறக்கும் என்று எண்ணி யோரும் உண்டு. தொல்காப்பியரோ எண் வகை உறுப்புக்களில் தலை, நெஞ்சு ஆகிய இடங்களில் பிறக்கும் ஒலிகள் யாவை எனச் சுட்டாமல் விட்டார். பவணந்தியாரோ தலைவளியால் ஆய்தமும், நெஞ்சுவளியால் வல்லினமும் பிறக்குமென நிறைவு செய்தார். எனினும், வல்லினம் பிறக்குமிடம் சார்ந்தே ஆய்தம் பிறக்குமாதலின், நெஞ்சுவளியால் ஆய்தம் பிறக்குமென்ற நச்சினார்க்கினியர் கருத்தே ஏற்றதாகத் தோற்றுகிறது. குறிய தன் முன்னர் உயிரொடு புணர்ந்த வல்லாறன் மிசைத்தாய் ஆய்தம் தோன்றும் என்று தொல்காப்பியர் வரையறுத்தனர். (தொல். 36). அஃகம், வெஃகா, பஃறி. பஃறுளி, அஃறிணை, கொஃறேர் என வருதல் காண்க.

## ஆய்தத்தின் பல்வேறு நிலைகள் :

## 'வ்' ஆய்தத்தின் மூலமா?

அவ்+கடிய > அஃகடிய என்றாதலின், 'வ்' தான் ஆய்தம் தோன்ற அடிப்படை யொலி எனப் புதியதோர் கொள்கையினைப் பேராசிரியர் தெ. பொ. மீ. வெளியிட்டனர். எவ் + கு > எஃகு, கவ்+பு > கஃபு என எடுத்துக்காட்டும் கூறினர். எனினும் பஃறி. அஃது, கொஃறேர் முதலியவற்றிற்கு அவர் விதி அமையாமையின், அவர் கருத்து மேலும் ஆய்விற்கு உரியது.

## அவிநயனார் காலம் : ய் — ஃ

ஒரு காலத்தில் ஆய்தம் 'க்' ஒலியாகவே கருதப்பட்டது. அஃதை, அகுதை என்றும் எழுதப்பட்டது. அவிநயனார் காலத்தில் ஆய்தம் யகரத்தின் மதிப்பினைப் பெற்றது.

அ+ய்; அ+ஃ> ஐ ஆகும் என்பது அவர் கருத்து :

“ ஆய்தமும் யவ்வும் அவ்வொடு வரினே
ஐயென் எழுத்தொடு மெய்பெறத்
தோன்றும் ” (யா. வி. பக். 21)

“ செய்கபொருளை ” என்ற திருக்குறளில் செய்க—எஃகு என யகரத்துடன் ஆய்தம் எதுகையாய் இலங்குதலும் அவிநயனார் கருத்திற்கு ஆதாரம் ஆகலாம். யகரம் உயிர்போல மிடற்றுப்பிறந்த வளியால் ஒலிக்கப்பெற்றமையாலும் அதனிடம் வழங்கும் ஆய்தமும் அக்காலத்து மிடற்று வளியால் ஒலிக்கப்பெற்று உயிர்போல் அலகிடப்பெற்றும் வந்தது (குறள் 943). எனவே, தொல்காப்பியர் காலத்திற்குப்பின் ஆய்தம் உயிரா, மெய்யா என்ற திண்டாட்ட நிலையினை அடைந்தது. ஆதலின், அவிநயம், நன்னூல் முதலியன ஆய்தத்தினைத் ‘தனிநிலை’ என்ற பெயராலும் சுட்டின.

### ஆய்தத்தின் வரிவடிவம் :

தொல்காப்பியர் ஆய்தம் மூன்று புள்ளி பெறும் என்பதை, ‘ஆய்தம் என்ற முப்பாற் புள்ளி’ (தொல். எழுத்து 2) எனக் குறித்தார். எனினும், குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்ற மூன்றுமே புள்ளிபெறும் என்று சிலர் பொருள்கண்டனர். ஆயின், புள்ளி பெறுதலுடன் குற்றியலுகர, குற்றிய லிகரங்களின் வரிவடிவம் நிரம்பாமையும், புள்ளி பெறுதல் ஒன்றே ஆய்தத்திற்கு வரி வடிவாயமைதலும் நோக்குழி, ‘ஆய்தம் என்ற முப்பாற்புள்ளியும்’ என்ற தொடர் ஆய்தத்தின் வரிவடிவத்தினை விளக்கி, இறுதி யும்மை இனைத்தென அறிந்தவற்றிற்கு இடப் பெறும் முற்றும்மையாகவும் கொள்ளுதல் தக்கது. உரையாசிரியர் நச்சினார்க்கினியர்,

‘ஆய்தம் என்ற ஓசைதான் அடுப்புக்
கூட்டுப்போல மூன்று புள்ளி
வடிவிற்றென்பது உணர்த்தற்கு
ஆய்தம் என்ற முப்பாற்புள்ளியும்
என்றார். அதனை இக்காலத்தார் நடுவு
வாங்கியிட்டெழுதுப’

என்று விளக்கம் நல்கினர். கி. பி. 8-ஆம் நூற்றாண்டில் எழுந்த பல்லவ மன்னனின் காசாகுடிப் பட்டயத்தில் வெஃகா என்ற சொல்லில் ஆய்தம் வெப்கா என்று மேலும் கீழும் புள்ளியும் இடையில் வளைந்தகோடும் உடையதாக வரையப்பட்டுள்ள செய்தியினைப் பேராசிரியர் க. வெள்ளைவாரணனார் எடுத்துக்காட்டியுள்ளனர். *(Vide, A. U. Journal, E. 1941, p. 108)*.

### ஆய்தத்தின் பெயர்கள் :

அவிநயனார் ஐந்துவகைப் பெயர்கள் ஆய்தத்திற்கு உண்டெனக் கூறுகிறார் :

‘அக்கேனம் ஆய்தம் தனிநிலை புள்ளி
ஒற்றிப் பால வைந்தும் இதற்கே’
(யாப். வி. பக். 20)

எனவரும் நூற்பாக் காண்க.

வீரசோழியமும் நேமிநாதமும் ஆய்தத்தினை முதலெழுத்தெனக் கூறுகின்றன (வீர காரிகை 1. நேமி. எழுத்து. 1) இந்நூல் எழுந்த காலத்தில் நெடுங்கணக்கு நிரலில் ‘ஔ’வின் பின்னும் ’கவ்’வின் முன்னும் ஆய்தம் எழுதும் வழக்கம் வந்திருத்தல் வேண்டும். அதனாற்போலும் அங்ஙனம் கூறின.

### தொல்காப்பியர்க்குப்பின் சார்பெழுத்துக்கள் :

தொல்காப்பியர் காலத்திற்குப்பின், மாத்திரைக் குறுக்கங்களையும், மாத்திரைப் பெருக்கங்களையும் சார்பெழுத்தெனக்கருதும் மனநிலை எழுந்தது. உயிர்மெய் எனத் தனிக்குறியீடு பெறலின் அதனையும் தனி எழுத்தாக எண்ணினர். தொல்காப்பியர் கூறிய மூன்று சார்புடன் உயிரளபெடை 7, உயிர்மெய் 216, முதலெழுத்து 30 இவற்றையெண்ணி 256 எனல் எழுத்தின் விரி என்று இளம்பூரணரும் நச்சினார்க்கினி யரும் எழுதினர் (தொல்—எழுத்து –1 உரை) அவர்கள் அளபெடை, உயிர்மெய்களை முத

லெழுத்தென்றோ. சார்பென்றோ தெளிவாகச் சுட்டவில்லை. புத்தமித்திரனார் குற்றியலிகரம் 1, குற்றியலுகரம் 1, ஐகாரக்குறுக்கம் 1, ஔகாரக்குறுக்கம் 1, உயிரளபெடை 7, ஆகப் பதினொன்று கொண்டனர். (வீர. 2. 3. 5.) குணவீரபண்டிதர் உயிரளபெடை 7. குற்றியலிகரம் 1, குற்றியலுகரம் 1, ஐகாரக்குறுக்கம் 1, ஔகாரக்குறுக்கம் 1, உயிர்மெய் 216, வல்லொற்று மெல்லொற்று வருக்கம் 6, 6, ய, ல, வ. ள, குறுக்கம் 4, ஆய்தம் 1, ஆக 244 கொண்டனர் என டாக்டர் பி. சா. சுப்பிரமணிய சாத்திரியார் கருதினர். வருக்க எழுத்து என்ற பாகுபாடு வடமொழி இலக்கணச் செல்வாக்கால் படைத்துக் கொண்ட கற்பனையே. பவணந்தியார் உயிர்மெய் 216, முற்றாய்தம் 8, உயிரளபெடை 21, ஒற்றளபெடை 42, குற்றியலிகரம் 37, குற்றியலுகரம் 36, ஐகாரக்குறுக்கம் 3, ஔகாரக்குறுக்கம் 1, மகரக்குறுக்கம் 3, ஆய்தக்குறுக்கம் 2, ஆக 369 என்று எண்ணினர் (நன். எழுத்து. 61.) சார்பெழுத்துக்களைக் கணிப்பதில் பிற்காலத்தார் எடுத்துக் கொண்ட பெருமுயற்சிக்கு இவையெல்லாம் எடுத்துக்காட்டாம்.

### நன்னூலாரும் சார்பெழுத்துக்களும் :

முன்னூலொழியப் பின்னூல் பலவினுள் நன்னூலார் தமக்கெந் நூலாரும் இணையோ வென்னும் துணிவே மன்னுக. என்று பாராட்டப்பெறும் பவணந்தியார் பகுத்துரைத்த சார்பெழுத்துக்கள் பத்தாகும். அவற்றை வரலாற்று முறையில் நோக்குதல் ஆக்கம் தரும் ஆய்வாகும்.

### 1. உயிர்மெய் :

மெய்யும் உயிரும் கூடிப்பிறக்கும் எழுத்தினை மெய்யுயிர் என்னுமல், உயிர்மெய் எனத் தலைமை தோன்றக் குறியிட்டாளுவர் தொல்காப்பியர் (தொல். எழுத்து. 60. 106) மெய் முன்னும் உயிர் பின்னுமாய் இணைதலும், அகரத்துடன் புள்ளியின்றிப் பழைய வடிவுடன் ஒலித்தலும், பிறஉயிர்களுடன் உருவுதிரிந்துயிர்த்தலும், உயிர்த்தன்மை திரியாமையும் உயிர்மெய்யின் இயல்பெனத் தொல்காப்பியர் கூறினர். (தொல். எழுத்து 10, 17, 18). உயிரினையும் மெய்யினையும் ஓதித் தொடர்ந்து உயிர்மெய்யினை உரைத்தமையான், அது முதலெழுத்தென்பதே தொல்காப்பியர் கருத்தாதல் வேண்டும். அதனுற்றான் யாப்பருங்கல ஆசிரியரும் உயிர்மெய்யினை முதல் எழுத்து என்றே கருதினர். (யாப்பு 2). எனின். நேமிநாதமுடையார் உயிர்மெய்யினைச் சார்பெனக் கொண்டனர். (நேமி. 3). அவர்க்குப்பின் வந்த பவணந்தியாரும் அங்ஙனமே கூறினர். தொல்காப்பியர் உயிர்மெய்க்குக் கூறிய அமைதிகளைத் (தொல். எழுத்து. 10, 17, 18) திரட்டி நன்னூலார் ஒரே நூற்பாவில் அழகுற அமைத்தனர். (நன். எழுத். 89). உயிர்மெய் 216-இல் மொழிக்கு மூவிடத்தும் வாராதனவும், முதலிலும் இடையிலும் கடையிலும் தனித்தனி வாராதனவும் இலக்கணம் வரையறுத்த காலமுதலே உளவேனும், ஒலியமைப்பின் ஒழுங்கினைக் கருதிப் பண்டைத் தமிழர் அனைத்தையுமே பேணி வந்தனர் போலும்.

### 2. 3 ஆய்தமும் ஆய்தக் குறுக்கமும்:

தொல்காப்பிய நூற்பாவினையே ஆய்த இலக்கணத்திற்கு அமைவுடையதாகப் பவணந்தியார் எடுத்தாளுவர். சங்கரநமச்சிவாயர், முதலிலும் இறுதியிலும் முதலெழுத்துக்கள் நின்றெழுப்ப, இருசிறகெழுப்ப எழும் உடலதுபோல் இடையெழுந்தொலிக்கும் இயல்பிற்று என்று ஆய்தத்தினை அழகுற விளக்குவர். முற்றாய்தம் ஆய்தக்குறுக்கம், என இருவகையாக நன்னூலார் ஆய்தங்களைப் பகுத்துரைத்தனர் (நன். எழுத். 61). இவை முறையே அரையளவும், காலளவும் பெறும் என்றனர். தனிமொழியில் வரும் ஆய்தம் 6, புணர்ச்சி விகாரத்தில் வரும் ஆய்தம் 1 இலக்கிய எனச் செய்யுள் விகாரத்தில் வரும் ஆய்தம் 1—ஆக எட்டும் முற்றாய்தம் என்றனர். ளவீற்றியையினுன்வரும்

கஃறீது, முஃடீது என்பன இரண்டும் ஆய்தக் குறுக்கம் என்றும் கூறினர் (நன். எழுத். 97)

தொல்காப்பியர் ஆய்தக்குறுக்கத்தினை அறியாதவர் அல்லர். "ஆய்தம், **அஃகாக் காலையான** " (தொல். எழுத்து. 40) என்ற குறிப்பினால், அஃகும் இடமும் உண்டென்பது அவர் கருத்தாதல் பெறும். அவர் சார்பெழுத்துக்களை விளக்கும் போக்கினை நோக்குதல் வேண்டும். 34-ஆம் நூற்பாவில் ஒருமொழிக் குற்றியலிகரத்தை விளக்கி, அதனிற் குறுகி ஒலிக்கும் தொடர்மொழிக் குற்றியலிகரத்தை 35-ஆம் நூற்பாவில் விளக்கினார். இவ்வண்ணமே, 36-ஆம் நூற்பாவில் ஒருமொழிக் குற்றியலுகரத்தையும், அதனிற் குறுகி ஒலிக்கும் வன்தொடர் மொழிக் குற்றியலுகரத்தை 37-ம் நூற்பாவிலும் வகுத்துரைத்தார். இதேமுறையில் 38-ஆம் நூற்பாவில் ஒருமொழி ஆய்தத்தினை ஓதி, 39-ஆம் நூற்பாவில் தொடர்மொழி ஆய்தத்தினை, ஈறியன் மருங்கினும் இசைமை தோன்றும்" எனச் சுட்டினார். ஈண்டு, 'ஈறு' என்று தொல்காப்பியர் கருதியவை ல, வ, ள என்பனவே. (தொல். புள்ளி. 369. 379. 399). இசைமை தோன்றும்' என்பதற்கு ஆய்தம் தோன்றும் என்று இளம்பூரணர் வகுத்த உரையே ஏற்றது. முன்னிரு சார்பிற்கும் தொல்காப்பியர் கொண்ட பாகுபாட்டினை மூன்றுவதாகிய ஆய்தத்திற்கும் பொருத்திப் பொருள் காண்பதே தக்கது; இதற்கு (39) அடுத்த நூற்பாவில் (40) 'ஆய்தம் அஃகாக் காலையான' என்று குறிப்பதால், ஆய்தம் அஃகும் இடத்தினை ஈண்டு (39-ஆம் நூற்பாவில்) குறிப்பிட்டார் எனக் கருதலாம். இந்நூற்பாவின் (39) கருத்தினை உட்கொண்டே பவணந்தியார் 'லளவீற்றியைபினும் ஆய்தம் அஃகும்' என விளங்க உரைத்தலும் காண்க.

எனின், புணர்ச்சி விகாரத்தில் அஃகடிய, மஃகான் என்பன போன்ற ஆய்தம் முற்றாய்தம் என நன்னூலார் கருதுதல் சரியன்று. ஏன் எனின், முஃடீது, கஃறீது என்பனவும் புணர்ச்சி விகாரத்தால் வருவனவே; இவற்றையும் அங்ஙனம் கூறவேண்டுதலின் என்க. ஒருமொழி ஆய்தம் இயல்பானதென்றும் தொடர்மொழி ஆய்தம் அஃகும் என்றும் கருதும் தொல்காப்பிய நெறிப்படி, 'லளவ ஈற்றியைபினும் ஆய்தம் அஃகும்' என்று பவணந்தியார் நூற்றிருந்தால் முற்றிலும் சாலும். செய்யுளில் தோன்றல் விகாரமாய் வரும் இலஃஃகிய என்பதைப்போல் மஃகானையும் கருதலாம். இல்லாத ஓசையைத் தோற்றுவிக்குங்கால் முழுமையாக ஒலித்தேயாதல் வேண்டும். எனவே, தோன்றலாய் வரும் ஆய்தம் முற்றாய்தமே.

தொடர்மொழியில் வரும் சார்பெழுத்துக்கள் ½ மாத்திரையிற் சற்றே குறுகி ஒலிக்கும் என்பது தொல்காப்பிய நூற்பாக்களான் உய்த்துணரப்படும் (தொல். எழுத்து. 35, 37, 39, 40). நச்சினார்க்கினியர் தொடர்மொழிக்கண் வரும் ஆய்தமும் ½ மாத்திரையே பெறும் எனல், ¼ மாத்திரை பெறும் என்ற பவணந்தியாரை மறுத்தற்குப் போதும் (தொல். எழுத்து. 39-உரை)

## 4. உயிரளபெடை

நெடிலும் இனக்குறிலும் விரலும் விரலும் சேர்ந்தாற்போல நில்லாமல், நீரும் நீரும் கலந்தாற்போல ஒன்றி நின்று அளபெடுக்கும் என்றும், குறிலினது விகாரமே நெடிலானாற் போல நெடிலினது விகாரமே அளபெடை ஆயிற்றென்றும் சிவஞானமுனிவர் கருதினர். கோட்டுநூறும் மஞ்சளும் கலந்து புதியதோர் செவ்வண்ணம் பிறந்தாற்போல நெடிலும் குறிலும் கலந்து புதியதோர் ஓசை பிறக்கும்; அங்ஙனம் தோன்றும் பிளவுபடா ஓசையே அளபெடை என்று நச்சினார்க்கினியர் விளக்குவர்.

தொல்காப்பியர் சார்பெழுத்துக்களில் இறுதியாகிய ஆய்தத்தினைக் கூறிமுடித்து (தொல். 38, 39, 40) உயிரளபெடையினை அடுத்து ஓதத் தொடங்குகிறார். (தொல். 41) அதனாற்போலும் பிற்காலத்தார் அளபெடையினைத் தனிச் சார்பாகக் கொண்டனர். எனினும் அதனைத் தொல்காப்பியர்

நெடிலோடு சார்த்தியே கருதினாராதலே, ஈரள பிசைக்கும் நெடிலினைக் கூறிப் பின், 'நீட்டம் வேண்டின் அவ்வளபுடைய, கூட்டி எழூஉ தல் என்மனார் புலவர், என இயம்பியதாற் புலனாகும். இசை குன்றும் மொழிகளில் நெடி லின் பின் இனக்குறில் நின்று இசை நிறைக்கும் எனத் தொன்னூல் கூறும். ஆயின், உயிரள பெடை மூன்று மாத்திரை பெறும் என்றும், நெடிலேழும் மொழி முதல் இடை கடை நிலைகளில் அளபெடுக்க, 21-ஆம் என்றும் பவணந்தியார் பகர்ந்தனர். மயிலைநாதர் ஒள மொழியின் இடை கடை நிலையிலும் அள பெடுக்கும் என எண்ணி, மனௌஉகம், அனௌஉ என எடுத்துக்காட்டும் வழங்கி னர். யாப்பருங்கல விருத்தி உரையாசிரிய ரும், நேமிநாத உரைகாரரும் இவரைப் போலவே ஒள இடையிலும் கடையிலும் கூட அளபெடுக்கும் என்றனர். (யா. வி. பக். 16. நேமி. பக். 8). இவர்கள் காட்டும் சொற்களின் அமைப்பு தமிழின் நீர்மைக்கு ஒவ்வாமையானும், இவை தமிழன்மையா னும் இவற்றின் பொருள் அறியப்படாமை யானும் அவ்விரண்டிடத்தும் அஃது அள பெடுக்க வாய்ப்பில்லை எனக் கருதுதலே தக்கது. வழக்கறியாமல் விதி அமைத்த நன்னூலாரை வழுவின்றிக் காக்கும் நோக்கில் இன்னிசை அளபெடையும் சொல்லிசை அள பெடையும் சேர்த்து உயிரளபெடை 21 என்று கணக்கிட்டுரைப்பர் சிவஞானமுனி வர். இனி, இயற்கை அளபெடை, செயற்கை அல்லது செய்யுளிசை நிறையளபெடை, எழுத்துப்பேறு அளபெடை, இசைநூல் அளபெடை எனப் பல்வேறு வகைகளைப் பிற்காலத்து இலக்கணம் பெருக்கிக்கொண் டன. இசையிடன் அளபிறந்துயிர்க்கும் இசையளபெடையினைத் தொல்காப்பியரும் சுட்டியுள்ளார் (தொல். எழுத்து 33). நன் னூலாரும் இசை, விளி, பண்ட மாற்றுதியின் வரம்பிகந்து ஒலிக்கும் அளபெடையினைக் குறித்துள்ளார் (நன். எழுத்து 101).

## 5. ஒற்றளபெடை

தொல்காப்பியர் ஒற்றளபெடை இசை யில் வரும் என்றார் (தொல். எழுத்து. 33) செய்யுளியலில் 'ஒற்றள பெடுப்பினும் அற்றென மொழிப' எனவும் கூறினர். எனின், அவர்க்குப் பின் வாழ்ந்த அவிநயனார்,

" வன்மையொடு ரஃகான் ழஃகான்
ஒழிந்தாங்கு
அன்மெய் ஆய்தமொடு அளபெழும்
ஒரோவழி "

(நேமி. பக். 7; நன், மயிலை. பக். 20).

என்று அளபெடுக்கும் ஒற்றுக்கள் யாவை என்பதை வரையறுத்தார். அவர் கூறிய பதி னொன்றும் எவ்வெவ்விடங்களில் அளபெடுக் கும் என்பதைப் பின்னர்வந்த பவணந்தியார்,

" ஙஞண நமன வயலள ஆய்தம்
அளபாம் குறிலிணை குறிற்கீழ் இடை
கடை
மிகலே அவற்றின் குறியாம் வேறே "

(நன். எழுத்து. 91)

என்று விளக்கினார். உய்த்துணர வைப் பெனும் உத்தியான் ஆய்தம் இடை யிலன்றித் தோன்றாமையின், குறிலிணைக்கீழும் குறிற்கீழும் அளபெழா என விளக்கினர் மயிலைநாதர். (நன். பக். 31). எனவே, மெய்பத்தும் குறிலிணை, குறிற்கீழ் இடை கடை நிலைகளில் அளபெடுத்தலின் வரும் ஒற்றளபெடை 40உம்; ஆய்தம் குறிலிணை குறிற்கீழ் இடைநிலையில் அளபெடுத்த லின் வரும் அளபெடை 2-உம் ஆக ஒற்றள பெடை 42 என்றனர். இலக்கிய வழக்கில் இவையாவும் வருவனவா என்பது கேள்விக் குறியே! உயிரளபெடையினைவிட ஒற்றள பெடை அருகியே இலக்கியத்தில் வழங்கின.

## 6. குற்றியலுகரம்

குற்றியலுகரம் வழங்கும் இடமும் பற் றுக்கோடும் தொன்னூலார்க்கும் நன்னூ லார்க்கும் ஒத்தனவே. தொல்காப்பியர் கூறிய மொழிமுதற் குற்றியலுகரத்தை மறுத்தல்

என்னும் மதம் பற்றிப் பவணந்தியார் விடுத்தனர் என மயிலைநாதரும் சங்கரநமச்சிவாயரும் முகவை இராமாநுசக் கவிராயரும் உரைப்பர். குற்றியலுகரம் 36 எனப் பவணந்தியார் வரையறை செய்தார். இத்தொகையினை மயிலைநாதர் கணிக்கவில்லை. (நன். மயிலை. பக். 33) ஆயின், சங்கரநமச்சிவாயரும் முகவை இராமாநுசக் கவிராயரும் "இடையினம் தொடராத டகார றகாரங்களை ஊர்ந்த உகரம் இரண்டினையும் விலக்காது ஆனைமுகக் கடவுளை மும்மதத்தன் என்றாற்போல இலக்கணை என்னும் விதியாற் குற்றியலுகரம் 36 என்று மேற்கூறியவாறே வன்மையூருகரம் ஆறோடு நெடில் முதலிய ஆறையும் உறழ 36 வருமாறு காண்க" என்று கணித்தனர். எனவே, அவர் கருத்துப்படி குற்றியலுகரம் 34 என்பதும், இலக்கணையால் 36 எனக் கொள்ளுதல்வேண்டும் என்பதும் விளங்கும். ஆயின், நன்னூல் திருத்திய விருத்தியுரையில் சிவஞானமுனிவர், "நெடில் 7, ஆய்தம் 1, ஔ நீங்கிய உயிர் 11, வல்லினம் 6, மெல்லினம் 6, வல்லெழுத்தொடு தொடராத வகர ஒற்று நீங்கிய இடையொற்று 5, - இவற்றை இடமாகக் கொண்டு வருவன 36 என்றனர். எனின், தொல்காப்பிய முதற் சூத்திர விருத்தியில், இக்கருத்தினையே "என்று கூறுவாரும் உளர்' (தொல்காப்பியச் சூத்திரவிருத்தி பக். 40) என்று அவரே எழுதினர். எனவே, நன்னூலில் காணப்படும் கணிப்பு அவரின் வேறுபட்ட பிறிதோர் உரையாசிரியர் கருத்தாதல் வேண்டும். இனி, உயிர்த்தொடர்க்கண் எ, ஒ-வினை வல்லினம் தொடராமையின் குற்றியலுகரம் முப்பத்துநான்கு எனவே முடியும் என்பர் வே. வே. ரெட்டியார். அறுவகை வல்லெழுத்தையும் பற்றுக்கோடாகக்கொண்டு தோன்றும் குற்றியலுகரமும் ஆறுதான் என்பார் அவர்.

யாப்பிலக்கணத்தார் ஈற்றயலினின்ற எழுத்தைக் கருதாமல் அசையைக் கருதிக் குற்றியலுகரம் 7 இடங்களில் வரும் எனக் கொண்டனர்.

" நெடிலே குறிலிணை குறினெடில் என்றிவை
ஒற்றொடு வருதலொடு குற்றொற்
றிறுதியென்
றேழ்குற் றுகரக் கிடனென மொழிப "

எனினும் சுண்ணாம்பு, ஆமணக்கு, போவது, வருவது, ஒன்பது முதலியன இவற்றில் அடங்காமையினைத் தொல்காப்பிய, நன்னூல் உரையாசிரியர்கள் சுட்டிக்காட்டினர்.

இங்ஙனம், குற்றியலுகரம் முதலிய சார்பெழுத்துக்களை வரையறுத்து எண்ணிக் காட்ட எடுத்த முயற்சிகள் எல்லாம் விளக்க மொழியியல் (*Descriptive linguistics*) ஆய்வின் முன்மாதிரி எனக் கருதலாம்.

## 7. குற்றியலிகரம் :

தொன்னூலைத் தழுவியே நன்னூல் குற்றியலிகரத்தை விளக்குகிறது (தொல். 34. 35. 410, நன். 93). 36 குற்றியலுகரமும் யகரம் வர இகரமாவனவும், — 'மியா'வில் வரும் இகரமும் கூடிக் குற்றியலிகரம் 37 என்றார் பவணந்தியார்.—மியா எனப் பிரிப்பது பிழை என்பது முன்னர் விளக்கப்பெற்றது.

## 8. 9 ஐகார, ஔகாரக் குறுக்கம்:

தொல்காப்பியர் ஐகார ஔகாரங்கள் கூட்டொலிகள் என்பதை விளக்கி (தொல். 54-56), இவற்றின் குறுக்கங்கள் ஒரு மாத்திரை பெறும் என்பதை 'ஓரளபாகும் இடனுமாருண்டே' (தொல். 57) எனச் சுட்டினார். யாப்பருங்கலமும் இவ்விரு குறுக்கத்தைக் கூறினும் சார்பெனக் கொள்ளவில்லை (யாப். 2). அவிநயனார், இவ்விரண்டும் தனிநிலை அளபெடை தவிரப்பிறண்டு குறுகுமென்றும் தனிநிலையிலும் ஒரோவழி குறுகும் என்றும் கருதினர்;

" அளபெடை தனியிண் டல்வழி ஐஔ
உளதாம் ஒன்றரை தனிமையு மாகும்"
(நன். மயிலை. பக் 20)

அவிநயனார்க்குப் பின்போந்த குணவீர பண்டிதரும்,

“ மும்மையிடத்து ஐஔவும் குன்றும்”
(நேமி. 4).

என்றனர். எனினும், நேமிநாத உரைகாரர் “ஔகாரக் குறுக்கம் இடையும் ஈறும் வந்த வழிக் கண்டுகொள்க” (நேமி. பக். 10) என்று நூலாசிரியரைக் குறைகூறாமல் எழுதினார். பவணந்தியாரும் ‘ஔ’ இடையிலும் ஈற்றிலும் வாராமையினை உறுதிப்படுத்தி,

“தற்சுட் டளபொழி ஐம்மூ வழியும்
நையும் ஔவும் முதலற் றாகும்”
(நன். 95)

எனத் தெளிவுறுத்தினார். எனவே, இடவகையால் ஐகாரக்குறுக்கம் 3, ஔகாரக் குறுக்கம் 1, ஆகும். இக்கருத்தே இளம்பூரணர் நச்சினார்க்கினியர் உரைகளிலும் காண்கிறோம் (தொல். எழுத்து 57 உரை).

## 10. மகரக் குறுக்கம் :

தொல்காப்பியர் தனிமொழியில் வகார ஈற்றின் முன்னும், தொடர்மொழியில் வகரம் வரும் வழியும் மகரம் குறுகும் என்றார் (தொல். எழுத்து. 13, 51, 52, 330), பழம் பாக்களில் பயின்றுவரும் மருண்ம், கொண்ம், உண்ம் முதலிய சொற்களில் ணகாரத்தின் முன்னும் மகரம் குறுகுதலை உணர்ந்த நச்சினார்க்கினியர் அதனையும் உரையிற் குறித்தார். (தொல். எழுத்து. 52). இதுபற்றி இளம்பூரணர் யாதும் இயம்பிலர். இம்மூவிடங்களையும் தொகுத்துச் சுருங்கச் சொல்லல் என்னும் அழகுடன் “ணனமுன்னும் வஃகான் மிசையுமக்குறுகும்” (நன். எழுத்து 95) என்று நூற்றார் பவணந்தியார்.

பேராசிரியர் “ அரையளவு குறுகல் ” என்ற நூற்பாவிற்கு இசையில் மகரம் அரையளவிற் சுருங்கி ஒலிக்கும் என விளக்கம் தந்தார். இசைநூலாகிய பரிபாடலில் “போன்ம்” என்ற சொல் பன்முறை வருதலான், இங்ஙனம் எழுதினர் போலும்.

மகரத்திற்கும் மகரக் குறுக்கத்திற்கும் தொல்காப்பியர் வரிவடிவ வேற்றுமை கூறியுள்ளார் (தொல். 13, 14). மகரமெய் உள்ளே புள்ளி பெறின் மகரக் குறுக்கமாம் என்ற தொல்காப்பியர் கருத்தினைப் பெருந்தேவனாரும் வீரசோழிய உரையிற் கூறியுள்ளார் (வீர. சந்தி. 19). இதுபற்றி நன்னூலார் விதந்து கூறவில்லை.

இதுகாறும் இயம்பியவாற்றான் நன்னூலார் கூறிய சார்பெழுத்துக்கள் தொல்காப்பியர் காலத்திலிருந்து யாங்ஙனம் வளர்ந்து வந்துள்ளன என்பது தெளிவாகும்.

## சிவஞானமுனிவரும் சார்பெழுத்தும் :

சங்கரநமச்சிவாயரின் நன்னூல் விருத்திக்கு விளக்கம் காணும் வகையில் சிவஞான முனிவர் பத்துவகைச் சார்புகளையும் உடன்படுவார்போல் வரைந்திருப்பினும், தொல்காப்பிய முதற் சூத்திர விருத்தியில் பின்னூலார் கொண்ட சார்புகளையெல்லாம் கண்டனம் செய்து, தொல்காப்பியர் கூறிய மூவகைச் சார்பினையே நிலைநாட்டியுள்ளார். அவர் உரையில்,

“ உயிர்மெய் முதலியவற்றையும் சார்பெழுத்து என்பாரும் உளராலோ எனின்... உயிர்மெய் ஆகிய காலத்தும் குறின்மை நெடின்மை என்னும் உயிர்த்தன்மையும் வன்மை, மென்மை, இடைமை என்னும் மெய்த்தன்மையும் தம் இயல்பிற் திரிபு படாமையானும்...அளபெடை சார்பெழுத்தென வேறாகாமை முன்னர்க் காட்டப்பட்டது ஆகலானும்; ஐகாரக் குறுக்கம் முதலியன ஒரு காரணம் பற்றிக் குறுகின ஆகலின், சிறுமரம் பெருத்துழியும் பெருமரம் சிறுத்துழியும் வேறொரு மரம் ஆகாதவாறு போல வேறு எழுத்தெனப்படா...பிறரும் ‘குறுகிய மூவுயிர்’ என்றே மொழிதலானும் ஔகாரக் குறுக்கம் என ஒன்று இன்மை உணர்க’

(தொல். மு. வி. பக். 86–43). என வரும் பகுதியினை ஊன்றி நோக்குக.

## இருபதாம் நூற்றாண்டில் சார்பெழுத்து

நன்னூல் கூறும் பத்துச் சார்பெழுத்துக்களில் உயிர்மெய் ஒழிந்தவை இக்காலத் தமிழில் இல்லை எனலாம். ஆய்த மொழிகள் அருகிவிட்டன. கஃறீது, முஃடீது என்ற ஆய்தக் குறுக்கமும் வழக்கொழிந்து நெடுங்காலம் அகன்றது. எனின், பா.வே. மாணிக்க நாயக்கர் ஆய்தத்தின் உதவியால் அயல் மொழியொலிகளைக்கூட அழகாக ஒலித்துக் காட்டமுடியும் எனக் கருதினார். டாக்டர் மு. வ. நூல்களிலும் அரசாங்க வெளியீடுகளிலும் புதிய ஆய்தம் பயின்றுவரக் காண்கின்றோம். இம்முயற்சி மேலோங்கின் அறிவியல், பொறியியல், புதுக்கலையியல்களை மொழிபெயர்க்குங்கால் பிறமொழிச் சொற்களை ஒலித்தூய்மையுடன் எழுதவும் பேசவும் வழிபிறக்கும். எனினும் மொழியாக்கத்திற்கு ஊறுபயக்கும் வகையில் புதிய ஆய்தத்தைப் பயன்படுத்தக்கூடாது.

திரு. வி. க. மறைமலையடிகள் முதலியோர் தமிழ் நடையில் ஒரோவழி உயிரளபெடை ஒளிரப் பார்க்கிறோம். ஒற்றளபெடை ஒடுங்கிவிட்டது. கவிஞர்கள்கூட அளபெடையின்றியே ஓசையை நீட்டிப்பாடி நிரப்பிவிடுகின்றனர். பேச்சு வழக்கில் குற்றியலுகரம் காணப்படினும் எட்டு வழக்கில் பெரும்பாலும் இயல்பான உகரமாகவே பயன்படுத்தப்படுகிறது. எனவே, குற்றியலிகரம் தோன்ற வழியேது? சென்மியா, கேண்மியா செல்லாக்காசாயின. ஐ, ஔ–வினை அய், அவ் என்று எழுதுவோர் தொகை மிகுதலான், இவ்விரண்டின் குறுக்கங்கட்கு இடம் ஏது? போன்ம், சென்ம் என்பாரின்மையின், மகரக் குறுக்கமும் நகரலாயிற்று.

வழக்கொழிந்த இலக்கண மரபுகளைத் தலைமேல் சுமந்து பயனில்லை. வரலாறு எழுதுவதற்கும் வகுப்பிற்கும் அவற்றை வைத்துக்கொள்ளலாம். வளரும் தமிழிற்கு வாழ்வுதரும் வகையில் புதிய இலக்கண நூல்களைப் படைத்தளித்தல் காலத்திற்கேற்ற தமிழ்ப் பணியாகும்.

### ஆய்வின் முடிபுகள் :

1. குற்றியலுகரம் உயிரொலியே.

2. மொழிமுதற் குற்றியலுகரத்தினைப் பிற்காலத்தார் பேசவில்லை.

3. குற்றியலிகரத்தினை முற்றியலிகரத்தின் மாற்றொலியாகக் கருதுதல் வேண்டும். இன்றேல் குற்றியலுகரத்தின் ஒலிமாற்றமாகக் கருதுதல் வேண்டும்.

4. இவ்விரண்டும் முற்றியலிகர, உகரங்களின் குறுக்கம் இல்லை. இயல்பாகவே குறுகியவை.

5. கேண்மியா, சென்மியா என்பனவற்றில் 'யா' தான் இடைச்சொல்; மியா எனப் பிழைபடப் பிரித்தல் ஒவ்வாது. –இகரம் விட்டிசை தடுக்க வந்தது. 'யா' ஏ ஆதலும் உண்டு.

6. ஆய்தம் மெய்யே; 'வ்' இல் இருந்து ஆய்தம் பிறந்ததெனல் பொருந்தாது. மூன்று புள்ளியிட்டு எழுதினர். தொல்காப்பியற்குப் பின் ஆய்தம் மெய்யா ? உயிரா ? என்ற திண்டாட்ட நிலையை அடைந்தது.

7. பயன்படா உயிர்மெய்கள் உளவேனும் ஒலி அமைப்பின் ஒழுங்கினைப் பேண அவை வாழ்கின்றன.

8. தொல்காப்பியர் ஆய்தக் குறுக்கத்தினைச் சுட்டியுள்ளார். தொடர்மொழியில் வரும் ஆய்தம் குறுகும் என்பது அவர் கருத்தாதல் கூடும்.

9. நன்னூலார் புணர்ச்சி விகாரத்தில் அசிகடிய, மகேகான் என்பனபோல் வரும் ஆய்தத்தினை முற்றாய்தம் என்றும் மொழிகூடும். கஃறீது என்று வரும் புணர்ச்சி விகார ஆய்தத்தினைக் குறுக்கம் என்றும் கூறுதல் பொருந்தாது.

10. அவிநயனார், யாப்பருங்கல விருத்தியுரைகாரர் நேமிநாத உரையாசிரியர் மயிலைநாதர் முதலியோர் 'ஔ' மொழியின் இடை, கடைகளில் அளபெடுக்கும் எனல் தமிழின் நீர்மைக்கு ஒவ்வாது.

11. ஒற்றளபெடை 42-ம் இலக்கியங்களில் இல்லை. உயிரளபெடை ஒற்றளபெடையினைவிட இலக்கியங்களில் மிகுதியாக வழங்கிற்று.

12. குற்றியலுகரம் முதலிய சார்பெழுத்துக்களை எண்ணிற்குள் அடக்க எடுத்த முயற்சிகள் விளக்க மொழியியல் (*Descriptive Linguistics*) ஆய்வின் முன்மாதிரி எனலாம்.

13. நன்னூலார் கொண்ட பத்துவகைச் சார்பிற்கும் வித்தும் வேரும் தொல்காப்பியத்தில் உள்ளன.

14. இளம்பூரணரைப் பின்பற்றியே நன்னூலார் நூற்பா யாத்தனர் என்பர். ஆயினும் ணகார மிசையும் மகாரம் குறுகும் கொள்கையினை இளம்பூரணர் கூறவில்லை; பவணந்தியார் கூறியுள்ளார்.

15. சார்பெழுத்துக்களைக் குறித்து நன்னூல் விருத்தியிலும் தொல்காப்பிய முதற்சூத்திர விருத்தியிலும் மாதவச் சிவஞானமுனிவர் முரண்படுவதாகக் கொள்ளக்கூடாது.

16. இருபதாம் நூற்றாண்டில் உயிர்மெய் ஒழிந்த சார்பெழுத்துக்கள் இல்லை எனலாம்.



# பணியிற் பதித்த மணி

திரு. ச. தண்டபாணி தேசிகர்,
"திருக்குறள்"

நல்ல வயிரம். காண்போர் கண்ணை ளவாகவும்—கருத்தளவாகவும் மதிக்கப்பெறுவது. மாசுபோக்கிப் பட்டை தீட்டப்பெற்றது; ஒளிமிக்கது; ஆயினும், அணியமைக்கும் கம்மியனுடைய கட்டுவகையால் தனியொளி பெறுகிறது. இயல்பான தன்னொளியினும் மிகுந்து காட்டுகிறது அதுபோலத் திருக்குறள் மணிகளும் இயல்பாகவே ஒளியும் விலை மதிக்கவொண்ணாத விளக்கமும் படைத்தவைதாம். இதனை உரையாசிரியர்களாகியப் பட்டை தீட்டுவோர் பதின்மரும், தத்தம் அறிவுச்சாணையில் வைத்துப் பட்டை தீட்டினர். பின்னும் பலர் அவ்வளவில் மன நிறைவின்றித் தாமும் பலகோணங்களிற் பட்டையிட்டனர். மணிகள் தனியொளி பெற்றன.

அத்தகைய குறள் மணிகளைக் கவிஞர் பெருமக்கள் அன்றுமுதல் இன்றுகாறும் காப்பியக் கட்டிடங்களில் கவிதைப் பொன்னிற் பதித்துத் தனி மதிப்பீந்தனர். அதனாற் குறள் மணிகளில் பழைமையான-இயல்பான ஒளியுடன் விளங்கின பல. புதுநிறமும் புத்தழகும் புத்தொளியும் பூரிப்பும் பெற்றவை பல. அவற்றுள் சிலவற்றை உற்று நோக்குவோம்.

சீவகசிந்தாமணியில் பதிகப்பகுதி பிற் கூறப்பெறும் வரலாற்று நிகழ்ச்சிகளைத் தொகுத்துணர்த்துகிறது. அதில் யாழ்வாசிப்பதில் சிறந்த புலமையுடையவளாகிய காந்தருவதத்தையைச் சீவகன் வித்தையால் வென்றான்; மணந்தான்; இருவரும் ஒத்த இன்பத்தைத் துய்த்தனர் என்ற வரலாற்றுக் குறிப்பை உணர்த்தும்போது திருத்தக்க தேவர்,

> "விஞ்சைக்கிறைவன் மகள் வீணையிற்
> றோற்றவாறு
> நஞ்சுற்ற காமம் நனிநாகரிற்றுய்த்த
> வாறும்"
> (சீவக. 11)

என்கின்றார்.

இப்பகுதிக்கு உரையாசிரியர் நச்சினார்க்கினியர் 'இருதலையும் ஒத்த காமத்தை நாகர் போலத் துய்த்தவாறும்" என உரை கண்டனர். இவ்வுரையையும் 'நஞ்சுற்றகாமம்' 'நாகரில் துய்த்தவாறும்' என்ற பகுதிகளையும் இணைத்து எண்ணும்போது

> ஒருதலையான் இன்னாது காமம்
> காப்போல
> இருதலையானும் இனிது
> (குறள் 119-6)

என்ற குறள் ஒருவகைப் புத்துணர்வோடு இன்பமூட்டும்.

இக் குறட்பாவுக்கு உரைகண்ட பரிமேலழகர் ஆண் பெண் இருபாலரிடத்தும் ஒத்து நிகழவேண்டிய வேட்கை ஒருதலைக் கண்ணேயின் இன்னாதாம் என்றனர். மணக்குடவரும் பருதியாரும் ஒருதலையன்பினால் உண்டாகிய காமம்: ஒருதலைக்காமம் ஆகிய

கைக்கிளை இன்னாதாம் என்று உரைகண்டனர். பரிமேலழகர் காளிங்கர் இவர்கள் கருத்தின்வண்ணம் காமம்—வேட்கையென்னும் பொருளில் ஆளப்பெற்றுள்ளது. ஏனையோர் கருத்தின்வண்ணம் அன்பால் விளைந்த பற்றுள்ளம் அல்லது புணர்வு என்னும் பொருளதாகின்றது. இங்ஙனம் காமம் என்பது இச்சையா? அதன் விளைவாகிய இணைவிழைச்சின்பமா? என்று துணியக்கூடாத நிலையில் உள்ளது. இருவரும், ஒருவரையொருவர் தத்தம் இன்றியமையாமையை உணர்ந்த பின் மனம் நைந்து போயினர். கனிவு அல்லது அந்த நைவு துய்ப்பதற்கு, ஏதுவாயிற்று; அதனால் தத்தையும் சீவகனும் நாகரைப்போலக் காமத்தைத் துய்த்தனர் எனக் காமம்—இன்பம் என்னும் பொருளது என்பதனைத் தேவர் வாக்கு தெளியவைத்தது.

வள்ளுவர் இருபாலும் ஒத்த காமநுகர்ச்சிக்குக் காப்போல இனிது என்று உவமை தந்தனர். கா—காவடித்தண்டு. ஒத்த சுமையை இருபாலும் உடையது. அதனால் தூக்குதற்கு எளிமை பயப்பது. அத்தண்டினைப்போல ஒத்த காமமாகிய ஐந்திணையொழுக்கம் இருவர்க்கும் எளிதாயிற்று என்கின்றார்.

ஐங்கலப்பாரஞ்சுமத்தல் சாத்தற்கு எளிது என்றாற்போலக் காமம் இருபாலும் ஒத்ததாயின் எளிதாம் என்று சொல்லவேண்டிய ஆசிரியர் வள்ளுவர் அங்ஙனம் கூறாது 'இனிது' என்கிறார். எளிது என்பது சுமத்தற்கும் இயற்றுதற்கும் எளிமையாயிருத்தலைக் குறிப்பது; இனிதென்பது நுகர்ச்சிக்கு இன்பம் பயத்தலைக்குறிப்பது. ஆகவே இனிதென்ற வள்ளுவர் உள்ளம் ஆழ்ந்து எண்ணி நுகர்தற்குரியது.

இந்த எண்ணங்களை எல்லாம் எண்ணிப் பார்த்த காப்பியத்தேவர் 'துய்த்தவாறும்' நாகரில் துய்த்தவாறும் என்கின்றார்.

நாகரில் என்ற உவமையை நிலைக்களனாக வைத்து நச்சினார்க்கினியர் 'தத்தையும் சீவகனும் இருதலையும் ஒத்த கனிந்த காமத்தை நாகரைப்போல நுகர்ந்தனர்'' எனப் பொருள்கண்டு காமம் என்ற சொல்லுக்கு இன்பம் எனப் பொருள்கொண்டனர்.

இருபாலரிடத்தும் முன் பின் என்ற காலவேறுபாடும், உணர்ச்சி வேறுபாடும் இல்லாத இன்பத்தைத் துய்ப்பவர்கள் நாகர்கள். அவர்களைப்போல இவர்கள் இருவருந் துய்த்தனர் என்கின்றார்.

இக்குறள் தனிப்படர் மிகுதி என்ற அதிகாரத்தில் உள்ளதாயிற்றே. இதற்குக் 'காதல் ஒரு பக்கமாக இருத்தல் கூடாது; இருபாலரிடத்து ஒத்ததாக இருந்தால் இனிது' என்ற பொருளே அதிகாரத்தோடியையுடையது போலத் தோன்றவில்லையா? எனலாம்.

தனிப்படர்மிகுதி என்பது காதலனைப் பிரிந்த காதலியின் துன்பப் பெருக்கம். பிரிவு இரு வகைப்படும். ஒருவரையொருவர் பிரிவதால் உணர்ச்சிக்கு ஏற்படுவதும், உணர்ச்சி வேற்றுமையாலும் கால வேற்றுமையாலும் ஏற்படுவதும் என. இவ்விரண்டாலும் விளைவது துன்பமே. திருக்குறள் உரையாசிரியரிற் பரிமேலழகர் உடற்பிரிவைக் கருத தேவர் உணர்ச்சியில் விளையும் பிரிவையுணர்த்த ''நாகரில் காமம் துய்த்தவாறும்'' என்றனர்.

காவடித்தண்டின் இருபக்கமும் வைக்கப்பெற்ற சுமை ஏற்றத் தாழ்வாயிருந்தால் தூக்குபவனுக்குத் துன்பம் விளைப்பது போல காமம் ஒருதலையானதாயின் ஒரு பாலுக்குத் துன்பம் விளைப்பதாம் என்ற சிறந்த கருத்தையும் நச்சினார்க்கினியர் உணர்த்துகிறார்.

காவுத்தண்டின் சுமை ஏற்றத்தாழ்வாயின் தண்டின்மையத்தைத் தோள்மேற் சுமக்காமல், சுமைமிகுந்த பாகத்தில் உள்ள தண்டின் பாகத்தைக் குறுக்கியும், சுமை குறைந்த பாகத்தின் தண்டை நீட்டியும் சுமையைச்சரிசெய்வது சுமப்பான் மரபு. அது போல இன்பம் ஒத்த நிலையில் இல்லையாயின்

துய்ப்பார் அதனைச் சரிசெய்தல் வேண்டும் அதுவே ஒத்த வாழ்வின் உண்மை என்றும் கருதச் செய்கிறது. இங்ஙனம் தேவர் வாக்கும் நச்சினார்க்கினியர் உரையும் ''ஒருதலையான்'' என்ற குறளுக்குச் சிறந்தவுரையைத் தருதல் காண்க.

இருகோணங்களில் ஒரு தொடர் :-

இராசமாபுரத்திலே மாளிகையொன்றின் நிலாமுற்றத்திலே இளங்காதலர்கள் இருவர் இருக்கிறார்கள். வேட்கை மிகுதியால் இருவரும் ஒருவரையொருவர் வைத்த கண் வாங்காமற் பார்த்துக்கொண்டே இருக்கின்றனர். இருவர் கண்ணிலும் இருவரும் மாறிப் பாவையாகப் படிகின்றனர். கணவன் கண்ணிலிருப்பது தன் பாவைதான் என்பதை வேணவாவால் மறந்த தலைவி மாற்றாள் பாவையாகக் கருதுகிறாள், ஊடல்கொண்டு ஓடுகிறாள்; தலைவன் முன்தானையைப்பற்றியிழுக்கிறான் மேகலையறுந்து மணிகள் முற்றமெலாம் சிதறுகின்றன! அதனால் நிலாமுற்றம் பொற்கொல்லர் உலைக்களத்தை ஒத்தது என்ற நிகழ்ச்சி

'' **கண்ணுளார் நுங்காதலர்** ஒழிக்காமம் ஈங்கென
உண்ணிலாய வேட்கையால் ஊடினாரை யாடவர்
வண்ணமேகலைகளைப் பற்ற அற்றுதிர்ந்தன
எண்ணில் பொன்சுடுநெருப்பு உக்க முற்றம் ஒத்தவே'
(சீவக 72)

என்ற பாடலால் உணர்த்தப் பெறுகிறது.

வள்ளுவத்திலும்

'' **கண்ணுளார் காத லவாரகக்** கண்ணும்
எழுதேம் கரப்பாக்கு அறிந்து''
(குறள் 1121)

என அதே சொற்றொடர் வருகிறது. சொற்றொடர் ஒத்திருந்தாலும் இருவரும் கூறும் சூழ்நிலைவேறு. இக்குறள் காதற் சிறப்புரைத்தலில் வருகிறது. இவர்கள் இணைந்து வாழும் இன்பத் தம்பதியர்கள். ஆதலால், தலைவி அவனையே நோக்கிக் கொண்டிருக்கிறாள். அவன் அவள் கண்ணிற் பாவையாக விளங்குகிறான். அவனைக் காண்பதிலேயே அவளுக்குத் தனித்ததோரின்பம். ஆனால் கண்ணுக்கு மையெழுதவேண்டிய நேரம் வந்துவிட்டது. எழுத எண்ணுகிறாள்; எழுதினால் கண் கலங்குமே! நீர்சுரக்குமே! உருமறையுமே! என்ற எண்ணப் போராட்டங்கள் விளைந்தன. முடிவு மையெழுத மாட்டேன் என்கிறாள். திருத்தக்கதேவர் கூறும் சூழ்நிலைவேறு. தலைவியின் கண்ணில் தலைவன் பாவையாகக் காணப்பெறுகிறான். அதனைத் தலைவியறிய முடியாதே கண் பிறபொருளைக் காணுமேயன்றித் தன்னைக்காணாதே! தன்னுலக உறுப்பையுங் காணாதே! ஆதலால் அவள் அவன் கண்களைப் பார்த்தாள். அதில் ஒரு பெண்ணுரு தோன்றிற்று.' அதனைத் தன்னுரு என்று கருத அவளுடைய வேட்கைமிகுதி இடந்தரவில்லை. கூடலின்பத்தைக் கொள்ளைகொள்ள எண்ணுகிறாள். கூடலின்பம் மிக, ஊடல் ஒன்றே வழி என்பதை உணர்ந்த அவள் ஊடுகிறாள் என்று அதன் விளைவை மேலும் விரித்து நெருப்புச் சிந்திய கொல்லன் உலைக்களம் வரை தம் சிந்தனையைப் பெருக்கிவிட்டார்.

இங்ஙனம் சொற்றொடர் ஒன்றாயிருந்தாலும், திருத்தக்கதேவர் கூற்று ஊடலுக்குக் காரணமாவது. வள்ளுவர் கூற்று காதற் சிறப்புரைப்பது.

தேவர் கூறுங்காதலி மயங்கி உணர்ந்து ஊடிக் கூடலின்பத்தைக் கொள்ளைகொள்ள எண்ணுகிறவள். வள்ளுவர் கூறுங் காதலி அவர்பால் ஆராக்காதல் உடையேன்; அவரும் அங்ஙனம் என் எதிரில் உள்ளார். பிரியார் என இருவரன்பையும் எண்ண உதவுபவள். இங்ஙனம் இத்தொடர் இருகோணங்களிலும் பிரிந்து சென்று இலக்கிய எழிலை மிகுவிப்பது. சுவைபயப்பது.

நினைத்ததை நினைத்த வண்ணம் நிறை வேற்றிக் கொள்ள உதவுவது என்ற உண்மையை புணர்த்துவது

"வேண்டிய வேண்டியாங்கு எய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும்"

என்ற திருக்குறள். இதற்கு உரைகண்ட பரிமேலழகர்! முயன்றால் மறுமைக்கண் தாம் வேண்டிய பயன்களை வேண்டியவாறே பெறலாம் ஆதலால், செய்யப்படுவதாய தவம் இம்மைக்கண் அறிவுடையோரான் முயலப்படும்' என்பர்

விரும்பினபயன் விரும்பியபடி வருதலால் தவத்தை இவ்விடத்தே முயல வேண்டும் என்பர் மணக்குடவர்

பருதியார் வேண்டின காரியத்தைத் தவம் தருகையினாலே மேன்மேலே தவம் பண்ணுவான் என்பார்.

காளிங்கர் சித்திகள் சுவர்க்கம் முத்தி முதலியவற்றுள் எதைவிரும்பினாலும் விரும்பிய வண்ணம் பெறலாம் ஆதலால் அதற்காகத் தவம் செய்க என்பர்.

நாமக்கல் கவிஞர் வேண்டியனவாகிய சாப அருள்களை விரும்பியபடி அடையலாம் ஆதலால், விருப்புவெறுப்புக் காரணமாகச் சாபம் தந்தும் அருள்வழங்கியும் அழிந்த தவ ஆற்றலை ஈடுசெய்யத் தவத்தை மீளவும் செய்க என்பர். இங்ஙனம் உரைகாரர்கள் "மீண்டும் முயலப்படும்" ஈண்டு முயலப் படும் என்று பிரித்துப் பாடங்கொள்ளும் வகையில் புதிய பொருள் கண்டனர்.

சிந்தாமணியாசிரியர் சீவகன் இலக்கணையை மணந்து கூடினான் என்ற செய்தியைக் கூறும்போது, அவனை மணக்க முயன்றும் பெறாத மன்னர்களின் பொம்மலுரையாக

"அரத்தக மருளிச் செய்த சீறடி யளியதம்மாற்
குரற்சிலம்பொலிப்பத்தனிக் குஞ்சிமேன் மிதிப்பநோற்றான்
திருக்குலாய்க் கிடந்த மார்பிற் சீவகன் நாங்களெல்லாம்
தரித்திலந்தவத்தை யென்று தார்மன்னர் ஏமுற்றாரே"

என்கின்றார். இதனால் இத்துணைப் பேரழகியாகிய இலக்கணையைச் சீவகன் மணக்கத் தவஞ் செய்திருக்கிறான்; நாங்கள் தவம் செய்திலேம் என்றனர் என்கின்றார். இது 'தவஞ்செய்ய வேண்டும்' என்ற இன்றியமையாமையை வற்புறுத்தும் அளவில் அமைந்து குறட் கருத்தை வரலாற்றில் வைத்து விரித்துக் காட்டியது.

சீவகன் வெற்றியையும் மணத்தையுங் கண்ட மக்கள் கூற்றாக

"என்னை தவஞ் செய்யாதிகழ்ந்திருப்ப தென்பார்"
(சீவக. 2555)

என்று சீவகன் இடுகாட்டிற் பிறந்து வணிகர் மகனாக வளர்ந்தும், இலக்கணையை மணந்து வேந்தர் பலர்தொழ வீற்றிருக்கின்றானே. இவ்வளவு உயர்வும் தவத்தால் விளைந்தது என்பதையறிந்தும் நாம் ஏன் தவத்தையிழந்து இருக்கவேண்டும் என்று நொந்துகொண்டார்கள் என்கின்றார் ஆசிரியர். ஈண்டும் 'ஈண்டு முயலப்படும்' என்றதற்கு ஈண்டு ஏன் முயலாதிருக்கின்றோம் என வினாவுரையாக விளக்கந்தருகின்றார்.

துறக்க எண்ணிய சீவகன் வருந்தும் தன் மனைவியரை நோக்கி கூறுவதாக.

"வேற்றுவரென்று நில்லா விழுப்பொருள் பரவைஞாலம்
நோற்பவர்க்குரியவாகும் நோன்மை இனம் நீரும் என்றான்"

தேவர் கூறுகிறார். இதில் இதுவரை நீங்கள் நுகர்ந்த பொருளும் போகமும் தவத்தாலாயவை. மக்கள் தவமிலார்களாயின் பொருள் ஒன்றும் அவர்பின் செல்லா; இவர்களை வேறானவர் என்று எண்ணித்தவம் செய்வார் பக்கம் சேரும். ஆதலால் நீங்கள் இன்னும் தவஞ்

செய்யுங்கள்'' என்பதாகக் கூறுகிறார். இத ஞல் திருத்தக்கதேவர் ''மீண்டும் முயலப் படும்'' எனப் பாடங்கண்டு உரைகொள்ள வைக்கின்ருர் என்பது தெளியப்பெறும்.

வளையாபதிச் செய்யுட்களில் நாற்பத் தாருவது செய்யுட் பகுதி

'' மெய்த்தவ மில்லான் பொருளொடு
போகங்கட்கு
எய்த்துழந் தேதான் இடர்ப்படு மாறே'

என்பது இக்குறட்கருத்தை எதிர்மறைப் பொருளாகவைத்து தவமில்லாதான் நமக்குப் பொருளும் போகமும் கிடைக்கவில்லையே என்று வருந்தி இளைப்பதாற்பயன் என் என் கின்றது. இது செய்தவம் மெய்த்தவமாதல் வேண்டும் என்று விளக்கந் தருகிறது.

சூளாமணி சுயம்வரச் சருக்கத்து, திவிட் டன் சுயம்பிரபையின் அச்சத்தைப்போக்க அவள் பக்கல் சாருகிருன். அப்போது அவள் அவனைப் பார்த்து, அடிகேள்யாண் டையார்' என வினவிஞள். அவன் ஈண் டையேன் என்று அணுகிஞன் என்கின்ற ஆசிரியர் தன் கூற்ருக அவனை

'' வேண்டிய விளைத்துக் கொள்ளும்
விழுத்தவம் விளைத்து வந்தான் ''
(சூளா. 66)

என்கின்ருர். ஈண்டு அந்தக் குறள் மிகச் சுருங்கியடங்குகிறது. ஆஞல் தவம் விழுத்த வம் எனப்படுகிறது.

தன்மகன் திவிட்டனையும், பேரன் பேத் திசளாகிய விசயனையும் சோதிமாலையையுங் கண்டு பயாபதி மன்னன் மனமகிழ்ந்து தான் செய்த தவத்தின் பயனை மெச்சுகின்றவன்

'' ஈங்கிவை யனைய தோற்றி இன்பமே
பருகநின்ற
வீங்கிய தவத்திற் கின்னும் வித்திடற்
பாலதென்ருன் ''
(சூளா 1843)

எனக் கூறியதாகத் தோலாமொழித் தேவர் சொல்கிருர்.

மக்களைக் கண்டு மனநிறைந்த மகிழ்ச்சி; அதிற்பிறந்த சொல் நாம் மிக்க தவஞ்செய் திருக்கின்ரேம். இத்தகைய வீரமகளையும், பேரன் பேத்திகளையும் பெற்றிருக்கிரேம். இங்ஙனமே வருபிறவியிலும் நிறைந்த வாழ்வு நடத்த இன்னும் தவமாகிய விதையையிட வேண்டும் என்கின்ருன். இது மீண்டும் முயலப்படும்' என்ற பாடத்தைக் கொண்டு விரிந்த விளக்கமாகும்.

யசோதர காவியத்து ஐந்தாஞ்சருக்கத் தில் யசோமதி மன்னன் காட்டில் சுதந்த முனிவனை வெட்ட வாளையுருவியபோது, கலியாணமித்திரன் எண்ணும் வணிகன்

'' ஆகவெனின் ஆகுமிவர் அழிகவெனின்
அழியும்
மேகமிவண் பொழிகவெனின்
வருமதுவும் விதியின்
ஏக மனரா முனிவர் பெருமை யிது
வாகும்
மாக மழைவண்கை மதயானை மணி
மார்போய் ''

எனக் கூறுகின்ருன். இதுவும் தவத்தால் ஆகாததொன்றுமில்லை என்பதை அறிவிப் பது. இங்ஙனம்

'' வேண்டிய வேண்டியாங் கெய்தலாற்
செய்தவ
மீண்டு முயலப் படும் ''

என்ற குறட்குப் பல வகையான விளக்கங் களையும் பாடங்கொள்ளுமுறையையும் இலக் கியங்கள் தெரிவிக்கின்றன.

இவ்வண்ணம் திருக்குறள் மணிகளைத் தத்தம் இலக்கியப் பணிகளில் அமைத்துப் புதுமெருகும் புத்துணர்வும் பெறச் செய் தனர் காவியக் கலைஞர்கள். அவற்றை இங் ஙனம் ஒவ்வொன்ருக ஊன்றியுணர்வோமா யின் என்றும் புத்தின்பம்பெற்றுப் புதுமை பொலிய வாழலாம்.



# தமிழர் பண்பு மேம்பாடு

புலவர் பி. விருத்தாசலம், எம். ஏ.,
துணை முதல்வர், கரந்தைப் புலவர் கல்லூரி.

உலகம் தோன்றிப் பலகோடி ஆண்டுகள் உருண்டோடிவிட்டன. இந்த உலகில் மக்கள் தோன்றிப் பல நூறாயிரம் ஆண்டுகள் பறந்துவிட்டன. ஆயினும், தொடக்கத்தில் விலங்குகளோடு விலங்குகளாகக் காடுகளிலும் மலைக்குகைகளிலும் கடுமையான இடர்ப்பாடுகளுக்கு இடையில் வாழ்ந்து வந்த மக்கள், நாளடைவில் விலங்கு வாழ்க்கையிலிருந்து விலங்கி, காடு கொன்று நாடாக்கியும், குளந் தொட்டு வளம்பெருக்கியும், ஏரி முதலிய நீர் நிலைகளைச் சீர்செய்தும் திருந்திய பண்பட்ட வாழ்க்கை வாழத் தொடங்கியது ஏறத்தாழப் பத்தாயிரம் ஆண்டுகளாகவே என்னலாம். அவ்வாறு மெல்ல மெல்லச் சீர்திருந்தி உலகில் வாழ்ந்த பிற இனமக்களுடைய பண்பட்ட வாழ்க்கையைவிடத் 'தமிழர் பண்பு' மேம்பாடு படைத்தது என்பதை விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

சிற்றூர்களிலும் பேரூர்களிலும் திருவிழா நடைபெறும் காலங்களில் நாடக மேடை அமைத்து நாடகம் ஆடும் நடிகர்கள், நாடகம் ஆடி முடிந்ததும் தத்தம் வேடத்தைக் கலைத்துவிட்டு வேற்றூர்களுக்குச் சென்றுவிடுமாறு போல, உலகம் என்ற மாபெரும் நாடக மேடையில் உணர்ச்சியும் உயிரோட்டமும், கனவும் கற்பனையும், ஏமாற்றமும் எக்களிப்பும் மிகுந்த மனித வாழ்க்கை என்ற நாடகத்தை, விறுவிறுப்போடும் வீறுமிகுந்த உள்ளத்தோடும் தம்மை அறியாமலேயே நடத்திக்கொண்டிருக்கும் மாந்தர்களும், வேந்தர் என்றும் அமைச்சர் என்றும், ஏழை என்றும் செல்வர் என்றும் எத்தனையோ பெயர்களோடு வாழ்ந்து முடித்துவிட்டு இறந்ததும் எங்கேயோ போய்விடுகின்றனர்.

> "விழவிற்
> கோடியர் நீர்மை போல முறைமுறை
> ஆடுநர் கழியுமிவ் வுலகம்"

என்னும் புறநானூற்றுப்பகுதி இதனை விளக்கும்.

உலகமே நிலையில்லாதது என்னும்போது, இவ்வுலகில் தோன்றிய மக்களின் இளமை நில்லாது, யாக்கை நில்லாது, வளவிய வான் பெருஞ் செல்வமும் நில்லாது என்பதனைச் சொல்லவும் வேண்டுமோ? உலகம் தோன்றிய நாளிலிருந்து இதுவரையில் பிறந்து மறைந்து போன மக்கள் கடற்கரை மணலினும் பலராவர். இதனை நன்குக உணர்ந்தவர் தமிழர். நிலையில்லாத இவ்வுலகில் நிலையாக வாழ விரும்பிய தமிழ்ச் சான்றோர் தம் புகழை நிலைநாட்டிவிட்டுத் தாம் மறைந்துபோயினர். **'மன்னு உலகத்து மன்னுதல் குறித்தோர் தம்புகழ் நிறீஇத் தாம்மாய்ந்தனரே'** என்பது புறநானூறு.

உலகில் புகழை நிறுவுவது எவ்வாறு? 'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்' என்பது குறள். இக்குறளுக்கு விளக்கம்

கூறும் பரிமேலழகர் **உலகில் நெறி முறையோடு வாழ்பவர் இம்மைப் பயனுகப் புகழை அடைவர்; மறுமைப் பயனுகத் தெய்வம் ஆவர்'** என்று விளம்புவர். தமிழர்கள் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக வாழ்ந்து பார்த்துத் தமக்கு ஏற்பட்ட பட்டறிவின் பயனுக இம்மைக்கும் மறுமைக்கும் ஏற்ற செம்மையான வாழ்க்கை நெறியினைக் கண்டறிந்தனர். உயர்ந்த சான்றோர்கள் வாழ்ந்தது போலவே செம்மையான முறையில் வாழ்க்கை வாழ்வதனையே பண்பு என்று பழந்தமிழர் கருதினர். இதனைப் **'பண்பெனப் படுவது பாடறிந் தொழுகல்'** என்னும், நெய்தற் கலியாலும், அத்தொடருக்கு நச்சினுர்க்கினியர் எழுதிய **'பண்பு எனப்படுவது உலகநடை அறிந்து ஒழுகுதலே'** என்னும் உரையாலும் நன்குணரலாம்.

பண்புடைய சான்றோர் வாழும் நாடே நாடெனத் தகும். பண்பிலாக் கயவர் வாழும் நாடு கொலையும், களவும், நோயும், துன்பமும் மலிந்துவாடும். அகிலும் தேக்கும் அழியாத குன்றங்களும், அழகாய் முத்துக் குவியும் கடல்களும், முகிலும் செங்நெல்லும் முழங்கும் நன்செய்யும், முல்லை மணக்கும் காடுகளும்கொண்ட தமிழ்நாட்டைவிட வளம் நிறைந்த நாடாக இருப்பினும் மக்கள் மன வளமும் ஒழுக்கமும் இல்லாத நாடு விரைவில் அழியும் என்பதைப்

" பண்புடையார்ப் பட்டுண் டுலகம்;
அதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன் "

என்னும் குறளால் அறியலாம். கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி பாடிய "உண்டால் அம்ம" என்று தொடங்கும் புறநானூற்றுப் பாட்டும் **தமக்கென வாழாது பிறர்க்கெனவே வாழ்கின்ற சான்றோர் வாழ்வதால்தான் இவ்வுலகம் அழியாதிருக்கின்றது என்று கூறுகிறது.**

**பிற உயிர்களினுடைய துன்பங்களை அறுப்பதற்காகச் செய்யப்படும் நற்செயல்களே அறம் எனப்படும்.** அவ்வாறு மற்ற உயிர்கள் வாழத் தேவைப்பட்டால் தம் உயிரையே உவப்புடன் ஈயும் மாபெரும் அறச்செயலை மகிழ்ச்சியோடு செய்தவர் தமிழர். **பிறர்நலம் பேணலே தமிழ்ப் பண்பாட்டின் உயிர்நாடி.** இதனை

" எனையீன்ற தந்தைக்கும், தாய்க்கும் மக்கள்
இனமீன்ற தமிழ்நாடு தனக்கும்,
என்ருல்
தினையளவு நலமேனும் கிடைக்கும் என்ருல்
செத்தொழியும் நாளெனக்குத் திருநாள்
ஆகும்.
பனையளவு நலமேனும் தன்ன லத்தைப்
பார்ப்பானேர் மக்களிலே பதடி
யாவான் "

என்ற பாவேந்தர் பாரதிதாசன் பாட்டுத் தெளிவாகக் கூறும்.

நாட்டு மக்களுக்குப் பெருந் துன்பம் செய்யும் காட்டு விலங்குகளை வேட்டையாடும்போதும் கூட, பிற உயிர்களுக்கு மிகுந்த தீங்கிழைக்க முடியாதனவும், விரைவாக ஓடித் தப்பிப்பிழைக்க முடியாதனவும் ஆகிய கருக்கொண்ட விலங்குகளைக் கொல்லாமல் காப்பது தமிழர் பண்பு என்பதைக் கண்ணப்பர் புராணம் கவினுறக் கூறும். வேற்று நாட்டிற்குப் பொருளீட்டச் சென்ற தலைவன் ஒருவன், தான் விரும்பியவாறே பெரும்பொருள் ஈட்டித் தன் மனைவியைக் காணச் சொந்த ஊருக்குச் சோலை வழியே மீண்டுவரும்போது, தன்னுடைய தேரின் மணியோசை கேட்டு, மலர்ந்த பூக்களிலே இணைந்து மகிழ்ந்திருந்த வண்டுகள் மிகவும் அஞ்சி அலமந்து வெவ்வேறு திசைகளில் பிரிந்து பறந்து செல்வதைக் கண்டு பெரிதும் இரங்கித் தேரின்மணி ஒலிக்காதவாறு அம்மணியின் நாவினை இழுத்துக் கட்டிவிட்டு அதன் பிறகே தேரை ஓட்டினுன் என்ற செய்தியை அகநானூற்றின் நாலாம் பாட்டால் அறிந்து மகிழ்கிருேம்.

'பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த
தாதுண் பறவை பேதுறல் அஞ்சி
மணிநா ஆர்த்த மாண்வினைத் தேரன்'

என்பதுவே அப்பாடற் பகுதியாகும்.

போர்க்களத்தில் புறமுதுகு காட்டி ஓடாது நேருக்குநேர் நின்று போர்புரியும் பகைவரைக் கொல்லுதலும், புறமுதுகு காட்டி ஓடுவோரைக் கொல்லாது விடு தலுமே வீரம் என்று போற்றப்பட்டது. **புறமுதுகு காட்டி ஓடுவோரைக் கொல்லு வது பெருந் தீச்செயலாக—கொடும் பாவ மாகக் கருதப்பட்டது.** புறமுதுகு காட்டி ஓடாமல் எதிர்த்து நின்று போர்புரிபவனைக் கொல்வது மட்டும் கொலைப்பாவம் ஆகாதோ? எனின், ஆகாது என்று உறுதி யாகக் கூறலாம். தாம் பிறந்த நாட்டிற்காக வும், தம்மைப் புரந்த தலைவனுக்காகவும் உயிர் கொடுப்பதிலே உவப்புக்கொண்டு, புறமுதுகு காட்டாது எதிர்த்து நின்று போரிடுவோரைக் கொன்றால், அந்தப் பகை வர்கள் செஞ்சோற்றுக் கடன் கழித்த மன நிறைவோடு அமைதியாகவும் மகிழ்ச்சியாக வும் சாவார்கள். பகைவர் விரும்புவதைச் செய்வது பகைவர்க்கு நன்மை செய்வது தானே? அஃது எப்படிக் கொலைப்பாவம் ஆகும்? குற்றவாளிக்குத் தூக்குத் தண்டனை வழங்கும் அறமன்றத் தலைவர் செயல் எப் படிக் கொலைப்பாவம் ஆகாதோ அதுபோல எதிர்த்துப்போரிடும் பகைவரைக் கொல்வ தும் கொலைப்பாவம் ஆகாது என்க. புற முதுகு காட்டி ஓடுபவனே தன் உயிரின்மீது ஆசை வைத்து ஓடுகிறான். அவனைக் கொல் வது அவன் விரும்பாத ஒன்றைச் செய்தலா கும். ஆகவே, அது பாவச்செயல் ஆகிறது.

புறமுதுகு காட்டி ஓடுவோரைக் கொல் வது **படைமடம் படுதல்** என்று பழிக்கப் பட்டது. பாரி முல்லைக்குத் தேரீந்தது போலவும், பேகன் மயிலுக்குப் போர்வை தந்தது போலவும் இன்னார்க்கு இன்னதுதான் கொடுப்பது என்ற வரையறை இல்லாது கொடுப்பது **கொடைமடம் படுதல்** என்று போற்றப்பட்டது. **மடம்படுதல்** என்னும் தொடருக்குச் **சிந்தியாது செய்தல்** என்பது பொருள்.

ஈத்து உவக்கும் இன்பம் இன்பத்துட் சிறந்த இன்பமாகக் கருதப்பட்டது. ஒருவர் செல்வம் பெற்றதற்குப் பயன் பிறர்க்குக் கொடுத்தலே ஆகும். தாம் ஈட்டிய பொருளைத் தாம் மட்டுமே துய்க்க வேண்டும்; பிறர்க்குக் கொடுத்தல் கூடாது என்ற எண்ணத்தோடு செல்வர்கள் நடந்து கொள்வார்களாயின் நாட்டில் கொலை, கொள்ளை, பொய், பொறாமை முதலிய தீங்கு கள் மலிந்து, இறுதியில் புரட்சி வந்து, குருதிப் பேராறு கொப்புளித்து ஓடும்.

'செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்பேம் எனினே தப்புந பலவே'

என்று எச்சரிக்கிறது புறநானூறு. தம்பி யாகிய இளங்குமணனுக்கு நாட்டைத் தந்து விட்டு வெம்பிய மனத்தோடு காட்டில் வாடிய குமணன், பெருந்தலைச்சாத்தனார் தன்னைப் புகழ்ந்து பாடியபோது அவருக்குப் பரிசிலாகக் கொடுக்க எப்பொருளும் இல்லா மையால், தான் நாட்டை இழந்து காட்டுக்கு ஓடிவந்த நாளைவிடப் பெருந்துன்பம் அடைந் தானும். ஆகவே, தன் தலையைக்கொண்டு போய்த் தம்பி கையில் கொடுத்துப் பரிசில் பெறுக என்றுகூறித் தலையை வெட்டுவதற் காக வாளைப் புலவர் பெருந்தலைச்சாத்தனார் கையில் தந்தானும். இவ்வரலாற்றைப்

"பாடுபெறு பரிசிலன் வாடினன்
பெயர்தலென்
நாடிழந்த அதனினும் நனியின் னாதென
வாள்தந் தனனே தலையெனக்கு ஈய"

என்னும் புறநானூற்றுப் பாடல் (165) அடி களால் அறிகிறோம்.

ஈதல் எவ்வளவுக்கு எவ்வளவு உயர்ந்ததோ அவ்வளவுக்கு அவ்வளவு இரத்தல் இழிந்தது. இரத்தலால் மானக் கேடு நேர்வதாலும், ஈதலால் புகழ் உண்டா

வதாலும் 'நல்லாறு எனினும் கொளல்தீது மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று' என்று வள்ளுவரும் கூறினர்.

'' ஈயென இரத்தல் இழிந்தன்று;
அதனெதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று
கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று
அதனெதிர்
கொள்ளேன் என்றல் அதனினும்
உயர்ந்தன்று ''

என்னும் புறநானூற்றுப் பாட்டு இரத்தலின் இழிவையும், ஈயாமையின் கொடுமையையும் கொடுத்தலின் உயர்வையும், கொள்ளாமை யின் உயர்வையும் அழகுறக் கூறும். 'ஏற்பது இகழ்ச்சி' என்பதை நன்குணர்ந்து வாழ்ந்த பழந்தமிழர் 'காணுர், கேளார், கால்முடம் பட்டோர், பேணுநர் இல்லோர், பிணிநடுக் குற்றோர், ஆரும் இன்மையின் அரும்பசி உழந்தோர்' ஆகிய இரங்கத்தக்க மாந்தர்க்கு உணவளித்து வாழ்தலைப் பெருங் கடனகக் கொண்டிருந்தனர்.

தமிழகத்தில் விருந்தோம்பும் பண்பு செழித்திருந்தது என்பதை இளையான்குடி மாறனுர் புராணத்தும், சிறுத்தொண்டர் புராணத்தும் காணலாம். செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருக்கும் தமிழர்கள் இரவு நேரத்தில் வீட்டுக் கதவுகளை மூடும் போது 'எம் வீட்டுக்குகு விருந்தினராக வரு வார் உண்டோ!' என்று மும்முறை கூவி யழைத்துச் சிறிது நேரம் பொறுத்திருந்து. பின்னரே கதவடைப்பர் என்பதைக் குறுந் தொகை கூறுகிறது. தம்முடைய வீட்டுக்கு இரவலரும் விருந்தினரும் வாராதிருப்பதைப் பெரிய இழிவாகக் கருதினர் தமிழர்.

பழிபாவங்களுக்கு அஞ்சிய பழந் தமிழ் மக்கள் தம்மிடம் அடைக்கலமாகக் கொடுக் கப்பட்ட பொருளைப் போற்றிப் பாதுகாப் பதைப் பெரிய அறச் செயலாகக் கருதினர். கவுந்தி அடிகளால் தன்னிடம் அடைக்கல மாக ஒப்படைக்கப்பட்ட கண்ணகிக்குத் துயர்வாராது காக்க முடியாத மாதரி பெருந் துன்பமுற்று 'அடைக்கலம் இழந்தேன் இடைக்குல மாக்காள்' என்று கூவியழுது. இருள்மிகுந்த இடையாமத்தில் எரிவளர்த்து அதனுள் மூழ்கி உயிர்துறந்தாளாம். அடைக்கலப் பொருளைக் காத்தோம்ப முடி யாமையைப் பெரும் பாவச்செயலாகக் கருதி உயிர்விட்ட பழந்தமிழ்ப் பண்பை எண்ணுந்தோறும் நம் நெஞ்சம் உருகிக் கண் களில் உவகைக் கண்ணீர் பெருக்கெடுத் தோடுகிறது.

'' வாழ்தல் வேண்டிப் பொய் கூறேன்; மெய் கூறுவல் '' என்னும் சான்றோர் நெறி நின்று ஒழுகிய தமிழ்நாட்டு வணிகர்கள் தமக்கு வருகிற ஊதியத்தை வெளிப்படை யாகக் கூறி விற்போராகவும், மக்களிட மிருந்து பொருள்களை வாங்கும்போதும் அவர்களை ஏமாற்ருமல் நடந்துகொள்வோ ராகவும் விளங்கினர் என்பதை

'' வடுவஞ்சி வாய்மொழிந்து
தமவும் பிறவும் ஒப்ப நாடிக்
கொள்வதூஉம் மிகைகொளாது
கொடுப்பதூஉங் குறைகொடாது
பல்பண்டம் பகர்ந்துவீசும்.

என்னும் பட்டினப்பாலை அடிகள் உணர்த்து கின்றன.

திருவாலங்காட்டை அடுத்த பழைய னூரில் வாய்மையிற் சிறந்த வேளாளர் எழுபதுபேர் வாழ்ந்திருந்தனர். வாணிகம் செய்வதற்காக வேற்றூரிலிருந்து வந்து பழையனூரில் தங்கியிருந்த வணிகன் ஒரு வனைக் கொல்லக் கருதிய ஒரு பேய் அழகிய பெண்ணுருவம் எடுத்து வந்து, பழையனூர் வேளாளரை அணுகித் தான் வணிகனுடைய மனைவி என்றும், வணிகன் தன்னேடு குடும்பம் நடத்த மறுப்பதால் எப்படியா வது அவனைத் தன்னேடு வாழவைக்க வேண்டும் என்றும் வேண்டிக்கொண்டு கண்ணீர் விட்டது. வணிகனே '' இவள் என் மனைவி அல்லள்; இவள் பேய்;

இவளோடு வாழ்ந்தால் என் உயிர்போகும்'' என்று மறுத்துக் கூறினன். பழையனூர் வேளாளர் வணிகன் சொன்னதை நம்பாமல் பேய் சொன்னதை நம்பினர். ஆகவே, அவர்கள் வணிகனைப் பார்த்து ''நீ உன் மனைவியான இந்தப் பெண்ணோடுதான் வாழ வேண்டும்; நீ நினைக்கிறபடி இவள் பேயாக இருந்து உன் உயிரைக் குடித்தால், உன்னோடு நாங்கள் எழுபது பேரும் சாவோம்'' என்று உறுதிகூறி, அவர்கள் இருவரையும் ஒரு வீட்டில் தங்கவைத்தனர். வேளாளர்கள் மறு நாள்சென்று பார்த்தபோது உயிர்நீங்கிய வணிகன் உடலையே காணமுடிந்தது. ஆகவே, வாய்மையிற் சிறந்த எழுபது பேரும் தாம் சொன்ன சொல்லைக் காப்பாற்ற, நெருப்பு வளர்த்து அதனுள் விருப்புடன் மூழ்கினர். **கொடுத்த வாக்குறுதியைத் தம் உயிரினும் மேலாகக் கருதிக் காப்பாற்றும் மேலான தமிழ்ப் பண்பு** பழையனூர் வேளாளர் வாழ்க்கையிலிருந்து வெள்ளிடை மலையென விளங்கித் தோன்றுகிறது.

''**மற்றவர்களுக்கு நல்லது செய்ய இயலாவிட்டால் கெடுதலாவது செய்யாமல் இரு**'' என்று படிக்காத மக்கள்கூடச் சொல்வதை இன்று நாம் கேட்கிறோம். இதனை ''நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும், அல்லது செய்தல் ஓம்புமின்; அதுதான் எல்லாரும் உவப்பது; அன்றியும் நல்லாற்றுப் படூஉம் நெறியுமார் அதுவே'' என்று ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நரிவெரூஉத்தலையார் என்னும் புலவர்பெருமான் கூறியுள்ளார். தமிழ் மக்களின் உள்ளத்தில் இந்த அறிவுரை வேரூன்றி நின்றதால் பல்வேறு மொழி பேசும் வேற்றுநாட்டு மக்களும் வாணிகத்தின் பொருட்டுக் காவிரிப்பூம் பட்டினத்துக்கு வந்து, கடற்கரையில் கண்கவரும் மாளிகைகள் அமைத்துக் கவலையின்றி வாழமுடிந்தது. இதனை

''மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்துப்
புலம்பெயர் மாக்கள் கலந்தினிது உறையும்
முட்டாச் சிறப்பின் பட்டினம்''

என்னும் பட்டினப்பாலை அடிகளால் அறிகிறோம். அவ்வாறே தமிழர்களும் கடல் வாணிகம் செய்வோராய் வேற்று நாடுகளுக்குச் சென்று வாழ்ந்தனர் என்பதை மணிமேகலை முதலிய நூல்களால் அறிகிறோம். **'யாதும் ஊரே யாவரும் கேளிர்'** என்பது தமிழர்களின் வாழ்க்கைத் தத்துவமாக விளங்கியது.

நற்குடியிற் பிறந்து இல்லறம் நடத்தும் மகளிர் இம்மையிலும் மறுமையிலும் தம் கணவரைப் பிரியாது வாழும் பெரு வாழ்வை விரும்பினர். ''**இப்பிறப்பு மாறி மறு பிறப்பு வந்தாலும் நீயே என் கணவனாக வரவேண்டும். உன் நெஞ்சில் குடியிருக்கும் பெண்ணாகவும் மனைவியாகவும் நானே இருக்க வேண்டும்**'' என்று பெண்ணொருத்தி தன் கணவனிடம் கூறினளாம். இந்த இனிக்கும் செய்தியை

''இம்மை மாறி மறுமை யாயினும்
நீயாகியர் என் கணவனை
யானாகியர் நின் நெஞ்சு நேர்பவளே''

என்னும் குறுந்தொகையால் (49) அறிகிறோம்.

தமிழகம் கண்ணகியை விடச் சிறந்த கற்பரசியர் வாழ்ந்த நாடு. தன்னுடைய கணவன் வாணிகத்தின் பொருட்டு வேற்றூருக்குச் சென்றிருந்தபோது வேறு ஆடவன் ஒருவன் தன்னையே கண்ணிமைக்காது நெடுநேரம் உற்றுப்பார்த்துக் கொண்டே இருப்பதை அறிந்த பெண் ஒருத்தி தன் கற்பின் ஆற்றலால் தன் அழகிய முழுமதி போன்ற முகத்தைக் குரங்கு முகமாக மாற்றிக்கொண்டு, போன கணவன் மீண்டு வந்ததும் தன்னுடைய முகத்தை மறுபடியும் மதி முகமாக மாற்றிக் கொண்டாளாம். சிலப்பதிகாரத்து வஞ்சினமாலையுள் வரும்

" வேற்றொருவன்
நீனோக்கம் கண்டு நிறைமதி
வாள்முகத்தைத்
தானோர் குரக்குமுகம் ஆகென்று போன
கொழுநன் வரவே குரக்குமுகம் நீத்த
பழுமணி அல்குற்பூம் பாவை "

என்னும் அடிகள் இவ்வரலாற்றை விளக்கும்.

பெண்டிரைப் போலவே ஆடவரும் பிறர்மனை நோக்காத பேராண்மை கொண்டு விளங்கினர். தம்முடைய காதல் திருமணத்துக்குப் பெற்றோர் உடன்பாடு கிடைக்காததால் வேற்றூருக்குச் சென்று திருமணம் செய்துகொள்ள விரும்பி வழிநடந்து சென்று கொண்டிருந்தனர் ஓர் இளைஞனும் இளம் பெண்ணும். உடன்போக்குச் சென்று விட்ட தன்னுடைய மகளையும் அவள் காதலனையும் தேடிக்கொண்டு வழியில்வந்த செவிலித்தாய் ஒருத்தி மேற்கூறிய காதலரைப் பார்த்து "உங்கள் இருவரையும் தொலைவில் பார்த்தவுடன் என்னுடைய மகளும் மருமகனும் மீண்டு வருவதாகக் கருதி மகிழ்ந்தேன். அருகில் வந்ததும்தான் உண்மை தெரிந்தது. நும்போலவே உடன் போக்குச் செல்லும் எம்மகளையும் மருமகனையும் வழியில் கண்டீரோ?" என்று வினவினாள். அதற்கு அந்த இளைஞன் " வழியில் ஆளி போன்ற காளைபோவதைப் பார்த்தேன்; தூண்டா விளக்குப் போன்ற பெண்ணே! இந்த அன்னை சொல்லுப் பெண்ணை நீ வழியில் கண்டது உண்டோ? " என்றானும். இவ்வுரையாடலை

" மீண்டார் என உவந்தேன் கண்டு நும்மை;
இம்மேதகவே
பூண்டார் இருவர்முன் போயினரே?
புலியூர் எனை நின்று
ஆண்டான் அருவரை ஆளி அன்னானைக்
கண்டேன்; அயலே
தூண்டா விளக்கனையாய் என்னையோ
அன்னை சொல்லியதே "

என்னும் திருக்கோவைப் பாட்டால் (244) அறிந்து மகிழ்கிறோம்.

எதிரே வந்த ஆண்மகனைக் கண்ட இளைஞன் அவனருகே நடந்துவந்த அவன் காதலியையும் பார்க்காமல் இருக்க வழியில்லை. எனினும், அந்தப் பெண்ணைத் தான் பார்க்காதது போல "நீ பார்த்தது உண்டோ?" என்று தன் காதலியை நோக்கி அவன் கூறிடக் காரணம் இருக்க வேண்டும். தன் காதலி உருவமே தன் நெஞ்சிலும் சிந்தையிலும் நிறைந்து நிற்பதால், வேறு பெண்களினுடைய முகங்கள் அவன் நினைவில் நிற்க வழியில்லாமல் போய்விட்டன. ஒரு பாத்திரத்தில் ஒரு பொருளை நிரப்பியிருந்தால் வேறு பொருள்களையும் அப்பாத்திரத்தில் கொண்டுவந்து வைக்க இயலாது அல்லவா? எனவே, தன் காதலி தவிரப் பிற பெண்களை ஏறெடுத்தும் பார்க்காத உயர் பண்பை அந்த இளைஞன் கூற்றிலிருந்து உணர்கிறோம்.

இல்லற மகளிர் மட்டுமல்லர். **கணிகையர்கள் கூட ஒருவனோடு வாழுங் காலத்தில் இன்னொருவனை விரும்புதல் இல்லை.** கணிகையர் குடிக்கு உரிய இந்த ஒழுக்கத்தை மீறி நடப்பவர் தலையில் ஏழு செங்கல்லை வைத்து நகரத்தை வலம்வரச் செய்வர். இதனைச்

', சுடுமண் ஏறு வடுநீங்கு சிறப்பின்
முடியரசு ஒடுங்கும் கடிமனை வாழ்க்கை
(சிலம்பு 14 : 146-147)

என்னும் அடிகளுக்கு அடியார்க்கு நல்லார் எழுதிய உரையால் அறியலாம்.

மனத்துக்கண் பிறர்க்குத் துன்பம் தரும் தீய எண்ணங்களை எண்ணுதிருப்பதே அமைதியாகச் செய்யும் அறமாகும், பிற அறச் செயல் எல்லாம் ஆரவாரத் தன்மை உடையன என்றும், நெஞ்சு மகிழ்ந்து கொடுப்பதைவிட முகமலர்ந்து இன்சொல் பேசுவது

பேரறம் என்றும் திருக்குறள் சொல்லும். இக்கருத்தை உணர்த்தும் குறள்கள் பின் வருமாறு.

"மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற"

(குறள் 34)

"அகனமர்ந்து ஈதலின் நன்றே
முகனமர்ந்து
இன்சொலன் ஆகப்பெறின்"

(குறள் 92)

இவ்வாறு பண்புகள் சிறந்து பல்வேறு வகைகளிலும் சிறப்புடன் விளங்கிய தமிழகம், மக்களுடைய அமைதியான நல்வாழ்வுக்குக் கூற்றுவன்போல் கொடுந் துன்பம் நல்கும் வேற்றுநாட்டுப் பண்புகளும் கருத்துக்களும் கலந்து விரவிய காரணத்தால் இன்று சீர்கெட்டு வாடுகிறது. பழைய இலக்கியங்கள் வாயிலாகத் தொன்மையான தமிழகத்தின் தூய்மைமிகு பழம் பண்புகளை உணர்ந்து திருந்தித் தமிழர்கள் பெருவாழ்வு பெற்றுப் பேரின்பம் அடைவாராக.



# "சிந்தாமணி கூறும் அறமும் அரசியல் நெறியும்"

டாக்டர் தா. ஏ. ஞானமூர்த்தி, எம். ஏ., பி. எச்டி.,

அறம் பொருள் இன்பம் வீடு பற்றிய கருத்துக்கள் சீவகசிந்தாமணி முழுதும் ஊடுருவியுள்ளன. திருக்குறளில் இருவகையான அறங்கள் கூறப்பட்டுள்ளன. அவை யாவன இல்லறம், துறவறம் என்பனவாம். இல்லறமாவது ஒருவன் மனைவியின் துணை கொண்டு குடும்ப வாழ்க்கைக்குரிய கடமைகளைச் செம்மையாக ஆற்றுவதாகும். விருந்தோம்பல் இல்லறத்தின் உயிர் நாடியான அறம் என்று கூறலாம். இல்லறத்தை மேற்கொண்ட கணவனும் மனைவியும் அவர்களை அடையும் விருந்தினர்களுக்கு உள்ளன்போடு உதவி செய்தல் வேண்டும். இஃது அவர்களுடைய இன்றியமையாக் கடமையாகும். (1) அவர்கள் ஒருவருக்கொருவர் உண்மை அன்பு நிரம்பியவர்களாய் இருத்தல் வேண்டும். ஏனையரோடு அவர்கள் தம் உணவைப் பகிர்ந்து உண்ணுதல் வேண்டும். (2) திருவள்ளுவரின் பல சீரிய கருத்துக்களைத் தம் காப்பியத்தில் அமைத்துள்ள திருத்தக்கதேவர் இல்லற வாழ்க்கையின் கடமைகளை நன்கு வலியுறுத்தியுள்ளார். இராசமாபுரத்து மக்கள் நெறி தவறாத மனை வாழ்க்கையை மேற்கொண்டு வாழ்கிறார்கள். வீதியிலே செல்லும் அயலவர்களைத் தம் வீட்டிற்கு வந்து சுவையான உணவினை உண்டு செல்லும்படி வேண்டுகின்றனர். விருந்துண்ண அவர்களை இராசமாபுரத்து மக்கள் அழைக்குந்திறம் நெஞ்சைத் தொடுந் தன்மைத்தாகும்;

"விருந்துண்ண அன்பு கூர்ந்து எம் இல்லத்திற்கு வருக; சங்கினைச் சிறு துகள்களாய் அறுத்தாற் போன்ற தூய்மையான வெள்ளிய சோற்றினையும் அளவற்ற நெய்யினைப் பெய்து ஆக்கிய உணவுப் பொருள்களையும் சுவையான துவையலையும் கட்டித் தயிரினையும் உங்களுக்கு உணவாகக் கொடுப்போம். எம் வீட்டிற்கு வந்து விருந்துண்டீர்களானல் உங்களுக்கு விலையுயர்ந்த அணிகலன்களைப் பரிசிலாகவும் அளிப்போம்."

> " வளையறுத் தனையன வாலரி யமைபத
> மளவறு நறுநெயொ டடுகறி
> யமைதுவை
> விளைவமை தயிரொடு மிசைகுவிர்
> விரையுமி
> னுளவணி கலமெனு முரையின
> தொருபால்"

இவ்வாறு வழிப்போக்கரை அன்போடு விருந்துண்ண இராசமாபுரத்து மக்கள் அழைக்கின்றனர்.

இராசமாபுரத்தைத் தலைநகராகக் கொண்டு விளங்கும் ஏமாங்கதநாடு பல

(1) திருக்குறள் — இல் வாழ்க்கை — விருந்தோம்பல்.

(2) 'அன்பு மறனும் உடைத் தாயின் இல் வாழ்க்கை
பண்பும் பயனும் அது.'

செல்வ வளங்களும் நிரம்பியது. இதனுல் விருந்தினர்கள் கிடைப்பதே அந்நாட்டில் அரிதாகிறது. விருந்தோம்பலைத் தம் கடமை யாகக் கொண்டுள்ள அந்நாட்டு மக்கள் ஓரிரு விருந்தினரை எதிர்ப்படுவார்களானுல் அவர் கள் உள்ளம் கவரும் வண்ணம் பேசித் தம் வீட்டிற்கு அழைக்கின்றனர். மற்ருேரிடத் தில் தம் உடமையை மற்றவரோடு பகிர்ந்து வாழாதவர்களைத் திருத்தக்கதேவர் அச் சுறுத்துகிருர். துறவுகொள்ள வேண்டும் என்ற தன்னுடைய விருப்பத்தைச் சீவகன் கூறியபோது சாரணன் அவனுக்குப் பின்வரு மாறு அறிவுரை கூறுகிருன்:

''மலை போன்றுயர்ந்த மாண்புடைய மாதவரைப் பழிப்பவரும் தம் உணவைப் பிறரோடு பகுத்து உண்ணுதவரும், தம் உடலைப் பொருளுக்கு விற்று வாழும் விலை மகளிரும் மறு பிறவியில் விலங்குகளாகப் பிறப்பார்கள்.

''மல்லல் மலையனைய மாதவரை
வைதுரைக்கும்
பல்லவரே யன்றிப் பகுத்துணுப்
பாவிகளும்
அல்குல் விலைபகரும் ஆய்தொடியர்
ஆதியார்
வில்பொரு தோள் மன்ன! விலங்காய்ப்
பிறப்பவே''

சீவகன் தான் துறவறம் மேற்கொள் வதைக் குறித்துத் தன் மனைவியர்க்கு உணர்த் துங்கால் அவர்களுக்குப் பல நீதிகளைக் கூறு கிருன்.

''அருவிகள் நிறைந்துள்ள மலைகளில் தாம் வைரங்கள் தோன்றும். ஆழமான நீர் நிலைகளில்தாம் குவளை மலர்கள் பூக்கும். அம்மலர்கள் குப்பை மேட்டில் மலர்வதில்லை. தம் உணவினைப் பலருக்கும் பகுத்தளித்து உண்கின்றவர்களே உண்மையான உயர்ந்த வாழ்வு வாழ்கின்றவர்களாவர். தாம் உண் பதற்கு முன் பிறருக்குக் கொடுத்துப் பின் உண்ணுதவர் பிச்சைக்காகத் தம் கைகளை நீட்டிக் கூசிக்கூசி நடுங்கி நிற்பார்கள். குளிர் மிகுந்த மாசித் திங்களில் ஊசிக்குப் பதிலாக முள்ளைக்கொண்டு தைத்த கந்தலாடையை அணிந்து குளிரால் நடுங்குவார்கள்;''

''அட்டுநீ ரருவிக் குன்றத்
தல்லது வைரந் தோன்ரு
குட்டநீர்க் குளத்தினல்லாற்
குப்பைமேற் குவளை பூவா
விட்டுநீர் வினவிக்கேண் மின்
விழுத்தகையவர்களல்லாற்
பட்டது பகுத் துண்பாரிப்
பார்மிசையில்லை கண்டீர்''
(சிந். 2925)

''மாசித் திங்கள் மாசின சின்னத்
துணிமுள்ளி
னூசித்துன்ன மூசிய வாடை
யுடையாகப்
பேசிப் பாவாய் பிச்சையெனக்கை
யகலேந்திக்
கூசிக் கூசி நிற்பர் கொடுத்துண்
டறியாதார்''
(சிந். 2929)

விருந்தோம்பலைப்பற்றிய கருத்தினை எத் துணைச் சிறப்பாகத் திருத்தக்கதேவர் கூறு கிருர் என்பதனை இதனின்றும் உணரலாம். இல்லாதவர்களுக்குப் பொருளீந்து உதவி செய்வது இல்லறத்திற்கு மிகச் சிறப்பான அறமாக வற்புறுத்திக் கூறுவது போலத் துறவறத்திற்கு இன்ன செய்யாமை, கொல் லாமை ஆகிய அறங்களைச் சிறப்பாக எடுத் தோதுகிருர்.

அற நூல்கள் அனைத்தும், பகுத்துண்டு பல உயிர்களையும் ஓம்புதலே அறங்கள் எல்லாவற்றிலும் தலையாய அறமாகக் கூறு கின்றனஎன்பர் திருவள்ளுவர்:

''பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை''

மேலும் அவர் ''மேற்கதிக்கு நல்ல நெறி யாவது எந்த உயிரையும் கொல்லாமையா கிய அறத்தினை மேற்கொண்டொழுகுவதே யாம்'' என்பர்.

இத்தகைய சீரிய கருத்துக்கள் திருத் தக்கதேவர் தம் காப்பியத்தில் விரவியுள்ளன; சீவகனுக்கு அறத்தை அறிவுறுத்தும் சாரணன் கீழ்வருமாறு கூறுகிறான்.

''கொலைத் தொழிலிலேயே ஈடுபட்டு நின்றவரும், உள்ளத்தில் கொடுமைத் தன்மை உடையவரும் கடிய தொழில் புரி வாரும், இப் பிறப்பன்றி மறுபிறப்பில்லை யென்றும், உயிரென்பதொன்று இல்லை யென் றும் கூறுபவரும், நல்வினையும் தீவினையும் இல்லையென்பவரும், செய்த தானம் பயன் தராது என்பவரும், தீவினையாகிய தேரிலேறி நரகத்தின்கண் செல்லுவர்'' என்று அவன் கூறுகிறான்:

''கொல்வதே சன்றி நின்றார்
கொடியவர் கடிய நீரார்
இல்லையே யிம்மை யில்லா
லும்மையு முயிரு மென்பார்
அல்லதுந் தவமு மில்லை
தானமு மிழவென் பாரும்
செல்பவர் நரகந் தன்னுட்
டீவினைத் தேர்க ளூர்ந்தே''
(சிந் 2776)

சீவகன் கடுந்தவம் புரிந்து மெய்யுணர்வு பெறுகிறான். அவனுடைய மனைவியர் அவன் திருவடிகளில் விழுந்து வணங்குகின்றனர். தம் அறியாமையைப் போக்குகின்ற மெய் யுணர்வு ஒளியைத் தங்களுக்கு அருளிச் செய் யுமாறு அவர்கள் அவனை வேண்டுகின்றனர். அவன் அவர்களை நோக்கி ''ஒருவன் தன்னு யிரை வருந்தி ஓம்புவது போல நாளும் பிற உயிர்களைப் பாதுகாத்து வாழ்வானானால் தன் இன்னுயிர்க்கு இறைவனாய் இன்ப வடிவின னாய் உயர்ந்து ஈறிலா இன்பப் பேற்றை எய்து வான்'' என்ற அறவுரையை அருளிச் செய் கிறான்;

''தன்னுயிர் தான் பரிந் தோம்பு
மாறுபோல்
மன்னுயிர் வைகலு மோம்பி வாழுமேல்
இன்னுயிர்க் கிறைவனா யின்ப
மூர்த்தியாய்ப்
பொன்னுயி ராய்ப்பிறந் துயர்ந்து
போகுமே''
(சீவகசிந். 3107)

பிற உயிர்க்கு இன்னா செய்யாமையாகிய அறம் சமண சமயத்திற்கு மிகச் சிறப்புடைய தாகும். இவ்வறம் சிந்தாமணியில் பல இடங்களில் வற்புறுத்தப்பட்டுள்ளது.

பொருள் என்பது செல்வத்தைக் குறிக் கும். ஆனால் அது வளத்தின் பெருக்கத் திற்குத் துணை செய்பவை அனைத்தையும் குறிப்பதாகவும் கொள்ளப்படுகிறது. திருவள் ளுவர் தம்முடைய திருக்குறளில் பொருட் பால் என்ற பகுதியில் அரசியலையும் அதோடு தொடர்புடையவற்றையும் விளக்குகிறார். மன்னனுக்குரிய இயல்பு, செயல்கள், அமைச் சர்களுக்குரிய இன்றியமையாப் பண்புகள், போர்ப்படை அமைக்க வேண்டிய தன்மை நிதி, கல்வி ஆகியவைகளைச் சிறப்பாகப் பொருட்பால் என்ற பகுதியில் விளக்கிக் கூறு கிறார். இவைகளைப் பற்றிய திருத்தக்கதேவ ரின் கருத்துக்கள் சிந்தாமணியில் உள்ளன.

சச்சந்தனின் பண்புகளை விளக்கும் வாயி லாகத் திருத்தக்கதேவர் ஒரு மன்னனுக் குரிய பண்புகளைப் பற்றிய தம் கருத்தைக் குறிப்பிட்டுள்ளார். ஒரு மன்னன் நாகப் பாம்பின் நஞ்சு போலத் தம் பகைவர்கள் பால் சீற்றமுடையவனாயிருத்தல் வேண்டும். தம்பால் அன்புடையவர்களிடத்தில் அமிழ் தம் போல் இனிமையுடையவனாதல் வேண் டும். தன் வள்ளன்மையால் நாட்டில் வறுமை அணுகாதபடி செய்தல் வேண்டும். தன்னுடைய வீரத்தாலும் போர்த் திறத்தா லும் தன் பகைவர்களை அவன் அழித்தல் வேண்டும். அவன் அறிவிற்கும் நுண்கலை களுக்கும் உறைவிடமாய் விளங்குதல் வேண் டும். பேரழகு உடையவனாய் இருத்தல்

வேண்டும். அவன் தன் கருணை மிக்க ஆட்சியால் குடிமக்களுக்குத் தந்தையாய் விளங்குதல் வேண்டும். மன்னனால் விரும் பப்பெறும் (3) குடிமக்கள் எப்போதும் இன்பவாழ்வு வாழ்வர்.

மன்னன் தவறிழைக்குங்கால் தயங்கா மல் தவற்றினை எடுத்துக் கூறி அறிவுறுத்து வது அமைச்சர்களுக்குரிய சீரிய பண்புகளில் ஒன்றாகும். மன்னனை நன்னெறிபடுத்தி அவன் நீதியோடு ஆட்சி புரியும் பொருட்டுக் கடுமையான சொற்களால் அவனுக்கிடித் துரைக்கவும் வேண்டும்.

''மன்னன் அமைச்சனின் அறிவுரையை நாடாமலும் தன்னுடைய தவற்றை உணரா மலும் இருந்து அறிவுரை கூறும் அமைச் சனைக் கடிந்துரைப்பினும் சிறந்த நீதியை அவனுக் கெடுத்துரைப்பது அமைச்சனது கடமையாகும்'' என்று திருவள்ளுவர் கூறு கிறார்;

அறிகொன் றறியா னெனினு முறுதி
யுழையிருந் தான் கூறல் கடன்
(குறள் 638)

இத்தகைய உண்மைகளை நேர்முகமாகக் கூறின் அது பயனளிப்பதில்லை. அவற்றை கதை வாயிலாக நாம் படிக்குங்கால் நம் உள்ளத்தில் நன்கு பதிந்துவிடுகின்றன. தவ றிழைக்கும் மன்னன் ஒருவனுக்கு ஓர் அமைச்சன் எவ்வாறிடித்துரைக்க வேண்டு மென்பதனைத் திருத்தக்கதேவர் சச்சந்தனின் அமைச்சர்களுள் ஒருவனாகிய நிமித்திகன் வாயிலாக நன்கு விளக்குகிறார். தன்னுடைய மனைவிபால் தான் கொண்டிருந்த அளவிறந்த காதலின் விளைவாகத் தன்னுடைய அரசியல் கடமைகளை ஆற்றத் தவறுகிறான்; தன் னாட்டின் ஆட்சிப் பொறுப்பைத் தீய பண்பு வாய்ந்த முதலமைச்சன் கட்டியங்காரனிடம் ஒப்படைக்கிறான். அரசன் செயல் தவறு என்று நிமித்திகன் எடுத்துரைக்கிறான். ஆனால் மன்னன் கட்டியங்காரன்பால் தான் கொண்டிருக்கும் பெருநம்பிக்கையால் நிமித் திகன் சொற்களைப் பொருட்படுத்தவில்லை. ஆனால் நிமித்திகன் மன்னனுக்கறிவுறுத்தலா கிய தன் கடமையையும் கைவிடவில்லை. அவன் சிறிதும் அஞ்சாமல் காமத்தின் இழிவைப் பல சான்றுகளுடன் எடுத்துக்கூறி அரசன் ஆட்சியினைக் கட்டியங்காரனுக்குத் தந்தது தவறு என்று தொடர்ந்து இடித் துரைக்கிறான். நிமித்திகன் எத்துணையளவு இடித்துரைத்தும் மன்னன் அவன் அறிவுரை களை ஏற்கவில்லை. தன்னுடைய முயற்சி நிறைவேறாதது கண்ட நிமித்திகன் கொடிய வனாகிய கட்டியங்காரனின்கீழ் தான் செய லாற்ற விரும்பவில்லை. எனவே அவன் தன் பதவியிலிருந்து விலகிக்கொள்கிறான். (4) அரசனைத் தன்னால் திருத்த இயலாத நிலையில் தான் பதவியிலிருப்பது பயனில்லை என்று கருதிப் பதவியையே இழக்கத் துணிந்த நிமித் திகனின் கடமை உணர்வு நம் நெஞ்சைத் தொடுவதாகும்.

சீவகன் முதன் முதல் தன் தாயைக் காண்பதற்குத் தண்டகாரணியத்தில் தாபதர் இருப்பிடத்திற்குச் செல்கிறான். தாய் சீவ கனைக் கண்டதும் ஆர்வமுற அவனைத் தழுவி, அவன் பிறந்ததும் அவனைத் தான் கைவிட் டதை எண்ணி அழுகிறாள். சீவகன் அவளைத் தேற்றுகிறான். அவள் கட்டியங்காரனை எதிர்த்து நாட்டை மீட்கும்படி சீவகனுக்குக் கூறுகிறாள். பிறகு மன்னனுக்குரிய செயல் களையும் அரசியல் சூழ்ச்சி பற்றியும் பொரு ளின் சிறப்புப் பற்றியும் சீவகனுக்கு எடுத்துக் கூறுகிறாள்:

''அரசியல் நீதிப்படி ஒரு மன்னன் தன் குடி மக்களின் வருவாயில் ஆறில் ஒரு பகுதியை வரியாகக் கொள்ளுதல் வேண்டும்.

---

(3) சிந்தாமணி — செய். 157 — 160.

(4) சிந். செய், 204 — 214.

அவன் எப்போதும் தன்னுடைய பழைய ஆற்றல் மிக்க பகைவன்பால் விழிப்போடு இருத்தல் வேண்டும். முள்ளைக்கொண்டு முள்ளை எடுப்பது போல் அவன் ஒன்றுபட்ட இரண்டு பகைவர்களிடையே நாளடைவில் பகைமையை உண்டாக்கி அவர்கள் இருவரும் போரிடுமாறு செய்தல் வேண்டும். நண்பர்களாக இருக்கும் இரண்டு அரசர்களைப் பிரித்து அவர்களில் ஒருவரைத் தன்னுடைய நட்பரசனாக ஆக்கிக் கொள்ளுதல் வேண்டும்.''

''ஒற்றரைக் கொண்டு ஒற்றரை ஆய்தல் வேண்டும். நீதி நூல்களைக் கற்ற அமைச்சரைக் கண்போல் போற்றலும், அமைச்சர்களையும் அரசியல் சூழ்ச்சிகளில் வல்லவர்களையும் ஆராய்ந்து பெருக்கிக் கொள்ளுதலும் வெற்றி கொள்ளும் கருத்துடைய அரசனுக்குப் பொருந்திய நெறிமுறைகளாகும்''

பின்பு விசயை சீவகனுக்குச் செல்வத்தின் பெருமையை விளக்குகிறாள். ''செல்வம் வெற்றியையும் மதிப்பையும் கல்வியையும் அழகையும் உண்டாக்கும். மேலும் அது தாழ்ந்தவர்களைக் குன்று போல உயரச் செய்யும் பொருளாலே பகைவர்களைப் பொரத்தக்க பெரும்படைகளை உண்டாக்கலாம். அப்படைகளால் அரசனுக்கு நாடு உண்டாகும். அந்நாட்டின் வாயிலாகப் பின்பு பொருள் மிகுதியும் பெருகும். ஒருவர் பெரும் பொருள் படைத்த அளவில்அவர்களால் அடைய முடியாத பேறு ஒன்றும் இல்லை.'' (5)

இந்நிலவுலக வாழ்வைத் துறக்க முடிவு செய்த பிறகு சீவகன், தன் முதல் மகன் சச்சந்தனை அரசனுக்கி அரசனுக்குரிய கடமைகளை அவனுக்கு எடுத்துரைக்கிறான். நீதி நெறி தவறாமல் அமைச்சர்களையும் அறங்களையும் பாதுகாத்து அவன் தன் நாட்டை ஆட்சி புரிந்தால் எல்லா இன்பங்களும் வளங்களும் அவன் எய்துவான்' என்று அறிவுறுத்தினான்.

மேலும் அவன், ''யானைக்கு வயலிலிருந்து நெல்லை அறுத்து வந்து அளவோடு நாள்தோறும் உணவாகக் கொடுத்தால் பல நாட்களுக்கு அதற்கு உணவாகும். அங்ஙனமன்றி யானையே வயலிற் புகுந்து மேயுமாயின் அதன் காலிடத்து நெற்கதிர்கள் அழிந்துவிடும். யானைக்கு உணவில்லாமல்போகும். அதுபோல மன்னன் தன் குடிமக்களிடத்து நெறிமுறைப்படி வரியைக்கொள்ளின் குடிமக்கள் அவன் வழிநிற்பர். அவனுக்குச் செல்வமும் பெருகும். இவ்வாறன்றி அவன் தன் குடிமக்களை மிகவும் வருத்தி வரியைக் கொள்வானுனல் தன் முயற்சியில் பெரிதும் தோல்வியுறுவான். உலகத்து மக்கட்கெல்லாம் நெல்லும் நீரும் உயிராகும் என்று கூறுவர். இவ்விரண்டும் உண்மையில் அவர்களுக்குச் சிறந்த உயிரல்ல. அவர்களுக்குச் சிறந்த உயிர் மன்னனே யாவான். ஒரு மன்னன் செங்கோன்மை வழுவாது அரசு புரிதல் வேண்டும். இல்லையேல் மன்னன் தன் அரசோடு தானும் அழிவான். பகைவர்களை அழித்தற்குரிய தக்க காலம் வரும்வரை அவன் தன் பகைமையைத் தன் பகைவர்களுக்கு வெளிப்படுத்தாமல் பொறுமையோடு இருத்தல் வேண்டும். குடிமக்கள் தன்னைப் பழிதூற்றுதவாறு ஒரு மன்னன் பேரருளோடு ஆட்சி புரிதல் வேண்டும். அவன் சிறு பொய்யையும் பேசுதல் கூடாது. பல கலைகளைப் பற்றிய ஆழ்ந்த அறிவு அவனுக்கிருத்தல் வேண்டும். எப்போதும் அவன் திறம் வாய்ந்த தன் அமைச்சர்களுக்கு அருள் சுரத்தல் வேண்டும். இப்பண்புகள் அனைத்தையும் மன்னன் பெற்றிருப்பானாயின் ஏனைய மன்னர்கள் அவனடிபணிவார்கள்''

இதனின்றும் திருத்தக்கதேவரின் அரசாட்சி முறைபற்றிய கருத்துக்கள் தெளிவாகின்றன.

சிந்தாமணியில் காணும் அறநெறிகளும் அரசியல் நெறிகளும் அக்காப்பியத்திற்கு முற்

(5) சிந்தாமணி — செய். 1920 — 1923.

பட்ட சங்க இலக்கியங்களிலும் திருக்குறளிலும் காணப்படுகின்றன. சிந்தாமணிக்குப் பிற்பட்ட இலக்கியங்களும் அந்நெறிமுறைகளை வலியுறுத்துகின்றன. இதனால் அவைகள் என்றென்றும் மனித சமுதாயத்திற்குப் பெரும் பயன் அளிக்கும் பேருண்மைகள் என்பது புலனாகிறது. அவைகள், சான்றோர்கள் பன்னெடுங்காலம் இந்நிலவுலகில் வாழ்ந்து தம் பழுத்த பட்டறிவில் கண்ட உண்மைகளாகும். மனித இனம் என்றும் தேய்ந்து அழியாமல் வளர்ந்து உயர்வதற்குரிய நெறிமுறைகளே அவைகள். அவற்றை இம் மன்பதை பின்பற்றிப் போற்றி ஒழுகுமானால் அது வளம்பெருக வாழ்ந்து உயரும் என்பதில் ஐயமுண்டோ!



# இயற்கைத் திங்களும் இலக்கியத் திங்களும்

பேராசிரியர் கொ. சு. மகாதேவன், பி. எஸ்சி , எம். ஏ.,
இயக்குநர், தமிழ் வளர்ச்சிக் கழகம்.

இன்று நம் உலகமே திங்களை நோக்கித் திரும்பி நிற்கிறது! இயற்கைத் திங்களிலே அடிவைத்து மீண்ட அறிவியலாரையும் காண்கிறோம்; இலக்கியத் திங்களின் எழிலைச் சுவைத்து மகிழும் சுவைஞர்களையும் காண்கிறோம். இயற்கைத் திங்கள் பற்றி மனிதன் மேற்கொள்ளும் ஆராய்ச்சி முடிவுகள் இலக்கியத் திங்களின் கவர்ச்சியை இல்லாமல் செய்துவிடும் என்று அஞ்சுகிறவர்களும் இருக்கிறார்கள். இந்த அச்சம் தேவையில்லாத ஒன்று. நிலவுலகில் நடமாடிக்கொண்டிருந்த மனிதனால் நெஞ்சையள்ளும் நிலாக்காட்சி பற்றிப் பாடமுடிந்தது. அவ்வாறே நிலாவுலகில் சென்று குடியேறும் மனிதன் நம் நிலவுலகம் பற்றி இதுவரை நாம் எண்ணாத கற்பனைகளையெல்லாம் எழிலொழுகப் புனைந்துரைக்கப்போகிறான். நிலத்தில் வாழ்ந்த புலவன் நிலத்தை வளப்படுத்த வழி கண்டான். நிலவில் வாழப்போகும் புலவன் நிலவை வளப்படுத்த வழி கூறப்போகிறான். நிலவுலகத்து வள்ளுவர்

> ''இலமென்று அசைஇ இருப்பரைக் காணின்
> நிலமென்னும் நல்லாள் நகும்''

என்று கூறினார். நிலாவுலகத்தில் நாளை வாழப்போகும் வள்ளுவரோ,

> ''இலமென்று அசைஇ இருப்பாரைக் காணின்
> **நிலவென்னும்** நல்லாள் நகும்''

என்று கூறப்போகிறார். திங்களில் மனிதன் அடிவைத்துவிட்டதால் இலக்கியமோ, இலக்கியச் சுவையோ குன்றிவிடாது. நாம் உடனடியாகச் செய்யவேண்டியதெல்லாம் கற்பனையைக் கற்பனையாகக் கொண்டு சுவைக்கக் குழந்தைகளுக்குக் கற்பிப்பதே ஆகும். கலையுரைத்த கற்பனையை நிலையெனக் கொண்டாடும் கண்மூடி வழக்கம் ஏற்படுவதற்கு இனியும் நாம் துணைபோதலை நிறுத்திக்கொள்ளவேண்டும். ''திங்கள் பாற்கடலிலிருந்து திரண்டெழுந்த வெண்ணெய் உருண்டையா?'' என்று குழந்தைகள் நம்மைக் கேட்கலாம். ''பால்போல் நுரைத்துப் பொங்கும் கடலைப் 'பாற்கடல்' என்று சொன்னால் வெள்ளையாக வெண்ணெய் பந்து போல் எழுந்துவரும் திங்களை 'வெண்ணெய் உருண்டை' என்று சொல்லலாம்'' என்று அக்கேள்விக்கு அமைதியாக விடை கூறவேண்டும். 'கண்ணில் தீப்பொறி பறந்தது' என்று குழந்தைகள் கற்பனையோடு பேசுவதை நாம் ஊக்குவித்தல்வேண்டும்; ஆனால், அத்தீப்பொறியைக்கொண்டு சூடத்தைக் கொளுத்திய கதையினையோ, சுருட்டைப் பற்றவைத்த வரலாற்றையோ நாம் சொல்ல முன்வரக்கூடாது. இந்த அளவிற்கு நாம் எச்சரிக்கையாக இருந்தால், இயற்கைத் திங்கள்பற்றி எவ்வளவு ஆராய்ச்சிகள் நடந்தாலும் இலக்கியத் திங்களை மக்கள் தொடர்ந்து சுவைத்துக்கொண்டே இருப்பார்கள்.

## பிறைசூடும் பெம்மான்

திங்களுலகத்திலிருந்து அமெரிக்கர்கள் பெயர்த்துவந்த கற்பாறையைச் சென்ற

ஆண்டு காட்சிப்பொருளாகச் சென்னையில் வைத்திருந்தனர். அதைக் காண வந்தவர்கள் 'திங்களில் மனிதன் சென்றிறங்கியதால் கடவுள் நம்பிக்கை குறைந்துபோகுமோ?' என்று அச்சங் கலந்த குரலில் கேட்டார்கள். இன்னும் சிலர் மண்ணில் நெளிந்துகொண்டிருக்கவேண்டிய மனிதன் திங்களில் சென்று இறங்கி அதனைச் சூறையாடித் திரும்புவதைத் தங்களால் சுவைக்க முடியவில்லை'' என்று ஒப்புக்கொண்டனர். இவர்களின் நடுக்கத்தையும் நல்ல முறையில் களைய இலக்கியம் காத்திருக்கிறது. இராகு விழுங்கிக் கொண்டிருந்த திங்களை இன்று இராக்கெட்டுகள் சென்று முத்தமிட்டுத் திரும்புகின்றன. இன்றும் நாம் இலக்கியத்தில் பிறைசூடும் பெம்மான் பற்றிக் கேட்கும்போது மிகவும் சுவைத்து மகிழ்கின்றோம். அவ்வளவு ஏன்? மேற்கு வானிலே மாலை நேரத்திலே ஒளிக் கதிர்களை வீசி நிற்கும் செந்நிற ஞாயிற்றை ஒளிர்சடை விரித்துநிற்கும் சிவனாகக் காண்கின்றோம்; செங்கதிரவனுக்கு மேற்பகுதியில் இருந்து மின்னும் 'திங்களங்குழவி'யையும் சேர்த்துக் காணும்போது 'பிறைசூடிய பெருமான்' காட்சி தருவதை உணர்கிறோம்! செங்கதிரைச் சிவனாகக் கொண்ட நாம் திங்களை உமையெனக்கொண்டு மகிழ்வதையும் யாரும் தடுக்கமுடியாது. சிவனது புகழொளியில்தான் உமை ஒளிர்ந்து நிற்கிறாள். திங்களுக்கும் தன்னொளி கிடையாது; ஞாயிற்றினது ஒளியையே நிலவொளி என அது திருப்பி அனுப்பிக்கொண்டிருக்கிறது. திங்களின் உண்மை நிறம் கருப்பு; உமையின் நிறமும் கருப்பு. திங்கள்தான் உமை; எனவே பிறைசூடும் பெருமானைக் கண்ட நாம் 'மாதொருபாகனையும்' உணர்ந்து மகிழமுடிகிறது. ஞாயிற்றிற்கு எதிர்த் திசையிலிருந்தபடி நிலவு பொழியும் 'முழுமதி'யானது ஞாயிற்றை நெருங்க நெருங்க ஒளி குன்றித் தேய்கிறது. சிவனுக்கு எதிரில் நின்றபடி 'சக்தி பெரிதா சிவம் பெரிதா' என நாமே மயங்கும் அளவிற்குப் புகழ்கொண்டு திகழும் உமையும் சிவனை நெருங்கும்போது புகழ் மங்கிச் சிவபெருமானின் காலடியில் கலந்து உயர்ந்து உடம்பில் ஒடுங்கிவிடுகின்றாள். திங்களை அகத்தே அடக்கிக் காட்சி தரும் ஞாயிற்றையே, 'மங்கைபாக'னாகப் புலவர்கள் பாராட்டி மகிழ்ந்தனர். மங்கைபாகனை அமாவாசை தோறும் உணரலாம்; ஆனாலும், ஞாயிற்று மறைவின் *(Solar eclipse)* போது நேருக்கு நேர் காணலாம். உடலில் ஒடுங்கிய உமை, பின்னர் சிவனின் சடையில் முகிழ்த்துப் புகழ் வளரப்பெற்று மீண்டும் சிவனுக்கு எதிரில் வந்து முழுச் சக்தியாகப் புகழொளி வீசுகிறாள். ஆம், ஞாயிற்றின் அடிவிளிம்பைப் பிறையாகத் தேய்ந்து சென்று தொட்டு ஞாயிற்றைக் கடந்த திங்கள், பின்னர் மேல் விளிம்பிலே மீண்டும் பிறையாக—வளர்பிறையாக—வெளிவருகிறது! அதன் பின்னர் ஞாயிற்றிலிருந்து விலகவிலக மேலும் நிறைவுற்று, அதற்கு நேர் எதிர்த் திசையில் வரும்போது முழுத் திங்களாகிவிடுகிறது!! இலக்கியத்திலும் ஞாயிறு 'மாறிலாப் பரிதிவட்டமாக' இருந்தாலும் திங்கள் மட்டும் தேய்ந்து வளர்ந்து காண்பதால் 'அறுவாய் நிறைந்த அவிர்மதி'யாகவே காட்சி தருகிறது. அமெரிக்கர்கள் திங்களில் சென்று மண்ணைத் தோண்டத் தோண்ட அது தேய்கிறது என்றும், அவர்களுக்குப் போட்டியாக உருசியர்கள் மண்ணைக் கொண்டு சென்று நிரப்ப நிரப்ப வளருகிறது என்றும் உலக அரசியல் பேசுகிறவர்களும் இனிக் கற்பனையோடு பேசலாம்.

## மதிக்கண் மறு

இன்று திங்களுலகில் அடிவைத்துத் திரும்பியவர்கள் அங்கு வட்டம் வட்டமாக உள்ள பள்ளங்களையும் செங்குத்து மலைகளாக உயர்ந்து நிற்கும் அவற்றின் விளிம்புகளையும் படம் பிடித்துவந்து காட்டுகின்றனர். இந்த நிலையில் பெண்ணின் முகத்தைத் திங்களோடு ஒப்பிட்டு இலக்கியம் பேசுவதை இனியும் நம்மால் சுவைக்க முடியுமா என்றும் சிலர் கேட்கின்றனர். இத்தகைய கேள்விகள் இன்று புதிதாக எழுவன அல்ல. வள்ளுவரே இந்தக் கேள்வியை எழுப்புகின்றார்.

> "அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப்போல
> மறுவுண்டோ மாதர் முகத்து"

என வள்ளுவர் கேட்கும்போது இயற்கைத் திங்களை எவ்வளவு நுட்பமாக அவர் ஆராய்ந்திருக்கின்றார் என்பது தெளிவாகிறது. விண்ணியலறிஞர் கோபர்னிகசு *(Copernicus)* 'என்றாவது ஒருநாள் மனிதன் தன் கண்ணொளியைப் பெருக்கிக் கொள்வானாகில் வெள்ளிக்கோளும் திங்களைப்போல் தேய்ந்து வளர்வதைக் காண்பான்' என்றார். இன்று நாம் தொலைநோக்கி வழியே பார்க்கும்போது வெள்ளி, பிறை வெள்ளியாகத் தேய்ந்து பின்னர் முழு வெள்ளியாக வளர்வதைக் காண்கின்றோம். இத்தகைய எதிர்கால நோக்கு வள்ளுவருக்கும் இருந்தது. என்றேனும் ஒருநாள் மனிதன் கண்பார்வையைப் பெருக்கிக்கொள்ள வாய்ப்பு ஏற்பட்டால் அப்பொழுது திங்கள் மென்மையான பெண்கள் முகத்திற்கு ஒவ்வாத தோற்றம் கொண்டுவிடுமே என்று எண்ணியிருக்கிறார். எனவே, ஒப்புமை கூறுவதிலும் சில வரையறைகளை மேற்கொண்டிருக்கின்றார். ஆம், பெண்ணின் முகம் போலத்தான் திங்கள் வட்டம் தோன்றுகிறது. ஆனால் பெண்கள் முகத்தில் இல்லாத களங்கத்தையும் அது கொண்டிருக்கிறது என்று குறிப்பிட்டுவிட்டார். இன்று நாம் தொலைநோக்கி ஒன்றைக் கையிலெடுத்து அதன் வழித் திங்களைக் கண்டு திங்கட் பரப்பில் கொப்புளங்களும் குழிகளும் நிறைந்துள்ளனவே என்று வருந்தினால் அதற்கு வள்ளுவர் பொறுப்பாகமாட்டார்.

## அகத்தின் அழகு முகத்தில்

'நெஞ்சம் கடுத்தது காட்டும் முகம்' என்பது வள்ளுவர் முகத்திற்குக் கூறும் இலக்கணமாகும். திங்களின் முகம் இவ்வளவு களங்கத்தைக் காட்டினால் திங்களின் அகத்திலே எரிமலைகள் எத்தனை குமுறிக் கொண்டிருக்கும் என்ற ஆராய்ச்சியையும் வள்ளுவர் தொடங்கி வைத்திருக்கிறார். அந்த ஆய்வைத்தான் இன்று திங்களைத் தோண்டும் அமெரிக்கர்களும், உருசியர்களும் தொடர்ந்து மேற்கொண்டிருக்கின்றனர்.

## குடிப்பிறந்தார்கண் விளங்கும் குற்றம்

குற்றத்தை மறைக்கவே எவரும் விரும்புவர். ஆனால் குடிப்பிறந்தார் விரும்பினாலும் தம் குற்றத்தை மறைக்க முடிவதில்லை. ஆம்,

> "குடிப்பிறந்தார் கண்விளங்கும் குற்றம் விசும்பின்
> மதிக்கண் மறுப்போல் உயர்ந்து"

என்று வள்ளுவர் கூறும்பொழுது, இயற்கைத் திங்களை நன்கு புரிந்துகொண்டுள்ள நாம் இலக்கியத் திங்களை நம் முன்னோரினும் நன்கு சுவைக்கின்றோம்! குடிப்பிறந்தாரிடம் உள்ள குற்றம் வானில் திங்களிடம் காணும் களங்கம்போல் பலரும் காண உயர்ந்து தோன்றும் என்று மட்டுமே முன்னோர்கள் விளக்கிக்கொண்டிருப்பர். ஆனால் நாமோ இயற்கைத் திங்கள் தன்னைத்தானே சுற்றிக் கொண்டிருந்தாலும் கூட எப்பொழுதும் தன் ஒரே பக்கத்தைப் பூமியிலுள்ளோருக்குக் காட்டியபடி வானில் சுழன்றுகொண்டிருக்கிறது என்னும் உண்மையை அறிவோம். திங்கள் தன் களங்கத்தை மறைப்பதற்காகச் சுழல்கிறது. இருந்தாலும் அக் களங்கம் சுழன்று மதியின் மறுபுறம் திரும்பி மறையாமல் உலகோர் கண்முன் தோன்றிய படியே இருக்கிறது. ஆம், இன்று வள்ளுவர் ஆளும் உவமையின் பொருத்தம் நம்மால் நன்கு உணரப்படுகிறது.

## திங்களைப் பாம்பு கொண்டற்று

தலைவி தன் தலைவனைக் கண்டது ஒரு நாள் மட்டுமே. ஆனால் அதனால் எழுந்த அலரோ அதனை அனைவரும் அறியும்படி ஆக்கிவிட்டது. இதனைச் சொல்லவந்த வள்ளுவர்

''கண்டது மன்னும் ஒருநாள் அலர்
மன்னும்
திங்களைப் பாம்புகொண் டற்று''

எனக் கூறுகிறர். இங்கு 'ஞாயிற்றைப் பாம்பு கொண்டற்று' என்று சொல்லாமல் 'திங்களைப் பாம்பு கொண்டற்று' என்று வள்ளுவர் சொன்னதற்கு மணக்குடவரோ, பரிமேலழகரோ, மற்ற உரையாசிரியர்களோ விளக்கம் கூறவில்லை. ஆனல் இயற்கைத் திங்கள் பற்றிய ஆராய்ச்சி அறிவுடைய நம்மால் அதற்கு நல்ல விளக்கம் காணமுடிகிறது! வள்ளுவர் ஞாயிற்று மறைவையும் *(Solar eclipse)* ஆய்ந்திருக்கின்றர்; திங்கள் மறைவையும் *(Lunar eclipse)* ஆய்ந்திருக்கிறர்; இரண்டிற்கும் உள்ள அடிப்படை வேறுபாட்டையும் அறிந்திருக்கிறர், ஞாயிற்றை நம் பார்வையிலிருந்து ஒளியற்ற திங்கள் குறுக்கிட்டு மறைப்பதால் 'ஞாயிற்று மறைவு' ஏற்படுகிறது. ஆனல் பூமியின் நிழலில் திங்கள் வந்து மறைப்புண்டு இருளுவதால் திங்கள் மறைவு ஏற்படுகிறது. நம் பூமியில், ஞாயிறு திங்கள் வழியாக வரும் நேர் கோட்டில் இருப்பவருக்கு மட்டுமே ஞாயிற்று மறைவு தென்படும். மற்ற இடங்களில் உள்ளவர்கள் ஞாயிற்று மறைவை— ஞாயிற்றைப் பாம்பு கொள்வதை — காண முடியாது. ஆனல் திங்கள் மறைவின் போதோ நிலைமை முற்றிலும் வேருக உள்ளது. திங்களில் பூமியின் நிழல் படிவதை திங்களைப் பாம்பு கொள்வதை—பூமியில் இருந்தபடி திங்களைக் காணும் வாய்ப்புடைய அவ்வளவு பேராலும் காணமுடிகிறது. சுருக்கமாகச் சொன்னல் ஞாயிற்றை கண் விழித்துக் கண்டுகொண்டிருக்கும் உலகின் பகுதியிலுள்ள அவ்வளவு பேருக்கும் ஞாயிற்று மறைவு தெரிவதில்லை. ஆனல் இரவுக் காலத்தில், திங்களைக்காணும் வாய்ப்புடைய உலகத்தின் பகுதியிலுள்ள அவ்வளவு பேருக்கும் திங்கள் மறைவு புலப்படுகிறது.

அலர் அதிகமான அளவில் தலைவியை அறிந்த அவ்வளவு பேருக்கும் பரவிற்று என்பதை வற்புறுத்தவே வள்ளுவர் 'ஞாயிற்றைப் பாம்பு கொண்டற்று' என்னமல் 'திங்களைப் பாம்பு கொண்டற்று' எனக் கூறினர் என்பதனை அறிந்து நாம் பெரிதும் சுவைத்துப் பாராட்டுகிறேம். இயற்கைத் திங்கள் பற்றி அறிவியலார் மேற்கொள்ளும் ஆராய்ச்சி நம் இலக்கியத் திங்களை மேலும் மேலும் எழிலுறச் செய்கிறது. மனிதன் திங்களுக்குச் சென்று திரும்புவது எதிர் விளைவுகளை ஏற்படுத்தும் என்று யாரும் கவலையுறத் தேவையில்லை. அறிஞர் ஐசக் நியூட்டன் ஞாயிற்றெளியை முப்பட்டைக் கண்ணுடி கொண்டு பிரித்து வானவில்லின் நிறங்களைச் செயற்கையில் உண்டாக்கியதால் வானவில்லின் அழகு குறைந்துவிடவில்லை; இலக்கியத்திலும் வானவில்லிற்கு இடமில்லாமல் போய்விடவில்லை என்பதை மேல்நாட்டு ஆராய்ச்சியாளர்கள் நிலைநாட்டியுள்ளனர். வானவில்லிற்குப் பொருந்தும் இவ்வுண்மை நம் திங்களுக்கும் பொருந்தும்.

வாழ்க இலக்கியம்! வளர்க வானவெளி ஆராய்ச்சி!



# மணிமேகலையின் விண்வழிச் செலவு

ஆராய்ச்சி அறிஞர், மயிலை, சீனி. வேங்கடசாமி

[மணிமேகலை காவியத் தலைவியாகிய மணிமேகலை, தான் சென்ற வெளிநாடு களுக்கு ஆகாய வழியாகப் பறந்து சென்றாள் என்று கூறப்படுகிறாள். வானத்தில் பறந்து சென்றது உண்மையாக இருக்கமுடியுமா? காவியப் புலவர் கற்பனையாகக் கூறினரா? கற்பனையாகக் கூறினர் என்றால் ஏன் இப்படிக் கற்பித்தார்? இவற்றைப் பற்றி இக்கட்டுரையில் ஆராய்கிறோம்.]

பௌத்த மதம் தமிழ்நாட்டில் சிறப்படைந்திருந்த காலத்தில்—கடைச்சங்க காலத்தின் கடைப் பகுதியில்—மணிமேகலை காவியத்தைச் சீத்தலைச்சாத்தனார் இயற்றினார். இந்தக் காவியத்தின் தலைவியாகிய மணிமேகலை பௌத்த மதத்தைச் சார்ந்தவள். இந்தக் காவியத்தை இயற்றிய புலவர் சாத்தனாரும் பௌத்த மதத்தைச் சேர்ந்தவர். சாத்தனார் தமிழ் மொழியையும், பாலி மொழியையும், சமற்கிருத மொழியையும் நன்றாகக் கற்ற பெரும் புலவர் என்பதை அவருடைய காவியத்திலிருந்து அறிகிறோம். கோவலனுக்கும் மாதவிக்கும் பிறந்த மணிமேகலையின் வாழ்க்கை வரலாற்றைக் கூறுவது மணிமேகலை காவியம்.

மாதவியைப் போலவே அவள் மகளான மணிமேகலையும் இசைக்கலை, கூத்துக்கலைகளை நன்றாகக் கற்றிருந்தாள். பன்னிரண்டு வயது நிரம்பிய அவளை, பாட்டியாகிய சித்திராபதி அரங்கேற்றி வைக்க எண்ணியிருந்தாள். அப்போதுதான், கோவலன் கண்ணகியுடன் மதுரைக்குச் சென்று ஊழ்வினைப் பயனை வெட்டுண்டு இறந்த நிகழ்ச்சிகள் நடந்தன. இதன் காரணமாக மாதவியின் வாழ்க்கையிலும் மணிமேகலையின் வாழ்க்கையிலும் பெரிய மாற்றங்கள் ஏற்பட்டன.

கோவலன் இறந்த பிறகு மாதவி கைம்பெண் நோன்பு கொண்டாள். அரங்கத்தில் ஏறி ஆடல் பாடல் செய்வதை நிறுத்தி விட்டாள். காவிரிப்பூம்பட்டினத்தில் நிகழ்ந்துகொண்டிருந்த இந்திர விழாவில் கலந்துகொண்டு நடன நாட்டியங்கள் செய்வதை நிறுத்திவிட்டாள். கலை நிகழ்ச்சிகளைக் கைவிட்டுக் கணிகை வாழ்க்கையிலிருந்து விலகியிருந்த மாதவியை அவளுடைய தாயான சித்திராபதி மீண்டும் கணிகை வாழ்க்கையில் ஈர்க்கப் பலவாறு முயன்றாள். ஆனால் மாதவி, கைம்பெண் வாழ்க்கையில் உறுதியாக நின்றாள். சித்திராபதியின் எண்ணம் நிறைவேறாமற்போகவே அவள் தன்னுடைய பேத்தியாகிய மணிமேகலையைக் கணிகை வாழ்க்கையில் புகுத்த முயன்றாள். அப்போது அவளுக்கு ஒரு நல்ல வாய்ப்புக் கிடைத்தது. சோழ அரசனுடைய மகன் உதயகுமரன் என்னும் இளைஞனுடைய காமக் கிழத்தியாக மணிமேகலையை இணைத்துவிட அவள் கருதினாள். இந்தக் கருத்தை நிறைவேற்றுவதற்காக அவள் சோழன் அரண்மனைக்குச் சென்று

உதயகுமரனைத் தனியாக நேரில் கண்டு, இளைஞனை அவனை மணிமேகலையைக் கைக் கொள்ளும்படி தூண்டினாள். அவனும், தன்னைத் தேடிவந்த நல்ல வாய்ப்பை நழுவ விடாமல் மணிமேகலையைக் கைப்பற்றிக் கொள்ள விரும்பினான். விரும்பி, மணிமேக லையைத் தன் வயப்படுத்த முயன்றான்.

மாதவி இதனை அறிந்தாள். அரசகுமர னிடம் இருந்தாலும் மணிமேகலையின் நிலை, கணிகை நிலைதானே. அரசகுமரனின் காமக் கிழத்தி என்னும் இழிந்த நிலையில் மணிமேக லையை விட்டுவிட மாதவி விரும்பவில்லை. தன் மகள் மணிமேகலையை நல்லவன் ஒருத் தனுக்குத் திருமணம் செய்துவைத்து அவளைக் குலமகள் வாழ்க்கையில் செலுத்த அவள் விரும்பினாள். மணிமேகலையைத் தன் னுடைய மகள் என்று சொல்லிக்கொள்ளவும் அவள் விரும்பவில்லை; கண்ணகியின் மகள் என்று அவள் சொன்னாள். தன் மகளைக் குலமகள் வாழ்க்கையில் ஈடுபடுத்த மாதவி யின் தூய தாய் உள்ளம் அவாவிற்று.

ஆனால், அவளுடைய தாயாகிய சித்திரா பதியோ தன்னுடைய பரம்பரையான கணிகை வாழ்க்கையையே பெரிதும் விரும் பினாள். வருவாய் மிகுந்த கணிகை வாழ்க் கையில் அவள் பெருமிதம் கொண்டாள். தன்னுடைய மகள் மாதவி கணிகைத் தொழிலைவிட்டுப் போய்விட்டபடியால், தன் னுடைய பேத்தியாகிய மணிமேகலையைக் கணிகைத் தொழிலில் புகுத்த அவள் விரும் பினாள். அதனால்தான் அவள் உதயகுமரனைத் தூண்டிவிட்டு மணிமேகலையைக் காமக்கிழத் தியாக்கிக்கொள்ள அவனை ஊக்கினாள். மாதவி இந்த நிலையை மாற்ற எண்ணினாள். அரசகுமரனைத் தடுக்க அவளால் முடியாது. அவனுக்கு ஆதரவாகச் சித்திராபதி நிற்கிறாள். பன்னிரண்டு வயதடைந்துள்ள மணிமேக லைக்கோ அரசகுமரனுடன் அவனுடைய காமக் கிழத்தியாக இருப்பது சிறந்ததா, அல்லது நல்லவன் ஒருவனுடன் வாழும் குல மகள் வாழ்க்கை சிறந்ததா என்பதைப் பகுத்தறியும் மனத்தெளிவு இல்லை. மாதவி தன்னுடைய கருத்தைத் தன்னுடைய தாய் சித்திராபதியிடம் தெரிவித்தாள். சித்திரா பதி, மணிமேகலைக்குத் திருமணம் செய்து வைக்க விரும்பவில்லை. உதயகுமரனின் காமக்கிழத்தியாக்கி வைக்கவே விரும்பினாள்.

மாதவி தன் மகளைத் திருமண வாழ்க் கையில் செலுத்த உறுதிகொண்டாள். தன் எண்ணத்தை நிறைவேற்ற ஒரே வழி, சித்திராபதியிடமிருந்து பிரிந்துவிடுவதுதான். பிரிந்துவிட்டாலும், தனக்கும் மணிமேகலைக் கும் ஒரு பலமான சார்பு—ஒரு புகலிடம்— வேண்டும். மாதவி அந்தப் புகலிடத்தைத் தேடினாள். அவளுக்கு நல்ல புகலிடம் கிடைத்தது. அதுதான் பௌத்த மதம்.

தவறான வாழ்க்கையில் உள்ளவர்களை யும் நல்வழிப்படுத்தி அவர்களைச் செம்மை யான வாழ்க்கையில் செலுத்த பௌத்த மதம் உதவிசெய்தது. மேலும் அந்தக் காலத்தில் காவிரிப்பூம்பட்டினத்தில் பௌத்த மதம் பெரும் செல்வாக்கை அடைந்திருந்தது. சோழ அரசனுடைய அரண்மனையிலுங்கூட பௌத்தர்களின் செல் வாக்கு மிகுதியாக இருந்தது. ஆகையினாலே மாதவி பௌத்த மதத்தைப் புகலடைந்தாள். மணிமேகலையைக் குலமகள் வாழ்க்கையில் செலுத்தப் பௌத்த மதம் பலமான சார்பாக இருக்கும் என்று கண்ட மாதவி, பௌத்த விகாரைக்குச் சென்று அப்போது மதகுருவாக இருந்த அறவண அடிகளிடம் சரணம் அடைந்தாள். அறவண அடிகள், தம்மைச் சரணமடைந்த மாதவிக்கும் மணி மேகலைக்கும் திரிசரணத்தையும் பஞ்சசீலத் தையும் கொடுத்து இவர்களைப் பௌத்த ராக்கினார். பௌத்த மதத்தை ஏற்றுக் கொண்ட இவர்கள், சித்திராபதியை விட்டுப் பிரிந்து பௌத்தரிடத்தில் குடிபுகுந்து வாழ்ந்து வந்தார்கள். பௌத்த மதத்தைச் சேர்ந்துவிட்டபடியால், சித்திராபதி இனி ஒன்றும் செய்யமுடியாது என்று மாதவி கருதினாள். ஆனால், சித்திராபதியோ இலே சில் விடவில்லை.

மணிமேகலையை உதயகுமரனுடன் சேர்க்கச் சித்திராபதி அதிகமாக முயன்றாள். அரசகுமாரன் என்னும் நிலையாலும் இளவயது காரணமாகவும் சித்திராபதியின் வற்புறுத்தலினாலும் இளைஞனான உதயகுமரன் மணிமேகலையைத் தன் வசப்படுத்திக்கொள்ளத் துணிந்தான். அவன் அடிக்கடி அவளைப் பின்தொடர்ந்தான். இதைத் தடுத்து மணிமேகலைக்குப் பாதுகாவல் அளிக்கவேண்டியது பௌத்தரின் கடமையாயிற்று. உதயகுமரனின் பிடியில் மணிமேகலை அகப்படாமலிருக்கவும் அவளுக்குப் பௌத்த மதத்தில் அழுத்தமான பற்று உண்டாக்குவதற்காகவும் பௌத்தர்கள் அவளை மணிபல்லவத்துக்கு அனுப்பினார்கள். மணிபல்லவம் என்பது இப்போதுள்ள யாழ்ப்பாணத்துக்குப் பக்கத்திலிருந்த ஒரு சிறு தீவு. இந்தத் தீவில் புத்தருடைய பாத பீடிகை இருந்தது. மணிபல்லவம் இலங்கையின் துறைமுகமாகவும் அக்காலத்தில் இருந்தது. பழைய இலங்கைச் சரித்திர நூல்கள் மணிபல்லவத்தை சம்பு கொலபட்டினம் என்று கூறுகின்றன.

கடற்காவல் தெய்வமாகிய மணிமேகலா தெய்வம் காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்த மணிமேகலையைத் தூக்கிக்கொண்டு ஆகாய வழியாகப் பறந்துபோய் அவளை மணிபல்லவத் தீவில் விட்டது என்று மணிமேகலை காவியம் கூறுகிறது.

> "பூங்கொடி தன்னைப் பொருந்தத் தழீஇ
> அந்தரம் ஆறு ஆறைந் தியோசனைத்
> தென்திசை மருங்கில் சென்று திரையுடுத்த
> மணிபல் லவத்திடை மணிமேகலா தெய்வம்
> அணியிழை தன்னைவைத் தகன்றது தானென்"

(மணிமேகலை, 6-ஆவது காதை 210-214)

மணிபல்லவத்தில் மணிமேகலை புத்த பாத பீடிகையை வணங்கினாள். பிறகு, மணிமேகலா தெய்வத்தின் அருளினால், ஆகாயத்தில் பறந்து போவதற்குரிய ஒரு மந்திரத்தைப் பெற்று அந்த மந்திரத்தின் துணையினால் வானத்தில் பறந்து மீண்டும் காவிரிப்பூம்பட்டினம் வந்து சேர்ந்தாள் என்று மணிமேகலை காவியம் கூறுகிறது.

> "கோமகன் பீடிகை தொழுது வலங் கொண்டு
> வானூடெழுந்து மணிமே கலைதான்
> .................................. ............
> வந்துதோன்றி யவர் மயக்கங் களைந்து
> அந்திலவர்க்கோர் அற்புதங் கூறும்"

(மணிமேகலை, 11-ஆம் காதை 126-132)

காவிரிப்பூம்பட்டினத்துக்குத் திரும்பி வந்த மணிமேகலை பௌத்தமதச் சார்பாகச் சமூகத் தொண்டு செய்துகொண்டிருந்தாள். ஆனால், உதயகுமரன் அவளைத் தன் வசப்படுத்துவதற்குத் தொடர்ந்து முயன்று கொண்டிருந்தான். அதன் காரணமாக அவன் எதிர்பாராவண்ணம் வாளால் வெட்டுண்டு இறந்தான். அதன் பிறகு மணிமேகலையின் வாழ்க்கை புதிய நிலையையடைந்தது. சித்திராபதியின் எண்ணம் நிறைவேறவில்லை. அவளுக்குத் திருமணம் செய்துவைக்கக் கருதிய மாதவியின் எண்ணமும் நிறைவேறவில்லை. மணிமேகலை சிலகாலம் வெளிநாட்டுக்குப்போய் இருக்கவேண்டிய நிலை ஏற்பட்டது. அவள், கிழக்கே வெகு தூரத்தில் இருந்த கிழக்கிந்தியத் தீவுகளைச் சேர்ந்த சாவக நாட்டுக்குப் (ஜாவா தீவுக்கு) போக நேர்ந்தது.

சாவகநாடு தமிழகத்துக்குக் கிழக்கே வெகுதூரத்தில் ஆயிரம் மைலுக்கப்பால் இருந்தது. அக்காலத்தில், தமிழ்நாட்டு வாணிகருக்கும் சாவகநாட்டு வாணிகருக்கும் கடல் வழியாகக் கப்பலில் வாணிகம் நடந்திருந்தது. மணிமேகலை கடல் வழியாகச் சாவக நாட்டுக்குச் சென்று சில காலம் அங்குத் தங்கியிருந்து பிறகு மீண்டும் திரும்பி வந்தாள். சாவக நாட்டில் பௌத்தமதம் பரவியிருந்தபடியால், மணிமேகலை அங்குச் சென்று பௌத்தருடன் தங்கியிருந்தாள். மணிமேகலை சாவக நாட்டுக்கு விண்வழி

யாகப் பறந்து சென்றதாக மணிமேகலை காவியம் கூறுகிறது.

"அந்தரம் ஆறுப் பறந்து சென்று
ஆயிழை
இந்திரன் மருமான் இரும்பதிப்
புறத்தோர்
பூம்பொழில் அகவையின் இழிந்து"
(மணிமேகலை, 24-ஆம் காதை 163–165)

சிலகாலம் சாவக நாட்டில் தங்கின பிறகு மணிமேகலை மீண்டும், காவிரிப்பூம் பட்டினத்துக்குத் திரும்பிவந்தாள். வரும் வழியில் மணிபல்லவத்தில் தங்கினாள். சாவக நாட்டிலிருந்து மணிபல்லவத்துக்குத் திரும்பி வந்தபோதும் ஆகாய வழியே பறந்துவந்த தாக மணிமேகலை நூல் கூறுகிறது.

மணிபல்லவத்துக்கு வந்தபோது, காவிரிப்பூம்பட்டினம் வெள்ளத்தில் முழுகிப் போனதையும் அந்நகரத்திலிருந்து அறவண அடிகளும் மாதவியும் சேர நாட்டு வஞ்சிமா நகரத்துக்குப் போய்விட்டதையும் அவள் அறிந்தாள். ஆகவே அவள் வஞ்சிமா நக ருக்குப் புறப்பட்டுச் சென்றாள். மணிபல்ல வத்திலிருந்து வஞ்சிக்குப் போகவேண்டுமா னால், கடல் வழியாகக் கப்பலில் போக வேண்டும். ஆனால், மணிமேகலை ஆகாய வழியாகப் பறந்து சென்றாள் என்று காவியம் கூறுகிறது. 'வஞ்சியுட் செல்வனென்று அந் தரத் தெழுந்தனள் அணியிழைதானென்'. (ஆபுத்திரனோடு மணிபல்லவமடைந்த காதை 238–239) என்றும், 'அணியிழை அந்தரம் ஆறா வெழுந்து' சென்றனள் என்று 26-ஆவது காதையின் முதல்வரியும் கூறு கின்றன.

மணிமேகலை வஞ்சி நகரத்துக்குச் சென்றபோது அறவண அடிகளும் மாதவியும் அங்கு இல்லை; அவர்கள் வஞ்சியிலிருந்து புறப்பட்டுக் காஞ்சிக்குப் போய்விட்டார் கள். இந்தச் செய்தியையறிந்த மணிமேகலை அங்கிருந்து அவர்களைத் தேடிக்கொண்டு காஞ்சிக்கு வந்தாள். வஞ்சியிலிருந்து காஞ் சிக்கு வரவேண்டுமானால் தரைவழியாக நடந்து அல்லது வண்டியில் வரவேண்டும். ஆனால், மணிமேகலை விண்வழியாகப் பறந்து காஞ்சிபுரத்துக்கு வந்தாள் என்று காவியம் கூறுகிறது.

"கொடிமதில் மூதூர்க் குடக்கணின்
றோங்கி
வடதிசை மருங்கின் வானத்து இயங்கி
..............................................
பொற்கொடி மூதூர்ப் புரிசை வலங்
கொண்டு
நடுநகர் எல்லை நண்ணினள் இழிந்து"
(கச்சிமாநகர் புக்க காதை 164–171)

இவ்வாறு மணிமேகலை தான் சென்ற தூரதேசங்களுக்கெல்லாம் வானத்தில் இயங்கி ஆகாய வழியாகப் பறந்து சென்ற னள் என்று மணிமேகலை காவியம் தொடர்ந்து கூறுகிறது. ஆகவே, இது உண் மையான நிகழ்ச்சியா அல்லது காவியப் புல வரின் கற்பனையா என்னும் கேள்வி எழுகி றது.

தெய்வங்களும் தேவர்களும் ஆகாய வழியே பறந்து சென்றனர் என்று கூறுவதை ஒருவாறு நம்பலாம். ஏனென்றால் அவர்கள் மனிதர்களிலும் மேம்பட்ட பேராற்றல் உள்ளவர்கள். மனிதர்களிலும் சிலர் கடும் தவம் செய்து சித்தி (இரித்தி) பெற்றவர்கள் ஆகாய வழியே பறந்துசென்றனர் என்பதை யும் ஒருவாறு நம்பலாம். மணிமேகலை தவம் செய்து இந்த ஆற்றலைப் பெறவில்லை. பன் னிரண்டு வயதுள்ள சின்னஞ்சிறுமி பௌத்த மதத்தில் சேர்ந்த உடனேயே, தவம் செய்யா மலே, மந்திரத்தைப் பெற்று பறந்து சென் றாள் என்று காவியப் புலவர் கூறுகிறார்! இது காவியப் புலவரின் கற்பனை என்று கொள்ள லாமே தவிர உண்மை நிகழ்ச்சி என்று ஏற்க முடியாது.

மணிமேகலா தெய்வம், வேறு எந்தப் பௌத்தருக்கும் ஆகாயத்தில் பறக்கச் செய் யும் மந்திரத்தை உபதேசம் செய்ததாகப் பௌத்த நூல்கள் கூறவில்லை. மாதவி மகள்

மணிமேகலை மட்டுந்தான் மணிமேகலா தெய்வத்திடமிருந்து பறந்து செல்லும் மந்திரத்தைப் பெற்ருள் என்பது தெரிகிறது. இது வெறுங் கற்பனையே. காவியப் புலவரின் கைச்சரக்கு. காவியப் புலவர்கள் தம்முடைய காவியங்களிலும் கவிதைகளிலும் கற்பனையைப் புகுத்துவது மரபுதானே.

மணிமேகலை காவியம் வெறுங் கட்டுக்கதை அன்று, அது மணிமேகலையின் வாழ்க்கை வரலாற்றைக் கூறுகிற காவியம். இக்காவியத்தை இயற்றிய புலவரும் இவ்வரலாறு நிகழ்ந்த காலத்தில் இருந்தவர். மணிமேகலை வெறும் சாவக (சிராவக) நோன்பியாக இருந்தபோதே — துறவு கொண்டு தவம் செய்யாமலிருந்தபோதே — ஆகாயத்தில் பறந்தாள் என்று காவியப் புலவர் கற்பனை செய்கிருர்! ஏன் இப்படிக் கற்பனை செய்தார்? இதற்கு விடை என்ன?

மணிமேகலை கி. பி. இரண்டாம் நூற்ருண்டில் வாழ்ந்தவள், இவளுடைய தாயாகிய மாதவியும் தந்தையாகிய கோவலனும் அந்த நூற்ருண்டிலே வாழ்ந்தவர்கள். காவியங்களை இயற்றிய சீத்தலைச்சாத்தனரும் இளங்கோ அடிகளும் அந்த நூற்ருண்டிலே வாழ்ந்தவர்கள். மணிமேகலை மணிபல்லவத்துக்கும் சாவக நாட்டுக்கும் வஞ்சிமா நகரத்துக்கும் கப்பல் ஏறிக் கடல் வழியாகத்தான் போயிருக்கவேண்டும். ஆகாயத்தில் பறந்து சென்றிருக்கமுடியாது. விண்வழியே பறந்து சென்ருள் என்பது காவியப் புலவரின் கற்பனையே.

மணிமேகலை வாழ்ந்திருந்த காலத்துக்கு ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு இருந்தவர் சங்கமித்திரை என்னும் பௌத்தப் பெண்மணி. சங்கமித்திரை பௌத்த மதத்தில் பிக்குணியாகச் சேர்ந்து தவஞ்செய்து 'தேரி' என்னும் உயர்நிலையைப் பெற்றிருந்தார். அவர் அசோக சக்கரவர்த்தியின் உறவினர். இவ்வளவு சிறப்புப் பெற்றிருந்தும் சங்கமித்திரை ஆகாயத்தில் பறந்துபோகும் சித்தி பெறவில்லை.

அசோக சக்கரவர்த்தி காலத்தில் இலங்கையை அரசாண்டிருந்த தேவனும்பிய திச்சன் என்னும் அரசனுடைய வேண்டுகோளின்படி, அசோக சக்கரவர்த்தி சங்கமித்திரையை இலங்கைக்கு அனுப்பினர். இலங்கையரசனுடைய அரண்மனையில் இருந்த மகளிர்க்குப் பௌத்தமத போதனை செய்யப் பிக்குணியாகிய சங்கமித்திரை அனுப்பப்பட்டார். அவர் பாடலிபுரத்தில் கப்பல் ஏறி ஏழுநாட்கள் கடலில் பிரயாணம் செய்து இலங்கையின் வடக்குப் பக்கத்திலிருந்த சம்பு கொல பட்டினத்துக்கு (மணிபல்லவத்துக்கு) வந்தார் என்று மகாவம்சம், தீபவம்சம் என்னும் பழைய நூல்கள் கூறுகின்றன. பௌத்தருடைய 'தேரி காதை' என்னும் நூலிலே பௌத்தப் பெண் துறவிகள் பலர் கூறப்படுகின்றனர். அவர்கள் பிக்குணிகளாக இருந்து துறவு நெறியிலே உயர்நிலையடைந்தவர்கள். அவர்களும் கூட ஆகாயத்தில் பறக்கும் சித்தி பெறவில்லை. இவ்வாறு சிறந்த பௌத்தப் பெண் துறவிகள் அடைந்திராத சித்தியைத் துறவு கொள்ளாத இளம் பெண்ணுகிய மணிமேகலை யடைந்திருந்தாள் என்று காவியப் புலவர் கூறுவது பொருந்துமா? ஏற்கத்தக்கதா? கற்பனையாகத்தானே இருக்கவேண்டும்?

மணிமேகலை காவியத்தை இயற்றிய சாத்தனரோ பௌத்தர், பௌத்த நூல்களை நன்ருகப் படித்தவர். தமிழிலும் வல்லவர். இப்படிப்பட்ட சாத்தனர், மணிமேகலை வானத்தில் பறந்துபோனுள் என்று ஏன் கற்பித்துக் கூறினர்? இதற்கு விடை என்ன?

இதற்கு விடை காணவேண்டுமானல், சங்க காலத்துத் தமிழரின்—மணிமேகலை காவியம் இயற்றப்பட்ட காலத்திலிருந்த தமிழரின்—பழக்க வழக்கங்களைப் பார்க்க வேண்டும். தமிழருடைய அக்காலத்துப் பழக்கவழக்கங்கள் சில அக்காலத்து இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தில் பொருளதிகாரத்தில் கூறப்படுகின்றன. அந்தப் பழக்க வழக்கங்களில் ஒன்று, தமிழ்

மகளிர் கப்பலில் கடற் பயணம் செய்யக் கூடாது என்பது.

**'முந்நீர் வழக்கம் மகடூஉவோ டில்லை'**– என்பது (தொல். பொருள். அகத்திணை யியல், 37) அதன் வாசகம்,*

இந்தப் பண்பாடு தமிழர்களுக்கு மட்டும் இருந்தது. மற்ற இனத்தாரில் இந்த வழக்கம் இருந்ததாகத் தெரியவில்லை. நிச்சயமாக வட இந்தியாவில், அதிலும் பௌத்த மதத்தாருக்கு இந்த வழக்கம் இருந்ததில்லை. பெண்கள் கடலில் பிரயாணம் செய்யக் கூடாது என்னும் வழக்கம் வட இந்திய பௌத்தருக்கு இருந்திருக்குமானால், பெண் துறவியாகிய சங்கமித்திரை கடலில் ஏழு நாட்கள் கப்பற் பிரயாணம் செய்து இலங்கைக்கு வந்திருக்கமாட்டார் அல்லவா? பெண்களும் கடலில் கப்பல் பிரயாணம் செய்யலாம் என்பது வழக்கத்தில் இருந்தபடியால் சங்கமித்திரை, வட இந்தியாவிலிருந்து கங்கைத் துறைமுகத்திலிருந்து புறப்பட்டுத் தெற்கே இலங்கைத் தீவுக்கு வந்தார். ஆனால், முந்நீர் வழக்கம் (கடல் பிரயாணம்) தமிழ் மகளிர்க்கு மட்டும் அக்காலத்தில் மறுக்கப்பட்டிருந்தது. இந்தப் பண்பாடு இலக்கண நூலில் இடம் பெறுகிற அளவுக்குத் தமிழரிடையில் ஊன்றியிருந்தது. இல்லையானால், தொல்காப்பியச் சூத்திரம் இவ்வொழுக்கத்தை வற்புறுத்தியிருக்குமா?

பௌத்த மதம் அசோகச் சக்கரவர்த்தி காலத்தில் வடநாட்டிலிருந்து வந்து தமிழ் நாட்டில் பரவிற்று. தமிழப் பௌத்தர் பௌத்த மதக் கொள்கைகளை ஏற்றுக் கொண்டனர். பௌத்த மதம், பெண்கள் கடல் யாத்திரை செய்யக்கூடாது என்று தடுக்கவில்லை. பௌத்தப் பெண் மகளிர் கடல் யாத்திரை செய்யலாம் என்பது அம் மதத்தின் உடன்பாடு. தமிழ்நாட்டுப் பௌத்தமதப் பெண்களும் கடல் யாத்திரை செய்யலாம் என்பது அந்த மதத்தின் உடன்பாடு. தமிழரின் ஒழுக்கம், தமிழப் பெண்கள் கடல் பிரயாணம் செய்யக்கூடாது என்றிருந்தாலும், வடநாட்டிலிருந்து தமிழகத்துக்கு வந்த பௌத்த மதத்தைத் தங்களுடைய மதமாக ஏற்றுக்கொண்ட தமிழப் பௌத்தர், (தமிழரில் ஒரு பகுதியினர்) இது பற்றித் தர்மசங்கடமான நிலையில் இருந்தார்கள். தமிழர் என்னும் முறையில் பெண்கள் கடற் பிரயாணம் செய்யக்கூடாது. பௌத்தர் என்னும் முறையில், பௌத்தத் தமிழருக்குப், பெண்கள் கடற்பிரயாணம் செய்வது தவறு அன்று, உடன்பாடுதான். இந்தத் தர்ம சங்கடமான நிலை இருந்த காலத்தில்தான் மாதவி மகள் மணிமேகலை, கடல் கடந்து மணிபல்லவத்துக்கும், சாவக நாட்டுக்கும், வஞ்சிமா நகரத்துக்கும் கடல் வழியாகச் சென்றாள். அப்படிச் சென்றது பௌத்த மத ஒழுக்கப்படி தவறு அன்று. ஆனால், தமிழரின் அக்காலத்து ஒழுக்கப்படி தவறு, செய்யத்தகாதது. மணிமேகலை வெளிநாடுகளுக்குச் சென்றது கப்பலில் கடல்வழியாகத்தான் என்பதில் ஐயமில்லை.

மணிமேகலை கடற் பிரயாணம் செய்தது பற்றி யாதொரு தடையும் ஏற்படவில்லை. மணிமேகலை பௌத்த மதத்தவள் ஆகையால் அவள் கடல் யாத்திரை செய்யக் கூடாது என்று தடை ஏற்படவில்லை. மேலும் அவளைக் கடல் யாத்திரையாக அனுப்பினவர்கள் பௌத்த மதத்துப் பெரியார்களே. ஆகையினால் இதுபற்றி எந்த விதமான மறுப்பும் ஏற்படவில்லை.

ஆனால், சாத்தனார் மணிமேகலை காவியத்தை எழுதினபோதுதான் அவருக்கு இது பற்றிச் சங்கடங்கள் குறுக்கிட்டன. சாத்தனார், பௌத்த மதத்தாருக்கு மட்டும் மணிமேகலை காவியத்தை எழுதியிருந்தால் இந்தச் சங்கடம் ஏற்பட்டிராது. பௌத்தரல்லாத தமிழரும் மணிமேகலை காவியத்தைப் படிக்கவேண்டும் என்று சாத்தனார் கருதின படியால், அவருக்கு இந்தச் சங்கடம் ஏற்பட்டது. மணிமேகலை, கப்பலில் கடற் பிரயாணம் செய்து மணிபல்லவத்துக்கும் சாவகத் தீவுக்கும் வஞ்சிமா நகருக்கும் சென்று வந்தாள் என்று சாத்தனார் தம்முடைய காவியத்தில் கூறினால், பௌத்தரல்லாத

சைவ வைணவ சைன சமயத்துத் தமிழர்கள் அந்த நூலை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். 'முந்நீர் வழக்கம் மகடூஉவோ டில்லை' என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தைச் சுட்டிக் காட்டித் தமிழர் பண்பாட்டுக்கு முரணாக இருப்பதனால் அதை ஏற்கமுடியாது என்று அக்காலத்துத் தமிழ்ப் புலவர்கள் தடைகூறி நூலை ஏற்றுக்கொள்ள மறுத்திருப்பார்கள்.

இந்தச் சங்கடத்தை நீக்குவதற்காகவே சாத்தனார், மணிமேகலை கடற் பிரயாணம் செய்ததை மறைத்து அவள் ஆகாய வழியாகப் பிரயாணம் செய்தாள் என்று புதிதாகக் கற்பித்துக் கூறினார். காவியத்தில் கற்பனையைப் புகுத்துவது மரபு. ஆகையால் இந்தக் கற்பனையை எல்லோரும் ஏற்றுக்கொள்வார்கள். ஆகவே, மணிமேகலையை மணிமேகலா தெய்வம் ஆகாய வழியாகத் தூக்கிக்கொண்டு போய் மணிபல்லவத் தீவில் விட்டது என்றும், பிறகு அந்தத் தெய்வம் அவளுக்கு ஆகாயத்தில் பறந்து செல்லும் மந்திரத்தைக் கற்றுக் கொடுத்தது என்றும், அந்த மந்திரத்தின் உதவியினால் அவள் அயல் நாடுகளுக்கு ஆகாயத்தில் பறந்து சென்றாள் என்றும் சாத்தனார் புதிதாகக் கற்பனைசெய்து காவியத்தை முடித்தார்.

இவ்வாறு, 'முந்நீர் வழக்கம் மகடூஉவோ டில்லை' என்னும் மரபுக்கும் இலக்கணத்துக்கும் மாறுபடாமல் கற்பனை செய்து காவியத்தை முடித்தபடியினால்தான் இந்நூல் அரங்கேற்றத்தின்போது இளங்கோவடிகள் இந்நூலை ஏற்றுக்கொண்டார்,

> "இளங்கோ வேந்தன் அருளிக் கேட்ப
> வளங்கெழு கூல வாணிகன் சாத்தன்
> மாவண் தமிழ்த் திற மணிமேகலை துறவு
> ஆறைம்பாட்டினுள் அறியவைத்தனன்
> என்"

என மணிமேகலைப் பதிகம் கூறுகிறது. தமிழ்த்திற மணிமேகலை' என்னுந் தொடரில் 'தமிழ்த் திறம்' என்பது என்ன? இது, கடற் பிரயாணம் மகளிர்க்கு இல்லை என்னும் தமிழ்ப் பண்பாட்டுக்கு ஏற்ப வானத்தில் பறந்து சென்றாள் என்னும் கற்பனையைச் சுட்டுகிறதுபோல் இருக்கிறது.

கூலவாணிகன் சாத்தனார், காவியத் தலைவி மணிமேகலை என்னும் தமிழப் பெண் கடற் பிரயாணம் செய்ததை அவ்வாறே கூறியிருந்தால், இளங்கோவடிகளும் மற்றத் தமிழ்ப் புலவர்களும் அதனை ஏற்றுக்கொண்டு காவிய நூலை அங்கீகாரம் செய்திருப்பார்களா? சிந்தித்துப் பாருங்கள்.

மணிமேகலை ஆகாயத்தில் பறந்து சென்றாள் என்பது இயற்கைக்கு மாறான செயல். ஆகையினால் இந்நூல் வரலாற்றுச் செய்தியைக் கூறவில்லை, இது வெறுங் கட்டுக்கதை என்று யாரேனும் கூறினால், அவர் உண்மையறியாதவர் என்பதாகும். மணிமேகலை, தன்னுடைய தந்தை கோவலன், தாய் மாதவி இருவரும் உண்மையாக வாழ்ந்திருந்த வரலாற்று மக்கள் போலவே உலகத்தில் வாழ்ந்திருந்த வரலாற்றுப் பெண்மணி என்பதில் ஐயமில்லை.

மணிமேகலையின் கடைசிப் பிரயாணம், வஞ்சி நகரத்திலிருந்து காஞ்சி நகரத்துக்கு வந்ததாகும். வஞ்சியிலிருந்து காஞ்சிக்குக் கடல் வழியாக வரவேண்டியதில்லை. தரை வழியாக வரவேண்டும். ஆனால், இந்த யாத்திரையையும் ஆகாய வழியாகவே செய்ததாகச் சாத்தனார் கற்பித்திருக்கிறார். காரணம் என்னவென்றால், மற்ற யாத்திரைகளையெல்லாம் ஆகாய வழியாகச் செய்ததாகக் கற்பித்துவிட்டு, இந்த யாத்திரையை மட்டும் தரை வழியாகச் செய்தாள் என்று கூறினால் முன்னுக்குப்பின் பொருந்தாது என்பதற்காகவே.

புத்தம் புதிதாக ஆராய்ந்து எழுதப்பட்ட இந்த ஆராய்ச்சிக் கட்டுரையின் முடிவை அறிஞர் உலகம் ஏற்றுக்கொள்ளும் என்று நம்புகிறேன். ஐயங்களும் தடைகளும் இருந்தால், எனக்குத் தெரிவித்தால், விடை கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

> "எப்பொருள் யார்யார் வாய்க்
> கேட்பினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்பது அறிவு".



# பாம்பனடிகளாரும் பைந்தமிழும்

நக்கீரன்வழியடிமை, வித்துவான், பி. மா. சோமசுந்தர முதலியார்,
இராணிப்பேட்டை

**முன்னுரை :**

அன்னியொரு பங்குமிளிர் கண்ணுதற் கடவுளருளிய கன்னித் தமிழன்னை களிதுளும்ப, கவின்செயுங்கலன்களாம் நூல்களாக்கியருளிய ஆசிரியன்மார் இருதிறத்தராவர். அவர்தாம் அளப்பரு நூலாழி நீந்தி, ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோராய் வாழ்ந்து, தாமுணர்ந்தவுண்மைகளை ஏனையருமுணர்ந்து பயன்கொள்ளுமாறு இன்றமிழ் நூல்யாத்த ஆசிரியன்மார் என்பார் ஒருதிறத்தரும், தெய்வநெறி நின்று, திருவருட்டுணை கொண்டு "சிவமான வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ" வெனுந்திருமொழிக்கியையப் பார்வாழ் மாந்தர் பேதுறலொழித்துப் பேரின்பம் பெற்றுய்கவெனும் பேரருளான் பன்னூலருளிய அருளாளர் என்பார் மற்றொரு திறத்தருமாவரென்றுணர்க. இவ்விருதிறத்தருள்ளும், பிற்கூறிய அருணலங் கைவரப் பெற்றோர் பலரையும், அறிஞருலகறியுமேனும், செந்தமிழ்க்குரவனுஞ் செவ்வேள் சேவடியே சிந்தையில் வைத்து வண்டமிழ் மொழிக்கு வனப்புயர் அணிகளை வழங்கிய தவப்பெருந்திருவினராம் பாம்பன் குமரகுருதாச அடிகளாரையறிந்தோர் தவச்சிலரே யென்க.

அடிகளார் திருவிராமேச்சுரம் எனும் பதியில் தோன்றி, நாற்பந்தைந்தகவைகாறும் தம் ஊராகிய பாம்பனில் வதிந்திருந்து, பின் சென்னையில் எழுந்தருளியிருந்து 1929–ஆம் ஆண்டில் ஆறுமுகன் அடியிணைக்கீழ் அமர்ந்தருளுவாராயினர். தம் ஊராகிய பாம்பனுக்கு அப்பெயர் போந்த வரலாற்றை அடிகளாரே பின்வருமாறு விளக்கியுள்ளார்.

"திருவிராமேச்சுரத்தின் மேற்பாலான இவ்வூரின் வடபாலில் பாம்பணையிற் பள்ளி கொண்ட திருமால் கோயிலொன்றிருந்தது காரணமாக அவ்விடஞ்சார்ந்தவூர் பாம்பணை யெனும் பெயர் பெற்றது. அஃதிக்காலத்துப் பாம்பன் என மருவிற்று. அக்கோயிலிருந்தவிடமும் இக்காலங்கடலாயிருக்கின்றது"

செய்யுள் வடிவினும் உரைநடை வடிவினும் பலநூல்களை அருளிச்செய்த இவர், விதி (சாத்திர) நூல்களில் ஐம்முகச்சிவனுரை விதந்தேத்தியும், துதிநூல்களில் அறுமுகச் சிவனுரைவிதந்தேத்தியும் உள்ளார். இவர் பாக்கள் பெரிதும் வண்ணங்களாய் வயங்குவனவே. அன்றியும், சத்திரபந்தம், மயில் பந்தம், கமலபந்தம், இரட்டைநாகபந்தம், பிறிதுபடுபாட்டுப்பிரபந்தம், பகுபடுபஞ்சகம், பஞ்சவிம்சதி யதிகசதபங்கி, சட்டி வகுப்பு, பஞ்சாமிர்தவண்ணம் முதலாய அதி விசித்திரச்சித்திரக்கவிகளையும் இவர் அருளியுள்ளார். இவர்தந் தமிழ்ப்பணி யொன்றனையே காண்பது இக்கட்டுரையின் நோக்கமென்றுணர்க.

**சேந்தன் செந்தமிழ் :**

'சேந்தன் செந்தமிழ்' எனப் பெயரிய இந்நூல், செவ்வேள் சேவடி சிந்தை செய்

சிரியர்க்கும், செந்தமிழ் நலம்பேணுஞ் செந்நாப்புலவர்க்கும் கிடைத்தற்கரியதோர் கருவூலமாகும். 1906 ஆம் ஆண்டில் அடிகளாரே இந்நூலை வெளியிட்டருளினர். இந்நூற்கண் உள்ள ஐம்பது பாக்களும், அவற்றிற்கு வரையப்பட்ட சொற்பொருளும், விரிவுரையும் தனித்தமிழால் நடப்பனவாம். தூய தமிழ்மொழியின் மாண்புணராது வடமொழிக்கே ஏற்றங்கற்பிப்பான் புக்க சிலர் **''தமிழும் ஏனைய மொழிகளேபோல் வடமொழியினின்றுந் தோன்றியதே'' என்ற கூற்றைக் கூற்றுவன் வாய்ப்படுப்பான் குறித்தும், வடமொழியும் தென்மொழியும் தனித்தனி மொழிகளே எனவும், வடசொற்கலப்பின்றியே தமிழிற்செய்யுட்களும் உரைநடைகளும் நடைபெறும் எனவும் அறிவுறுத்துவான் கருதியும் இந்நூல் அருளப்பட்ட தென்க.** இதனை அடிகளாரே,

''இதுகாறுங் காட்டப்பட்ட சொற்களெல்லாம் வடமொழியேயாயினும், தென்மொழியே யாயினும், சிலச்சில பலப்பல அவ்வாறுயினும், அவர் கூற்றுப்படியிவற்றுட் பல சில புகாமல் தென்மொழி நூலொன்று மின்றென்றல் உறுதியேயாம். ஆகலின், இச்சொற்களுள்ளும் இவையிற்றிற்கு வேறுன வடசொற்களுள்ளும் ஒன்றேனும் புகாமலே 'சேந்தன் செந்தமிழ்' எனுமிந்நூல் என்னுலமைக்கப்படுவதாயிற்று' **இவ்வாறு பல சொற்கள் நீங்குழியுந்தமிழ்ச் செய்யுள் தன் மொழியானே நடைபெறூஉமெனும் ஆற்றலும் இதனுல் வெளிப்பட்டது''**

என்றுணர்த்தியருளல் காண்க.

இனி, இந்திமொழிபற்றி அஞ்ஞான்றே அடிகளார் கொண்டிருந்த கருத்தினை அவர் தம்மாணுக்கரும், என் அருமை நண்பருமா யிலங்கித் திருவெய்திய தா. வேங்கடாசல முதலியாரவர்கள் பின்வருமாறு கூறியுள்ளார்;

''இந்தி நம்நாட்டு மொழியன்று. வடமொழி, தென்மொழி எனுமிரண்டுமே நம் நாட்டில் வழங்கிவந்தன. வடநாடு சுமார் மூந்நூறுண்டுகாறும் துருக்கராட்சியிலிருந்த காலை, வடநாடர் அத்துருக்கர்களின் நடையுடை பாவனைகளைப் பின்பற்றியொழுகிய தேய்ப்ப, அவர் மொழிகளையுங் கைக்கொண்டு வட மொழிகளைப் பேசா மொழிகளாக்கிக்கொண்டனர். துருக்கர் மொழிகளோடு சில வடசொற்களைப் பெய்து கொண்டு, தமது மொழி ''இந்தி'' யெனக் கூறிக்கொள்ளும் வடநாட்டு இந்தி வெறியர்கள் இத்தென்னுடு முழுவதும் அதனைப் பரப்ப முன்வந்துள்ளார்கள். இஃது பெரிதும் தன்னலமும், அறியாமையும் அடாச் செய்கையுமாமெனக்கருதவுள்ளது.'' இதனையொத்தே, அடிகளார் தம் திருப்பா எனும் நூற்கண்ணும் ''தமிழ் நலன் இற்றெனஅறியாது இந்தி முதலிய வேறுமொழிகளைப் பரப்பவிழையும் வடநாடரது தன்னலத்திற்குத் துணை செய்தல் தமிழர் கடன்மையன்று'' என்று உரைத்தருளியதும் கருத்திலிருத்தற்பாற்று

## அடிகளார் காலத் தமிழ்நிலை :

வடமொழிவாணர் வெல்வழக்கல்லா வல்வழக்கிட்டுத் தமிழைத் தாழ்த்துஞ் செயல்களையெல்லாந் தாழாதியற்றினர். தமிழுலகோ சாற்றருந்துயிற்கண் தங்கியிருந்தது. அம்மட்டோ! இலக்கணக் கொத்துடையார் பிரயோக விவேகமுடையார், வீரசோழிய முடையார் போன்ற தமிழறிஞன்மாரும் வடமொழிக்கே ஏற்றமுரைத்துப் போந்தமையும் தமிழின் மாட்சிமையை மாசுபடுத்துவதா யமைந்தது. இந்நிலையை அடிகளாரே,

''வடமொழியொன்றையே கற்று அதனையே விதந்து கூறுநராயுள்ளாருட் சிலர், சமற்கிருதமெனும் வடமொழியிலிருந்தே திராவிடமெனுந் தென்மொழி யுண்டாயிற்றென்றும், அதனுல் வடமொழியே தாய்மொழி யென்றும், கடவுண்மொழியென்றுங் கூறுதல் இவ்வையகத்திலுண்டு. அவரெல்லாம்–தமிழொன்றையே விதந்து கூறுநருட்சிலர், எவ்வெத்தென்மொழி யெவ்வெவ்வடமொழியிலிருந்துண்டாயினவென்று கூற இயைகின்றனவோ அவ்வத்தென்மொழியிலிருந்தே அவ்

வவ்வடமொழியுண்டாயின; அவை, பெயர், வினை, இடை, உரியெனு நாற்றிறப் பிரியா மொழியும், பொருள், இடம், காலம், சினை, பண்பு, தொழில் எனும் ஆறுங்கொண்டு வருபிரிமொழியுமாம், வடமொழி முதனிலை நூல் பின் இயற்றப்பட்டது; அந்த முதனிலை களின் பொருள்களெப்படி இடுகுறியாய் அமைந்துளவோ அப்படித்தான் தமிழ்ப்பிரி மொழி முதனிலைகளுக்கும் பிரியாமொழியா கும் இடுகுறிப்பெயர்களுக்கும் பொருள்கள் அமைந்துளவெனுமாற்றானும், தேவியாகிய தாய்க்கு உவப்பாகிய வடமொழிபோல் அத் தேவியை நீங்காத் தேவனாகிய தந்தைக்கும் உவப்பாய், புதுமை காட்டி நிற்பது தென் மொழியெனு மாற்றானும் தென்மொழி தாய் மொழியுந் தந்தை மொழியுமாமென்றும்; குறைவில் குறுமுனிவர்க்கு முக்கட்கடவுளும் முருகப் பெருமானும் அழகெலாமமைய வுணர்த்த நின்ற வொன்றாய், எஞ்ஞான்று தென்றுண்டாயதோ வஞ்ஞான்றே ஆண் டுப்பயிலவமைந்து பரந்துளதாய்த் திகழுந் தென்மொழியான தொன்மொழி கடவுண் மொழியேயா மென்றுங் கூறுதல் கூடுமென் பதையுணராதவராவர். மேலும் இவர்—எழு துங்கிளவியான தென்மொழிக்கெழுத்துக்கள் முன்னேற்பட்டனவென்பதையும், எழுதாக் கிளவி யெனப்படு மறைமொழியான வட மொழிக்கெழுத்துக்கள் பின்னேற்பட்டன வென்பதையும், பெரியார் பற்றும் மறைமுத லாகிய "ஓ" அண்டத்தும் பிண்டத்து மெவ் வாறமைந்துளதோ அவ்வாறே வரிவடிவி லமையப்பெற்ற சிறப்புடையது தென் மொழியென்பதையும், இந்த "ஓ" தமிழெழுத்து வழியாகப் பின்னுண்டாகிய கிரந்தவெழுத்திலுமப்படியே யமைந்துளது; மற்றை நாகர முதலியவெழுத்துக்களிலப்படி யமைந்திலதென்பதையும் ஓராதவராவர். பெரிதுந்தமிழே பேசுநரு மெழுதுநருமாகி, தாமுண்ணு முணவைத் தாமே யிகழ்வார் போலத் "தமிழுமொரு பாஷையா" எனத் தமிழையிகழும் இருபிறப்பாளர் கண்ணுமிச் செய்தியேயும்"

எனமொழிந்தருளி வருந்தல் காண்க. இக் கருத்துக்களையே அடிகளார்,

(அ) "பேசுவதுங் கேட்பதுவும்
பெட்போ டெழுதுவது
மாசிறமி ழாயிருக்க வத்தமிழை-யேசு
கின்ற மூட மநுடரையெம் முத்தர் மதிப்
பார்விண்ணுடர் பிராணி நவில்."

(ஆ) "வடமொழியைத் தேர்ந்தோர்
வடமொழிதா யென்னிற்
றிடமொழியாந் தென்மொழியைத்
தேர்ந்தோர்—புடவிதனில்
அத்தென் மொழிதந்தை யாமெனலுங்
கூடுமெனல்
கத்தனே யேத்தென் றுணிபு"

எனும் பாக்களினும் பகர்ந்துள்ளார், தாம் பயிலுமொழி யொன்றையே யுயர்த்தித் தன்னேரில்லாத் தமிழைத் தாழ்த்தலே தம் பணியாக்கொள் மயலினரைக் கண்டு அடிகள் உளம் வெதும்பிப் பின்வருமாறு இசைத் தருளினர்;—

"தென்மொழியைக் கேட்டலுமே
தீட்டென்னும் பார்ப்பார்கட்
கென்வழிதான் கைகூடு மிவ்வுலகி—
னன்மொழிதேர்
சம்பந்த ராதிமுத்தர் சாரா வகங்கார
வெம்பந்தந் தானே மிகும்"

1943-ஆம் ஆண்டில் திரு. கி. இராம லிங்கமுதலியாரவர்கள் காஞ்சி சங்கர ஆசிரிய ரவர்களது அழைப்புக்கிணங்கிச் சென்று அடி களைக்கண்டகாலை, அடிகள் சமற்கிருதத்தில் பேச, அருகிருந்தார் அதனை மொழி பெயர்த்துரைக்க, முதலியாரவர்கள் தமிழில் விடைதரவென்று இந்நிரலில் உரையாடல் நிகழ்ந்ததாம். முதலியாரவர்கள் "அடிகள் தமிழ் அறியாதவரா?" என்று தம்மை யழைத்து வந்தவரை உசாவ அவர் "சுவாமி கள் சந்திர மௌளீசுவரர் வழிபாடு முற்றுப் பெறுமளவும் எந்த நீச்ச பாஷையிலும்பேச மாட்டார்கள்" என்று விடைதந்தாராம்.

செந்தமிழ்ச்செல்வி 1969-ஆம் ஆண்டு அக்டோபர் இதழில் வெளிவந்த இந்நிகழ்ச்சி

யொன்றே, பாம்பனடிகளாரின் கூற்று மிகை யுமன்று; புதுமையுமன்று; இன்றும் நிகழ் வதே யெனலை எடுத்துக்காட்டுமென்க.

அடிகளார் வடமொழிபால் வெறுப்பு டையாரன்று. ''வடமொழி தென்மொழி யெனவே வந்தவிரு மொழியவற்றுள், கெடு வழக்குத் தொடர்பவரே கிழக்கொடுமேற் குணராரே'' எனும் மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளையவர்கள் கூற்று அடிகளார் திருவு ளத்தைப் படம் பிடித்துக்காட்டும். ஆயி னும் தமிழை யிகழ்ந்துரைத்தலைச் சிறிதும் பொறாரென்க. அடிகளார் தமிழ்மொழி மாட்டு வைத்திருந்த அன்பு மாசற்றது. அதனை,

''என்றுளின் மேலா மிரக்கமுள நச்செவ்வே
ளென்று டுதித்தினிய நூனுவலத்–
தேன்போற்
கிடைத்ததெய் வத்தமிழே கேணினையு
நின்னைப்
படைத்தவனை யும்பழிச்சு வேன்''

என வரூஉம் அவரது பாடலே நனி யுணர்த்தி நிற்கும் என்க.

## தமிழிலக்கண விளக்கம் :

அடிகளாரருளிய பன்னூல்களில் திரு வலங்கற்றிரட்டு (இரண்டாங்கண்டம்) யாப் பின்றிற முணர்த்தும் பேரிலக்கியமாய்ப் பிறங் குவதாகும். தமிழ் வித்துவான் தேர்வுக்குப் பாடநூலாயிருந்த இஃது யாது காரணத் தாலோ சில்லாண்டுகட்கு முன்பு நீக்கம் பெற்றுள்ளது. இவ்வண்ணமே இன்றமிழ்ப் பேரிலக்கிய விலக்கணமாயிலங்கும் இறைய னார் களவியலும் கழிக்கப்பட்டுள்ளது. அரு ளாளர் நூல்கள் இன்னணம் குறைக்கப் படல் புலவன்மார் அறிவுத்திறனைக் குறைத் தற்கே ஏதுவாய் நிகழுமென்க.

அடிகளார் தாமருளிய நூல்களிற் பற்பல இலக்கணக் குறிப்புக்களைத் தந்துதவி யருளி யுள்ளார். அவையாவு மீண்டுக்காட்டவிய லாதேனும் ஓரிரண்டேனுங் காட்டுவல்.

(அ) உன், நின் எனும் பொருள் பயக் கத்தக்க 'நுன்' எனுமிது சுந்தரமூர்த்தி சுவா மிகள் தேவாரத்திருமுறையில் ''நொந்தா வொண்சுடரே நுனையே நினைந்திருந்தேன்'' என வருதற்கண்ணுமுளது. ''சலந்தரன் முதலா நுன்குலத்தலைவர்'' எனத் தணிகைப் புராணத்திற் சீபரிபுராணப்படலத்து 133–ஆவது திருச்செய்யுளிலும் வந்துளது. பிற நூற்கண்ணுமுண்டு, இவ்வாறு வருவழக் கறியா வுரையாசிரியரொருவர் ''சொல் வழுவென்பது சொல்லிலக்கணத்தொடு, புல்லாதாகிய புகர்படுமொழியே'' என்ற தண்டியலங்காரச் சூத்திரத்திற்கு இச் சொற்புக்கவொரு செய்யுளைத் தானே யுதா ரணமாகக்காட்டி அதிலுள்ள 'நுனக்கு' என் பதை வழூஉச் சொற்புணர்க்கப்பட்டதாக வரைந்து வைத்தார். அதற்கது காட்டாகா தென மறுக்க. பன்மைக்கு நும்மெனுஞ் சொல் வரூஉ மென்றுணர்த்திய தொல் காப்பியனுர் முதலிய இலக்கண நூலுடை யாரும் ஒருமைக்கு நுன்னென்பது வரூஉ மென்றுணர்த்தாமைக்குக் காரணம் யாதா மெனின், இது போன்ற அடிப்பட்ட சான் றோர் வாக்கியமவர்க்குக் கிடையாமையே யஃதாமென்க.

(ஆ) பொய்யானவுடம்பை 'மெய்' எனல் ''மங்கல வழக்கு'' என்பதே இலக் கண உரையாசிரியன்மார் துணிபும் ஏனைய ஆசிரியன்மார் கொள்கையுமாம். ஆயின் உடம்புக்கு 'மெய்' என்னும் பெயர் போந்த காரணத்தை அடிகளார் பின்வருமாறு விளக் குகின்றார்.

''பார்வைக்குப் புலப்படா வுயிரைப் புலப்படுமாறு காட்டிநிற்பது உடம்பே யாக லின் அதற்கு 'மெய்' என்னும் பெயர் போந் தது. அடிகள் பொய்யுடம்பினை மெய்யென் பது நல்வழக்கென்பார் கூற்று தன்னளற் பால தாமன்றிக் கொள்ளற் பாலதாகாதென்னுந் தங்கொள்கையை அடுத்த பாடலிலே வைத் துள்ளார்.'' (மங்கல வழக்கென்பது வட சொற்கலப்பாகலின் அதன் நற்றமிழ் ஆக்க மாக நல்வழக் கென்று அடிகளார் உரைத் தருளியது உன்னற்பாற்று.)

### சொல் விளக்கம் :

திராவிடமென்ற சொல்லே 'தமிழ்' என லாயதென்பது சிலர் முடிவு. அவருள் கால்டு வெல் பெரியாருமொருவர். இம்முடிவு தமிழ்ப்புலவர் குழாத்தின் வன்மையான எதிர்ப்புக்காளான தென்பதைக் கால்டுவெல் லுங் குறித்தேயுள்ளார். யாழ்ப்பாணம். வட கோவை. சபாபதிநாவலரும் இம்முடிவை எதிர்த்தவரிலொருவரென்பது அவர்தம் திரா விடப் பிரகாசிகையிற் பெறலாகும். இது குறித்து, (அ) "தமிழொன்றற்கே சிறப் பெழுத்தாகவுள்ள ழவ்வீற்று மொழியாகிய 'தமிழ்' எனுந் தென்மொழியே, தமிழும், த்ர மிளம், த்ரமிடம், த்ரமிளம், த்ரவிடம், த்ரா விடம் என்றாய வொழுங்குணர்ந்தோர், 'த்ராவிடம்' என்ற சொல் வடமொழியென் றுரைப்பரோ? உரையார்" எனத்தங்கருத் துரைத்துப் பின்னர், "ஈண்டுத்தமிழ்-த்ராவிட மென்றாயதும், த்ராவிடம் – தமிழென்றாயது மில்லை யென்றலுமாம்" என அடிகளார் பிறர் மதமுங் கூறிச்சென்றார்.

(ஆ) "பஞ்செனுந் தென்சொல்லே வட சொல்லில் பிசுவெனவும், கட்டப்பட்ட தெனப்பொருளாங் கட்டிலெனுந் தென் சொல்லே வடசொல்லில் கட்வாவெனவும், குருந்தமரமெனுந் தென்சொல்லே வடசொல் லில் குந்தமெனவும், கெடுதலெனுஞ் சொல் முதனீண்டு வந்த கேடுடைக் கேடனென் பதே வடசொல்லில் ஒழுக்கங்கெட்டவ னென்று பொருளாமாறு கேடனெனவும், கோட்டையெனுந் தென்சொல்லே வட சொல்லில் கோட்டமெனவும் நிற்கின்றன. கோடல் = வளைதல். இதன் வழிக்கோடென் பதுங் கோட்டையென்பது முண்டாயின. இத் தென்மொழிகளும் வடமொழியேயா மெனக்கூறல் அமைவுடைமையாகாதென்பர் நடுநிலை நிற்பார்,?'

(இ) "குடிலம் – குடையாயதன்று. குடம் போற் கவியுங் கவிகை அப்பெயர்பெற் றது. "குடம்" என்பது அமரசிம்கத்தி லுளதேனும் பண்டை வடநூல்களிற் பயின்று வாராத அது தென்மொழியேயா மெனல் சிவஞானபோத வுரையானுமுணரற் பாற்று. இதனால், அமரசிம்கம், விச்வப்ர காசம், விசாம்ருதம், சப்தலிங்கார்த்த சந்த் ரிகா, பர்யாயசப்தரத்நம், சரசுவதிவிலாசம், யாதவம், நாநார்த்த ரத்நமாலா, விச்வமேதிநி, சப்தசப்தார்த்தமஞ்ஞுசா, சப்தார்ணவம், பர்யாயார்ணவம், அலாயுதம் முதலிய வட மொழி நிகண்டுகளை மேலுமேலுஞ் செய்தோ ரானே அவையிற்றிற் பற்பல தென்மொழி களியைந்தபடி சேர்க்கப்பட்டன வென்ப தூஉம் ஏற்படுகின்றது." இச்சொல்லாய் வையே மேலுங் கூறப்புகின் ஏடுங்காலமும் போதா. வேண்டுவார் "சேந்தன் செந்தமிழ்" காண்பாராக.

### இலக்கிய உண்மைகள் :

அடிகளார் வெளியிட்டருளிய இலக்கிய உண்மைகள் பலப்பல. அவற்றுள் ஒருசில ஈண்டுத்தருதும்:

### கந்தழி :

"கொடிநிலை கந்தழி வள்ளி யென்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றுங்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"

எனத் தொல்காப்பியப் பொருளதிகாரப் புறத்திணையியலிற் சொல்லப்பட்ட **கந்தழி என்னுஞ் சொற்குப் பொருள் "ஒரு பற்றுக் கோடின்றி அருவாகித்தானே நிற்குந் தத்து வங்கடந்த பொருள்" எனவும். இச்சொல் வருவிக்கப்பட்ட திருமுருகாற்றுப் படையுரை யில் "ஒருபற்றுமற்று அருவாய்த்தானே நிற் குந் தத்துவங்கடந்த பொருள்"** எனவும் **நச்சினார்க்கினியர் கூறினரென்பன காண லாம்.** இப்பொழுதிதனைச் சிலர் தமிழ்ப் பெருந்தெய்வப் பெயரெனக் கோடல் வேண்டு மென்கிறார். இதனைத் தெய்வப் பெயர்களுளொன்றாக வைத்து எந்தத் தமிழ் நிகண்டும் அகராதியுங் கூறக்கண்டிலேன். சைவாசாரியர்கள், வைணவ ஆழ்வார்கள் முதலியோர் பாடிய பாட்டுக்களுள் தெய்வப்

பெயர்களுளியைத்துத் துதித்ததுங் கண்டிலேன். முந்தைச் சித்தாந்தமென மொழிந்த தமிழ் மூலங்களில் உரைகளிற் போந்ததுங் கண்டிலேன். இவையேயுமன்றி; அக்கந்தழி அழியென்னும் அமங்கலத்தோ டேய்ந்து அழகிலதாயிருத்தலின் அது கூறுவார்க்கு மங்கலம் பயக்கும் எனற்குமிடனின்று. இஃதேயுமன்றிக் 'கந்தழி' 'கந்தழி' என உருப் பெருக்கி வீடுபேறெய்தினுரின்னுரெனச் சுட்டவுமொரு கதை காட்டுநரிலராகலின் நீயிரிதனை அங்கீகரித்தல் கூடாதென்னுங் கருத்தாலேயே ஈங்கிஃதுங் கூறலுற்றேன்.

''அந்தணரென்பதை அந்தாம் + அணர் எனப்பிரிவு செயுமாற்றுனே' அந்தத்தை யணவுவார் = வேதாந்தத்தையே நோக்குவார்' என அங்நச்சினுர்க்கினியர் பொருள் செய்தவாறு கந்தம் அழிந்த இடமே கந்து + அழி = கந்தழியெனப்பட்டது; இது புத்தமத முடிபாகலாமெனப் பொருள் செய்துகொண்டு *கடவுள் வணக்கங் கூறித் தொடங்கப்படாத்* தொல்காப்பியமாக்கியோர் கடவுள் பெயர் கந்தழியெனக் கூறினுரென்பது பொருந்துமாறின்றெனுங் கருத்துமுறத் திருநெல்வேலித் தமிழ்ப் பண்டிதரொருவர் கூறினரென்பதையும் யானறிந்துளேன். இஃதியாதாயினுமாகட்டும்.

''போந்த சூத்திரத்திற் கொடிநிலை யென்றதற்குக் ''கீழ்த்திசைக்கண்ணே நிலைபெற்றுத்தோன்றும் வெஞ்சுடர் மண்டிலம்'' என்றும், வள்ளியென்றதற்குத் '' தண்கதிர்மண்டிலம்'' என்றும், ''என்றவடு நீங்கு சிறப்பின் முதலன மூன்றும்'' என்னு மொழிகளுக்கு ''என்று சொல்லப்பட்ட குற்றந் தீர்ந்த சிறப்பினையுடைய முற்கூறப்பட்ட மூன்றும் என்றும், கடவுள் வாழ்த்தோடு கண்ணிய வருமே என்னுஞ் சொற்களுக்கு ''முற்கூறிய அமரரோடே கருதுமாற்றுற் பொருந்தும்'' என்றும் அவர் பொருள் செய்தமையாற் பல வகைப்பட்ட தெய்வங்களுளொன்றுக வைத்தோதிய கந்தழி தனிப்பெருங்கடவுளெனற்கு மிடனின்று. **பின்னரும், உரையாசிரியர் ''தாவினல்லிசை'' என்னுஞ் சூத்திரவுரையில் ''தான் இறைவனிடத்துப்பெற்ற கந்தழியாகிய செல்வத்தை'' என்பதெழிதினமையின் இது கடவுள் நாமமெனக் கோடற்குமிடனின்று. இவ்வாற்றுன் உரையுஞ்சூத்திரமுந் தெளிவுடையனவுமல்ல.** கந்து = பற்றுக்கோடு; நிகண்டு காண்க. பற்றுக்கோடு மரமெனக் கொள்ளப்பட்டுழி அதன்கட்பற்றி யதனை யழிக்குந்'தீ' கந்தழியாகலாமெனப் பொருள்கோடல் வெஞ்சுடர் தண்சுடர்களோடு பொருத்தி முச்சுடரெனற் குமேயும்.''

(குறிப்பு:- உயர்திரு. நாவலர். சோமசுந்தர பாரதியாரவர்களும் நச்சினுர்க்கினியர் தம் உரையை மறுத்து ஆய்வு நிகழ்த்தினமை ஈண்டுக் கருதற்பாலதே. புத்த மதஞ் சார்ந்த பெருந்தேவனுர் என்னும் உரையாசிரியர் கந்தழி யெனற்குச் செருவில் தெட்பமுடைமை *எனப் பொருள் செய்தது மிவண் நினைத்தற்* குரித்தே.)

## சித்தர் நூலாராய்ச்சி :

''சித்தர் நூல்களெனப்படுந் தமிழ்ப் புத்தகங்களிற் சிவசப்த அங்கிகாரம் ஆங்காங்குக் காணப்படினும் அவையெல்லாம் எழுத்து-சொல்-பொருள்-யாப்பு-அணியெனும் ஐந்திலக்கணத்திற்கும் பொருத்தமில்லா வழுச் செய்யுள்களையும், மிகவிளர்த்த செய்யுள்களையுமே யுட்கொண்டிருக்கின்றன. அன்றி, இன்றுகாறுமுண்டான சிறந்த நூலாசிரியராவது, உரையாசிரியராவது பிரமாணமாக எடுத்தாளாமே வாளாகிடக்கின்றன. அன்றி, வேதாகம புராணேதிகாசங்களிலுள்ள சில சரித்திரங்கட்கு மாறுகோள் கூறுகின்றன. அன்றி, ஒரு புத்தகத்தை யொருபுத்தகம் இழித்துரைத்துப் பொய்யேற்றுகின்றது. சில புத்தகங்களில் வேத முதலிய சுருதி நிந்தை காணப்படுகின்றது. இன்னன காரணங்களாலே அவற்றை யாமும் பிரமாணமாக எடுத்து ஆண்டிலம். அவற்றிற் சொல்லப்படும் வைத்தியம் யாதாயினுமாக.

''சித்தர் நூல்கள் பல படித்துப் பார்த்தார். இவற்றிற் சொல்லப்படுகின்ற மருந்து,

மந்திரம், மை; இரசவாதம், சோதிடம், (மூச்சிழுத்தடக்கும்) யோகம், யோகசித்தி முதலியன உலோகோபகாரமேயாயினும் நமக்குத் தேவையில்லை. ஆன்மலாப மொன்றே தேவை. அஃதாண்டவனனுக் கிரகத்தால் எய்துமென்பதை அவனறிவிக் கவே அறிந்து கொண்டனே நெஞ்சமே; எனத் தமது நெஞ்சத்தை அப்படிப்பினின்றுந் திருப்பிக் கொண்டார். ''

(இத்தலைப்பின் கீழுள்ள முதற் பத்தி அடிக ளாரே வரைந்ததாகும். இரண்டாம் பத்தி அவருரைக்குமாறு வரைதலுற்ற அவர்தம் வரலாற்றில் காணப்படுவதாகும்

## கந்தரனுபூதி :

கந்தரனுபூதியின் காப்புச் செய்யுளாக அச்சிடப்பட்டு வழங்கியுள்ள ''நெஞ்சக்கன கல்லு.........பதம் பணிவாம்'' என வருவது அருணகிரியார் திருவாக்கன்று. வேறு எவரோ அச்செய்யுளை இயற்றிச் சேர்த்துள் ளார். ''ஆடும் பரிவேல்.........சகோதரனே'' என்னுஞ்செய்யுளே அந்நூலின் முதற்செய்யு ளாகும். அதுவே காப்புச்செய்யுளும் வேண்டு கோட் செய்யுளுமாம். அதில் காப்புக் கடவுளாகிய விநாயகரை நினைத்தும், பின்னர் அவர் சோதரனும் தனது ஆன்மார்த்தமூர்த் தியுமாகிய முருகப்பெருமானை ''தனியானை சகோதரனே'' எனவிளித்துப் ''பாடும் பணியே பணியா யருள்வாய்'' என்று அவரையே வேண்டுதல் செய்கிறார். இந் நூலுக்கு விநாயகருக்குக் காப்புச் செய்யுள் இயற்றிச் சேர்த்தது போல, கந்தரலங்காரத் துக்கும் அவ்வொருவர் அவ்விதக் காப்புச் செய்யுளொன்றியற்றிச் சேர்க்காமல் விட்ட காரணம் தெரியவில்லை. இந்நூல் அவர் பார்வைக்குக் கிடைக்கவில்லை போலும். கிடைத்திருந்தால் இதற்கும் ஒரு காப்புச்செய் யுளியற்றிச் சேர்த்திருப்பார். கந்தரலங்கார முதற்செய்யுள் '':அடலருணை......களிற்றுக் கிளைய களிற்றினையே '' எனவுள்ளது. இதன் ஈற்றடியில் '' களிற்றுக்கிளைய களிற்றி னையே'' எனவருவது போலவே, அனு பூதி முதற் செய்யுளின் ஈற்றடியில் ''தனி யானை சகோதரனே'' என வருதலைக் கூர்ந்து நோக்கின், அனுபூதியில் காப்புச் செய்யுளாக வழங்குவது எவரோ ஒருவரால் நுழைக்கப் பட்டதெனல் தெளிவாம்.

''உருவாயருவாயுளதா ......... அருள் வாய் குகனே'' என்னும் பாடல் அருணகிரி யார் வாக்கன்று. புஷ்பரதச் செட்டியார் முதன்முதல் அச்சிட்ட கந்தரனுபூதிப்பதிப் பினின்றும் ''தூசா மணியும்.........பேசா வனு பூதி பிறந்ததுவே'' என்னும் பாட்டோடு முடியும் 43 பாடலை மட்டுங் கொண்டது அந்நூலென்றுணரலாகும். அக்கரங்கள் ஐம் பத்தொன்றுதல்பற்றிப் போலும் எட்டுப் பாடல்கள் பின்னர்ச் சேர்க்கப்பட்டன. மேற்சொன்ன 43 ஆம் செய்யுளோடு கந்தர னுபூதி முடிகின்றதென்பதே என் கொள்கை யும்'' (இஞ்ஞான்று சில புத்தகங்கள் 100 பாடல்களோடுங் கூடியுள்ளன.)

## இயற்கையாராய்ச்சி :

அ) யானையுண்ட விளாங்கனி என முந்தை நூல்களுள் வருவதற்குப் பொருள் கூறுவாருட் சிலர் பலர் ஒருவகை நோய் யானை எனப்படும். அதன் வயப்பட்டமை யின் அக்கனி உள்ளிடத்தொன்றுமிலாததாம் என்று கூறினமை, யானையின் வாயுள்ளே திணிக்கப்பட்ட அக்கனி அந்த யானை கழிக் கும் இலண்டத்துடன் உள்ளொன்றுமில்லா உருவாகவே வருமென்பதையறியாமையின் றுரைத்தமையாம் என்றார்.

(ஆ) கைவிரல்களாலே தழலையெடுத் தெறிந்திடலாம் பிடித்துக்கொண்டிருத்தல் கூடாதாகலிற் கைத்தலவுறுப்பு ஒரு மாத் திரை சூடுபொறுக்கும். காலின் மிதியுண்ட தழல் சற்றுப் பொறுத்தே சுடுமாகலிற் காலடித்தலவுறுப்பு இரண்டு மாத்திரை சூடு பொறுக்கும். தீயில் விரைந்து சென்றுவிட லும், அதன் சாம்பர் பாதத்திலொட்டிக் கொள்ளுமாயிற் சுடுதலைச் செய்யுமாகலிற் சாம்பர் பூக்காமலே தீயைக் கனியச் செய்து

கோடலும், பாதத்தின் மேற்றலம் நெருங் காதவாறு தழலைப் பரத்திக் கோடலுமே நெருப்பு மிதிக்கும் விழாவிற் பற்றப்படும் விரகு ஆம். தெய்வ அருள் துணைகொண்டு நிகழ்வது நெருப்பு மிதிக்கும் விழாவென்று மயங்கற்க என்று உரைத்தருளியும் நடத்திக் காட்டியும் நன்மதி கொளுத்தினர்.

## 8. ஆன்மவுண்மை யுணர்த்தல்

ஆங்கில மருத்துவப் பட்டம் பெற்ற *பார்ப்பனரொருவர்* ''இரத்தமே அறிவுடை யான்மா. கையிலுள்ள இரத்தத்தை மேலே றச் செய்துவிடின் அதனிலுணர்ச்சியிராது. பண்டைக்கால இருடி, முனிவரென்பார் இவ்வுண்மையறியா மடவோரே. அவர் புத்தகங்களைக்கொண்டே ஆன்மாவொன் றுண்டென்பது நுங்கூற்று'' என்று அடிக ளாரை நோக்கிக் கூறினர். அடிகளார் அவரை நோக்கி ''இரத்தமே அறிவாயின் அதிக இரத்தமுள்ளார்க்கு அதிக அறிவு கூறல்வேண்டுமே! நுமதுடம்பை நோக்குழி அதிக இரத்தத்திற்கிடனின்றென்றலை யாவரு மொப்பு மாற்றுன்நுந்தீர்வையும் ஆன்றஅறி வுடைமையாகாதே. இதன்மேலும் நீர் கூறுவது யாது?'' எனக் கடாவினர். அம் மருத்துவரோ ''ஆராய்ந்தறிந்த தீரர் தீட்டிய நூல் யானுரைத்தவாறே கூறுகின்றது'' என்றார். அடிகளார் ''ஆங்கில வைத்தியரே, குளோரபாரம் எனும் மருந்தால் உணர்விழந் தாளொருவன் காலை, கையை நறுக்குஞான்று இரத்தம் மளமளெனப் பெருகுகிறது. அஃது உயிரா யுணர்வா யிருப்பின் அவன் யாங்ஙனம் உணர்ச்சி யிழந்து கிடப்பவனு வன்? கிடக்கின்றமையின் இரத்தம் ஆன்மா வன்று என்பதும், இம்மருந்து கண்டுபிடித் தற்கு முன்னரே நுந்தீரர் தீட்டிய புத்தகமே நும்மறிவுடைமைக் கருவியாயிற்று என்ப தும் முடிந்தன. இரத்தத்தை உயிர்க் காற்றும், உயிர்க் காற்றை ஆன்மவுணர்வும் பற்றிநிற்கும் என்பதும், அவ்வுணர்வையும், உயிர்க் காற்றையும் அடங்கச் செய்திருத் தலே குளோரபாரத்தின் செயல் என்பதும் நீருணர்ந்துகொள்ளின், நுணுகி நுணுகாய ஆன்மசக்தியினுண்மை ஓராறு புலனுதல் கூடும்'' என்று உணர்த்தியருளினர்.

## முடிப்புரை

இன்னணம் பாம்பன் குமரகுருதாச அடிகளார் தமிழ்மொழி நலம் பேணற்கும், இலக்கிய இலக்கணங்கள் பெருமையுறற்கும் மூடநம்பிக்கைகளை முருக்குதற்கும் எல்லாம் வல்ல இறைவனை உள்ளபடியுணர்ந்து வழி பட்டு உய்வதற்கும் ஆற்றிய பணிகள் பலப் பல. இவரியற்றிய நூல்களாவன:—

''திருப்பா, தகராலய ரகசியம். பரிபூர ணானந்தபோதம், சுத்தாத்வைத நிர்ணயம், செக்கர்வேள் செம்மாப்பு, செக்கர்வேள் இறு மாப்பு, பத்துப் பிரபந்தம், ஸ்ரீமத் குமார சுவாமியம், குமரகுருதாச சுவாமிகள் பாடல், திருவலங்கற்றிரட்டு, சிறுநூற்றிரட்டு, சைவ சமயசரபம், நாலாயிரப் பிரபந்த விசாரம், சேந்தன் செந்தமிழ், சிவஞான தீபம், செவி யறிவுறூஉ முதலிய. இவையேயுமன்றித் தனித்தனி ஒவ்வொரு நூலாக மிளிரும் 32 கட்டுரைகளையும் ஆக்கியருளியுள்ளார்.

அடிகளார் அருளிய நூற்பரவைக்கண் மிளிர்தரு மணிகளுள் ஒரு சிலவே இக்கட் டுரைக்கண் இடம் பெற்றுள என்று பணி வோடு உரைத்து இக்கட்டுரையை முடிக்கின் றேன்.

பைந்தமிழ்க் காவல் பூண்ட பாம்பன் அடிகளார் திருப்பெயர் வாழ்க.



# பொருட்பால் பொருத்தம்

திரு. ஆ. இராமசாமிப் பிள்ளை,
துணைப் பேராசிரியர், தமிழ்த்துறை, அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

வள்ளுவர் வான்குறளுக்குப் பெருமை தருவது, அடிப்படையாக விளங்குவது, முப்பாலே. 'நடுவணது எய்த இருதலையும் எய்தும்' என்ற பொருள்மொழி மிகப் பொருத்தமானதே. பொருளின் துணை கொண்டுதான் அறம் வளரும்; பொருளே காமத்தை வளர்க்கும் செவிலியாம். அரசுக் காயினும் ஏனைய மக்கட்காயினும் பொருளின் இன்றியமையாமை யாவரும் அறிந்ததே. அதனை வற்புறுத்தவே திருவள்ளுவர் ஏனைய அறம், காமம் பகுதிகளை விட அதிகமான குறட்பாக்களைப் பெய்து பொருட்பாலை அமைத்திருக்கிறார். அந்த 700 பாக்களையும் ஆசிரியர் பரிமேலழகர் அரசியல், அங்கவியல், ஒழிபியல் என்ற 3 பெரும் பிரிவுகளாகவும், ஒவ்வொன்றும் முறையே 25, 32, 13 அதிகாரங்களாகவும் பாகுபடுத்தியிருக்கிறார். மணக்குடவர் முதலான பிற உரையாசிரியர்களோ அரசியல், அமைச்சியல், அரணியல், கூழியல், படையியல், நட்பியல், துன்பியல், குடியியல், எனப் 'படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண்' என்பதற்கேற்பப் பிரித்துக்கொண்டு, அவைகளுக்கு முறையே 25, 10, 2, 1, 2, 5, 12, 13 அதிகாரங்களாக வகுத்துத் தந்துள்ளனர். இவ்வாறு அமைந்த 70 அதிகாரங்களும் தத்தம் தலைப்பினை விளக்குவனவாகவே அமைந்துகிடக்கக் காண்கிறோம். பொருட்பால் என்ற தலைப்புக்குப் பொருத்தமாகக் கூழியல் என வழங்கும் அதிகாரம் ஒன்றுதானே 'பொருள்செயல் வகை'யைக் குறிக்கின்றது; ஏனைய 69 அதிகாரங்களும் எவ்வாறு பொருளைச் செய்யும் என்ற ஐயம் தோன்றுவது குறளன்பர்களுக்கு இயற்கையே. அதனைப் பற்றிச் சிறிது சிந்தனை செய்தல் நல்லதே.

ஒவ்வோர் அதிகாரமும் அதனதன் தலைப்புக் கருத்தினையே விளக்குவதாய் அமைந்திருப்பினும், அவ்வதிகாரக் குறட்பாக்களுள் ஒன்றேனும் செல்வப் பொருளின் சிறப்பை, இன்றியமையாமையை, காப்பை, வளர்ச்சியைக் கூறுவதாகக் காணலாகாதா என்ற அவாக்கொள்வது தவறாகுமா? அவ்வாறு எண்ணி ஆய்ந்து பார்த்ததன் விளைவாகக் கீழ்க்கண்ட கருத்துக்கள் தரப்பட்டுள்ளன. இம்முயற்சி குறட்பாக்களுக்கு வலிந்து பொருள் கண்டதாகக் கருதப்படுமாயினும், படிப்போர் சிந்தனைக்கு ஒரு விருந்தாய் அமையலாமே என்ற விருப்பத்தோடு எழுதப்பட்டதாகக் கொள்க.

'பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை' என்பது பாராளும் மன்னர்க்கு முழுவதும் பொருந்தும். 'உள்ளார்க்கு எல்லாம் சொந்தம்; இல்லார்க்கு எதுதான் சொந்தம்?' எனவே அரசியலுக்கு முக்கிய ஆதார உறுப்பாகிய பொருளை, அரசன் இயற்றி, ஈட்டி, காத்து, காத்தவகுத்து நாட்டைப் பரிபாலிக்க வேண்டியது முதற் கடமையாகும். கற்றனைத்தூறும் அறிவுபோல, தொட்டனைத்தூறும் மணற்கேணிபோல மன்னனது முயற்சியின் அளவே பொருள் வளர்ந்து செழிக்கும். எழுமையும் ஏமாப்பாகும் கல்வி

ஒருவர்க்குக் கேடில் விழுப்பொருளாம். கல்லாதவன் கைப்பட்ட திரு (பொருள்) பிறருக்குத் தீங்கு செய்வதோடு தானும் விரைவில் அழியும். நுணங்கிய கேள்வியால் வணங்கிய வாயினர்க்கு எல்லோரும் நண்பராவர்; எனவே, அவர்கள் பொருளால் வறியராவது அரிதாம்.

அறிவுடையார் ஆவதறிவாராகலின் எல்லாப் பொருளும் உடையராதல் மிக எளிதே. செருக்கும், சினமும், சிறுமையும் இல்லாதவரிடம் பொருட் பெருக்கம் ஒரு நாளும் குறையாது. இவறன்மையாம் பற்றுள்ளம் பொருளால் வரும் பயனை அழிக்கும். தக்காரினத் தனைத் தானொழுக வல்லானையும், இடிப்பாரையும் தன்பக்கல் கொண்டானுக்குப் பகையு மில்லை, பொருட் கேடுமில்லை. சிற்றினம் தன்னைச் சூழ்ந்து பொருட் கேட்டிற்கே வழி செய்யுமாதலின் அதனை அஞ்சுவது பெருமையென்பார் வள்ளுவர். பொருள் வளர்ச்சிக்கு முதலீடு போன்ற செய்தக்க செய்தல் அவசியம்; செய்தக்க வல்ல செய்யின். பொருளிழப்பே நேரும். பொருளைப் போற்றி வளர்க்கும் நெறி நால்வகை வலியறிதலோடு மட்டுமன்றிக் காலமும் இடமும் கருதிச் செயல்படுவது மாகும்.

''கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த இடத்து''

''தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்
இடங்கண்ட பின்அல் லது''

என்ற இருகுறள்களும் பொருள் செய்வார்க்கு மிகமிகப் பொருந்துபவையே. பொருள் செய்யும் வழியில் யாரையும் ஆராயாது தெளிதலாகாது; ஆனல் தனியொருவனை நின்று பெரும் பொருளைத் தேடலும் நிருவகித்தலும் இயலாது. எனவே ஒருவனைத் தேடித் தெளிந்தபின் அவனையே கூட்டாகக் கொள்ள வேண்டும். சிறப்பாக வெற்றியுடன் காரியம் முடிக்கும் துணைவனிடம் பொறுப்பையளித்துப் பயன் கொள்ளத் தவறலாகாது. செல்வத்துப் பயனே ஈதல், எனவே சுற்றத்தால் சுற்றப்பட ஒழுகலே செல்வர்க்கு அழகாம். பொச்சாப்பின்றிப் போற்றிச் செய்யும் செல்வர்க்கு அரிய என்று ஆகாததில்லையாம். செம்மை வழி நிற்கும் செல்வரது கொடை நோக்கியேதான் அந்தணர் நூலும் அறமும் தழைத்தோங்கும்.

செல்வனது கொடுங்கோற் செய்கையாலே சாதாரண மக்கள் அல்லற்பட்டு அவதியுறும்நிலை ஏற்படவும் செய்யும். கடிதோச்சி மெல்ல எறிவது போல, செல்வன் கடுராக இருந்தாலும் கருணையுள்ளத்தை இழத்தலாகாது. ஏனெனில் கண்ணோட்டமே உலகியல் ஆதலின் கருமம் சிதையாமல் கண்ணோட்டம் உடையவனைச் செல்வனும் இருத்தல்வேண்டும். பொருள் செய்யும் வணிகனும் ஒற்றினல் வருங்கால நிலையறிதல் அவசியம். வெள்ளத்தனைய மலர்நீட்டம்போல பொருளாளனது ஊக்கத்தளவுதான் செல்வம் பெருகிவரும். அவ்வாறின்றி மடியுடையான் மாண்பயன் எய்தல் மிக அரிதாம். ஆக்கமும் கேடும் இல்லல்லவாயினும், தாழாது ஞற்றும் தாளாளன் ஊழையும் உப்பக்கம் காண முடியும். ஊழால் இடுக்கண் பல வருங் காலத்தும் அதற்கு அழியாது அதனை ஏற்று வெற்றிகாணவேண்டும்.

அமைச்சனைப் போலப் பொருள் செய்பவனும் தெரிதலும் தேர்ந்து ஒருதலையாய்ச் செயலாற்றலும் வேண்டும். ஆக்கமும் கேடும் அதனல் வருதலால் பொருள் செய்பவனும் சொல்லின்கண் சோர்வுபடாமல் நாணயமாய் இருத்தல் வேண்டும். பொருள் தேடும் வழி தூய்மையாய் இருத்தலோடு, முயற்சி திட்பமாயும் துணைப்பயன் தருவதாயும் இருத்தல் வேண்டும். ஒரு பெருந் தொழில் செய்யுங்கால், அதனையொட்டிய பல சிறு கிளைத் தொழில்களும் ஏற்பட வாய்ப்புக் காணவேண்டும். தூய்மை, துணைமை துணிவுடைமை இம் மூன்றும் பொருள் செய்வானுக்கும் உரிய பண்புகளாம். அரசியலாரால் கொளப்பட்டோம்

என்று எண்ணிக் கொள்ளாத செய்யாமல் வணிகன் அவரோடு அணுகாது அகலாது தீக்காய்வார் போலிருக்கவேண்டும். அதுவே வணிக வளர்ச்சிக்கு ஏற்ற வழியாகும். குறிப்பில் குறிப்புணரும் பான்மை எய்தப் பெறுவனேல், அதுவே வணிகர்க்குப் பொருள் வளர்க்கும் ஒரு பேரும். மக்களது அவையறிந்து பேசும் உத்தியும் எவ்வவைக் கும் அஞ்சாது நிற்கும் துணிவும் பொருளை அழியாது காக்கும் அரணும்.

செல்வரும் தக்காரும் நிறைந்த நாட்டில் குன்றா விளைபொருள் என்றும் வளமும் வசியும் தரும்; பசியும் பிணியும் நீங்கும். இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும் வல்லரணும் நாட்டின் செல்வ வளத்திற்கு ஆதார அடிப்படையாம். வல்லரண் பகை வரால் கொளற்கரியதானமையின் நாட்டின் செல்வம் பிறரால் கொள்ளப்படாது; அரண் காவலில் உள்ளிடத்தில் வேண்டும் செல்வப் பொருளையெல்லாம் உற்பத்தி செய்து கொள்ளலாம்.

நாட்டு வேந்தனுக்குப் பொருள் வரு வாய் இறைபொருளும், சுங்கப்பொருளும், கப்பப் பொருளுமாம்.

படையின் மாட்சியாலும், செருக்கா லும், நாட்டின் பொருள் வளத்துக்குக் காவ லும் பெருக்கும் ஏற்படும். உலைவிடத்தும் ஊறஞ்சாப் படையால் நாட்டுச் செல்வம் பாதுகாக்கப்படும்.

இடுக்கண் களைய நாம் வேண்டு முன்னரே வலிய முன்வந்து உதவும் நண்பன் ஒல்லும் போதெல்லாம் நமக்குதவி செய்து நம்மை மிடியினின்றும் காப்பான். நம்மோடு ஒப்பிலார் நட்பை ஒரு பொருளீந்தும் ஒருவு தலும், மாசற்றார் கேண்மையை மருவுதலும் செல்வர்க்குச் சிறப்பாக வேண்டப்படுவ தாகும். ஒருவேளை அழிவந்த செய்யினும் அன்பின் வழிவந்தோரை நம்மினின்றும் நீக்கி விடலாகாது. அத்தகைய அழிவுச் செயல் ஒரோவழி அவர்களது பேதமையால் ஏற் படலாம்; அது தற்காலிகமானதே. ஆனால் நகைவகையராகிய நீநட்பினர் நம்பத்தக்கவ ரல்லர்; நம் பொருளை அபகரித்தலிலேயே நோக்கமுடையவராயிருப்பர். கூடாநட் பினரும் நம்மோடு மனத்தினமையாது சொல்லால் நம்மை மயக்கி வஞ்சித்துப் பொருள் கவர்வர். அவரை முகநட்டு அக நட்பை ஒரீஇ விடல் வேண்டும்.

நம் பொருளழிவுக்கு நமது அறியாமை யும் சிற்றறிவுமேயன்றி, வெகுளியும் மயக்க மும் கூடப் பெரும் பங்கு கொள்ளும். நம் ஒழுக்கத்துக்குப் பொருந்தாத செயலில் ஈடு படுதல் மானமழிவுக்கும் பொருள் இழப் புக்கும் காரணமாம். புல்லறிவால் நாம் பிறர்க்கு ஒன்று ஈதல் நமது கொடைத்தன் மையைக் குறிக்காமல் பெறுவோனது நல்லூழையே அது குறிக்கும். இகலெதிர் சாய்ந்தொழுகின் வீணே பொருளழிவில்லை. வலியார்க்கு மாறேற்று நின்றால் நம் உயிரும் உடைமையும் இழத்தற்கு ஏதுவாகும். அடுத்திருந்து மாணுசெய்வானைப் பகைத்து விலக்கியே விடவேண்டும்; அவனது நட்புக் கூடாது, அதனைச் சிரித்துப் பொழுதுபோக் கும் விளையாட்டாகக்கூட விரும்பலாகாது. உட்பகையுற்றகுடி அரம் பொருத பொன் போல உரம் பொருது தேயுமெனில், அக்குடி யின் பொருளழிவைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? பெரியாரைப் பிழைத் தொழுகுவார்க்கு உய்தியில்லையாம், மனை யாளையஞ்சும் மறுமையிலாளனுக்கு வினை யாண்மை இல்லாததால் பொருள் வருவாயும் குன்றும்; நல்லார்க்கு ஈயும் புகழுமில்லை. அன்பின் விழையாராகிய வரைவின் மகளிர் நம்மிடத்துப் பொருளையே விரும்புவர்; அவ ருடைய இனிய சொல் நம்மை இலம் பாட்டுக்கே இழுத்துச் செல்லும். கள்ளும் கவறுடலும் நம்மை விரைவில் பொருளில்லா தவராக்கி விடும்.

"பொருள்கெடுத்துப் பொய்மேற்கொளீஇ அருள்கெடுத்து
அல்லல் உழப்பிக்கும் சூது"

கழிபேரிரையான்கண் நிற்பது நோய் மாத்திர மன்று; குந்தித் தின்னக் தின்னக் குன்றளவு செல்வமும் மாளும்.

வழங்குவது உள்வீழ்ந்தக் கண்ணும் பழங் குடியர் தம் கொடைப் பண்பில் குன்றுதல் இலர். சீரொடு பேராண்மை வேண்டுபவர் சீரினும் பொருட் செலவு செய்து சீரல்ல செய்யார். ஒருமை மகளிரேபோலப் பெரு மையும் தன்நிலையைக் காத்துக்கொண்டு கொடை முதலிய புகழ்ச் செயலில் ஈடுபட் டால்தான் உண்டு. சால்பு என்னும் திண்மை உண்டாகப் பெறின் ஒருவருக்குப் பொருளில்லாத குறையாகிய வறுமை இழி வானதொரு நிலையன்று. பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம், கலம் தீமையால் பால் கெட்டாற்போலப் பிறருக்கு நலன் செய்யாது தானும் பயனற்றுப் போகும். ஈத்தும் துய்த்தும் பயன்படுத்தாத செல்வம் கோடி குவித்தும் யாது பயன்? அவ் ஈயார் தேட்டைத் தீயாரே கொள்வர். உலகம் நாணுவதைத் தானும் நாணாது கைவிடாளு கில் அவன் எத்தகைய அறம் செய்தாலும் அவ்வறமே நாணி அவனைக் கைவிடும்.

தன்குடி உயர்வதற்கான அறச் செயல் செய்வார்க்குத் தெய்வம் துணைநின்று எச் செயலையும் வெற்றிபெறச் செய்யும், இவ்வறச் செயலில் வாழ்வுக்கு இன்றியமையாத பொருளும் இடம் பெறும். உழவு உல குக்கு உணவளித்து வாழச் செய்யும் முக்கிய சாதனம். உழவினுர் கைம்மடங்கின் வாழ்வே இல்லை. பொருளில்லா நல்குரவு மறுமையும் இம்மையும் இலதாகச் செய்யும்; பல்குரைத் துன்பங்களை விளைவிக்கும். பொருள்வேண்டி இரந்து நிற்றலும் ஒருவகையில் வேண்டற் பாலதே. இரத்தலும் ஈதலே போலும், எவ்வாறெனில் கரவாது ஈவார் மாட்டு அது அறப்பயனை விளைத்தலால். ஆயினும் இரந்து நிற்றல் ஒரு கொடுமையே! இரந்து வாழ்வதே தொழிலாகக் கொண்டவர் தம் முயற்சியை அழித்து மடியுள் ஆழ்வர். நெஞ்சத்து அவலமிலாக் கயவர் தம்மை விற்றாயினும் பொருள் கொண்டுவாழ ஒருப் படும் நாணமிலாதார்.

இவ்வாறாக 'இறைமாட்சி' முதல் 'கயமை' ஈறாக வரும் 70 அதிகாரங்களும் பொருள்மாட்சி, பொருள் சிறப்பு, பொருள் செயல்வகை, வாழ்க்கைக்குப் பொருள் இன்றியமையாமை, பொருளைப் போற்றிக் காக்கும் முறை, வழிவகைகள், பொருளும் மக்கட் சமுதாயமும் என்று இன்னோரன்ன பல்வேறு கூறுகளை நன்கு விளக்கும் பான் மையிலும் அமைந்து கிடக்கின்றன என் பதை ஒருவாறு ஊகித்துணர முடிகின்றது.



# குறளில் மகளிர்

திருவாட்டி, அ. காமாட்சி குமாரசாமி, எம். ஏ.,
முதல்வர், க. க. அரசினர் மகளிர் கல்லூரி, நாமக்கல்

நாடு, மொழி, ஆறு எனும் முக்கியப் பொருள்கள் மூன்றினையும், கல்வி, செல்வம், ஆற்றல் ஆகிய உயர்பண்புகள் மூன்றினையும் இம்மண்ணுலகில் பெண்ணெனவே உரு வகித்துப் பெருமை கொண்டது நம் நாடு. விண்ணுலகில் ஒளிவீசும் உடுக்களையும் பெண் களின் பெயரால் அழைக்கும். தமிழகத்தின் தங்கக் காலமாகிய சங்க காலத்தில் ஆணுக்குப் பெண் அறிவாற்றலிலும் நிகரான வள் என்பதை விளக்குமாற்ருன் முப்பதுக் கும் மேற்பட்ட பெண்பாற் புலவர்கள் முன்னணியில் வீற்றிருந்தனர். அஞ்சியின் அவைக்களப் புலவராய் விளங்கியதோடு நாடு விட்டு நாடு தூது சென்ற ஔவையாரின் அறிவுத்திறம் அளவிடற்கரியது. இத்தகைய காலத்தில் வாழ்ந்து இன்று உலகப்பேரொளி யாய்த் திகழும் திருவள்ளுவரும் பெண்மை யைப் போற்றிய பெருந்தகையாவர்.

பெண்மையைப் பல நிலைகளிலும் பொய்யாமொழிப் புலவர் காட்டுவர். தமிழ்த்தென்றல் திரு. வி. க. அவர்கள் பெரும்பாலான கையெழுத்துச் சுவடிகளில் (*Autographs*) "பெண்மை, தாய்மை, இறைமை—நம் நாட்டுச் செல்வம்" என் றெழுதுவர். ஞானத் தென்றலான அருட்டிரு ஞானியாரடிகள் "மாத்திரை குறையக் குறைய மாக்கள்—மக்கள்—மகள் என நிலையில் உயர்ந்து இறையருளை எளிதிற் பெறுவர்" என்று பக்திஇலக்கிய அகத்துறை நூல்களுக்கு விளக்கம் தருவர். பெண்மை தாய்மை, இறைமை எனும் முக்கூறுகளுள் பெண்மையினை—கன்னி, மனைவி என்று சற்று விரித்து, காதற்கன்னியாய், மாண்புறு மனைவியாய், அன்புடைத்தாயாக—அருளுறு தெய்வமாகத் திருவள்ளுவர் காட்டுவர்.

## காதற் கன்னி :

திருக்குறளில் பெட்டாங்கு எனும் சொல் விரும்பியாங்கு எனப்பொருள்பெறும். (பெட்டல்—மிகவிரும்பல்; அகராதி) எனவே பெண் எனும் சொல் விரும்பப்படுபவள் எனப் பொருள் தரும். ஆண்கள் கண்ட துமே காதல்கொள்ளும் கன்னியைத் திரு வள்ளுவர் மென்மையும் அழகும் கொண்ட வளாய்க் காட்டுவர். அணங்கு, ஆய்மயில், போன்றவளாய், மடநோக்கு நாணுடைய வளாய்ச் சித்திரிக்கின்ருர். மிகமென்மை யான அனிச்சத்தைவிட மிகமிக மென்மை யுடையவள் என்பர். அன்னத்தூவியும் அவளது மெல்லிய காலுக்கு நெருஞ்சி முள்ளாம் !

நன்னீரை வாழி அனிச்சமே நின்னினும்
மென்னீரள் யாம்வீழ் பவள்

(குறள்–1111)

அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்

(1120)

இத்தகைய மென்மைக்கு வன்மையின் காவல் இன்றியமையாததல்லவா ? ஆகவே

அழகுடைய ஒவ்வொரு கன்னிப் பெண்ணும் திருமணம் செய்து கொள்ளல் வேண்டும் எனும் கருத்தை,

அற்றார்க் கொன் றாற்றாதான் செல்வம்
மிகநலம்
பெற்றாள் தமியள்மூத் தற்று (1007)

என்ற உவமையால் விளக்குவர்.

காதலன் காதலி, கணவன் மனைவி இவரிடையே இருக்கும் உறவினையும் வள்ளுவர் உயரியதோர் உவமையால் விளக்குவர்.

உடம்பொடு உயிரிடை என்ன மற்றன்ன
மடந்தையொடு எம்மிடை நட்பு
(1122)

உடம்பின்றி உயிர்க்கும், உயிரின்றி உடம்பிற்கும் சிறப்பில்லை. உடம்பு போன்ற மடந்தைக்கு உயிர் போன்றவன் காதலன், கணவன் கண் அவன் அல்லவா? எனவே உயிர்நிலையான பாவை போன்ற கணவனை மைத்திரையால் மறைக்கக் கூடாதே என்றஞ்சிக் கண்ணுக்கும் மைதீட்ட மாட்டாளாம் காதலி!

கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணும்
எழுதேம் கரப்பாக் கறிந்து
(1127)

காதலியின் மற்றோர் உயிர் நிலையான நெஞ்சிலேயேதான் நிறைத்துள்ள காதலனுக்குச் சுடுமோ என்றஞ்சிச் சூடாக எதனையும் உண்ணமாட்டாளாம் காதலி!

நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக் கறிந்து
(1128)

இத்துணைக்காமம் உடையவளாயினும்தலைவி, தலைவனைப்போல் மடலேறவும் மாட்டாள் மடலேறப் பெண்மை இடந்தராது—என்ற நுண்மையைத்தான் திருவள்ளுவர் எவ்வளவு அழகாகக் கூறுகின்றார்!

கடலன்ன காம முழந்தும் மடலேறாப்
பெண்ணின் பெருந்தக்க தில்
(1137)

**மாண்புறு மனைவி :**

போர் முனைக்குரிய கணவனைப் போலாது மனைக்குரியவளாக்கித் தான் மனைவியின் மாண்பினை விளக்குகின்றார். சங்க காலத்துப் பெண்பாற் புலவர்களை—நாடு விட்டு நாடு தூது சென்ற ஔவை போன்றவரையும்—அறியாதவரல்லர் திருவள்ளுவர். எனினும் அவர்களைத் தம் விதிக்கு விலக்காகக்கொண்டு, மிகமிகப் பெரும்பாலான மகளிர்க்குரிய மனைமாட்சியினையே வாழ்க்கைத்துணைநலம் என்ற அதிகாரத்தில் விளக்கியுள்ளார். "கேட்டதாய்"—அறிவறிந்த மக்கள் முதலிய சொற்றொடர்க்குத் திரித்துப் பொருள் கண்டு—"மக்கட் பேறு" என்ற அதிகாரத் தலைப்பினையே "புதல்வரைப் பெறுதல்" என்று மாற்றிய பெருமான் நல்லவேளையாக 'வாழ்க்கைத் துணைநலம்" என்ற தலைப்பினை மாற்றாது விட்டதற்குப் பெண்ணுலகு அவர்க்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது. இங்ஙனமாக இடைக் காலத்தே தமிழகத்தில்தோன்றிய ஆணுக்குப் பெண் அறிவாலும் ஆற்றலாலும் தாழ்ந்தவள்—கணவனுக்கு மனைவி அடிமை—என்ற கருத்துக்களுக்கு முற்றிலும் மாறாக, மனைவியைக் கணவனது "வாழ்க்கைத் துணை" என்றழைத்ததே பெரும் புரட்சியாகும்.

"துணையுற அறுத்துத் தூங்க நாற்றி" எனும் திருமுருகாற்றுப்படை அடியால் 'துணை' என்ற சொல் சரிநிகர் சமானம் என்ற பொருள் தரும்.

அத்தகைய வாழ்க்கைத் துணைவிக்கு வள்ளுவர்தரும் விளக்கம் (*Definiton*) மிக மிகப் போற்றற்குரியதாகும்.

மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற்
கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை (51)

காலத்திற்கேற்ப எண்ணற்ற உரைதரும் வற்றுவளம் படைத்ததவை வள்ளுவர் வாய்ச் சொற்கள்; எனவே, மனைத்தக்க மாண்பு ''என்ற சொற்றொடர்க்கு, இன்னும் பொருந்தும் பரிமேலழகர் உரையுடன் தக்க முறையில் பிள்ளைகளை வளர்த்தல் போன்ற காலத்திற்கேற்ற புதுப் பொருள்களையும் சேர்த்துக் கொள்ளலாம்—

இத்தகைய மனைமாட்சி மட்டும் ஒருவருக்குக் கிடைத்துவிட்டால் அவ்வீட்டில் குறையேது? என உரைப்பர்.

இல்லதென் இல்லவள் மாண்பானல்
உள்ளதென்
இல்லவள் மாணுக் கடை (53)

'' கற்பென்னும் திண்மை''யே பெண்ணிற்குப் பெருமை தருவது; சிறைகாக்கும் காப்பைவிட' பெண்கள், தாமே தம் நிறைகாக்கும் காப்பே தலையாயது, என்று கூறி, புகழுக்குரிய மனைவியைப் படைத்தோரே பொதுமக்கள் முன் ஏறு போற் பீடு நடை போடமுடியும் என முடிப்பர்.

மகளிர் வேதங்களைத் தொடவுங் கூடாது என்பது போன்ற கருத்துக்களுக்கு முற்றிலும் மாருக விண்ணுல கெய்தலாகிய வீடுபேறு கணவனுக்குண்டு என்றால் அவ்வுயர் நிலையைப் பெண்டிரும் பெறுவர் என்பது வள்ளுவரின் தெள்ளிய கருத்து.

பெற்ருன் பெறின்பெறுவர் பெண்டிர்
பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழும் உலகு
(58)

இங்ஙனமாக மாண்புறு மனைவியும் கணவனுமாக ''கண்ணை இமையிரண்டும் காப்பதுபோல்'' இல்லறத்தைக் காத்தனர் என்றாலும் இடையிடையே பூசல்கள் வருவதும் இயல்பே; வரவும் வேண்டும்!—என்பது சங்ககாலத்து வள்ளுவரின் கருத்தாகும்.

ஊடுதல் காமத்திற் இன்பம் அதற்
கின்பம்
கூடி முயங்கப் பெறின்
(1330)

ஆனல் அவ்வூடலும் உணவில் உப்பு அளவாய் அமைவதுபோல் அளவோடு நிற்க வேண்டும் என்று, வீட்டுப் பெண்களுக்கு விளங்கக் கூடிய உவமையொன்றால் விளக்குவர்.

'' உப்பமைந்தற்றால் புலவி அதுசிறிது
மிக்கற்றால் நீள விடல் ''
(1302)

## அன்புடைத் தாய்மை :

வீட்டிற்கும் நாட்டிற்கும் நற்பெயர் நாட்டவல்ல நன்மக்களைப் பெறுவதே இல்வாழ்வின் தலையாய கடமையாகும் என்பது அவர்தம் கருத்தாகும்.

மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு
(60)

எனவே தாய்மைக்கும் தனிச் சிறப்பளித்தார் திருவள்ளுவர்.

மகனைப் பெறுங்கால் மகிழும் தாய், அவன் சான்றோன் எனப் பிறர்வாயால் பாராட்டக் கேட்கும்போது மேலும் பெரிதாய் மகிழ்வாளாம்.

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும்
தன்மகனைச்
சான்ருேன் எனக்கேட்ட தாய் (68)

ஒருவன் தாய்க்குச் செய்யும் தலையாய கடமை அவனைப்பெற்ற வயிறு குளிரும்படியாகப் பசியறியா வண்ணம் உணவளித்து மகிழ்வித்தலாகும். இத்தலையாய கடமை தடைப்படுவதாயினும் ஒருவன் இழிவான செயலில் இறங்கவே கூடாது என்பர்.

ஈன்றாள் பசிகாண்பா னாயினும் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை

(656)

ஒருவன் தன்னை யார் பழித்தாலும் பொறுத்துக்கொள்வான். ஆனால் அன்னை தன்னைப் பழித்துரைப்பதை அறவே வெறுப்பான். இவ்வுண்மையை உணர்ந்து, தாயைக் காட்டியே தனயனைத் திருத்த முற்படுகின்றார். எல்லாம் பொறுக்கும் எந்தத் தாயும் தன்மகனது குடிப் பழக்கத்தைப் பொறுக்கவே மாட்டாள் அவள் நிலையே அங்ஙனமாயின் மற்றவர் எள்ளி நகையாடாரோ என்பர்.

ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால்
என்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி (923)

அன்பின் மிகுதியால் நாம் அருட்டொண்டு பல செய்ய ஆர்வம் கொள்ளலாம். ஆனால் எத்தொண்டாயினும் பொருள் தேவைப்படுகின்றதே! அன்பு என்ற தாய் அருள் என்ற குழந்தையைப் பெற்றெடுத்தாலும் அக்குழவி பொருட் செல்வம் என்ற செவிலித்தாயின் கையில்தான் வளரமுடியுமாம்! இன்றைய இந்நிலையை அன்றே அணிபடக் கூறினார். "பொருள் செயல்வகை" எனும் அதிகாரத்தில் இவ்விரு தாய்மாரையும் பொருத்திவைத்துள்ளார் பொய்யாமொழிப் புலவர்.

அருளென்னும் அன்பீன் குழவி
பொருளென்னும்
செல்வச் செவிலியால் உண்டு. (775)

அடைமொழி கொடுப்பதில் வள்ளுவர்க்கு நிகர் வள்ளுவரேதான்! மானம் எனும் உயர் பண்பிற்கு ஓரதிகாரமே ஒதுக்கிய வள்ளுவர் "மானா மானம்" (*False dignity!*) என்றுரைப்பர் மற்றோரிடத்தில். அதுபோன்று "நல்குரவு" எனும் வறுமையை இருவகைப்படுத்துவர். தீயபழக்கங்களால் யார் சொல்லும் கேளாது செல்வத்தை அழிப்பதால் ஏற்படும் வறுமையை "அறஞ்சாரா நல்குரவு" என்பர். இதனால் "அறஞ்சார் நல்குரவு" உண்டென்பது புலப்படும்.

ஒப்புரவி னால்வரும் கேடெனின்
அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து
(220)

என்ற குறள் குறிக்கும்—அறம் செய்து செய்தே செல்வம் இல்லாமற் போகும் நல்குரவு—அறஞ்சார் நலகுரவாகும். அத்தகைய அறம்சார் நல்குரவு அன்னைக்கும் பெருமை தரும். ஆனால் அறஞ்சாரா நல்குரவு அடைந்த மகனைக்காணவே விரும்பாமல் பெற்றதாயும் அவனை யாரோபோலப் புறக்கணிப்பாளாம்.

அறம்சாரா நல்குரவு ஈன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும்.

(1047)

இக்குறட்பாக்களில், மாண்புறு மனைவியினும் உயர்ந்த தாயினை வைத்துப் போற்றுவதைக் காணலாம்.

## அருளுறு இறைமை :

சிறந்த பொருள்களைப் பெண் தெய்வங்களாகப் போற்றும் மரபினைத் திருவள்ளுவர் குறளில் காணலாம். செல்வத் திருமகளைப் பின் வரும் குறளில் பார்க்கலாம்.

அகனமர்ந்து செய்யாள் உறையும்
முகனமர்ந்து
நல்விருந்து ஓம்புவான் இல்
(84)

திருமகளின் அக்காவும் ஒரு பெண்ணே! அவளும் ஒரு சிறுதெய்வம்! (சேட்டை) ஆலயங்களில் அவளுக்கும் ஓரிடமுண்டு.

செல்வத்தின் எதிர்மறையை எடுத்துக்காட்டி அனைவர்க்கும் நினைவுறுத்த அவளும் ஒரு குறளில் இடம் பெறுவாள்

அவ்வித்து அழுக்கா றுடையானைச்
செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்
(167)
(தவ்வை—தமக்கை)

ஆண் பெண் சரிநிகர் சமானத்தை அன்றே தம் வடிவால் காட்டிய அம்மையப்பரின் இதயமுள்ள இடப் பகுதியே அம்பிகைக்கு உரியது. எனவே ஆண்களைவிடப் பெண்களே அதிக இரக்கங் காட்ட வல்லவர் எனும் அரிய கருத்தை உணர்த்த, கண்ணோட்டத்தை ஒரு காரிகை-பெருங்காரிகை-கழிபெருங்காரிகையாக உருவகிப்பர்.

கண்ணோட்டம் என்னும் கழிபெருங்
காரிகை
உண்மையான் உண்டிவ் வுலகு
(571)

நாணுடைமை பெண்களுக்கேயன்றி, பழிபாவங்கட்கு நாணுவதாம் நாண் ஆண்களுக்கும் உரியது. அப்பொதுப் பண்பினையும் 'நாணென்னும் நல்லாள்' எனப் பெண்ணுக்குவர்.

நாணென்னும் நல்லாள்
புறங்கொடுக்கும் கள்ளென்னும்
பேணுப் பெருங்குற்றத் தார்க்கு
(924)

நிலமகளைப் பூமாதேவி எனத் தெய்வமாக்குவது நம் நாட்டு மரபு. அதுவும் வள்ளுவர்க்கு உடன்பாடே

இலம் என்று அசைஇ இருப்பாரைக்
காணின்
நிலமென்னும் நல்லாள் நகும்
(1040)

தமது அன்றாட அரசியற் கடமைகளை மறக்கும் அளவிற்குப் பெண்வழிச் சேறல், அரசன் அமைச்சர், அரசு அலுவலர் ஆகியோரின் அரசியல் வாழ்வினையே பாழாக்கி விடுவதால், வீட்டு நிகழ்ச்சி நாட்டின் வீழ்ச்சிக்கு வழிவகுக்கக் கூடாது என்பதை எடுத்துக்காட்டவே திருவள்ளுவரால் பொருட்பாலில் வைத்துக் காட்டப்பெறும் பெண்வழிச்சேறல், வரைவில் மகளிர் என்ற ஈரதிகாரங்களைத்தவிரத் திருக்குறள் முழுதும், சிறப்பாக அறத்துப்பால், காமத்துப் பாலினில் பெண்ணின் பெருமை பொலிவதைக் காணலாம்.

இங்ஙனமாக வள்ளுவர் யாத்த திருக்குறளில் காதற்கன்னியாய், மாண்புறு மனைவியாய், அன்புடைத்தாயாக, அருளுறுதெய்வமாக—மகளிர் எனும் நல்லார் நால்வகையில் நற்காட்சி யளிப்பதைக் காணலாம்.



# அறிவியல் பார்வையில் திராவிட மொழிகள்

டாக்டர், கி. கருணாகரன், எம். ஏ., பி.எச்டி., டிப்ளோமா (கன்னடம்)
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

அறிஞர் கால்டுவெல் அவர்களுடைய திராவிட மொழிகள் பற்றிய ஆராய்ச்சிக்குப் பிறகு, பல மொழியியல் அறிஞர்களும் மொழி நூல் வல்லுநர்களும் திராவிட மொழிகளைப் பற்றிய ஆராய்ச்சியில் ஆழ்ந்து ஈடுபட்டுப் புதிய மொழிகள் பலவற்றைக் கண்டுபிடித்தும், அம்மொழிகள் பலவற்றிற்கு இலக்கணங்கள் ஆக்கியும் தந்துள்ளனர்—தந்தும் வருகின்றனர். இப்போது திராவிட மொழிகளை மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கிறார்கள். அவையாவன: 1 தென் திராவிட மொழிகள் *(South Dravidian Languages)*, 2. மத்திய திராவிட மொழிகள் *(Central Dravidian Languages)*, 3. வட திராவிட மொழிகள் *(North Dravidian Languages)* என்பனவாகும்.

## 1. தென் திராவிட மொழிகள் [S. D. R.]

1, தமிழ் 2. மலையாளம் 3. கன்னடம் 4. துளு 5. தோடா 6. கோத்தா 7. படகா 8. குடகு போன்றவைகளாகும். (இவை தவிர இருளமொழி, குரும்பா மொழி, கசபா மொழி, காடர் மொழி, பனியா மொழி ஆகியவை ஆராய்ச்சியில் உள்ளன)

## 2. மத்திய திராவிட மொழிகள் [C. D. R.]

1. தெலுங்கு 2, கோண்டி 3. பார்சி 4. குயி 5. குவி 6. கடபா 7. கொண்டா 8. கோலாமி 9. நாய்கி 10. பெங்கோ 11. மண்டா 12. நாய்கிடி.

## 3. வட திராவிட மொழிகள்

1. குருக் 2. மால்டோ 3. பிராகுயி

## புள்ளியியல் அடிப்படையில் : திராவிட மொழிகள்

இக்கட்டுரையின் முக்கிய நோக்கங்களில் ஒன்று. **தமிழ், மலையாளம், கன்னடம், துளு, தெலுங்கு** ஆகிய ஐந்து திராவிட மொழிகள் திராவிடத் தாய் மொழி அல்லது திராவிட மூலமொழி *(Proto Dravidian)* யிலிருந்து எத்தனை இனச்சொற்களை *(Cognaies)* திரும்பப் பெற்றிருக்கின்றன என்பதையும், இவ்வாறு திரும்பப் பெறப்பட்டுள்ள இனச் சொற்கள் தமிழில் காணப்படும் இனச் சொற்களை அடிப்படையாகக் கொண்டு நோக்குங்கால் அவற்றின் **நிலைப்பு விகித சதவிகிதம்** *(Percentage of retention raie)* எவ்வளவு என்பதையும் அளவிட்டு அறிதலேயாகும்.

மேலே சொல்லப்பட்டுள்ள ஒவ்வொரு மொழியிலும் திரும்பப் பெறப்பட்டுள்ள இனச் சொற்களின் நிலைப்பு விகித சதவிகிதத்தை அளவிடப் புள்ளியியலின் *(Statistics)* துணையை நாடவேண்டியுள்ளது. இவ்வாறு இனச் சொற்களைப் புள்ளியியலின் துணையோடு படிப்பதால் இவ்வகைப் படிப்புக்குச்

சொற்கோவைப் புள்ளியியல் *(Lexico Statistics)* என்று பெயர். ஆகவே, இங்குச் சொற்கோவைப் புள்ளியியல் கூறும் கொள்கைகள்படியும் அது கையாளும் வழிமுறைகளின் *(Steps & Proceaure)* வாயிலாகவுமே இவ்வைந்து திராவிட மொழிகளில் காணப்படும் இனச் சொற்களின் நிலைப்பு விகித சதவிகிதம் கணக்கிடப்பட்டுள்ளது.

சொற்கோவைப் புள்ளியியல் மூன்று முக்கியமான அடிப்படை அமைப்புக்களைத் *(Basic Steps)* தன்னுள் கொண்டுள்ளது எனலாம். அவையாவன:

1. இனச் சொற்களின் நிலைப்பு விகிதம்
2. கால அளவு *(Time Depth)*
3. அடிப்படைச் சொல்லட்டவணை *(Basic Vocabilary List)* மூலம் கிடைக்கப் பெற்ற இனச் சொற்களின் எண்ணிக்கை அளவு.

### எடுத்துக்காட்டு

| வினை | பெயர் | உரி | இடை |
|---|---|---|---|
| வா | உடை | நல்ல | மாத்திரம் |
| போ | உணவு | பெரிய | பொழுது |
| உண் | உறைவிடம் | சிறிய | உடனே |
| உறங்கு | ஆண் | இளைய | வரை |
| எடு | பெண் | மூத்த | அப்படி |
| நில் | மக்கள் | | |

இச்சொற்கோவைப் புள்ளியியல் முறை தமிழ், மலையாளம், கன்னடம், துளு, தெலுங்கு ஆகிய ஐந்து திராவிட மொழிகளில் இனச் சொற்கள், திராவிடத் தாய்மொழியிலிருந்து எத்தனை சதவிகிதம் நிலைபெற்றுள்ளன என்று அறிந்து கொள்வதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

'மோரிசு சுவதேசு' என்ற அமெரிக்க நாட்டு அறிஞரால் ஆக்கப்பட்ட 'அடிப்படைச் சொல்லட்டவணை' இங்குப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இவ்வட்டவணையில் இருநூறு அடிப்படைச் சொற்கள் உள்ளன. இவ்வட்டவணையில் உள்ள இருநூறு சொற்கள் அனைத்துக்கும் உரித்தான இனச் சொற்களைத் தேர்ந்தெடுக்கவேண்டும். இந்த அடிப்படைச் சொல்லட்டவணையில் உள்ள இருநூறு அடிப்படைச் சொற்களுக்கும் உரித்தான இனச் சொற்களை மேலே குறிப்பிட்ட ஐந்து திராவிட மொழிகளுக்கும் தனித்தனியாகக் கணக்கிடுதல் வேண்டும். இவ்வைந்து திராவிட மொழிகளுக்கும் உரித்தான இனச் சொற்களின் நிலைப்பு விகித சதவிகிதம் 'அடிப்படைச் சொல்லட்டவணையின்' இருநூறு சொற்களை மையமாக வைத்தே அளவிடப்படுகிறது. இவ்வகை அளவீடு அடிப்படைச் சொற்களின் எண்ணிக்கையைக் கொண்டே அளவிடப்படும். இவ்வாறு அளவிடும் பொழுது ஒவ்வொரு திராவிட மொழியிலும் காணப்படுகின்ற இனச் சொற்களின் எண்ணிக்கை அளவு தெரியவருகிறது. ஒவ்வொரு மொழியிலும், அதாவது, மலையாளம், கன்னடம், துளு, தெலுங்கு ஆகிய நான்கு மொழிகளிலும் காணப்படும் இனச் சொற்களின் எண்ணிக்கை அளவைத் தமிழ் மொழியில் உள்ள இனச் சொற்களின் எண்ணிக்கை அளவோடு ஒப்புமை *(Comparison)* செய்து அறிய வேண்டும்.

இருநூறு சொற்கள்கொண்ட 'அடிப்படைச் சொல்லட்டவணையின்' வழியாகக் கணக்கிடும்பொழுது தமிழ் மொழியில் காணப்படும் இனச் சொற்களின் எண்ணிக்கை நூற்று எண்பத்தைந்தாகும். தமிழிலுள்ள இனச் சொற்களின் எண்ணிக்கையே மற்ற நான்கு மொழிகளில் காணப்படும் இனச் சொற்களின் எண்ணிக்கையைவிட அதிகமானதாகும்.

தமிழில் காணப்படும் நூற்று எண்பத்தைந்து இனச் சொற்களின் அடிப்படையில் மற்ற நான்கு திராவிட மொழிகளான மலையாளம், துளு, கன்னடம், தெலுங்கு ஆகியவைகளில் காணப்படும் இனச் சொற்களின் எண்ணிக்கை கணக்கிடப்படுகிறது. கீழே கொடுக்கப்பட்டுள்ள அட்டவணை இதைத் தெளிவாகக் காட்டுவதை உணரலாம்.

| எண். | திராவிட மொழி. | இனச் சொற்களின் எண்ணிக்கை |
|---|---|---|
| 1 | தமிழ் | 185 |
| 2 | மலையாளம் | 151 |
| 3 | கன்னடம் | 116 |
| 4 | துளு | 111 |
| 5 | தெலுங்கு | 89 |

## இனச் சொற்களின் நிலைப்பு விகித சதவிகிதம்

**தமிழ், மலையாளம், கன்னடம், துளு, தெலுங்கு** ஆகிய ஐந்து திராவிட மொழிகளில் காணப்படுகின்ற இனச் சொற்களின் நிலைப்பு விகித சதவிகிதத்தை அந்தந்த மொழிகளில் காணப்படுகின்ற 'இனச் சொற்களின் மொத்த எண்ணிக்கை' *(Total No. of cognates)* யைக் கொண்டே கணக்கிடப் படுகிறது.

| | திராவிடமொழி | நிலைப்பு விகித சத விகிதம் |
|---|---|---|
| 1 | தமிழ் | 92·5% |
| 2 | மலையாளம் | 81·6% |
| 3 | கன்னடம் | 62·7% |
| 4 | துளு | 62% |
| 5 | தெலுங்கு | 42·1% |

மேலே கணக்கிடப்பட்டுள்ள இனச் சொற்களின் நிலைப்பு விகித சதவிகிதங்களின் வாயிலாக இவ்வைந்து திராவிட மொழி களைப் பற்றிய சில கருத்துக்களை அறிய முடிகிறது. இனச் சொற்களின் நிலைப்பு விகித சதவிகிதங்களின்படி இவ்வைந்து திராவிட மொழிகளில்

1) தமிழ் (92·5%) – மலையாளம் (82·6%)

2) கன்னடம் (62·7%) – துளு (62%)

ஆகிய மொழிகள் மொழியியல் அடிப்படையில் மிகவும் நெருக்கமானவை என்பது புலனாகிறது. அதாவது **தமிழ்-மலையாளம், கன்னடம்-துளு** ஆகிய திராவிட மொழிகளுக்கிடையே காணப்படும் மொழியியல் உறவு *(Linguistic Relationship)* மற்ற மொழிகளுடன் ஒப்புமை செய்து பார்க்கும் பொழுது மிகவும் நெருக்கமானதாகும். அதாவது மொழி அமைப்பில்— அம்மொழிக் குடும்பத்திற்குள் மிகவும் நெருக்கமுடைய மொழிகளாகக் காணப்படுதலாகும். மேலும் தெலுங்கு மொழியில் 'இனச் சொற்களின் நிலைப்பு விகித சதவிகிதம்' மற்ற நான்கு மொழிகளின் நிலைப்பு விகித சதவிகி தத்தை' விட மிகவும் குறைந்து காணப்படுகிறது. அஃதாவது தெலுங்கு மொழிக்கும் மற்ற நான்கு மொழிகளுக்குமிடையே காணப்படும் மொழியியல் உறவு அதிக நெருக்கமுடையதாகவில்லை. அதனால்தான் தமிழ் — மலையாளம், கன்னடம் — துளு போன்ற மொழிகள் தென் திராவிட மொழி கள்' பிரிவிலும் தெலுங்கு 'நடு திராவிட மொழிகள்' பிரிவிலும் சேர்க்கப்பட்டுள்ளன.

ஆகவே அறிவியல் அடிப்படையைக் கொண்டு நோக்கும் பொழுதும் இவ்வாறு பிரித்துள்ளமை (தென், நடு, வட–திராவிட மொழிகள் என்று) மிகவும் பொருத்தமான தாகத் தோன்றுவதை நாம் காணமுடிகிறது.

## கணிதக் கொள்கை அடிப்படையில்: திராவிட மொழிகள்

இக்கட்டுரையின் மற்றொரு முக்கிய நோக்கம் இவ்வைந்து திராவிட மொழிகளின் செய்திப் பரிமாற்றத் திறன் ஒப்புமையை *(Relative efficiency)* மதிப்பிடுவதாகும். இவ்வகை மதிப்பீடு அமெரிக்க விஞ்ஞானி கள் 'சாணன், வீவா' என்பவர்கள் தோற்று வித்த 'செய்திப் பரிமாற்றத்தில் கணிதக் கொள்கை *(Mathematical theory of communication)*, என்பதன் அடிப்படையில் மேற்கொள்ளப்பட்ட ஒன்றாகும்.

மொழிகளின் திறன் ஒப்புமையை மதிப் பிட அம்மொழிகளில் உள்ள ஒலியன்கள் *(Phonemes)* அவற்றின் சேர்க்கைகள் *(Phonemic clusters)* சொல்லியன்கள் *(Morphemes)*. சொற்கள் *(Lexical items)*

போன்றவைகள் வெளிப்படுத்தும் செய்தியின் அளவு *(Amount of information)*, செய்தியின் மொத்த அளவு *(Maximum information)* செய்தியில் உள்ள மிகை *(Redundency)* ஆகியவற்றைக் கணக்கிடுதல் வேண்டும். இங்கு ஒரு குறிப்பிட்ட செய்திப் பகுதி எடுத்துக் கொள்ளப்பட்டு, அது மேலே சொல்லப்பட்ட ஐந்து திராவிட மொழிகளிலும் அவ்வம்மொழிகளில் உள்ள ஒலியன்களின் வாயிலாக எழுதப்பட்டுப் பின் மேலே சொல்லப்பட்ட நான்கு வகைக் கணக்கீடுகளும் கண்டுபிடிக்கப்பட்டன. அஃதாவது அவ்வம்மொழிகளில் பயன்படும் எழுத்துக்கள் *(Alphabets)*, மற்றும் ஒலிகள் *(Phones)*, ஒலியன்கள் *(Phonemes)* முறையே உயிர், மெய் போன்றவைகளின் மூலம் வெளியிடப்படும் செய்தி அளவுகளை இதற்காக உள்ள விதிமுறைகளைக்கொண்டு அறியும் முறையாகும். செய்தியில் உள்ள மிகை அளவுகளை ஒப்புமை செய்வதாலேயே மொழிகளின் திறன் ஒப்புமை மதிப்பிடப்படுகிறது.

ஒரு மொழியில் மிகையின் அளவு அதிகமாக இருப்பின் அம்மொழியின் 'செய்திப் பரிமாற்றத் திறன்' குறையும். அதற்கு மாறாக மிகையின் அளவு குறைந்திருப்பின் அம்மொழியின் 'செய்திப் பரிமாற்றத் திறன்' அதிகரிக்கும். (மிகையின் அளவு எப்பொழுதும் ஒன்றுக்குக் குறைந்ததாகவே இருக்கும்). சில மொழிகளில் சில எழுத்துக்கள், ஒலிகள் போன்றவைகளில் பயன்படுத்தாமலே குறிப்பிட்ட பொருளை உணர்த்த முடியும். எ. காட்டு; *queen* என்பதில் *u* என்ற உயிர் உச்சரிக்கப்படுவதே இல்லை. இது ஆங்கில மொழியில் மிகை ஆகும். இதேபோல் உலக மொழிகள் பலவற்றிலும் மொழி அமைப்பில் மிகை உள்ளது. கணித அமைப்பின் மூலம் இம்மிகை அளவையறிந்தால், மேற்கொண்டு அம்மொழிகளில் மிகை அளவைக் குறைக்க வழி காணமுடியும்.

தமிழ், மலையாளம், கன்னடம், துளு, தெலுங்கு ஆகிய ஐந்து மொழிகளின் மிகை அளவுகள் மேலே சொல்லப்பட்ட வழிமுறைகளின் *(Methods)* வாயிலாகக் கணக்கிடப்பட்டுள்ளன.

| | மொழி | மிகை அளவு |
|---|---|---|
| 1 | தமிழ் | 0·214 |
| 2 | கன்னடம் | 0·265 |
| 3 | துளு | 0·269 |
| 4 | தெலுங்கு | 0·290 |
| 5 | மலையாளம் | 0·309 |

இந்த மிகை அளவுகளைக்கொண்டு இவ்வைந்து திராவிட மொழிகளின் 'செய்திப் பரிமாற்றத் திறன்' ஒப்புமையை மதிப்பிட முடியும்; இம்மொழிகளில் மிகக்குறைந்த மிகை அளவு கொண்ட தமிழ் மொழியின் செய்திப் பரிமாற்றத்திறன் அதிகமானதாகும். இம் மதிப்பீட்டின்படி நோக்கினால் மொழிகளின் செய்திப் பரிமாற்றத் திறன் வரிசை கீழ்க்கண்டவாறு அமைகிறது.

1) தமிழ், 2) கன்னடம், 3) துளு, 4) தெலுங்கு; 5) மலையாளம். தெலுங்கு, மலையாளம் ஆகிய மொழிகளின் செய்திப் பரிமாற்றத்திறன் (ஒப்புமை வழியில்) குறைந்து காணப்படுவதற்குக் காரணம் இம்மொழிகளில் பயன்படுத்தப்படும் ஒலிகளின் எண்ணிக்கை அதிகமாக உள்ளதே என்று கருதப்படுகிறது. இம்மொழிகளில் தமிழ்மொழிதான் மிகக் குறைந்த மிகை அளவைக் கொண்டுள்ளது. ஆகவே இவ்வைந்து மொழிகளுள் தமிழ் மொழியே அதிக அளவு செய்திப் பரிமாற்றத் திறன் உடையது எனலாம்.



# ஒல்லையூர்கிழான் மகன் பெருஞ்சாத்தன்

திரு. அடிகளாசிரியர்,
முதல்வர்,
கலைஞர் கருணாநிதி தமிழ்க் கல்லூரி, ஆத்தூர்.

## தோற்றுவாய் :

சங்க இலக்கியங்களுள் ஒன்று புறநானூறு என்னும் தொகை நூல். இவ்விலக்கியத்தால் பல வரலாற்றுச் செய்திகள் நமக்குக் கிடைக்கின்றன. அவற்றுள் ஒன்று **ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன்** என்பவனுடைய வரலாற்றுச் செய்தியாகும். **டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள்** தாம் அச்சிட்ட புறநானூற்றுள் பாடப்பட்டோர் வரலாற்றில் **"வீரர்க்கும் பாணர்க்கும் விறலியர்க்கும் இவன் பேருதவி புரிந்தோன்; வலியவீரன்; இவன் இறந்த பிறகு பாடிய புலவர் குடவாயிற் கீரத்தனார், தொடித்தலை விழுத்தண்டினார்; இவன் பெயர் சாத்தன் எனவும் வழங்கும்"** என்று எழுதியுள்ளார்.

இவன் இறந்த பிறகு குடவாயிற் கீரத்தனார் பாடிய பாட்டு "இளையோர் சூடார்" (242) என்று தொடங்கும் பாட்டாகும். இவன் இறந்த பிறகு தொடித்தலை விழுத்தண்டினார் பாடிய பாட்டு சிதைந்த வடிவில் உள்ள 244-ஆம் பாட்டாயிருக்கலாம். இவையன்றி, 'இனிநினைந்திரக்கமாகின்று' என்று தொடங்கும் தொடித்தலை விழுத்தண்டினார் பாடிய பாட்டு பெருஞ்சாத்தனை அவர் பாடிய பாட்டாகும். இப்பாட்டு ஐயரவர்கள் அச்சிட்ட புறநானூறு முதற் பதிப்பிலும், இரண்டாம் பதிப்பிலும் "அவனை (பெருஞ்சாத்தனை) அவர் (தொடித்தலை விழுத்தண்டினார்) பாடியது" என்ற குறிப்பினோடு அச்சிடப்பட்டுள்ளது. அதன்பின் வந்த மூன்றும் பதிப்பு முதலானவற்றில் மேற்கண்ட குறிப்பு நீக்கப்பட்டு, "தொடித்தலை விழுத்தண்டினார் பாட்டு" என்றே அச்சிடப்பட்டிருக்கிறது. என்ன காரணத்தினாலே இந்த மாற்றம் வந்தது என்பது நமக்குப் புரியவில்லை. ஒருகால் இப்பாட்டில் பெருஞ்சாத்தனுக்குச் செய்தி ஒன்றுமில்லை என்று கருதினார்கள் போலும். இப்பாட்டின் உரையை ஊன்றிப் படித்தால் 'இனி நினைந்து இரக்க மாகின்று' என்னும் இப்பாட்டு பெருஞ்சாத்தன், தொடித்தலை விழுத்தண்டினார் என்னும் இருவருடைய இளமை முதுமைகளைக் கருதிப் பாடப்பட்டுள்ளது என்பது இனிதில் புலனாகின்றது. இதைப் புலப்படுத்த வேண்டியே இக்கட்டுரையை எழுதுகிறேன்.

## கோனாடு :

புறநானூற்றில் அறியப்படும் பல நாடுகளில் கோனாடும் ஒன்றாகும். **"கோனாடான கடலடையாதிலங்கை கொண்ட சோழவளநாட்டு இரண்டு கரைநாட்டு நாடுகள் நகரங்கள் கிராமங்களேயாம்"** (புதுக்கோட்டைச் சீமைக்கல்வெட்டு 601) என்று வரும் கல்வெட்டுத் தொடரால் இக்கோனாடு சோழவள நாட்டுப் பகுதியாயிருந்ததென்பதும், இரண்டு கரை நாட்டு நாடுகளையும் நகரங்களையும் கிராமங்களையும் பெற்றிருந்ததென்பதும் புலனாகின்றன.

புதுக்கோட்டைச் சீமையில் தென் வெள்ளாறு ஓடுகிறது. இந்த ஆற்றைச் சோழநாட்டிற்குத் தென்னெல்லையாகவும் பாண்டியநாட்டிற்கு வடவெல்லையாகவும் கீழ்வரும் பழைய தமிழ்ப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

"கடல் கிழக்குத் தெற்குக் கரைபொரு
வெள்ளாறு
குடதிசையிற் கோட்டைக் கரையாம்—
வடதிசையில்
ஏனாட்டுப் பெண்ணை யிருபத்து
நாற்காதம்
சோணாட்டுக் கெல்லையெனச் சொல்"

"வெள்ளாறதுவடக்காம் மேற்குப்
பெருவழியாம்
தெள்ளார் புனற்கன்னி தெற்காகும்—
உள்ளார
ஆண்ட கடல் கிழக்கா மைம்பத்
தறுகாதம்
பாண்டி நாட் டெல்லை பகர்"

இவ்வாற்றின் தென் கரைப் பகுதி தென் கோனாடென்றும், வடகரைப் பகுதி வட கோனாடென்றும், வழங்கி வந்தனபோலும். இவ்விரண்டு கரை நாடுகளும் புதுக்கோட்டைச் சீமையில் திருமயம் வட்டம், குளத்தூர் வட்டம் என்னும் இரண்டு பகுதியில் அமைந்திருந்தன. குளத்தூர் வட்டத்தில் கீரனூருக்குங் கிழக்கேயுள்ள பாப்பாகுறிச்சி முதலான ஊர்கள் கீழ்க்கோனாட்டைச் சார்ந்தவையென்று (புதுக்கோட்டை 198) கீரனூர்க் கல்வெட்டொன்று குறிக்கின்றது. ஆலங்குடி வட்டம் திருவரங்குளம் கல்வெட்டொன்றில் இளங் கோனாட்டு அறந்தாங்கி" (புதுக்கோட்டை 728) என்று வருவது கொண்டு அறந்தாங்கி என்னும் ஊர் இளங்கோனாட்டில் உள்ளதென்று தெரிகிறது.

வடகோனாடும், தென்கோனாடும் கோனாடு என்னும் ஒரு பெயராலேயே பண்டு வழங்கி வந்தது. அப்பொழுது அது பாண்டியரைச் சேர்ந்திருந்ததா, சோழரைச் சேர்ந்திருந்ததா என்பதை அறிய எனக்கு இப்பொழுது தக்கசான்று கிடைக்கவில்லை. பிற்காலத்தில் **முதலாம் இராசராச சோழன்** ஆண்ட காலத்திலிருந்து இவ்விரு நாடுகளும் கோனாடு என்னும் ஒரு பெயரால் குறிக்கப் பட்டுச் சோழரைச் சேர்ந்த வளநாடாக இருந்து வந்ததென்பதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. "**கேரளாந்தக வளநாடான கோனாடு**" (புதுக்-86) என்றும், "**கோனாடான இரட்டபாடி கொண்ட சோழவள** நாடு (புதுக்-182) என்றும் "**கோனாடான கடலடையா திலங்கை கொண்ட சோழ வளநாடு**" (புதுக்-302) என்றும் வரும் புதுக்கோட்டைச் சீமைக் கல்வெட்டுத் தொடர்களை ஆராய்ந்தால் முதலாம் இராசராசன் காலத்திலிருந்து சோழமண்டலத்தில் சேர்க்கப்பட்டுக் கோனாடென்னும் ஒரு பெயரால் வழங்கி வந்தமையும், அது கேரளாந்தக வளநாடு முதலான வெவ்வேறு பெயர்களை முதலாம் இராசராசன் முதலான வெவ்வேறு மன்னர்கள் காலத்தில் பெற்றிருந்தமையும் புலப்படும்.

### கோனாட்டின் பிரிவு:

இக்கோனாடு பல பிரிவுகளைப் பெற்றிருந்தது. **அண்ணல் வாயில் கூற்றம், உறத்தூர்க் கூற்றம், ஒல்லையூர்க் கூற்றம், கூடலூர் நாடு, குன்றியூர் நாடு, வயலக நாடு** இவையெல்லாம் கோனாட்டின் உட்பிரிவான கூற்றங்களும் நாடுகளுமாகும்.

### ஒல்லையூர்க் கூற்றம் :

"**முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே**" (புறநா-242) என்னும் புறநானூற்றுப் பாடலடியை நோக்கினல், மேற்குறிக்கப்பெற்ற ஒல்லையூர்க் கூற்றமானது ஒல்லையூர் நாடென்றும் வழங்கப் பட்டசெய்தி புலனுகிறது. புதுக்கோட்டைச் சீமை 541-ஆம் எண்ணுள்ள கல்வெட்டில் '**ஒல்லையூர் நாட்டுப் பட்டன்,**' என்று வரும் பெயரும் மேற்கருத்தை வலி

யுறுத்துகிறது. இவ் ஒல்லையூர்க் கூற்ற மாகிய **ஒல்லையூர்** நாட்டில் **ஒல்லையூர், நெருஞ்சிக்குடி, கீழ்தணியம், மேற்றணியம், ஆமாநல்லூரான ஆன்குடி, விண்தக்கி யான இராசேந்திர சோழபுரம், காரையூர், இடைக்காற்றூர், சாத்தனூர், பூவாலைக் குடியாகிய சுந்தர சோழபுரம், சமமங்கல நல்லூரான சோழசிகாமணிச் சதுர்வேதி மங்கலம்** முதலான ஊர்கள் அடங்கியிருந் தன.

**ஒல்லையூர் :**

ஒல்லையூர் நாட்டின் தலைநகராகிய **ஒல்லையூர், ஒல்லையூர்மங்கலம்** என்றும் வழங்கப்பட்டது. அது இக்காலத்தில் **ஒலிய மங்கலம்** என்று வழங்கப்படுகிறது. மங் கலம் என்ற பெயரைக் கருதிப்பார்த்தால் இவ்வூர் பிற்காலத்தே பார்ப்பனருக்கு முற் றூட்டாகக் கொடுக்கப்பட்டதுபோலும். இவ்வூரில் **வரகுணேசுரர்** என்னும் பெய ருடைய சிவபெருமான் திருக்கோயில் ஒன்று உள்ளது. இக்கோயிலில் பல கல்வெட்டுகள் உள்ளன. புறநானூற்றுள் **ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்** என்ற பெயரால் ஒரு பாண்டியன் குறிக்கப்படுகிறான். இப் பெயருள் 'ஒல்லையூர் தந்த' என்னும் சொற் றொடரை நோக்கினல், அவ்வூர் பிற மன்னர்க்கு உரியதாக ஒரு காலத்தில் இருந் தது; அதனைப் பூதப்பாண்டியன் வென்று கொண்டான் என்னுஞ் செய்தி விளங்கு கிறது.

**ஒல்லையூர் கிழானும் புதல்வனும் :**

இங்ஙனம் சிறந்த ஒல்லையூரில் முன் ஒரு காலத்திலே **ஒல்லையூர்கிழான்** என்னும் தலைமகனொருவன் வாழ்ந்திருந்தான். அக் கிழான் அவ்வூர்க்கும் அந்நாட்டுக்கும் உரிமை பூண்ட தலைமகனுயிருந்தான். அவன் சிறந்த வீரமும் வள்ளன்மையும் உடையவன். அவனுக்கு ஒரு புதல்வன் தோன்றினன். அப்புதல்வனுக்குப் பெருஞ் சாத்தன் என்று பெயரிட்டுச் சிறப்பாக வளர்த்து வந்தான்.

**ஒல்லையூர்கிழானுடைய புலவரும், அவர்தம் புதல்வரும் :**

ஒல்லையூர்கிழானுக்கு உறுதுணையாய் விளங்கினர் **ஒரு தண்டமிழ்ப் புலவர்.** அவருக்கும் ஒரு புதல்வன் தோன்றினன். அப்புதல்வனுக்கு நல்ல பெயரொன்றினை அப் புலவர் வைத்து வழங்கியிருப்பார். ஆனல், அப்பெயர் பிற்காலத்தவரால் மறக்கப்பட்டு விட்டது. புறநானூற்றுப் பாடல்களைத் தொகுத்த ஆசிரியர் அப்புலவர்புதல் வனுக்கு, அப்புதல்வன் பாடிய பாட்டில் உள்ள சொற்றொடரால் **தொடித்தலை விழுத் தண்டினர்** என்று பெயர் வைத்து வழங்கி னர்.

**இரு புதல்வரின் இளமைப் பருவம் :**

ஒல்லையூர்கிழான் புதல்வனும், புலவர் புதல்வனும் ஒருங்கு வளர்ந்து வந்தனர். இருவரும் இணைபிரியாத நண்பராய் விளங் கினர். இவர்கள் வாழ்ந்து வந்த ஒல்லையூர் இயற்கை வளத்தால் எழில் பெற்றிருந்தது. அவ்வூரிலுள்ள குழந்தைகளெல்லாம் கவலை என்பதனைச் சிறிதும் உணராமல் இன்பமே வடிவாய் விளையாடிக் கொண்டிருப்பர்.

**விளையாட்டு :**

**" விளையாடு ஆயமொடு ஓரை யாடா மல் இளையோர் இல்லிடத்திற் செறிந்திருத் தல் அறனும் அன்றே ஆக்கமும் தேயும் "** என்று இளைஞர்க்கு விளையாட்டின் இன்றி யமையாமையை எடுத்தியம்பினர் ஒரு புலவர். விளையாட்டினை மென்மையான தென்றும் வன்மையானதென்றும் இருவகை யாகப் பிரித்துக்கொள்ளலாம். மெல்லியல் மகளிரெல்லாம் மென்மையான விளையாட் டினையே விரும்பி மேற்கொள்வர். மைந்த ரெல்லாம் வன்மையான விளையாட்டினையே விரும்பி விளையாடுவர். ஆனல், மேற்குறிப் பிட்ட இருபுதல்வரும் சிறுமியருடன் சேர்ந்து மென்மையான விளையாட்டுகளையும் விளை யாடுவர்; மைந்தருடன் கூடி வன்மையான

விளையாட்டுகளையும் விளையாடுவர். சிறுமியரெல்லாம் வண்டல் மண்ணினைக் கொண்டு வருவார். அம்மண்ணினால் அழகான பாவைகளைச் செய்வார். பின்னர் பலநிறப் பூக்களைப் பறித்து வந்து கண்ணியாகவும் மாலையாகவும் செய்து விளையாடுவர். அதன் பின் குளிர்ந்த பொய்கையின்கண் சென்று குளித்து விளையாடுவர். மேற்கூறிய இரு புதல்வரும் இச்சிறுமியர் குழாத்துடன் கூடி அவர்களுடன் கைகோத்தும் அவர்கள் தழுவின விடத்தே தாங்களும் தழுவியும் இவ்வாறு மென்மையான விளையாட்டினை விளையாடுமிடத்து விளையாடி (தூங்கும் வழித் தூங்கி—புற-243) மகிழ்ந்திருப்பர்.

வன்மையான விளையாட்டினை விளையாடக் கருதியபொழுது மறைத்துச் செய்தலை அறியாத மைந்தருடன் கூடி, பெரிய மடுவின் ஓரத்தில் உள்ளதும் ஏறுதற்குக் கால் வழுக்கும் வழுவழுப்புடையதும் ஆன உயர்ந்த கிளைகளுடன் கூடிய மருத மரத்தில் விரைந்து ஏறி, மடுவின்மேலே அதற்கு அணித்தாய்த் தாழ்ந்துள்ள அம்மரக்கிளையினிடத்தே சென்று, கரையில் நிற்பவரெல்லாம் வியக்கும்படியும், மடுவில் திரை தோன்றித் துளியெழும் படியும், துடும் என்ற ஒலியுண்டாகக் குதித்து, குதித்து முழுகிய ஒரே முழுக்கில் மடுவின் ஆழத்திற் சென்று அங்குள்ள மணலைக் கையால் அள்ளிக் கொண்டுவந்து காட்டி, இத்தகைய வலிய விளையாட்டினைச் செய்து மகிழ்ந்திருப்பர். இரு புதல்வருக்கும் கல்வியில் விருப்பமில்லாத இளமைக்காலம் இவ்வாறு கழிந்தது.

## இரு புதல்வர்தம் பின்னிலை :

கல்வி பயிலுங் காலம் வந்ததும் இருவரும் செந்தமிழ் மொழியினைச் சிறக்கக் கற்றுப் பெரும் புலமை எய்தினர். தக்க வயதினை அடைந்தனர். பெருஞ்சாத்தன் ஒல்லையூர் நாட்டின் ஆட்சிப் பொறுப்பை மேற்கொண்டான். ஒல்லையூர் நாடு பாண்டிய நாட்டின் வடவெல்லையிலும் சோழநாட்டின் தென்னெல்லைப் புறத்தும் இருந்த காரணத்தால் எல்லையைக் காக்க வேண்டிய பொறுப்பு இவனுக்கிருந்தது. அல்லாமலும் இவன் பாண்டிய மன்னன்கீழ் நாட்டுத் தலைவனாக இருந்த காரணத்தால் அம்மன்னனுக்கு உற்றுழி உதவ வேண்டியவனாயுமிருந்தான். இவற்றின் காரணமாக நிகழ்ந்த போர்களில் நம் சாத்தன் தன்னுடன் போரிடவரும் ஆடவர் அனைவரையும் வலிய வேற்படை ஒன்றினையே ஏந்திச் சென்று அவர் அஞ்சும்படி ஆண்மை காட்டிவெல்வான்.

பெருஞ்சாத்தன் பெருவீரனாக விளங்கிய தன்றிப் பெருவள்ளலாகவும் விளங்கினான். இவனுடைய பெருஞ் சிறப்புக்களையெல்லாம் இவனோடு இளமைப் பருவத்திலிருந்தே இணைபிரியாது வாழ்ந்து வந்த புலவரின் புதல்வர் (தொடித்தலை விழுத்தண்டினார்) தீஞ்சுவைப் பாடல்களில் வைத்துப் பாடி வந்தனர். இவ்வாறு புரவலனாகவும் புலவனாகவும் வாழ்ந்து வந்த இவரிருவரும் பின்னர் பெரிய முதுமைப் பருவத்தை எய்தினர். ஒருநாள் இருவருங் கூடி அளவளாவிப் பேசிக்கொண்டிருந்தபொழுது தம்முடைய கழிந்த இளமைப் பருவத்தின் உயர்வும், இப்பொழுது நிகழும் பெரிய முதுமையின் இழிவும் அவர்தம் உள்ளத்திலும் உரையிலும் எழுந்தன. அவர்கள் பின்வருமாறு உரையாடத் தொடங்கினர். நாம் கல்லா இளமைப் பருவத்தே மகளிருடன் கூடி மென்மையான விளையாட்டினையும் விளையாடினோம். மைந்தருடன் கூடி வன்மையான விளையாட்டையும் விளையாடினோம். அப்பொழுது வழுக்கல் நிறைந்த பெரிய மருதமரத்தின்மேல் மிக விரைவாகவும் எளிமையாகவும் ஏறிய நாம், இப்பொழுது நல்ல சமனான நிலத்தின் கண்ணும் நல்ல பூண் கட்டிய கோலினை ஊன்றி நடக்க இயலாதவரானோம். அன்று பார்த்தோரெல்லாம் மருளும்படி மடுவிற் குதித்து மணல் எடுத்துக்காட்டிய நாம் எத்தொழிலும் செய்ய இயலாமல் இன்று உடல் நடுக்குற்றோம். அன்று, இம்மென்னும் முன்னே எழுநூறும் எண்ணூறுமான சொற்களைப்

பேசியநாம், இன்று இருமல் மிடைந்த சில சொல்லையே பெருமூச்செழப் பேசும் நிலைக்கு வந்தோம். நம்மிடம் அன்றிருந்த சிற்றிளமை இன்று எங்கேயோ ஓடி ஒளிந்து விட்டதே. நம்மிடம் இவ்வளவு இழிவுக்கும் இடமாய் பெரிய முதுமை இன்று வந்து குடி கொண்டுள்ளதே. அதனை நினைக்கும் பொழுது நம்மிருவர்க்கும் கழி பேரிரக்கம் உண்டாகின்றது.'' என்று பேசி முடித்தனர்.

அப்பேச்சின் கருத்தினைப் புலவர்தம் புதல்வர் காஞ்சித் **திணையில், கழிந்தோர் ஒழிந்தோர்க்குக் காட்டிய முதுமை** என்னும் துறை அமைய

'' இனிநினைந் திரக்க மாகின்று திணிமணல்
செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்
தண்கய மாடும் மகளிரொடு கைபிணைந்து
தழுவுவழித் தழுவித் தூங்கும்வழித்தூங்கி
மறையென லறியா மாயமில் ஆயமொடு
உயர்சினை மருதத் துறையுறத் தாழ்ந்த
நீர்நணிப் படிகோ டேறிச் சீர்மிகக்
கரையவர் மருளத் திரையகம் பிதிர
நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப்பாய்ந்து
குளித்துமணற் கொண்ட கல்லா இளமை
அளிதோ தானே ! யாண்டுண்டு
கொல்லோ?
தொடித்தலை விழுத்தண் டூன்றி நடுக்குற்று
இருமிடை மிடைந்த சில சொல்
பெருமூ தாளரேம் ஆகிய எமக்கே ''

(புறநானூறு-243)

என்று பாடினர். அப்பாட்டு **பெருஞ்சாத்தன், தொடித்தலை விழுத்தண்டினார் என்னும் இருவருடைய இளமை முதுமை நிகழ்வை நமக்குப் புலப்படுத்திக் காட்டும் சொல்லோவியமாக உள்ளது.**

## பெருஞ்சாத்தன் சிறப்பு :

இவ்வாறு புலவர் புகழ வாழ்ந்திருந்த பெருஞ்சாத்தன் காலவயத்தனாய் நோய் வாய்ப்பட்டு இறந்தான். இவன் மிகவும் முதுமையெய்தியிருந்தும் இவன் இறப்பிற்கு ஒல்லையூர் நாடே இரங்கிற்று. அந்நாட்டி லுள்ள முதியோரெல்லாம் இரங்கினர். இது வியப்பில்லை; எப்பொழுதும் இன்பத்திலே நோக்கமுடைய இளையோரும் அவர்தம் காதலிகளாகிய வளையோரும் இரங்கினர். புரவலன் இறந்தமையால் இரவலராகிய பாணரும் அவர்தம் மனைவியராகிய பாணிச்சியரும் இரங்கினர். இந்த நிலையில் குடவாயில் **கீரத்தனார்** என்னும் புலவர் அந்நாட்டிற்கு வந்தார். சாத்தனது இறப்பினைக் கேள்வியுற்றார். மிகவும் இரங்கினார் அப்பொழுது மாலைக் காலமாக இருந்தது. முல்லைக்கொடி மலரத் தொடங்கிற்று அவர் அதனைப் பார்த்து '' முல்லையே ! பெருஞ்சாத்தன் இறந்துபோன துன்பத்துள் மூழ்கியிருக்கும் இந்நாட்டில் உன்மலரைச் சூடுவார் ஒருவரும் இல்லை; நான் பாடுகிற பாமாலையைக் கேட்பாரும் இல்லை; நான் பாடல் பாடி மகிழ்விக்கலாம் என்று கருதிக் கொண்டு உவப்புடன் வந்தாற்போல, நீயும் இந்நாட்டவர்க்குப் பயன்படலாம் என்று கருதிப் பூத்தனை போலும்; உன் கருத்தும் என் கருத்தும் நிறைவேறவில்லை; அதனால் நீயுங் கொடியை நானும் கொடியன்'' என்று வருந்திக் கையறு நிலை பாடினார்.

'' இளையோர் சூடார் வளையோர் கொய்யார்
நல்லியாழ் மருப்பின் மெல்ல வாங்கிப்
பாணன் சூடான் பாடினி அணியாள்
ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த
வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை
முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே''

(புற நா-242)

என்பது அப்பாட்டாகும்.

## தொடித்தலை விழுத்தண்டினார் இரக்கம்

பெருஞ்சாத்தனோடு இணைபிரியாது வாழ்ந்துவந்த **தொடித்தலை விழுத்தண்டினா**ரும் தம் நண்பன் இரப்பிற்குப் பெரிதும் வருந்தி **''பாணர் சென்னியும் வண்டு** சென்றாதா'' (புற-244) என்ற கையறு நிலைப் பாட்டைப் பாடினார். பாவம்! அப்பாட்டு

காலவெள்ளத்தாற் சிதைந்தது. அப்பாட்டின் சிதைந்த உரைப்பகுதியில் "தான் உறுகின்ற துன்பத்தைக் கலைமேல் வைத்துக் கூறியவாறு" என்னும் சொற்றொடர் மட்டும் தொடித்தலைவிழுத்தண்டினாரின் துன்ப நிலையை நமக்கு அறிவுறுத்திக் கொண்டு இன்றளவும் அழியாமல் விளங்குகிறது.

## முடிப்புரை :

இப்பாட்டுகளின் கருத்தினை உய்த்துணராத சிலர் 'வல் வேற் சாத்தன்' என்ற சொற்றொடரை நோக்கிச் சாத்தன் வேற்போரிலே இறந்து விட்டான் என்று எழுதினார். அவன் வேற்போரிலே இறந்திருப்பின் 'பெருமுதாளரேம் ஆகிய எமக்கு' என்ற சொற்றொடர் பெருஞ்சாத்தனுடைய முதுமைப் பருவத்தைக் குறிக்காமற் போகும். (பெருமூதாளராகிய நிலையில் வேல் போர் செய்ய இயலாது.) அவனை அவர் பாடியது என்ற குறிப்பால் 'இனி நினைந்திரக்கமாகின்று' என்ற பாட்டு பெருஞ்சாத்தனைப் பாடியது என்று தெரிவதால் பெருஞ்சாத்தன் வேற்போரில் இறவாது முதுமையுற்று இறந்தான் என்பதே பொருந்தும்.



# சைவ சமயமும் நான்மறையும்

திரு. ந. மு. கோவிந்தராய நாட்டார்.

ஓங்கும் பொருட்சமயத் துச்சியாம் சைவமதைப்
பாங்குடன் யாவரும்பின் பற்றவே-ஈங்குத்
தொடுத்தெழுதும் கட்டுரையின் தொய்யகலத் தூயோன்
எடுத்தகால் காப்பாகும் எற்கு.

திருவருளின் துணைகொண்டும்,

காய்தல் உவத்தல் அகற்றி ஒருபொருட்கண்
ஆய்தல் அறிவுடையார் கண்ணதே- காய்வதன்கண்
உற்ற குணம்தோன்ரு தாகும் உவப்பதன்கண்
குற்றமுந் தோன்ரு கெடும்.

என்ற வெண்பாவின் பொருளை உளத்திற் கொண்டும் தலைப்பிற்கொடுத்த பொருளைப் பற்றி ஆராயத்தொடங்குவாம்.

**நான்மறை :**

முதற்கண் நான்மறை ஆராய்ச்சியைத் தொடங்குவதே இக்கட்டுரைக்கு ஏற்புடைத்தாம்: நச்சினுர்க்கினியரும், அரசன் சண்முகனுரும் நான்மறை: தைத்திரியம் பௌடிகம், தலவாகாரம், சாமவேதம் என்பன என்று கூறுவர். இவர்களின் கருத்தின்படி நான்மறை, தொல்காப்பியருக்கும் அதங்கோட்டாசிரியருக்கும் பிற்காலத்தினராகிய வியாச முனிவரால் நான்கு கூருக வகுக்கப்பெற்றவையாம். ஆனுல் இவர்கள் தங்கள் கொள்கைக்கு அடிப்படையான சான்று யாதும் காட்டினுரில்லை. தொல்காப்பியப்பாயிரத்தில் பயின்றுள்ள 'நான்மறை' என்பதும், பிறப்பியல் இறுதி நூற்பாவில் பயின்றுள்ள 'மறைத்தே' என்பதும், இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் ஆகியவற்றையே குறிக்கின்றன வென்று 'உலகப்பொது தமிழ் எழுத்தொலி' என்ற எம்நூலில் கூறியுள்ளோம். ஆங்கிலத்திலும், வடமொழியிலும், எம். ஏ., பட்டம் பெற்றுள்ள திருமதி சகுந்தலராவ் சாத்திரி என்னும் பெண்மணி நான்கு வேதங்களையும், சிறந்த உபநிடதங்களையும் பற்றி எழுதியுள்ள தமது நூலில் நான்மறை இருக்கு, எசுர், சாமம். அதர்வம் என்றே காட்டியுள்ளார். நான்காம் வேதத்தை இவர் அதர்வம் என்றே குறிப்பிடுகின்ருர். இக்கட்டுரையில் போதரும் சிற்சில செய்திகள் இவ்வம்மையார் நூலிலிருந்து யாம் அறிந்தவையே.

**வேதம் இறைவனுல் அருளப் பெற்றதா ?**

வேதம் இறைவனுல் அருளப்பெற்றதென்ற கருத்து நம் நாட்டு இந்துக்கள் எல்லோராலும் பண்டுதொட்டு ஒப்பப்பெற்று வந்துள்ளது. இறைவனுல் அருளப்பெற்றதெனக் கருதக்கூடிய சில சொற்ருெடர்கள் சைவ நூல்களில் ஒரோவழிக் காணப்படுகின்றன: 'மறைமுதல் கிளந்த வாயான்' 'வேதம் ஓதி வெண்ணூல் பூண்டு' 'தூய்மறை ஓதும் வாயான்' 'வேதம் சாற்றிய தலைவன்' ஆகிய தொடர்கள் இக்கருத்தினை வலியுறுத்தக்

கூடியன. சிவப்பிரகாச சுவாமிகள் இக்கருத்தில் ஐயம்கொண்டவர்போல், ''விளங்கிழை பகிர்ந்த மெய்யுடைமுக்கட் காரணன் உரை யெனும் ஆரணமொழியோ' என விளம்பியுள்ளனர். ''கண்ணுதல்நின் கால்விளையாட்டு'' எனும் எம் நூலின்,

மறைநவின்றாய் நீயென்பர் மாதவத்தோர் நின்னை

மறைதான் உணரா மலைத்தல்—நிறையோ

இறைவனே இஃதோர் அறைகூவ லாகும்

குறைவிலா துண்மையைக் கூறு.

என்ற வெண்பாவில் இவ்வையத்தினைக்கிளந்துள்ளேன். 'நான்மறை தேடியும் காணொணுக்கடவுள்' 'நால் வேதத்திற்கப்பாலான்' 'பண்டாய நான்மறையும் பாலணுகா மாலயனும்' என்பன போன்ற சொற்றொடர்களும் தேவாரம் முதலிய சைவநூல்களில் பயின்றுள்ளன. இவை வேதம் இறைவனால் அருளப்பெற்றதெனும் கருத்துக்கு முரணானவை. ஆயினும் இவையே உண்மையை விளக்குவனவாம். இம்மாறுபாட்டிற்குரிய காரணத்தினைப் பின்னர் விளக்குவாம். நான்மறைகளும் பலமுனிவர்களால் யாக்கப்பெற்ற பாடல்களின் தொகுப்பே என்பதனைத் திருமதி சகுந்தலாராவ் சாத்திரி விளக்கியுள்ளார். கீழ்வருவன இவர்கள் எழுதியுள்ளனவற்றின் மொழி பெயர்ப்பு: ''பல பாடல்களில் அவற்றை இயற்றியோர் பெயர்கள் அறிவிக்கப்பட்டிருக்கின்றன. எடுத்துக்காட்டாகச் சில தருகின்றோம்: ''இருக்கு வேதத்தின் முதல் மண்டலம், அறுபத்திரண்டாம் பாடல் இவ்வாறு கூறுகின்றது: 'ஓ இந்திரா, கோதமனுடைய மகன்நூதா உன்னைப் பற்றிய இப்புதிய பாடலை எங்களுக்காக இயற்றியுள்ளான்; இரண்டாவது மண்டலத்தின் முப்பத்தொன்பதாவது பாடலின் இறுதியடி 'அசுவினிகளைப் பெருமைப்படுத்துவதற்காக இப்புதிய தோத்திரப்பாடலை கிரித்சமதா இயற்றியுள்ளார்' என முடிகின்றது. பத்தாவது மண்டலத்தின் இருபத்து மூன்றாம் பாடலின் ஆறுவது அடி 'ஓ இந்திரா, உன்னைப் பெருமைப்படுத்துவதற்காக இந்த அழகிய பாடலை விமதாக்கள் இயற்றியுள்ளனர்' என முடிகின்றது. மேலும், ''வசிட்டர், விசுவாமித்திரர், வாமதேவர், கிரித்சமதா, அத்திரி, பரத்வாசர், கண்வர் ஆகிய முனிவர்கள் பலப்பல பாடல்களின் தொகுப்பாசிரியர்களாகக் கூறப் பெற்றுள்ளனர்.'' இருக்கு வேதகாலத்தில் சாதிப் பிரிவுகள் ஏற்படாமையின் இப்பாடலாசிரியர் இன்ன சாதியார் எனக்கூறவொண்ணாது. யசுர் வேதத்தில் வேள்வி முதலியன செய்தற்கு விதிகளும் சட்டங்களும் ஏற்பட்டமையின் சாதிப்பிரிவு தோன்றலாயிற்று.

## வேதங்களில் அடங்கியுள்ள செய்திகள் :

**இருக்கு:** இதுவே முதலிற்றோன்றியது. காலம் கி.மு. 1500 ஆக இருக்கலாம் என்பது ஆராய்ச்சியாளர் முடிவு. இந்திரன், அக்கினி, வருணன், வாயு, எமன், சூரியன், சோமா, பிரசாபதி, விட்டுணு, உருத்திரன் ஆகியோரை உள்ளிட்ட முப்பத்து மூன்று தேவர்களைப் பற்றிய பாடல்கள் அடங்கியதே இவ்வேதம். இப்பாடல்களைப் பாடிக்கொண்டு சோமபானத்தாலும், அக்கினியினாலும் வேள்வி செய்து தங்களுக்கு வேண்டுவனவற்றை அருளுமாறு அக்கால ஆரியர்கள் இத்தேவர்களை வணங்கிவந்தனர். தங்களுக்கும், தங்கள் மக்கள், பெயரர் முதலியோருக்கும் நல்ல மனைவிமார்களையும், மக்களையும், செல்வம், ஆயுள் முதலியவற்றையும் அருளுமாறு வேண்டுவதே இவர்களின் குறிக்கோள். இவற்றுடன், பெரிய நகரங்களும், கோட்டை கொத்தளங்களும், உடையவர்களாயும், வேள்வி செய்யாதவராயும், இலிங்கத்தை வழிபடுகின்றவர்களாயுமுள்ள, தாசர்கள், கிருட்டினர்கள் ஆகியோரின் அரசர்களை முறியடித்துத்தங்களைக் காப்பாற்றவேண்டுமென்றும் இவ்வாரிய மக்கள் தங்கள் தெய்வங்களை வேண்டிக்கொண்டனர். இந்திரனே தேவர்கள் எல்லோருக்கும் தலைவனாகக் கூறப்பட்டுள்ளான். இவ்வேதத்தின் பெரும்பாலான பாடல்கள் இவனைப்பற்றியவையே.

**யசுர் :** இவ்வேதத்தில் இருக்கு வேதப் பாடல்கள் சில சேர்ந்துள்ளன. வேள்வி செய்தற்குவேண்டிய விரிவான விதிகள் இதில் கூறப்பட்டுள்ளன. இருக்குவேத தேவர்களில் சிலரைப்பற்றிய புதிய செய்திகள் இதில் கூறப்பட்டுள்ளன. பிரசாபதியே தேவர்களுக்கெல்லாம், தலைவனுகக் கூறப்பட்டுள்ளான். இந்திரன் தலைமைப் பதவியை இழந்து விடுகிறுன்.

**சாமம் :** இருக்கு வேதத்திலிருந்து இசைக்குப் பொருந்தச் சில மாற்றங்களுடன் தேர்ந்தெடுக்கப்பெற்ற 1471 பாடல்களாலும் புதிய 78 பாடல்களாலும் அமைந்ததே இவ்வேதம்.

**அதர்வம் :** இவ்வேதத்திலும் சில இருக்கு வேதப்பாடல்கள் சேர்ந்துள்ளன. உபநிடத ஆசிரியர்கள் இதனை ஒரு வேதமாகவே கருதவில்லை. வேதங்கள் மூன்றேயென இவர்கள் கொண்டனர். பில்லிசூனியம், நோய் முதலியவற்றிற்கு மருந்துகளும் சிகிச்சை முறைகளும், மந்திரத்தகடுகள், தாயத்துக்கள் முதலியனவும் இவ்வேதத்திற் கூறப்பெற்றுள்ளன.

## சிவவழிபாடு :

இருக்கு வேதத்தில் சிவன் என்ற பெயரே காணப்படவில்லை. இலிங்கவழிபாடும் இழித்துரைக்கப்பெற்றுள்ளது. ஆயினும் இவ்வேதத்தில் காணப்பெறும், பிரசாபதி, விட்டுணு, உருத்திரன் ஆகிய தேவர்களே பிற்காலத்தில் திரிமூர்த்திகள் ஆக்கப்பெற்றுள்ளனர். இருக்கு வேத காலத்திற்கு ஈராயிரம், அல்லது மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே சிந்துநதி தீரத்தில் சிவவழிபாடு அல்லது இலிங்கவழிபாடு பரவிஇருந்த தென்பதனை மொகஞ்சதாரோ, ஆரப்பா ஆராய்ச்சியாளர்கள் பல சான்றுகளைக்கொண்டு நிறுவியுள்ளனர். அமெரிக்கப் புதைபொருள் ஆராய்ச்சியாளர் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் வட அமெரிக்காவின் கொரடரோ ஆற்றங்கரையில் சிவன்கோயில் ஒன்றுஇருந்திருக்கவேண்டுமென்று கூறியுள்ளனர். எகிப்து நாட்டிலும், கிரீட்தீவிலும் பல சிவலிங்கங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. எகிப்து நாட்டின் உயர்ந்த கற்கோபுரங்களின் சுவர்களில் (*Pyramids*) இலிங்க உருவங்கள் பொறிக்கப்பெற்றுள்ளன. ஆப்பிரிக்காவிலும், மேற்கு ஆசியாவிலும், பல இடங்களுக்கும் நகரங்களுக்கும் சிவன் என்ற பெயரே வழங்கியிருந்தமை கண்டுபிடிக்கப் பெற்றுள்ளது. சரித்திர நூல் தந்தை (*Father of History*) என்று சொல்லப் பெற்றவரும், காய்தல் உவத்தல் இன்றி விடாமுயற்சியுடன் வரலாற்றுண்மையைக் கண்டு எழுதுபவர் என்று கூறப்பெற்றவரும், கி.மு. 400-490இல் வாழ்ந்தவரும் ஆகிய கிரேக்க சரித்திர ஆசிரியர் எரதோதசு(*Heradotus*) என்பவர் கிரீட் தீவில் ஒரு நகரத்திற்குச் சிவன் என்ற பெயர்இருந்ததென்றும், அங்கு வாழ்ந்த மக்களின் பெயர் தமிழி என்றும் கூறியுள்ளார். மொகஞ்சதாரோவிலும், ஆரப்பாவிலும் பல நூற்றுக்கணக்கான இலிங்கங்களும், கூத்தப்பெருமான் (நடராசர்), அம்மை, நந்தி உருவங்களும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. ஒரு கோயிலுக்குள் உள்ள சிறு கோயிலின் முன் (மூலட்டானம்) ஒரு நந்தி நிற்பது போல் ஒரு முத்திரையில் பொறிக்கப்பட்டுள்ளது. மொகஞ்சதாரோ முத்திரைகளிற் காணப்படுகின்ற சித்திரச்சொல்லெழுத்துக்கள் மிகப் பழைய தமிழ்ச்சொற்கள் அல்லது திராவிடச்சொற்கள் என்று பம்பாய் அர்ச் சவேரியார் கல்லூரியின் (*St. Xavier's College*) சரித்திர ஆராய்ச்சி நிலையத்தலைவராயிருந்த திரு. ஈராசு பார்திரியார் (*Father Heras*) கூறியிருக்கிறுர். "கடவுள் ஆண், பெண் வடிவினர், ஆக்கல், அளித்தல், அழித்தல் செய்பவர், எட்டுருவுடையவர்" என்னும் பொருள் உள்ள வாக்கியக்கோவைகள் இச்சித்திர எழுத்துக்களில் தெரிகின்றன என்றும் இவர் கூறியிருக்கின்ருர். சிந்து வெளிமக்கள், யோகம், மந்திரம் ஆகிய கலைகள் அறிந்தவர்கள் என்றும், மறுபிறப்பில் நம்பிக்கையுடையவர்கள் என்றும் சில ஆராய்ச்சியாளர் கருத்துத் தெரிவித்திருக்கின்றனர்.

மேற்கூறிப் போந்த காரணங்களினுற்ருன், இந்திய புதைபொருள் அகழ்வாராய்ச்

சித்துறையின் இயக்குநர் தலைவராயிருந்த சர் சான்மார்சல் *(Director General of the Archaeological Department of India)*

"மொகஞ்சதாரோவிலும், ஆரப்பாவி லும் யாங்கள் அறியக்கிடந்த எதிர்பாராத அற்புதச் செய்திகள் பல. அவற்றில் சைவ சமயம் வெண்கலக்கருவிக் காலத்திற்கோ அதற்கப்பாலோ செல்லும் வரலாற்றையுடை யது. ஆதலின் அது இதுபோது உலகில் உயிருடன் உள்ள சமயங்கள் எல்லாவற்றி னும் முன்னர்த் தோன்றியது என்னும் உண்மையைவிட அறியத்தக்க சிறந்த செய்தி வேறொன்றுமில்" எனக்கூறியிருக்கின்றார்

*(Among the many revelations that Mohanjadaro and Harappa have had in store for us. none perhaps is more remarkable than this discovery that Saivism has a history going back to the Chaekolithic age or Perhaps even further still and that thus it takes its place as the most ancient living faith in the world"*

## சிந்துவெளிமக்கள் காலத்தில் இந்தியாவில் வாழ்ந்த மக்களும், உபநிட தங்களும் :

இருக்கு வேதத்தில் சிவன் என்றபெயர் காணப்படவில்லை என்றும், இலிங்கவழிபாடு இழித்துரைக்கப்பட்டுள்ளதென்றும் முன்பு கண்டோம். இவ்வேதங்களுக்குப்பின்னர்த் தோன்றிய உபநிடதங்கள் சிலவற்றில் சிவ வழிபாடும், அதன் பெருமையைப்பற்றிய செய்திகளும் எவ்வாறு இடம் பெற்றன என்பதனை ஆராய்வோம். திருமதி. சகுந்த லாராவ் சாத்திரி "உபநிடதங்கள் வேத இலக் கியங்களின் ஒருபாகமேயெனத் பண்டுதொட் டுக்கருதப்பட்டு வந்திருப்பினும், உண்மை யில் அவை வேதக்கொள்கைகளைக் கண்டிப் பனவேயாம்" எனக்கூறியுள்ளார்,

*"The Upanishads though traditionally looked upon as a part of the Vedic literature, are really a protest against the Vedic cult"*

இதனால் உபநிடதங்களுக்கு 'வேதாந் தம்' என்ற பெயர்கொடுக்கப்பட்டதும் தவறு என்று தோன்றுகிறது. ஔவையார் இயற்றிய 'நல்வழியில்' வரும் தேவர்குறளும்' என்று தொடங்கும் வெண்பாவில் பயின் றுள்ள 'திருநான்மறைமுடிவும்' என்ற தொடருக்கு, என் மூத்தோர் ந.மு.வே. நாட் டார் (நான்கு வேதங்களின் முடிந்த பொருளும் எனப்பொருள் கொள்ளாது') "நான்கு வேதங்களின் முடிவாகிய உபநிட தங்களும்" என உரையெழுதியிருப்பது ஈண்டுக் கருதத்தக்கது.

சர்சான்மார்சல் (ஆங்கிலேயர்) ஈராசு பாதிரியார் (இசுப்பானியர்), பாபாசான் கவு ரோவ் (உருசியர்), ஆர். கே. முக்கர்சி (வங் காளி), ஆர். சி. தத்தர் (வங்காளி), பெட்ரிக் கார்ட்டன் (ஆங்கிலேயர்), கே. என். திட்சிதர் (இந்தியர்) கே. இராமகிருட்டிணையா (தெலுங் கர்) ஆகியோர் எல்லோரும் ஆரியர் இந்நாட் டின்மீது படையெடுத்து வந்தபோது ஏறக் குறைய இந்தியா முழுதும் சிந்துவெளியில் வாழ்ந்துவந்த மக்கள் இனத்தவரே வாழ்ந்து வந்தனர் எனக்குறிப்பிட்டுள்ளனர். டாக்டர் டெய்லர் *(Dr. Taylor)* போன்ற மொழி இயல் அறிஞர் வேதகால சமக்கிருதம் முதல் இக்கால வடவிந்திய மொழிகள் ஈறாக எல்லா மொழிகளிலும் தமிழ்மொழியின் அடிப்படை காணப்படுகின்ற தென்றும், பல தமிழ்ச் சொற்கள் இவற்றில் காணப்படுகின்றன வென்றும், இந்திய ஆரிய மொழிக்கும், ஐரோப்பிய ஆரிய மொழிகளுக்கும் பெரிய வேறுபாடு ஏற்பட்டுவிட்டதென்றும் கூறி யுள்ளனர். ஆதலின் இந்தியாவில் வாழ்ந்து வந்த பெரும்பாலராகிய மக்கள் திராவிட இனத்தவராகிய தமிழரே என்பது ஒருதலை. சகுந்தலராவ் சாத்திரி உண்மையான உபநிட தங்கள் ஐம்பதிற்கு மேலாகாவென்றும், 'முக்திகா' தொகுப்பில் காணப்படுகின்ற 108 உபநிடதங்களில் பல தென்னாட்டாசிரியர்க ளால் சேர்க்கப்பட்டிருக்கவேண்டும் என்றும் உண்மையான உபநிடதங்கள் பலவற்றின் ஆசிரியர்கள் அரசர்களென்றும் கூறியுள்ளார். ஆதலின் ஆரியர் பண்டைய தமிழ்மக்களு

டன் கலந்து வாழ்ந்த காலத்திற்முன் இவ்வுப நிடதங்கள் உண்டாயிருக்கவேண்டும். ஆரியர் தமிழர்களுடைய கடவுட் கொள்கைகளையும் சிவ வழிபாட்டையும் பின்பற்றத் தொடங்கியிருக்கவேண்டும். நரசிம்கதாபந் யோபநிசத் சிவனைப்பற்றிக்கூறுத நூல்களைத் தீயிலிடு என்று கூறுகின்றது. மற்றொரு உபநிடதம், ''சண்டாளனாயினும் சிவ என்னும் சொல்லைச் செப்புவானாகில், அவனுடன் பேசுக, உறைக, அருகிருந்துண்ணுக என்று முறையிடுகின்றது. யசுர் வேதத்தின் நான்காவது காண்டம் நான்காம் சம்கிதையில் சீருத்ராத்யாயம் என்னும் பாகம் புதிதாகப் புகுத்தப்பெற்றுள்ளது. இதில் சிவவணக்கமும், நமசிவாய என்னும் ஐந்தெழுத்து மந்திரமும் இடம்பெற்றுள்ளன. இங்கேதான் ஆரியர்களுடைய உருத்திரனைச் சிவன் எனக் காட்ட முயற்சியெடுக்கப்பெற்றுள்ளது.

ஆரியரும் தமிழரும் கலந்து வாழ்ந்த போது ஆரியர் தமிழையும், தமிழர் வடமொழியையும் கற்கத்தொடங்கினர். இந் நாட்டில் வடமொழி தென்மொழி எனும் இரண்டே மொழிப்பிரிவு வழங்கும் மரபு தொடங்கலாயிற்று. தமிழராகிய அகத்தியர் வடமொழி வல்லுநராயினர். தொல்காப்பியர் ஐந்திரம் நிறைந்தவரானார். புறநானூற்றில் காணப்படுகின்ற 358-ஆம் பாடலை இயற்றிய வான்மீக முனிவர் வடமொழியில் இராமயணத்தை இயற்றலானார். நான்காம் தமிழ்ச்சங்கத்தார் நடத்திவந்த சேதுபதி செந்தமிழ்க்கலாசாலையின் முதல்வராயிருந்தவரும், 'செந்தமிழ்' என்னும் திங்களிதழின் ஆசிரியராயிருந்தவரும் ஆகிய திரு. நாராயண ஐயங்கார் அவர்கள் புறநானூற்றுப்பாடலை இயற்றிய வான்மீகியாரே இராமயணத்தை இயற்றியவராயிருக்கலாம் என்பதற்குப் பல சான்றுகள் காட்டி நிறுவியுள்ளார்.

## சிவன் என்னும் சொல்லின்பொருள் :

சங்க இலக்கியங்களில் இச்சொல் காணப் படாததால் இது தமிழ்ச்சொல்லாகுமோ எனத்தமிழறிஞர் சிலர் ஐயுறுகின்றனர். எனினும் சிந்துவெளிமக்கள் காலத்தில் இச்சொல் பெருவழக்காயிருந்திருக்க வேண்டுமென மேற்கூறிப்போந்த எடுத்துக்காட்டுக்களால் அறியலாகும். ஆரிய வேதங்களிலும் இச்சொல் காணப்படவில்லை என்பதனையும் கண்டோம். இனி இச்சொல்லின் பொருளைக் காண்போம், சிவம் என்ற சொல் செம்மை என்ற பொருள்பயப்பது. செம்மை என்பதற்குச் செந்நிறம் என்ற நிறப்பொருளும், சிறப்பு, நன்மை, நேர்மை, மங்கலம், நடுவு நிலைமை என்ற பண்புப் பொருள்களும் உண்டு. சிவப்பு, சிவந்தன என்ற சொற்களில் 'சிவ' பகுதியாக இருப்பதனைக் காண்க. செந்நாப்போதார் இறைவனைச் செம்பொருள் என வழங்கியிருத்தலையும், திருநாவுக்கரசர் 'சிவனெனும் நாமம்தனக்கே வுடைய செம்மேனியெம்மான்' எனக்கூறியிருத்தலையும் ஓர்க. ஆதலின் சிவன் என்னுஞ்சொல் செந்தமிழ்ச் சொல்லேயாகும்.

## ஓம் என்ற சொல்லின் பொருள் :

இச்சொல்லுக்குப் பிரணவம் என்ற வடமொழிப்பெயர் இருத்தலாலும், வடமொழி மந்திரங்களில் எல்லாம் முதலில் ஓதப்பெறுவதனாலும் இதனை வடசொல் என்றே பலர் கருதுகின்றனர். உண்மையில் சிவம் என்ற சொல்லைப்போலவே இதுவும் தமிழ்ச்சொல்லேயாம். இதன்வடிவும் பொருளும் இது தமிழ்ச்சொல் என்பதனை நிலைநிறுத்தும். வடிவம் தமிழ் ஓ என்னும் எழுத்தே. வேறு எம்மொழி எழுத்துக்கும் இவ்வடிவம் இல்லை. தொப்புள் கொடியுடன்கூடிய மக்கட் கரு, விலங்கின்கரு முதலியன இவ்வெழுத்தின் வடிவாகயிருப்பதனைக் காலஞ்சென்ற தமிழ்ப் பேரறிஞர் பா.வே. மாணிக்கநாயக்கர் படங்கள்மூலம் விளக்கியுள்ளார். மேலும், பிள்ளையார், கூத்தப்பெருமான், தென்முகப்பெருமாள் ஆகிய கடவுளர்களின் வடிவும் இஃதே. கூத்தப்பெருமான் உருவத்தை ''எட்டும் இரண்டும் உருவாய வடிவத்தே, நட்டம் புதல்வாநவிலக்கேள்'' எனச் சித்தாந்த நூல் விளக்குகின்றது. தமிழ் இலக்கணத்தில் அகரமும், உகரமும் எட்டையும் இரண்டை

யும் குறிப்பன. அகரவுகரவொலி ஒன்று சேர்ந்தால் ஒகர வொலியுண்டாகும். ஒகரத்தின் நெடிலே ஓகாரம். இவ்வெழுத்தை ஒலிப்பதற்கு வாயை முழுதும் திறந்தாக வேண்டும். வாயை முழுதும் மூடி மூச்சு விட்டால் 'ம்' உண்டாகும். ஆதலின் ஓம் என்ற சொல் உலகத்தோற்றத்தையும், ஒடுக்கத்தையும் உண்டுபண்ணும் இறைவனைக் குறிக்கும். இச்சொல்லை அ, உ, ம், எனப் பிரித்தால், ஆக்கல், அளித்தல், அழித்தல் எனும் இறைவனது முத்தொழிலையும் குறிக்கும்' சாமிநாதப்பெருமான் சிவபெருமானுக்குப் பிரணவம் ஓதியதனை அருணகிரியார்

''கொன்றைச் சடையார்க்கு ஒன்றைத்
தெரியக்
கொஞ்சித் தமிழாற் பகர்வோனே''

எனக்கூறியிருப்பதனையும், சித்தர்கள் அ-உ-ம் ஆகிய மூன்றெழுத்துக்களையும் முத்தமிழ் என வழங்கியிருத்தலையும் நோக்குக. வடமொழிக் கூர்மபுராணம் பாதுகாப்பவன் என்ற பொருளில் இறைவன் ஓம் எனப்படுவான் என்று கூறுகிறது. ஆனல் இப்பொருளில் தமிழிற்றான் 'ஓம்' சொல்லடியாக வழங்குகின்றது. ஓம்பு, ஓம்படை என்ற சொற்களின் பொருளை நோக்குக. தொல்காப்பியம், அகரவுகரம் ஔகாரமாகும் எனக்கூறியிருப்பவும், பாணினீயம் அகரவுகரம் ஓகரமாகும் எனக்கூறியிருப்பதனுல் ஓம் என்ற சொல் தமிழ்ச் சொல்லாகாது. வடசொல்லே எனச் சிலர் மறுத்துக்கூறியுள்ளனர். இவர்கள் தொல்காப்பிய நூற்பா அகரவுகரம் ஔகாரமாகும் எனப்போலியாக வருதலையே குறிக்கின்றதென்பதனை உணரார். மேலும், உலகில் தமிழிற்றான் முதன்முதல் ஒலியெழுத்துக்களும், அவற்றிற்குரிய குறியீடுகளும், அவற்றின் வைப்புமுறையும் உண்டாயின வென்பதனையும், நெடுங்காலம் எழுத்தின்றியிருந்த வடமொழி தமிழ் எழுத்தின்வைப்பு முறையைப்பின்பற்றித்தான் எழுத்துமுறை வைப்பினைக்கற்றுக் கொண்டதென்பதனையும் இவர்கள் உணரார். அகரவுகரம் ஓகரமாதலைத் தமிழ் உயிரெழுத்துக்களின் வைப்பு முறையிலிருந்து உணரலாகும். தொல்காப்பியத்தின் பிறப்பியலையும், யாம் எழுதியுள்ள 'உலகப்பொது தமிழ் எழுத்தொலி' என்ற நூலையும் நன்கு கற்றறிந்தோர் இவ்விடர்ப்பாட்டிற்குள்ளாகார்.

## ஆகமம் என்ற சொல்லின் பொருள் :

ஆகமம் என்ற சொல் வடசொல்லே. தமிழிலிருந்து வடமொழிக்கு வந்தமையால் 'வந்தது' என்னும் பொருள் கொண்ட இச்சொல்லை ஆரியர் ஆகமங்களுக்கு இட்டு வழங்கினர். ஆரியர் ஆகமங்களை அவைதிகம் என்று கூறுவதனுல் வேதங்களுக்கும் ஆகமங்களுக்கும் யாதொரு தொடர்பும் இல்லையென்பது புலனுகின்றது. தலைசிறந்த உபநிடதங்களில் ஒன்றான சாந்தோக்கிய உபநிடதம் ஆகமஞானமாகிய தமிழரது தத்துவ ஞானத்தை நான்கு பிராமணர்கள் ஓர் (தமிழ்) அரசனிடமிருந்து பெற்றனர் என்று கூறுகின்றது. ''திருவையாற்றின் ஏழூர் விழா'' என்ற எம் நூலில் 'சைவசமயத்தின் தொன்மையும் சிறப்பும்' என்ற கட்டுரையில் ஆகமத்தைப்பற்றிய விரிவான ஆராய்சியைக் காண்க.

இனி, சைவ நூல்களில் காணப்பெறும் வேதம், வேதாந்தம் என்பன போன்ற சொற்களின் பொருள் மாறுபாட்டிற்குரிய காரணத்தை விளக்குவாம். இதனை அறிதற்கு, பரஞ்சோதி முனிவர் தமது திருவிளையாடற்புராணத்தில் ஆளுடைய நம்பி வணக்கமாகக் கூறியிருக்கும் பாடலில் வரும், 'அளவில் வேதஞ்சாற்றிய தலைவன் தன்னை' என்ற சொற்றொடர் சிறந்த திறவுகோலாகும். வடமொழியில் நான்கே வேதங்கள் உளவாகவும் இறைவனை அளவில் வேதஞ்சாற்றிய தலைவன்' எனக் கூறியிருப்பதேன் ? இதற்கு, இறைவன் தனது ஞானசக்தியால் ஆன்மாக்களுக்கு அளப்பரிய சிவஞானத்தை ஊட்டுவித்தவன்' என்றே உபசார வழக்கால் பொருள் கோடல் வேண்டும். வேதம், வேதாந்தம் எனுஞ்சொற்கள் வரும் இடங்களில் எல்லாம் அவை ஆகமங்களையும், உப

நிடதங்களையும் குறிக்கின்றன எனக் கொள்ளுதலே சாலும். வேதாகமம் என்ற சொற்றொடர் வழக்கை ஓர்க. 'வேதநெறி தழைத்தோங்க' என்ற சேக்கிழார் பெருமான் வாக்கிலும், ''ஓரும் வேதாந்தம் எனும்'' என்ற குமரகுருபரர் வாக்கிலும் ''வேதாந்த சித்தாந்த சமரச'' என்ற தாயுமானுர் வாக்கிலும் பயின்றிருக்கும் வேதாந்தம் என்னும் சொல் உபநிடதங்களையே குறிக்கின்றன.

## வேள்வி செய்தல்-வேதம் ஓதுதல் :

இனி, தமிழ் மக்கள் ஏற்றுக் கொண்டிருக்கிற இரு ஆரியச் சடங்குகளைப்பற்றி விளக்குவாம். வேள்வி செய்தல், தமிழர் பழக்கமன்றென்பதனை, இருக்கு வேதத்தில் ஆரியர்களின் பகைவர்கள் வேள்வி செய்யாதவர்கள் என்று ஏசப்பட்டிருப்பதிலிருந்து அறியலாம். எனினும், மிகப் பழங்காலத்திலிருந்தே தமிழ் மக்கள் இதனை ஏற்று வந்திருக்கின்றனர் என்பதனை, பண்டைய பாண்டிய மன்னன் ஒருவனுக்குப் 'பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி' என்னும் பெயர் அமைந்திருப்பதிலிருந்து அறியலாம். தமிழர் இதனை ஏற்றுக் கொண்டதேன்? பல தெய்வ வணக்கம் செய்து வந்த பண்டைய ஆரியர் போலல்லாமல் 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்ற கொள்கையுடைய தமிழ் மக்கள் தீயிலும், தீயின் ஒளியிலும் இறைவனைக் கண்டனர். சோதியே, சுடரே, சூழொளி விளக்கே; செம்பொற்சோதி; ஒளி வளர் விளக்கே; தூண்டு சுடரனைய சோதி; பரிதிவாழ் ஒளியே' முதலிய ஆன்றோர் வாக்குகளைக் காண்க. 'உலகறியத்தீவேட்டான் என்னு மது என்னேடி' என்ற மணிவாசகர் வாக்கினைக் காண்க. பரஞ்சோதியார் திருவிளையாடலில் தடாதகைப்பிராட்டியார் திருமணப் படலத்தில் வரும்,

> இணரெரித்தேவுந்தானே, எரிவளர்ப்பவனுந்தானே
> உணவு கொள்பவனுந்தானேயாகிய ஒருவன்'

என்ற செய்யுள் அடிகளின் பொருளையும் நோக்குக.

தமிழர்கள் ஏற்றுக் கொண்டிருக்கின்ற மற்றொரு சடங்கு, வடமொழிவேதம் ஓதுதல். இதுவும் மிகப் பழங்காலத்திலிருந்தே பயின்றுவந்ததென்பதனை, தொல்காப்பியச் சிறப்புப்பாயிரத்தில் வரும் 'அறங்கரை நாவின் நான்மறைமுற்றிய அதங்கோட்டாசான் என்ற தொடரால் உணரலாகும். சிவ வணக்கம் கூறுதனவும், விழுமிய கருத்துக்கள் இல்லாதனவுமாகிய நான்மறைகளைத் தமிழகச் சிவன்கோயில்களில் ஓதும் பழக்கம் எவ்வாறு புகுந்தது? இசையிலும், இசை ஒலிகளிலும் இறைவனைக்கண்ட தமிழ்மக்கள் இவ்வேத ஒலியினையும் ஏற்றுக்கொண்டனராதல் வேண்டும். தமிழ்மொழியின் சார்பால் பண்டைய ஆரியமொழி அதன் அடிப்படையிலேயே மாறிவிட்டதென்றும், ஐரோப்பிய ஆரிய மொழிகளாகிய கிரேக்கம், இலத்தின் முதலியவற்றிற்கும் இந்திய ஆரிய மொழிக்கும் பெரிய வேறுபாடு ஏற்பட்டுவிட்டதென்றும் மேலே கண்டோம். இவ்வேறுபாட்டால் இந்திய ஆரிய மொழியாகிய சமக்கிருதம் ஒலிநயம் பெற்றது. சமக்கிருதம் என்ற சொல்லுக்குச் செம்மையாகச்செய்யப்பட்டது என்பது பொருள் எனக்கூறுவர். 'ஓசையொலியெலாம் ஆனாய்நீயே' 'ஒலி சிறந்த வேதியர் வேதமும்': ''இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்; இருக்கொடுதோத்திரம் இயம்பினர் ஒருபால்''; 'யாழொலி, குழலொலி, கூத்தொலி, ஏத்தொலி, 'ஏழிசையாய், இசைப்பயனாய்' முதலிய தொடர்கள், தமிழ்மக்கள் இசையிலும், ஒலியிலும், இறைவன் உணர்வைப் பெற்றனர் என்பதனை வலியுறுத்தும். சைவசித்தாந்த தத்துவங்கள் முப்பத்தாறில் 'நாததத்துவம்' ஆகிய சிவதத்துவம் உச்சியில் வைக்கப்பெற்றிருப்பதனை ஓர்க. வேதவொலி உயிர்க்குறுதுணையாகாது என்ற கருத்தால், சிவப்பிரகாசசுவாமிகள் 'விளங்கிழை பகிர்ந்த' என்று தொடங்கும் அகவற்பாவில், வேதம் ஓதுதல் நெஞ்சை நெகிழ்விக்கும் ஆற்றல் இலதென விளக்கினர். 'மனோன்மணீயம்' ஆசிரியர் சுந்தரம் பிள்ளை.

'மனங்கரைத்து மலங்கெடுக்கும்
வாசகத்தின் மாண்டோர்கள்
கனஞ்சடையென்றுருவேற்றிக்கண்மூடிக்
கதறுவரோ'

எனப்பாடியுள்ளனர்.

## தத்துவ சாத்திரம்:

இனி, தத்துவ சாத்திரம் என்னும் உண்மை விளக்க நெறிகளைப் பற்றிச் சிறிதாராய்வோம். தமிழ் நெடுங்கணக்கும், இலக்கணமும், பன்னிருதிருமுறைகளும். யாம் மேற்கூறியாங்கு ஆசிரியராவார் யாவரென்று உறுதிசெய்ய முடியாத ஆசிரியர்களால் வடமொழியில் இயற்றப்பெற்ற உபநிடதங்களும் தமிழிலிருந்து வடமொழியில் பெயர்க்கப் பெற்ற ஆகமங்களும் உண்மை விளக்க நெறிகளுக்கு மூல நூல்களாம்.

சிறந்தவைகளெனக் கருதப்படும் பல உபநிடதங்களின் உட்கருத்தைத் தொகுத்துக் கூறுவது பிர்மசூத்திரம் என்னும் நூல். இது வேதாந்தசூத்திரம் என்றும் வழங்கப்படுவது. இதன் ஆசிரியர் வியாசர் என்பார் சிலர். சகுந்தலாராவ் சாத்திரி ஆசிரியரின் பெயரை 'விளக்கமாகக் கூறவில்லை. இந்நூலில் வரும் அத்வைதம் என்ற சொல்லின் அகரத்திற்கு, அன்மை, இன்மை, மறுதலை என்னும் மூன்று பொருளில் தத்தமக்கு ஏற்புடையதனைக் கொண்டு சங்கரர், இராமாநுசர், மத்துவர் ஆகியோர் தம் கொள்கைகளை நிறுவியுள்ளனர். சங்கரர் கொள்கைக்கு, வேதாந்தம், அத்வைதம், ஏகான்மவாதம், மாயாவாதமென்னும் பெயர்கள் உண்டு. இராமாநுசர் கொள்கைக்கு விசிட்டாத்வைதம் என்று பெயர். மத்துவர் கொள்கைக்குத் துவைதம் என்று பெயர். இவர்களைப் பின்பற்றிச் சைவசித்தாந்திகள் தம் கொள்கைக்குச் 'சுத்தாத்வைதம்' எனும் வடமொழிப் பெயரைக் கொண்டிருக்கின்றன. சங்கரர் கொள்கையை மணிவாசகர், 'மிண்டிய மாயாவாத மென்னும் சண்டமாருதம்' எனக் கண்டித்திருக்கின்றார். மேற்கூறிய மூவர் கொள்கைகளையும், புத்தமத, சைனமதக் கொள்கைகளையும் அருணந்தி சிவாச்சாரியார் தமது சிவஞானசித்தியார் என்னும் நூலின் பரபக்கத்தில் விளக்கி மறுப்புக் கூறியுள்ளார்.

"கண்ணுதல் நின்விளையாட்டு' என்ற எம் நூலின்
அத்துவித முத்தியென்பதாணவ மென்னுமலம்
செத்தபின் உண்டா மெனிற் சிவனே—சித்தே
இரண்டற ஒன்றற ஈண்டுதல் ஆமோ
முரணின்றிக் கூறவெற்கு முந்து"
இரண்டில்லை ஒன்றென்பார் என்னையிலை என்பர்
இரண்டென்பார்வீடில்லை என்பர்—முரண்டாமல்
மூன்றென்பார் ஒன்றிரண்டாம் அத்துவித முத்திகண்டார்
என்றுகொண்டின்பெய்து வீர்.

ஆகிய இரு வெண்பாக்களிலும், ஏகான்மவாதம், துவைதம் என்னும் இருகொள்கைகளையும் மறுத்து, சைவசித்தாந்தக் கொள்கையினை நிறுவ முயற்சி செய்துளோம்.

## சைவ சித்தாந்தம் :

உயிரின் இயல்பினையும், பாசத்தால் உண்டாகிய உடலின் இயல்பினையும் நன்குணர்ந்த நம் பண்டைய தமிழ்ச் சான்றோர் தமிழ் நெடுங்கணக்கின் எழுத்துக்களை உயிர் என்றும், மெய் என்றும் பிரித்தமைத்தனர். உலகில் வேறெம்மொழி எழுத்துக்களுக்கும் இன்னணம் பெயர்வைக்கப்படவில்லை, தமிழில் மெய்யெழுத்து ஒரு சொல்லின் முதலெழுத்தாய் வராது. வடமொழி ஆங்கிலம் போன்ற மொழிகளில் மெய் சொல்லின் முதலெழுத்தாக வரலாம். ஆதலின் சைவசித்தாந்த கொள்கையின் அடிப்படை தமிழ் நெடுங்கணக்கிலேயே அமைந்துள்ளது. தமிழ் நெடுங்கணக்கும் தொல்காப்பியமும் சைவ சித்தாந்தத்தின் அடிப்படையாகும் என்பதனைக் காலஞ்

சென்ற பேரறிஞர் பா.வே. மாணிக்கநாயக்கர் கீழ்வருமாறு விளக்கியிருக்கின்றார்: ''ஆய்தம் தனிநிலை என்ற பெயர்க்கேற்பப் பதியா கின்றது. மெய் பாசமாகின்றது. மெய்யின் மூவினங்களும் மும்மலங்களைக் குறிக்கின்றன வினையின் காலங்கள் மூன்றும் சஞ்சிதம், பிராரத்துவம், ஆகாமியம் ஆகிய வினைகளைக் குறிக்கின்றன. 'வினையின் நீங்கி, விளங்கிய அறிவின் முனைவன்' என்ற தொடர் முதல் வன் இயல்பைக் கூறுதல் வெளிப்படை'' இவற்றின் விளக்கங்களை விரிவஞ்சி விடுத் தாம்.

தொல்காப்பியம், திருக்குறள், பன்னிரு திருமுறைகள் ஆகிய நூல்களிற்கண்ட அடிப் படை உண்மைகளான, பதி, பசு, பாசமா கிய முப்பொருள்களையும்பற்றி, இலக்கணம், தருக்கம், அளவைநூல்கள் இவற்றின் விதி களினின்றும் வழுவாமல், பதினன்கு மெய் கண்ட நூல்களும் விரிவாக விளக்குகின்றன. சிவாகமங்களும் இவற்றிற்கு உறுதுணையாய் நின்றன. சைவசமயத்தின் பரந்த நோக்கினைக் கீழ்க்கொடுத்துள்ள மேற்கோள்கள் செவ்வி தின் விளக்கும் :

'' யாதொரு தெய்வங்கொண்டீர்,
அத்தெய்வமாகி ஆங்கே
மாதொரு பாகனர்தாம் வருவார் ''
(அருணந்திசிவாச்சாரியார்)

'' விரிவிலா அறிவினர்கள் வேறொருசமயஞ் செய்து
எரிவினுற் சொன்னாரேனு மெம்பிராற் கேற்றதாகும் ''
(திருநாவுக்கரசர்)

'' அப்பாலு மடிசார்ந்த வடியார்க்கு
மடியேன் '' (சுந்தரர்)

'' எவ்வெவர் தம்மையேனும் யாவரே யெனினும் போற்றின்
அவ்வவர் இடமாக்கொண்டே யவர்க் கருள்தருவாய் போற்றி ''
(கச்சியப்பசிவாச்சாரியார்)

திருவாசகத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த டாக்டர் ஜி. யு. போப் சைவ சமயமே இந்தியாவின் சமயங்கள் எல்லா வற்றிலும் மிக விரிவான, மிகச்சிறந்த, ஐயத் திற்கிடனின்றிப் பயனுள்ள சமயமாகும் எனக் கூறியிருக்கின்றார்.

*(Saivism is the most elaborate influential and undoubtedly the most intrinsically valuable of all the religions of India)*

## திருமுறைகள் :

இப்பெற்றித்தாய சைவசமயத்திற்குப் பன்னிற ஒளிகாலும் நவமணி இழைத்த முடி யாகத் திகழ்வது சைவத்திருமுறை இலக்கிய மாகும். எத்தகைய கல்மனத்தையும் கரை யச்செய்து அதனை இறைவன்பால் உய்க்கக் கூடிய உணர்வு மிகுதிப்பாட்டாலன்றோ இத்திருமுறைப் பாடல்களுக்கு வேற்று நாட்டினர் தம்நெஞ்சைப்பறிகொடுத் துள்ளனர். டாக்டர் ஜி. யு. போப் திருவாச கத்தைத் தம்மொழியில் மொழிபெயர்த்ததன் காரணம் யாதாகும் என்பதனைத் தமிழ் மக்கள் உன்னிப்பார்ப்பார்களாக. டாக்டர் எல். டி. பார்னெட் *(Dr. L. D. Barnett)* இந்தியாவின் இதயம் *(Heart of India)* என்ற தமது நூலில் இவ்வருட்பாடல் பனு வல்களைக் குறித்து,

'நெஞ்சை நெகிழ்வித்து உடலை விதிர் விதிர்க்கச் செய்யும் உருக்கமும், அழகொழு கும் பெருமிதநடையும் உடைய ஓர் இலக் கியத்தினை, அல்லது இறைவழிபாட்டிலக்கி யத்தினைத் தமிழர் சமயத்தைப்போல் உலகில் வேறு எச்சமயமும் தோற்றுவித்திலது' என எழுதியிருக்கின்றனர். ***(No cult in the world has produced a richer devotional literature or one more instinct with brilliance of inauguration, fervour of feeling and grace of expression)*** இப்பாடல்கள் நெஞ்சையுருக்கும் தரத்தனமட்டுமல்ல.

இவற்றின் அருளாற்றலும், செந்தமிழ் உறைப்பும் அரவுதீண்டி இறந்தாரை உயிர் பெற்று எழச்செய்யும் திறத்தன, எரிந்த என்பைப் பெண்ணாக எழச்செய்யும் பெற்றிமைஉடையன. முதலையுண்ட பாலனை உயிருடன் மீட்டுத்தரும் வென்றியுடையன; இன்னும் எத்தனையோ அற்புதங்களை இயற்றும் மாண்பு உடையன. இத்தகைய இலக்கியத்தினை எய்ப்பில் வைப்பாகப் பெற்றிருக்கும் தமிழ்மக்கள் செய்த தவம்தான் என்னே! கொன்னே வாணாளை வீணாகக்கழியாதீர், தமிழ்மக்களே, இவற்றைப் போற்றுமின், உணர்மின், பின்பற்றி ஒழுகுமின்.

இதுகாறும் கிளந்தெழுதியவாற்றான், நாவுக்கரசர். 'ஒருவனைப் உலகேத்த நின்ற நாளோ' எனவும், மணிவாசகர் ''என்நாட்டவர்க்கும் இறைவா'' எனவும் கூறியாங்கு, சைவசமயம் மிகமிகப் பழங்காலத்தே உலகெங்கணும் பரவியிருந்ததென்பதும், அதுவே உலகில் முதன்முதல் தோன்றிய சமயமென்பதும், அது தமிழ்ச்சமயமென்பதும், வடமொழி நான்மறைக்கும் இச்சமயத்திற்கும் யாதொரு தொடர்பும் இல்லை என்பதும், ஆரியர் தமிழருடன் கலந்து வாழ்ந்த காலத்தில் தமிழருடைய சமயக்கொள்கைகளைப் பின் பற்றத்தொடங்கினர் என்பதும், உபநிடதங்கள் இக்கலப்பினாற் போந்த பயன் என்பதும், தமிழர் ஆரியச்சடங்குகள் சிலவற்றை ஏற்றுக்கொண்டனரென்பதும் சைவ சமயம் பரந்த நோக்கினை உடையதென்பதும், சைவத்திரு முறைகள் அளப்பரிய ஆற்றல் உடையன என்பதும் ஒருவாற்றான் விளக்கப்பெற்றன என்பதுணர்க.



# மெய்கண்டார் காலம்

டாக்டர் மு. கோவிந்தசாமி, எம். ஏ., பிஎச். டி.,
துணைப் பேராசிரியர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

திருமூல நாயனார் கி. பி. 6-ஆம் நூற்றாண்டில் திருமந்திரமாகிய முதல் சைவசித்தாந்த சாத்திர நூலை எழுதியருளினார். அதற்குப் பிறகு தேவாரம் முதலியவற்றில் வளர்ந்த சைவசித்தாந்தக் கருத்துக்களையெல்லாம் இணைத்து ஆராய்ந்து சுருக்கமான முதல் நூலாக கி. பி. 12-ஆம் நூற்றாண்டின் தொடக்கம் அல்லது 11-ஆம் நூற்றாண்டின் இறுதியில் திருவெண்ணெய் நல்லூர் மெய்கண்ட தேவர் 'சிவஞானபோதம்' என்ற சைவசித்தாந்த சாத்திர நூலை இயற்றியருளினார். இதுவே சைவ—அறிஞரால் முதல் சித்தாந்த சாத்திரமாகக் கருதப்படுகிறது. சந்தானச்சாரியர் நால்வருள் மெய்கண்டாரே முதல் ஆச்சாரியராக போற்றப்பெறுகிறார்.

இவரது காலம் 13-ஆம் நூற்றாண்டெனஇதுவரை அறிஞரால் ஒப்புக்கொள்ளப்பட்டு வந்தது. கி. பி. 1232-இல் இராசராச தேவர் திரிபுவன சக்கரவர்த்திகளின் 16-ஆம் ஆண்டில் எற்பட்ட கல்வெட்டு ஒன்றினால் இம்முடிவு அறிஞரால் கொள்ளப்பெற்றது. கி. பி. 14-ஆம் நூற்றாண்டின் (மெய்கண்டாரின் மாணவராகிய, உமாபதி சிவத்தின் காலத்திற்கு முந்தி இப்பதின் மூன்றாம் நூற்றாண்டைய கல்வெட்டு அமைவதால் இக்கருத்தினைச் சைவர்கள் நம்பிவருவாராயினர். இக்கல்வெட்டில் "திருவெண்ணெய் நல்லூருடையான் மெய்கண்டதேவன் ஊருடைய பெருமாளான எடுத்ததுவலிய வேளான்" என்பவனுக்கு மெய்கண்டான் ஏரி என்ற ஏரியையும், மெய்கண்டீசுவரம் என்ற கோயிலையும் கட்டுவதற்காக நிலங்கள் மாற்றப்பட்டமை குறிக்கப்பெறுகின்றது. இதில் மெய்கண்டதேவன் ஊருடைய பெருமாளான எடுத்ததுவலிய வேளான் என்பவனை ஆசிரியர் மெய்கண்ட தேவராகவே கொண்டதனால் 13-ஆம் நூற்றாண்டுக் கொள்கையை அறிஞர் ஏற்பராயினர்.

ஆனால் இக்கருத்து பிழைபட்டது என்பதனை 12-ஆம் நூற்றாண்டைய திருவதிகைக் கல்வெட்டு ஒன்று எடுத்துக்காட்டுகின்றது. அக்கல்வெட்டு கி. பி. 1124-இல் விக்கரம சோழதேவன் காலத்தில் மனவாசகம் கடந்தார், என்பவர் பிரம்மதேசம் காய்வான் தண்டலம் சதுர்வேதியில் கலத்து பள்ளிசுவரமுடைய சிவனுக்குப் பூசைக்காக நிலங்களை விலைக்கு வாங்கியதுபற்றிக் கூறுகின்றது. கல்வெட்டு இம்மனவாசகங் கடந்தாரை ஆண்டார் என்று அடைமொழியுடன் பாராட்டுகிறது. ஆண்டார் என்பவர் குரு, சிவபூசை செய்பவர் எனவெல்லாம் பொருளாகும். பெரிய புராணத்துச் சிவகாமியாண்டார் என்ற பெயரினைக் கொண்டு இதனை உணரலாம். மற்றும் கல்வெட்டுக்களில் இவ்வழக்கு காணப்பெறுகின்றது. இவர் இங்ஙனம் சிவனடியாராக இருத்தலாலும் கல்வெட்டுத் திருவதிகையில் தோன்றியதாக இருத்தலாலும், இவரை மெய்கண்டாரின் வழிவந்த மாணவருள் ஒருவராகிய திருவதிகை மனவாசகங் கடந்தார் என்றே கொள்ளத்தகும். இதனை அறிஞர் மனத்துள் உணர்ந்தே உள்ளனர். சித்தாந்த

சாத்திர சமாசப் பதிப்பில் திரு அனவரத விநாயகம் பிள்ளை அவர்கள் இத்திருவதிகைக் கல்வெட்டினைத்தம் முன்னுரையில் குறிப் பிட்டுள்ளார்கள். எனினும் சைவர்கள் முன்பு சில அறிஞரால் ஏற்படுத்தப்பெற்ற முடிபினை வீணே மாற்ற வேண்டாமென்று அப்படியே பின்பற்றி வந்தனர். சமய நம் பிக்கைகளில் முதலில் ஒன்று ஏற்பட்டுவிட் டால் அது அவ்வளவு எளிதாக மாறுவதில்லை மாணவராகிய மனவாசகங்கடந்தார் 12-ஆம் நூற்றாண்டின் முதற் கால்பங்கினராஞல் ஆசிரியர் (மெய்கண்டார்) அவருக்கு முந்திய வராகத்தானே இருக்க வேண்டும். எனவே அவர் 12-ஆம் நூற்றாண்டின் தொடக்கத் திலோ அல்லது 11-ஆம் நூற்றாண்டின் இறுதியிலோ இலங்கியிருக்கத்தகும். மன வாசகங்கடந்தார் தம் நூலாகிய உண்மை விளக்கத்தில் மெய்கண்டாருக்கு வணக்கம் கூறுகிறார்.

இனி 13-ஆம் நூற்றாண்டைய திருவண்ணா மலைக் கல்வெட்டாகிய எடுத்தது வலிய வேளான் கல்வெட்டை எவ்வாறு பொருள் செய்வது என்ற கேள்வி எழும். ஆணவத்தை வெறுத்து, ஆணவத்திற்கு இலக்கணம் கேட்டபொழுது அருள்நந்தி சிவாச்சாரி யரையே குறித்த மெய்கண்ட தேவரோ தம் பெயராலேயே மெய்கண்டான் ஏரி, மெய் கண்டீச்சுரம் என இடங்களைத் தோற்று வித்திருப்பாரா ? இஃது அடாததாகும். மற்றும் எடுத்தது வலிய வேளான் என்ற வேறு பெயர்களும் மெய்கண்டாருக்கு இருந்ததில்லை. ஆனால் சுவேதவினைப்பெரு மாள் என்ற வேறு பெயரே அவருக்கு இருந் ததாகக் காண்கிறோம். எனவே, இக்கல் வெட்டுக் குறிக்கும் எடுத்தது வலியான் வேறொருவனாக வேண்டும் அவன் மெய் கண்டதேவரின் ஊருடையவனாக, அதாவது திருவெண்ணெய் நல்லூர் உடையவனாக வேண்டும். அவன் முன்பு விளங்கிச் சிவ ஞான போதத்தால் தலைமை பெற்ற மெய் கண்டதேவர் நினைவாக அவர் பெயராலேயே மெய்கண்டான் ஏரி, மெய்கண்டீச்சுரம் என்ற இடங்களை ஆக்கி இருத்தல் வேண்டும்

இவ்வாறு முன்னைய பெரியவர்களுக்குக் கோயில், குளங்கள் எடுத்தல், மரபிற்கு உரியதே ஆகும்,

இராமாநுசர் முதலியோர் வாழ்ந்த முதற் குலோத்துங்கன் காலத்தில் தத்துவப் பேரா சிரியராகிய மெய்கண்டார் விளங்கித் தம் நூலை இயற்றினார் என்பது வரலாற்றிற்குப் பொருத்தமுடையதே ஆகும். எனவே இவர் மாணவருள் ஒருவராகிய மனவாசகம் கடந்தாரையும், திருவதிகைக் கல்வெட்டு மனவாசகம் கடந்தாரையும் வேறுவேறனல் பொருந்தாது. கல்வெட்டு மனவாசகம் கடந்தாரைத் திருப்பணி செய்யும் ஆண்டார் என்றே குறிக்கிறது- கல்வெட்டின் பொரு ளும் அவர் சிவபூசைக்காக நிலம் வாங்கிய தாகவே உள்ளது. எனவே, இவர் வேறான வர் என்பதற்குரிய தெளிவான காரணங்கள் காணப்பட்டாலன்றி மெய்கண்டாரின் மாணவரே என்பதில் ஐயமில்லை.

சந்தானச்சாரியர் நால்வரென்றும் அவர் கள் மெய்கண்டார் அருள் நந்தி சிவாச்சாரி யார், மறைஞானர் உமாபதி சிவம் என்றும் கூறப்படுவர். அவருள் அருள்நந்தி, மெய் கண்டார் மாணவர் எனவும், உமாபதி சிவம் மறை ஞானருடைய மாணவரெனவும் கொள்ளுதற்குரிய குரு வணக்கப் பாடல்கள் (ஆதாரங்கள்) கிடைக்கின்றன. ஆனால் மறைஞானர் அருள் நந்தியின் நேர் மாணவர் என்பதற்குரிய ஆதாரம் எதுவும் கிடைக்க வில்லை. எனவே, இவர்கள் காலத்தாலின்றிச் சிறப்பினாலேயே நால்வர் சந்தானச்சாரிய ரெனத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர். இவ் வகையில் 12-ஆம் நூற்றாண்டிற்குரிய ஆசிரிய ருக்கு 14-ஆம் நூற்றாண்டிற்குரியவர் மாண வராக இருந்திருக்கலாம். இங்கு குருசிஷ்ய பரம்பரை (தலைமுறை) நான்கு அதற்குரிய கால இடையீடு சுமார் 100—120 ஆண்டு களாகத்தானே இருக்க முடியும் என்றெல் லாம் விவாதிக்க வேண்டியதில்லை.

மெய்கண்டாருக்கு இருந்த 49 மாண வருள் ஒருவராக மனவாசகம்கடந்தார் கரு

தப் பெறுகிறார். அவர்தம் நூலில் மெய்கண்டாரை ஆசிரியர்க்குரிய பெருமைகள் எல்லாவற்றோடும் கூட்டித் தம் நூலில் குரு வணக்கம் செலுத்துகிறார். எனவே மெய்கண்டார் காலத்திலேயே வாழ்ந்த மாணவ (ஆச்சாரி) யராக அவர் இருந்திருக்க வேண்டும். அவரது 12-ஆம் நூற்றாண்டின் முதல் காற் பகுதிக்கு முன்மெய் கண்டார் இருந்திருக்க வேண்டும்,

இதனால் சைவ இலக்கிய வரலாற்றிலேயே ஒரு பெரிய மாறுதலும் பெருமையும் கூட ஏற்படுகின்றதெனலாம்.



# பழந்தமிழ் காட்டும் கனுத்திறன்

இர. குழந்தைவேலு எம். ஏ.,
தமிழ்த் துணைப் பேராசிரியர், பூ. சா. கோ. கலைக் கல்லூரி, கோவை.

## 1

இந்நாளில் அறிஞர் பலரும் முதற் பழம்பெரும் நூல் தொல்காப்பியத்தொடு பெருந்தொகுதிகள் ஆகிய பத்துப் பாட்டையும் எட்டுத் தொகையையும் பழந்தமிழ் நூல்களாகக் கருதுகின்றனர். இப் பழந்தமிழ் நூல்கள் கனவினைக் குறித்த பல்வேறு திறன்களை மேம்பாட்டொடு பலநிலையில் சிறப்பித்துக் காட்டுகின்றன. அக் கனுக் கூறுகள் உளவியல் பொதிந்த நுட்பம் வாய்ந்து உயர்ந்தன என்று கருத இடமுண்டு. புலமைத்திருவினர் வெளிப்படுத்தும் திண்மை செறிந்த புலப்பாட்டால், அக் கனுச் செய்திகள் பல இந்நாளைய உளவியல் நூல்கள் கூறும் வளர்ந்த கருத்துக்களுக்குப் பொருந்துவன. ஆதலான், பழந்தமிழ்ப் பாடல்கள் ஓர் ஒழுங்கு தோன்ற வளப்படுத்திக் கையாண்ட கனுப்பொருள் நலங்களைப் பொருந்திய உளவியல் எண்ணங்களோடு ஒப்பிட்டுக் காணும் இணைநெறியைப் போற்றிக் கொள்ளுதல் வேண்டும். இவ்வழியில் விளங்கும் பொருள் விரிவெல்லாம் உணர்த்தும் உண்மைகளையும் நுட்பங்களையும் பகுத்து ஆய்ந்து அறிதல் தகும்.

## 2

கனவினைப் பற்றிய செய்திகள் தொல்காப்பியத்துள் குறிக்கப்பட்டுள. அச்செய்திகளைத் தொல்காப்பியம் தரும்,

"காதல் கைம்மிகக் கனவின் அரற்றலும்"
"கனவும் உரித்தால் அவ்விடத் தான"
"நாணுதல் துஞ்சல் அரற்றுக் கனவெனுஅ"
"கண் துயில் மறுத்தல் கனவொடு மயங்கல்"

என்னும் நூற்பாக்களின் பகுதிகள் [1] சிலவற்றால் இங்கு அறியலாம்.

மனத்தகத்தோரைச் சுரந்து மிகும் காதலால் எண்ணும் நெஞ்சத்திறத்தினை நிலைக்களனாகக் கொண்டும், காதலர் பிரிவில் காமம் இடையீடுபட்ட வழி எழும் மனநிலையினைத் தழுவிக்கொண்டும் கனு வரும் என்பர் தொல்காப்பியர். அங்ஙனம் உறக்கத்தில் உள்ளத்தைப் பற்றுக்கோடாகக் கொண்டு கனு நிகழ்தலைப் பலவுஞ் சொல்லி வாய் வெருவுதல் அறிவிக்கும் எனவும், உள்ளத்தில் ஏற்பட்ட கனவின் தூண்டுதல் நனவுள்ளத்தோடு இணைந்து, ஒரு பொருளைப் பலகாற் கூறும் வாய் வெருவுதலாக — உடலைச் சார்ந்த அரற்றுதலாக — வெளிப்படும் எனவும், அக்கனுவின் நிகழ்ச்சி நனவில் தோன்றும் காட்சியை ஒத்து நின்று நனவே என்று மயக்கவல்லது எனவும் தொல்காப்பியர் கருதினமை பொருளதிகாரத்தால் புலப்படும்.

இப்பிரிவில் தெளிவாகும் பொருட்பாகு பாட்டுக் குறிப்புக்கள் :

(அ) காமம் பரவிய நெஞ்சத்து வேட்கையை அடிப்படையாகக் கொண்டு கனு எழுதல்.

(ஆ) உள்ளத்தைச் சார்ந்து கனு உண்டாகுதல்.

(இ) கனவில் நிகழும் உள்ளத்தூண்டுதல் உடலில் விளங்குதல்.

(ஈ) கனவின் காட்சிக்கும் நனவின் நிகழ்ச்சிக்கும் ஒப்புமை கூறுதல் கூடும்.

## 3

பேயும் பிசாசும் கனவினை உண்டாக்கும் என்னும் கருத்தினர் பாபிலோனியர். இக் கருத்தினைச் சிறிது மாற்றிக் கடவுளாலும், கடவுள் வல்லமை வாய்ந்தோராலும் படைக்கப் பெறுவது கனு என்னும் எண்ணத்தில் எகிப்தியர் நம்பிக்கை வைத்தனர். இவ்வகை எண்ணங்கள் பொய்த்துப் போக, உள்ளத்தினின்றும் கனு விளைதலை உளவியலறிஞர் வெளியிட்டனர். எனவே, கனவிற்கிடையே கடவுளைப் பற்றிப் பண்டைத் தமிழ் இலக்கியத்தில் குறிக்கப்பெற்ற குறிப்பு ஈண்டுக் கருதற்குரியது.

நள்ளிரவில் தலைவனைக் கண்டு உவப்புற்றுத் தோட்டத்திலிருந்து பெயர்ந்தாள் தலைவி அங்ஙனம், அவள் மீண்ட அச் செயலையே கண்ணுறக் கண்ட அன்னை ஐயுற்றாள். அன்னையின் ஐயத்தைக் களைதற்குத் தலைவியின் செயலை வெளிப்படுத்திக் காட்டாது, கரந்து விளங்கக் காத்துத் தன் வாய் வல்லமையால் தனி விளக்கம் அமைத்து, அன்னையார் கனுக் கண்டுள்ளார் என்றே விளம்பினாள் தோழி. அத்தோட்டத்தில் ஒரு தெய்வம் தாம் வேண்டும் உருவங்கொண்டு வரும் என்பதும், அன்றியும் அங்கு உறங்குவோரை நனவினது உண்மைத் தோற்றத்தினை ஒத்த கனவின் நிகழ்ச்சி மருட்டலும் உண்டு என்பதும் அகநானூற்றுத் தோழி இசைத்த விளக்கத்தின் இருகூறுகள். [2]

தலைவிக்குக் காதல் தலைவனால் கண்ட நோய், முருகக் கடவுளால் வந்தது என்று மாறாக நம்பிக்கை வைத்த அன்னைக்கு வெறியாட்டால் அந்நோய் நீங்கும் என்பது எண்ணம். மலைவாழ் தலைவனது காதல் உருக்கம் தர வந்த நோய் அஃது என்பதனை முருகக் கடவுளே தாய்க்கு நனவில் கண்ணெதிரே குறிப்பாகத் தெளியச் செய்தல் வேண்டும் என்றும், கனவில் அக்கடவுளே தம் வடிவத்தொடு தோன்றியும் அறிவித்தல் வேண்டும் என்றும் நற்றிணையகத்துத் தோழி ஒருத்தி விழைந்தாள். [3]

கனவில் காதலனைத் தழுவியது நனவிலும் தளராது நிறைவேறுதற்கு அருள் சுரந்தருளுமாறு காதலி ஒருத்தி முருகப்பெருமானை வேண்டி இறைஞ்சினாள் என்று பரிபாடல் எடுத்துரைக்கின்றது. [4]

மேலை விளக்கங்களில் அறியப்பெறும் செய்திகள் :

(அ) கடவுள் கனவில் தோன்றுதல் கூடும் என்ற எண்ணம்.

(ஆ) தெய்வச் சார்புற்ற இடங்களில் உறங்குங்கால் எழும் கனு மருட்டுதலும் கூடும் என்ற ஒரு நம்பிக்கை.

(இ) கடந்த காலத்து உலகியல் நம்பிக்கையினைத் தழுவி உருக்கொண்ட எண்ணம், அழுந்திக் கிடந்த உள்ளத்தினின்று கனுவாக வெளிப்படுதல் என்பதே அந்த நம்பிக்கை.

(ஈ) கனவில் வந்த நலம் வழிபடு தெய்வத்தால் நனவிலும் வாய்த்திடல் கூடும் என்ற எண்ணம்.

(உ) நனவில் — நாள் வாழ்க்கையில் — குறைவற்ற நலம் பல நிறைவேறுதற்கு மக்கள் இயல்பாக இறைவழிபாட்டிற்கலந்து இறைஞ்சுதலை ஒத்ததே மேலை எண்ணம்.

(ஊ) கடவுளால் கனு உண்டாக்கப் பெறுதல் உண்டு என்ற குறிப்பு முன்னைப் பழந்தமிழ் நூல்களில் இல்லை என்ற மேன்மை.

## 4

கனா உடல் உள்ளத்தைச் சார்ந்து எழ வல்லது என்னும் கருத்தும், காம வேட்கை வழியிலும் வேறுவகை விருப்பத்து அடிப்படையிலும் கனா முகிழ்க்கும் என்னும் கருத்தும் இங்கு நோக்கத்தக்கவை. அக்கொள்கைகள், பழந்தமிழ் நூல்களில் உளவியல் நூல் கருத்தைச் சேர்ந்த உயர்வில் மதிக்கப் பெற்றிருத்தலை அறிந்து மகிழ்தல் இயலும். அடுத்து, இரு பிரிவுகளாக உள்ளமும் உடலும் விளங்குதலால், ஒரு பிரிவின் தூண்டுதல் மற்றொரு பிரிவில் மாறுதலைத் தோன்றச் செய்தல் இயல்வதே என்று தெளியச்செய்வர் உளவியலறிஞர்.

வேந்தன் ஒருவன் நல்கும் பரிசிலின் மேல் பெருகிய காதலால், கனவிலும் அவன் புகழையே தம் நெஞ்சம் பாராட்டிக் கூறும் — அரற்றும் — என்று கூறுவார் போலப் புலவர் ஒருவர் புறநானூற்றில் குறிப்பிடுவர்.[5] பதிற்றுப்பத்தில், கனவின் உரையாடலிலும் தன் நெஞ்சறியப் பொய் கூறுதலை யறியான் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்று குமட்டூர்க்கண்ணனார் பாராட்டுதல் உன்னத்தக்கது.[6] கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் கனவிலும் தன் துன்பத்தைக் களைதற்குப் பிறரை இரந்து வேண்டியறியாத நெஞ்சம் வாய்ந்தவன் என்று பரணர் பெருமையாகப் புகழ்ந்தவரானார்.[7] இவ்வண்ணம் திரட்டியவற்றில், உள்ளத்தைச் சார்ந்து கனா வரும் என்னும் நுட்பம் குறிப்பாகப் பதிந்துள்ளது என்பது வெளிப்படும்.

தேன்தங்கிய காந்தள் மலர்க்குலையில் உறங்கிய வண்டு, யானையின் கன்னத்தில் இறங்கும் மதநீரைக் கனாக் காட்சியில் கண்டது.[8] தாழை மரக்கிளை மீது தன் பெடையோடு நள்ளிரவில் தங்கியிருந்த கடற்சிறு காக்கை, வெள்ளிய இறால்மீனைக் கனவில் கண்டது.[9] உள்ளூரில் விளங்கும் மா மரத்து உயர்ந்த கிளையினைப் பற்றிக்கொண்டு உறங்கும் வாவல், நெல்லிப் பழத்துப் புளிச் சுவையைக் கனாக்கண்டது.[10] ஈண்டுப் பழச் சுவையும், மீன் நிறமும் கூறப்பெறுதல் குறிப்பிடத்தக்கது. வண்டு விழைந்து சுவைக்கும் மதநீரும், காகம் விருப்புற்று உண்ணும் இறால்மீனும், வாவல் வேட்கையொடு நுகரும் கனிச்சுவையும் கனாச்சுவையாக வருதல் நன்கு விளங்கும். இவ்வகை நோக்கில், சுவையுணர்ச்சியால் சுவைப்பொறி தூண்டப் பெற்றுத் தொழிற்படும் உண்மையினை நினைவிற்குக் கொண்டுவருதல் வேண்டும்.

காதலன், மெய்யுறத் தன் கனவில் அணையப்பெற்றதைக் காதலி ஒருத்தி இயம்பியுள்ள செய்தி குறுந்தொகையிலும்,[11] காதலன் மார்பினைக் காதலி நெருங்கியிருக்கக் கனவில் கண்டதைத் தோழி உரைத்துள்ள குறிப்பு ஐங்குறு நூற்றிலும்,[12] பிரிவால் வாடிய கவின் சிறக்கத் தன்னைக் காதலன் கனவில் தழுவிய முயக்கத்தைக் காதலி மொழிந்துள்ள கருத்துக் கலித்தொகையிலும்[13] கனவாக விளங்கும் நிகழ்ச்சிகள் காம வேட்கையாலும் கனா முகிழ்த்தல் இயலும் என்னும் கொள்கையினை நினைப்பூட்டவல்லன.

மேற்கூறிய விளக்கங்களால் தெளிவாகும் குறிப்புக்கள் :

(அ) உடல் உள்ளத்தைக் கூடிக் கனாக் காட்சி உண்டாகும்.

(ஆ) காம வேட்கையும் முன்னைய விருப்பமும் கனவில் பொங்கிவழிதல் உண்டு.

(இ) கனவில் சுவை உணரப் பெறுதலும், நிறம் விளங்கப்பெறுதலும் உண்டு.

## 5

நாட்டின் பண்பாட்டிலிருந்து தனித்த சில கூறுகளையும் கனவினைத் தெளிதற்குக் கருத்தில் கொள்ளுதல் வேண்டும் என்பர் உளவியல் நூலார். எனவே, சங்க இலக்கியப் பரப்பில் விளங்கும் சில கனாக்களைப்

பகுத்தறிந்து, உட்கருத்தைக் காண்பதற்குப் பழந்தமிழர் பண்பாட்டுக் கூறுகளை ஈண்டு அக்கனுக் குறிப்புக்களோடு இணைத்துக் காணுதல் விழுப்பம் தரும்.

குடக்கோ இளஞ்சேரலிரும்பொறையின் மனைவி, தன் கனுக் காட்சியிலும் நெஞ்சு மாருது கணவனொடு வாழும் புகழ் அமைந்த பண்பாட்டுத் திண்மை உடையவள் என்ற தகுதியினைப் பெருங்குன்றூர்கிழார் மதித்து மொழிந்துள்ளார்.[14] தலைவன் வரைதல் ஒருதலை என்பதனைத் திட்பமாக எண்ணிய தோழி பண்பாட்டின் மாண்பாகக் கனவிலும் அவன் தலைவியைவிட்டு விடுதலை அறியான் என்று உரைத்துள்ள திறம்ஓர் அகநானூற்றுப் பாடலால் தெள்ளிதின் அறியப்பெறும்.[15]

இப்பிரிவின் விரிவில் வெளிப்படும் சில கருத்துக்கள் :

(அ) தமிழ்ப் பண்பாட்டின் அடிப் படையான 'ஒருமை மகள் – மகன்' என்ற உணர்வும் கனவின் செய்தியில் கலந்திருத்தலை உணரலாம்.

(ஆ) நனவு நிலைக்கு முரணுகக் கன வில் நெஞ்சம் நெகிழ்ந்து மாறுதலும், மனம் வேறுபட்டு விட்டு விலகுதலும் அமைதல் உண்டு. எனினும், அக்கனவிலும் பண் பாட்டு வழிக்குத் தாழ்வு தோன்ருது விளங்கு தல் எண்ணத்தக்கது.

## 6

மக்கள் கூட்டத்திலிருந்து விலகித் தொலை வில்தனித்து உடல் தளர்ந்திருக்கப் பகற் காலத்தினும், ஏனைய சாயுங்காலம், நிலா ஒளி வடிக்கும் காலம் முதலிய காலங்களிலே பகற் கனு மிகுதியாக எழவல்லது என்பதும், அக் கனவில் கனுக் காண்போரே முதலிடம் பெறும் மாந்தராக விளங்குதல் உண்டு என் பதும் நனவு உள்ளத்தினின்று பகற்கனுக் களில் பல மலர்தலால் அக்கனுக்கள் வழங் கும் தோற்றம் வேற்று வடிவங்கொள்ளாது காட்சி அளிக்கும் நிகழ்ச்சியும் நாள் வாழ்க்கை யின் நிகழ்ச்சியும் தனித்தனியே பிரித்து வேறு பாடு உணர்தற்கு அரிய வகையில் இணைந்தே இருத்தலைத் தெளியலாம் என்பதும், பெரி தும் ஆடவர் காணும் பகற்கனு, வாழ்க்கை யில் நடக்கக் கூடியதாக அமைவது என்ப தும் உளவியல் நூலார் அழுந்த ஆராய்ந்த உண்மைகள் :

பகற்கனவில் நிறுத்திக்கூறலாகும் திறன் பல சேர்ந்த மேலை உளநூல் செய்திகள், இப் பிரிவில் குறிப்பிட்டுக் கருதத்தக்கவை.

மாலையில் தாழ்ந்து தோன்றும் கதிரவன் ஒளி மங்கி மறைந்தபொழுது அது. பெருங் காட்டின் அரிய வழியே மேற்கொண்ட செலவில், தலைவன் நடை தளர்ந்து வருந்தும் செய்மையினை அணைந்தான் ; ஆங்குத் தனி மையில் தூங்கிவிட்டான். அந்நிலையில் கனு விளைந்தது. முன்கையிலிருந்து கழன்ற வளை யல்களைப் பொருத்தி நிற்குமாறு மேலேற்றிக் கொண்டே வருத்தத்தோடு குனிந்து பார்த்த நிலத்தைக் காலால் கீறி நின்ருள் எழிற் சிறந்த தலைவி 'இனிய நகையுடையாய்!' என்று தலைவியை விளித்தலொடு, 'நீ, வருந்தி யிருக்கும் என்னிடத்துப் பிணங்குதல் என்னை?' எனக்கேட்டு, இனிமை உண்டாகப் புருவத்தோடு நுதலைத் தொட்டுத் தடவி னன்; கூந்தலைக் கோதினன். அவ்வளவில், கலைந்த கனவை விட்டு நனவில் துன்புற்ருன். அகநானூற்றுப் பாடலொன்று தரும் பகற் கனவின் செவ்விய நிகழ்ச்சி ஓவியம் இது[16]

இப்பகுப்பின் விளக்கம் நல்கும் கருத் துக்கள் :

(அ) மாலை வேளையில் தளர்ச்சியுற்றுத் தனித்திருந்து உறங்கிய நிலையில் விரிந்த பகற் கனு இது.

(ஆ) ஆண்மகன் கண்ட இக்கனு, நாள் வாழ்க்கையில் இயல்பாக நிகழும் நிகழ்ச்சி களை ஒத்த நிகழ்ச்சிகளைத் தாங்கி நிற்றல்.

(இ) அவை நாள் நடப்பு நிகழ்ச்சிகளி லிருந்து பிரித்தறிதற்கு அரியவை.

(ஈ) இப் பகற்கனுத் தோற்றம் நனவு உள்ளத்தினின்று அரும்பியதால், நனவில் காண வாய்த்த காட்சி போன்றே மாற்ற மின்றித் தோற்றம் தந்தது எனலாம்.

(உ) இக் கனுவில், சிறப்பிடம் பெறுதற் குரிய கணவனுக்கு அத்தகுதி அமையாது, மனைவி நல்லிடம் கொண்டிருத்தல் உளவியல் நூலுக்கு ஒரு வகையில் புதுமைச் செய்தி.

# 7

எதிர்காலக் குறிக்கோளையும், அக்குறிக் கோளை எய்தற்கு வாழும் வாழ்க்கையில் நிகழும் நிகழ்காலச் சிக்கலையும் கலக்கத்தை யும் உள்ளத்து அடைப்பிலிருந்து கனு வெளி யீடு செய்து காட்டிவிடும் என்பர் உளவிய லறிஞர். இத்திறன் வளர்ந்த கருத்து நலனைச் சங்கப் பாட்டில் அமைந்த கனு நிகழ்ச்சியோடு ஒப்பிட்டுச் சுருங்க அளந்தறி தல் ஈண்டுப் பயன்தருவதாகும்.

கணவன் பொருள் ஈட்டும் விழைவில், பிரிதலைக் குறித்துப் பலநாள் எண்ணினுன். அவன் மனத்தின் ஆழத்தில் அழுந்திவிட்ட கருத்தை, 'நெடுமலையின் வெஞ்சுரத்தைக் கடந்து போய்ப்பொருள் திரட்டும் வினை முற்றி மீண்டும் வீடு வருந்துணையும், இவ் வழகி வருந்தி நெஞ்சங் கலங்காது இல்லறக் கடமைகளைத் திட்பமொடு காக்கும் வல்லமை கொண்டவளோ?' என்று, பிரிந்து புறப்படுதற்கு முன்னர்க் கண்ட ஒரு நாள் கனவில், ஏக்கத்தோடு கூறவே, மனைவி அப் பிரிவுக்குறிப்பைத் தெளிந்தாள் என்ற வாறு கனு அமைந்த செய்தியினைக் கலித் தொகையில் காணலாம்.[17]

இப்பகுப்பின் விளக்கத்து வழியில் வலி யுறும் எண்ணங்கள் ;

(அ) இல்லறக் கடமைகளைச் செம்மை யாகச் செய்தல் வேண்டும் என்னும் எதிர் காலக் குறிக்கோளில் அவன் மனம் நின்றது.

(ஆ) அக் குறிக்கோள் வாழ்க்கைக்கு வேண்டும் பொருள்வயிற் பிரிவால், மனைவி வருந்தவே இல்லறக் கடமைக்குக் குறை வருதல்கூடும் என்னும் வாழ்க்கையின் நிகழ் காலச் சிக்கலை நினைந்து அவன் மனங்கலங்கி அஞ்சினுதல்வேண்டும்.

# 8

கனவில் விளையும் காட்சிக்கும் நனவில் நடக்கும் நிகழ்ச்சிக்கும் ஒப்புமை உண்டு என்ற ஒரு கொள்கையையும் ஒப்புமை இல்லை என்ற பிறிதொரு கொள்கையையும் உளவியல் நூல்கள் எடுத்துரைக்கின்றன. இக்கொள்கைகளை விளங்கித் தோன்றவைக் கும் எண்ணங்கள் சங்கநூற் கனுக்களில் அமைந்துள்ளன.

நனவினது உண்மைக் காட்சியை ஒத்த தாகக் கனவின் தோற்றம் ஒரு தோட்டத் தின் குறிப்பிட்ட ஓரிடத்தில் துயில்வோரை மயங்கவைத்தலும் உண்டு என்பது அக நானூற்றுப்பாடலில் வெளியாகும் நம்பிக்கை.[18] பருவத்தைக் கார்காலம் அன்று என்று மறுத்த தோழிக்குத் தலைவி, அரும்புகளை நிரப்பிக் கொண்டிருக்கும் கொன்றை மரம், குருந்த மரத்தோடு சுழலவே, அது குளிர் மிக்க கார்காலம் என்றும், மறுத்தால் கன வின் தோற்றத்தைக் கூறியதாதல் கூடும் என்றும் குறிப்பாக அறிவுறுத்தியது குறுந் தொகையில் அறியப்பெறும் கருத்து.[19] கொடுவரி கொண்ட புலியைத்தாக்கி வென்ற வருத்தத்தோடு நெடிய மலையின் மருங்கில் துயிலும் யானையின் மனத்தகத்தே அது நனவு நிலையில் பொருது வென்றது நிலைத்து நிற்கவே, கனவிலும் முன்னை நிமழ்ச்சியைக் கண்டு அஞ்சி விரைந்து விழித்தெழுந்து, புது வதாக மலர்ந்த வேங்கை மரத்தைப் புலி என்று எண்ணித் தாக்கிக் கெடுத்துச் சினம் தணிந்தது என்பதும்,[20] நனவின் நிகழ்ச்சி யாகக்கொண்டு புல்லுங்கால் தலைவனைக் காணுதவளாய்த் தான் தழுவத் தலைவனைக் கண்டது கனுவே என்று உணர்ந்து செயலற் றுக் கலக்கங் கண்டாள் என்பதும்[21] கலித்

தொகைப் பாடற்பகுதிகளால் வெளிப்படும் செய்திகள்.

இப்பகுதியில் சேர்த்த கருத்துக்களால் தெரியவரும் குறிப்புகள் :

(அ) நனவில் காணும் காட்சி நிலையைப் பெரிதும் ஒத்ததாய்க் கனவிலும் தோற்றம் நிலவுதல் உண்டு.

(ஆ) நனவில் காணும் கார்காலத்திற்கு மாறாகப் பிறிதொரு பெரும்பொழுது கனவில் வரக்காணுதலும் கூடும் என்ற வகையால், நனவும் கனவும் வேறுபட்டு நிற்றல் உண்டு.

(இ) சினத்தையும் கனு உணர்த்துதல் உண்டு.

## 9

ஈண்டுக் கனுத்திறனைத் தெளியத் தலைப்பட்ட ஒழுங்கில், ஒருவகைக் கோவைக்கு உட்படும் கனுச் செய்திகள் வழங்கும் பாகு பாட்டுப் பொருள்களைத் திரட்டி விளங்கிக் கொள்ளுதல் இயலும்.

கனுக்கண்டு விழித்துக்கொண்டு படுக்கையின்மேல் அமர்ந்திருந்த தலைவி, வண்டு வீழ்ந்து வாட்டங்கண்ட குவளை மலரை ஒத்து உடல் மெலிந்து வேறுபட்டிருந்தாள் என்ற செய்தியும், [22] இனிய துயிலினின்றும் தலைவனைக் கனு எழுப்பியது என்ற கருத்தும் [23] கனுவின் முடிவில் நிகழ்ந்த நிலைகள் குறுந்தொகைப் பாடல்களுட் குறிக்கப்பெற்றுள.

கனவில் கண்டக்கால், வரும் நாளில் தீமை விளைக்கும் பொறுத்தற்கரிய நிகழ்ச்சிகளும் உண்டு என்று சொல்லப்பெற்றவகையில், புறங்கள் எட்டிலும் எரிகொள்ளி வீழ்தல், பெருமரத்தின் இலையற்றுப் புட்ட நெடுங்கிளையில் பற்றுதல், வெஞ்சுடர் ஞாயிறு பல்லிடத்தும் செறிந்து விளங்குதல், புறவைகள் நடுங்கத்தகும் குரல் எடுத்தொலித்தல், பல் நிலத்தில் உதிர்தல், மயிருக்கு எண்ணெய் வார்த்தல், களிறுமேல் ஏறுதல் அணிந்த ஆடையைக் களைதல், வெளியதாகிய வலிய படைக்கலம் தானிருந்த கட்டிலொடு கவிழ்தல் ஆகிய நிகழ்ச்சிகளைப் புறநானூற்றுப் பாடல் அறிவிக்கின்றது. [24]

நெஞ்சம் விழைந்த மகளிரைத் தழுவி, அம் முயக்கம் ஊட்டும் இன்பத்தில் மயங்கித் தொடர்ந்து இன்புறுதற்பொருட்டு, அம் மகளிர் இருப்பிடம் நாடிச்செல்லும் இன்ப வாழ்க்கை, பொருளீட்டுதற்குச் செல்லாது இருந்தவர்க்கு உயரும் பொருள் வாழ்க்கை, இயல்பாக அறம் செய்வோரது அற வாழ்க்கை ஆகியவற்றை உறுதியோடு உரிமையாக எய்தலையும், அவ் வழியில் மனைவியைப் பிரிதலையும், சேர்ந்து அணைத்தலையும் தன்னிடத்தே கனு விலக்குதல் அரிது. ஆதலான் அக்கனு ஓர் அழகிய தன்மையைக் கொண்ட நிகழ்ச்சி என்பதே பொருந்தும். இவ்வகையில் அமைந்த கனுத் திறன்களைக் கலித்தொகை தாங்கியுள்ளது. [25]

இக கருத்துக்களைத் தழுவி வரும் சுருக்கச் செய்திகள் ;

(அ) நனவு நிலையில் உணர்வின் தாக்குதல் மேனியில் மாற்றத்தினைத் தோன்றச் செய்தல் போலக் கனவு நிலையிலும் உணர்வின் தழுவலால், உடல் மெலிதல் ஒத்த வேறுபாட்டினைத் தருதலும் உண்டு.

(ஆ) எழுப்பப்பெறும் செயல் நிகழ்தலும் அவ்வகையுள் அடங்கும்.

(இ) குறிப்பிட்ட கனுக்களின் தீத்திறத்துக் குறிப்புகள் எதிர்காலத்தின் அழிவு காட்டும் என்ற எண்ணம்.

(ஈ) நெஞ்சத்தை சூழ்ந்த முன்னை விழைவின் இனிமையைக் கனு, இன்ப நிகழ்ச்சியாகத் தந்து உவப்புறச் செய்தல்.

(உ) கனு விலக்காத நிகழ்ச்சிக் கூறுகள் சில உண்டு.

## 10

இதுகாறும் வகைப்படுத்தியவற்றால் காணும் கரு, மக்கள் தொகுதியோடு ஒரு வகையான் மற்றைய மா, புள் ஆகிய பிறவி களுக்கும் பொதுவாகும் என்ற ஓர் ஒற்று மையினைக் காட்டும் பழந்தமிழ் நூல்களில் காணப்பெறும் பகுதிகளில் சில கருதுமாறு உள்ளன என்பது பெறப்படும். அன்றியும், மேலைக் கூறுபாடுகளின் விரிவில், பழந்தமிழ் நூல்கள் எடுத்துக் காட்டிச் செல்லும் கருத் திறக் குறிப்புக்கள், தமிழ்ப் புலமைச் செல் வர் தம் தனித்திறம் விளங்க உற்று நோக்கி வெளியீடு செய்த விழுப்பத்தால், உளவியல் பார்வை கொண்டு ஆழ்ந்து பார்த்த உயர்வில் நுண்பொருள் நலத்தோடு அமைந்து இருத் தலும் நினைவு கூறத்தக்கது என்பதும் எளி தில் தெளிவாகும்.

---

அடிக் குறிப்புகள் :

1 தொல். பொருள் 3:25;5:3;6:12;6:22
2 அகநானூறு 158
3 நற்றிணை 173
4 பரிபாடல் 8:102–105
5 புறநானூறு 198;6–8
6 பதிற்றுப்பத்து 20;9–10
7 பதிற்றுப்பத்து 44;5–6
8 அகநானூறு 132;12–13
9 அகநானூறு 170;9–12
10 நற்றிணை 87;1–4
11 குறுந்தொகை 30:2.
12 ஐங்குறுநூறு 234:3–4.
13 கலித்தொகை 128:9,12.
14 பதிற்றுப்பத்து 89;15
15 அகநானூறு 178;20
16 அகநானூறு 39;12–21
17 கலித்தொகை 24;7–12
18 அகநானூறு 158;10–11
19 குறுந்தொகை 148;1–6
20 கலித்தொகை 126;16–17
21 கலித்தொகை 49;1–7
22 குறுந்தொகை 30;3–6
23 குறுந்தொகை 147;4
24 புறநானூறு 41;4–11.
25 கலித்தொகை 92;1–9



# இராமலிங்க அடிகளார் அருளிய அறவுரை

திரு. பூ. ஆலாலசுந்தரம், எம். ஏ.,
தமிழ்த்துறைத் தலைவர், சென்னைக் கிருத்தவக் கல்லூரி.

திருவருட்பாவினைப் பாடியருளிய இராமலிங்க சுவாமிகள் சிதம்பரத்திற்கு அருகிலுள்ள மருதூர் என்ற ஊரில் கருணீகர் குலத்தைச் சார்ந்த இராமையப் பிள்ளை என்பவரும் அவர் மனைவியார் சின்னம்மையாரும் ஆற்றிய அருந்தவப்பயனால் கி. பி 1823-ஆம் ஆண்டில் தோன்றியருளினார். இவர் இளமை முதற்கொண்டே பத்திச்சுவை நனிசொட்டச் சொட்டப் பாடும் அருள் நலமும் புலமை நலனும் மிக்கு விளங்கினார் என்பது இவரது பாடல்களால் அறியக்கிடக்கின்றது. இதனை,

> " வெம்மாலைச் சிறுவரொடும் விளையாடித் திரியும்
> மிகச்சிறிய பருவத்தே வியந்துனை நமது
> பெம்மானென் றடிகுறித்துப் பாடும்வகை புரிந்த
> பெருமானே நான்செய்த பெருந்தவமெய்ப் பயனே
> செம்மாந்த சிறியேனைச் சிறுநெறியிற் சிறிதுஞ்
> செலுத்தாமற் பெருநெறியிற் செலுத்திய நற் றுணையே
> அம்மானே யென்னுவிக் கானபெரும் பொருளே
> அம்பலத்தென் னரசேயென் னலங்கலணிந் தருளே " 1

என்பதனால் அறியலாம். இளமை முதல் இறைவனை வணங்கும் பழக்கம் ஒரு சிலருக்கே அமைவதாகும். இறைவனிடத்தே இளமை முதல் அன்பு பூண்டொழுகிய பண்பு காரைக்காலம்மையாரிடமும் விளங்கியது என்பது அம்மையார் பாடியுள்ள அடியிற்காணும் திருப்பாடலால் விளங்குதல் காண்க.

> " பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாம் காதல்
> சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன்— நிறந்திகழும்
> மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே
> எஞ்ஞான்று தீர்ப்ப திடர் " 2

இராமலிங்க அடிகள் பாடியருளிய திருவருட்பா சற்றேறக் குறைய 10,000 பாக்களைக் கொண்டுள்ளது. இந்நூல் ஆறு திருமுறைகளாகப் பகுக்கப்பட்டு ஏறக்குறைய 360 உட்பிரிவுகளாகிய சிறு தலைப்புகளைக் கொண்டுள்ளது. இவைகளேயன்றி இவர் பாடியனவாகப் பல தனிப்பாடல்களும் உள்ளன. சீவகாருண்ய ஒழுக்கம், ஒழுவிலொடுக்கப் பாயிர விருத்தி, தொண்டை மண்டல சதக இலக்கணம், மனுமுறை கண்ட வாசகம், விண்ணப்பங்கள் முதலிய உரை நடைகளும் இவர் இயற்றியுள்ளார்.

திருவொற்றியூரில் திருக்கோயில் கொண்டெழுந்தருளிய தியாகராசப் பெரு

1. திருவருட்பா : அருள் விளக்க மாலை–76
2. அற்புதத் திருவந்தாதி–1

மான், தில்லையில் நடனம் புரியும் எல்லையற்ற பரம்பொருளான அம்பலவாணர், திருத் தணிகை முருகப்பெருமான், சென்னைக் கந்த கோட்டக் கந்தப்பெருமான், சைவசமயாசா ரியார் நால்வர் முதலியோரைப் போற்றி இவர் பல பாக்கள் பாடியுள்ளார். இராமநாமத் திருப்பதிகம், வீரராகவப் பெருமாள் போற் றித் திருப்பஞ்சகம் முதலியன பாடியிருப்ப தால் சமயக்கோட்பாட்டில் இவர் சமரசக் கொள்கை உடையவர் என்பது பெறப்படு கின்றது. திருவருட்பாவில் காணும் பாக் கள் அனைத்தும் இனிய எளிய நடையில் விளங்குவதால் அவைகள் கற்போர் உள்ளத் தைக் கொள்ளை கொள்ளும் தகையனவாக விளங்குகின்றன. இப்பாடல்களை ஒருவர் படிக்கும்போது அவரது உடம்பு ஊற்றெ ழுங் கண்ணீரால் நனையப்பெற்று அவரது மனமெலாந் தித்திக்கும்; மெய் அறிவெலாம் தித்திக்கும் என்பது புனைந்துரையாகாது.

இறைவன் ஒப்பு உயர்வற்ற ஒளிப்பிழம் பாக விளங்குகின்றான் என்பதையும் அவன் கருணை வள்ளல் என்பதையும் வலியுறுத்தப் போந்த திருவாசகத்தைத் திருவாய் மலர்ந் தருளிய மணிவாசகப் பெருந்தகையார்

"கேழில் பரஞ் சோதி கேழில் பரங்கருணை"[3]

எனப் பாடியுள்ளனர். இக்கருத்தினை விளக் கிக் கூறுவார்போல் இராமலிங்க அடிகள் "அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி, தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி" என்பதனைத் தமது பாக்களுள் பல இடங் களில் கூறியதனோடு அமையாது 1598 வரிகள் அடங்கிய அருட்பெருஞ்சோதி அகவல் என்ற ஒரு பெரிய அகவலும் இயற்றி யுள்ளனர்.

இராமலிங்க அடிகள் தாம் பாடியருளிய பாக்களின் வாயிலாக மக்களை எம்முறையில் நல்லாற்றுப்படுத்தினர் என்பதை இனி ஆராய் வோம். மக்களுள் பலர் பொருள் மீது வைத்துள்ள பேராசையால் பிறருக்குத் தரு மம் செய்யாது அதனை வட்டிக்குக் கொடுத்து வட்டி மேல் வட்டி வாங்கி நன்றாக உண்டு இவ்வுலக வாழ்வே நித்தியம் எனக்கொண்டு காலம் கழித்து வருகின்றனர். பலர் உண வில்லாது பட்டினிகிடப்பதை இவர் பார்ப்ப தில்லை; பார்த்தாலும் அந்த ஏழைகளுக்குப் பழங்கஞ்சியும் வழங்குவதில்லை.

"நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று".[4]

என்ற பொய்யா மொழிக்கு இலக்காகப் பிறர்க்குப் பயன்படாத இச்செல்வரின் செல்வம் நடுவூரில் எட்டிக்காய் பழுத்ததை ஒக்கும். இவ்வுலக வாழ்வே நிலையென மதித்துத் தாமே உண்டு வாழும் இம்மதி யற்ற மக்களை நோக்கி,

"வட்டிமேல் வட்டிகொள் மார்க்கத்தில் நின்றீர்
வட்டியை வளர்க்கின்ற மார்க்கத்தை யறியீர்
பெட்டிமேல் பெட்டிவைத் தாள்கின்றீர் வயிற்றுப்
பெட்டியை நிரப்பிக்கொண் டொட்டி யுள் ளிருந்தீர்
பட்டினி கிடப்பாரைப் பார்க்கவு நேரீர்
பழங்கஞ்சி யாயினும் வழங்கவு நினையீர்
எட்டிபோல் வாழ்கின்றீர் கொட்டிபோற் கிளைத்தீர்
எத்துணை கொள்கின்றீர் பித்துல கீரே"[5]

என இராமலிங்க அடிகள் கூறுவதைக் காண்க. தற்காலத்தில் அரசியல் தலைவர் களும் சமுதாயச் சீர்திருத்தத் தலைவர்களும் பொதுவுடைமைக் கொள்கை நாட்டில் பரவ வேண்டும் என்பதுபற்றிப் பேசியும் எழுதி யும் வருகின்றனர். நாட்டிலுள்ள வறுமை யைப் போக்கி எல்லோருக்கும் உணவு, உடை, உறையுள் சரிவர அமைந்திருத்தல் வேண்டும் என்பது பற்றி அரசியலார் பல

3. திருவெம்பாவை–8
4. திருக்குறள் : நன்றியில் செல்வம்-8
5. திருவருட்பா : உறுதி கூறல்–6

புதிய சட்டங்கள் இயற்றியுள்ளனர். தேசிய கவி பாரதியார்,

" தனியொருவனுக் குணவிலை யெனில்
சகத்தினை யழித்திடுவோம் " [6]

எனப் பாடியுள்ளார். இவ்வுலகத்தைப் படைத்த பிரமன் இதில் வாழ்பவர் முயன்று உயிர் வாழ்தலையன்றி இரந்து உயிர் வாழ வேண்டும் என்று மக்களைப் படைத்திருப்பானுயின் அப்பிரமனும் எங்கும் திரிந்து கெடுவானுக என்ற கருத்தில் திருவள்ளுவர்,

" இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகு இயற்றியான் " [7]

எனக் கூறியது ஈண்டு ஒப்புநோக்கத்தக்கது. பிறர்க்குப் பொன்போன்ற பண்புடைய மக்களிடத்துச் செல்வம் இருப்பதில்லை. பிறருக்கு வழங்காமல் தாம் மட்டும் துய்க்கும் தன்னலமுடைய பலரிடம் செல்வம் குவிந்திருப்பதைக் காண்கிறோம். திருமகள் பொன் போன்ற நன்மக்களைத் துறந்து புன்மக்களிடத்து இருப்பதைக் கண்டு நாலடியார் ஆசிரியர் திருமகளைச் சாம்பலாகப் போகும்படி சபிக்கின்றார். இதனைக் கீழ்க்காணும் பாடல் விளக்குதல் காண்க.

" நாருத் தகடேபோல் நன்மலர்மேற்
பொற்பாவாய்
நீருய் நிலத்து விளியரோ—வேருய
புன்மக்கள் பக்கம் புகுவாய்நீ பொன்
போலும்
நன்மக்கள் பக்கம் துறந்து " [8]

ஒரு நாடு சிறந்த நாடாக இருக்க வேண்டுமெனில் அந்நாட்டில் பசி பிணி பகை இருத்தல் கூடாது என்பதனை,

" உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேராது இயல்வது நாடு " [9]

எனக் கூறியுள்ளார் வள்ளுவர். எனவே, " பட்டினிகிடப்பாரைப் பார்க்கவு நேரீர், பழங்கஞ்சியாயினும் வழங்கவு நினையீர் " என அடிகள் வருந்திப் பாடியதை நாம் மறத்தலாகாது. நம்மால் இயன்றதை நாம் பிறர்க்கு இட்டு உண்டு வாழ்தல் வேண்டும்.

இராமலிங்க அடிகள் இரக்கமே உருவெடுத்தாற்போன்று விளங்கினர் என்பது அவரது வாக்கால் உணரலாம்.

" தலைவர்களெல்லாந் தனித்தனி வணங்குந்
தலைவனே யின்றுமென் னுளமும்
மலைவிலென் னறவு நானுமிவ் வுலக
வழக்கிலே யுயிரிரக் கத்தால்
இலங்குகின் றனநா னென்செய்வே னிரக்க
மென்னுயி ரென்னவே நிலையே
நிலைபெறு மிரக்கம் நீங்கிலென் னுயிரும்
நீங்கு நின் திருவுள மறியும் " [10]

எனக் கூறியுள்ளார். உயிர்களின் புலன் அறிவு கருதி அவைகளை அறுவகையாகப் பகுத்துள்ளனர் மேலோர். இதனை,

" ஒன்றறி வதுவே யுற்றறி வதுவே
யிரண்டறி வதுவே யதனெடு நாவே
மூன்றறி வதுவே யவற்றெடு மூக்கே
நான்கறி வதுவே யவற்றெடு கண்ணே
ஐந்தறி வதுவே யவற்றெடு செவியே
ஆறறி வதுவே யவற்றெடு மனனே
நேரிதி னுணர்ந்தோர் நெறிப்படுத்
தினரே " [11]

எனத் தொல்காப்பியர் கூறுவது காண்க. சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐவகைப் புலனறிவு எல்லா உயிர்களுக்கும் இருப்பதில்லை. மரம், புல் முதலியன ஓர் அறிவு உயிர்கள், உற்றறிவது என்ற மெய்யுணர்வு மட்டும் அவைகளுக்கு உண்டு. சங்கு, மீன் முதலியன உற்றுணர்வும் நாவு

6. பாரத சமுதாயம்–2
7. திருக்குறள் : இரவச்சம்–2
8. நாலடியார் : நன்றியில் செல்வம்–6
9. திருக்குறள் : நாடு–4
10. பிள்ளைப்பெரு விண்ணப்பம்–94
11. தொல்-மரபியல்–27

ணர்வுமுடைய ஈரறிவாகிய உயிர்களாம். கறையான் எறும்பு முதலியன உற்றுணர்வும் நாவுணர்வும் மூக்குணர்வுமுடைய மூவறிவு உயிர்கள். நண்டு, வண்டு முதலியன மேலே கூறிய மூன்று அறிவுடன் கண்ணுணர்வும் சேர்ந்து நான்கு அறிவுடையனவாம். விலங்குகள் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என ஐந்து அறிவுடையனவாம். இந்த ஐந்து உணர்வுகளுடன் மனவுணர்வு என்ற பகுத்தறிவோடு ஆறு அறிவு உடையவனாக விளங்குகிறான் மனிதன். இது நல்லது இது கெட்டது என அறிந்து நல்வழியில் ஒழுகுவதே பகுத்தறிவாகும். அடிகளார் ஓர் அறிவுயிராகிய பயிர்கள் வாடியிருப்பதைக் கண்டு வருந்தித் தாம் வாடியதாகவும் கூறியுள்ளார். ஓர் அறிவுயிரிடத்தே இவ்வளவு இரக்கம் அடிகளாருக்கு இருந்ததெனில் மற்ற உயிர்களிடத்து அவருக்கு இருந்த இரக்கமும் கருணையும் அளவு கடந்தன எனக் கூறுதல் வேண்டும்.

"வாடிய பயிரைக் கண்டபோ தெல்லாம்
வாடினேன் பசியினு லிளைத்தேன்
வீடுதோ றிரந்தும் பசியறு தயர்ந்த
வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்
நீடிய பிணியால் வருந்துகின் றோரென்
னேருறக் கண்டுளந் துடித்தேன்
ஈடின்மா னிகளா யேழைக ளாய்நெஞ்சு
இளைத்தவர் தமைக் கண்டே
யிளைத்தேன்" [12]

என்றும் கூறியதினின்று இவர் சீவகாருணியத்தில் தலைசிறந்தவர் என்பது பெறப்படுகின்றது. அறியாமை மிக்க மக்கள் தமது குழந்தைகளுக்கு நோய் வந்தால் அது தெய்வக் குற்றம் எனக்கொண்டு அந்நோய் போக வேண்டிச் சிறுதேவதைகளுக்கு ஆடு, கோழி முதலியன பலியிடும் கொடிய பழக்கம் இன்றும் நம் நாட்டில் விளங்குதலைக் காண்கிறோம். இதனைக் கண்ட இராமலிங்க அடிகளார்,

"கலையுரைத்த கற்பனையே நிலையெனக்
கொண்டாடும்
கண்மூடி வழக்கமெலா மண்மூடிப்
போக" [13]

என வெறுத்துப் பாடியுள்ளார். மேலும் அவர் இக்கொடிய பழக்கத்தினைக் கண்டு மனம் புழுங்கி வருந்தியதைக் கீழ்க்காணும் பாடல்கள் விளக்குதல் காண்க.

"நலிதரு சிறிய தெய்வமென் றையோ
நாட்டிலே பலபெயர் நாட்டிப்
பலிதர ஆடு பன்றிகுக் குடங்கள் பலிக்
கடா முதலிய வுயிரைப்
பொலிவுறக் கொண்டே போகவுங்
கண்டே புந்திநொந் துளநடுக் குற்றேன்
கலியுறு சிறிய தெய்வவெங் கோயில்
கண்டகா லத்திலும் பயந்தேன்" [14]

"துண்ணெனக் கொடியோர் பிறவுயிர்
கொல்லத் தொடங்கிய போதெலாம்
பயந்தேன்
கண்ணினு லையோ பிறவுயிர் பதைக்கக்
கண்டகா லத்திலும் பதைத்தேன்
மண்ணினில் வலையும் தூண்டிலுங் கண்ணி
வகைகளுங் கண்டபோ தெல்லாம்
எண்ணியென் னுள்ள நடுங்கிய நடுக்க
மெந்தை நின் திருவுள மறியும்" [15]

இவர் புலால் உண்ணும் மக்களைக் கண்டு நடுங்கினர் என்பது,

"வன்புலா லுண்ணு மனிதரைக் கண்டு
மயங்கியுண் ணடுங்கி யாற்றுமல்
என்பெலாங் கருக விளைத்தன னந்த
விளைப்பையு மையநீ யறிவாய்" [16]

---

12. பிள்ளைப்பெரு விண்ணப்பம்—58
13. திருவருட்பா: திருக்கதவந் திறத்தல் 9
14. ——,,—பிள்ளைப்பெரு விண்ணப்பம் 59
15. திருவருட்பா பிள்ளைப்பெரு விண்ணப்பம் 60
16. —,,— — ,, 37

என்று கூறியதால் அறியலாகும். கொல்லாமையைக் குறித்துப் பல ஆசிரியர்கள் மக்களுக்குப் பலவாறு அறிவுறுத்தியுள்ளனர்.

" தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது
இன்னுயிர் நீக்கும் வினை "[17]

என்றார் திருவள்ளுவர். நம் உயிர் போவதாக இருந்தாலும் நாம் பிற உயிர்களைக் கொல்லுதல் ஆகாது என்பது இதன் பொருள்.

"கொல்லா விரதங் குவலயமெல்லாமோங்க
எல்லார்க்குஞ் சொல்லுவதென் னிச்சை
பராபரமே "[18]

என்றார் தாயுமானவர். இராமலிங்க அடிகள் கொல்லாமையைக் குறித்துத் தமது பாக்களில் பல இடத்தும் வற்புறுத்தியதனோடு அமையாது சீவகாருணிய ஒழுக்கம் என்ற ஒரு கட்டுரையும் எழுதியுள்ளனர். அதில் " சீவகாருணிய மென்கின்ற திறவுகோலைக் கொண்டுதான் மோட்சமாகிய மேல் வீட்டுக் கதவைத் திறந்துகொண்டு உள்ளே புகுந்து எக்காலத்தும் அழியாத இன்பத்தை அநுபவித்து வாழவேண்டும் "[19] என்பது ஈண்டுச் சிந்திக்கத்தக்கது.

மக்கள் அளவு கடந்து மது அருந்திப் பொருளிழந்து துன்புற்று மாண்டுபோவதைக் கண்ட அடிகளார் கள்ளுண்ணாமைபற்றி வற்புறுத்திக் கூறியுள்ளார். ஆசிரியர் திருவள்ளுவனார் கள்ளுண்ணாமை என்ற அதிகாரத்தில் உறங்கியவர் தாம் உறங்குங் காலத்து அறிவிழந்து இருப்பதால் அவர் இறந்தவரை ஒப்பார் என்றும், இதைப்போலவே கள்ளுண்பவர் நஞ்சுண்பவரை ஒப்பாவார் என்றும் கூறியுள்ளார். இதனை,

"துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்
ஞான்றும்
நஞ்சுண்பார் கள் உண் பவர்" [20]

என்ற திருக்குறள் விளக்குதல் காண்க. மது அருந்தி மயங்கி மாண்டு போகும் மக்களின் அறியாமைக்கு இரங்கி அடிகளார் கூறும் பாட்டினை நோக்குவோம். அறிவுமயமாய் அருள்மயமாய் ஆனந்தமயமாய் விளங்கும் இறைவன் கருணைக்கு ஆளாகாது சிலர் தாம் செய்த தீவினைப்பயனால் இறைவனை வணங்காது உணர்வு அழிக்கும் கள்ளினை உண்டு காலம் கழித்து வாழ்கின்றனரே! என்னே இவர் பேதமை எனப்பொருள் படும் கீழ்க்காணும் பாட்டினை நோக்குக.

"மதிப்பாலை யருட்பாலை யானந்தப் பாலை
யுண்ண மறந்தார் சில்லோர்
விதிப்பாலை யறியேந்தாய்ப் பாலையுண்டு
கிடந்தழுது விளைவிற் கேற்பக்
கொதிப்பாலை யுணர்வழிக்குங் குடிப்பாலை
மடிப்பாலைக் குடிப்பா ரிங்கே
துதிப்பாலை யருடருநந் தேவசிகா மணித்
தேவைத் துதியா ரந்தோ" [21]

நாடு, மொழி, சாதி, சமயம் முதலிய வேற்றுமையின்றி மக்கள் எல்லோரும் தேசிய ஒருமைப்பாட்டுடன் ஒன்றாகக் கலந்து வாழவேண்டும் என்பது அடிகளின் விருப்பமாகும். மக்களுள் பலர் சாதிச் சண்டைகளிலும் சமயச்சண்டைகளிலும் ஈடுபட்டுப் பிணங்குவதைக் கண்டு அவர்களுக்கு இவர் அறிவுரை கூறுவார் போன்று,

"சாதியிலே மதங்களிலே சமயநெறி களிலே
சாத்திரச்சந் தடிகளிலே கோத்திரச்
சண்டையிலே
ஆதியிலே யபிமானித் தலைகின்ற வுலகீர்
அலைந்தலைந்து வீணேநீ ரழிதலழ
கலவே"[22]

என்றும்,

---

17. திருக்குறள் : கொல்லாமை 7
18. பராபரக் கண்ணி 54
19. சீவகாருணிய ஒழுக்கம்—பக்கம் 21
20. கள்ளுண்ணாமை—6
21. தனிப்பாடல்—மதுவிலக்கு
22. திருவருட்பா—உறுதிகூறல்—1

''நால்வருண மாச்சிரம மாசார முதலா
நவின்றகலைச் சரிதமெலாம் பிள்ளை விளை
யாட்டே
மேல்வருணந் தோல்வருணங் கண்டறிவா
ரிலைநீ
விழித்திதுபா ரென்றெனக்கு விளம்பிய
சற் குருவே''[23]

என்றும் கூறியுள்ளார். இதே கருத்தினைத் திருநாவுக்கரசு சுவாமிகள் தாம் பாடிய தேவாரத்துள்,

''சாத்தி ரம்பல பேசுஞ் சழக்கர்காள்
கோத்தி ரமுங்கு லமுங்கொண் டென்
செய்வீர்''[24]

எனக் கூறிப் போந்தனர். மாணிக்கவாசகப் பெருந்தகையாரும் இதே கருத்தினை,

சாதி குலம் பிறப்பென்னுஞ் சுழிப்பட்டுத்
தடுமாறும்
ஆதமிலி நாயேனை அல்லலறுத் தாட்கொண்டு
பேதை குணம் பிறருருவும் யானெனதென்
னுரைமாய்த்துக்
கோதிலமு தானானைக் குலாவுதில்லைக்
கண்டேனே''[25]

எனப் பாடியது ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது. பலர் தங்கள் சமயம் சிறந்ததென்றும் பிற சமயங்கள் தாழ்ந்ததென்றும் மன்றாடுகின்றனர். இவர்கள் கூற்றினைக்கண்ட அடிகள் மதங்கள் பல இருப்பினும் இறைவன் ஒருவனே என்பதையும் அவனே எல்லோருக்கும் அருள் புரிகின்றான் என்பதனையும் குருடர் யானையைக் கண்ட உவமை வாயிலாக விளக்கியுள்ளனர். இதனை,

''எவ்வுலகி லெவ்வெவர்க்கு மரும் பெருஞ்
சோ தியரே
இறைவரென்ப தறியாதே யிம்மதவா
திகடாங்
கவ்வைபெறு குருடர்கரி கண்டகதை
போலே
கதைக்கின்றார் சாகாத கல்வினிலை
யறியார்''[26]

என்ற வரிகள் விளக்குதல் காண்க. இதனால் மக்கள் வேற்றுமையின்றித் தேசிய ஒருமைப்பாட்டுடன் விளங்கவேண்டும் என்பது பெறப்படுகின்றது.

இதுகாறும் கூறியவற்றால் இராமலிங்க அடிகள் திருவருட்பாவில் சமரசக் கொள்கையுடன் பல கடவுளரையும் போற்றியுள்ளனர் என்பதும், இவரது நெறி சமரச சுத்த சன்மார்க்கநெறி என்பதும், இவர் இறைவனது ஒளிப்பிழம்பாம் தன்மையினையும் பெருங்கருணைத் திறத்தினையும் அருட்பெருஞ்சோதி தனிப்பெருங்கருணை என்ற வரியில் விளக்கியுள்ளார் என்பதும், மக்கள் பிறர் அரும்பசி களைந்து சாதி வேற்றுமை சமயவேற்றுமையின்றி தேசிய ஒருமைப்பாடு பெற வாழ்ந்து உயிர்களிடத்து இரக்கங் கொண்டு கொல்லாமை, மதுவிலக்கு, புலால் உண்ணாமை முதலிய நல்லொழுக்கங்களைக்கடைப்பிடித்துப் பற்றற்ற பரம்பொருளின் திருவடியை நாடி வீட்டு நெறி அடைய விரும்புதல் வேண்டும் என்பதும் சுருக்கமாக விளக்கப்பட்டுள்ளன.

23. அருள் விளக்கமாலை—85
24. திருமாற்பேறு: திருக்குறுந்தொகை—3
25. திருவாசகம்: கண்டபத்து—5
26. அநுபவமாலை—87



# அப்பரடிகளும் சமண சமயமும்

செஞ்சொற்கொண்டல், வித்துவான், சொ. சிங்காரவேலன், எம். ஏ., டிப். லிங்.,
அ. வ. அ. கல்லூரி, மாயூரம்.

## கவி நோக்கு :

உலகின் அழகினைக் கண்டு வியந்து போற்றும் இயல்பு நம்மிடம் இல்லை; மாருகத் துன்பங்களை நோக்கி, நொந்து கவலைப்படும் இயல்பே நம்மிடம் கால்கொண்டிருக்கின்றது. ஆனல், அழகுக் கூத்தாடும் இயற்கைச் செல்வத்தை அறிந்து, உணர்ந்து பாராட்டு இசைக்கும் பண்பு பாவலனிடத்தேயே உள்ளது. கவிஞன் உலகின் அழகுக் கூத்தைத் தன் ஒளிபடர்ந்த சொற்களால் பாட்டாக்குகின்ருன். இதற்குக் காரணம் கவிஞன் பெற்றிருக்கும் கவிதைக் கண்–கலைநோக்குத்தான். நம் பார்வை மேம்போக்காக நின்று விடுகின்றது. கவிஞன் அல்லது கலைஞனின் பார்வையோ ஊடுருவிப் பாய்கிறது. நம்போக்குப் புறத் தோற்றத்தில் நின்று வலியிழந்து விடுகின்றது; கவிஞனின் பார்வை அகத் தோற்றத்தில் ஆழப்பதிந்து நங்கூரம் பாய்ச்சி நிற்கின்றது. இந்த நுட்பமான பாகுபாடு ஆழ்ந்து சிந்தித்தால் தோன்றக் காணலாம்.

அழகை மட்டுமின்றி உலகத் துயரங்களையும் கவிஞரோ கலைஞரோ காணுமல் இல்லை. அவற்றையும் படம் பிடித்துக் காட்டி விடுகின்ருன்; ஆனல் உலகியல் நுட்பம் உணர்ந்த நெஞ்சினின்று புறப்படுவதாகலின், அவற்றை விரும்புகின்ருேம் நாம்; மேலும் மேலும் படித்து, உணர்ந்து, கனிந்து, கரைகின்ருேம். "கவிஞனுடைய கண் விண்ணுக்கும் மண்ணுக்கும், மண்ணுக்கும் விண்ணுக்குமாகச் சுழல்கின்றது; சுழன்று நோக்கிக் கற்பனை வடிவங்களை உருவாக்குகின்றது. அவ்விழுமியோனுடைய எழுதுகோலால், அறியப்படாத பொருள்கள் வடிவம் பெறுகின்றன; உயிர்த் தன்மையும் எய்துகின்றன." என்று உலக நாடகப் பெருங் கவிஞராகிய சேக்ஸ்பியர் கூறுவது இங்குக் கருதத்தக்கது. [1]

## சமயமும் பாட்டும் :

இத்தகைய கவிஞர்களோடு நாம் கொள்ளும் உறவு உள்ளத்தைத் திருத்துகிறது. உலகியல் துன்பங்களின்றும், கவலைகளினின்றும் பிரித்து, உயிர்ப் பறவையை மேலே உயரப் பறக்குமாறு செய்கிறது. எங்கும் நிறைந்து விளங்கும் பேரின்பப் பெரும் பேற்றுக்கு ஆற்றுப்படுத்துகின்றது. இவ்வகையில் பாட்டும் சமயமும் ஒன்ருக நிற்றலைக் காணலாம். பாட்டு அல்லது கவிதையும் உயர் நெறி காட்டுகின்றது; சமயமும் நெறி காட்டுகின்றது. பாட்டும் கனிந்த நெஞ்சைத் தன் வயமாக்குகின்றது; சமயமும் கனிந்த நெஞ்சைப் பண்படுத்துகின்றது. விழுப்பொருளை விளக்குவது பாட்டு; விழுப்பொருளோடு இணைப்பது சமயம். இவற்றின் ஒருமைப்பாடு கண்டே அறிஞர்கள், சமயத்திற்குத் தக்க கருவியாகப் பாட்டைக் கையாண்டு சிறந்துள்ளனர்.

### கவிதை அநுபவம் :

'உயர்ந்த பாட்டுக்கள்' வெறும் சொல் வடிவங்கள் அல்ல; அவை சாவா இலக்கியங் கள். அப்பாட்டிலக்கியங்களில், அவற்றின் ஆசிரியர்கள் கண்டவை யாவை, பட்டறி வால் வாழ்வில் உணர்ந்தவை யாவை, அவ் வுணர்வுப் பேற்றினால் தெளிந்தவை யாவை, உலகிற்கு அத் தெளிவினால் விடுக்கும் உண் மைகள் யாவை என்ற அரும்பொருள்கள் அடங்கிக்கிடக்கக் காணலாம்:[2] ஆதலால், விழுமிய கவிஞர்கள் வழங்கும் கவிதைகளை நுட்பமாகக் காண்டலும் சிந்தித்தலும் தேவைப்படுகின்றன. திருவாசகத்தில் தோய்ந்த வள்ளலார், **'நான்கலந்து பாடுங் கால்'** என்று கூறும்போது, பாட்டை அநுப விக்கும் பாதையைச் சுட்டுகின்றார்.[3] ஆம்; நாம் வேறு பாட்டு வேறாக இருக்கும் வரை பாட்டின் உள்பொருளை நம்மால் அணுகவே இயலாது. பாட்டோடு பாட்டாக நாம் கலந்து, ஒன்றாகக் கரைந்து, இன்புறவேண் டும். 'நவில் தொறும் நூல் நயம்போல்' என்று திருவள்ளுவர் கூறுவதும் இந்த அடிப் படையில்தான்.[4] **'நவிலுதல்'** என்பது, சிந் தையும் நாவும் சேரப் படைக்கும் தொழி லாகக் கொள்ளுதலே தக்கது. ஆயின் கவிதை ஒன்றிற் காணும் ஒவ்வொரு சொல் லும் ஒவ்வொரு உலகம் எனல் மிகையன்று.

### அப்பர் சமணச் சார்பு :

தமிழிலக்கிய வரலாற்றில் சிவநெறிச் செம்மலராக விளங்கிய அப்பரடிகட்கு ஒரு தனி இடம் உண்டு. பழுத்த தமிழ்ப் புலவ ராக விளங்கியவர், இவ்வருளாளர். 'தமிழா ளியார்' **'இன் தமிழ்க்கு மன்' 'வாக்கின் பெருவிறல் மன்னர்' கோதில் மொழிக் கொற்றவனார், தமிழ் மொழித் தலைவர்'** என்பன முதலிய சேக்கிழாரின் தொடர்கள் புனைந்துரையன்றி மெய்யுரைகளே என்பதை, இவரது அரும்பெரும் பாட்டுக்கள் காட்டி நிற்கின்றன.[5] தமிழ் இலக்கியக் கருத்து வளம், இலக்கண நுட்பம், புதுப்படைப்பு நலம், கற்பனை மாண்பு, எல்லாவற்றிற்கும் மேலாகக் கனிந்த நெஞ்சுடன் சமுதாயத் திற்குத் தொண்டு நெறி காட்டும் தூய போக்கு ஆகிய ஒவ்வொன்றும் அடிகளை இனம் பிரித்துக் காட்டும் தனிச் சிறப்புக் களே. இவற்றுள், சமணத் தொடர்பு பற்றிச் சிந்தித்து நலம் காணலும் காட்ட லுமே இக்கட்டுரையாசிரியனின் நோக்கு. அது பற்றி ஆய்தற்குத் தொடர்பான சில விளக்கங்களையும், **'ஒப்பக் காண்டல்'** என் னும் முறைபற்றி, மொழிந்திடலும் தவறா காது.

### தமிழகச் சமயநிலை :

அப்பரடிகள் திருவாமூரில் 'தெய்வ நெறிச் சிவம் பெருக்கும் திரு ஆம் ஊர்' என்று சேக்கிழார் சிறப்பிக்கும் சிற்றூரில், சிவநெறிப் பாங்குடைய குறுக்கையர் குடி என்னும் வேளாளக் குடும்பத்தில் பிறந்த இளைய செம்மல். 'உழுது உண்ணும் வேளாண் குடி'யிற் பிறந்த மருள் நீக்கி யார் திலகவதியார்க்குச் சில ஆண்டுகள் இளையவரே. தந்தை தாயர் மறைந்தனர்; தமக்கையார்க்கு என்று உறுதி செய்த கலிப் பகை நாயனாரும் களங்கண்டு போரிட்டுக் கண்ணுதலோன் கழல் நாடினார். இந்நிலை யில், துன்பம் உள்ளத்தின் அடி நிலையிலேயே தோன்றி மலர்ந்து அடிகள் இளமைப் பரு வத்தில் பெருந்தாக்குதல் புரிந்துவிடக் காண்கின்றோம். அப்போது அடிகள் அடிக ளாராக இருந்தாரல்லர்; எளிய இளைஞராக, துன்ப இன்பங்கட்கு இணங்கக்கூடிய செவ்வியினராகவே இருந்தனர். ஆனால் கல்வி யறிவு நிரம்பியவராக இருந்தனர். கற்ற கல்வி யறிவினால் அவர்க்கு அமைதி இல்லா மற் போயிற்று. குடும்பச் சூழ்நிலையும் அவர்க்கு அமைதி தருவதாக இல்லை; வீட்டுச் சூழ்நிலைதான் இப்படி என்றால் நாட்டுச் சூழ்நிலையும் இப்படியே மாறி நின்றது. ஆட்சி ஏற்ற பல்லவப் பெருமன்னன் சமண சம யம் சார்ந்தவனாக இருந்தான். தமிழகத்தின் பழம்பெரு நெறியாம் சிவநெறி தன் செல் வாக்கை இழந்தநிலை. அரசியல் ஆதரவு

புறச்சமயத்திற்கு இருந்ததே தவிர, தமிழ் அகச் சமயமாகிய சிவநெறிக்கு இல்லை.

மருள் நீக்கியாருடைய சிவநெறிக் குடும்பம் மட்டுமன்று; நாட்டில் சிவநெறி சார்ந்த குடும்பங்கள் அவ்வளவாகச் சிறந்த சூழ்நிலையில் இருக்கவியலாத நிலை. சமண சமயத் தத்துவங்களை விளக்கும் அரசு கட்டில்; அதனைச் சார்ந்த சமணப் பள்ளிகளின் விளக்கமும் எழுச்சியும்; மருள்நீக்கியாருடைய இளைய உள்ளத்தில் இவையனைத்தும் படிகின்றன. அகத்தே அமைதி இல்லாத அவர்க்குப்புறத்தே காணும் நிலையும் அமைதி தருவதாக இல்லை.

## அடிகளார் உள்ளத்து வீசிய புயல் :

பெற்றோர் மறைவிற்குப் பின்னர், அன்புத் தமக்கையார் 'மனைத்தவம்' புரிந்து இருந்தார்; அக்காலத்தே மருள்நீக்கியார் வாழ்வு எவ்வண்ணம் இருந்தது? சேக்கிழார் பாட்டுக்களினின்று அறியப் பெறுவன இவை:[7] அறங்கள் புரிந்தார்; உலகில் புகழ் விளங்கச் செல்வத்தைப் பயன்படுத்துவாராய் அறச்சாலைகளும், தண்ணீர்ப் பந்தல்களும் அமைத்தார். சோலைகள் வளர்த்தார். குளங்கள் அகழ்ந்தார். நேர்மையினின்றும் வழுவாமல் மேவியவர்களுக்கு வேண்டுவன வற்றை உவந்தளித்தார். விருந்து ஓம்பினர். நாவலர்களுக்கு வளம் பெருக நல்கினர். ஈகைத் தொழிலில் தலைநின்றார்.

இவற்றால் மருள்நீக்கியாருடைய இளைய நெஞ்சில் வீசிய புயலும், அது தவிர அமைதி வேண்டி அவர் ஆற்றிய செயல்களும் இனிது புலப்படும். இனி இவ்வாறு இவர் ஆற்றிய செயல்களாகச் சேக்கிழார் கூறுவனவற்றைச் சிறிது கூர்ந்து நோக்குவோம்.

## மனைவாழ்வு உண்டா ?

திருமணம் செய்து கொண்டமை பற்றியோ மனைவி மக்களுடன் மனையறம் நிகழ்த்தியது குறித்தோ இக்குறிப்புக்களினின்றும் வெளிப்படையாக உணரத்தக்கது இல்லை; என்றாலும் அடிகளின் மனையற மாண்பு குறிப்பாக இங்கு உணர்த்தப்பட்டுள்ளமை காணலாம். பெருஞ் செல்வத்தை வறியார்க்கு வாரிவழங்கும் ஈகைத் தொழிலில் தலைப்பட்டார் அடிகள். சமுதாயப் பணிகளில் ஈடுபட்டார். சோலைகள் வளர்த்தும், குளங்கள் தோண்டியும் மக்கட்பணி நலம் கொண்டார். அறச்சாலையும், தண்ணீர்ப் பந்தலும் அமைத்து வயிற்றுக்குச் சோறும், தாகத்திற்கு நீரும் வழங்கினர். ஏழை மக்களிடம் இரக்கமும் கருணையும் கொண்டு இவ்வாறு செய்த அடிகளாரின் திருவுள்ளத்தில், இதுவே இறையருட்பணி என்னும் திருக்குறிப்புத் தோன்றிற்றாதல் வேண்டும். இதனாலேயே, பின்னர்த் தம் தேவாரப் பாக்களில் இதனைப் பின்வருமாறு சுட்டிப் பேரின்பமடைவாராயினர்:

"**தயா மூல தன்ம வழி** எனக்கு நல்கி
மனம் திருத்தும் மழபாடி வயிரத்தூணே"[8]

"தயா மூல தன்மம் என்னும் தத்துவத்தின்
வழிநின்று தாழ்ந்தோர்க்கெல்லாம்
நலங்கொடுக்கும் நம்பியை"[9]

தயா–அன்பு; தன்மம்–அறம், அன்பும், அன்பின் முதற்காரணமாகிய அறமும் இவ்வாறு அடிகளாரால் விதந்தெடுத்துப் பேசப் பெற்றன; '**தத்துவம்**', '**வழி**' என்னும் இரு சொற்களால், இந்த **அன்பும் அறனுமே இனிய தத்துவ நெறி** என்றும் புலப்படுத்தியுள்ளார்.

"அன்பும் அறனு முடைத்தாயின்
இல்வாழ்க்கை
பண்பும் பயனு மது"

என்ற குறட்பாவில், இவ்விரண்டுமே இல்லற வாழ்க்கையின் பண்பும் பயனும் ஆவன என்று திருவள்ளுவரும் குறித்தமை ஓர்த்தக்கது.[10] இவ்வாறு இரங்கிய இதயம் கொண்ட அடிகளார் '**விருந்தோம்பிய விழுப்பம்**' ஒன்றே இவரது மனை வாழ்விற்குச் சான்றாகும் என்று கூறலாம்.

''உயர்ந்தேன் மனைவாழ்க்கையும்
ஒண்பொருளும் [11]
''வலித்தேன் மனை வாழ்க்கை
மகிழ்ந்தடியேன். [12]

என்றும் தம்முடைய முதற்பதிகத்திலேயே தம்முடைய மனைவாழ்க்கையை அடிகளார் சுட்டுதல் காணத்தகும். இவ்வாறு முறை யான மனை வாழ்வு ஒன்று அடிகளார்க்கு இருந்தது என்று எண்ணுவது தவறாகாது. **'மனை வாழ்க்கையினின்றும் தாம் விடுதலை பெற்ற' மன உணர்வையே** மறு மாற்றம் உரைக்கும் திருப்பதிகத்தில், வாராண்ட கொங்கையர் சேர் மனையிற் சேரோம்' என்று அடிகள் குறித்தருளினர் எனக் கூறலாம். [13] மனைவி, மக்கள், அம்மக்கட்கு மக்கள் ஆகி யோரைக் காக்கும் வாழ்க்கைச் சிக்கலுள் அழுந்திச் சைவத்திறம் பொருந்திலேன்; தவ நெறி ஓரேன்' என்று வருந்தும் பாடற் பகுதியும் கருதத்தக்கது. [14] 'திருமணத் தாற் கொண்ட மனைவி' என்ற பொருளில் 'மணந்த தாரம்' என்று குறிப்பிடுதல் நோக் கத்தக்கது. இக் குறிப்புக்களால் அறியப் பெறும் மனைவாழ்க்கைப்பற்றிச் சேக்கிழார் விளக்கமாகக் கூறாமற் போயின காரணம், அவர்க்குப் போதிய விளக்கக் குறிப்புக்கள் கிடையாமற் போயினமையே என்றும் கரு தலாம். சேக்கிழார் பல விவரங்களை விளக்க மாக எடுத்துரைத்தும், சிலவற்றை மிக நுட் பமாகக் குறித்துணரும்படி உரைத்தருளும் இயல்பினர் என்பதற்குப் பெரிய புராணத்தி னின்றும் பல சான்றுகள் காட்டலாம்.

## துன்பச் சூழ்நிலை :

இவ்வாறு தம்முடைய மனத்துன்பம் தவிர மருள்நீக்கியார் செய்த பணிகள் பல, தம்முடைய தாய்தந்தையர், மைத்துனர் மறைவுகள் அவர்க்கு யாக்கை நிலையாத இயல்பினை எடுத்துணர்த்தின. நில்லாத உலகியல்பு கண்டு தெளிந்து, நிலை உடைய பொருளை அறிய முயலவேண்டும்' என்ற உறுதியான எண்ணம் அடிகட்கு உளதா யிற்று. சிவநெறியில் அந்த அறிவுகிட்டும் என்று அந்த இளைய மனம் கருதவில்லை; கொல்லாமை, வாய்மை, அன்பு, அறம் முத லிய கொள்கைகளை மிக வேகமாகக் கூறி வந்த சமண சமயக் கொள்கைகள் அவரை ஈர்த்தன; துன்பச் சூழ்நிலை துரத்தியது. தமக்கையாரோ 'மனைத்தவம்' புரிவாராய் அமைதி நாடி வாழ்ந்தனர். இந்நிலையில் காவல் இலாத நிலை இவ்விளைஞராகிய மருள் நீக்கியார்க்கு வந்துற்றது. வாழ்வில் ஏமாற் றம் அடையும் இளையவர் சிலர், அல்லது பெற்றோர் மாட்டுப் பூசலிட்டுப் புறப்படும் இளையவர் பலர் படையிற் சேர்ந்திட விரை யும் இக்கால நிலையை ஒத்து வைத்துணர்ந் தால், அன்றைய மருள் நீக்கியார் நிலையை இனிது உணரலாம்.

''காத்தாள்பவர் காவல் இகழ்ந்தமை
யால்
கரைநின்றவர் 'கண்டு கொள், என்று
சொல்லி
நீத்தாய கயம்புக நூக்கியிட
நிலைக்கொள்ளும் வழிதுறை ஒன்றறி
யேன்''

என்ற முதற்றிருப்பதிக வரிகள் [15] இந்த நோக்கில் பொருள் கொள்ளுமாறு அமைந் துள்ள அருமைப்பாடு உணரத்தக்கது. ஒரு நீர் நிலையின் மருங்கு காவலர் இல்லாத போழ்து, அதன் ஆழம் அறிய ஒருவர் முற் பட்டனர்; கரைநின்றவர் சிலரோ, 'நீரே இறங்கிப் பார்த்துக் கண்டு கொள்க' என்று கூறிட, உடன் அந் நீர் நிலையிற் புக்கு மூழ்கி னர் அவர். இதனை அடிகளார் வாழ்விேனாடு ஒத்துக் காணலாம். பெற்றோர்களாகிய காவலர்கள் காவல் இல்லாதபோது, புறச் சமயம்பற்றி உணர முற்பட்டகாலை, சிலரது நெறிப்பாட்டின் பின் புறச்சமயம் புகுந்த தம் நிலையைத்தான் இந்த வரிகளில் மருள்நீக்கியா ராக விளங்கிய அடிகளார் சுட்டினர் என்று கருத இடம் உள்ளது.

## அடிப்படைக் காரணங்கள் :

ஆயின் அடிகளார் சமண சமயம் புகுந் தது இந்த மனநிலையில்தான் என்பது ஒரு தலை. அவர்க்குத் துன்பத்தினின்றும் விடு

தலை பெறவேண்டும் என்ற வேட்கை முறுகி எழுந்தது. சமயங்கள் 'ஆனவற்றின் நல் லாறு தெரிந்துணர, நம்பர் அருளாமையி னால்' என்ற சொற்களால் சேக்கிழார் குறிப் பிடுவது காணலாம்.[16] சமய நூலறிவில் ஆராய்ந்து ஆழ்ந்து அமைதி பெற எண்ணி அவர் சென்றார். 'கொல்லாமை மறைந் துறையும் அமண் சமயம் குறுகுவார்' என் பர் சேக்கிழார்[17] 'கொல்லாமை முதலிய ஒழுக்கங்களை உடையார் போற் புறத்தே காட்டி அகத்தே தீமை வடிவினர் என்று சமணர்களைச் சேக்கிழார் இவ்விடத்துப் பழித்தனர்.

இவ்வாறு சூழ்நிலையும், அதனால் விளைந்த மன உளைச்சலுமே அடிகளாரைச் சமண சமயத்திற்கு ஈர்த்தன என்று கொள் ளுவது பொருத்தமானதாகத் தோன்றுகின் றது.

## சமண சமய வாழ்வு :

இனி, அப்பரடிகள் தருமசேனராகிச் சமண சமயத்தில் கல்வி மேம்பட்டுப் பிற சமயத்தவரை யெல்லாம் வென்று சிறப்ப தற்கு வேண்டிய விறுகள் எல்லாம் அவர்க்கு இயல்பாக வாய்த்தன. பெரும்புலவராக வும் சமயவாதியாகவும், வாய்ந்த நல் வாய்ப்பு அங்கு அடிகளார்க்கு உண்டாயின மையைச் சேக்கிழாரும் சுட்டுவர். இவ் வாறு சமண் நெறிப்பட்டபோது தருமசேன ராகிய மருள்நீக்கியார் பெரும் புலவர் ஆத லின் அச்சமய நெறிக் கொள்கைகளைப் பாடிப் பலநூல்கள் இயற்றியிருக்கவும் கூடும்; சைனர் கடவுள் மேல் பல தோத்திரப் பாடல் களைப் பாடி வழிபட்டிருக்கவும் கூடும். ஆனால் சேக்கிழார் அவற்றைப் பற்றிக் குறிப் பிடவில்லை. குறிப்பிடாவிட்டாலும், இயல் பாக எண்ணுங்கால் இவ்வாறு கொள்ளுவ தும் தவறாகாது.

பெரும்புலமையும், ஆயிரக்கணக்கான பாடல்களை உணர்ச்சி உந்துதலால் பாடிக் கொண்டேயிருக்கும் கவித்திறமும் வல்ல இவ்வருட் புலவர் சமண சமய நெறி நின்ற காலத்து ஏதும் பாடாமல் இருந்திருத்தல் இயலாது. ''பதிகம் ஏழெழுநூறு பகருமா கவியோகி''[18] என்று நம்பியாண்டார் நம்பி கள் பின்னாளிற் பாராட்டுமளவிற்குச் சிவ நெறிப் பாட்டுக்களை. நாற்பத்தொன்பதினா யிரம் பதிகப் பாட்டுக்களை இயற்றும் பெருங் கவிஞர், தாம் முழு மனத்துடன் ஈடுபட்ட சமய வாழ்வில் வாளாவிருந்தனர் என்று கொள்வது பொருத்தமற்றது. எண்ணற்ற கவிதைகளை அங்கும் அவர் பாடியிருக்கலாம். அவை கால வெள்ளத்தில், கறையான் தாக் குதலில் மறைந்தன என்று கொள்ள இடம் இருக்கின்றது.

## சமண சமயத்தே பாடியது உண்டா ?

சமணர்கள் திருநாவுக்கரசர் பாடியதாக ஏதும் நூல்களைக் கொள்கின்றனரா என்று சிந்தித்த இக்கட்டுரை யாசிரியன், சமணத் தலங்கள் பலவற்றோடும் தொடர்பு கொண் டும் விவரங்கள் கிடைக்கவில்லை. தொண்டை நாட்டிலுள்ள சமணத் தலங்கள் பலவற்றின் மேலும் அவ்வப்போது எழுந்த பாடல்கள் பலவற்றை ஏடுகளினின்றும் அரிதின் ஆராய்ந்து தொகுத்து கி. பி. 1912இல் ஒரு நூல் வெளியிடப்பெற்றுள்ளமையை வல்லார் வாய்க் கேட்டுணர்ந்து அந்தத் திரட்டு நூலில் ஏதேனும் கிடைக்கலாம் என்று எண்ணிய போது, சென்னை சைன கிரந்த நிலயத்தினர் 1956இல் வெளியிட்ட அந் நூலின் இரண்டாம் பதிப்பு, சென்னை சமண சமயப் பேரறிஞர் சீவபந்து திரு. சீபால் அவர்களால் கிடைக் கப் பெற்றது. 'பல சின தாசர்களால் பாடப் பெற்ற திருநறுங்குன்றம் அப் பாண்டை நாதர் தோத்திரத்திரட்டு' என்ற தலைப்புடன் கூடிய அச்சிறு நூலில் (பக்கங் கள் 75) 'திருநறுங் கொண்டை அப் பாண்டைநாதர் பேரில் அப்பர் பாடிய பதி கம்' என்ற தலைப்பில் உள்ள பதிகம் காணப் பட்டது.[19]

சமண சமயத்தில் அப்பர் பெயரால் வழங்கப்பட்டு வரும் இப்பதிகம், உறுதி

யாக, தருமசேனுர் என்ற அப்பரடிகளால் பாடப் பட்டிருக்குமாயின், அவரது சமண சமய வாழ்வு பற்றிய இருண்ட பகுதியை ஓரளவு உற்று நோக்கிடக் கைவிளக்காக இச் சிறு பதிகத்தைக் கொள்ளலாம். இப்பதி கத்தைப் பற்றிய விளக்கங்களைச் சுருக்க மாகக் கண்டு, இதன் அடிப்படைக் கருத் தினை ஆராயலாம்.

**'தருமசேனர்' பாடிய சமணப் பதிகம் :**

இப்பதிகத்திலுள்ள பதினொரு பாட்டுக் களும் அப்பரடிகளுக்கே இயல்பாக உள்ள பணிவுடைமையும், தம்மைப் பழித்துரைக் கும் நிலைஉடைமையும் விளங்குவனவாக உள் ளன. தம்முடைய சிறுமையை முதல் இரண்டு வரிகளில் பெரும்பாலும் உரைத் துள்ளார். திருநறுங்கொண்டை அப் பாண்டைநாதர் திருப்பெயரை விளித்து, 'நான் உன்னையே நம்பினேன்; நின் திருவடிப் பேற்றை எனக்கு நல்கியருள வேண்டும், என்ற செய்தி ஒவ்வொரு பாடலிலும் உரைக் கப்பட்டுள்ளது; இது தவருமல் நான்காம் வரியில் இடம் பெற்றுள்ளது.

பதிக முடிவில் தாம் பாடிய பத்துப் பாட்டுக்களையும் மணமிக்க தொடைய லாக ஏற்றுக் கொண்டருள வேண்டும். என்ற விண்ணப்பம் பதினோராவது பாட் டாக மலர்ந்துள்ளது. இப்பாட்டுக்களின் தொடக்கப்பாட்டு பின்வருமாறு :

''வந்து வந்து பிறந்துழலா மனையு மில்லை
மற்றுமினி முலையருந்தா மாந்தரில்லை
சந்ததமும் இப்படியே நாயே னிந்தச்
சாகரத்தி லேமூழ்கித் தயங்க லாமோ
எந்தையே முக்குடைக்கீ ழாதிநாதா
இனியமையும் பிறப்பொழித்தீ
டேற்றவேண்டும்
நந்துலவும் நறுங்கொண்டை யருகா
வுன்னை
நம்பினேன் நின்பதத்தை நல்குவாயே''

முக்குடைக்கீழ் அருக பரமேட்டியை, '**எந் தையே**' என்றும், '**ஆதிநாதா**' என்றும், '**அருகா**' என்றும், பல திருப்பெயர்களைக் கூறிப் போற்றும் **தருமசேனர்**' சமண சம யத்தவராக இருந்தபோது வழங்கப் பெற்ற பெயராலேயே சுட்டலாம் அன்றே? 'உன் னையே நம்பினேன்; நின் திருவடிப் பேற்றை நல்குக' என்று மனமுருகி வேண்டுகின்ருர். இதனுள் அமைந்த

''நறுங்கொண்டை யருகா வுன்னை
நம்பினேன் நின்பதத்தை நல்குவாயே''

என்ற தொடர்கள், பாடல்தோறும் வந்து பதிகத்தின் தொடர்நிலை அமைப்பாய்த் துலங் கக் காண்கின்ருேம்.

'பலபிறவிகள் எடுத்து வருந்தியது போதும்; எப்போதும் நான் இப்படியே பிற விக்கடலில் மூழ்கி வருந்துதல் தகுமோ' என்று கனிவு தோன்ற வினவுகின்ருர் அடிக ளார். 'பிறவாமை வேண்டும்' என் று வேண்டிக்கொள்வாராய்,

''இனி யமையும் பிறப்பொழித்து
ஈடேற்ற வேண்டும்''

என்று இசைக்கின்ருர். பல பிறவிகள் எடுத்து வருந்தியதை அழகுறக் கவி இசைப் பாராக அடிகளார், ''என் பிறவிதோறும் என் விதியினை எழுதி எழுதிப் படைப்புக் கடவுள் சலித்தான்; பல தாயார்கள் வயிறு சுமந்து, வயிறு சுமந்து சலித்து இளைத்தார் கள்; நான் பிறந்து பிறந்து அலுத்தேன்' என்று ஏழாவது பாட்டில் உரைக்கின்ருர்.

''அயன்சலித்தான் எழுத முடியாதான் ஆகி
அன்னையரும் வயிறிளைத்தார் அடியேன்
சாலப்
பயமுறத்தான் பிறந்து பிறந் தலுத்தேன்''

என்ற அவ்வரிகள். ''மாதா வுடல் சலித் தாள் வல்வினையேன் கால் சலித்தேன்; வேதா

வும் கை சலித்து விட்டானே'' என்ற பட்டினத்தார் ஞானப்பாட்டு வரிகளைப் பெரிதும் ஒத்துள்ளமை குறிப்பிடத்தக்கது. 'பொல்லாப் பாவி' (2) 'கற்றறியேன்' (2) 'பேயன்' (3) 'பொல்லா மூடன்' (8) 'கண்மன்' (8) 'வெகு துட்டன்' (8) 'அறிவில்லாக் கோழை' (8) 'கபடன்' (8) 'அறியேன்' (11) என்ற தொடர்களும் சொற்களும் தம்மைச் சிறுமைப்படுத்திப் (*Self - Condemnation*) பேசும் பெருந்தகவை விளக்கி நிற்கின்றன. வேறு யாரும் கூருத அளவுக்குத் தம்மைப் பழித்துரைக்கும் இயல்பு, சமண சமயத்துச் சார்ந்திருந்த காலத்தும் அடிகளார்க்கு இயல்பாக இருந்தது போலும். **'தாழ்வெனும் தன்மையோடு, சைவமாம் சமயம் சாரும் ஊழ்பெறல் அரிது'** என்ற சாத்திர வாக்கு இவ்விடத்துக் கருதத்தக்கது.

சமண சமயம் சார்தற்கு முன்பு முறையான மனை வாழ்வு ஒன்று தருமசேனர்க்கு இருந்திருக்கக்கூடும் என்று கருதுதற்கு இப்பதிகத்தின் மூன்ருவது பாடல் துணை செய்கின்றது:

> ''அன்னையுதரந்தனிலே பத்து மாதம்
> அவதரித்துக் குழவியதா யாளதாகிப்
> பின்னை மனை பணங்காசு வீடு மாடும்
> பெண்டிரு மக்களும் வருத்தப்
> பேயனுகி''

**மக்களை மணந்ததாரம் மற்றவயிற்றவரை, ஓம்பும் சிக்குளே அழுந்தி யீசன் திறம்ப டேன்'** என்று பின்னல் பாடும் பாடற்பகுதி முன்னும் நினைவு கூறப்பட்டது. **அக்கருத்தோடு இச்சமணபாட்டுப்பகுதி ஒத்திருத்தலை உன்ன வேண்டியுள்ளது.**

> ''என்னை யெமன் வந்து பிடித் திழுக்குங்
> காலை
> **என் செய்வேன்''**

**என்ற மூன்ரும் பாட்டுத் தொடர் மரணத்தால் வரும் அச்சம் பற்றி யெழுந்தது.** **'கால பாசக் குறுந்தொகை'** என்ற பதிகம் முழுவதும் பின்னர், அடிகளாரால் பாடப் பட்டுள்ளது. இறப்புப்பற்றிய அச்சவுணர்வு சிவநெறிப்பாட்டுக்களில் காணப்படுவது போன்றே இங்கும் காணப் பெறுவது குறிப்பிடத்தக்கதாக உள்ளது.

பெண்களை வருத்தம் அடைவிக்கும் கருவிகளாக எண்ணி, மிக இழித்துப்பாடுவதாக ஆருவது பாட்டு அமைகின்றது.

> ''மானனைய விழிகாட்டி முகத்தைக்காட்டி
> வண்கலச முலைகாட்டி மாலைபூட்டும்
> தேனனைய மொழிமடவாரல்குற் பாம்பு
> தீண்டிவிட மேறிமிகத் தயங்கலாமோ''

இவ்வளவு விரிவாகப் பெண்ணினத்தை இழித்துரைக்கும் பகுதி, கடுந்துறவுக் கோட்பாட்டை உடையவர் சமணர்கள் என்ற குறிப்பைச் சுட்டுவதாக உள்ளது.

> ''கட்டளைசேர் சமய மோராறுந் தானுய்க்
> கலந்தரிய சமயமதில் மேலதாகும்
> இட்டமுட னேயிருந்தேயறமே கூர்தந்து
> எட்டாத தத்துவனே ஏகநாதா''

எனவரும் ஒன்பதாவது பாடற்பகுதி, சமண **சமயத்தே சார்ந்திருந்த காலத்தும் எல்லாச் சமயங்களும் இறைவனே என்ற உணர்வு அடிப்படையில் ஊறி நின்ற பெருநிலை உடையவர் அடிகள்** என்ற உண்மையை எடுத்துரைப்பதாக உள்ளது,

> **விரிவிலா அறிவினுர்கள் வேருரு சமயஞ்**
> **செய்தே**
> எரிவினுற் சொன்னுரேனும் எம்பிராற்
> **கேற்ற தாகும்**

**என்று தேவாரத்திற் பாடும் மன உறுதியும், விரிந்த போக்கும் அடிகளார்க்கு எப்போதும் இருந்தன என்று அறிவதற்கு இவ்விடம் தக்க சான்ருக அமைகின்றது.**

தமக்குக் கனவிடைத் தோன்றி ஆட். கொண்ட ஓர் அநுபவத்தைப் பதினோராம் பாடலில் கூறுவது இவ்வாறு :

"முன்னாள் செய்த தொழுதலும் ஓர்
சொப்பனத்தே தோன்றிப் பண்பாய்,
அல்லலறுத் தாட்கொண்ட தேவனுக்கும்
அறங்காத்த நாயகர்தம் மருளினாலே"

நறுங்கொண்டையின் நீர்வளம் 'நந்து (சங்கு) உலவும்' (1) என்பதனாலும், தமிழ்வளம், 'நற்றமிழ்சேர்' (2) என்பதனாலும், சமண சமயக் கருத்து நலம் 'நன்னெறிசேர்' (3) என்பதனாலும், புகழ்வளம் 'நாட்டியசீர்' (5) என்பதனாலும், 'நாற்றியசீர்' (10) என்பதனாலும், 'நல்லியல்சேர்' (11) என்பதனாலும், விளக்கப்பட்டுள்ளன. 'நட்டணை' (9) என்ற சொற்பொருள் இனிது விளங்கவில்லை.

"ஓதமோர கந்தாணம் என்றே உச்
சரித்தே
உன்னடிப்பா லுறவே வேண்டும்" (6)

என்ற பாடற்பகுதி, அருக பரமேட்டிக்குரிய அருள் மந்திரத்தை எடுத்துரைப்பதாக உள்ளது.

எண்சீர் விருத்த யாப்பமைதியில் பாக்கள் உள்ளன; அடிகள் வகுத்த 'தாண்டக' யாப்புக்கு முன்னோடிப் பாக்களாக இவற்றைக் கொள்ளலாம்.

இனி, 'ஜோதி' (4), 'ரக்ஷிப்பானே' (10), -ஜிநாலயம்' (2)- 'ஜெயஜெயென்ன' (5) 'ஜினபதி' (7) என்ற சொற்கள் இப்பதிகத்துள் கையாளப்பட்டுள்ளன. அப்பரடிகள் வட சொற்களைக் கையாளும் இயல்பினரே; ஆனால் மிகக் குறைவான சொற்களையே கையாண்டுள்ளார்; தேவாரப்பாக்களில் இவர் கையாண்டுள்ள சொற்கள் 893 ஆகும்; 3066 பாட்டுகளுக்கு இந்த அளவே எடுத்தாண்டுள்ளார். இது நூற்றுக்கு 28.9% விழுக்காடு ஆகும். ஆனால்

"வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே"[20]

என்ற பழந்தமிழ்த் தொல்காப்பிய நெறியை எங்கும் மீறினாரல்லர். தமிழ்ப்படுத்திய வட சொற்களே அவர் தமிழ்ப்பாட்டுக்களிற் காணப்படுவன. சமண சமயத்தே சார்ந்த போது மட்டும் இவ்வாறு வடசொற்களையே எடுத்தாண்டு பாடும் கருத்துடையர் ஆயினர் என்று கொள்ளுவதும் பொருத்தமற்றதாகத் தோன்றுகின்றது. அன்றியும், 'மாய்கை' (5), 'துலைய' (5) ஆகிய பிழைபட்ட சொல் வடிவங்களும் இப்பதிகத்துள் காணப்படுகின்றன. இவை ஏடு எழுதுவோரால் நேர்ந்த பிழைகளாகக் கொண்டால் ஒழிய வேறு அமைதி காணவியலாது. 'இத்தடைகள் மட்டுமே- அப்பரடிகளாக மாறிய தருமசேனால் இப்பதிகம் பாடப்பட்டிருக்கலாம் என்பதற்கு மாறுகின்றன. என்றாலும் தக்க சான்றுகள் கிடைக்கும் வரையில், இவை அப்பர் சமண சமயம் சார்ந்த காலை பாடிய சமணப் பாட்டுக்களே' என்றே கொள்ளலாம்.

## சமணர்பற்றிய தேவாரக் குறிப்புக்கள் :

இனி, தேவாரப் பாட்டுக்களுள் அப்பர் அடிகளார் சமணர்களைப் பற்றிக் குறித்துள்ள குறிப்புக்கள் பற்றி நோக்குவோம். பெரும்பாலும் ஒவ்வொரு பதிகத்திலும் இச் சமண பௌத்தர்களைப்பற்றிய குறிப்பு வருகின்றது. தம்முடைய வாழ்வில், சமண சமயம் சார்ந்த பின்னரும் ஓர் உணர்ச்சி அடிகளார்க்கு இருந்திருக்கும் போலும். சமண சமய அன்பு, அறக் கோட்பாடுகள் அவருடைய உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்திருந்தன. ஆனால் அன்றைய நிலையில் தமிழகத்துச் சமணர் நிலை அவரது அடிமனத்திற்குப் பொருந்துவதாயிருந்திராது என்று எண்ணலாம். சமுதாயத்திற்கும் உலகிற்கும் செய்யத் தக்க நற்பணிகளை — துன்பம் துடைக்கும் உயர் தொண்டுகளை ஆற்ற அப் புதிய சமயந் தானும் அடிகளார்க்குத் தக்க கருவியாகத்

தோன்றவில்லை. **உள்ளத்தே இந்த ஆழ்ந்த கவலையே கடுஞ் சூலையாக உருவெடுத்தது** என்றும் கருதலாம். இறைவன் திருவருளால் இச்சூலை எழுந்தது என்று சேக்கிழார் கருதுவதற்கு இது பெரிதும் ஒத்ததே. ஆகவே கடுஞ் சூலைவாய்ப்பட்டார் தருமசேனர். ஓய்வற்ற கல்வி நலமும்' சொற்போர்களில் ஈடுபட்ட சோர்வும் வேறு இந் நோய்க்குக் காரணங்கள் ஆகலாம். பாதிரிப் புலியூர்ச் சமணர் தந்திர மந்திரங்களுக்குப் பணியவில்லை இக்கொடிய நோய். இந்த நோயினின்றும் விடுதலை பெற எண்ணிய அடிகட்கு, புதிய சமயச் சார்பின் திறத்தால் நோய் வீடு பெறுமற் போகவே, தமக்கையார்க்கு ஆள் அனுப்புகின்றார். தமக்கையார் சமண்பாழிக்கு வாராமற் போகவே தாமே புறப்பட்டுத் திருவதிகை வருகின்றார். நீறணிந்து திருக்கோயிலுக்குள் திலகவதியாருடன் வழிபடச் செல்கின்றார். இவ்வாறு, **'நீறணிந்தார் அகத்திருளும் நிறைகங்குற் புறத்திருளும் மாறவரும் திருப்பள்ளியெழுச்சிக்** காலமாகிய விடியற்காலத்தில், திருவதிகை வீரட்டேசுவரர் திருமுன்பு நோய் நீக்கம்பெற, **'உரைத்தமிழ் மாலைகள் சாத்தும் உணர்வு முந்துற' லால் கூற்றாயின வாறு''** என்றெடுத்துக் **கோதில் திருப்பதிகம்** ஒன்றினைப் பாடுகின்றார். 'மன்னும் பதிகம் அது பாடியபின் வயிறு உற்று அடும் கடும் பிணி' முற்ற நீங்கப் பெற்றுத் தம்மையும் ஆட்கொண்ட **'முதல்வன் கருணைக் கடல் மூழ்கி'** மகிழ்ந்தார் அடிகள்.[21] இவ்வாறு சமண் சமயத்தினின்று விடுபட்டு மீளவும் சிவநெறி சார்ந்தபோது அடிகள் நடுத்தர வயதைக் கடந்தவராக இருந்தார் என்று எண்ணலாம். 'முற்பகலில் உணவு சமைத்தால் காலத்தில் உண்ணலாம். பிற்பகலில் உணவு சமைக்கத் தொடங்கினால் காலம் தவறித்தானே சோறு கிடைக்கும்!; அவ்வாறு **பிற்பகல் உணவு செய்யும் பேதைமார் வாழ்வு போன்று'** தம் வாழ்வும் ஆயிற்று என்று அடிகள் வருந்தும் பாடற்பகுதியும் இங்கு ஒப்பிட்டுணரத்தக்கது.[22]

## கொல்லாமைச் சமணர் கொடுமைகள் :

இதன் பிறகு சமணர்களால் அடிகட்கு விளைந்த கடுஞ்சோதனைகள் பல; நீற்றறையில் இடுதல், யானையை விட்டு இடறச் செய்தல், நஞ்சு கலந்த சோற்றினை இடுதல், கல்லொடு கட்டிக் கடலிற் பாய்ச்சுதல் ஆகிய எல்லாச் செயல்களிலும், சிவபிரான் திருவடிகளே பற்றுக் கோடாகக் கொண்டு வென்று மேம்பட்டார் திருநாவுக்கரசர்.

**கொல்லாமை தான் சமண சமயத்திற்கு அடிப்படைக் கோட்பாடு;** 'ஒன்றாக நல்லது கொல்லாமை' என்ற வள்ளுவர் அறத்தைப்[23] பின்பற்றிய சமணர்கள் 'வினை வேறு சொல் வேறு பட்டவர்களாக' அக்காலத்தே விளங்கியமைக்கு[24] இச்செயல்களும் தக்க சான்றுகளாம். **கொல்லாமை மறைந்து உறையும் சமண சமயம்'** என்ற சேக்கிழார் குறிப்பு இங்கே விளக்கமாகிவிட்டது. தம்முடைய சமயம் சார்ந்த தருமசேனர் கோட்பாட்டினின்றும் விலகிச் சிவநெறி சேர்ந்த நிலையில்; சமணர்கள் வாளா விருந்தலே நெறி; **வலிந்து கொன்றிடக் கருதியது பிழை; அதற்கு அரசியற் செல்வாக்கைப் பயன்படுத்த நினைத்தது அதனினும் பெரும்பிழை.** சமணர்களின் இச் செயல்கள் முற்றும் தோற்றுப் போயினமை மக்கள் மனங்களிலே இருந்த மதிக்கற்பாட்டைக் கெடுத்து வீழ்த்துவிட்டது. மன்னனும் கூட மதியாத நிலை விளைந்துவிட்டது. வலிவும் பொலிவும் பெற்று விளங்கிய சோழ நாட்டுத் தொண்டைநாட்டுச் சமண் சமய நெறி, செல்வாக்கிழந்தமைக்குக் காரணமாக இந்நிகழ்ச்சி அமைந்துவிட்டது. 'உயிர்க் கொலை புரிதல் பெரும்பாவம்' என்ற கோட்பாடு அவர்களைப் பொறுத்தவரையில் 'பொய்யாய்ப் பழங்கதையாய்ப் போய் விட்டமையை' மக்கள் உணர்ந்து பழைய சிவநெறி மருங்கு முன்னைவிடப் பெரிய பற்றுடன் திரும்பலாயினர்; அடிகளாரது **'தமிழோடு இசை கலந்த'** பிரச்சாரம் வேறு தமிழகத்தின் ஊர்கள் தோறும் நடைபெறலாயிற்று;

ஏறத்தாழ இதே காலத்தில் '**நாளும் இன்னிசையால் தமிழும்**' சிவநெறியும் பரப்பிடத் தொடங்கிய இளைய ஞாயிருகிய திருஞான சம்பந்தர் தொண்டும் இணைந்தது; பாண்டி நாட்டிலும் நாடே கண்டு வியக்கத்தக்க கருத்து வெற்றி சிவநெறிக்குக் கிடைத்தது; இவற்றால் சமண சமயச் சரிவு தமிழகத்தே இவ்விடைக் காலத்தே விளைந்தது. மகேந்திர வருமனுடைய '**மத்த விலாசப் பிரகசனம்**' என்ற வடமொழி நாடகமும் இக்காலச் சமணர்களின் நடைமுறை ஒழுக்கச் சீர் கேட்டை மக்கள் உணர எடுத்துரைத்தமை இங்குக் குறிப்பிடத்தக்கது.

## சமணர்களைப் பற்றிய குறிப்புக்கள் :

அப்பரடிகள் சமணரது நடைமுறைப் பழக்கங்களை எடுத்தோதிக் கண்டித்துள்ளவையே மிகப் பல. அவர்களுடைய தத்துவக் கருத்தையோ, சமய அடிப்படையையோ அடிகள் எடுத்து ஓதி மறுக்கின்ற செய்திகள் அவரது திருப்பாட்டுக்களிற் காணப் பெறவில்லை. தலைமயிரைக் கைகளாலேயே பறிக்கும் இயல்புடையவர்கள்;[25] பெண்கள் நகைத்தற்கும் நாணிக் கதவடைத்தற்கும் இடமாக ஆடையின்றித் திரிபவர்கள்;[26] மயிற்பீலியைக் கையில் எடுத்துச் செல்லும் இயல்பினர், [27] பாசிபடர்ந்த பற்களும், மாசுபடிந்த உடலும் உடையவர்கள்; [28] குறிக்கோள் மறந்து கண்டதே கருதுபவர்கள்; [29] உண்ணும்போது ஊமைகள்போல உரையாடாது உண்பவர்கள்; [30] தலை மொட்டையாக உள்ளவர்கள்; [31] மூக்கினுல் ஓதும் மந்திரத்தை உடையவர்கள்; [32] நின்றுண்ணும்போது கையெலாம் நெய்பாயக் கழுத்துவரை நிறையுமாறு கால்களை நிமிர்ந்து நின்றபடி உண்பவர்கள்; [33] உறிமுடிகுத்தண்டிகை சுமப்பவர்கள். [34]

## சமயப் பொறை :

இவ்வாறெல்லாம் சமணர்களைப்பற்றி ஆங்காங்கு அடிகள் தம் தேவாரத் திருப்பாட்டுக்களில் உரைப்பதைக் காணலாம். இவற்றுள் இரண்டோரிடங்கள் நீங்கலாக மற்றவை யனைத்தும் சமணர்களுடைய பழக்க வழக்கங்களைக் குறிப்பனவே தவிர, அளவை யடிப்படையில் சமணர்களின் தத்துவக் கோட்பாடுகளைத் தகர்க்கும் நிலையில் ஓரிடமும் காணப்பெறுமை கருதத்தக்கது. உலகியலைக் கடந்து, '**முதல்வன் கருணைக் கடல் மூழ்கி நின்றவர்**' ஆதலால் அவ்வாறு பேசிட அடிகளார்க்கு மனம் இல்லை என்றும் கருதலாம். சமண சமயக் கோட்பாடுகளில் நல்லனவற்றைத் தழுவிக் கொண்டு '**தயா மூல தன்ம வழி**' என்று சிவநெறியைக் குறிக்கும் அளவிற்குப் பின்னரும் அவர்க்கு அச்சமயத்தை மதிக்கும் பெருந்தன்மை இருந்தது என்பதையே இது காட்டுகின்றது.

"ஆறு சமயத்த வரவரைத் தேற்றுந்
தகையன
தேறிய தொண்டரைச் செந்நெறிக்கே
ஏற்றுந் தகையன"

என்று சிவபெருமான் திருவடிகளை ஏத்திப் புகழும் பெருந்தகவுடைமையை அடிகள் திருப்பாட்டுக்களிற் காண்கின்றோம். [35] எத்தனையோ கொடுஞ் செயல்கள் செய்தும் கூட, அடிகளார் மனத்தே சமணர் மாட்டு எத்தகைய கொடிய காழ்ப்புணர்ச்சியும் தலையெடுக்காமை,

"பொறுத்தல் இறப்பினை என்றும் அதனை
மறத்தல் அதனினும் தலை' என்ற குறள் நெறி [36] பிறழாக் குணக்குன்றுக அடிகளார் வாழ்வு அமைந்தமைக்குச் சான்றாக அமைந்துள்ளது. இத்தகு சமயப் பொறைக்குத் தக்க எடுத்துக்காட்டாக அடிகளார் விளங்கியுள்ளார். '**எல்லாம் சிவன் செயல் என்று எண்**' என்று [37] கருதிய அடிகளாரின் பண்பட்ட உளத்திற்கு, மாற்றார் செய்த மாண்பற்ற செயல்கள் கூடக் கொடியனவாகத் தோன்றவில்லை. ஆம்; சமண சமயத்துடன் அடிகளார்க்கு உண்டாகிய தொடர்பும், அதனின்றும் விடுதலை பெற்ற பின்பும் அச்சமயத்தைப்பற்றி அடிகளார் கொண்டொழுகிய பண்புடைமையும் சமய உலகிற்கே வழி காட்டும் விழுமிய பண்புகள் ஆகும்.

## அடிக் குறிப்புகள்

1. *"The poet's eye, in a fine frenzy rolling, Doth glance from heaven to earth from, earth to heaven; And as imagination bodies forth The forms of things unknown, the Poet's pen turns them to shapes, and gives to airy nothing A local habitation and a name". Shakespeare.*
2. *Literature is a vital record of what men have seen in life, what they have experienced of it, what they have thought and felt about those aspects of it which have the most immediate and enduring interest for all of us" W. H. Hudson.*
3. ஆளுடைய அடிகள் அருள்மாலை— பா. 7 (திருவருட்பாத்திரட்டு)
4. திருக்குறள் 783 (நட்பு) (சமாசப்பதிப்பு 1950)
5. திருத்தொண்டர்புராணம்—229, 1415, 2172, 2501 பாடல்களை நோக்குக.
6. திருத்தொண்டர்புராணம்—1282
7. *Ibid*, 1306, 1307 பாடல்கள்
8. திருநாவுக்கரசர் தேவாரம்—(சமாசப் பதிப்பு 1941. 6—20—6)
9. *Ibid* 6—40—6
10. திருக்குறள்—45
11. திருநாவுக்கரசர் தேவாரம் (சமாசப் பதிப்பு 1941) 4—1—7
12. *Ibid.* 4—1—8
13. *Ibtd.* 6—98—3
14. *Ibid.* 4—79—2
15. *Ibid.* 4—1—5
16. திருத்தொண்டர் புராணம் —1307
17. *Ibid.* 1307
18. திருவேகாதசமாலை-பா —(பதினோராம் திருமுறை)
19. A) பலஜினதாசர்களால் பாடப்பெற்ற திருநறுங்குன்றம் அப்பாண்டைநாதர் "தோத்திரத்திரட்டு;"—ஜைன கிரந்த நிலையம் சென்னை 1956—*PP*7—9

19. B) *See for details, the X Chapter on "Appar's Jaina Hymn" in* "**A Descriptive and critical study of Appar Tevaram (Hymns)**" *Thesis submitted for the Degree of Doctor of Philosophy by C. Singaravelan, to Annamalai University (1972)*

20. தொல்காப்பியம்—நூற்பா 884
21. திருத்தொண்டர்புராணம்—1338, 1339, 1340, 1341 பாடல்கள்
22. திருநாவுக்கரசர் தேவாரம்— 4—28—1
23. திருக்குறள் 323
24. *Ibid.* 819
25. திருநாவுக்கரசர் தேவாரம்—4—5 4
26. *Ibid.* 4—5—8
27. *Ibid* 4—39—2
28. *Ibid.* 4—39—4
29. *Ibtd.* 4—42—9
30. *Ibid.* 4—101—5; 4—101—6
31. *Ibid.* 5—58—4
32. *Ibid.* 5—58—2
33. *Ibid.* 6—11—9
34. *Ibid.* 6—3—8
35. *Ibid.* 4—100—7
36. திருக்குறள் 152
37. சிவபோகசாரம்-குருஞானசம்பந்தர்-பா—73; (பணியறுத்தல்)



# முன்னிலை அசைகள்

டாக்டர் மோ. இசரயேல்
தமிழ்த்துறை, மதுரைப் பல்கலைக் கழகம்

முன்னிலை வினைகளை இருதிணைக்கும் பொதுவான பிரிவுவினைகளாகக் கொண்ட தொல்காப்பியனார் தொடர்ந்து வினையியலில்

முன்னிலைக் கிளவி. இஐ ஆய் என வருஉம் மூன்றும்
ஒப்பத் தோன்றும் ஒருவர்க்கும் ஒன்றற்கும்
தொ. சொ 223

என்றும்

இர் ஈர் மின் என வருஉம் மூன்றும்
பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினும்
சொல்லோ ரனைய என்மனார் புலவர்
தொ. சொ 224

என்றும்

கூறி முறையே ஒருமை பன்மை முன்னிலை வினைகளின் விகுதிகளை வரையறுக்கின்றார். மேலும் அவர் எச்சவியலில்

செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்யென் கிளவி ஆகிடன் உடைத்தே
(தொ. சொ 450) என்றும்
முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்
அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே
(தொ. சொ 451) என்றும்

கூறி முன்னிலை வினைகள் அடைகின்ற மாற்றத்தையும், முன்னிலை வினையில் வருகின்ற வேறு இரு ஈற்றுயிர்களையும் குறிப்பிட்டுள்ளார்.

இடையியலில் அவர்,

மியா இக மோ மதி இகும் சின் என்னும்
ஆவயின் ஆறும் முன்னிலை அசைச்சொல்
தொ. சொ 274

என்னும் நூற்பாவில் முன்னிலையில் அமைகின்ற ஆறு அசைநிலைகளைத் தொகுத்தும் கூறுகின்றார். 1

முன்னர்க் கூறப்பட்ட நூற்பாக்களின் செய்தி அனைத்தும் முன்னிலை வினையின் இயல்பை விளக்குவனவாகவே அமைகின்றன. தொல்காப்பியனார் முன்னிலை வினையை விரிவுபட விளக்கி இருப்பினும் முன்னிலையில் வழங்கும் ஏவல் வினையை முன்னிலை வினையினின்று பகுத்துக் காணவில்லை. அதனையும் முன்னிலை வினையுள் அடக்கி உள்ளார் என அறிதும். ஏவல் வினையைப் பிரித்துக் கூறாத அவர் ஏவற்பொருண்மையைச் சுட்டுகின்றார் என்பதை

ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவியும்
(தொ. எ. 210)
ஏவல் குறித்த உரையசை மியாவும்
(தொ. எ. 224)

என்னும் நூற்பா வடிகளால் அறியலாம்.

இவண், மியா, இக, மோ, மதி, இகும், சின் ஆகிய முன்னிலை அசைகளை முன்னிலை வினை, ஏவற்பொருண்மை ஆகியவற்றோடு தொடர்புபடுத்தி அவற்றின் உண்மை நிலையினைக்காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும். முதலில் இவ்வசை நிலைகளின் வழக்குகளையும் இயல்புகளையும் தனித்தனியாக ஆய்வோம்.

**மியா :**

தொல்காப்பியனார் இவ்வசை நிலையை 'ஏவல் குறித்த உரையசை மியா' (தொ. எ. 224) என்று குறிப்பிட்டுள்ளார். இதன் வழக்கிற்குத் தொல்காப்பிய உரையாசிரியர்கள் கேண்மியா' சென்மியா போன்ற எடுத்துக்காட்டுகளைத் தருகின்றனர். இவ்வசைநிலையைப் பிற்கால இலக்கண நூலாரும் தம் நூற்களில் குறிப்பிட்டிருப்பினும் (நன் 440) இது இன்று கிடைக்கப்பெறும் சங்க இலக்கியத்திலும் பிற்கால இலக்கியங்களிலும் காணக் கிடைத்திலது.

கேண்மியா, சென்மியா போன்ற சொற்களைப் பின்வருமாறு பகுத்துக் காணலாம்.
கேண்மியா கேள்—ம்—(இ) —யா
செல்—ம்—(இ)—யா

தொல்காப்பியனார் இடையியலில் 'யா' என்னும் அசைநிலைக் கிளவியைக் (தொ. சொ. 279) குறிப்பிட்டிருப்பதும் இவண் கருதத்தக்கது.

**இக :**

தொல்காப்பிய உரையாசிரியர்கள் கண்டிக, ஆன்றிக போன்று எடுத்துக்காட்டுக்களில் இந்த அசைநிலை அமைந்துள்ளதாகக் காட்டுகின்றனர். சங்க இலக்கியத்தில் காணப்படும் சென்றிக (நற் 32) என்னும் சொல்லில் உள்ள 'இக' என்னும் விகுதி இவ்வசைநிலையின் பாற்படும்.

சென்று—இக சென்று—இ—க

சங்க இலக்கியத்தில் காணப்படும் சென்றீக (அகம் 124), கேட்டீக (ஆசாரக்கோவை 74), வந்தீக (நற் 51), தணந்தீக (கலி 16) வென்றீக (குறள் 1268), உள்ள 'ஈக' என்னும் விகுதியுடன் 'இக' என்னும் அசைநிலை பொருந்திக் காணுந்தன்மையது.

சென்று—ஈக சென்று—ஈ—க
கேட்டு—ஈக கேட்டு—ஈ—க
வந்து—ஈக வந்து—ஈ—க

இச்சொற்களில் ஈ/இ இறந்த கால வினையெச்சத்துடன் இணைந்துள்ளது.

இங்குக் காணப்படும் இகரம், துணைவினை ஈகாரம் குறுகிய வடிவம் என்பதும் இறுதி இகரம் வியங்கோள் விகுதி என்பதும் ஆயத்தக்கன.

தொல்காப்பியனார்

முன்னிலை தன்மை ஆயீ ரிடத் தொடும்
மன்னு தாகும் வியங்கோட் கிளவி
(தொ. சொ. 226)

என்னும் நூற்பாவில் முன்னிலையிலும் தன்மையிலும் வியங்கோட் கிளவி மன்னாது என்று கூறியமையால் சென்றிக, கண்டிக போன்ற முன்னிலைச் சொற்களில் அமையும் வியங்கோள் விகுதி இகரத்துடன் இணைந்து நிற்பதை அசைநிலை அமைப்பாகக் கொண்டாரோ என்பதும், நீட்சி பெற்ற ஈகார உயிர் அமைந்த சென்றீக, வந்தீக போன்ற சொற்களை "முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்" (தொ சொ 457) என்னும் நூற்பாவில் அமைகின்றதாகக் கொண்டாரோ என்பதும் கருதத்தக்கன. அங்ஙனமாயினும் ஈகாரத்தோடு இணைந்து வரும் இகரம் எவ்வியல்பிற்று? வியங்கோள் விகுதியன்றோ?

இலங்கை மொழியில் 'நீ சொல்' என்னும் பொருளில் 'சொல்லிக' போன்ற வழக்குகள் இன்றும் ஆட்சி பெற்றுள்ளமை கவனித்தற்குரியது.

**மோ :**

தொல்காப்பிய உரையாசிரியர்கள் தருகின்ற எடுத்துக்காட்டுக்களும், சங்க இலக்கிய வழக்குகளும் இந்த அசைநிலை ஏவற்பொருண்மை பெற்ற வினைகளில் அமைகின்றது, என்பதைத் தெளிவுபடுத்துகின்றன. நன்னூலாரும் இதனை முன்னிலை அசைநிலையாகக் கொள்ளுகின்றார். பிற்கால அறிஞர் பலரும் இதனை ஏவல் வினையின் உறுப்பாகவே கருதுகின்றனர். 2

மொழிமோ (குறு 2) மொழி—ம்—ஓ

உள்ளுமோ (புறம் 48) உள்—உம்—ஓ

இருந்திமோ (புறம் 319) இருந்து—ஈ—ம் ஓ

நின்றீமோ (நற் 45; நின்று—ஈ—ம்—ஓ

புக்கீமோ (கலி 71) புக்கு —ஈ – ம்—ஓ

உரைமோ (அகம் 34) உரை—ம்—ஓ

இச்சொற்கள் யாவும் ஏவலை அன்போடு உணர்த்துவனவாக உள்ளன.

## மதி :

பிற்கால இலக்கண நூலாரும் (நன் 440) முன்னிலையசையாகக் கொள்ளும் 'மதி' என்ற வடிவம் சங்க இலக்கியங்களில் பல்வேறு இடங்களில் காணப்படுகின்றது. இது அமைகின்ற வினைச் சொற்களைப் பார்த்தால் அவை ஏவலை அன்புடன் உணர்த்துவனவாகவே உள்ளன.

உறைதி (ஐங் 333) உறை—த்—இ

உறைமதி (மதுரைக்காஞ்சி 781)
உறை—ம்—(அ)—த்—இ

ஏகுதி (நற் 264) ஏகு—த்—இ

ஏகுமதி (நற் 76) ஏகு—ம்—(அ)—த்—இ

கூறுதி (அகங் 268) கூறு—த்—இ

கூறுமதி (நற் 173) கூறு—ம்—(அ)—த்—இ

போற்றுதி (கலி 65) போற்று—த்—இ

போற்றுமதி (அகம் 342)
போற்று—ம்—(அ)—த்—இ

உரைமதி (நற் 54) உரை—ம்—(அ) த்—இ

உரையாதி (கலி 28) உரை—ஆ—த்—இ

சொல்லுமதி (ஐங் 427)
சொல்—உம்—(அ)—த்—இ

சொல்லாதி (கலி 108) சொல்—ஆ—த்—இ

இச்சொற்களில் மகரத்தின் நிலை ஆய்வுக்குரியது.

## இகும் :

தொல்காப்பியனார் ஆறு முன்னிலை அசை நிலைகளைக் கூறித் தொடர்ந்து

இகுமும் சின்னும் ஏனை இடத்தொடும்
தகுநிலை யுடைய என்மனார் புலவர்
தொ. சொ. 275

என்று கூறி உள்ளார். நன்னூலாரும் இவற்றை எல்லா இடங்களிலும் வழங்கும் அசைநிலைகளாகக் கொள்ளுகின்றார். எனவே இகும், சின் ஆகிய இரண்டு அசைநிலைகளும் முன்னிலையில் மட்டுமன்றி, தன்மை படர்க்கை இடங்களிலும் வழங்கின என்பது தெளிவு.

'இகும்' என்ற அசைநிலை வழக்கிற்குத் தொல்காப்பிய உரையாசிரியர்கள் 'கண்டிகும்' என்ற எடுத்துக்காட்டினைத் தருகின்றனர். சங்க இலக்கியத்தில் 'இகும்' அமைந்த இருபது இடங்களை ஆய்ந்து பார்த்தபோது பதினைந்து இடங்களில் அது தன்மைப் பன்மையிலும் ஐந்து இடங்களில் முன்னிலை யொருமையிலும் வழங்குகின்றது எனத் தெரிகின்றது. ஐந்து இடங்களிலும் 'கண்டிகும்' என்ற அமைப்பிலேயே 'இகும்' காணப்படுகின்றது. இவ்வைந்து இடங்களிலும் ஐங்குறு நூற்றின் கண்ணே உள !

தண்ணந் துறைவன் கண்டிகும் (ஐங் 158)
ஒண்டொடி மடவரற் கண்டிகும்
(ஐங் 194)
சிலம்ப கண்டிகும் (ஐங் 264)
மெல்லியல் அரிவை (ஐங் 414)
கண்டிகும் மடவரல் புறவின் மாவே
(ஐங் 419)

இவண் 'கண்டிகும்' என்பதனைக் கண்டு—இகும் என்று பகுத்து, இகும் என்பதனை இகு—உம் எனப் பிரிக்கலாம் 'இகும்' எல்லா இடங்களிலும் இறந்த கால வினையெச்சத்துடன் இணைக்கப்பட்டுள்ளமை காணத்தக்கது.

'இரும்' முன்னிலையில் வழங்கும் இடங்களில் எல்லாம் அச்சொற்கள் அன்பேவலாகவே ஆட்சி பெற்றுள்ளன. இது என்பது ஈ(கு) என்னும் துணைவினையின் குறுகிய வடிவமாகக் கொள்ளப்படுதல் பொருத்தமாகத் தோன்றுகின்றது. -உம் ஏவற்பன்மை விகுதி காலப்போக்கில் ஒருமையில் வழங்கியதாகக் கொள்ளலாம். [3]

## சின் :

இவ்வசைநிலை முன்னிலையில் வழங்குதற்கு உரையாசிரியர்கள் பூண்டிசின் (அகம் 7) கண்டிசின் (அகம் 99) போன்ற எடுத்துக் காட்டுக்களைத் தருகின்றனர். சங்க இலக்கியத்தில் காணும் 'சின்' அசைநிலை பெற்ற சொற்களை ஆயின் பெரும்பாலானவை வினைமுற்றுக்களாகவும் ஒரு சில வினையாலணையும் பெயர்களாகவும் வழங்குகின்றனவென்பதைக் காணலாம். வினைமுற்றுக்கள் பெரும்பாலும் தன்மை யொருமை இறந்த காலத்திலும் முன்னிலை யொருமை ஏவலிலும், ஒரு சில படர்க்கை யொருமை இறந்த காலத்திலும் காணப்படுகின்றன. இம்மூவிடங்களிலும் வழங்கும் வினைமுற்றுக்கள் வினைவிகுதிகளை ஏற்பதில்லை எனலாம். வினையாலணையும் பெயர்களாக வழங்குவன படர்க்கை ஒருமையிலும் பன்மையிலும் அமைகின்றன. அவை ஒன் ஒள் ஒர் போன்ற பால்—எண் காட்டும் விகுதிகளைப் பெற்றுள்ளன,

முன்னிலை சின்' அசைநிலை பெற்ற பதினன்கு சொற்கள் ஏறத்தாழ நாற்பத்தைந்து இடங்களில் வழக்கில் காணப்படுகின்றன. இவை யாவும் முன்னிலை யொருமை ஏவலாகவே ஆட்சி பெற்றுள்ளன.

கண்டிசின் (அகம் 99) கண்டு—இசின்
பூண்டிசின் (அகம் 7) பூண்டு—இசின்
என்றிசின் (அகம் 375) என்று—இசின்
கேட்டிசின் (நற் 78) கேட்டு—இசின்
நோற்றிசின் (புறம் 202) நோற்று—இசின்
வந்திசின் (ஐங் 175) வந்து—இசின்
உரைத்திசின் (கலி 63) உரைத்து—இசின்

இந்த இடங்களில் எல்லாம் அசைநிலையின் வடிவம் 'சின்' கொள்ளுவதை விட 'இசின்' என்று பகுப்பதே பொருத்தமாகத் தோன்றுகின்றது. இறந்த கால வினையெச்சங்களுடன் 'இசின்' இணைந்துள்ளது எனலாம். இதனை இசு—இன் எனப் பிரிக்கலாம். 'இசு' இகு என்பதன் அண்ணவினமான (*Palatalized*) வடிவம் ஆகும். இ(கு) என்பது ஈ(கு) என்ற துணை வினையின் உயிர் குறுகிய வடிவம் ஆகும். எனவே, ஈ(கு)—இன் > இ(கு)—இன் > இசு—இன் ஆக மாறி இருக்கலாம். 'இன்' அசைநிலை ஏவலை அன்புடன் உணர்த்தப் பயன்பட்டிருக்கலாம். இது கேண்மின். சென்மின் போன்ற சொற்களில் காணப்படும்—இன் ஐ ஒத்ததாகும் இது என் > என் > இன் என்ற மாற்றங்களை அடைந்து அமைந்ததாக இருக்கலாமோ வென ஐயுற இடமுண்டு.

## சில கருத்துக்கள் :

முன்னிலை அசைநிலைகளாக இலக்கண நூலார் தருபவை அனைத்தும் ஏவல் வினைகளின் ஈற்றில் அமைபவைகளே. அவை அமையும் அச்சொற்கள் ஏவற் பொருண்மையையுடைய ஏவல் வினைகளாக உள்ளன. கூர்ந்து நோக்கின் அவை அமையும் சொற்கள் யாவும் ஏவலை அன்போடு உணர்த்துகின்றன.

முன்னிலை அசைகள் அமையும் சொற்களை இருவகையாகப் பாகுபாடு செய்யலாம். 1. மியா, மோ, மதி ஆகியன ஏவல் வினையுடன் இணைந்து அசைக்கூறு அமைந்தன, 2. இக, இகும் சின் ஆகியன—வினையெச்சத்துடன் துணை வினையாக இணைந்து அசைக்கூறு பெற்றும் பெறுமலும் அமைவன.

## பகுத்துக் காண்டல் :

கேண்மியா கேள்—ம்—(இ)—யா
சென்மியா செல்—ம்—(இ)—யா
உறைமதி உறை—ம்—(அ)—த்—இ

கூறுமதி கூறு—ம்—அ—த்—இ
உள்ளுமோ உள்—உம்—ஓ
கொண்மோ கொள்—ம்—ஓ
சென்றிக சென்று—இ—க
கண்டிக கண்டு—இ—க
கண்டிகும் கண்டு—இ(கு)—உம்
உரைத்திசின் உரைத்து—இ(சு)—இன்
பூண்டிசின் பூண்டு—இ(சு)—இன்

இவற்றோடு பின்வரும் சொற்களையும் ஒப்பிட்டுக் காண்க.

நின்மே (நற் 300) நில்—ம்—ஏ
சென்மே (நற் 247) செல்—ம்—ஏ
உரைமின் (நற் 376) உரை—ம்—இன்
ஏற்றுமின் (பதிற். 18) ஏற்று—உம்—இன்

அசைநிலையுடன் முன்னிலையில் வருகின்ற சொற்களை மேற் கொடுக்கப்பட்டிருக்கும் வகையில் பகுத்துக் காண்டலே பொருத்தமாகத் தோன்றுகின்றது. இலக்கண நூலார் சொற்களின் பிறழ்பிரிப்பாலேயே (*Metanalysis*) முன்னிலையசைகளின் வடிவங்களைப் பெற்றனர். முன்னிலையினின்று ஏவலைப் பிரிக்காத மேலும் இயல்பான ஏவலினின்று சிறிது வேறுபட்ட அன்பேவலைப் பிரித்துக்காட்டாத இலக்கண நூலார் அன்பேவல் என்ற ஒன்றினைப் பிரித்துக்காட்டாமல் அதன் கூறுகளை முன்னிலையசைநிலைகளாகக் கொண்டனர் எனலாம்.

## துணை வினைகள் :

தொல்காப்பியனார் தம் நூலில் துணை வினைகளுக்கு இலக்கணம் கூறவில்லை. ஆனால் அவை சங்க இலக்கியத்திலேயே பரவலாக ஆட்சி பெற்றுள்ளன. இலக்கண நூலார் துணைவினைகளை ஒருவகையில் வேறு இயல்பினவாகக் கொண்டு இடையியலில் ஒரு சிறிது விளக்கம் தந்துள்ளனர் எனலாம்.

எனவே, இக, இகும், இசின் என்பன அடிப்படையில் 'ஈ' என்னும் துணைவினையினின்று அமைவனவாகும். ஈகாரம் இகரமாகக் குறுகியுள்ளது. இத்துணைவினைகள் 'செய்து' என்னும் வாய்பாட்டு இறந்த கால வினையெச்சத்துடன் இணைந்து நின்று ஏவற் பொருண்மையில் வழங்குகின்றனவாக அமைகின்றன. இக்காலத்திலும் இறந்த கால வினையெச்சத்துடன் துணை வினை இணைந்து நின்று வழங்குதல் உண்டு.

எ—டு வந்தருள்க எழுந்திடுக.

பிற்கால இலக்கண நூலான நன்னூலில் (441) இகும், சின் என்னும் முன்னிலை அசைகள் இருந்து, இட்டு, நின்று என்னும் துணை வினைகளுடன் தொடுக்கப்பட்டுள்ளமையும், இகும், சின் ஆகியவை அவற்றை யொத்தனவே யென்று ஐயுற இடந்தருகின்றது.

## முன்னிலைக் குறியீடா ?

வினையியலில் கூறப்படும் இகரம் (தொ. சொ. 223) முன்னிலைக் குறியீடு என்பது வெளிப்படை. இடையியலில் கூறப்படும் இக, இகும், சின் இசின்) (தொ. சொ. 274) ஆகியவை 'ஈ' என்னும் துணைவினையின் குறுகிய வடிவம் என்று கண்டோம். எச்சவியலில் முன்னிலை முன்னர் ஈயும் ஏயும் (தொ. சொ. 451) எனப்படுவதில் சுட்டப்படும் ஈகாரம் முன்னிலைக் குறியீடா அன்றேல் துணை வினையா என்பது ஆய்வுக்குரியது. அது முன்னிலைக் குறியீடு என்று தெளியப்பட்டிருந்தால் "இ ஈ ஐ ஆய்" எனக் கூறி முன்னிலை யொருமை விகுதிகளுள் (தொ சொ 223) ஈகாரத்தைச் சேர்த்திருக்கலாம். அன்றேல் துணைவினை என்று தெளிவு ஏற்பட்டிருந்தால் வேறு வகையாகக் கூறி இருக்கலாம். இவ்விரு வகையிலும் வகுத்துக் கூற இயலாமல் தொல்காப்பியனார் எச்சவியலில் 'முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்' (தொ. சொ. 451) முன்னிலை செயல்வினை (*Indicative Verb*) விகுதி என்றோ, ஏவல் ஒருமை (*Imperative*) விகுதி என்றோ, அன்றேல் துணை வினை என்றோ வரையறுக்காமல் பொதுப் படையாகக் கூறிவிட்டார். நன்னூலாரும் கூடுதல் விளக்கம் தராமல் தொல்காப்பிய நூற்பாவை அப்படியே எடுத்தாண்டுள்ளார். ஆனால் அவர் இந்நூற்பாவை முன்னிலை யொருமை விகுதிகளையும், பன்மை விகுதிகளையும் கூறும் நூற்பாக்களுக்கு இடையில் அமைத்திருப்பது ஒருபடி முன்னேற்றமாக உள்ளது.

ஈகார ஈறு* பெற்றுள்ளன அறிதீ (புறம் 10) ஒத்தி, (புறம் 56), கேட்டீ (கலி 47) கொண்டீ (கலி 65) ஆகிய சொற்களில் அவ் வீறு முன்னிலைக் குறியீடாகும். கரைந்திமே (ஐங் 291) இருந்திமே (புறம் 319) சென்றிமோ (கலி 64), சென்றீக (அகம் 124) கேட்டீக (ஆ.கோ.74) கேட்டீமின் (கலி.23) ஆகியவற்றில் காணப்படும் ஈகாரம் துணை வினையென்று கொள்ளப்படுதலே பொருத்த மாகத் தோன்றுகின்றது. இக்கருத்தினைத் தன்மைப் பன்மையில் ஆட்சி பெற்றுள்ள அயர்ந்திகம் (கலி. 32) ஆன்றிகம் (அகம். 74) போன்ற சொற்களில் துணைவினை ஈகாரம் அமைந்துள்ளமையும் உறுதி செய்கின்றது.

**அசைக் கூறுகள் :**

கேண்மியா, மொழிமோ, கேண்மின், உரைத்திசின், சென்மே போன்ற ஏவல் வினைகளில் காணப்படும் —யா, —சின், ஓ, எ ஆகியவை அசைக்கூறுகள் *(Expletive elements)* ஆகும். இவை ஏவலை அன்போடு தெரிவிக்கப் பயன்பட்டனவென்று முன்னர்க் கண்டோம். வம்மினோ (புறம். 32) வம்–இன்–ஓ என்பதில் இன், ஓ ஆகிய இரண்டு அசைநிலைகள் உள்ளனவென்று கருதலாம்.

**முன்னிலை ஒருமைக் குறியீடு — எவ்வாறு ?**

உரைத்திசின், கேண்மின் போன்ற ஏவல் வினைகளில் உள்ள இன் முன்னிலை யொருமைக் குறியீடு என்பாரும் உளர். அங்ஙனமாயின் வம்மினோ என்பதில் ஓகாரம் தான் அசைநிலை. ஆனால் கேண்மின் போன்ற ஏவல் வினைகள் பன்மையில் வழங்குகின்றனவே. அவற்றில் முன்னிலை ஒருமைக் குறியீடு 'இன்' அமைதல் எவ்வாறு பொருந்தும்? மகரம் தொடக்க நிலையில் முன்னிலைப் பன்மையைக் குறித்து, பின்னர் ஏவற்பன்மையை மட்டும் உணர்த்திப் பின்னர் ஏவற்பொருளை மட்டும் உணர்த்தி இருக்கலாம் என்று கருதினால், பின்னைய நிலையில் இந்த இடர்ப்பாடு ஒருவகையில் அகலுகின்றது. சென்மதி போன்ற சொற்களுக்கும் இவ்வாறே விளக்கம் தரலாம். ஏவற் குறியீடாக மட்டும் அமையும் நிலையில் (த்)இ முன்னிலையொருமைக்குறியீடு அதனுடன் இணைந்து ஒருமையை உணர்த்தி இருக்கலாம்.

**முடிவுரை :**

இவ்வாறாக ஆறு முன்னிலை யசைகளுக்கும் ஒருவகை விளக்கம் கண்டோம். ஏவல் வினை, துணைவினை, அசைநிலை, முன்னிலைக்குறியீடு ஆகியவைபற்றிய விளக்கங்கள் இலக்கண நூல்களில் எவ்வகையில் சிக்கலாக அமைந்துள்ளனவென்றும் அவற்றில் தெளிவு பெறும் வகை யாது என்றும் கண்டோம்.

---

**அடிக்குறிப்புக்கள்**

1. இகும், சின் ஆகியவை தன்மையிலும் படர்க்கையிலும் அமைகின்ற வழக்கு இவண் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்படவில்லை.
2. *Jules Block, The Grammatical Structure of Dravidian Languages P. 58*
3. தன்மையிலும் முன்னிலையிலும் உம் விகுதி பெற்ற சொற்கள் வழங்கவே தன்மையில் வழங்குவனவற்றை கும், டும், தும், றும் என்னும் விகுதிகளாகவும், முன்னிலையில் அமைவதை ஏவல் விகுதியாகவும் படர்க்கையில் அமையும் சொற்களைச் செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று வடிவங்களாகவும் கொண்டனர் இலக்கண அறிஞர் என்பது தெளிவு.

## துணைபுரிந்த ஆய்வுக் கட்டுரைகளும் நூற்களும்


1. *Block, Jules, The Grammatical Structure of Dravidian Languages, 1954.*
2. இசரயேல், மோ, "மியா ஒரு அசைநிலையா? அன்று? தமிழ்ப்பொழில் 40 (1964)
3, "சின் ஒரு அசைநிலையா அன்று? தென்மொழி 2 (1964)
4. "ஏவல் வினையில் விகுவின் ஆற்றல்" தமிழ்ப்பொழில் 40 (1965)
5. *The Treatment of Morphology in Tolkappiyam, unpublished thesis 1965*
6. ஈயும் ஏயும்—தமிழ்ப்பொழில் 45 (1971)
7. *Meenakshisundaram T. P. A History of Tamil Languages, 1965*
8. *Ramaswami Aiyer L. V., "The Morphology of the Old Tamil Verbs Anthropos 35 (1938)*
9. *Sathasivam, A "The Suffix Cin in Sangam Tamil" Tamil culture VII (1958)*
10. *Subramaniyam, P. S. Dravidian verb Morphology, 1971*
11. வரதராசனார், மு. மொழி இயற்கட்டுரைகள், 1954
12. வேங்கடராசுலு ரெட்டியார்..வே., பரணர், 1933




# நாட்டுப் பாடல்கள்

பேராசிரியர், ச. அகத்தியலிங்கம்
அண்ணமலைப் பல்கலைக் கழகம்

நாட்டுப்பாடல்கள் கிராமியக் கலைகளில் ஒன்று. கிராமியக் கலைகள் என்ற தொடரே சிந்தனைக்கும் செவிக்கும் விருந்தாக அமைவது. இத்தொடர் சின்னஞ்சிறு குழந்தையாக இருந்த நிலையில் பாட்டியின் பக்கத்தில் இருந்து கேட்டு ரசித்த பழங் கதைகள் பலவற்றை நினைவுபடுத்தும். இன்னும் ஏட்டில் ஏருத பழமொழிகள், எழுதப்படாத விடுகதைகள், எண்ணி மகிழும் பழைமையான நம்பிக்கைகள், புல்லரிக்கும் பேய்க்கதைகள், மனித ஆற்றலைக் கடந்து நின்ற வீரர்களின் விழுமிய சாதனைகள் போன்றவற்றேடு நெஞ்சிலிருந்து நீங்காது நிற்கும் நாட்டுப்பாடல்கள் பலவற்றையும் நம் கண்முன்னே கொண்டுவந்து நிறுத்தும். ஏட்டில் ஏருவிடினும் எழுத்தில் வராவிடினும் பாட்டில் இடம்பெருவிடினும் நெஞ்சிலிருந்துமட்டும் நீங்காது நிற்கும் இவைகளைத்தாம் கிராமியக் கலைகள் என்ற சொல்லில் அடக்குகிறது தமிழ் உலகம்.

பாமர மக்களிடையே வாழையடி வாழையாக வாழ்ந்துவரும் இக்கலைகளின் வரலாறும் மிகப் பழைமையானது. என்று மனிதன் இவ்வுலகில் தோன்றினுனே அன்றே இக்கலைகளும் தோன்றிவிட்டன எனக் கருதலாம். கி. மு. 3200 க்கு முன்னர் உலகின்கண் எல்லாக் கலைகளுமே எழுதாக் கலைகளாகவே இருந்தன. அப்பொழுதுதான் எழுத்துருவம் வழக்கிற்கு வந்தது என மொழியியல் அறிஞர்கள் கருதுவது இங்கு நினைவு கூரத்தக்கது.

இக்கலைகளை மட்டுமன்றி இக்கலைகள் பற்றிய படிப்பையும் கிராமியக் கலைகள் *(Folk lore)* என்றே அழைப்பர். பாமர மக்களின் பண்பாடு, பழக்கவழக்கங்கள், பழைமையான எண்ணங்கள், எழுச்சி நிறைந்த ஆசைகள், கற்பனைக் கருத்துக்கள் போன்றவற்றைக் கலப்படமின்றி ஒளிவு மறைவின்றிக் காட்டும் இக்கலைகள். ஒரு நாட்டினுடைய பண்டைக் கலையையும் கலாச்சாரத்தையும் பண்பையும் பண்பாட்டையும் வாழ்வையும் வளர்ச்சியையும் குறையையும் நிறையையும் தெளிவாகக் கலப்படமின்றிக் காட்டுவன இக்கலைகள்.

என்று மக்கள் வாழத் தொடங்கினுர்களோ அன்றே இக்கலைகளும் தோன்றி விட்டன என்று முன்னர்க் குறிப்பிட்டேன். இதுபோன்றுதான் எங்கெல்லாம் பாமர மக்கள் வாழ்கிருர்களோ அங்கெல்லாம் இக் கலைகளையும் காணமுடியும். கிராமப் புறங்களிலும் நாட்டுப்புறங்களிலும் இக்கலைகள் வாழ்கின்றன, வளர்கின்றன. நாட்டுப்புற மக்களின் நாவிலும் நடையிலும் கதையிலும் கவிதையிலும் விழாவிலும் பொழுது போக்கிலும் வாழ்கின்றன இக்கலைகள்.

ஒரு சமுதாயம் எப்படித்தான் முன்னேறிய சமுதாயமாக இருப்பினும் பழைமையும் புதுமையும் அச்சமுதாயத்தில் கலந்திருக்கக் காணலாம். நாகரிகமடைந்த நாடுகளிலும்கூட கிராம மக்களிடையே கிராமியக் கலைகள் வளருகின்றன. மின்னல் வேகத்

தில் வளருகின்ற நவ நாகரிகத்தைக் கொண்டுள்ள நாடு என நாம் கருதும் அமெரிக்க நாட்டில்கூட எத்தனையோ மூட நம்பிக்கைகளையும் பழக்க வழக்கங்களையும் நம்மால் காணமுடியும்.

ஒருவருடைய படத்தினைக் கொண்ட கண்ணாடி கீழே விழுந்து உடைந்துவிட்டால் அவர் இறந்துவிடுவார் என நாம் எண்ணுகிறோம். இதே எண்ணத்தினை அமெரிக்க நாட்டிலும் காண்கிறோம். முகம் பார்க்கும் கண்ணாடி உடைந்துவிடின் சாவு உறுதி என எண்ணுகிறார்கள் நியூ இங்கிலாந்துப் பகுதியில் வாழும் அமெரிக்க மக்கள்.

நல்லதொரு காரியத்திற்குச் செல்லும் போது தனியாக ஒரு பிராமணர் எதிரே வரின் நல்லதன்று என எண்ணுகிறோம். அதுபோன்றே இடக்கையைப் பயன்படுத்தும் ஒருவரைக் காணுதல் இடுக்கண் விளைவிக்கும் எனக் கருதுகிறார்கள் அமெரிக்கர்கள்.

குறிப்பிட்ட சில நாட்களில் யாரேனும் இறப்பின் அதனைத் தொடர்ந்து பல சாவுகள் வரும் என நாம் எண்ணுவதுபோன்று அமெரிக்கா வாழ்மக்கள் ஒரு தற்கொலையைத் தொடர்ந்து பல நடைபெறும் என எண்ணுகின்றனர். இதுபோன்றே ஆந்தைகள் அலறினால் சாவு வரும் என்றும் அதைத் தடுக்கக் கலை பிடுங்கியை அல்லது பனிவாரியைத் தீயில் இடவேண்டும் என்றும் எண்ணுகின்றனர்.

நாகரிகமடைந்துவிட்டோம் எனக் கருதும் சிலரோ அன்றிப் பலரோ இத்தகைய மூட நம்பிக்கைகளிலிருந்து விடுபடலாம். ஆனால் ஒரு நாட்டில் வாழும் எல்லா மக்களும் விடுபட்டதாகக் கூறமுடியாது. நகர மக்கள் அல்லது நாகரிக மக்கள் விட்டுவிட்ட எத்தனையோ பழக்க வழக்கங்களையும் கலைகளையும் கிராம மக்களிடம் காணமுடியும். ஒரு பிரிவினரிடையே காணப்படும் பழக்க வழக்கங்கள் இன்னொரு பிரிவினரின் முந்திய பழக்க வழக்கங்களாகவும் உள்ளன.

இந்திய நாடு மிகப் பழமையான நாடு. பல நூற்றாண்டுகட்கு முன்பே தனக்கென ஒரு வாழ்வையும் வரலாற்றையும் அமைத்துக் கொண்டதுடன் தனியொரு சிறந்த பாரம்பரியத்தையும் கொண்டிருந்த பெருமையுடையது பாரதம். பலவேறுவகையான பழக்க வழக்கங்களையும் எண்ணங்களையும் கருத்துக்களையும் கற்பனை ஊற்றுக்களையும் கொண்டு வாழ்ந்த நாடு இக்கலைநாடு.

நாகரிகத்தில் சிறந்து விளங்கும் நகர மக்களையும் நாகரிகமே இன்னதென அறியாது வாழும் எத்தனையோ மலைவாழ் மக்களையும் கொண்டுள்ளது பாரதம். இரண்டாயிரம் அல்லது மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமேயே உலக அரங்கில் நின்று நிலவும் இலக்கிய இலக்கணங்களையும் கற்பனைக் காவியங்களையும் காதல் இலக்கியங்களையும் கவிதைச் செல்வங்களையும் பத்திப் பாடல்களையும் பெற்றெடுத்த சமுதாயங்களை மட்டுமன்றி எழுத்து இலக்கியத்தை எண்ணிக்கூடப் பார்க்கமுடியாத பாமர மக்களையும் படிப்பற்ற சமுதாயத்தையும் கொண்டுள்ளது பாரதம். இதனால் தான் இந்திய நாட்டில் இலக்கியச் செல்வங்களையும் எண்ணற்ற நாட்டுப் பாடல்களையும் ஒருசேரக்கண்டு களிக்கமுடிகிறது.

சில நேரங்களில் இலக்கியக் கவிதைகளிலும் காப்பியங்களிலும்கூட நாட்டுப்பாடல்களின் செல்வாக்கினைக் காணமுடியும். சிலப்பதிகாரத்தில் வரும் கானல்வரியும் வேட்டுவவரியும் நாட்டுப் பாடல்களை நமக்கு நினைவுறுத்தும். இன்னும் ஆய்ச்சியர் குரவையும், வாழ்த்துக் காதையில் வரும் ஊசல் பாட்டும் நாட்டுப் பாடல்களின் செல்வாக்கினை நன்கு காட்டுவனவாக அமைந்துள்ளன. இதுபோன்றே மண்டோதரியின் புலம்பலும் ஆசிய சோதியில் தாயின் புலம்பலும் ஒப்பாரிப் பாடல்களை நம் கண்முன்னே கொண்டு நிறுத்தும். இதனால் அறிஞர்கள் பலர், நாட்டுப் பாடல்கள் சில இலக்கியங்களுக்கு ஊற்றுக்கண்ணாக விளங்குகின்றன எனக் கூறுவர்.

இந்திய நாட்டில் சாதியும் சமயமும் அதிகம். இத்தகைய சாதியின் தோற்றத் தைப் பற்றிய கவிதைகளையும் கற்பனைகளை யும் பலவாகக் காணலாம். பிரம்மனின் உந் தியிலிருந்து பிறந்தது ஒரு சாதியென்றும் மூக்கிலிருந்து பிறந்தது மற்றொரு சாதியென் றும் பலவேறாகக் கதைகள் பாரத நாடு முழுவதும் பரந்து நிற்கக் காணலாம். இது போன்றே சாதிக் கொடுமையும் சமயக் கொடுமையும் மனித சமுதாயத்தைச் சீரழித்த நிலையில் பாரதம் முழுவதும் சாதி எதிர்ப்புணர்ச்சி மேலோங்கி நின்றது. சாதி யின் பெயரால் ஒருவனை மற்றொருவன் சுரண்டுவதையும் சமயத்தின் பெயரால் மக்க ளிடையே உயர்வு தாழ்வு கற்பிப்பதையும் கண்ட நிலையில் பாரதி "பார்ப்பானை ஐய ரென்ற காலமும் போச்சே" என்றும் "வேதியராயினும் ஒன்றே அன்றி வேறு குலத்தினராயினும் ஒன்றே" என்றும் பள் ளுப் பாடினர். இதே நிலையைப் புரட்சிக் கவி பாரதிதாசனிடமும் காணமுடியும்.

இலக்கியத்தில் ஏறிவிட்ட இக்கருத்து எழுதாக் கவிதையாக, பாடாப் பாட்டாக, நாடோடி இலக்கியமாக மக்களின் மத்தியில் நடமாடி வந்த நிலையில்தான் பாரதி இதற்கு இலக்கிய உருக்கொடுத்து இனிய கவிதை யாகச் சமைத்துத் தந்தான் என நம்பலாம். தமிழரிடையே நடமாடும் நாட்டுப்பாடல் ஒன்று இதே உண்மையை மிக அழகாகச் சித்திரித்து நம்மைச் சிந்திக்க வைப்பது நெஞ்சிலிருந்து நீங்காத நினைவாக நிலைத்து நிற்கும்.

தண்ணிக்கொரு தீட்டுமில்லை
கண்ணே அதைத்
தடுக்க ஒரு நாதியில்லை
பார்ப்பானுக்கும் பச்சைத் தண்ணி
கண்ணே அங்கே
பறையனுக்கும் பச்சைத் தண்ணி
காசித்தீர்த்தம் ஆடப்போனல்
கண்ணே அங்கே
காண்கிறதும் பச்சைத்தண்ணி

என்பது அப்பாடல். இதே கருத்தினை ஆந்திர நாட்டுப் பாடல் ஒன்று இன்னும் சற்றுக் கடுமையாகக் கூறுவதைக் காண லாம்.

பறையனைப் பழிப்பது எதற்கடி கண்ணே
பள்ளனை இழிப்பது எதற்கடி பெண்ணே!
ஊனும் அவன் உறக்கமும் ஒன்றடி
கண்ணே!
ஓடும் குருதியும் சதையும் நன்றடி
பெண்ணே!

என்று தொடரும் இப்பாடல் சாதியையும் சமயத்தையும் கடிவதுடன் கடவுளின் பெய ரால் சாதியைக் கற்பிக்கிறீர்களே. அப்படி யாயின் கடவுள் எச்சாதி? எச்சமயம்? எனச் சாடி நிற்பது இன்னும் ஒருபடி மேலே சென்ற நிலையைக் காட்டும்.

பாடும் பகவன் எச்சாதியடி கண்ணே!
நாடும் கடவுள் எச்சமயமடி பெண்ணே!
பொல்லாத உலகம் இதுவடி கண்ணே!
போதும் இந்த வாழ்வடி பெண்ணே!

எனப் பொறுமையிழந்து நிற்கிற பேர் ஊர் தெரியாத இக்கவிஞனின் பாடல் சாதிக் கொடுமைக்குக் கொடுக்கும் சவுக்கடியாக அமைகிறது. இதே கருத்தைத்தான் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை தம்முடைய ஆசிய சோதியில்

ஓடும் உதிரத்தில்—வடிந்து
ஒழுகும் கண்ணீரில்
தேடிப் பார்த்தாலும்—சாதி
தெரிவதுண்டோ அப்பா?

என்றும்

எவர் உடம்பிலும்—சிவப்பே
இரத்த நிறமப்பா
எவர் விழி நீர்க்கும்—உவர்ப்பே
இயற்கைக் குணமப்பா

என்றும்

பிறப்பினல் எவர்க்கும்—உலகில்
பெருமை வராதப்பா
சிறப்பு வேண்டுமெனில்—நல்ல
செய்கை வேண்டும் அப்பா

என்றும் இலக்கியத்தில் ஏற்றிவிட்ட நிலையினைக் காணுகிறோம். கி. பி. பதினாரும் நூற்றாண்டில் வாழ்ந்த கனகதாசா என்ற கன்னடக் கவிஞன் இன்னும் ஒரு படி மேலே சென்று, சாதி சாதி எனக் கத்துகிறீர்களே, உண்மை விரும்பும் மக்களுக்கு ஏது சாதி? ஏது சமயம்? சேற்றில் பிறக்கும் தாமரையை அணியலாம். ஐயறிவுடைய பசுவின் பாலைக் குடிக்கலாம். ஆனால் ஆறறிவு பெற்ற மனிதர்கள் மட்டும் ஆகாது என்ற கருத்தில் சாதி எதிர்ப்புக்குரல் எழுப்புவதைக் காணலாம். இத்தகைய இலக்கியங்கள் எல்லாம் சமுதாயத்தின் மேல் தட்டில் மலருவன என்பதும் இவற்றின் ஆணிவேராக, அடித்தளமாக நிற்பன சமுதாயத்தில் காணப்படும் பல்வேறு நிகழ்ச்சிகள்தாம் என்பதையும் நாம் அறிவோம். சிறந்த கற்பனை வளமும் சொல்வளமும் கொண்ட கவிஞர்களின் கைவண்ணத்தில் சில சமுதாயக் கருத்துக்கள் கதைகள் போன்றவை சிறந்த கவிதைகளாகவும் காப்பியங்களாகவும் கற்பனை ஓவியங்களாகவும் மலருகின்றன. நாட்டு மக்களிடையே நிலவும் பல கருத்துக்கள் நாட்டுப் பாடல்களாக, கவிதைகளாக, கதைகளாக. வாழையடி வாழையாக வாழுகின்ற நிலையில் கைவண்ணம் பெற்ற கவிஞர்கள் அவற்றிற்கு இலக்கிய உருக்கொடுத்து காப்பியங்களாகவும் கவிதை மலர்களாகவும் தொடுக்கின்றனர். இராமாயண மகாபாரதக் கதைகள் கர்ண பரம்பரைக் கதைகளாகப் பல நூற்றாண்டுகள் மக்களிடையே வாழ்ந்த நிலையில்தான் வியாசரும் வால்மீகரும் அவற்றிற்கு இலக்கிய உருக்கொடுத்தனர் எனக் கூறுவாரும் உளர். இது போன்றுதான் கிரேக்க நாட்டு இதிகாசங்களாய இலியட்டும் ஆடிசியும் ஓமரின் கைவண்ணம் பெற்றுக் காப்பியங்களாக மாறின என்பர் பலர்.

இந்திய நாட்டு இலக்கிய வகைகளில் 'தூது' என்பதும் ஒன்று. தமிழில் தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களில் இது ஒன்று ஆகும். இத்தகைய இலக்கிய வகையினைப் பாரத நாடு முழுவதும் காணமுடியும். அது போன்றே சங்க காலம் முதல் சத்திமுற்றப் புலவர் வரை, காளிதாசன் முதல் கண்ணதாசன் ஈறாக உள்ள புலவர்கள் இவ்வகை இலக்கியத்தில் தங்கள் கவித்துவத்தைக் காட்டியுள்ளனர்.

ஆனால் இலக்கியம் காணாத, எழுத்துருவத்தை எண்ணிக்கூடப் பார்க்கமுடியாத தோடா மொழியின்கண் காணப்படும் நாட்டுப் பாடல் ஒன்று கிளிகளைத் தூது விடும் நிலையில் நெஞ்சைத் தொட்டு நிற்கக் காணலாம். கணவனைப் பிரிந்து நோயால் வாடி வதங்கி நிற்கும் பெண்ணொருத்தி பாடுவதாக வரும் தோடர்களின் பாடல் ஒன்றினைப் பாருங்கள்.

சின்னஞ்சிறு கிளியே
 செம்பவள வாய்க் கிளியே!
தங்க நிறங் கொண்டு
 தவழ்ந்து வருங் கிளியே
வெள்ளி நிறங் கொண்டு
 வேகமாய் வருங் கிளியே!
பறந்து செல்லாயோ
 பக்கத்து விடெல்லாம்
சென்று சேராயோ
 சேணெடுந் தூரமெல்லாம்.

என்று கிளியைத் தூது விடுகின்றாள். கட்டிலிலே படுத்துக் கிடக்கும் அவள் மனக் கண்ணிலே தன் கணவனுடன் தான் கழித்த நாட்களும் உல்லாசமாக ஆடி ஓடிய இடங்களும் அவள் நினைவுக்கு வருகின்றன. கிளியிடம் கூறுகிறாள்.

குவரிந்தோ மலைதனில்
 குந்தி நான் இருந்தேன்
அம்மலை அழகெல்லாம்
 அன்று நான் கண்டு நின்றேன்
படகர் தம் கோயிலையே
 பார்த்துத்தான் நான் நின்றேன்

எத்தியோடி கோயில் தன்னை
என்றும் நான் கண்டு நின்றேன்
பறந்து செல்லாயோ அங்குப்
பாய்ந்து நீ சேராயோ
சென்று நீ செப்பாயோ
என் சோகக் கதை தன்னை.

என்றெல்லாம் கூறிக் கணவன் தேனுடு மங்கில் உள்ளார். அவரிடம் சென்று தன் சேதியைச் சொல் என்று கூறி அழுகிருள்.

தேனுடு மங்கெல்லாம் என்
கால் தோய்ந்த இடமெல்லாம்
பறந்து செல்லாயோ
பாய்ந்து நீ சேராயோ
தேனேடு மாந்தரை நீ
பார்த்துத் தான் வாராயோ
தேடி அவரைக் கண்டு
என் சோகந்தான் சொல்லாயோ
தோடர் இடம் சென்று
சொல்லாயோ என் சோகந்தன்னை
சின்னஞ்சிறு கிளியே
செம்பவள வாய்க்கிளியே

தங்க நிறம் கொண்டு
தவழ்ந்து வருங் கிளியே
வெள்ளி நிறம் கொண்டு
வேகமாய் வருங்கிளியே
பறந்து செல்லாயோ
அங்குப் பாய்ந்து நீ சேராயோ
சின்னஞ்சிறு கிளியே
செம்பவளக் கிளியே!

எனக் கூறி நிற்கும் இத்தொடர் மொழி கவிதை இலக்கியம் காணுத நிலையிலும் எழுச்சி மிக்கு நிற்கிறது; நாட்டுப் பாடல்களில் பாரம்பரியத்தைக் காட்டி நிற்கிறது.

இத்தகைய பாடல்கள் எத்தனையோ நாட்டு மக்களிடையே வாழக் காண்கிறோம். இவற்றையெல்லாம் திரட்டி ஆராயின் இன்றைய இலக்கியங்களின் அடிப்படையை ஆராய அவை உதவும். இலக்கியங்களுக்கும் அவற்றிற்குமிடையே காணப்படும் உறவை நன்கு அறிந்து கொள்ள முடியும். இலக்கிய ஆராய்ச்சிக்கும் அதன் ஏற்றத்திற்கும் துணை புரியும். சில புது மாதிரியான இலக்கியங்கள் உருவாவதற்கே வழி வகுக்கும் என நம்பலாம்.



# சீவகசிந்தாமணியில் இசை நாடகக் குறிப்பு விளக்கம்

(காந்தருவதத்தையாரிலம்பகம்–இசைவாதுவென்ற பகுதி வரை)

பண்ணுராய்ச்சி வித்தகர், ஏழிசைத் தலைமகன்
குடந்தை, ப. சுந்தரேசன்

திருத்தக்கதேவர், அருளிய சிந்தாமணி யெனும் தமிழ்க் காப்பியம் நம் செந்தமிழ் மொழியிற் செவ்விதினமைந்து பண்டைத் தமிழ் நூல்களை முத்தமிழ் முறையால் நன்கு விளக்குவதென்பது தெள்ளிதின் புலனாகும்.

இக்காப்பியம் **தன்னேரிலாத தமிழ்நூல்** என்ப. அஃதாவது தன்னேரிலாத தமிழால் விளங்குவது அறியற்பாலது. தன்மையால் பெயரமைந்து சிந்தாமணிக்கு **மணநூல்** என்ற பெயருள்ளமையையும் அறிஞர்கள் நன்கறிவர்.

தேவரது சிந்தாமணிப்பதிகம், "விஞ்சைக் கிறைவன் மகள் **வீணை**" என வியம்ப, அதற்கு உரையாசிரியர் தத்தை '**யாழ்ப் பாடலிலே**" எனக் கூறியிருப்பதறியலாம். '**வீணைக்கிழவன்**' என்றே தேவர் சீவகனைக் குறிப்பதும் அறியத்தக்கது. இவ்விடத்து வடநூற் கதைக்கேற்பத் தேவர், **வீணை**யென் ருர். தமிழுரைக்கேற்ப, உரைகாரர் **யாழ்ப் பாடல்** என்ருர். இந் நுட்பம் அறியத்தக்கது. நாமகளிலம்பகத்துள், '**முழவநின்றதிர் மொய்வரை**' எனவும், பதுமையாரிலம் பகத்துள், **முழவின்னிசை மூரி முழங்கருவி**, எனக் கூறியிருத்தல், அருவியினதிர்வு நீர் விழும் ஓசையதிர்வு, முழவினதிர்வினை யொத்தது எனவும் **முழவுபோலதிர்தல்** அருவியில் நீர் விழுமோசையின் இயல்பு எனவும் உணரத் தக்கதாயுளது. இக்கருத்துப் பழந்தமிழ் முறைமையை உணர்த்துவதாகும்.

'**பண்ணெழுத்தியல்படப் பரப்பியிட்டனர்**' எனக் கூறும் பகுதி, தமிழகத்து முறையில் இசை,–எழுத்து (இசையெழுத்து) எனக் கூறும் மரபினையொட்டி, பண்-எழுத்து (பண்ணெழுத்து) அஃதும் பண்ணெழுத்தியல், அஃதாவது பண்டைய உழவரது தன்மை, அவர் பாடும் பாடல், இசைத்தமிழ்ப் **பண்ணை** எழுத்தின் வடிவுதோன்றப் பாடிய நிலையில் இப்படி இருந்ததென்ருர். அஃதாவது சொற்களை ஒலிகொண்டு பாடுவதாலே அவ்வொலித் தொகுதியும் இன்ன பண்ணென்று பண் பல அறியும் உணர்வுடையார்க்கு எளிதின் புலப்படத்தக்கதாக இருந்ததாம். **பண்ணெழுத்தியல்** என்ற சொற்றொடர் சிந்தாமணியில் மட்டும் நாமறியத்தக்கதாகவுளது.

**இவ்விலம்பகத்துள் கிணைநிலைப்பொருநர்** குறிக்கப்படுவதறியலாம். **கிணைநிலை** என்பது வேளாளப் பெருமக்களைக் கிணை கொட்டுவோன் புகழ்ந்து பாடுவதாம்' ஆகவே அதற்கான முறையில் பாடல்களும். பாடல்களின் அமைப்பு முறைமைகளும் பற்பலவாக இருந்தனவென்பது உணரத்தக்கது.

கிணேயென்பது தடாரிப்பறையாம். ஏர்க்களம் பாடுவோர், போர்க்களம் பாடுவோர், பரணிபாடுவோர், எனப் பொருநர் முப்பகுதியினர் என்பது மரபு. (**பொருநர்,–இசைபாடுவோர்**) 'குயில் முழவமாக, எனுமிடத்து' **குயிலோசையைக்** குறிக்கும். குயிலோசை, **துத்தவிசை** எனப்படும். அதனைப் பிற்காலத்தர் **பஞ்சம இசை** என்பர். **ஆடுகூத்தி** எனுமிடத்து, கழாயினின்றும் இழிந்து பக்கத்தினமைந்த கயிற்றிலே குதித்துக் கலனொலிப்ப ஆடுங்கூத்தியது கூத்தையொத்தனவாம் அது **வாளேயேறப்பாய்வதா**ம். 'சிறகர் வண்டு செவ்வழிபாட' எனுமிடத்து, **செவ்வழி மாலைப்பண்**. மாலைக்காலத்தே மட்டும் பாடற்குரியது. **அப்பண் நெய்தல் நிலத்திற் குரிய பண்**. அந்நில மக்களில் பலரும் இரங்கினராய் மாலைக் காலத்து வருந்தினர் பாடும் பண்ணுகுமாம். அதனை **விளரிப்பண்** எனவும் கூறுவது மரபு. (**விளரிப்பண்** வேறு, விளரிப் பாலை வேறு) பகல் முழுதும் செடி, கொடி, மரம் முதலிய (பூக்கள் நிறைந்த) இடங்களில் பறந்து தேனுண்டு அலுத்தயர்ந்து திரும்பித் தான் தங்குமிடத்திற்குப் பறந்து வரும் வண்டுகள் பறக்கும் ஒலி **செவ்வழிப்பண்** போன்றது எனப்படும். அவ்வண்டுகள் மறுநாட் காலையில் பறக்கும் ஒலி நேர்திறமான **புறநீர்மை** எனப்படும்.

சுவர்கள்தோறும் நாடகமெழுதி எனுமிடத்து, 'காமக் குறிப்புப்பட நாடகமெழுதி என்றுர் உரைகாரர். அஃதாவது, அத்தன்மையைத் தூண்டுகின்றவளவுக்கான ஓவியங்களும் நாடகமென வழங்கும் போலும். சேரியின் நிலைகளே இவ்வாறும், '**பஞ்சி மெல் விரலிற்பாணி' பண்ணொலி, குழலொலி குழலினேசை**, எனும் இடத்து, **கலேயொலி யாழொலி பாட்டொலி குழலொலி முழவிஞெலியாகிய** ஒழியாவொலிகள் எனக் குறிப்பது அறியலாம். ஓசையென்று உணர்தலன்றி எழுத்தின் வடிவு உணர்தலாகா இடங்களும் உளவாம் என்பது குறிப்பு. முரசொடு வளே விம்ம என்பது, முழவுநிரைத்த கோயில் களிலே **முரசம் வளேயும்** (வளே–சங்கு) விம்மவாம், என்பதும் **விளிக்கூத்து**. **சிழ்க்கைக் கூத்து** அஃதாவது கைவிரல் மடித்து வாயில் வைத்துச் **சிட்டியடித்து ஆடுங் கூத்து** என்பதும் குறிப்பு. சிட்டிக்கூத்து எனவும் கூறலாம். சேரியுழவர் ஆடுங்கூத்தேயது.

**புரிவளர் குழல்** எனுமிடத்து நரம்புகளினிடத்து இசை வளர்தற்குக் காரணமாகிய **குழல்** அது. **புல்லாங்குழல்-புல்-**மூங்கிலையும் குறிக்குமாகலான் **மூங்கிற் குழல்** எனலாம். இவ்விடத்து, "**குழல்வழி யாழெழீஇத் தண்ணுமைப்பின்னர் முழவியம்பல் ஆமந்திரிகை**" எனக் கூத்தநூலிலிருந்து உரையாசியரே, மேற்கோள் எடுத்துக்காட்டு தலறியலாம்.

**முழவும் சங்கும் முழங்குவனவாம் காளம்** ஒருவகைக் கருவி 'தீங்குயின்மணந்து தேன்துஞ்ச வண்டு பாண்செய, எனுமிடத்துக் குயிலாகிய **காளங்கூடித் தேனுகிய யாழ்** தங்க வண்டு பாட, என்பது குறிப்பாம். **'காமர்வல்லி மாதரார் கூத்தருந பள்ளியும்'** அஃதாவது மாதரார் **நாடகசாலே**. காமர் வல்லி, **காமரவல்லி**, காமரம், **சீகாமரம்** எனவும்படும். **சீகாமரப்பண்** வல்ல மாதரார் எனவுங் கொள்ளலாம். காமரவல்லி, (காமரசவல்லி) என்றதொரு ஊர் நம் திருச்சி மாவட்டத்தினுளது உணரலாம்; சென்றுங் காணலாம்.

ஆடலின்னரவம், அங்கைகொட்டி (ஒக்கடித்து) நெஞ்சுணரப் பாடலின்னரவம், பனேமுழவரவம், கூடுகோலத் தீஞ்சுவை **கோலயாழரவம்** எனுமிடத்து ஒழிந்த கருவிகளோடு கூடும் அழகையும், சுவையையும் **உடைய** நரம்பைவுடைய **யாழ்** என்பதே குறிப்பு. யாழ் வேறு, வீணை வேறு என்பதை நன்கறிதல் வேண்டும்.

**பிளிறு வார் முரசு, பண்கெழு மெல்விரல் பண்**, யாழுக்கானமையின் ஆகுபெயர், யாழொடு பயின்ற விரல் **பண்ணுரை பண கனியப்பருகிப்பயனுடகம்**, பண்ணை, பழுக்கக் (முற்றக்) கேட்டும், நாடகங்களை கண்ணுருக முகந்து நுகர்ந்தும், **பண்டவழ்** விரலிற்பாவை, **புரிநரம்பு இரங்குஞ் சொல்**

லாய், என்ற குறிப்புகள் பலவும் நன்கு ஓர்ந்தறிதற்குரியன. இச்சொற்கள் இசை நாடக நுகர்ச்சித் தன்மையை விளங்கப் புலப்படுத்துவனவாகும்.

''செந்தீக் கருந்துளைய தீங்குழல் யாழ்
தேந்தே மென்னு மணிமுழவமும்
தந்தாங் கிளையார் மணிவிரல்கள் தீண்டத்
தாந்தா மென்றிரங்கும் தண்ணுமைகளும்'

எனுமிடத்து, 'செந்தீயாற் கருந்துளையாவன குழல்கள்' 'தேந்தரும்' தாந்தாம் அனுகரணம். அனுகரணமென்பது அதாவது ஒன்றைப் போலவேயொலித்தல், நிருத்த கீத வாச்சியத் திற்குரிய மகளிர் இளையார், என்பது குறிப்புகள்.

வென்றி வெம்முரசம், மழலையாழ் தழங் குரல்முரசு தழங்குகுரல் முரசு. முழங்கு கின்றவொலி, மொய்குழன்முரசம் எனுங் குறிப்புகளும் சிறப்புடையன. பண்டைத் தமிழ் மரபினைக் குறிப்பன.

கோவிந்தையார் இலம்பகத்துள், வீணைச்செல்வமும் மாதங்கி (வீணைத் தெய்வம்) தொண்டகப்பறை, துடியொடு ஆர்த்தெழ, ஆகோட்பறை, பசுக்களைக் கொள்ளுதற்பொருட்டு அடிக்குங்கருவி, தொண்டகப்பறை குறிஞ்சி நிலத்திற்குரியது குழலும், வேய்ங்குழல் வார்விசிமுரசம் வாரென்பது முரசத்திற்கட்டிய தோற்கயிறு, கடிமுரசியம்பக் கொட்டி இரலை – ஊது கொம்பு. துத்தரிக்கொம்பு, சங்கும். பறையும் கொம்பும் சிறுபறை கோல், கோலென்பதை நரம்பு என்றூர் ஏறங்கோண்முழங்க – ஆயர் ஏறுகோட்பறை முழங்காநிற்க என்ற குறிப்பு பழந்தமிழ் முறையையே நன்கு விளக்குவனவாகும். அவை முல்லைநிலப் பண்புகள்.

காந்தருவதத்தையாரிலம்பகத்துள்,

'முந்நீர்க்கோடு பறை' அஃதாவது முந் நீரிற்பிறந்த சங்கு பறை, இவ்விடத்துச் சங்கு என்பதே குறிப்பு. சங்கு என்பதைக் கோடு பறை எனக் குறிக்கப்பெறுவதையும் அறிய லாம்.

'நாவினுளமிர்தம்' கேட்டு நாடகம் நயந்து, என்றவிடத்து, நாவினுளமிர்தம் என்பது பாட்டு என்ற குறிப்பு. பரவையாழ் குழல். பண்ணமை மென்முழா. பரவையாழ் என்பது பேரியாழ். குழல் பண்ணையுடைய குழல். அதிர்குரன் முரசு. பேரியாழுக்குப் பரவையாழ் என்ற பெயருளதும் தெரிய வரும்.

''காசில்யாழ்க் கணங்கொள் தெய்வக்
காந்தர்வதத்தை''

வீணையின் வனப்பு, இன்னிசைபொருது, வீணைபதி என்ற குறிப்புக்களோடும்.

''விளக்கழலுறுத்தபோலும் விசியுறு
போர்வைத் தீந்தேன்
துளக்கற வொழுகியன்ன துய்யறத்
திரண்டதிண்கோல்
கொளத்தகு திவவுத் திங்கட் கோணிறைத்
தனையவாணி
அளப்பருஞ் சுவைகொ ணல்யாழ் ஆயிர
மமைக வென்றான்.

என்ற இப்பாட்டிற்கு, நச்சர், ''கோள் நிரைத்த திங்கள் பத்தரில் தோலைச் சூழ்ந்து, முடுக்கின ஆணிக்கு உவமம் என்றும்,

'விளக்கழ லுருவின் விசியுறு பச்சை
உருக்கி யன்ன பொருத்துறு போர்வை
தொடித் திரிவன்ன தொண்டுபடு திவவிற்
கடிப்பகை யனைத்துங் கேள்வி போகாக்
குரலோர்த்துத் தொடுத்த சுகிர்புரி
நரம்பின்
துளைவாய்த் தூர்ந்த துரப்பமை யாணி
எண்ணுநாட் டிங்கள் வடிவிற்றாகி ..... ..... ....''

என்பனவாய மேற்கோளைப் பொருநராற்றுப் படை, மலைபடுகடாம், பெரும்பாணாற்றுப் படை, எனும் பகுதிகளிலிருந்து எடுத்துக் குறிப்பது நன்கறியத்தக்கதாகும்.

இன்சுவையாழ், 'நாடக நாங்களுற்றது' (நாங்கள் உற்றது) அஃதாவது நாங்கள் கண்டது நாடகம், 'மண்கணை முழவம், 'முரைசதிரிமிழிசை' அஃதாவது இமிழிசை முரசு. 'மூரிநூற்கலைகள்' மூரி = தண்டு இசை: இசை நூலிற் கூறப்பட்ட கலைகள், 'யாழனங்கன்' அவன், இசையறிவிற் சிறந்தவன்.

'தீந் தொடை மகரவீணைத் தெள்விளி எடுப்பத் தேற்றி'

கடிமுரசு, இமிழ்கின்ற ஒசையையுடைய முரசு, தொடை, நரம்பு பேரியாழ் மகரயாழ் சகோடயாழ் செங்கோட்டியாழென்னும் நான்கினும் பத்தொன்பது நரம்பு கட்டின மகரயாழ் இவள் வாசிக்கின்றதென்பது, என்ற குறிப்புகளும் கருத்து நிறைந்தன வாகும். காந்தருவதத்தை வாசித்துப் பழகியது மகரயாழே என்பது உணரத் தக்கது.

''ஒன்றும் இருபது மொன்பதும் பத்துடனே
நின்ற பதினன்கும் பின்னேழும் – குன்றாத
நால்வகை யாழிற்கு நன்னரம்பு சொன்
முறையே
மேல்வகைய நூலோர் விதி''

இவை, 21, 19, 14, 7. எனக்கொள்க,

அஃதாவது பேரியாழுக்கு நரம்புகள்—21
மகரயாழுக்கு ,, —19
சகோடயாழுக்கு ,, —14
செங்கோட்டியாழுக்கு ,, — 7

என்பதே தொன்மையான தூய மரபு.

வாசினை – வாசித்தல், தீம்பாலை நீத்தம்,

பாலையாவன,
1. செம்பாலை
2. படுமலைப்பாலை
3. செவ்வழிப்பாலை
4. அரும்பாலை
5. கோடிப்பாலை
6. விளரிப்பாலை
7. மேற்செம்பாலை எனஏழும்.

இவை, மகரயாழாகிய மலையினின்றும் குதித்த பாலையென்கின்ற பண்ணாகிய நீர்ப் பெருக்கு, (பெருக்கு – நீத்தம்) என்பதாம். என்பது அரிய குறிப்பு.

தத்தையின் யாழ்ப்போரை ஒரு வியாழக்கிழமையிலே நடத்துவதற்கு விருச்சிகன் அறிந்துகூறினன், என்பது அரிய குறிப்பேயாகும். 'மண்கணை முழவம்' 'மார்ச் சனையமைந்த திரண்ட முழவம்' (மண்–மார்ச் சனை) 'பண் கனிந்துருகு நல்யாழ்'—'பண் முற்றுப் பெறுதலிற் கேட்டோர் நெஞ்சுரு குதற்குக் காரணமான யாழ்: ஒன்றிய மணி செய்நல்யாழ்,(வீணையென்று–யாழையென்று) தத்தை, நல்யாழ்தொட்டெழீஇப் பண் ணெறிந்தாள். அஃதாவது, யாழையெடுத்துப் பண்ணையெழுப்பி, நரம்பைத் தெறித்தாள். அதனுற் கின்னரரும் சோர்ந்தார். பண், பண்ணையுடையநரம்பு என்பன இசைத் தமிழ்ப் பண்புகளைப் புலப்படுத்தும் குறிப்பு களே.

யாழ் மண்டபத்தேயிருந்து அவைப்பரி சாரமாகப் பாடுகின்றமை கூறுகின்ருர். அஃதாவது கோதை அவைப் பரிசாரத்தைப் பாடியது. (அவைப்பரிசாரம் – சபையை வணங்கல்) அப்பாடல்கள் இசைப்பாடல் கள், இசை நூலார் முகம் நிலை முரி என்பன வற்றில் நிலை என்ப இதனை, (கோதை–காந் தருவதத்தை)

இசைப்பாடல்

நிலை

1 ''புன்காஞ்சித் தாதுதன் புறம்புதையக்
கிளியெனக்கண்
டன்புகொண் மடப்பெடை யலமந்தாங்
ககல்வதனை
என்புருகு குரலழைஇ யிருஞ்சிறகர்
குலைத்துகுத்துத்
தன்பெடையைக் குயிறழுவத் தலைவந்த
திளவேனில்''

2 தண்காஞ்சித் தாதாடித் தன்னிறங் கரந்த
தனைக்
கண்டானு மடப்பெடை கிளியெனப்
போய்க் கையகல
நுண்டுவி யிளஞ்சேவ னேக்கோடு
விளிபயிற்றித்
தன்சிறகாற் பெடைதழுவத் தலைவந்த
திளவேனில்.

3 குறுந்தாட் குயிற்சேவல் கொழுங்காஞ்சித் தாதாடி
வெறுத்தாங்கே மடப்பெடை விழைவகன்று நடப்பதனை
மறுத்தாங்கே சிறகுளர்ந்து மகிழ்வானைக் கொளத்தேற்றி
உறுப்பிறு லடிபணியத் தலைவந்த திளவேனில்.

இவை மூன்றும் ஒரு பொருண்மேல் மூன்றடுக்கித் தாழம்பட்ட ஓசைபெற்றுவந்த **கொச்சகவொருபோகு.** (தாழம்–தாழ்தல்) இனி **இசைநூலாரும்,** இத்தரவு முதலாயின வற்றை, **முகம் நிலை கொச்சகம் முரி** என வேண்டுப. **கூத்தநூலார்,** கொச்சகம் உள் வழி அதனை நிலைபெறவடக்கி **முகம் நிலை முரி** என மூன்ருக வேண்டுப. இனி இசைத் தமிழில் வருங்கால் **முகநிலை கொச்சகம் முரி** யென்ப ஒரு சாராசிரியர்.

**எழால் வகைத் தொடங்கல்** (எழால்—யாழின்கூறுபாடு) விஞ்பதி எனும் பேடி, ''வேற்கண் இளையவள் பாடவீரர், **எழால் வகை** தொடங்கல், அன்றேல், வளையவள் எழாலின் மைந்தர் பாடுக வல்லை'' என்ருள். (வல்லை–விரைய)

''கடாமும் குருதியும் கால்வீழ்ந்த பச்சைப்
படாமும் புலித்தோலும் சாத்தும் பரமன்
இடாமுண்ட நெற்றியான் எஞ்ஞான்றும் கங்கை
விடாமுண்ட வார்சடையான் வெண்ணீ றணிந்தோன்
மெய்யுறு நோயில்லை வேறோர் பிறப்பில்லை
ஐயுறு நெஞ்சில்லை யாகாத தொன்றில்லை''

என்னும் இப்பாடலை நச்சர் எடுத்துக் காட்டி 'நான்கடிச் செய்யுள் முடியவும் ஈற்றடி இரண்டு மிக்கு வேறுபடவந்த கொச்சகம் என்றுகூறி ஒழிந்தனவும் பிறவேறுபாட்டான் வருவனவும் என்றமையின், (என்றமையின் என்று இங்கே சுட்டியது பேராசிரிய ருரையை) இக்கவியிரண்டும் ஒரோவோரடி மிக்கு வேறுபடவந்த கொச்சகவொரு போகாம்'' எனக் குறித்துள்ளமை அறிந்து ணரற்பாலது. இவ்விடத்து நச்சர் சிவபெரு மானுக்குரிய ஒரு பாடலை எடுத்துக்காட்டு வது அறியத்தக்கது. காமவல்லி (**தத்தை**) யாழ் கொண்டு, வளையாழ்தழீஇ (விளைந்த யாழை) அணையிலேறினுள். **கலைத்தொழில்** படஎழீஇப்பாடினுள். (கலை—இசைக்கலை) (எழீஇ–யாழைவாசித்து) கலைத்தொழிலாவன **1 பண்ணல், 2 பரிவட்டணை, 3 ஆராய்தல் 4 தைவரல் 5 கண்ணிய செலவு, 6 விளை யாட்டு 7 கையூழ் 8** நண்ணிய **குறும் போக்கு** என்ற எட்டும்.

**பண்ணல்,** பாடநினைத்த பண்ணுக்கு **இணை கிளை பகை நட்பான** நரம்புகள், பெயரும்தன்மை மாத்திரையறிந்து வீக்குதல் **பரிவட்டணை,** அவ்வீக்கின நரம்பை அக விரலாலும் புற விரலாலும் கரணஞ்செய்து தடவிப்பார்த்தல்.

**ஆராய்தல்,** ஆரோகண, அவரோகண வகை யால் இசையைத் தெரிவது.

**தைவரல்,** அநுசுருதியேற்றுதல்,

**செலவு,** ஆளத்தியிலே நிரம்பப்பாடுதல் (ஆளத்தி—ஆலாபனம்)

**விளையாட்டு.** பாடநினைத்த வண்ணத்திற் சந்தத்தை விடுதல்.

**கையூழ்,** வண்ணத்திற் செய்த பாடலெல்லாம் இன்பமாகப் பாடுதல்.

**குறும்போக்கு,** குடகச் செலவும், துள்ளற் செலவும் பாடுதல்.

**தத்தை,** இருந்து யாழ் வாசித்துப் பாடிய போது

'கருங்கொடிப் புருவ மேறு
கயனெடுங் கண்ணு மாடா
வருங்கடி மிடறும் விம்மா
தணிமணி யெயிறுந் தோன்ற'

அதனைக் கண்டும் பாடியதையும், யாழ் வாசித்தலையும் கேட்டவர் (அரசர் முதலாயி னோர்)

'இருங்கடற் பவளச் செவ்வாய்
திறந்திவன் பாடி னுளோ!
நரம்பொடு வீணை நாவின்
நவின்றதோ வென்று நைந்தார்

(சாரீர விணக்குரிய நாவாலும் பாடிற்றே!) சாரீரவீணை என்பது சரீரம். அஃதாவது உடம்பு.

இது, பதினொரு வகையிலும் உள்ளாளப் பாட்டுப் பாடுங்கால் இடைபிங்கலையை இயக்கமறுத்து **மூலாதாரமுதல்** பிரமரந்திரமளவும் இயக்க மாக்கி நடுவு தொழில் வரப் பாடுதலென்றறிக.

''உள்ளாள விந்துவுட னுதை மொலியுருட்டு
தள்ளாத தாக்கெடுத்தல் தான்படுத்தல்—
மெள்ளக்
கருதி நலிதல்கம் பித்தல் குடிலம்
ஒருபதின்மே லொன்றென் றுரை''

''கண்ணிமையா கண்டந் துடியா
கொடிறசையா
பண்ணளவுங் வாய்தோன்ரு பற்றெரியா—
வெண்ணிவிவை
கள்ளார் நறுதெரியற் கைதவனே
கந்தருவர்
உள்ளாளப் பாட வுணர்'' (இசைமரபு)

ஒன்றையொன்று பிரியாதனவும் இசையறிவிற் சிறந்ததுமான ஆணும் பெண்ணுமாகிய இரட்டைப்பறவைகளான **கின்னர மிதுனங்கள்,** காந்தருவதத்தை பாடும் போழ்து ஆங்குவந்து சூழ்ந்து கொள்வதும். மற்றையவர் பாடுங்கால் அவை சென்றுவிடுகின்றன என்பதும் மீண்டும் தத்தை பாடுங்கால் அவை வருவதும் தாரினுர்தாம் (ஆண்கள்) கண்டத்தாற் பாட மீண்டும் அவை போயின, என்றகுறிப்புகள் சிறப்பு.

தேவர் **மகரவீணை** என்று பாடியவிடத்தெல்லாம் உரைகாரர் மகரயாழ் என்றே குறிப்பது ஓர்ந்தறியத்தக்கது. நடையறி புலவர், இயல் இசை நாடகங்களின் முறைமை தெரிந்த புலவர்கள். நாடகவரங்கு **எண்கோல்** நீளத்தினையும், ஒருகோல் குறட்டுயரத்தினையும், வாய்தல் இரண்டினையும் உடைத்தாதல். நடையறிபுலவராவார், **இயலாசிரியனும், யாழாசிரியனும் இசையாசிரியனும் குழலோனும், தண்ணுமை முதல்வனும்** முதலாயினோர்.

ஈண்டு இவர் தன்மை 'உரைப்பிற்பெருகும். (கடி—**விளக்கம்**)

''கூத்தின் வகையுங் குறைவற நோக்கின்
ஏத்தும் வகையா னிருவகைப் படுமே''

அவைதாம்,

''சாந்திக் கூத்தே வினோதக் கூத்தென்
ருய்ந்துற வகுத்தன னகத்தியன் ருனே''

''சாந்திக் கூத்தே தலைவ னின்பம்
ஏந்திநின் ருடிய வீரிரு நடமவை''

''சொக்க மெய்யே யவிநய நாடகம்
என்றிப் பாற்படூஉ மென்மனூர் புலவர்''

'சொக்கமாவது, **சுத்தநிருத்தம்.** அது நூற்றெட்டுக் கரணமுடைத்து 'மெய்க்கூத்தாவது' **தேசி,** வடுகு **சிங்களம்,** இவை மெய்த்தொழிற் கூத்தாதலிற் காரணப்பெயர்.

**'சாத்துவிகம், இராசதம், தாமத** மென்னும் **அகக்சுவைபற்றியாடுதலின்,** அகமார்க்கமெனப்படும்.

''அகத்தெழு சுவையா னகமெனப் படுமே'' (சயந்தம்) **அவிநயமாவது** கதை தழுவாதே பாட்டுக்களின் பொருள் தோன்றக் கைகாட்டி அவிநயிப்பது. **நாடகமாவது,** கதைதழுவி வருங் கூத்து (ஈண்டுக் காண்கின்ற அது நாடகம்) என்ற குறிப்புகள் முத்தமிழின் அடிப்படைக் குறிப்புகளாகும்.

''வட்டணையுந் தூசியும் மண்டலமும்
பண்ணமைய
எட்டுட னீரிரண்டாண் டெய்தியபின் —
கட்டளைய
கீதக் குறிப்பு மலங்கார முங்கிளரச்
சோதித் தரங்கேறச் சூழ்'' (பரதசேனு
பதியம்)

ஆடவந்த கூத்திக்கு அவனும் **கட்டிச் சூட்டிச் சேர்த்திச்** செம்பட்டோடே கலையினலத்தைப் பொருத்தியிட்டான். காற்சரி முதலியவற்றைப் பாதத்தே சேர்த்தி அரிவையை அணிந்தான். அவளும்,

'தோற்பொலி முழவும் யாழுந்
துளைபயில் குழலுமேங்கக்
காற்கொசி கொம்பு போலப்
போந்துகைத் தலங்கள் காட்டி,
மேற்பட வெருவி நோக்கித்
தானையை விட்டிட் டொல்கித்
தோற்றினுண் முகஞ் செய்கோலந்
துளக்கினுண் மனத்தை யெல்லாம்'

''மார்ச்சனை முதலியவுமுளதாய் ''இடக் **கண் இளியாய் வலக்கண் குரலாய்,** நடப்பது தோலியற் கருவியாகும்'' என்றது ஓசையுமுடைத்தாய், கஞ்சத்தாற் செய்ததென்பது.

''கருங்காலி செங்காலி வேம்புபலாக் கஞ்சம்
நெருங்கிய சீர்க்குரா மண்ணும் —
பொருந்தவே
ஊன மிலவா புயர்நிலத்திற் றேன்றிலா
மானின் விழிமடவாய் வைப்பு''

**துளைபயில் குழல்** துளையிடத்தே வாச்சியமும் யாழ்ப் பாடலும் கண்டப்பாடலும். பயிலப்பட்ட முதல்வங்கியமும், வழிவங்கியமும்.

''ஓங்கிய மூங்கி லுயர்சந்து வெண்கலமே
பாங்குறுசெங் காலி கருங்காலி—பூங்
குழலாய்
கண்ண னுவந்த கழைக்கிளவக
ளாமென்றார்
பண்ணமைந்த நூல்வல்லோர் பார்த்து''

ஏங்க — இவைமூன்றுங்கூடியிசைப்ப. இவை **ஆமந்திரிகையாம்.**

''குழல்வழி யாழெழீஇத் தண்ணுமைப்
பின்னர்
முழவியம்ப லாமந்திரிகை''

வலக்கால் முன்மிதித்தேறி வலத்தூணைச் சேர்ந்து கைத்தலங்காட்டுதல் — **கமல வர்த்தனை,** கைத்தலம், கை, தாமரை மலர் போன்ற நிலையையுடைமையின் இப்பெயர், தானை — கரந்துவரலெழினி, மேற்கட்டுந் திரை, திரைச்சீலை எழினிதானே மூன்றென மொழிப. அவைதாம்,

**ஒருமுகவெழினியும்**
**பொருமுக வெழினியும்**
**கரந்துவரலெழினியும்** எனுமூவகையே. முகஞ்செய்கோலம், கூத்திற்கு முகமாகிய தோற்றம். இவையாவும் நாடகத் தமிழ்க் குறிப்பு என்பது நன்கு தெளிவு.

'பசும் பொன் யாழ் நரம்பு தேனூர்த் தெனத்
தீண்டி'
நீர்நின்றிளகிற்று இதுவேண்டா,
நீரின் வந்தது இது போக,
வாட்புண்ணுற்றது இது நடக்க,
உருமேறிதுவுண்டது ஒழிக,

வெந்தது. முரிந்தது, சிறுவன் போற் சிறப்பின்று. என்ற கருத்தில் கருவிசெய்யப்படும் மரங்களால் ஏற்படும் குற்றங்களை, (பொல்லாமை,) பொல்லாங்கு பலவற்றையும் சாதியொருமை பற்றி இது என்றும். நரம்பினிசையாற் பிறந்த பொல்லாமை,

**''செம்பகை யார்ப்புக் கூடமதிர்தல்''** எனப்படும்.

''செம்பகை யென்பது பண்ணோ டுளரா,
இன்பமி லோசை யென்மனார் புலவர்''

''ஆர்ப்பெனப் படுவ தளவிறந் திசைக்கும்''
''கூட மென்பது குறியுற விளம்பின்
வாய்வதின் வராது மழுங்கியிசைப் பதுவே''

"அதிர்வெனப் படுவ திமுமென லின்றிச்
சிதரி யுரைக்குந ருச்சரிப் பிசையே"

என்பன, இவை மரக்குற்றத்தாற் பிறக்கும்.

"நீரிலே நிற்ற லமுகுதல் வேத னிலமயக்குப்
பாரிலே நிற்ற லிடிவிழ்ந்த ஞேய்மரப்
பாற்படல்கோ
ணேரிலே செம்பகை யார்ப்பொடு
கூடமதிர்வுநிற்றல்
சேரிநேர் பண்க ணிறமயக் கப்படும்
சிற்றிடையே"

"சொல்லிய கொன்றை கருங்காலி மென்
முருக்கு
நல்ல குமிழுந் தணக்குடனே—
மெல்லியலாய்
உத்தம மான மரங்க ளிவையென்றூர்
வித்தக யாழோர் விதி"

"தளமாய்ச் சமநிலத்துத் தண்காற்று
நான்கும்
உளதா யொருங்கூன மின்றி—யளவு
முதிரா திளகாது மூன்றுங், கூடிய
அதுவாகில் வீணைத்தண் டாம்"

"கோடே பத்த ராணி நரம்பே,
மாடக மெனவரும் வகையின வாகும்"

"பதுமங் கழல்குடந் தாடியொ டுள்ளிபண்
பூண்டுநின்ற
விதியமர் தண்டு குடையே குடுமிமெய்க்
கோட்டுறுப்பு
மதியமர் போதிகை புட்டின் முகஞ்சுவர்
பன்னொருத்தம்
விதியமர் பத்தர்க் குறுப்பென் றுரைத்
தனர் மின்னிடையே"

என்பன யாவும், பண்டைய இசைத்தமிழ் நூல்களினின்றும் மேற்கோளாக எடுத்துக் காட்டிய குறிப்புகளாகும்.

நல்யாழ் சீவகன் கைக்கு வந்ததும்,

இருநில மடந்தை யீன்ற திருவிசும் பென்னுங் கைத்தாய் திருநல மின்னுப் பொன்னூண் முகின்முலை மாரித் தீம்பால் ஒருநலங் கவினி யூட்ட வுண்டுநோய் நான்கு நீங்கி அருநலங் கவினி வாள்வா யரிந்தது வந்த தென்றான் பின்னர், சீவகன் யாழ்நன்றுதலின் நரம்புகளை யாராய்ந்தான். நரம்பினுள் இருந்த உரோம மொன்றினை எடுத்துக் காட்டினுன். (வாங்குபு நபுலன் கையுள் வார்புரி நரம்புகொண்டான்).

"கொடும்புரி மயிர்தும்பு முறுக்கிவை
நான்கும்
நடுங்கா மரபிற் பகையென மொழிப"

பணிவரும் பைம்பொற்பத்தர் பல்வினைப்
பவளவாணி
மணிகடை மருப்பின் வாளார்மாடக வயிரத்
தீந்தேன்
அணிபெற வொழுகி யன்ன வமிழ்துறழ்
நரம்பி னல்யாழ்
கணிபுகழ் காளை கொண்டு கடலகம் வளைக்க
லுற்றான்.

நால்விரலளவான பாலிகை வடிவாய் நரம்பை **வலித்தல் மெலித்தல்** செய்யுங் கருவி மாடகம்.

வயிரமாடகம்,

"மாடக மென்பது வகுக்குங் காலை
கருவிளங் காழ்ப்பினை நால்விரல் கொண்டு
திருவியல் பாலிகை வடிவாக் கடைந்து
சதுர மூன்றாகத் துளையிடற் குரித்தே"

**பணிவரும்** என்பது வாசித்தற் றொழிலிலே வரும் என்பதாம்.

பின்னர் சீவகன் குரல் குரலாகப் பண்ணி ......................ஓர்த்தெழீஇப் பாடுகின்றான் **செம்பாலையைப் பண்ணி** என்றார் நச்சர். செம்பாலை இக்காலம் **ஹரிகாம்போதி** என வழங்குவதறியலாம். மேலும் அவர்,

ஆழியு மாரும்போற் கிறி யதனருகே
ஊறி யொணேவொன் றுடன்கிறி—வாழி
எருதாதி கீழ்த்திசைகொண் டீராறு
மெண்ணிக்
கருதாய் நிலக்கயிற்றைக் கண்டு

என எடுத்துக்காட்டி இப்பாலைத் திரிவிலே பத்தொன்பது நரம்பையுடைய மகரயாழ் குரல் குரலாமாறு காண்க எனக் குறிப்பிடு வதையுமறியலாம்.

செம்பாலையில் சீவகன் பாடிய பாடல்,

கன்னி நாகம் கலங்க மலங்கி
மின்று மிரங்கு மழையென் கோயான்
மின்னு மழையின் மெலியு மரிவை
பொன்னுண் பொருத முலையென்
கோயான்
கருவி வானங் கான்ற புயலின்
அருவி யரற்று மலையென் கோயான்
அருவியரற்று மலைகண் டழுங்கும்
தேனுர் கோதை பரிந்தென் கோயான்
வான மீனி னரும்பி மலர்ந்து
கானம் பூத்த காரென் சோயான்
கானம் பூத்த கார்கண் டழுங்கும்
தேனுர் கோதை பரிந்தென் கோயான்

இவை மூன்றும் ஒரு தொடரென்பது. பண்டைக் காலத்தில் இசைப் பாட்டு என்ருல் மூன்று பாடல் செய்வதே ஒரு தொடர். அஃதாவது, ஒரு பாட்டு எனப் படும். அவ்வழக்கே மிகப் பிற்காலத்தில் மூன்று பாடல்கள் மூன்றங்கமாகி ஒரு தொடர் எனுங் கருத்தில் முதனிலை என முதற்பாட்டும் இடை நிலையென இரண்டாம் பாட்டும் இறுதிநிலை. அஃதாவது அடிநிலை என்ற பொருளில் பாதம் என்றளவில் சரணம் எனத் திரிபு பட்டுப் பல்லவி அனுபல்லவி சரணம் என்ற வழக்காலும் கூறப்பெறுவ தாயிற்று.

'இத் தாழிசைக் கொச்சக ஒரு போகு கள், கந்தருவ மார்க்கத்தான் இடை மடக் கின, என்ருர் நச்சர். இச்சிந்தாமணி 1247 ஆம் பாடல்,

நீரா வினைநீர்த்துத் நீர்த்தந் தெரிந்துய்த்து
வாராக் கதியுரைத்த வாமன்ருர் யாரே
வாராக் கதியுரைத்த வாமன் மலர்
தகைந்த
காராம்பூம் பிண்டிக் கடவுணீ யன்றே
என்பதும்,

1611 ஆம் பாடல்,

களிசேர் கணையுடைய காமனையுங் காய்ந்த
அளிசே ரறவாழி யண்ண லிவ னென்பர்
அளிசே ரறவாழி யண்ண லிவனேல்
விளியாக் குணத்துநிநாம் வித்தமா
றென்னே!

இதற்கு முன்னுள்ள 1609 ஆம் பாடலும், 1610 ஆம் பாடலும்.

2563 ஆம் பாடல்

மறுவற வுணர்ந்தனை மலமறு திகிரியை
பொறிவரம் பாகிய புண்ணிய முதல்வனை
பொறிவரம் பாகிய புண்ணிய முதல்வநின்
நரைவிரி மரைமலர் நகுமடி தொழுதும்

இதற்கு முன்னுள்ள 2561 ஆம் பாடலும் 2562 ஆம் பாடலும் இவை மூன்றும் தாழம் பட்ட ஓசையும் முடுகியலுமாய் ஒரு பொருள்மேல் மூன்றடுக்கிக் கந்தருவ மார்க் கத்தான் இடைமடக்கிய தேவபாணித் தாழிசைக் கொச்சகவொருபோகு எனக் கூறப்பெறுவதறியலாம். சிந்தாமணியில் சில இசைப் பாடல்கள் முறைமை வருவது அறியத்தக்கது.

2741 ஆம் பாடல்

கருமக் கடல்கடந்த கைவலச் செல்வன்
எரிமலர்ச் சேவடியை யேத்துவார் யாரே!
எரிமலர்ச் சேவடியை யேத்துவார்
வான்றோய்
திருமுத் தவிராழிச் செல்வரே யன்றே

இதற்கும் முன்னுள்ள 2739 ஆம் பாடலும், 2740 ஆம் பாடலும் இவ்வமைப்பையே வுடையன என்பது நன்கு விளங்கும். ஆக

இப்பாடல்கள் இசைப்பாடல்கள் என்பதை உணரவேண்டும். கந்தருவ மார்க்கம் என்பது இசைப்பாட்டின் முறை எனப்படும். முன்பு தனியே யாழ் வாசித்த தன்மையையும் அதற்கேற்ப பாடின தன்மையையும், கருவியும் கண்டமும் உடன் நிகழ்த்தினமையையும், கருவியை நீக்கி மிடற்றான் பாடின தன்மையையும் என நச்சர் தெளிவுறக் கூறுவதறியலாம்.

பாட்டு—கண்டப்பாடல். எழால்—யாழ்ப் பாடல்

'பருந்தும் நிழலும்போற் பாட்டு
மெழாலும்
திருந்துதார்ச் சீவகற்கே சேர்ந்தன'

பருந்து பறக்குமிடத்து முறையே உயர்ந்து அந்நிலத்தின்கண் நின்றொய்ந்து பின்னும் அம்முறையே மேன்மேல் உயர்கின்றார் போலப் பாடவேண்டுதலின் அஃது உவமையாயிற்று என்ற குறிப்பு ஓர்ந்துணரத்தக்கது. மதுரகீதங்கிடையிலாள் பாடத் தொடங்கினாள்.

''சிச்சிலி பூனை குடமுழுக்கன்
செம்மைத்தாம்
உச்சிமலை நீர்விழுக்கா டொண்பருந்து—
பச்சைநிற
வேயினிலை விழ்ச்சியுடன் வெங்கா நிழற்
பறவை
ஏயுங்கா லோசை யியல்பு''

வீணை என்றது யாழையும் பாட்டையும், என்ற குறிப்பு.

அரும்பேர் வனமுலையு மாடமைமென்
றோளும்
திருந்தேர் பிறைநுதலுஞ் செம்பசலை மூழ்க
நெருங்கார் மணியருவி நீள்வரைமேன்
மின்னும்
கரும்பார்தீஞ் சொல்லினாய் காணார்கொல்
கேள்வார்

என்ற பாடலும், இதற்கு முன்னுள்ள இரு பாடலும் ஒரு தொடர், இம்மூன்றும் தாழிசைக் கொச்சகம்.

பண்ணொன்று பாடலதுவொன்று
பல்வலைக்கை
மண்ணொன்று மெல்விரலும் வாணரம்பின்
மேனடவா
விண்ணின் றியங்கி மிடறு நடுநடுங்கி
எண்ணின்றி மாத ரிசைதோற்
றிருந்தனளே

விண்ணென்பது, முற்கூறிய உள்ளாளத்திற்குரிய மூலாதாரந் தொடங்கிப் பிரமரந்திரத்தளவு நின்ற வெளியை நடுநடுங்கி என்பது கம்பிதப்பாட்டை

''எடுத்தல்பாட் டுச்சமா மெண்படுத்தன்
மந்தம்
தடுத்து நலிதல் சமமாம்–தொடுத்தியன்ற
தள்ளாத கம்பிதந் தானடுக்க நற்குடிலம்
உள்வாங்கிப் பாட லுணர். (உள்ளாளப்
பாடலுணர்)

எனவே உள்ளாளத்திலேகம்பிதங்கலத்தலிற் குறையாயிற்று.

இவ்விசைவாதின் கருத்தினை,

அங்ஙனம் பாடத் தொடங்கினவள் பாடின பாட்டும் அதற்கேற்ற யாழும் ஒரு திறமாயிருந்தன.

அவன் பாடின பாட்டும் யாழும் வேறொரு திறமாயிருந்தன. பின்பு உடனிகழ்ச்சியில் யாழைப்பண்ணி வாசித்தலைப் பொருந்தும் பல்வளைக்கையின் விரலும் அதற்கேற்கும் பாட்டுக்களும் நரம்புடன் நடவாவாயின. பின்பு கருவியொழிந்த பாட்டும் விண்ணிலே நின்றியங்கி அக்காலத்தே கம்பித்தலைச் சேர்தலாலே வாதிற்கு எடுத்த கீதத்திற் சிறிது குறைந்து மாதர் (காந்தருவத்தை)

இசை தோற்றுளென்க என்று அரிய உரை தந்தார் நச்சர்.

'வெள்ளிலே வேற்கணாளைச் சீவகன் வீணை வென்றான்' 'சீவகன் தத்தையை யாழும் பாட்டும் வென்றான். இவ்விடத்து உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் தனது ஆய்வுரையான முடிபொன்றைத் தருகின்றார். அம்முடிபுரை சாலச் சிறப்புடையதாகி விளங்குகிறது அவை வருமாறு,—

''சிலைத்தொழில்'' ''கருங்கொடி''

(சீவக 657-8)

என்னுங் கவிகளால் தெய்வத்தன்மையான பாட்டுடையன் என்று கூறிவைத்து ஈண்டுக் கற்றுடிப்படுத்தாரைக் கூறுமாறு போல ''விருந்தாக யாழ் பண்ணி'' (சீவக–70) என்றதற்கு யாழ் பண்ணு முறைமையன்றி என்றும் ''பண்ணொன்று பாடல் அதுவொன்று'' என்றதற்கு யாழும் மிடறும் வேறுபட்டதென்றும், ''விண்ணின்றியங்கி'' என்றதற்கு அந்தரவோசையென்றும், கூறுதல் தேவர் கருத்தன்மையுணர்க. காமத்தாற் கலங்கி இவள் தோற்றுளென்னிற் சீவகற்கு இசைவென்றி இன்மையும் உணர்க; என்பதாம்.

இதுகாறும் யான் சீவகசிந்தாமணி எனும் மணநூலில் நாமகளிலம்பகம் கோவிந்தையாரிலம்பகம் காந்தருவத்தையாரிலம்பகம் என்ற மூன்றிலம்பகத்தை மட்டும் எடுத்துக்கொண்டு தேவர் பாடியருளிய மூலத்தில் வரும் இசை நாடகச் சொற்களையும் பதிப்பாசிரியரது குறிப்புச் சொற்களையும் அவ்வவ்வாறே எழுதி இடையில் அதனதன் அருமைபற்றி மட்டும் குறித்து வந்தேன் என்பதைக் கட்டுரை வாசிப்பார்க்குத் தெரிவித்துக்கொள்கின்றேன். இசைப்பாடல் சிலவற்றை மட்டுமே குறித்துள்ளேன்.

இக்காலம் சிந்தாமணியென்ற பெருங்காப்பியத்தைப் பலரும் சிறப்பாக ஊன்றிப் படிப்பதில்லை எனத்தெரிய வருகிறது. அஃதும் அந்நூலில் உள்ள பண்டைய இசைத்தமிழ் மரபுச்சொற்களை எவ்வாறேயறிதல் கூடும்? திருத்தக்கதேவர் வடநாட்டு மரபுப்படியோ! தமிழகத்து மரபுப்படியோ! என்னவோ! வீணையென்றே பலவிடத்தும் கூறி வருவதும், ஆனால் அதே இடங்களில் உரையாசிரியரான நச்சினார்க்கினியர், யாழ் என்றே உரை கூறுவதும் நன்கு ஓர்ந்துணருங்கால் நச்சர் உரை தூயதமிழ் மரபான உரை என்பது நன்கு விளங்கும்.

இந்நூலின் இசைவாது முறைமை, கருவியைத் தனித்து வாசித்தலும் கண்டத்தாற் தனித்துப் பாடுதலும் பின்னர்க் கருவியை வாசித்துக் கொண்டும் கண்டத்தாற் பாடுதலும் என்றபண்டைத் **தமிழகத்து இசைவாது முறைமை** என்பதே என்பதும் அறியத்தக்கது.

சீவகசிந்தாமணி முழுவதும் பொதிந்துள்ள சீரிய இசை நாடகத் தமிழ்ச் சொற்களின் விளக்க முறைமையை ஒரு பெருநூலாக எழுதி அடியேன் வெளியிடக்கருதி இருப்பதையொட்டியே இக்கட்டுரை நம் கரந்தைத் தமிழ்ச் சங்க மணிவிழா மலருக்கு எம் அருட்டிரு விபுலாநந்த அடிகள் திருவடியை உளத்திற்கொண்டு அவர் நினைவாகக் கொடுக்கப் பெற்றதாகும். படித்தறியும் புலவர்கள் ஆசி நல்குவார்களாக.

''மந்தா கினியணி வேணிப் பிரான்வெங்கை மன்னவநீ
கொந்தார் குழன்மணி மேகலை நூனுட்பங் கொள்வதெங்ஙன்?
சிந்தா மணியுந் திருக்கோ வையுமெழுதிக் கொளினும்
நந்தா வுரையை யெழுதலெவ் வாறு? நவின்றருளே.



# அணு ஆற்றல்



திரு. வ. சுப்பிரமணியன், பி. எஸ்சி., எம். இ. (கெம்.), ஏ. எம். ஐ. ஐ. கெம். இ.
கோவைத் தொழில் நுட்பக் கல்லூரி, கோயம்புத்தூர்.

"அணுவிற் கணுவாய்" நிறைந்துள்ள பெருங்கருணைப் பேரிறைவன் படைத்த இன்றைய யுகம்—அணுயுகம்! அணுவைத் துருவித் துருவி ஆராயுங்காலம். அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டுங்காலம். அணுவைச் சதகூறிட்டுக் கோணின் ஆற்றலைக் காணுங் காலம்.

மனிதன் தனக்குத் தேவையான ஒளியையும், வெப்பத்தையும் பெறவும், இயந்திரங்களையும், தானோடிகளையும் (*automobiles*) இயக்கவும், உணவு உற்பத்தியைப் பெருக்கவும் பல்வேறு வகைகளில் ஆற்றலைப் (*energy*) பயன்படுத்துகின்றான். இந்த ஆற்றலைப்பெற அவன் பல்வேறு மூலங்களை நாடுகின்றான். இவற்றில் பெரும்பாலும் இயைபு மூலங்களிலிருந்தே (*Chemical Sources*) பெறப்படுகின்றன. நிலக்கரி அல்லது பெட்ரோலியத்தை எரித்து வெப்ப ஆற்றல் பெற்று அதனை மின் ஆற்றலாக மாற்றியும், அல்லது மலையிலிருந்து விழும் நீரிலுள்ள ஆற்றலை மின்ஆற்றலாக மாற்றியும், இவ்வாறு பெற்ற மின் ஆற்றலை, மனிதனின் கட்டளையை ஏற்றுப் பல்வேறு பணிகளைச் செய்யப் பயன்படுத்தியும் வருகின்றான். இதைப் போன்றே நீரகத்தையும், (*Hydrogen*) தீயகத்தையும் (*oxygen*) எரித்து ஏவுகணையை இயக்க ஆற்றல் பெறுகிறோம். ஆனால், பல நூற்றாண்டுகளுக்கு வேண்டிய ஆற்றலைப்பெற இவ்வகை எரி பொருட்கள் போதிய அளவு கிடைப்பதரிதென்பது புள்ளி விவரம்தரும் உண்மையாகும். இந்தச் சிக்கலை அவிழ்ப்பதற்கு, மேலே என்ன செய்வதென எழுந்த பெரிய கேள்விக்குறிக்குக் கிடைத்த விடையே **அணு ஆற்றல்** (*atomic energy*) என்பதாகும். வழக்கத்திலுள்ள எரிபொருட்களைவிட உயர் அணு எடைகொண்ட உலோக அணுக்கருவைப் பிளந்து அளவிடற்கரிய ஆற்றலைப் பெறமுடிகிறது. காட்டாக 20,00,000 பவுண்டுகள் நிலக்கரியை எரிப்பதால் கிடைக்கும் வெப்ப ஆற்றலை ஒரே ஒரு பவுண்டு உரேனிய ($U^{235}$) உட்கருவைப் பிளந்து பெறலாம். அணுக்கருவிலிருந்து ஆற்றலைப் பெற இரு முறைகளைக் கையாளலாம்.

1. அணுக்கருப் பிளவுவினை *(Nuclea Firss-ion Reaction)*

2. அணுக்கருச் சேர்க்கை வினை *(Nuclear Fusion Reaction)*

இவ்வினைகளைப்பற்றி அறியுமுன் அணுவின் அமைப்புப்பற்றி அறிதலவசியமாகும்.

இன்றைய அறிவியலின் முடிவுப்படி அணு என்பது ஒரு தனிமத்தின் *(element)* இயைபு மாறு மிகச்சிறிய அலகாகும். அணு பேராற்றல் வாய்ந்த நுண்ணணுப் பெருக்கியால் காண முயன்றாலும் புலனாகாத அளவுக்குச் சிறிய அளவினைக்கொண்டது. அரைக் கோடி அணுக்களை அணிவகுத்து நிற்க வைத்தால் நாம் எழுதும் பொழுது வைக்கும் முற்றுப் புள்ளியினுள் அடங்கிவிடும். எனினும், அறிவியல் அறிஞர்கள் மிகச்சிறிய அணுவின் அளவினையும் கணக்கிட்டுள்ளனர். ஓர் அங்குலத்தை இருபத்தைந்து கோடிகளாகப் பங்கிட்டால் கிடைக்கும் அளவே அணுவின் குறுக்களவாகும். ஓர் அங்குல நீளம், ஓர் அங்குல அகலம், ஓர் அங்குல உயரம் உள்ள இடத்தில் அடங்கிக் கிடக்கும் அணுத்திரளைகள் ஆறு லட்சம் கோடி கோடியாகும். இதனை, எண்ணால் எழுதினால் 6,0000,000, 000,000,000,000 என்றாகிறது. நாற்பது கோடி மக்கள் அந்த அணுக்களை வினாடிக்கு ஒரு அணுவீதம் எண்ணத் தலைப்பட்டால் அனைத்தையும் எண்ணி முடிக்க 5000 ஆண்டுக் காலமாகும். இதிலிருந்து அணுவின் நுட்பம் புலனாகிறது.

அணுவின் அமைப்பும், அண்டத்தின் அமைப்பும் ஒரே மாதிரியாக இருக்கின்றன என்பது ஆய்வுகளால் நிரூபித்துக் காட்டப்பட்டுள்ளது "அண்டத்தில் போலத்தான் பிண்டத்திலே" என்ற பழமொழியொன்று நமது நாட்டில் வழங்கி வருகின்றது. இப் பழமொழியின் உண்மை அணு ஆய்வின் முடிவாக இருப்பதைக்கண்டு மகிழலாம். கதிரவன் குடும்பத்தில், கதிரவன் நடுவில் அமைந்திருக்க, அவனைச்சுற்றிப் பல கோள்கள் சுற்றிச் சுற்றி இயங்கி வருதல்போலவே அணுவின் அமைப்பும் உள்ளது. அணு நான்கு வகைத் துணுக்குகளால் ஆனது. அவை எதிர்மின்னி, *(electron)* நேர்மின்னி, *(Positron)*, நேர் இயல்மின்னி, *(Proton)*, மற்றும் நடுவி *(Neutron)* என்பனவாகும். ஒவ்வோர் அணுவிலும் ஓர் உட்கரு *(Nucleus)* உள்ளது. ஓர் அணுவின் எடை முழுவதும் அதன் உட்கருவில் செறிந்திருக்கிறது. அதில் நேர்இயல் மின்னிகளும், நடுவிகளும் கலந்திருக்கின்றன. இக்கருவினைச்சுற்றி வெவ்வேறு அயனப் பாதைகளில் உட்கருவிலுள்ள நேர்இயல் மின்னிகளின் எண்ணிக்கைக்குச் சமமான எண்ணிக்கையுள்ள எதிர் மின்னிகள் சுழன்று வருகின்றன. இவற்றின் எண்ணிக்கையும், அமைப்பும் ஒவ்வொரு தனிமத்துக்குத்தக மாறுபடுகின்றன. காட்டாகத் தனிமங்களின் வரிசையில் முதலாவதான நீரகஅணுவையும் அணுவாற்றல் காரணமாக நம் கவனத்தைப் பெரிதும் ஈர்த்துவரும் உயர்அணு எடைகொண்ட யுரேனியம் அணுவையும் ஒப்பிட்டால் நீரக அணுக் கருவில் (படம் 1) ஒரே ஒரு நேரியல் மின்னி உள்ளது. அதனைச்சுற்றி ஓர் எதிர் மின்னி சுழன்று வருகின்றது. நீரக அணுவின் எடை அணுக்கருவாய் உள்ள நேர் இயல் மின்னியின் எண்ணிக்கைக்கும் சமமான ஒன்று ஆகும்.

நீரக அணு (படம் 1)



யுரேனிய அணு (படம் 2)

**ஏழு வெவ்வேறு அயனப்பாதை களில் சுழலும் 92 எதிர்மின்னிகள் —>**



**அணுக்கரு:** 92 நேர் இயல் மின்னிகளும் 143 நடுவிகளும் கொண்டது —>

படம் 2இல் யுரேனிய அணுவின் அமைப்புக் காட்டப்பட்டுள்ளது. இவ்வணுவில் 92 நேர் இயல் மின்னிகளும் 143 நடுவிகளும் கொண்ட உட்கரு உள்ளது. அதைச் சுற்றி ஏழு வெவ்வேறு அயனப் பாதைகளில் உட்கருவில் உள்ள நேர் இயல் மின்னியின் எண்ணிக்கைக்கும் சமமான எண்ணிக்கையுள்ள (92) எதிர் மின்னிகள் சுழன்று வருகின்றன. நேர் இயல் மின்னிகளின் எடை 92, நடுவிகளின் எடை 143 ஆகிய இவற்றின் கூட்டுத் தொகையான 235 யுரேனிய அணுவின் எடையாகும்.

நியூட்டனின் விதிகள் பொருள்களின் இயக்கத்தின் பெரும் பகுதியைச் சிறந்த முறையில் விளக்க முடிந்த போதிலும், அணு உலகில் பெரும் பகுதியை விளக்க முடியவில்லை. இக்குறையைப் போக்கவந்ததுதான் ஆல்பர்ட் ஐன்ஸ்டைனின் சார்புக்கொள்கை *(Theory of Relativity)*. இப்புதிய விதி அணுக்கருவின் இயக்கத்தைச் சிறப்பாக விளக்கும் தன்மை பெற்றுள்ளது. இவ்விதியின்படி பொருளை ஆற்றலாகவும், ஆற்றலைப் பொருளாகவும் மாற்றலாம். அணு இயலுக்கு இதுவே அடிப்படையாகும். இனி, அணுக்கருவிலிருந்து ஆற்றலைப் பெறும் இரு முறைகளைக் காணலாம்.

## அணுக்கருப் பிளவுவினை :

**அணுக்கருப் பிளவுவினை** (படம் 3அ)




**அணுக்கருப்பிளவு தொடர்வினை** (படம் 3ஆ)




யுரேனிய அணுக் கருப்பிளவு

ஓர் அணுக்கரு இலக்கின்மீது ஒரு நடுவி மோதும்போது நிலையற்ற கூட்டுக்கரு *(unstable Compound Nucleus)* உண்டாகிறது. இக்கூட்டுக்கரு கதிர்வீச்சுத் தன்மை கொண்டதாகும். இது ஆல்பா ($\chi$) கதிரையும், பீட்டா ($\beta$) கதிரையும் வெளியிட்டு மிகுதியான வெப்ப ஆற்றலை யுள்ளடக்கிக் கிளறப்பட்ட நிலையில் *(Excited State)* இருக்கும். இந்த வெப்ப ஆற்றல் காமா ($\gamma$) கதிர்கள் மூலம் வெளியிடப்படுகிறது. இக்கதிர்களை உயர் அணுவெண் கொண்ட

உலோகத்தால் தடுத்தால் அது அவைகளை உட்கொண்டு சூடேற்றப்படுகிறது. 'காமா' கதிர்களோடு பல நடுவிகளும் வெளியிடப்படு கின்றன.

உரேனியம், தோரியம் புளுடோனியம் ஆகிய அதிக அணு எடை (*Atomic Weight*) கொண்ட உலோகங்களையே அணுக்கருப் பிளவு வினைக்காகப் பயன்படுத்துகின்றனர். இவற்றின் ஒப்பணுக்களின் (*Isotopes*) அணுக்கரு இலக்கு பரந்த குறுக்கு வெட்டுப் பரப்பு கொண்டதாதலின் தனி நடுவிகள் வெகு எளிதில் இவற்றில் வந்து மோத முடி கிறது.

ஓர் அணுக்கரு இலக்கின்மீது ஒரு நடுவி மோதும்போது வெப்ப ஆற்றல் வெளிப் படுவதோடு, பல நடுவிகளும் வெளியிடப்படு கின்றன என அறிந்தோம். ஓர் அணுக்கரு இலக்குக்குப் பதிலாகக் கோடிக் கணக்கான அணுக்களடங்கிய ஓர் உரேனியத் துண்டை ஓர் உலோகப் பேழைக்குள் வைத்தால் ஒவ்வொரு நடுவியும், ஒவ்வோர் அணுக் கருவின்மீதும் மோதி ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்வினைகள் (*chain Reaction*) நடை பெறுகின்றன. இவ்விதம் ஏற்படும் பல தொடர்வினைகளால் அப்பேழைக்குள் அதிக அழுத்தம் ஏற்பட்டுப் பல கோடிக்கணக் கான உரேனியக் கருக்கள் வெகுதூரம் வரை சிதறியடிக்கப்படுகின்றன. மிக உயர் அழுத் தமும், வெப்ப நிலையும்கொண்ட அவைகள் கணப்பொழுதில் உயிரினங்களையும், கட்டி டங்களையும் அழிக்கும் ஆற்றல் பெற்றவை. இதுவே உரேனிய அணுகுண்டின் (*Uranium Atom bombs*) அடிப்படைத் தத்துவமாக அமைகிறது. இவ்வித அழுத்த ஆற்றலைக் கட்டுப்படுத்திக் குறைத்து வெப்ப ஆற்றலை மட்டும் வெகு நேரம் வரை பெற வழி வகுக்கும்போது அணு ஆற்றல் ஆக்கப் பணி களில் ஈடுபடுத்தப் பயன்படுகிறது. இவ் வெப்ப ஆற்றல்மூலம் தண்ணீரை நீராவி யாக்கிச் சுழலியைச் (*Turbine*) சுற்றி இத் துடன் இணைக்கப்பெறும் மின் ஆக்கி (*Generator*) இயக்கப்பெற்று மின் ஆற்றல் பெறப்படுகிறது. இதுவே அணு ஆற்றல் நிலையத்தின் (*Atomic Power Plant*) அடிப் படைக் கோட்பாடாகும். உண்மையில் அணுக்கருவைப் பிளந்து நாம் வெப்ப ஆற்ற லைப் பெறுவதால் இதனை அணு ஆற்றல் (*Atomic Energy*) என்றழைப்பதைவிட அணுக்கரு ஆற்றல் (*Nuclear Energy*) என்றழைப்பதே சாலப்பொருந்தும்.

## அணுக்கருச் சேர்க்கைவினை :

அணுக்கருக்கள் பலவற்றை ஒன்றிணைக் கும் பொழுது அவைகள் ஒன்று சேர்ந்து ஒரு பெரிய அணுக்கருவாக மாறு கின்றன. அவ்வாறு ஒன்றியிணையும் பொழுது அவைகள் மிகப் பயங்கரமாக வெடித்து வெப்ப ஆற்றலை வெளிப்படுத்து கின்றன. இதுவே நீரகக் குண்டின் (*Hydrogen bombs*) அடிப்படைக்கோட்பா டாகும். அணுக்கருச்சேர்க்கைக்குக் கனநீரக அணு (*Heavy Hydrogen*) அல்லது தாய்ட் ரியம் (*Deutrium*) பயன்படுத்தப்படுகிறது. நீரக அணுவில் ஓர் எதிர்மின்னியும், ஒரு நேர் இயல் மின்னியும், உள்ளன. ஆனால் கன நீரக அணுக்கருவில் ஓர் எதிர் மின்னி யோடு ஒரு நடுவியும் இடம் பெறுகிறது. ஆதலின், கனநீரக அணுவின் எடை நீரக அணுவின் எடையைவிட இரு மடங்கு இருப் பதால் இது கனநீரக அணு என்றழைக்கப்படு கிறது. இயற்கையில் 6700 நீரக அணுக் களில் ஒரு கனநீரக அணு காணப்படுவ தாகக் கணிக்கப் பெற்றுள்ளது. நீரகத்திலி ருந்து இவை மிக எளிதில் பிரித்தெடுக்கப் படுகின்றன. 200 காலன் பெட்ரோலியத்தி லிருந்து பெறும் ஆற்றலுக்குச் சமமான வெப்ப ஆற்றலைத் தரும் கன நீரகங்களைப் பிரித்தெடுக்க ஆகும் செலவு நான்கு காசு களே ஆகும்.

இரண்டு கனநீரக அணுக்களை எளிதில் இணைத்துவிட முடியாது. அவை ஒவ்வொன் றும் நேர்மின்னேற்றம் (*Positive Charge*) தாங்கியுள்ளவை. ஆதலின், மிகுதியான வலி வுடன் ஒன்றினை ஒன்று எதிர்த்து விலகிச்

செல்லும் அதிக அழுத்தமும், வெப்பமும் கொண்ட ஊடகத்தில் *(Medium)* தான் இவ்விரு அணுக்களையும் ஒன்றிணைக்க முடியும். ஆனால், அத்தகு அழுத்தமும் வெப்ப நிலையும் தரும் சாதனம் உலகில் இதுவரை கிடையாது. எனினும், மாற்றுமுறை யொன்றினைக் கையாண்டு இவ்வணுச்சேர்க்கை வினையை வெற்றிகரமாக நிலைநாட்டியுள்ளனர். இப்பணிக்குப் பயன்படும் சாதனம் அணுக்கருச் சேர்க்கைக் குடுவை *(Fusion bottle)* எனப்படும். இக்குடுவையுள் மிகுந்த ஆற்றல் வாய்ந்த மின் காந்த அலைகளால் சூழப்பட்டிருக்கும் மின்காந்த விசைக்கோடுகள் *(Electro Magnetic Lines of Force)* கனநீரக அணுக்களைத் தங்கள் விசைப்பாலால் ஒன்றுசேர்த்து நடுவில் குவிக்கின்றன. இப்படிக் குவியும்போது அணுக்கருச் சேர்க்கைவினை நிகழ்ந்து வெப்ப ஆற்றல் வெளியிடப்படுகிறது. இம்முறையில் மிகவும் குறைந்த அளவே சேர்க்கைவினை நடைபெறுவதால் முழு அளவில் ஆற்றல்பெற முடிவதில்லை. எனவே, இம்முறையை நன்கு மாற்றி விரிவுபடுத்திப் பெருமளவில் சேர்க்கை வினையை ஏற்படுத்தி அதை அணு ஆற்றல் நிலையங்களில் பயன்படுத்தும் பணியில் அறிவியலாரும் பொறியியலாரும் ஈடுபட்டுள்ளனர்.

அணுக்கருப் பிளவுவினையையும் அணுக்கருச் சேர்க்கைவினையையும் ஒப்பிடுங்கால் பிந்திய வினையில்தான் கூடுதலான ஆற்றல் வெளியிடப்படுகிறது. தவிர அதற்காகும் செலவும் மிகக் குறைவாகும்.

அணுவினுள் அடங்கியுள்ள ஆற்றலைப் பல நூற்றுண்டுகளுக்கு முன்னரே அறிந்துதான் அணுவைத் துளைத்து ஏழ்கடலைப் புகுத்திக் குறுகத் தரித்த குறள் என்று ஔவையார் கூறினர்கள் போலும். திருக்குறளின் நுண்ணிய அறவுரைகள் சேர்க்கையால் மிகுந்த பொருண்மிகு ஆற்றல் பெற்றுப் பல மொழிகளிலும் டாய் உலக முழுதும் நிலவுகிறதை ஒப்பிடுதல் அக்காலப் புலவர்களின் அறிவியல் நுண்ணறிவைக் காட்டுகிறதெனக் கூறுவது மிகையாகாது.

அணுக்குண்டின்மூலம் நமக்கு அறிமுகமான அணு ஆற்றல் ஆக்கப் பணிகளில், தொழில் துறையிலும், உழவுத் தொழிலிலும், மருத்துவத் துறையிலும் பயன்பட்டு வருதல் காண்கின்றோம். அவற்றையெல்லாம் தனித்தனியே விரிக்கின், பெருகும். இனி, இத்துறையில் நம்நாடு அடைந்துள்ள முன்னேற்றத்தைக் காண்போம்.

## அணு ஆற்றல் துறையில் இந்தியாவின் வளர்ச்சி :

1945ஆம் ஆண்டு விஞ்ஞானத் துறையில் அடிப்படை ஆய்வுக்காக டாட்டா நிறுவனம் பம்பாயில் தோன்றிய நாளன்றே இந்தியாவில் அணு ஆற்றல் ஆராய்ச்சி தொடங்கிவிட்டது என்று கூறலாம். இந்தக் கால் நூற்றுண்டுக் காலத்தில் இத்துறையில் பெருமளவில் வளர்ச்சி ஏற்பட்டுள்ளது. பம்பாயிலும், தும்பாவிலும் நடைபெற்றுவரும் விண்வெளி ஆய்வுகளும் அணு ஆற்றல் துறையுடன் சேர்க்கப்பட்டுள்ளன. தற்பொழுது அணு ஆற்றல் துறை *(Department of Atomic energy)* பல நிறுவனங்களைக் கவனித்து வருகிறது. பாபா அணு ஆராய்ச்சி நிலையம், தேசிய பௌதிக ஆய்வுக்கூடம் (அகமதாபாத்) கல்கத்தாவிலுள்ள சாகா ஆய்வுக்கூடம், டாட்டா நினைவு ஆய்வு நிலையம் (பம்பாய்) தும்பாவிலுள்ள ஏவுகணை நிலையம் ஆகியவை இத்துறையில் கவனம் செலுத்தும் நிலையங்களாகும். 1945–ஆம் ஆண்டிலிருந்து அணு ஆராய்ச்சிபற்றிய சோதனைகளிலும், கருவிகளை உண்டாக்கும் முறைகளிலும் நம்நாடு பெருமளவில் முன்னேறி உள்ளது என்பதோடு மட்டுமல்ல– நம் இந்திய முத்திரையோடு நாமே, நம் வலுவான கைகளால் செய்தோமென்ற பெருமையுடன் உலகில் வருவதைக் காண்கிறோம்.

வளரும் நாடுகளில் அணு ஆற்றலைப் பயன்படுத்தத் தொடங்கிய முதல்நாடு நம் நாடே. 1969-ஆம் ஆண்டு செயல்படத் தொடங்கிய தாராபூர் அணு மின்நிலையம் அணு ஆற்றலிலிருந்து மின்சாரத்தை உண்டு

பண்ணும் முதல் இந்திய நிலையம் என்பது மட்டுமன்றி ஆசியாவிலேயே மிகப்பெரிய அணுமின் நிலையமாகும். மகாராட்டிரம், குசராத் போன்ற மாநிலங்களுக்கு இந்நிலையம் 400 மெகாவாட் மின் ஆற்றலை அளிக்கிறது. இராசத்தானில் இராணாப் பிரதாப் சாகரிலும், தமிழகத்தில் கல்பாக்கத்திலுமாக இரு அணுமின் நிலையங்கள் வேகமாக வளர்ந்து வருகின்றன. இவையும் செயல்படத் தொடங்கும்பொழுது அணு உலைகள்மூலம் கிட்டும் சக்தியின் அளவு 1200 மெகாவாட் ஆக உயரும். தமிழகத்தில் கல்பாக்கத்தில் வளர்ந்து வரும் அணுமின் நிலையத்தின் தனிச்சிறப்பு என்னவெனில் இது வெளி நாட்டார் உதவியின்றி நம் அறிவியல், பொறியியல் அறிஞர்களின் திறமையின் சின்னமாக விளங்கப் போவதேயாகும். இந்த அணு மின்நிலையம் பயன்படுத்தும் பொருட்களில் 80 விழுக்காடு இந்தியாவில் உண்டாக்கப்பட்டவையே.

பாபா அணு ஆய்வு நிலையத்தில், அணு ஆய்வு நடத்துவது மட்டுமல்லாமல், பல மின்னி நுண் கருவிகளும் *(Electronic Instruments)* செய்யப்படுகின்றன. அணு ஆய்வுக்காக இக்கருவிகள் முதலில் செய்யப்பட்டதாக இருந்தும், தற்பொழுது வேறுபல துறைகளில் பயன்படுத்தப்படுகின்றன. பாபா அணுமின் நிலையம் ஐதராபாத்திலுள்ள மின்னியல் கழகத்துடன் தொடர்புகொண்டு வேறு பல புதிய கருவிகளையும் தயாரித்து வருகிறது.

அணு ஆற்றலுக்கு வேண்டிய உரேனியம், தோரியம், ஆகிய எரிபொருட்களின் தாதுப்பொருட்கள் நம் நாட்டில் நிறையக் கிடைக்கின்றன. பீகார் மாநிலத்தில் சாசகுடாவிலும், கேரளாவில் ஆல்வாய், சவாரா, மணவாளக்குறிச்சி ஆகிய இடங்களிலும், பம்பாயில் டிரோம்பேயிலும், எரி பொருள் சுத்தப்படுத்தும் ஆலைகள் அமைக்கப்பட்டுள்ளன.

அணு உலை இயங்கும்பொழுது, அதிக ஆற்றலுடன் வெளிவரும் நடுவிகளை மித ஆற்றல் உள்ளவையாகமாற்றக் கனநீர் *(Heavy Water)* தேவைப்பட இதனைச் செர்மனி முதலிய வெளிநாடுகளிலிருந்து விலைக்கு வாங்கி வந்தோம். ஆனால், தற்பொழுது இராசத்தான், பரோடாவிலும் கனநீர் உற்பத்தி செய்யும் ஆலைகள் அமைக்கப்பட்டுள்ளன. கல்பாக்கம் அணுமின் நிலைய அணு உலை எரிபொருளான புளூட்டோனியம் நம் நாட்டிலேயே தயாரிக்கப்பெறும். உத்தரபிரதேசத்தில், வேளாண்மைத் தொழிலை மின்மயமாக்க ஓர் அணுமின் நிலையம் அமைக்கப்படும். இது பல பண்ணைகளுக்கு மின்சாரம் நல்கும். அணுஉலையில் உண்டாகும் கதிர் வீச்சுப் பொருட்களைக்கொண்டு செயற்கை உரங்கள் தயாரிக்கலாம். சௌராட்டிரத்தில் கடல் நீரைச் சுத்தப்படுத்திக் குடிநீராக மாற்ற ஒரு சிறு அணுமின் நிலையம் அமைக்கப்படும்.

இவை தவிர, பாபா அணுமின் நிலையம், உயிரியல் துறையில் *(Biology)* பல ஆய்வுகள் நடத்தி வெற்றி பெற்றுள்ளது. புழுப் பூச்சிகளால் தாக்கப்படாத நிலக்கடலை வகை ஒன்றை ஆய்வாளர்கள் கண்டுபிடித்துள்ளார்கள். நிலக்கடலை வகையைச் சில குறிப்பிட்ட அளவு கதிர்வீச்சிற்கு உள்ளாக்கி நோய்களால் தாக்கப்படாதவாறு செய்கின்றனர். நெற்பயிருக்கு ஒரு வகைக் கதிர்வீச்சுப் பாய்ச்சிக் குறுகிய காலத்திலேயே பூக்க வைக்கின்றனர். உருளைக்கிழங்கு, வெங்காயம், மாம்பழம் ஆகியவற்றைக் கதிர்வீச்சால் அதிகநாள் கெடாமல் பாதுகாக்கலாம்.

கதிர்வீச்சு மருத்துவ நிலையம், கதிரியக்க ஒப்பணுக்கள் *(Radio Isotope)* கொண்டு நோய்களைக் கண்டறியும் முறையை வளர்த்து வருகிறது. கதிர் இயக்கப் பொருட்களைப் பயன்படுத்த மருத்துவர்களுக்கும், மருத்துவர்களின் உதவியாளர்களுக்கும் பாபா நிலையம் பயிற்சி அளிக்கின்றது.

உலோக இயல் துறை, அணுஉலைகளை அமைக்கத் தேவையான பல உலோகங்களையும், உலோகக் கலவைகளையும் ஆராய்ந்து

வருகிறது. அணுஉலையில், அணுப் பிளப்பால் உண்டாகும். அதிக வெப்பத்தைச் சாதாரண உலோகங்களால் தாங்கமுடியாது. இரும்பு, தாமிரம் ஆகிய உலோகங்கள் உருகி விடும்.

நம்நாடு பெருமளவில் அணுசக்தியைப் பயன்படுத்தவேண்டிய அவசிய நிலையில் உள்ளது. வழக்கமான எரிபொருட்கள் குறைந்து கொண்டே வருவதாலும், நிலக்கரி பெரும்பாலும் மத்திய இந்தியப் பகுதியிலேயே இருப்பதால் நம் நாட்டின் தெற்கு, மேற்கு, வடக்குப் பகுதிகட்கு ஏற்றிச் செல்லப் பெருந்தொகை செலவிட வேண்டியுள்ளது, இப்பகுதிகளை அடையக் குறைந்தது 500 கல் தொலைவாவது கடக்க வேண்டியுள்ளது. எனவே, 500 முதல் 1000 மெகாவாட் சக்தியைத் தரக்கூடிய அணுஉலைகள் ஆங்காங்கே அமைக்கப்பட்டு இவை அனைத்தும் ஒன்றிணைக்கப்படும்பொழுது நாம் மிகமிகக் குறைந்த செலவில் மின்சக்தியைப் பெறமுடியும். அணு ஆற்றல் துறையில் திட்டப்பிரிவின் கணிப்பின்படி 1991-92ஆம் ஆண்டு நம்நாடு 10.500 மெகாவாட் மின் ஆற்றலை அணுஉலைகள் மூலம் பெறக்கூடிய அளவுக்கு வளர்ந்திருக்கும். நம்நாடு மிகக் குறுகியகாலத்தில் இத்துறையில் ஆற்றலுடன் பெரிதும் வளர்ந்திருக்கிறது என்று கூறலாம்.



# பேராண்மை மூன்று

புலவர் திரு. வி. அ. அரங்கசாமி அவர்கள்,
பேராசிரியர், அரசர் கல்லூரி, திருவையாறு.

தமிழகச் சான்றோர் வாழ்க்கையை அகவாழ்வென்றும் புறவாழ்வென்றும் இரு வகையாக இயம்புவர். அகவாழ்வுக்குக் காதலும் புறவாழ்வுக்கு வீரமும் புலவர் போற்ற அமைந்தமையால் மக்கள் காதலையும் வீரத்தையும் முதன்மையாகக்கொண்டு வாழ்ந்தனர் என அறியப்படும். காதலையாளுந்தன்மையிலும் வீரத்தையாளுந்தன்மையிலும் வீறுபெறத்தோன்றும் நெறியியல் நேர்படின் அவ்விரண்டும் ஆளும் நிலையால் பேராண்மையென ஏராண்மையாக எடுத்தியம்பப்பெறும். வீரமாகிய பெருமிதத்திற்கு முதலாகவுள்ள தறுகண்மையும், காதலின் வழியுளதாம் மண வாழ்வும் பேராண்மையெனப் பெயர்பெறும் பெற்றியில் உலகக் கவிஞர் வள்ளுவர் கொள்ளுவர். இதனை எள்ளுவார் யார்? தள்ளுவார் எவர்? உள்ளுவார் யாரும் கொள்ளுவரன்றே.

ஆண்மையின் வேறுபட்டவடிவே பேராண்மை என்பது. ஆண்மை என்பதன் வேர்ச்சொல் ஆள் எனக்கூறுவர். அதனின்றும் தோன்றியனவே ஆடூஉ, ஆண்மை என்பன. ஆளுதல் வினையாம் ஆள்வினையின் பயனாகிய வெற்றி என்ற பொருளிலும் ஆடூஉ என்ற சொல் ஆட்சியில் மாட்சியுறும். "ஆடாடென்பர் ஒரு சாராரே, ஆடன்றென்பர் ஒரு சாராரே" என்ற புறப்பாட்டடிகளால் ஆள்வினையின் விளைவாகிய வெற்றியை அச்சொற் குறித்து வருதலுமறியப்படும். இனி ஆண்மை என்பது ஆள்வினை என்ற பொருளிலும் ஆளப்படும்: ஓல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியரும்

" பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டொடு
உருவு நிறுத்த காம வாயில்
நிறையே யருளே உணர்வொடு திருவென
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே "

எனத் தலைமக்களுக்குரிய ஒப்பினது வகையுரைக்குங்கால் ஆண்மை, ஆண் பெண் இருபாலார்க்கும் பொருந்திய தொன்றெனப் புகன்றுள்ளனர். மேலும் "ஆண்மை தலைமகற்காம்; அஃது ஆள்வினை எனப்படும்; இது தலைமகட் கொப்பதன்றோவெனின் குடியாண்மை என் புழி 146, 244: ஆண்மை என்பது இருபாற்கு மொக்குமாதலின் அமையும் என்பது" என்னும் பேராசிரியர் உரையானும் தெளிவுறும்.

மக்களில் ஆணும் பெண்ணும் வாழ்க்கை நடாத்துவகை செயுங்காலை. ஆடவர்மீது பெண்டிர்வைத்த நாட்டமும், பெண்டிர் மீது ஆடவர் வைத்த நாட்டமும் நாட்டு மக்களுக்கு நலந்தரு முறையில் ஓர் எடுத்துக் காட்டாக இலங்குகின்றன. ஒருகால் கூடுதல்கொண்ட போழ்து பின்னொருகால் பிரிவு நிலை வருமேயெனப் பேதுறவினைக் கொள்ளுவர் பெண்டிர். அப்பேதுறவினைப் போக்க ஆடவர், 'பிரியேன், பிரியினும் தரியேன்' என வன்புறை கூறுவர், அங்ஙனம் பிரியின் அது அறத்தாறன்றெனவும் அறைவர், அறையினும், அறன் கடைப்படா வாழ்க்கையும் பிறன் கடைச் செலாச் செலவும் பொருளினு கும் என்ற தெருளுரை கருதி வினையே ஆடவர்க்குயிர் என்னும் உலகோர் உரை கொப்ப ஆடவர் வினைமேற் செல்லற்கு

பொருள் வயிற் பிரியல் வேண்டுமென்னும் அருளில் நிலையைக் கொள்ளுகின்றனர். கொள்ளுங்கால் பெண்டிர் தம் பெட்பு நிலை யால் தட்பு நிலை கொள்ளாது கொட்பு நிலை கோட லியல்பாகின்றது. ஆடவர் அகங் கொள்ள மொழிந்த நின்னிற் பிரியேன் அஞ்சலோம் பென்ற நன்னர் மொழியும் எண்ணுதற்குரியதாயிலங்குகின்றது. இது பெண்டிரின் நிலையாம், ஆடவரோ, அகற லால் வரும் இகல்தனை, எண்ணுவர். பெண்மையோ

செல்லாமையுண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்லரவு வாழ்வார்க் குரை

எனத்தன் பிரிவாற்றுமையை அறிவுறுத்து வதனுல் உடம்படா நிலையை உணரலாம். இதனுள், தலைவியைப் பிரிந்து சென்று மீண்டு வரும் வருகையை வல்வரவு என்று கூறலால் நலந்தரும் வரவாகப் பயன் தாரா மையும் அறியப்படும். வாழ்வார்க்குரை எனப் படர்க்கையாக அமைத்துப் பகர்வ தால் வாழ்வார் பிறர் என்பதும் பேணப் படும். எனக்குரை என்றும் வாழ்வார்க் குரை என்றும் வழங்கும், பெட்பின் நட்புரை, ஆடவர் உரையை நேர் முறையில் எதிர் மறுத்துச் சொல்லாமல் உடன்பாட்டு முகத்தால் உள்ளக் கருத்தினை யுணர்த்தி மறுத்தலும் அறிஞர் அறிவின் திறனுக்கு விருந்தாக உள்ளன. இன்ன இயல்பிலே ஆடவர் பெண்டிர் ஒருவருக்கொருவர் அறிந்துகொள்ளும் சூழ்நிலை அன்பின் வயத் தால் எய்துகின்றது. தலைவன் பிரிந்தமை யால் மெலிந்த கிழத்தி சொல்லிய நலிந்த வுரையை நாட்டுகின்ருர் நாவலர்.

"செல்வாரல்லரென்று யானிகழ்ந்தனனே
ஒல்வாளல்லளென்று அவரி கழ்ந்தனரே
ஆயிடை இரு பேராண்மை செய்த பூசல்
நல்லராக் கதுவி யாங்கென்
அல்லனெஞ்ச மல மலக் குறுமே"

என ஔவையார் அலமரலைத் தெளிவுறுத்து கின்ருர். தலைவர் பிரிந்து செல்வாரல்லர் என்று தலைவி சோர்ந்திருத்தலும், நம் பிரிவை யறிவிப்பின் தலைவி உடம்படாள் என்று எண்ணித் தலைவர் சொல்லிப் பிரிதலி னின்றும் சோர்வுற்றிருத்தலும் 'ஆகிய இரண் டும்' பேராண்மை என ஆன்ருேர் அறிவிக் கின்ருர். பெண்மை ஆளுதல் தன்மையி னின்று வேறுபட்டதாலும், ஆண்மை தன் ஆளுதல் தன்மையினின்றும் வேறுபட்ட தாலும் பேராண்மை எனப்பட்டது போலும் பேராண்மை என்றதற்கேற்பப் பூசல் எனப் புகன்றது போற்றுதற்குரிய தொன்ளும். ஈண்டுச் செல்வாரல்லரெனச் சீரிய பண் பொடு பெண்ணொருத்தி காதலாண்மையிற் கருதுதலும், ஒல்வாளல்லள் என்று உடம் படா நிலையை ஆணொருவன் உரனுடை உள்ளத்தால் உள்ளுமியல்பே. அவ்வியல்பு அவ்விருவருக்கும் ஆண்மையின் வேறு பாட்டாலமைந்தனவே. அதனொடு அவை பெண் கூற்ருகப் பேசப்படுதலும், அதனை ஔவையார் என்னும் பெண்பாற் புலவர் இரு பேராண்மை செய்த பூசல் என இயம்பு மொழிலும் ஏற்றந்தருவனவாம். மேற் சொல்லப்பட்ட கருத்தினுல் ஆண் பெண் இரு பாலாரிடத்தும் ஆள் வினையாம் ஆண்மை அமைந்திலங்குதலறியப்படும்.

அகவாழ்விற்குரிய காதலை வெறியுறு காதலன்றி நெறியுறு காதலாகப் பொய்யா மொழியார் போற்றி யுரைக்கின்ருர். காத லும் காமத்தினின்று வேருக விளம்பப் பெறும். காதற் காமம் காமத்துச் சிறந்தது என்பர் கற்றறிந்தோர். ஒருவன் ஒருத்தி யைக் காதலிப்பதே உரைப்பார் உரை பெற்றதாம். அக் காதல் நெறிப்பாடின்றி வெறிப்பாட்டினை வேட்குமேல் ஆண்மை நிலை அகன்று போம். அது அகல்வதால் அறனுமின்று பொருளுமின்று, இன்பந்தானு மியைந்ததாக இராது. இல்லிறப்பான் கண் பகை பாவமச்சம் பழியென நான்கும் இக வாவாம், மனத்துக்கண் மாசில்லா அறனு மாகாது. அதனொடு ஆன்ற ஒழுக்கமு மின்ரும். காதல் நெறிப்பட அமையுமேல் அதுவே நேர்மையும் சீர்மையுமாகும். அது தான் மனைவாழ்வில் மாண்புறு மறனுமாகும்.

காண்புறும் ஒழுகலாறுமாம். இதனை ஆண்மையினின்றும் வேறுபடுத்திய வள்ளுவர்.

> பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
> அறனொன்றோ ஆன்ற ஒழுக்கு.

என வாய்மலர்ந்தருளுவாராயினர். இதனால் ஒருவன் பிறன் மனை நோக்காத தன்மையே காதன்மையாகும். ஈண்டு நோக்குதல் என்பது பார்வை என்ற பொதுவியல்பினைப் புகலவில்லை. காதற் குறிப்புடனமைந்த பார்வையாம் நோக்கினை நோக்கி நிற்கின்றது. இக்கருத்து.

> "யானோக்குங் காலை நிலனோக்கும் நோக்காக்கால்
> தானோக்கி மெல்ல நகும்"

> "இருநோக் கிவளுண்கண் ணுள்ளது ஒருநோக்கு
> நோய்நோக்கு ஒன்றந்நோய் மருந்து"

என வருவனவற்றால் நோக்கு காதற் குறிப்புடனமைந்தது என அறியப்படும். வாழ்விலே ஒருவன் தன் மனையை நோக்கிப் பிறன் மனையை நோக்காமலிருத்தலாகிய காதலாண்மையைத் தெள்ளுதமிழ்ப் புலவர் வள்ளுவர் பேராண்மை எனப் பெயரிடுவரேல் தமிழக நாகரிகமும் பண்பாடும் உலகிற் கெடுத்துக் காட்டாக இலங்குவதன்றே?

இன்னும் இவ்வுயர்ந்த பண்பாடு புறவாழ்விலும் பொலிவுற்று நலிவகற்றும் நலத்தினைக் காணலாம். சோழன் நலங்கிள்ளி போர்மேற் செலலுகின்றான். ஆண்டுத் தன் அஞ்சாமையால் பகைவரைப் புறங்காணும் உள்ளத்தின் உறுதியால் வஞ்சினம் மொழியும் வாய்ப்பினைப் பெறுகின்றான். அவ்வஞ்சினம் மொழியுறுங்கால் தன்னை யுணர்ந்துரைக்கும் தகுதிப் பாட்டினை யுறுகின்றான். முதற்கண் தன்னை எதிர்த்த பகைவரைப் புறங்காணேனாயின் " தீதில் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப் பல்லிருங் கூந்தல் மகளிர் ஒல்லா முயக்கிடைக்குழைக என்றாரே " என வஞ்சின மொழிகின்றான் நலங்கிள்ளி. ஒல்லையூர் தந்த பூதபாண்டியனும் பகைவரைப் புறங்காணேனாயின் "பேரமருண்கண் இவளினும் பிரிக" எனத் தன்னையுணர்ந்து வஞ்சின மொழிந்து பிற செய்திகளைப் பின்னர்ப் பேசுகின்றான். தலையாலங் கானத்துச்செருவென்ற நெடுஞ்செழியனோ குடிபழி தூற்றும் கோலேனாகுக என வஞ்சின மொழிகின்றான். இக் கருத்துக்களை நோக்கின் அக வாழ்விலே காதலாண்மையிற் கருத்திருத்தி அதனை வஞ்சின மொழியும் பண்பாக அரசர் மக்கட்குத் தருகின்றனர். அரசன் எவ்வழி குடிகளவ்வழி ; மன்னன் எவ்வழி மன்னுயிர் அவ்வழி என்ற வழக்காற்றினால் சமுதாயம் போற்றும் சலமிலாக் கருத்தும், ஆட்சித் தலைவன் மாட்சியுறக் காட்சி தரும் கருத்தும் தெளியப்படும்.

சோழன் நலங்கிள்ளி வஞ்சினச் சொல்லும், ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் வஞ்சினவுரையும் சோழன் நலங்கிள்ளியின் வஞ்சினச்சொல்லும் பிறள் ஒருத்தியிடம் பேணும் காதலாண்மையின் பெற்றியைக் குடிமக்கள் கொள்ளுமாற்றினையும், ஆட்சித் தலைவன் அகங்கொள்ளுமாற்றினையும் அறிவிக்கின்றன. ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் உரைத்த வஞ்சினமோ தன் மனையாளிடத்து மன்னிய, காதலாண்மையின் கருத்தினை விளக்குவதாகும். தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் தரும் வஞ்சினமோ குடிபழிதூற்றும் கொள்கையைக் கொண்டதாகும். பழி பல வழிகளில் வருமெனப் பகர்வாராயினும், பகை பாவம் அச்சம் பழியென இந்நான்கும், காதலாண்மையில் வேறுபட்டு வினையாற்றுவாரிடத்தே நீங்காவெனப் பொய்யா மொழியார் புகலுவர், சான்றோரும் " கழியாக் காதலராயினும் சான்றோர் பழியொடு வரூஉமின்பம் வெஃகார்" எனப்பண்பினைப் பகருமிடத்து காதலாண்மையைக் கருத்திருத்தி இன்பத்தினை இசைப்பார். இசைக்குங்கால்

அவர் பழியினைப் பெரும் பான்மையையும் அறிஞர் அறிந்தின்புறுவாராக. மேலும் பெருமிதமாம் பேராண்மை பிறக்கும் கல்வி தறுகண் இசைமை கொடை என்பவற்றோடு காமம் பற்றியும் பெருமிதம் பிறக்கும் எனப் பேராசிரியர் எடுத்து மொழிவர். இவற்றானும் காதலாண்மை பேராண்மையாகத் திகழும் பாடுபெறும் பீடுறு நிலை இனிதே விளங்கித் தோன்றும். இன்னும் இவற்றால் ஆட்சித் தலைவன் தன்னை என்னும் தகவும், அதனால் தன் குற்றம் காணும் மன்னுறு தொழிலும் அதன்பின் பிறர் குற்றம் காணும் பெற்றியும் அவற்றாலாயபயன் ஆட்சியில் உயிர்க்குத் தீதில்லாத் தெளிவும், அதனால் குற்றமிலாச் செற்றமிலாட்சியும் அறியப்படும். இக்கருத்து

> "ஏதிலார் குற்றம்போற் றன்குற்றங் காண்கிற்பின்
> தீதுண்டோ மன்னு முயிர்க்கு"

> தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பின்
> என்குற்ற மாகு மிறைக்கு.

எனக் கூறும் வள்ளுவர் வாய்மொழிகளால் தெளிவுறும். தமிழகத்து அரசு தன்னையுணர்ந்துரைக்கும் தகைமையும் அதனால் பிறவுயிர் தீமையில்லாத் தெளிவும் ஆட்சியில் அல்லல் இல்லாமைக்கு ஏதுவாகிய குற்றங்காணு நற்றிற வாழ்வும் உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளங்கா நிற்கும்.

அக வாழ்வில் காதலாண்மையைப் பேராண்மையெனப் பெயரிட்ட தமிழ்ச் சான்றோர் புறவாழ்வுக்குரிய தறுகணாண்மையைப் பேராண்மை எனப் பெயரிடுகின்றார். பேராண்மை என்பது தறுகண் என்றும் அஞ்சாமை என்றும் அறையப்படும். தறுகண் என்பது போலவே வன்கண் என்றும் வழங்குவர். இவை அஞ்சாமையை அறிவிப்பனபோல, புன்கண் இடுக்கண் என்பனவும் துன்பினை அறிவிப்பனவாம் எனவே தறுகண் வன்கண் புன்கண் இடுக்கண் ஆய சொற்கள் கண் என்ற சொல்லை அடியாக அமைத்து அதன் முன்னும் பின்னும் சொற்சேர்த்து வேறு பொருள் உணர்த்தும் கூறுபாட்டினைக்கொண்டுள்ளனர் நம் முன்னோர். மேலேயமைந்த சொற்களைப் போன்றே கண்ணகி என்ற சொல்லும் எனக் கற்றறிந்தோர் காட்டுவர். இவ்வாறுரைத்தற்கு "கண்ணினும் முகத்தினும் நகுபவள் முகநோக்கி" என்ற சான்றோர் கூற்றினைச் சான்றாக்குவர். "கண்ணிற் சிறந்த உறுப்பில்லை" என்றும், "பகைமையுங்கேண்மையுங் கண்ணுரைக்கும்" என்றும் "நுண்ணியமென்பார் அளக்குங் கோல் காணுங்காற் கண்ணல்லது இல்லை பிற" என்றும் கூறும் ஆன்றோர் அறிவுரைகளால் கண்ணின் சிறப்பினை அறியலாம். இதேபோப்பவே "முகத்தின்முதுக் குறைந்ததுண்டோ உவப்பினும் காயினும் தான் முந்துறும்" என்ற பொய்யாமொழியாலும் முகத்தின் சிறப்பு அறியப்படும். அஞ்சாமையாகிய தறுகண் எல்லாரோடும் ஒப்பநில்லாது பேரெல்லையாக நிற்பது பெருமிதமாகும். வீரமென விளம்பப்படுவது மிதுவேயாகும். இத்தகு இயல்புடையரே உறினுயிரஞ்சா மறவர் இறைவன் செறினும் சீர் குன்றலிலராயிலங்கிப் போரெனிற் புகலும் புனை கழல் மறவராய்ப் புகலப்படுவாராயினர். இவரே நெஞ்சுடைய புகன் மறவர் என அஞ்சாமைக்கு எஞ்சாது எடுத்துரைக்கப் படுவர். எனினும் அஞ்சாமையாகிய மறமொன்றே கருதி எஞ்சாது எதனையும் சாடுதலாகாது. சாடின் பெருமையுமன்று; ஏன் உரனுமன்று; வீரத்திற்குத் தாழ்வு முண்டாம். வீரன் தன் மறத்திற்குத் தாழ்விலா வகையில் அஞ்சாமையை ஆடல் நன்றாம். அதுவே வேறொன்றற்கில்லா வீறு எனப் போற்றப்படுவதோடு பேராண்மையென உரைக்கப்படும். இதனை "வீறின்மையின் விலங்காமென மதவேழமும் எறியான் ஏறுண்டவர் நிகராயினும் பிறர் மிச்சில் என்று எறியான், மாறன்மையின் மறம் வாடுமென்று இளையாரையும் எறியான் ஆறன்மையின் முதியோரையும் எறியான் அயிலுழவன்" என்பன போன்ற தொடர்தரும் கருத்துக்களாலும் அறியலாகும். ஏன் வீர

னொருவன் ஒருகையுடையது எறிவலோ யானும் இருகை சுமந்து வாழ்வேன் என உளங்கொள்வானேல் பேராண்மையின் பெற்றி எத்தகையது என அறிவுடையீர் ஓர் மின்! உணர்மின்! இதுவன்றோ அஞ்சாமைக் காணிபோன்றது. இதனை மறனிழுக்கா மான மென அறனுரைக்கும் வள்ளுவர் உலகிற் குணர்த்துவர். அவர் உணர்த்துந் திறன் உணர்வோர் உணரவேண்டியதொன்றும்.

உலகினுக்குத் தம்மையளித்த வள்ளு வரோ பேராண்மைபற்றிச் சீர்பெறச் செப்பு கின்றார். நாட்டிற்கு நவிலும் நலந்தரு முறுப்புக்களை நாட்டுங்காலை பல்வகை யாகப் படைக்கும் பான்மை அமையவும் பாட்டினுள் அறுவகையாகப் படைத்து அறையும் திறன் பாரோர் போற்றும் பண் பினைப் பெற்றதாம். இதனை,

> படை குடி கூழமைச்சு நட்பரண் ஆறும்
> உடையான் அரசருள் ஏறு

என்ற அரசியற் செறிவறிவிக்கும் குறட் பாவால் அறியலாகும். இதன்கண் படை முதற்கண் மொழியப்படுவதும் தெளிக. வேன்மிகுதானை வேந்தர்க்குக் கடனே என் றும், தானை யானை குதிரை என்ற நோனு ருட்கும் மூவகை நிலையும், என்றும் வரும் தொடர்கள் படையின் சிறப்பினைப் பாங்கு படப் பகர்வனவாம். அப்படைக்கு ஆன்ற சீர்த்தி தருவது மறமிகுதி. அதுவே பெருமித மாம். அது கல்வி தறுகண் இசைமை கொடை என்ற நான்கு பொருள் பற்றித் தோன்றும் இந்நான்கனுள் ஒன்று தறுகண் என்பது, அஃது அஞ்சத்தக்கன கண்டவிடத்து அஞ்சாமை என்பதாகும். அஞ்சுவது அஞ் சாமை பேதைமை என்ற கருத்தினால் அஞ்ச வேண்டுவன வற்றிற்கு அஞ்சுதலும் அஞ்ச வேண்டாதனவற்றிற்கு அஞ்சாமையும் ஒரு வற்கு வேண்டுவதொன்றும். வீரத்தின் வழி நிற்கும் ஒருவன் அஞ்சாமையை மேற்கொள் ளுதலே சிறப்பாகும். இதனை விழித்த கண் வேல் கொண்டெறிய அழித்திமைப்பின் ஒட் 'டன்றோ வன்கணவர்க்கு" என்ற வாய்மொ ழியாலறியலாகும். விழித்த கண்கள் வேலைக் கண்டு இமைத்தல் தொழில் ஒன்றே செய் யினும் அது புறங்கொடுத்தற் கொப்பாகும் அது யாருக்கெனின் வன்கணவர்க்கு எனக் கண்ணின்மேல் வைத்துக் கட்டுரைந்தார். அஞ்சாமையாகிய கண்ணே வன்கண்ணுகும். வன்கண்ணரும் பகைவர்மேற் கண்ணோ டாது செய்யும் மறத்தை நூலோர் மிக்க ஆண்டகைமை என்று சொல்லுவர். அத னோடு அப்பகைவர்க்கு ஒரு தாழ்வு வந்த தாயின் கண்ணோடி அது தீர்த்தற்பொருட்டு ஊராண்மை செய்தலை நூலோர் அதற்குக் கூர்மை என்று சொல்லுவர். இதனைப் பொய்யா மொழியாரும்

> "பேராண்மை என்ப தறுகண் ஒன்றுற்றக்கால்
> ஊராண்மை மற்றதன் எஃகு"

எனப் புகன்றுள்ளார். இதன்கண் இயம்பப் பெற்ற பேராண்மையாகிய தறுகண் மற னிழுக்கா மானம் என மாண்புறுத்தப் பெறும். மறனிழுக்கா மானமுடையார் தம் செயல் முடிதற்கு வஞ்சினம் கூறும் அஞ் சாமை பேராண்மையைப் புலப்படுத்தும். நெடுஞ்செழியன் தம் மற மிகுதியால், பகை வரைப் புறங்காணேனுயின் மாங்குடி மரு தன் தலைவனுக உலகமொடு நிலைஇய பலர் புகழ் நல்லிசைப் புலவர் பாடாது வரைக என்றும் குடி பழிதூற்றும் கோலேனுகுக என்றும் வஞ்சின முரைத்தலும், ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன், மையற்கோமான், மாவன், மன்னெயிலாந்தை, அந்துவஞ்சாத் தன், ஆதனழிசி, வெஞ்சின இயக்கண் முத லோராகிய கண்போன் நண்பிற் கேளிரொடு புணர்ந்த இன்களி மகிழ் நகை இழுக்கி யோனுவேன் என்று வஞ்சின மியம்பலும் பேராண்மையின் ஏராண்மையை எடுத் துரைப்பனவாம். இதன்கண் காவலரும் கருதும் மறமிகுதியால் கட்டுரைக்குங்கால், மொழிப் புலவரிடத்தும், குடிமக்களிடத்தும் நண்பர்களிடத்தும் தாம் கொண்ட பெரு மதிப்பும், அஞ்சிவாழுமியல்பும் உற்றவராய் இலங்கியமை இனிதுணரப்படும். இவரே

எறிகோலஞ்சா அரவினன்ன சிறு வன்மள்ளர் எனவும் மறமைந்தர் எனவும் போற்றப் பட்டனர். இவர் நசைவர்க்கு மென்மையல்லது பகைவர்க்கு இரும்பு பயன்படுக்கும் கருங்கைக் கொல்லன் விசைத்தெறி கூடமொடு பொருஉம் உலைக்கல்லன்ன வல்லாளன் என உரைக்கப்படுவார். மேலும் எறிபடை மயங்கிய வெருவரு போரில் கள்ளுடைக் கலத்தராய் உள்ளூரிடத்துக் கூறிய நெடுமொழி மறந்த நிலையைச் சிறுபேராளர் எனச்செப்புகின்றூர். இதனுலன்றே ஞாயிறன்ன வெந்திறலாண்மையும், திங்களன்ன கண்பெருஞ்சாயலும் உடையோர் வீரர் என ஆண்மையும் சாயலும் வீறுபெற ஆறுகொள அறையப்படுவனவாயின.

இவ்வாறு காதலும் வீரமும் பேராண்மையாகக்கொண்டு வாழ்ந்த செந்தமிழ் நாட்டார் தன்னிலையிற்றூழாமையும் பிறிதொன்றூற்றூழ்வு வந்துழி உயிர் வாழாமையுமாகிய இயல்பிலே தம் வாழ்க்கையை நடாத்தினர். அதுவே மானம். மானம் மன்னுதல் பெற்றது. குடிமைக்குரிய ஒழுக்கத்திற்குரிய குணங்களுள் சிறப்புடையது மானமாகும். இன்றியமையாச் சிறப்பினவாயினும், இழிவினைத்தரும் தாழவருஞ் செயல்களைத் தவிர்க்கவேண்டும். இறத்தல் நேருமாயினும் குன்றவருவனவற்றைக் கொள்ளற்க இறப்பவருவழி இளிவந்தன செய்தாயினும் உய்கவென்பது வடமொழி வழக்காகும். அதனை மறுத்து உடம்பினது நிலையின்மையும் மானத்தினது நிலையுடைமையும் சீர்தூக்கி இளிவந்தன செய்யற்க என்பது செந்தமிழ் செப்பும் செம்மை நிலையாகும். அவ்வாறு இன்றித் தாழவருஞ் செயல்களைச் செய்யின் யாதாம் எனும் வினவிற்கு தலையினிழிந்த மயிரனையராவர் எனத் தாழ்வின் இழிவைத் தக்காங்குத்தந்து நிறுவுகின்றூர். தலை ஒருவனுயர்வுக்கும், அதனின்றிழிந்த மயிர் காலடியிலிடப்படுமிழிவறிந்து காலின் கீழிருத்தலை ஒருவன் தாழ்விற்கும் உரைக்கப் படுகின்றது. இன்னும் பெண்கள் தம் தலையிலுள்ள மயிரை ஆண்டு நிலைபெறும் வரை மிகப்போற்றிப் புனைவர். அதனின்றும் வீழ்ந்த தலைமயிரை எடுத்துத் தம் காற் கீழ்மைப்பர் இக் கருத்தினையே ஒப்பாக வுரைத்துள்ளார். பிறிதொன்றூன் தாழ்வு வந்துழி உயிர் வாழாமல் இறந்து படுதல் மானமுடையார்க்கு இயல்பு ஆகும். அவ்வியல்புக்கு எடுத்துக் காட்டப்படும் பொருள் கவரிமா என்னும் விலங்காகும். கவரிமா தன் மயிர்த்திரளின் ஒரு மயிர் நீங்கினும் அது உயிர்வாழாது அதுபோல மானமெய்து மெல்லைக்கண் உயிரையும் நீப்பர் மானமுடையார். இளிவரின் வாழாத மானமுடையாருடைய ஒளியினை உலகம் தொழும் பின் ஏத்தவும் செய்யும். ஆதலால் பெருக்கத்துவேண்டும் பணிதல் சிறிய சுருக்கத்து வேண்டுமுயர்வு எனப் பொய்யா மொழியார் மானத்தினியலைப் போற்றியுரைப்பர். இதனுலன்றே மானம் ஒன்றே நல்வாழ்வெனக் கொண்டு வாழ்ந்த எம் மறவேந்தர் என இக் காலத்தே பாவேந்தர் பாரதிதாசனூர் யாவருமுணர எளிமையுடன் இனிமைபெற எடுத்தியம்பினூர்.

பெருக்கத்து வேண்டும் பணிதலையும், சிறிய சுருக்கத்து வேண்டு முயர்வினையும், சங்கச் சான்றோரிடத்தே கண்டு தெளியலாம். இன்மையின் இன்னுதது யாதெனின் இன்மையின் இன்மையே இன்னுதது. தொல்லை தருவதில் எல்லையிலாற்றலுடையது நல்குரவே என நாட்டிடுவார் நாவலரேயூயினூர். எத்தகு வறுமையினும் செம்மையாய மானமொன்றே நல்வாழ்வெனக் கொண்டு வாழ்ந்த மன்னு தமிழ்ப் புலவரையும் அறிந்து நாம் வாழலாமன்றே.

பெருஞ்சித்திரனூர் என்னும் பெயருடைய புலவர் தம் பெருமை சொல்ல வந்தாரிலர். தம் துன்பத்தைச் சொல்ல வந்தவரிவர் துன்பம் பலரிடம் சொல்லுவதலாலே ஆறுதல் பெறும், செல்வக் காலை நிற்பினும் அல்லற் காலை நில்லலர் அன்புடையார் என அறைவர் அவரே கேளிர் எனப் படுவார். அல்லலைக் கேட்டறிந்து அமைதியைத் தோற்றுவிப்பவரே கேளிராவார். அத்

தகு பெற்றி எல்லோரும் ஏற்கும் பண்பெய்து மேல் யாது மூரே யாவருங்கேளிர் என்ற உண்மைப் பொருள் உலகெங்கும் பரவி உயர் வாழ்வு ஓங்கும். - பெருஞ்சித்திரனார் தம் இல்லாமையாலாகிய வாழ்வினைச் சித்திரிக்கின்றார். இல்லாரை இல்லாளும் வேண்டாள் ஈன்றெடுத்த தாய் வேண்டாள் என்பவர் ஆன்றோர். அறங் கூறும் வள்ளுவர், அறஞ்சாரா நல்குரவு ஈன்ற தாயானும் பிறன்போல நோக்கப்படும் எனக்கூறித் தாயைத் தலையாக வைத்தற்குத் தாய்த் தலையன்பு என்ற தக்கதோர் வழக்காறேயாம் தமிழ்த்தாய் தரூஉம் தாய்மையாம் தலைமையை உணர்ந்த பெருஞ்சித்திரனார் முதற்கண் தாய்நிலையைத் தருகின்றார். தாயோ வயது முதிர்ந்தவள் முதுமையும், வெறுத்து மொழியுமளவிற்கெய்தியது. வாழ்ந்து சென்ற ஆண்டு பலவாதலின் இனி வாழும் நாளைக்கண்டு என்னுயிர் இன்னும் செல்லாதிருக்கின்றதே என்று பலவாக வெறுத்துரைக்கும் முதுமை அடைந்தவள் தாய். நடக்கவியலாத தள்ளாடும் முதுமை, கோலையே காலாகக்கொண்டு நடக்கும் நடையினள், நெட்டிடை வைத்து நடப்பின் நிலை தடுமாறும், என அஞ்சி ஒட்டிடை வைத்துக் கோலால் நடக்கும். ஊறு தரு நடையுடையள் தலையோ நூல் விரித்தாற் போன்ற மயிரைப் பெற்றவள். விரவு நரையின்றி வெறு நரையாகவே காணுங் காட்சி கண்களோ மன்னிய பார்வைபோய் மறைந்த பார்வையுடன் முன்றிலிடத்தும் போக முடியாத முதிர்ச்சியை யுடையவள். இவ்வாறு தாய் நிலையுரைத்த பெருஞ்சித்திரனார் தாரத்தின் நிலையைச் சித்தரிக்கின்றார். மனைவியோ பசந்த மேனியை யுடையள். அவள் உள்ளமோ அல்லலின் எல்லையில் நிலையால் எண்ணங்கள் பல எழுகின்றன, எழும் எண்ண அலைகள் உழுவலன்பால் உள்ளத்தே மோதி, வருந்துகின்றன. இந்நிலையில் மருங்கிலே பல பிள்ளைகள் பால் குடிக்கும் பாலர் பிசைந்து தினவாடிய மூலையினையுடையள். இதனால் வருந்திய மனைவி குப்பை மேட்டிடத்து முன்பு கொய்யப்பட்ட கண்ணிலே சினைத்தெழும் கீரையாம் முற்றாத இளந்தளிரைக் கொய்து கொண்டு வந்தாள். அதனை உப்பில்லாமலே நீருலையாக ஏற்றி வேகவைத்து, மோரின்றி அவிழ் பதம் மறந்த நிலையில் இலை யுணவை உண்டாள். அம்மட்டோ அவள் ஆடையோ மாசு நிறைந்த அழுக்கேறியது. அதுதானும் நிறைந்ததே எனின் இன்று, குறைந்த உடையை யுடையவள் இத் தகு வாழ்வெய்தியதனால் அறக் கடவுளையே பழிப்பவள். துவ்வாதவள் என்னை விரும்பியிருப்பவள். (இவ்வாறுள்ள தாயும் தாரமும் ஆகிய இருவர் நெஞ்சங்களும் உவப்பச் செயல் வேண்டுமெனப் பெருஞ்சித்திரனார் குமண வள்ளலைக் கேட்கின்றார்.)

இவ்வாறு தாயும் தாரமும் அடைந்த உள்ள நிலையை உணர்த்தியதோடு உடற்கின்பம் தரூஉம், மழலைச் செல்வங்களின் மன்னிய நிலையினையும் மனங்கொள்ளக் கூறுகின்றார். உண்ணப்படுவன எண்ணப்படா நிலையைப் பெற்ற இல்லை இகழ்தலோடு மறக்கவும் நேர்ந்த மக்களின் நிலைக்கு மாற்றுமென் சொல்வது. மறந்த புல்லுளைக் குடுமி புதல்வன் பலமுறை பாலில்லா முலையைச் சுவைத்தனன். சுவைத்துப் பால்பெறாதவன் கூழையும் சோற்றையும் விரும்பினான். விரும்பியவாறே விரைந்தான். அடுக்களையை அடைந்தான், அடுகலத்தைக் கண்டான். திறந்தான் உள்ளில் வறுங்கலத்தை உற்றுநோக்கி அடுத்தடுத்து அடுகலங்களைத் திறந்து பார்த்தே அவ்வாறே கண்டான். அழுகை தோன்றியது. அழுகையைக் கண்ணுற்ற தாய், அதனை நிறுத்தக் கருதி மறப்புலி உரைத்தும் மதியம் காட்டியும், முயற்சி பலவற்றிலும் முற்படுகின்றாள். முயற்சி பயனளிக்கவில்லை என் செய்தாள் தாய். நொந்தனளாகி நுந்தையை நினைந்து பொடிந்த நின் செவ்வியைக் காட்டு என்று பலவும் வினவுவாள். இந்நிலை கனவின் கண்ணும் துயரமுறுவோரின் தொல்லை நீங்க நல்ல வளம்தருக எனப் புலவர் வேண்டுகின்றார்.

இவ்வாறு புலவர் தம் அன்புடைத்தாய், இன்புறாஉம் இல்லாள், இனிமை தருஉம் இளஞ்சிறார், அடைந்த இன்மையின் இன்றுமையை எடுத்துச் சொன்ன கருக்கத்து நிலையிலும் தன் நிலையிற்றிறாமல் நின்றார். தன்னுயர் வினை விடுத்துப் பொருள் வேண்டிலரிலர். வறுமையிற் செம்மையாய் வாழக் கருதுகிறார் வண்டமிழ்ப் புலவர். தன்னிலையிற் றிறாமையாகிய மானத்தை மனத்தில் எண்ணுகிறார். எண்ணிய நல்லெண்ணத்தை ஏற்றமுற இசைக்கின்றார். உயர்ந்தேந்து மருப்பினையுடைய கொல் களிறு பெறினும் முகமாறித் தரும் பரிசிலைக் கொள்ளேன். நீ முகமலர்ந்து அக மகிழ்ந்து அதனால் யான் இன்பமுற நீ கொடுக்கும் பரிசு இருத்தல் வேண்டும். அதுவன்றி என்றும் அளவையுடைய பொருளாயிருப்பினும், கொள்வேன், எனப் பாவலர் பகர்வாரேல் அவருடைய மனத்திண்மையை என்ன பெயரிட்டு அழைப்பது?

இப் பெருஞ்சித்திரனாரே ஒருகால் வெளிமானுழைச் செல்லுகின்றார். வெளிமான் துஞ்ச அவன் தம்பியைப் பரிசில் கொடுவென வேண்டினார். அவன் வரிசையறியாது, வரிசைக்கு வருந்தும் பரிசில் வாழ்வின் பண்புநோக்காது கொடுப்ப பாவலர் கொள்ளாதது மட்டுமன்று அவர் குமணனிடம் சென்று அவன் பகடு கொடுப்பக் கொணர்ந்து, நின்று வெளிமானூர்க்கடி மரத்தில் கட்டுகிறார். கட்டியதோடு விட்டுவிடவில்லை, காவலரைப் பாவலர் இடித்துரைக்கின்றார். தன்னிலையிற்றிறாத வாழ்வு அதாவது மானத்தோடு கூடிய வாழ்வு மக்களுக்கு மன்னுவுலகத்து மன்னுதல் வேண்டுமென்பதே அவர் குறிக்கோளாகும். அக் குறிக்கோளைக் குறிக்கும் கருத்துடைய செய்யுளைக் காண்மின்.

இரவலர் புரவலை நீயு மல்லை
புரவலர் இரவலர்க்கில்லையு மல்லர்
இரவல ருண்மையுங் காணினி இரவலர்க்கு
ஈவோ ருண்மையுங் காணினி நின்னூர்க்
கடிமரம் வருந்தத் தந்தியாம் பிணித்த
நெடுநல் யானையெம் பரிசில்
கடுமான் றோன்றல் செல்வல்யானே

என்பதாகும். இவரே இவனை வேண்டுங்கால் பருகுவது போன்ற விருப்பமில்லாது, அருகிலிருந்து மறியார் போல இருந்து கொடுக்கும் மதனை அகநகவாரா முகனமி பரிசில் என அறைகின்றார். மேலும் வருகென வேண்டும் வரிசையோர்க்கே பெரிதே உலகம் பேறுநர் பலர் எனப் பேசுகின்றார். இன்னும் அதியமான் நெடுமானஞ்சி பரிசில் நீட்டிப்ப ஔவையார் கௌவையுற்றுக் கழறுவது கருத்திறுத்தற்குரியது. அஞ்சி தன்னறியலன் கொல் என்னறியலன் கொல், அறிவும் புகழு முடையோர் இறந்தாராக உலகமும் வறிய இடத்தை யுடையதன்று, அதனால் எம் கலங்களைக் காவினெம், கலப்பைகளைக் கட்டினோம், மரத்தைத் துணிக்கும் தச்சனுடைய கைவல் சிறார் மழுவுடன் காட்டகத்துப் புக்கது போல எத்திசைச் செல்லினும் அத்திசைச் சோறும் எனச் சொல்லுவதனால் சோர்வில் உளத்தின் ஊற்றம் அறியப்படும்.

பாவலர் காவலரிடத்து கழறிய கட்டுரைகளால் அவர் குணநலங் கொள்ளப்படும். தண்டமிழ்ச் சான்றோர் நல்குரவால் நலிவுறினும், அதனால் வாழ்வு நலம் பெறுவிடினும் தாழ்வுதருஞ் செயல்களை மேற்கொள்ளார். தம்மிடையுள்ள சுருக்கத்தால் உருக்கங் கொள்ளும் ஊறுகளை யுறினும், தன்னிலையிற் றிறாமையாகிய உயர்வினையே உள்ளத்தில் உறுதியாகக் கொண்டிலங்கினர் என்பது கொள்ளப்படுகின்றது. புகழினைச் செய்யுமிடத்தே இளிவரவுகளைச் செய்யார் யாரெனின் புகழுடனே மானத்தை நிறுத்துதலை விரும்புவராவர். இளிவரவுதான் மூப்பு, பிணி, வருத்தம், மென்மை ஆகிய நான்கு பொருளடியாகத் தோன்றுமென்பர் நாவலர். பெருக்கத்தையுடைய செல்வரிடத்து சிறிய சுருக்கத்தை யுடைய பாவலர் தன்னிலையிற் றிறாமையாகிய உயர்வினை உணர்ந்து உணர்த்தவேண்டி, மேலே யுரைத்த கருத்துக்களில் மனத்திண்மை

மன்னுதலுற்றது. அவ்வியல்புடைய மனத்திண்மையைப் பொய்யில் புலவர் பேராண்மையென ஏர்பெற இயம்புவர் அதுவே.

சீரினும் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர்.

என்பதாம் இதனுள் பேராண்மை என்பது மானமே. அது தன்னிலை யிற்றுமாதிருத்தலாம். அது குடிமைக்குரிய சிறப்புப் பண்பெனக் கூறுவர். ஏன் மக்கட்டொகைக்கே மாண்புறச் செய்வது மானமே.

இதுகாறுங் கூறியவாற்றால் வள்ளுவர் தாமியற்றிய குறளில் மூன்றிடங்களில் பேராண்மை எனப் பெயரிட்டழைத்துள்ளார். அவை பிறர் மனை நோக்காத பேராண்மை, பேராண்மை என்பதறுகண், சீரொடு பேராண்மை வேண்டுபவர் என்ற மானம் ஆய மூன்றுமாம். பிறர் மனை நோக்காத பேராண்மை என்பது ஆடவர்க்குரிய கற்பாம். கற்பென்பது ஆடவர் பெண்டிராய இரு பாலார்க்கும் பொது. கற்பென்று பெயர் சொல்லவந்தார் அஃதிரு கட்சிக்கும் நடுவில் பொதுவில் வைப்போம் என்றார் பாரதியார். கற்பென்னும் திண்மையுண்டாகப்பெறின் என்ற தொடரால் வலி, திண்மை என்ற பொருள் உணரப்படும். ஆதலால், பிறர் மனை நோக்காத மனத்திண்மை பேராண்மை எனப் பெயரிடப் பெற்றது. அடுத்து நிற்பது பேராண்மை என்ப தறுகண் என்பது. தறுகண் என்பது அஞ்சாமை எனவே அதுவும் மனத்திண்மையைக் குறிப்பதாகும். அது வஞ்சினமுரைக்கும் வகையால் அஞ்சாமை என அஞ்சாதியம்பலாம். எனவே தறுகண் என்பது பேராண்மை எனப் பெயரிடப் பெற்றது. அடுத்து நிற்பது மானம் அது தாழ்வு வராமைக்குரிய மனத்திண்மையாம். அதனையும் பேராண்மை யெனப் பெயரிட்டாளுவர்.

ஒருவன் முதற்கண் தன்னை உணர வேண்டும். அகம் உணர்ந்த பின் புறம் போற்றப்படும். அதனாலே ஆன்றோர் அகப்பொருள் புறப்பொருள் என இரண்டே கொண்டனர். அகவாழ்வில் தன்னையுணர்ந்து தனது தூய நெறி கொள்ளப் பிறர் மனை நோக்காத ஒன்றைப் பேராண்மை எனவும், புறவாழ்வில் பிறபொருளைக் கண்டு அஞ்சாமையாகிய தறுகணாண்மையைப் பேராண்மை எனவும், இவ்விரண்டு வாழ்விலேயும், தனக்கும், தன்குடிக்கும், சமுதாயத்திற்கும் நாட்டுக்கும் ஏன் உலகிற்கும் தாழ்வு வாரா நெறியில் செயலாற்றும் மானத்தைப் பேராண்மை எனவும், உலகப்பெரும் புலவர் வள்ளுவர் அருளிய வாய் மொழியின் திட்பமும் ஒட்பமும் நுட்பமும் உணர்ந்தின்புறத்தக்கனவாம்.

வள்ளுவர் வாய்மொழி
வயங்குக உலகெலாம்.



# இறையனார் பாடல்

திரு. K. சோமசுந்தரம் பிள்ளை, பி. ஏ., பி. எல்., தஞ்சை.

சங்கத் தமிழின் தலைமைப் புலவராய இறைவன் தருமி எனும் அரவோர், பொற்கிழி பெறுதற் பொருட்டுப் பாடிக் கொடுத்தது 'கொங்கு தேர் வாழ்க்கை' என்ற பனுவலாகும். இஃதே போன்று இறையனார் 'மதி மலி புரிசை மாடக் கூடல்' என்ற திருப்பாட்டினையும், சேரமான் பெருமாள்நாயனாரிடம் பாணபத்திரர் பெருநிதி பெறும்படி பாடிக் கொடுத்துள்ளார். இந்நிகழ்ச்சிகள் மெய்த் தலைப்பட்டுப் பெருந்தகவால் நந்தமிழகத்தே பண்டுதொட்டு உணர்வாட்சியுடையார் வழி வழி இயைந்து வழங்கிவரலாயின. செய்யுண் முகமாகவுள்ள இவற்றில் முன்னது பொருட் குற்றமுடையதென வழக்குச் சொன்முகமாக நக்கீரரால் குறை கூறத் தலைப்பட்டதிலிருந்து தன்னுருக் கரந்து ஒல்கியுள்ளது. பரத்தை மறைத்தது பார் முதற் பூதம் போன்று, பாட்டின் செவ்வியும் சிறப்பும் 'குற்றம் குற்றமே' என்ற வல்வழக்கில், விசுற்ற ஒளி மழுங்கி முகிலுறை வெண்டிங்கள் போன்றும் மறைந்துள்ளது. இதனை இப்பாட்டு புலமுடையார் உள்ளங் கொள்ளுமாறு பிறர் நெஞ்சிற்றங்கி இன்புறுத்தலாற்றது, வழக்குச் சொன்முகமாகக் கேட்கப் படும் பாட்டாகவே இருந்துள்ளது. மற்றும் போற்றுவாரின்மையால், அது நுவலும் பொருளியல்பின் நுண்மையினைக் கருத்தூன்றி உணரவியலாததோடு, மரபுக்கு முரண்படவுங்கொண்டு, சிலர் இடர்ப்பட்டுத் தமது நன்னெஞ்சினையும் கோட்டமுறச் செய்து கொள்ளுகின்றனர். எனவே, இப்பாட்டின் பயனை ஆசிரியர் கருத்தின் வழி உணர்ந்து அவரது உள்ளக்கிடக்கையை நுணுகி ஆய்ந்து பாட்டின் நற்றத்தினைத் தெளிவு படுத்தல் இன்றியமையாததொன்றே.

> " கொங்கு[1] தேர் வாழ்க்கை
> அஞ்சிறைத் தும்பி
> காமம்[2] செப்பாது கண்டது மொழிமோ
> பயிலியது கெழீஇய நட்பின் மயிலியல்
> செறி எயிற்று அரிவை கூந்தலின்
> நறியவும் உளவோ நீ அறியும் பூவே "

என்ற நல்ல குறுந்தொகைப்பாட்டு, இறையனாரது சக்தி இலக்கிய பண்பு தழுவிய பாடல். இதற்கு 'இயற்கைப் புணர்ச்சிக் கண் இடையீடு பட்டு நின்ற தலைமகன் தலைமகளைக் காணின் நீக்குதற் பொருட்டு மெய் தொட்டுப்பயிறல் முதலாயின அவள் மாட்டு நிகழ்த்திக் கூடித் தனது அன்பு தோற்ற நலம் பாராட்டியது' எனப் பொருண்மை தோன்ற பழையதோர் குறிப்பொன்று உளது. மற்றும், இப்பாட்டை இறையனார் அகப் பொருளின் உரையின்கண் மேற்கோளாகப் பயன்படக்காட்டி எடுத்திசைக்கப்பட்டுள்ளது நினைவிற்பதிக்கற்பாற்று.

---

(1) 'கொங்கு' என்னும் சொல்லுக்குத் தேன் என்பது பொருள்.

(2) 'காம்' எனும் சொல் 'அம்' விகுதி பெற்று 'காமம்' எனலாயிற்று. 'காம் உறுவர் கற்றறிந்தோர்', 'கற்போர் நெஞ்சம் காம் உறப்படுத்தலும்', என்றதில் 'காம்' எனும் சொல் விருப்பம் எனும் பொருளில் வந்துள்ளதறிக.

மலர்கள் தோறும் தங்கிப்பூந்தாதுக் களைத்தேடி மணம் நுகர்ந்து ஆயும் அழகிய சிறகுகளையுடைய தும்பியே! வேண்டுதல் வேண்டாமையிலாது உள்ளதை உள்ளவாறு சொல்வாயாக. நெருங்கிப் பழகுவதில் பொருந்திய காதலுக்குரிய நட்பில் தலை சிறந்து, மயிலின் சாயலும், முல்லையின் முறு வலழகும் கொண்ட எம் காதலியின் கூந்த லில் விளங்கித் தோன்றும் நறுமணத்தைக் காட்டிலும், வேறு சிறந்த மணங்கமழும் மலரொன்றை நீ எங்கேயாகினும் நுகர்ந்து அறிந்ததுண்டோ? என்ற முடிப்பில் சொற் பொருளினிமையோடு அழகு சுடர் வீசும்படி காதலின் உறவு முதிரப் பழகிப் பாராட்டும் பண்புடைய தலைவன் கூறுவது, இப்பாட் டின் பொழிப்பாகும். இப்பாடல் காதல் வயப்பட்ட ஒருவர், மலர் மணத்தை நாடித் திரிந்து, மண ஆய்வில் வல்ல வண் டினை நோக்கிக் கேட்கும் கூற்றாக அமைந் துள்ளதாதலின், உள்ளத்தா லுணர்ந்து கலந்து இப்பாட்டின் இனிமையைக் காணல் நேரிது.

இப்பாடலைப் பற்றிய காதல் நாடகம், கலையின்பப் பூஞ்சோலையில் நிகழ்கிறது. பின்னணியாக விளங்கும் பூக்களுக்கும் வண்டிற்கு மிடையே, காதலனும் காதலி யும் காட்சி தருகிறார்கள். ஆன்மானுபவ முடையவர்கள்தான் இக்கவின் தரும் காட்சியினை உணர இயலும். மலரில் மொய்க் கும் வண்டு தன் காதலியின் கூந்தலில் மொய்க்க வருவதைக் காதலன் காண்கிறான்; கூந்தலுக்குப் பூ, மணம் தருகிறதா அல்லது பூவிற்குக் கூந்தல் மணம் தருகிறதா என்ற ஆய்வில் தலைப்பட்டான். பின்னர் ஆராய்ச் சியில் தேர்ந்து, காதலன் தன் தலைவியின் பொறிகள் வாயிலாகப் புலன்கள் இயங்கி மலர்ந்து நிற்குமாறு, தேன் வண்டினை ஒட் டுவதுபோல் அவள்பால் ஒட்டி நின்று உறு தொறும் உயிர் தளிர்ப்பத்தீண்டி 'என் தலை வியின் கூந்தலின் நறியவும் உளவோ நீ அறி யும் பூவே? என்ற வினாவினை எழுப்பி, தன் தலைவியின் கூந்தலின் மணம்போல எந்தப் பூவிற்கும் இல்லையென்று வண்டு பேசாது பேசுவதுபோல் அகத்தமைதியினைக் கொள் கிறான்.

தன் காதலியின் கூந்தலுக்கு மணம் காணுவாறாகிய காதலனின் காதல் வேகத்தை அவனது உள்ளமாகிய அமைதிப் பொய்கை யில் நிகழ வைத்து அதனையே இப்பாட்டி னில்அளந்த சொற்கள் வழி அளவிறந்த பொருள் தோன்றுமாறு வகைப்படுத்தி இசைப்பண்புடன் இசைந்து நிற்கும் கவிதை யாக ஆசிரியர் மலரச் செய்து விடுகிறார். மற் றும் சிந்தனைகளை, உணர்ச்சிச் செல்வமயமாக வும், உவகையாகவும் விளங்கச் செய்து உள் ளுருகி அனுபவித்த காதலின்பத்தை சொற் களில் நவ நவமாகச் சிறந்த பொருள்களைத் தோன்றும்படி அமையத் தேக்கி, அதனை மக்களின் உள்ளங்களில் பாயுமாறு கவிதை யைத் திறமுறச் செயல்படும்படி விட்டுவிடு கிறார்.

பொய்க் கற்பனை கலவாத இக்கவிதை யின் கண், அறத்தாற்றில் நின்றாற்றும் உழு வலன்பில் வளர்ந்து முதிரும் நட்புறவோடு விளைந்த அனுபவத்துப் பேராத காதல் நிகழ்ச்சி, ஆராத அன்போடு இன்பப் பேச் சாய்ப் பொங்கியெழுவதும் காணப்படும். இயற்கையின் அடிப்படை யுண்மையில் எழுந்த காதலின்பக் காட்சியும் பேச்சும் இறைக் காதலன்பின் திறவுகோலாய் வயங்கு வதும் தெளியப்படும். இதயத்தைக் கனி விக்கும் தெய்வக் காதலுணர்ச்சி அறத்தி னின்றும் வழுவாது. அகப்பொருளினியல்பில் அமைந்து, திருவருட்பேற்றிலும் பேரின்பம் துய்த்தற்கு வாயிலாகவுள்ள அறிவின் நலனி லும் தோய்ந்து மிளிர்வதும் உணரப்படும்.

ஒரைந்து வரிகளான் பின்னிடப்பெற்ற இப்பாட்டு, பொற்கிழி பெறற் பொருட்டுத் தருமிக்கு இறைவன் அருளியதென்பது,

"பொதியப் பொருப்பன் மதியக்
கருத்தினைக்
கொங்குதேர் வாழ்க்கைச் செந்தமிழ்
கூறிப்

பொற்குவை தருமிக்கு அற்புடன் உதவி
என்னுளம் குடி கொண்டிருக்கும்
பயன் அளிக்கும்
கள்ளவிழ் குழல்சேர் கருணையெம்
பெருமான்

எனக் கல்லாடம் சான்று பகரும். இஃது தேனூறும் செஞ்சொற்களால், ஐம்புல இன்பமும் ஒருங்கே அளிக்கவல்ல அகப் பொருட்சுவையைக் குழைத்து இயற்றப்பட்டுள்ளது. வளனும் துளங்கா மாட்சியும் கொண்டுள்ள இப்பாட்டு மேம்போக்காகச் சிற்றின்பம் தருவதாகக் காட்டி, இறையுணர்வூட்டும் பேரின்பப் பேற்றைப் பயக்க வல்ல ஆற்றலையுடையது. மக்களை இறைவன்பால் வாழ்க்கைத் துறையின் வழி ஆற்றுப்படுத்தல் இப்பாவின் சீரிய நோக்க மென்பது துணியப்படும். நோக்கு நயங்களை ஆய்ந்து நவிலுந்தோறும், அன்பின் நிறைவு மலர்ந்தால் இறைமை தானே கனியுமென்ற பாட்டின் உட்கிடை, பயன் கொள்ள நிற்பது, தெள்ளெனத் தென்படும்.

இப்பாட்டகத்தே, இறையும் உயிரும் இரண்டறக் கலப்பதை, காதலனும் காதலியும் கூடும் காதலுறவில், கற்பனை செய்யப் பட்டுள்ளதினை உள்ளுந்தோறும் உள்ள முருகும். இஃது சிறந்த கருத்தோவியங் கொண்டு முத்தமிழ்ச் சுவையோடு வித்தக நடையினை விளங்கப் பெறும்படி ஆற்றொழுக் கன்ன அணிகெழு போக்கினையுடைய செந் தளைப் பாட்டு. தூய காதலின் உருவகமாய் விளங்கும் இப்பாடல், கட்புலனுக்கும் செவிப் புலனுக்கும் உரிய அழகின் இருப் பிடம்: அறிவின் பிறப்பிடம்; அறிவமைதி யின் உறைவிடம். இக் கவிதைப் பாட்டில் காதலிக்கும் காதல், காதலித்தே அழியாது, பேசாதவொன்றை பேசுவதை உணர வைக் கிறது: கேளாத ஒன்றை, கேள்வி எனும் நிலைக்கு அப்பால் நின்று ஒலிக்கவைத்துக் கேட்டதை வைத்தே கேட்டிராததை அனு மானிக்கச் செய்கிறது; அனுபவக் காதலால் அகத்துக் கண்கொண்டு காணும் மட்டில்லா ஆனந்தம், மோன நிலையை ஓசை ஒலி நிலய மாகவும் ஆக்குகிறது. இதனைன் காதலிருவர் பெற்றுள்ள எல்லையில்லா இன்ப வெள்ளம் இறையருளையுடையவரது உலப்பிலா இன்பம் போன்றுடையதாகக் காணப்படும்.

'ஆனந்த வெள்ளத்து அழுந்துமோர்
ஆருயிர் ஈருருக் கொண்டு
ஆனந்த வெள்ளத் திடைத்திளைத்தால்
ஒக்கும் அம்பலஞ்சேர்
ஆனந்த வெள்ளத்தறை கழலோன்
அருள் பெற்றவரின்
ஆனந்த வெள்ளம் வற்றாது முற்றாது
இவ்வணி நலமே'

(திருக்கோவை 307)

எனவே, அருமறை துணிந்த பொருள் முடிபை உண்மையாய அழகுப் படைப்பாக 'கொங்குதேர் வாழ்க்கை' எனும் விழுமிய பாட்டின்கண், உயிர்ப்புடன் ஓங்கியியைய மாறு அமைத்து வைத்தது இனிது புலனாகும்.

புறப் பொருள்களோடு அகவுணர்வுகளை இழைந்து நிகழும்படி இப்பாட்டின்கண் செறியவைத்து அதன் பயனாய்ச் சிறப்பு நல வாழ்க்கையைச் செய்தற்குரிய வகையினைக் கருத்தழகோடு சுட்டிப் புலப்படுத்தியிருக் கிற முறைமை உயிர்க்களை மேவியதாக உள்ளது. பொருளியற்கைகள் வழி நுண் ணுணர்வியற்கைகள் இப்பாட்டில் தெளியப் படுவதினான், இஃது உண்மையாய அருளிய லறிவு விளக்கத்திற்கிடமாகி நின்று அதன் கண் படிவார்களையும் அருளாட்சியில் தலைப் படும்படி செய்து இன்புறுத்திவிடுகிறது. அரிவையின் கூந்தல் இயற்கை மணமுடைய தென்பது 'நறியவும் உளவோ நீ யறியும் பூவே' என்ற வினாவிலமைந்துள்ள அமைதி யான் புலப்படும். ஈண்டு, வண்டு என்றும் இயற்கை மணத்தை நாடுவதால், கூந்தலின் மணம் இயற்கையென அனுபவ அறிவு கொண்டு காதலர் வினவுவதும் இயற்கை யின்பாற்படும், இங்கு உயிர்க்கு எளிதே விளங்காத இறையுண்மை நிலையினை விளங்க வைத்தது அறியப்படல்வேண்டும். மனத் தைப் புலன்கள் வழி உழலவிடாது அவை

களை அகமுகப்படுத்தி இயக்கும் இனிமை நிலை என்றும் நிலையாயுளதாகிய இயற்கை போன்றது. இதனைச் சற்றுக் கூர்ந்து நோக்க, புறத்தே புலன்வழிச் செல்லும் மனம் இயற்கைக்கு மறுதலைப்பட்ட செயற்கையின்பாற்பட்டு அறியாமையால் இன்னாததைக் கொள்ளும். இக் கருத்தினை வலியுறுத்தும் இப் பாட்டினிலே இயல்பாய் பொருளிலக்கண அமைப்பு இனிமையின் ஓவியமாய் விளங்கிக் கிடத்தலை உற்று நோக்குங்கால், அஃது ஊற்றுப் பெருக்கினையுடைய அகம் புறமெனும் கல்வி முறையின் எழிலினையும் அதனைக் கற்றதினாலாய பயனையும், பெறலரியதான ஒண்மையினையும் எய்துவிக்கின்றமை உணரப்படும்.

காதலன் கருத்து வினாவிற்கு விடையாக வமைந்த இப் பாட்டினைக்கொண்டு பொற்கிழி பெற, தருமி சங்கத்துக்கு வந்துற்ற காலை, ஆங்குள்ள நக்கீரர், புறத்தொடு அகத்தினிமையினை இழையப் பயிலாது மயங்கி, குற்றம் காண விழைந்ததைப்பற்றிய திருவிளையாடற் புராணத்துக் கருத்தினைச் சற்றுக் காண்குவம். புறத்தறிவில் அகத்தினிமையினை ஆயும் நீர்மையிலாது, நக்கீரர் எனும் சங்கம் மருவிய சான்றோர், மறைபாடும் கலைப் புலமை நலமொடு ஆக்கப்பட்டிருக்கும் இப்பாவினை நுனித்தறியும் நன்மையினையும் மெய்ம்மையினையும் தேரு து, மலரின் சார்பாலன்றிக் கூந்தலுக்கு மணமின்மையின், பாட்டின் பொருளில் இழுக்குள்ளதென நவின்றார். பாட்டின் மதுரமாய உட்பொலிவினையும், ஓட்டமுள்ள கவியமுதினையும் காணாதும், ஒருமைப்பாட்டுணர்ச்சியால் காதல் வளர்க்கும் நினைப்பினையும் அறியாதும், பொருள் புதைத்த பாட்டிற்குக் கீரர் பொருட் குற்றம் கற்பித்தார். வாது புரிந்து மயங்கும் மனத்தராய கீரர், பண்பிற்றிரியா ஒவ்வொரு சொல்லும் பொருட்கரு நிரம்பி நிற்கும் அருமையினை அறிந்தார் இலர்.

நக்கீரர் நீரல கூறினும் அது அறியாமையின் பாற்பட்ட பயனில் கூற்றெனக் கொண்டு அவருடன் வாது புரிதல் சாலாதெனக் கருதி, அவரது குறை மதிக்கிரங்கி, இறையனார் தன் கண்கொண்டு பாட்டினைக் காணுமாறு, தன்னை ஆண்மினார்க்குத் தண்ணளி செய்யும் தன் கண்ணையும் காட்டியருளினார்.

> கற்றைவார் சடையான்! நெற்றிக்
> கண்ணினைச் சிறிதே காட்டப்
> பற்றுவான் இன்னும் அஞ்சான்!
> உம்பரார் பதிபோல் ஆகம்
> முற்றுநீர் கண்ணாலும் மொழிந்த
> நும்பாடல் குற்றம்
> குற்றமே என்றான் தன்பாலாகிய
> குற்றம் தேரான்.
>
> (திருவிளையாடற்புராணம்)

குறையினைக் காணுமிடத்தில் துன்பம் காணுவது இயல்பாதலின், அக் குறையினைப் போக்கச் சிவனார் அவ்வாறு செய்தனரென்க. பொருள்வளங் கெழுமப் பாடியுள்ள வனப்பினையும் இதன் மூலம் புலனாகாமற்போகவே, தெய்வ வொளியினைக் காணும் வீறுடைப் பேறு கிட்டாது, கீரர், இறைவனது சிற்பத்தைத் திருத்துவான் போன்று, குற்றம் குற்றமே யெனக் கலாம் விளைத்து தன்னெஞ்சினையே கோட்டமுறச் செய்து கொண்டார். மற்றும் இறைபேரருள் சுரப்ப, உய்யும் வழியினை யுணருமாறு, அலகில் சோதியான், இப்பாட்டு அமுதவூற்றொழுகும் கடவுண் மொழியெனச் சுட்ட, தன்படர் சடைமுடியினையும் காட்டாநின்றார். கூந்தலுக்கு இயற்கை மணமுள்ளதென்ற உண்மையினை அறியாதும், மறந்தரும் ஆணவத்தால் அந்த உண்மையினை வேண்டாதும் அஃறிணையுலகிலுழல்பவராய், மீண்டும் விதண்டாவாதம் செய்யும் அவரது பிடிவாதத்திற்கு மருந்து காணாதவாறு, அந்நோய்க்கு அவரே விருந்தாகும்படி, அளி சேரறவாழி அண்ணல் விட்டு விட்டார். எனவே, இப்பாட்டு, செம்பொருளைக் காண வேண்டுமென்னுங் கடமையுணர்ச்சியினை, உன்னும்படி செய்துள்ளதினான், பாட்டின் நுணுக்கத்தை மேலும் ஆய்ந்தறிதல் இன்றியமையாதது.

அன்பின் ஐந்திணையிலமைந்தடங்கும் மெய்யின்பத்தை அறிவுக் கருவியால் வருவித்துத் துய்க்கும் கருத்தினை உள்ளுறையாகக் கொண்டு தெள்ளுரையினை நாட்டுவது இப்பாட்டின் நல்லறிவுறூஉவாகும், இங்கு அகத்து நிகழும் அநுபவக் காதலுறவைப் புறத்தாக்கி அதனில் நிகழும் அருளொளியால் இருவினை யொப்பினையும், மலபரிபாகத்தையும் எழச்செய்து கவிதையினைத் தெய்வ மணமுடையதாக இயற்றப்பட்டுள்ளதையறிந்து இன்புறற்பாலது. மனமலர்வும் மகிழ்வும் உள்ள காதலர் வண்டினை விளித்து வேண்டுதல் வேண்டாமையிலாது நடுநிலை நின்று உண்மையைக் கண்டதைக் கூறுவாயென்ற அழகில் இப்பாட்டு கலையின்பச் சுவை குலுங்குமாறு அமைக்கப்பட்டுள்ளது. இதன்கண் வழங்கப்பட்டுள்ள சொன்மலரும் பொருண் மலரும், மகிழ்ச்சியினையூட்டும் திறத்தினவாதலின், சொன் மலரை உற்று நோக்கி ஒன்ற, பொருண் மலர்தானே சிறப்பியல்புடன் விளங்குவது வெள்ளிடைமலை ஆகும். பெண்மையைக் குறிக்கும் மலரை வண்டு நாடுதலையொப்ப, ஈண்டுப் பெண்மையைக் காதல் மலிந்த நெஞ்சமொடு ஆண்மகன் நயந்து நிற்கும் காட்சியை ஒப்புமை கோடல் நெறியில், சுவை நோக்கொடு ஒளிர வைத்தது வியத்தற்பாலது.

பாட்டினில் குறிக்கப்பட்டுள்ள காதலர் யாரெனில் அவர் வேண்டுதல் வேண்டாமையிலாத துறவுக் கடவுளே. அத் தெய்வக் கவிஞர் உயரிய மக்கட் பிறவியுற்றோர்க்கு வேண்டுதல் வேண்டாமையின்றி உலகில் வாழும் நிலையினைக் காட்டி அன்னோர் தம் வாழ்வை தெய்வத் தேன் மலராக ஆக்கிக் கொள்ள எங்ஙனம் இடும்பை அருகி இன்பம் பெருகி நிற்கும் பெற்றியினைப் பெற இயலும் என்பதைத் தெள்ளத்தெளிய விளக்கி வீடென்னும் பொருண்மையைச் சுட்டியுள்ளார். தும்பியோ கோவினியல்பு வாய்ந்துள்ளது. அது தேனுடைய பன்னிறப் பூக்கள் தோறும் இன்பமிருக்கிறதென்று சென்று மருண்ட வண்டல்ல. அது தினைத்தனையுள்ளதோர் நன்னிற மலரில் தேனுண்ணாது என்றும் இளிமை தெவிட்டாது நிலைபெறுயிருக்கும் உள்ள மலரில், இறக்காத ஆனந்தத் தேனை யுண்ணும் தும்பி. மற்றும் இது அவாவின்மை, சினமின்மை, அழுக்காறின்மை, மருளின்மை, செருக்கின்மை, அகப் பகையின்மை எனும் விழுப்பமாய ஒழுக்கத்து நெறியின் அறுவகைப் பண்புகளைக் கால்களாகக் கொண்டு, இருவினை யொப்பென இருசிறகொடு, ஒருகால் மலர்தலும் ஒருகால் புலர்தலுமுடைய பருவ மலர் போலில்லாது, ஒரு நாட்போல் என்றும் திகழும் மலரின்கண் பெருமிதத்துடனே இன்பம் துய்த்து விம்மிதமுறும்.

வியக்கத் தக்க வண்ணம் வீடு பேற்றினை அளித்து உயிர்களை இடையறாது இன்பத்துளாழ்த்தும் மலர்தான் யாதோவெனின், அது தான் இதயக் கமலத்தூறும் தேன்மலர்; ஞான உணர்வுடன் அகமுக மூலம், இறையுண்மையினைத் தெளிவுபட நுண்ணிய உள்ளத்தே துலங்குமாறு இன்புறுத்தும் உறு கருவி; மலமறுக்கும் விரிமலரில் தெய்வ மணம் கமழும்படி பூவினிற் பொருந்திய நிறம் போன்ற அறிவும், அதனுள் பொதிந்த தேன்போல விழைவும் அதன்கட் தோன்றும் மணம் போலச் செயலும் இறைவனையுணர்த்தற்பொருட்டு பிரிவற வாய்ந்துள்ளன. இறைபாற்படும் அறிவாதி மூன்றும், வீடு பேற்று முறைநெறியினை நனிவிளக்கும் கருவியாக அமைந்துள்ளது காண்க. இதயக் கமலத்தூறும் செம்பொருளைக் காண்பார் உள்ளத்தே உண்மை அரும்பும்படியும், வாய்மை முகிழ்க்கும்படியும், மெய்ம்மை மலரும்படியும் ஆசிரியர் ஆக்கிய திறன் இறும்பூதெய்துவிக்கும். இத்தகைய அரும்பெரும் குறிப்புகள் யாவும் இப் பாட்டினில் கிடந்து அறிதுயில் செய்கின்றதையும் உணர்ந்து பாராட்டி மகிழற்பாலது.

அறிவு, இச்சை, செயல் ஆகிய பண்புகளின் சிறப்பியல்புகள், கொங்குதேர் வாழ்வுக்கு உதவி, அவைகளால் உயிர் அளியுந் தெறலும் ஆற்றலும் கைவரப்பெற்று, வீடு பேறுறுதலுக்குச் சாதனமாயிருப்பதை, அள

வைகள் வழி இப் பாட்டினில் செவ்விதாய்த் தேறி விளக்கப்பட்டது உணரப்படல்வேண்டும். காதலர் புலன்களின் துணைகொண்டு

பயிலியது கெழீஇய நட்பின் மயிலியல்
செறி எயிற்று அரிவை

எனப்படுதலால், ஒண் தொடிக் கண்ணே, கண்டு, கேட்டு, உண்டு உயிர்த்து உற்று நேரே வகையறிதல் **காட்சியளவினைப்** புலப்படுத்நிற்று. கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து உற்று எனப்படும் அநுபவங்களுக்கு உள்ளாக அடங்கியிருப்பது ஆனந்தமாகும். இவைகளுக்கப்பால் எட்டிநின்று, காணாததும், கேளாததும், சுவைக்காததும் தொடாததும், நுகராததுமாயிருப்பது பேரானந்தமெனப்படும். அதுவே இறை நிலையாகும். ஈண்டு, பல்வரிசை புலப்பட, மென்மைப் பண்புடன் தலைவி இளநகையரும்பி நகையாடுவதைக் கேண்மையுணர்ச்சியின் சாயலாகப் பொருட் பொலிவுடன் இன்பம் பயக்கும் சொற்களால் எடுத்துக் கிளக்குமியலினை உய்த்துணர்க. காதலர் பண்பழகோடு, நறுமணக் கூந்தற் கற்பினளை மருங்கணைந்து அவளது கூந்தலை அற்புதமாகப் புகழுமுகத்தால், செல்புகழை அழியாது தன்மாட்டு நிலைபெறச் செய்துவிடுவது குறிக்கொள்ளுதல் வேண்டும். மற்றும் தீண்டலால் உடலுயிர் வழி பிறக்கும் காதலின்பத்தைப் பாட்டினிலே நிலையாக நிற்கச் செய்து அதனைப் படித்துக் கேட்டலால் வரும் செவிக்கு இன்பத்தைத் தந்து, அதனுன் புலன்களிலும் அகக் கருவி கரணங்களிலும் அமிழ்தூறி, துன்பம் கலவாத தூய இன்பம் நிகழும் இயல்புகளை முறைதுறையோடு விளங்க வைத்தது, சொல்லால் சொல்லும் தகையதன்றுதலின், அநுபவங்கொண்டு அறிதற்பாலது.

இயற்கை மணம் மலரில் காட்சிப்பட்டதை, வரம்பிகந்த காதலுணர்வால் கூந்தலில் கண்டாலொப்ப உளதாயிற்றெனக் காதலர் அநுமித்தறிதல், **கருதலளவையின்** பாற்பட்டதாகும்.

பொலிவுடைய கூந்தலின் நறுநாற்றத்தாலே வண்டுகள் பூங்குழலைச் சென்றடையும் செய்தி

1. 'சுரும்பிவர் குழலி'
   (திருக்கோவை 321)
   (வண்டுகள் பறக்கப்பட்ட கூந்தலினையுடையாள்)
2. 'வண்டினம் மேவுங் குழலாள்'
   (ஷை 302)
   (வண்டுச் சாதிகள் பொருந்தின கூந்தலையுடையாள்)

என்ற குறிப்புகளினுல் செவ்விதில் விளங்கும். அரிவையின் கார் குழல், இயற்கை மணம் பெற்றுள்ளதை

1. குரவணையுங் குழல் (ஷை 360)
   **(குரவின் மணத்தையொத்த கூந்தல்)**
2. முகை தணித் தற்கரிதாம்புரி தாழ்தரு மொய் குழலே (ஷை 314)
   **('செவ்விய அரும்புகளாலும் தாழ்வு படுத்தவொண்ணுத நாற்றத்தை உடைத்தாய நெறித்த நீண்ட கூந்தலினை யுடையாய்')**

என்ற சான்றுகளான் துணிபுபட அறியப்பட்ட மெய்ம்மையாதலான், **ஆகம அளவை** வழி கூந்தலுக்கு இயற்கை மணமுளதாய உண்மையினை நம்பிக்கையை யொட்டி அறிந்து உணர்ந்து கோடல் வேண்டும். 'அரிவை கூந்தலின் நறியவும் உளவோ நீ யறியும் பூவே' என்றதில், தலைவியின் விரை கமழ் கூந்தல், பூவினையொக்கும் என உவமை கூறி உண்மையினை யுணர்த்த, அதனை உணர்தல் வழி, அது உவமைக்குரிய வழக்குண்மையினைக் காட்டுதலால், இதனை **உவமான அளவையெனல்** வெள்ளிடை விலங்கல். மற்றும் வழக்குண்மையினை நாட்டி அறிவுறுத்தலின், இஃது ஐயம் நீக்கும் வழங்கற்பாடென்னும் ஐதிக அளவையுமாகும். மலரை விட கூந்தலுக்கு நறுமணம் இயற்கையாய் வாய்ந்துள்ளதென்றும், அதைக் காட்டிலும் மணத்தில் உயர்ந்தது வேறில்லையென

ஒழிந்ததன் அபாவம் இப்பாட்டின்கண் சுட்டறியப் படுதலின் இஃது அபாவ அளவையாதல், கூர்ந்து ஆய்ந்து உன்னினுல் உண்மை விளங்கும்

வையத்தே வானத்தை வரவழைக்கும் இப்பாட்டு, வாழ்வாங்கு வாழ, கொங்கு தேர்ந்து நுகரும் உளவுகளைக் கூறி, மக்களை கொங்குதேர் வாழ்க்கையினையுடையராக ஆக்கும் பெற்றிமையினையுமுடையது. இத்தகைய வாழ்க்கையினை மிளிரவைப்பது அறமாதலின், உயிர்போன்ற அறப்பொறி, அறிவு இச்சை செயல்களில் கலந்து இயங்குதல் வேண்டும். அறிவாதி மூன்று பண்புகளில், அறிவும் வேட்கையும், அகத்தைச் சார்ந்தன. சொல், அகத்தையும் புறத்தையும் பற்றியது. அகமும் புறமும் ஒன்ற, இடையரு ஒழுக்கமும் வாய்மை அறமும் இன்றியமையாது வேண்டப்படுபவன ‡ வானுறையுந்தெய்வத்தன்மை, வையகத்தே வயங்க, ஒழுக்கத்தினையும் வாய்மை அறத்தினையும் மக்கள் கடைப்பிடித்து பரிந்தோம்பிக் காக்க வேண்டி, இப்பாட்டில் விருப்பு வெறுப்பின்றி மனத்தோடு தொடர்புபடகண்டது மொழியுமாறு ஆசிரியர் விரும்பிவைக்கும் கருத்து வகை பெரிதறிந்து போற்றற்குரியது.

'கொங்கு தேர் வாழ்க்கை' எனும் பாடல் அளவொத்தயாப்பமைதி கொண்டு இனிமை பயக்கும் சுருதிப் பான்மையினைப் பெற்றுள்ளது. ஆழ்ந்தகன்று நுண்ணியதாய உளநூல் கருத்துக்கள் வாய்க்கப் பெற்றுக் காதலர் உளத்தில் ததும்பும் அழகிய எண்ணத்தையும் உளத் தத்துவத்தையும், இன்புறும் வண்ணம், உள்ளமும் வாழ்வும் இறைவனது விளைநிலமென எடுத்துரைக்கும் வன்மையுடையது. கருத்தனுபவமும் உணர்ச்சியும் உள்ளொளியும், இப்பாட்டினிலே ஒலிநயத்தால் கவிந்து நின்று கற்பனை வளத்திற்குத் தூண்டுகோலாக அமைந்துள்ளன. பொருளுக்கேற்ற செவ்விய மதுரமும் மணமும் சுவையுமுடையத்தக்க செஞ்சாற்களை அகவுணர்வுக்கேற்பப் புறத்தே ஆற்றலுடன் அமைந்து பொருந்துமாறு வழங்கப்பட்டதை நோக்குக. மனப்பான்மையினை உருவாக்கும் பூஞ்சோலை. வண்டு முதலாயவற்றைப் பின்னணியாகக் கொண்டு கவர்ச்சிபட, இப்பாட்டினிலே படைக்கப்பட்டதிறன் உன்னற்பாலது. அக் கவர்ச்சி, அறிவின் காட்சிக்கு ஒளியளித்து பாட்டினை நவில்தொறுமுளதாய அனுபவச் சுவை மலர்ச்சியினைப் பெருக்கும் விழுப்பம் வாய்ந்தது.

பாட்டுடைத் தலைவன் தன் சிந்தையில் உவகைக் கொண்டு, பூக்களுக்கு ஏற்றத்தினை கற்பிக்காதவாறு சாற்றும் 'காமம் செப்பாது கண்டது மொழிமோ' எனவும் 'நறியவும் உளவோ நீயறியும் பூவே' என்ற இன்னுரைகள், கவிதையின் ஆத்மாவினைத் தெளிவு பெறத்தேக்கி அருமையுற வைத்திருக்கிற நயம் ஆழநினைந்து மகிழற்பாற்று. ஈண்டு இதயத்திற்கு ஆறுதலளிக்கும் காதலுக்குரிய இயற்கையின் மெல்லிய மதுரப்பேச்சு, மோனப்பொலிவில் முடிந்துள்ளது கருதற்கினியது. இதன் வழி தலைவன் தன் தலைவியரது புகழினையும் நலத்தினையும் அளியினை விளிப்பது மூலம், உள்ளுணர்வோடு பாராட்டி, தலைவி களிப்பெய்துமாறு செய்து விடுகிற நுணுக்கத்தின் நெடுமைப் பொருளுண்மை இறைப்பற்றுடையார் கருத்துக்குத் துணைச் செல்வதாகும். 'காமஞ் செப்பாது கண்டது மொழிதல்' செம்புலத்தையும் செம்மனத்தையும் வளங்கச்செய்யும்: அது நினைவிற்கு இனிமையும்; சொல்லுக்கு அமைவினையும், செயலுக்குத்திறமையும் அளித்து பொய்யாது ஒழுகும் அருப்புற அறத்தை நிலைநாட்டும். கண்டதை அறிவானின்றி உள்ளத்தாற் மொழிதலை இங்கு வற்புறுத்தப்படுதலான், வாய்மையொழுக்கத்துச் செயற்கோளே, கொங்கு தேர் வாழ்க்கைக்குரிய குறிக்கோளென அறியப்படுதலாயிற்று. மற்றும்' வாய்மையின்நல்ல பிற இல்லை' என வள்ளுவர் வாக்கினை ஈண்டு நோக்க, மனத்தொடு கண்டது மொழியும் ஒழுக்க நெறி, நாளடைவில் இறைநெறியாய் வலியுறுமென்பது பாட்டுடைஆசிரியரின் உள்ளக்கிடக்கை.

காதலர் கண்ட காட்சியினையும், கர வற்ற காதலுறவின் இன்பத்தையும், நுகர்ந்த அனுபவத்தையும் இப்பாட்டு, உள்ளத்து உணர்ச்சியும் சொற்றிறமும் கொண்டு, நமக் களிப்பதில் வாகைசூடிக் கொள்ளுகின்றது. சொந்த அனுபவ உணர்ச்சியினை வெளிப் படுத்துமாறு இக்கவிதைப் பாட்டில் எடுத் தாளப்படும் சொற்கள், நயனும் பயனும் ஈனும் பண்பினின்றும் தலைப்பிரியாது, ஒலி யின் வழி நல்லுணர்ச்சியினை, இதயத்தைக் கனிவிக்கும் தெய்வக் காதலுணர்ச்சியாக மாறு மாறு கிளர்ச்சிபடச் செய்கின்றன. இப் பாட்டு ஆழ்ந்த கருத்துக்களைக் கொண்டு ஞானத்தில் தோய்ந்து தெய்வ அழகை வளர்த்து, வாழ்வைத் தெய்வத்தேன்மல ராக்கித்தூய கடவுளுணர்வைத் தூண்டவல் லது; ஆத்ம இரகசியக் கருத்தைச் சொல்லோ வியமாகயாக்கி நம்மை வயப்படுத்தும் பான் மையுடைத்து; சொல்லும்தகைய தன்ருகிய காதலின்பத்தை உளத்தில் தேங்குமாறு திகழ வைக்கும் பெற்றிமை வாய்ந்தது: உள்ளொரு மையால் அனுபவிக்க இயலும் மெய்ப்பொரு ளின் தன்மையினைத் தன்னகத்தேயுடையது இன்பமயமாயநாத விருந்தினையளித்து ஆன்மா விற்கும் அந்தக் கரணத்திற்கும் சாந்தத்தை அள்ளிக்கொட்டும் அருட்கவிதைக் கரும்பாக இனிக்கிறது. எனவே காதலன் பின் இனிமை தேங்கப்பெற்ற நிறை ஏரியென இப்பாட்டு காட்சியளிப்பதால் ஏரிநிறைந்தனைய செல் வன் தென்றமிழும் ஆயிழைகைக் கண்டறிந் தின்புறுதல் நம் கடமையாகும். வாழ்க்கை ஓய்விலா வினைக் கூடமாதலின், கடமையுணர் வால் உன்னும் அளவிற்கு வாழும் மக்களு யிர்க்குரிய கொங்குதேர் வாழ்க்கையி னுண்மை ஒருவாறு புலனுதல் கண்கூடு. எனவே, கொங்கு தேர் வாழ்க்கை புரிவ தெல்லாம் காதல் ஒழுக்கத்தை உயிரினுஞ் சிறந்ததாகக்கருதி, வீடென்னும் பேற்றினை யெய்துவதற் கில்லாது பிறிதில்லையென்பது தேற்றம்.



# திருமணக் காட்சிகள்

புலவர் கி. கோதண்டபாணி, எம். ஏ.,
புட்பம் கல்லூரி, பூண்டி.

இருமனம் ஒன்றிய திருமணக் காட்சிகள் பலவற்றை நாம் காண்பதற்கு முன்னே பண்டைத்திருமண மரபு என்னென்ன என்பதனை வரலாற்று அடிப்படையிலும், இலக்கிய அடிப்படையிலும் ஆய்தல் ஏற்புடைத்து. தமிழர்கள் தம் வாழ்வில் மேற்கொள்ளும் திருமண நிகழ்ச்சியைக் கேலிக் கூத்தாக எண்ணி ஏற்றுக் கொள்ளவில்லை. 'ஆயிரங் காலத்துப் பயிர்' என்று அமைதியுடன் எண்ணி ஆற்றிவந்த ஓர் அரிய செயல். தலைவனும், தலைவியும் ஒருவரையொருவர் கண்டு உரையாடி உளமொத்த பின்னரே கற்பின் வழி மணந்து ஒழுகிவந்த வாழ்க்கையினை நம்மிலக்கியங்கள் விளங்க உரைக்கின்றன. மங்கல வாழ்த்தென்றும், மன்றல் என்றும் மணம் என்றும் பெயரிட்டழைப்பது ஒன்றாலேயே எத்துணை உயர்வும், பெருமையும் அந்நிகழ்ச்சிக்கு அளித்துள்ளனர் என அறியலாம். பலரும் அறியும் மணம் ஆகிய மன்றல் பலர் உள்ளத்திலும் உவகையைத் தோற்றி அவ்விருவரும் மேற்கொள்ளும் இல்லறத்திற்கு வாழ்த்தாய் அமைதல் வேண்டும் என விழைந்தனர். அவ்வாறே மணவிழாவில் வாழ்த்தல் முறையினை மேற்கொண்டனர், "தமிழர் திருமணத்தில் தீ வளர்த்தல் இல்லை. மணமக்கள் தீ வலம் வருதலில்லை. மண விழாவில் தட்சிணை பெறப் புரோகிதர் இல்லை. இத்தகைய திருமண முறையே தமிழர் மேற்கொண்ட திருமண முறை என்று வரலாற்றாசிரியர் திரு. பீ. டி. சீனிவாச ஐயங்கார் தமிழர் வரலாறு என்ற நூலில் கூறும் திறம் குறிப்பிடத் தக்கது. சங்க காலம் முதல் இன்றைய நாள் வரை திருமண நிகழ்ச்சியை வரையறுத்துக் காண்போம்.

தமிழர் திருமண முறையைப் பற்றிச் சங்க நூலாகிய அகநானூற்றில் இரண்டு பாடல்கள் விளங்க உரைக்கின்றன. பழங்காலத் திருமணம் "பிறப்பே, குடிமை, ஆண்மை ஆண்டோடு உருவு நிறுத்தகாமவாயில், நிறையே அருளே உணர்வொடு திருவெனக்" கூறப்பட்ட பத்துப் பண்புகளாலும் ஒத்த தலைவனும், தலைவியும் தம்முள் எதிர்ப்பட்டுச் செம்புலப் பெய்நீர் போல் அன்பால் ஒன்றிக் களவின் வழி ஒழுகிப் பின்னர்க் கற்பில் மலர்வதேயாகும். மணவிழா தொடங்குவதற்கு முன்னரே உழுந்து பெய்த உணவை விருந்தினர் உண்ண அளிக்கின்றனர். கால்பல பரப்பி அமைத்த காவணம் குளிர்பூங்காவைப்போல் தோற்றமளிக்கிறது. பந்தரின் கீழ்ப் புது மணல் பரப்பி நந்தா விளக்கேற்றி மாலை நாற்றி இருளகன்ற வைகறைப் போதில் மணவிழா அமைக்கின்றனர். உரோகிணி நாளில் வளர்பிறைப் பருவத்தில் மணத்தினுக்கு நாளைக் குறிக்கின்றனர். முதுமையான பெண்கள் பலர் குழுமி நிறை குடந் தாங்கியவராய் முன்னும் பின்னும் முறையே யளிக்க, அக்குடங்களை வாழ்வரசியர் நால்வர் வாங்கி நெல்லும் மலரும் தூவி நீராட்டி, "யாவரும் விரும்புமாறு நின் கணவனோடு கூடி வாழ்க!" என வாழ்த்திப் பின் மணம்

நிகழ்த்துவர். வதுவை முடிந்தபின் 'பேரிற் கிழத்தியாக' என வாழ்த்தொலி யெழுப்பு வர். இது அகநானூறு கூறும் திருமண நிகழ்ச்சி. "உழுந்து தலைப்பெய்த கொழுங் களி மிதவை" என்ற அகப்பாடல் இதனை வலியுறுத்துகின்றது. நெடுந்தொகைப் பாடல் மற்றொன்றும் இதே கருத்தை உரைப்பதை ஆராய்வோம். ஊனும், நெய் யும் பெய்த சோற்றினை வந்தோர்க்கு வாரி வழங்கி யளித்து விருந்தாற்றி விடியற் காலத்தே வானூர் மதியம் சகடணையும் உரோ கிணி நாளில் மங்கல முழவம் ஒலிக்க வதுவை நிகழும். அவ்வமயம் மணல் பரப்பிய பந்தரில் மகளிர் ஒருங்கு கூடி வாழ்த்துரை வழங்குவர். இது சங்க இலக் கியம் கூறும் திருமண நிகழ்ச்சி. இதில் எத்தகைய சடங்கு முறைகளும், பிறவும் இடம்பெறவில்லை.

மேற்குறிப்பிட்ட திருமணக் குறிப்புக் களை யன்றிப் பிற விளக்கமான திருமண முறைகள் எவ்விலக்கியத்தும் இடம் பெற வில்லை. சங்க காலத்திற்குச் சில நூற்றாண்டு கட்குப்பின் எழுந்த சிலப்பதிகார மணக் காட்சியில் நிலைமை முற்றிலும் மாறுபட்டு விட்டது. முன் நிகழ்ந்த நிகழ்ச்சிக்கு முற்றி லும் மாறான நிகழ்ச்சி காலச் சுழலின் வேகத் தால் கடிது ஏற்பட்டது. பன்னிராண்டுப் பருவத்தாளாய கண்ணகியைப் பதினாறு ஆட்டைப் பருவத்தானாகிய கோவலனுக்கு மணம் முடிக்க இருமுது குரவரும் ஒரு முகமாக இணங்கினர். இருவரும் குன்றத் தனைய நிதியைப் பெற்றவர். இவ்வாறு மணம் முடிக்க இணங்கியபின் யானை யெருத்தத்து அணியிழையார் மேலிரீஇ, மாநகர்க்கு மணம் அறிவித்தனர். புது மணல் பரப்பி, வயிரத் தூண்கள் நாற்றி, நீலவிதானம் அமைத்து நித்திலம் இழைக்கப்பட்ட அழகிய பந்தரின் கீழ் உரோகிணி நாளில் அருந்ததியன்ன அரும்பெறற் கற்பினாளை அங்கி சான்றாக அரு மறையோர் வழிகாட்டத் திருமணம் ஏற் றான் கோவலன். அங்கு மகளிர் பலர் மலரேந்தியும், மணப்பொருள் ஏந்தியும் குழுமினர்; சிலர் உரை நிகழ்த்தியும் பலர் பண் ணிசைத்தும் கூடினர். சாந்தும், புகையும் ஏந்தியோராய்ச் சிலர் சூழ்ந்தனர். வண்ண மும் சுண்ணமும் வான்முளைப் பாலிகையும் தாங்கியவராய்ப் பலர்குழுமி மணமகளை நோக்கி 'நீகாதலனைப் பிரியாது அன்புக் கரங் களை நெகிழ்க்காது தீமை நீங்கி வாழ்க' என வாழ்த்துகின்றனர். இதுவே சிலம்பு கூறும் திருமண நிகழ்ச்சியாகும். சிலப்பதிகார காலத்தில் பழம்முறை நீங்கித் தமிழர் திரு மணத்தில் அந்தணர் இடம் பெறுகின்றனர். தீ வளர்த்தலும், அத்தீயை வலம் வருதலும் ஆகிய முறைகள் இடம் பெற்ற சூழ்நிலை ஏற்பட்டுவிட்டது. ஆனால் இந்நிலையில் தமிழர் திருமண முறை முற்றிலும் மாறி விட்டது. முன் களவின் வழியொழுகிக் கற்பில் வாழ்ந்த மக்கள் களவொழுக்கத் தில் அன்பால் ஒன்றி ஒருவரையொருவர் பின் கைவிடவும் நேர்ந்துழி கற்புத் திரு மணம் கட்டாயம் வேண்டியதாயிற்று. "பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர் ஐயர் யாத்தனர் கரணம் என்ப" என்ற தொல்காப்பிய நூற்பாவால் இச்செய்தி யறியப்படுகின்றது. தொல்காப்பிய நூற்பா உணர்த்தும் நெறி மாறிப் புதிய வேற்று நெறி உருவாகியது. அப்போதியற்றப்பட்ட காவிய மாகிய சிலம்பு அந்நெறியைப் பின் பற்றிய திருமணத்தை அமைத்து விட்டது. இந் நிலையினை "மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத் தீ வலஞ் செய்து காண்பார்கள் நோன்பென்னை" என்று விளக்குகின்றார். மேலும் திருமண வாழ்த்து "காதலற் பிரியா மல் கவவுக்கை நெகிழாமல் தீதறுகென ஏத்திச் சின்மலர் கொடு தூவி, அங்கண் உலகின் அருந்ததியன்னாளை, மங்கல நல்ல மளி ஏற்றினார்" என முகிழ்க்கின்றது.

அடுத்து ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்றாகிய சிந்தாமணி கூறும் சச்சந்தன்- விசயை திருமண விழாவையும், நிகழ்ந்த முறையினையும் நோக்குவோம். சச்சந்தன் உள்ளக் கருத்தினை யோர்ந்த அமைச்சர்கள் விசயை ஆக்கம் பெற வேண்டி அவனை மன்னனோடு சேர்த்தனர். பொற்கொடி போன்ற விசயையும், பொற்கோடு போன்ற

சச்சந்தனும் அனங்கனின் அம்புகட் கிலக்காகி இருவரும் ஒன்றுனர். இந்நிலை சின மிக்க சிவனும். சிந்தைமிக்க செல்வியும் (உமை) சேர்ந்தது போலிருந்தது. அன்பு ஒன்றிய செல்வனும், செல்வியும் மணந்த போழ்து விசயை அமிழ்தமாக, மன்னன் பரிதியாக ஆகி விரைவில் பருகிவிட்டான். விசயையின் அன்பில் தோய்ந்த சச்சந்தன் களிறு போன்றும், விசயை கரும்பு போன்றும் ஆயினர். மேலும் அணங்கு தாமரை மலரைப் போன்றும், வீரன் வண்டைப் போலவும் ஒன்றிவிட்டனர். விசயை முறையாக முற்றிய கனி போலக் காதலால் கனிய, அக்கனியை உண்ணும் பறவையை யொத்தான் பாராள் வேந்தன். இத்தகு எழில் நலஞ்சான்ற இருவரையும் ஏற்ற கோலஞ் செய்து வதுவை புணர்த்தும் நாளை வையகத்திற் குணர்த்தினர். அங்கி வளர்த்து ஆகுதியோம்பினர். மங்கல முரசு எங்கணும் ஒலித்தது.

கம்பன் காவியம் கூறும் காதல் மணம் தமிழரது முன்னாள் திருமணத்தை நன்கு நினைவூட்டி நிற்கின்றது. இராமனும், சீதையும் ஒருவரையொருவர் முன்னரே கண்டு காதலுணர்வு கொண்டனர் எனத் தமிழ் முறை மாறாது முன்னோர் நூலொடு முரணிக் கவிதை செய்தார் கம்பர். அண்ணல் நோக்கும் அணங்கின் நோக்கும் வாய்ச் சொல்லின் துணை யின்றியே ஒன்றிவிட்டன. இருவர் கண்களும் பிணைந்து இணைந்தமையால் இருவர் உள்ளமும் ஒன்றையொன்று பற்றி ஈர்த்தன. ஆகையால் இருவரும் மாறிமாறி மற்றவர் உள்ளத்தில் இடம் பெற்றனர். பின்னர்க் கருநிறத் திருமேனியைக் கண்டு அவனது முகம் தன் அகத்தில் நிலைக்குமாறு ஆழ்ந்த பேரன்பு கொண்டாள். பின்னர் வில்லை எடுத்து நிறுத்தி ஒடித்த வீரச் செய்தியினைக் கேள்வியுற்று ஒடித்த வீரன் தன்னுள்ளங் கவர்ந்த வீரன்தானு எனக்காண விழைந்தாள். தன்உள்ளத்தே நீங்காதிருக்கும் அவனுருத்தானே இவ்வுருவம் என வளையல் திருத்துவாளைப் போன்று பார்த்தும் பாராததுமாகக் கடைக் கண்ணால் நோக்கினாள்.

''ஐயனோ அகத்தும் வடிவேயல புறத்தும்
கைவளை திருத்துபு கடைக்கணின்
உணர்ந்தாள்''

முன்னர் நோக்கிய வீரனே என அறிந்தவுடன் கண் ஒளியாகிய ஆறுனது கண்ணாகிய பெரிய கடலில் கலக்க, கடலில் தோன்றிய அமுதனைத்தையும் ஒருங்கு உண்டவள் போல் உடல் பூரித்திருந்தாள். திருமண மண்டபத்தில் நுழைந்து மனையில் ஏறி வெற்றி வீரனாகிய இராமனும், அவன் துணையாகிய அன்னமென்னடைச் சீதையும் அமர்ந்தனர். இக்காட்சி போகமும், யோகமும் கூடியிருந்தது போன்றிருந்தது. உடனே மிதிலை மன்னன் இராமனின் முன்னே தோன்றிக் குளிர்ந்த நீரிலேயுள்ள தாமரைச் செல்வியாகிய திருமகளுடன் உடன் உறையும் திருமாலைப் போல 'நீ என் சிறந்த மகளாகிய சீதையோடு பொலிந்து வாழ்க' என்று அவனது தாமரையன்ன தடங் கைகளில் சீதையைப் பிடித்துக்கொடுத்தான். இதனைக் கரம்பிடித்தல் எனவும் ''பாணிக் கிரகணம்'' எனவும் சொல்லுதல் மரபு. இம்மரபு புகுந்த காலமாகையால் இம்மணம் கைப்பிடித்தல் அடிப்படையில் நிகழ்ந்தது.

''கோமகன் முன் சனகன் குளிர் நன்னீர்ப்
பூமகளும் பொருளும் என நீ என்
மாமகள் தன்னொடு மன்னுதி என்று
தாமரை யன்ன தடக்கையின் ஈந்தான்''

இவ்வாறு மன்றல் நிகழ்ந்தபோது அந்தணர் ஆசியொலியும் அணங்குகளின் இசையொலியும், மணிமுடி மன்னர் வணங்கி எழும் பேரொலியும், வானவரின் வாழ்த்தொலியும் சங்கத்தின் இடி யொலியும் எங்கும் நிறைந்தன.

திருமுறை வரிசையுள் சிறந்ததான பன்னிரண்டாம் திருமுறையாம் திருத்தொண்டர் புராணம் கூறும் திருமணம் காண்போம். இதில் புனிதவதியார்—பரமதத்தன் புகழ் மணம் சிறப்பாகச் சிந்திப்பதற்குரியது. மணம் நிகழ்த்தும் நாள் வந்தத

தும் மன்றலுக்குரிய யாவும் முடித்துப் பரம தத்தனுக்கு மணமகன் கோலம் புனைவித்து, இயங்கள் ஒலிக்கக் காரைக்காலுக்கு நாகையிலிருந்து மணமகன் வீட்டார் புறப்பட்டனர். அறமே இயற்றும் ஆன்றோரைய பெருவணிகன் தனதத்தனின் அணிமாடம் அடைந்தனர். மணநூல் விதிப்படி மணச் செயல் யாவும் முடிந்த பின்னர் மயில் போன்ற சாயலுடைய புனிதவதியை மாலை யணிந்த காளை போன்ற பரமதத்தனுக்குக் களிக்கும் சுற்றம் குழுமி யிருக்கத் திருமணம் முடித்தனர், இதனை மிக அழகாக

> "அளிமிடைத்தார்த் தனதத்தன் அணி
> மாடத்துள் புகுந்து
> தெளிதருநூல் விதிவழியே செயல்
> முறைமை செய்தமைத்து
> தளிர் அடிமெல் நகை மயிலைத்தாது
> அவிழ்தார் காளைக்குக்
> களிமகிழ் சுற்றம் போற்றக் கலியாணம்
> செய்தார்கள் "

என விளங்க உரைக்கின்றார். மங்கல மண விழா முடிந்தபின்னர்த் தன் குடிக்குத் தனி மகளாய் விளங்கிய புனிதவதியைத் தனதத்தன் நாகைக்கனுப்பாது தன் பார்வையிலே என்றும் இருக்க அணிமாடம் அமைத்தளித்தான். மகளைக் கொடுத்ததுடன் நில்லாது வரம்பில்லாப் பெரும் பொருளையும் தன் மகளும், மருகனும் வாழ அளித்தான். பெற்ற நிதி பதியின் மகனாகிய பரமதத்தன் மனையறங் கொண்டு மனைவளம் பெருக்க உளங்கொண்டான். அம்மையாரும் அரனடி மறவாச் சிந்தையராய் அறத்தைப் போற்றி மனையறம் ஆற்றினர். இவர்கள் எதிர்கால வாழ்வு சிறப்புறுது இழிநிலை யுற்றது. இது முன்னுணர்ந்த கவிஞர் பெருமானாகிய சேக்கிழார் இப்பொருந்தா மணத்தை "நகை மயிலைத்தாது அவிழ்தார் காளைக்கு மணமுடித்தனர்" என்ற வரியால் விளக்கினார்.

பெரிய புராணம் கூறும் சுந்தரர்-சங்கிலியார் மணத்தைக் காதல் மணமாகவே கருத இடமுண்டு. சிவனுக்கு ஆளாகிய சுந்தரர் தன் உள்ளத்தினை மலர்ப்பிணையலோடு ஒன்றாய்ச் சேர்த்துப் பிணித்த சுந்தரியாம் சங்கிலியாரை அடைய இறைவனை அணுகுகின்றார். உமையை ஒரு பக்கத்தே வைத்ததுடனில்லாமல் கங்கையினை நீள் முடியிலேயும் கரந்து வைக்கும் காதலனே மாலை தொடுக்கும் இவ்வணங்கை எனக்கீந்து என் மாலகற்றும் என வேண்டி நின்றார். 'மங்கை' யொரு பால் மகிழ்ந்ததுவும் அன்றி மணி நீள் முடியின்கண் கங்கை தன்னைக் கரந்தருளும் காதல் உடையீர் !" என விளித்துத் திங்கள் வதனச் சங்கிலியைத் தந்து என் வருத்தம் தீரும் என வேண்டுகின்றார். அவ்வேண்டு தலுக்கு இணங்கிய விண்ணவன் சுந்தரர் பால் சென்று "இவ்வுலகில் யாரும், எய்த வியலாததவக் கொம்பை நுமக்குத் தருகின்றேன். நும் கவலை யொழிக" எனக் கூறினார். பின்னர்ச் சங்கிலியின் பால் சென்று "என் அடியான் நினைவிழைந்தான். வெண்ணெய் நல்லூரான். என் பரம்பரை அடியான், மேம்பட்ட தவச் செல்வன். அவனை நீ மணத்தால் அணைவாய்" எனக் கூறினர். இவ்விருவரிடமும் மட்டும் கூறினால் இந்நல் மணம் எங்ஙனம் முடிவுறும்? ஆகவின் இன்னோர்க்கு மணம் நிகழ்த்தி உலகறியச் செய்யுங்கள் எனத்தம் தொண்டர்கட்கு அருளினர். தொண்டர்கள் விரைந்து குழுமி ஒற்றியூரில் உம்பர் பூமழை பொழியுமாறு கண் நிறைந்த கடிமணத்தைக் கடிது ஆற்றினர். பின்னர் அவள் நலம் பருகி ஐம்புலனுணர்வினை ஆரத்துய்த்து அவளோடு வாழ்ந்து வரலானார். அவளைப் பிரிந்து வாழ்வதோ அல்லது அவளோடு புலவி கொள்வதோ ஒருகணமாயினும் ஒரு ஊழிக்காலமாயும், அவளோ இணைந்திருக்குங்கால் ஒரு ஊழிக் காலம் ஒரு கணமாயும் இருக்கின்றதாம். இதனைச் சேக்கிழார் வாய்மொழி கொண்டு அறியலாம்.

> " பண்டு நிகழ் பான்மையினால் பசுபதி தன்
> அருளாலே
> வண்டு அமர் பூங்குழலாரை மணம்
> புணர்ந்த வன்றொண்டர்

புண்டரிகத் தவள் வனப்பைப் புறங்
கண்டது நலத்தைக்
கண்டு கேட்டுண் டுயிர்த்து உற்று
அமர்ந்திருந்தார் காதலினால் ''

பாரதம் கூறும் பாஞ்சால மன்னன் மகளாகிய பாஞ்சாலியின் சுயம்வரம் காண் போம். இம் மணமுறை சுயம்வரமுறை யாகும். இச்சுயவரத்திற்குப் பாண்டவர் ஐவரும் பாஞ்சாலநாடு செல்லுகின்றனர். ஐவரகத்தும் அகலாதிருப்பவள் ஆரணங் காகிய திரௌபதை. அவர்கள் செல்லும் நெறிக்கண் கழனிகளும், பூங்காக்களும், அகன்ற வாவிகளும் நிறைந்து விளங்கின. நெறிக்கண் நிகழ்ந்த நிகழ்ச்சி யெல்லாம் அவர்கட்கு நன்னிமித்தமாய் அமைந்து அவர்களை மேலும், மேலும் ஊக்கி நின்றன. அகன்ற பொய்கையுள் நிறைந்த தாமரைகள் முகையவிழும் நிலையிலிருக்க அவற்றைச் சூழ்ந்து வண்டுகள் ஒலித்துக்கொண்டு புறத்தே செவ்வி நோக்கி ஏங்க, ஒரு வண்டு விரைந்து தம் இறகால் விசியடித்து விரைந்து முகையின் உள்ளே புகுந்து மதுவினை நுகர்ந்து மீண்டது. இது அவர்கள் வழியில் கண்ட முதல் நிகழ்ச்சி. பின்னர் அதே பொய்கையுள் ஒரு மாங்கனி மரத்தினின்றும் முறையாக முற்றி வீழ்ந்தது. பழுத்த கனியையுண்ண விரைந்து பல மீன்கள் கூடின. ஆனால் அவற்றை யெல்லாம் தள்ளி ஒதுக்கி ஒருவாளை மீன் இலைகள் கிழிய ஓடிச் சென்று தன் வாயால் கௌவியுண்டது. இது வழியிற் கண்ட இரண்டாம் நிகழ்ச்சி, பூக்களில் கரும்பும், புனலில் புள்ளும் செறிந் திருந்தன. மிருகங்கள் எல்லாம் தம் துணை யொடு பொருந்த மான் தன் பிணையைத் தழுவ இருந்த நிலையைக்கண்டு சென்றனர். இது மூன்றும் நிகழ்ச்சி.

1) '' வெறிபடு முளரி மொக்குள் விரிபத
னோக்கிச் சுற்றும்
பொறிவரி வண்டின் ஈட்டம் புறத்திருத்
திரங்கக் கண்டோன்
றிறகரால் வீசியுள்புக்கு இன்மது நுகர்தல்
கண்டு
ஏறியின் நன்னிமித்தமாக நெஞ்சுற
நினைந்து சென்றார்

2) வண்டுறை மருங்கினுங் கோர் மாங்கனி
வீழ்தல் கண்டே
நண்டுறை மீன்களெல்லாம் தத்தமக்கிரை
யென்றெய்த
விண்டுறை கிழிய ஓடி வென்றொருவாளை
தன்வாய்க்
கொண்டுறை வலிமை நோக்கிக் குறிப்பி
னாலுவகை கூர்ந்தார்''.

இந்நிகழ்ச்சிகள் பின்னர்ப் பார்த்திபன் வில்லை வளைத்து மீன் பொறியை வீழ்த்தித் திருமகளன்ன திரௌபதியை மணந்து பிறரை வீழ்த்தி வெற்றி எய்த வித்திட்டன.

இதே இலக்கியம் தமிழ்நாட்டுக் களவு மணம் போன்ற கந்தர்வ மணத்தை விளங்க உரைக்கின்றது. வில் விசயனும், செழியன் மகள் சித்திராங்கதையும் மணந்த திருமணம் கந்தருவ மணம். ஒருவரை யொருவர் கண்டு அன்பால் ஒன்றிப்பின்னர் அதன் வழி கற்புமணம் கொண்டனர். தீர்த்த யாத்திரை புறப்பட்ட பார்த்தன் துறவி வேடந்தாங்கி, உண்மை உருவை மறைத்துச் சென்றான். அவ்வாறு அவன் தன் பணியைச் செய்துகொண்டு ஒருநாள் வேதியர் சூழாம் சூழ வேதனை யொழித்து அமர்ந்திருந்தான். அவ்வமயம் மின்னற் கூட்டமே பூமியிற் குழுமியது போலத் தோழியர் சூழச் சித்தராங்கதை காம வேள் வணங்க, சிலம்பு அரற்ற, கண்கள் செவியினைத்தொட, தோளைப்புடைவீசித் திருமகளோ என வியக்குமாறு ஆண்டுத் தோன்றினான். பச்சை நிறமும், பவள இதழும், வெள்ளெயிறும், கண்ணம்பும், சொல்லமுதும், நாணமும், நகையும், கச்சி னுள் அடங்காது திமிரும் கனத்த தனங் களும் பார்ப்போரைப் பரவசமாக்கக் கூடி யன, இவைகளைக் கண்ட வீரனே அப் பெண்கொடியின் நலம் நுகரப் பிச்சன் போலாகிவிட்டான். பெறுதற்கரிய தவம் பல செய்து சித்திர வாகனன் பெற்ற மட

நல்லாள் சித்திராங்கதை. இவள் தன் மெய்போல் மென்மையான தளிர்களையும், மலர்களையும் பறித்துச் செய்குன்றின்மீது தோழியர் புடைசூழ ஏறி யமர்ந்து இயற்கை இன்பத்தில் திளைத்தாள். பார்த்தன் தன் துறவி வேடந் துறந்து காமனும், சாமனும் போற்றும் முன்னைய எழில் உருவம் கொண்டான். பொன்போற் பூத்த சண்பகத்தின் தண்ணிழலில் மின்னலிடையாள் கண்ணிற்படத் தன்னெழில் தோற்றி நின்றான். மயிலும், கிளியும் பாடவும், பூவையும், வண்டும் பொலியவும், தமிழும், குருகும் தவழவும் அமைந்த குன்றில் தன் கண்களால் அக்காளையைக் கண்டாள். திருவனைய அவளும், திருமாலையனைய அவனும் கண்களால் கலந்து உறவாடிக் கருத்தால் ஒன்றினர். அழிந்தொழிந்த அனங்கன் மீட்டும் உயிர்பெற்று இரதியுடன் வாழ்ந்தாலென இருவரும் கந்தருவ முறையால் ஒன்றிக் கடவுளரும் எய்தாக் காமநீத்தத்தில் நீந்தினர். இயற்கைப் புணர்ச்சி எய்திய பின்னர்த் தன்னை இன்னாரென உரைத்து விரைந்து அனுப்பினான். அவள் தோழிக்கு உரைக்க, அவளும் நற்றாய்க்கு உரைக்க அறத்தொடு நிற்கும் முறையில் கற்பு மணம் கடிதின் நிகழ்ந்தது. இதற்கிடையில் விரக நோயால் வெந்துருகினாள். மலைபடு பொருளாகிய தண்ணிய சாந்தினைத் தழற்குழம்போ என்றும், கடல் முத்தைக் கண்ணீர் முத்தால் பொடித்தும், குழலிசையை நச்சொலியோ என்றும், கலைமதியைக் கண்டு கனல்தானோ என்றும் தனிமை பொறுக்காது தடுமாறுகின்றாள். பாண்டவர் நடுவண் தோன்றிய தோன்றலாகிய பார்த்தன் பாண்டிய மன்னன் அவையை அடைந்தவுடன் அவனையறிந்த மன்னன் 'யான் பெற்ற அமுதனையாள் நினக்கே உரியள் ஏற்றுக்கொள்' என இசைந்து மொழிந்தான். பின்னர்க் கடிமணத்திற்கு உரியதொரு கனிவான நாள் குறித்தார், மற்ற மன்னர்கட்குச் செய்தியறிவிக்க, எண்திசை மன்னரும் ஈண்டினர். அர்ச்சுனனுக்கு அணிகள் புனைந்து அழகிய பலகையில் அமர்த்தினர். நங்கையர் பலர்கூடி நலங் கனிந்து அணி செய்து அணங்கையொத்த அம்மடந்தையினை மணமகனின் வலப்பக்கம் சேர்த்தனர். இக்காட்சி இந்திரனும் சசி எனவும், சிவனும் உமை யெனவும், மாலும் திருமகளும் எனவும், காமனும் இரதியும் எனவும் பலரும் போற்ற அமைந்தது. மறையோர் சடங்கியற்ற, அங்கிசான்றாக வாத்தியங்கள் முழங்கச் சங்கினம் ஓங்க மணம் புணர்ந்தனர். இதனை வில்லியார்

> "சந்தணிபூண் முலையாளும் சதுர்மறை
> யோர் சடங்கியற்றத் தழல் சான்றாகத்
> துந்துபியின் குலம்முழங்கச் சுரிசங்கின்
> குழாம் தழங்கத் துலங்க வேட்டார்"
> (வில்லிபாரதம்)

என விளக்கமாகக் கூறுகிறார்.

அடுத்துக்காண்பது வள்ளி - முருகன் கலப்பு மணமாகும். ஆறுமுகச் செவ்வேள் தன் அருகமர்ந்த குறக்குலச் செல்வியாகிய வள்ளியை அன்பு நோக்கோடு நோக்கும் போது பண்டை வினைப்பயனால் தன் முன் உருப்பெற்று அமரவடிவம் எய்தினாள். இதனை ஆசிரியர் "கொல் நவில் குறவர் மாதர் குயிற்றிய கோலம் நீங்கி, முன் உறு தெய்வக் கோலம் முழுது ஒருங்கு உற்ற தன்றே" என்று நயம்பட நவில்கின்றார். வள்ளியின் எழில்நல உருவினைக் கண்ட உற்றாரும், பெற்றோரும், செவிலியும் ஏனைப் பணிப் பெண்களும் இவள் நங்குலத்தில் தோன்றியது நம்பேறேயாகும் என வியந்து மகிழ்ந்தனர். அந்நன்னேரத்தில் குறவர் குறவர் குலத்தோன்றலாகிய வள்ளியின் தந்தை, கந்தவேள் கரத்தில் கன்னி வள்ளியின் கரத்தைப் பிடித்துக் கொடுத்து எம் தவப் பயனால் தோன்றிய இவளை நயந்தளிக்கிறேன். ஏற்றுக்கொள்க எனக்கூறி நீரைத் தாரை வார்த்து அளித்தான். 'இம்மணத்தில் தாரை வார்த்துக் கொடுக்கும்' கன்னிகாதான முறை இடம் பெற்றுள்ளது இவ்வமயத்தே நற்றவம் வல்ல நாதன் வேலனின் மனக்குறிப் பறிந்து மணவணியோடும், மணத்திற்குரிய பிற ஆடை முதலியவற்றோடும் வந்து அவற்றை யெல்லாம் வள்ளியை அணியச் செய்து மறையின்

முறையால் தீதிலா வகையில் திருமணம் முடித்தான். வேலவன் மணத்தில் குறவரும், பிறரும் குழுமித் தம் மருகனும் மகளும் இன்றுபோல் என்றும் வாழியர் என்று மலர் தூவி வாழ்த்தினர். தினை மாவும், தேனும், தீம்பலவின் சுளையும், காயும், கிழங்கும் பிற குறிஞ்சி நிலப்பொருள் களையும் இலையிலிட்டு இதனை நுகர்திர்' எனக் கூறித் தம் பரிசிற் பொருளை உரிமை யாக்கினர்.

செந்தினை இடியும், தேனும் தீம்பல
கனியும் காயும்
கந்தமும் பிறவும் ஆக இலை பொளி கலத்தி
லிட்டுப்
பைந்தொடி அணங்கும், நீயும் பரிவுடன்
நுகர்திர் என்ன
வெந்திறல் எயினர் கூற வியன் அருள்
புரிந்தான் மேலோன் ''

நளன்-தமயந்தி சுயம்வரம் புகழேந்தியால் சுவைபடக் கூறப்பட்டுள்ளது. பல நாட்டு மன்னர்களும் சுயம்வரம் காண வந்தீண்டினர். எங்கணும் ஒரே மன்னர் கூட்டம். மரந்தொறும் பிணித்த புரவியும், புலந்தோறும் பரப்பிய தேரும் எங்கணும் நகரை அணி செய்தன. கீழ்த்திசையில் கதிரவன் அன்று தோன்றிய நிலை தமயந்தியின் திருமணம் காண வருபவன் போலிருந்தது. குமுதம் வாயடங்கி ஒடுங்கவும், நளன் தமயந்தி ஆகிய இருவரது நெஞ்சத்தி அடங்கவும் சூரியன் தேர் ஏறினன். தமயந்தியின் புன்முறுவலே போதும் என ஆண்கள் எண்ணும் அழகினை யுடையாளுக்கு அணியும், மணியும் புனைவித்தனர். நாளும், கோளும் அறிந்து நவிலும் கணிகன் கூறிய நாளில் நளனுக்கும்-தமயந்திக்கும் கடிமணம் செய்தனர். திருவனைய தமயந்தியின் மார்பகத்தும், தேர்வேந்தாகிய நளனின் அகத்தும் புகுந்து ஊடுருவுமாறு தன் கரும்பு வில்லை வளைத்து அனங்கன் அம்பைத் தொடுத்தான்.

'' செந்திருவின் கொங்கையினும், தேர்
வேந்தன் ஆகத்தும்
வந்துருவ வார் சிலையைக் கால் வளைத்து-
வெந்தீயும்
நஞ்சும் தொகுத்தனைய நாமமலர் வாளி
அஞ்சும் தொகுத்தான் அவன் '' என்பது புகழேந்தியின் வாக்கு.

திருமணம் முடிந்தபின்னர், நளன் அரச வீதியில் தன் மனையாளை உடன் அழைத்தேகும் தோற்றம் மடநாகு உடனுகச் செல்லும் மழவிடைபோல் செம்மாந்த நிலையில் இருந்ததாம் என அழகு சொட்டக் கூறுகின்றார்.

அன்று முதல் இன்று வரை திருமணங்கள் பல வேறு வகையில் திரிபுற்று, வழக்கு வேறுபட்டு மாறியுள்ள நிலையைக் கண்டோம். எவ்வாறு திருமணம் நிகழினும் குறிக்கோள் இருமனம் ஒன்றிய முழுமணமாகவே இருத்தல் வேண்டும். ஈருடல் ஓருயிராகவும், இருதலைப் புள்ளின் ஓருயிராகவும் தளிரும் ஒளியும் போலவும் ஒன்றி வாழ்தல் ஒன்றே திருமணத்தின் குறிக்கோள்- அக்குறிக் கோளுடன் நிகழும் திருமணம் வாழ்க.



# இரு வேறு உலகங்கள்

திருவாளர் அர. சேஷாசலம், எம். ஏ.,
பொருளியல் பேராசிரியர், சரபோசி மன்னர் அரசினர் கல்லூரி, தஞ்சாவூர்.

உலகம் இரு வேறு அணிகளாகப் பிரிந்து நிற்கிறது. உலகில் உள்ள மக்களில் மூன்றில் ஒரு பங்கினர் கம்யூனிச ஆட்சியில் இருக்கின்றனர். இரண்டு பங்கினர் குடியாட்சியிலும், இராணுவ சர்வாதிகார ஆட்சியிலும் இருக்கின்றனர். வேறொரு கோணத்திலிருந்து பார்த்தால் உலக நாடுகளை இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம் அவை :

1. தொழில் துறையில் முன்னேறிய நாடுகள்;

2. பின்தங்கிய நாடுகள். இவை வளர்ச்சி குன்றிய நாடுகள் என்றும், வளர்ச்சி பெறாத நாடுகள் என்றும், வளர்ந்து வரும் நாடுகள் என்றும் அழைக்கப்பெறும். முன்னேறிய நாடுகளில், அமெரிக்க ஐக்கிய நாடுகள், கனடா, பிரிட்டன், *பிரான்ஸ், பெல்ஜியம், மேற்கு ஜெர்மனி, நெதர்லாந்து, இத்தாலி, ஸ்விடன், நார்வே, டென்மார்க், சோவியத் யூனியன், ஜப்பான், ஆஸ்திரேலியா, நியூசிலாந்து, ஆகியவை அடங்கும். இவ்வணியில், இஸ்ரேல், தென்கொரியா, ஹாங்காங், தைவான் (பார்மோஸா) சிங்கப்பூர், மலேஷியா, அர்ஜெண்டைனா, ஆஸ்திரியா, கிழக்கு ஐரோப்பிய நாடுகள், தென் ஆப்பிரிக்கா ஆகியவை விரைவில் இடம் பெறும்.

## வேறுபாடுகள்

1. கம்யூனிச நாடுகளில் நிலம், சுரங்கங்கள், ஆலைகள் முதலான உற்பத்திச் சாதனங்கள் அரசிற்குச் சொந்தம். நுகர்வுப் பண்டங்களில் மட்டுமே தனியார்க்கு உடைமை உரிமை உண்டு. நாடுகள் பொருளாதாரத் துறையில் வளர, வளர நுகர்வுப் பண்டங்களின் பட்டியலும் நீண்டு கொண்டே போகின்றது. வீடு, நகை, ஆடை, பித்தளை, வெண்கல, எவர்சில்வர் பாத்திரங்கள், மேசை நாற்காலி, பீரோ, கட்டில், சலவைப் பெட்டி, ரேடியோ, தொலைக்காட்சி, தொலைபேசி இவை யாவும் நுகர்வுப் பண்டங்களில் அடங்கும். வீட்டிற்குரியவரே வீட்டில் குடியிருக்கலாம் கம்யூனிஸ நாடுகளில், பிறருக்கு வீட்டைக்கொடுத்து வாடகை வசூலிக்க முடியாது. பேங்கில் பணம் போட்டு வைத்திருக்கலாம், அதற்குக் குறிப்பிட்ட வட்டியும் தரப்படுகின்றது.

கம்யூனிஸம் அல்லாத நாடுகளில் உற்பத்திச் சாதனங்கள் பெரும்பாலும் தனியாருக்குச் சொந்தம். நிலம், வீடுகள், ஆலைகள், சுரங்கங்கள் யாவும் தனியாருக்குச் சொந்தம். ஆயினும் இவ்வுடைமை உரிமைக்கு எல்லை உண்டு. இவ்வெல்லைகளாவன; அரசு விதிக்கும் வரிகளைச் செலுத்த வேண்டும். சட்டத்தை மீறுபவர்கள் அபராதம் செலுத்த வேண்டும். கடுமையான குற்றங்களைச் செய்தவர்களின் சொத்துக்களை அரசாங்கம் பறிமுதல் செய்வதும் உண்டு. கூலி நிர்ணயச் சட்டங்கள் மூலம் உழைப்பாளிகளின் நியாயமான கூலியை அறுதியிடும் அதிகாரமும் அரசாங்கத்திற்கு உணடு. அண்மைக் காலத்தில் ஒருவர் இவ்வளவுதான் நிலம் வைத்திருக்கலாம் என்ற உச்ச வரம்புச்சட்டமும் இந்தியாவில் இயற்றப்பட்டிருக்கிறது. நகர்ப்புறச் சொத்துக்களுக்கும் வரம்பு விதிக்கும் சட்டம் விரைவில் இயற்றப்பட இருக்கிறது.

* கட்டுரையாசிரியர் விருப்பப்படி இயற்பெயர் முதலிய சொற்களில் காணும் வடமொழி எழுத்துக்கள் விரவியுள்ளன.

2. கம்யூனிஸம் அல்லாத நாடுகளில் மக்களுக்கு ஒப்பந்தம் செய்து கொள்ளும் உரிமை இருக்கிறது. இவ்வொப்பந்தங்கள் சட்டத்திற்குப் புறம்பானவையாக இருக்கக் கூடாது. எடுத்துக் காட்டாக, ஒரு பாலத்தைத் தகர்ப்பதற்கு ஒப்பந்தம் செய்து கொள்ள முடியாது. இங்ஙனம் ஒப்பந்தம் செய்வது சட்டப்படி குற்றமாகும். இதில் சம்பந்தப்பட்டவர்களுக்கு (கண்டுபிடிக்கப் பட்டால்) அரசாங்கம் தண்டனை வழங்கும்.

3. கம்யூனிஸம் ஒழிந்த நாடுகளில் இலாப நோக்கிற்கு முக்கிய இடம் உண்டு. இலாபம் கிடைப்பதாக இருந்தால் தான் ஒருவரோ அல்லது ஒரு கம்பெனியோ ஒரு தொழிலைத் தொடங்கும். தொழில் தொடங்கப்பட்ட பின்பு இலாபம் கிடைக்காமல் நஷ்டமும் கிடைக்கலாம். முதலாளித்துவ நாடுகளில் இலாபத்தைக் குறியாகக் கொண்டே பண்டங்கள் செய்யப்படுகின்றன என்பதும் நுகர்வைக் குறியாகக் கொண்டு செய்யப்படவில்லை என்பதும், கம்யூனிஸ்டுகளின் குற்றச்சாட்டு. இக்குற்றச்சாட்டு ஆதாரமற்றதென ஜான்மேனர்டு கீன்ஸ் கூறுகிறார். ஏனெனில் மக்கள் பண்டங்களை (தம் நுகர்வுக்காக) வாங்கினால்தான் இலாபம் கிடைக்கும். இதுவுமன்றி அரசாங்கம் நடத்தும் தொழில்களிலிருந்து இலாபம் கிடைக்கவேண்டும் என்பதை சோவியத் யூனியனும், பிற கம்யூனிஸ்டு நாடுகளும் ஒப்புக் கொண்டுள்ளன. போலந்து நாட்டைச் சேர்ந்த பொருளியல் அறிஞர் 'ஆஸ்கார்லாஞ்ச்' இவர் கம்யூனிஸ்டுக் கட்சி உறுப்பினர். இவர் அரசாங்கத் தொழில்கள் இலாபத்தை ஈட்டவேண்டும் என்று கூறுகின்றார்.

4. முதலாளித்துவ நாடுகளில், சில விதிகளுக்கு உட்பட்டு, எந்தத் தொழிலையும் யாரும் செய்யலாம். ஆனால் அதற்கான தகுதி பெற்றிருக்க வேண்டும். ஒரு மருத்துவராகவோ, அல்லது பொறியாளராகவோ ஆகவேண்டும் என்றால் அதற்காகச் சிறப்பாகப் படித்து எம் பி. பி எஸ், பட்டத்தையோ பி. இ, பட்டத்தையோ பெற்றிருக்க வேண்டும். காரோட்டியாக வேண்டும் என்றால் அதற்கான உரிமம் பெற்றிருக்க வேண்டும்.

5. முதலாளித்துவ நாடுகளில் யாரும் நாட்டின் எந்தப் பகுதிக்கும் சென்று குடியேறலாம். கம்யூனிஸ்டு நாடுகளில் நாட்டின் எந்தப் பகுதிக்கும் செல்லலாமே தவிர குடியேற முடியாது. இது தவிர பேச்சுரிமை, எழுத்துரிமை, கட்சி உரிமை, சமய உரிமை இவையெல்லாம் முதலாளித்துவ நாடுகளில் உண்டு. ஆனால், இவை ஒவ்வொன்றுக்கும் வரம்பு உண்டு. அண்மைக் காலத்தில் சோவியத் யூனியனில் அறிஞர்கள் பேச்சுரிமை, எழுத்துரிமை வேண்டும் என்று கோரி, இதில் ஓரளவு வெற்றியும் பெற்றிருக்கிறார்கள். ஆயினும் இது இன்னும் பரவலாக ஒத்துக்கொள்ளப்படவில்லை. மேலும் கம்யூனிஸ்டுக் கட்சியைத் தவிர பிற கட்சிகள் சோவியத் யூனியனில் இயங்க முடியாது. ரஷ்யாவில் பேச்சுரிமையைப் பற்றிய ஒரு கதை உண்டு. ஒருசமயம் மூன்று நாய்கள் பாரிசு நகரத்தில் சந்தித்தன. இவை பிரிட்டனிலிருந்தும், ஜெர்மனியிலிருந்தும், சோவியத் யூனியனிலிருந்தும் வந்திருந்தன. ஜெர்மன் நாயும், பிரிட்டிஷ் நாயும் தங்கள் குறைகளைச் சொல்லின. தன் நாட்டில் குரைக்க முடியாது என்பதற்காகவே பாரிசு வந்ததாகச் சோவியத்து நாய் கூறியது.

6. முதலாளித்துவ நாடுகள் பெரும்பாலும் குடியாட்சி நாடுகள். மக்கள் விரும்பும் மாறுதல்களைச் சமாதான முறையில், சட்டங்களைத் திருத்துவதன் வாயிலாகக் கொணரமுடியும். ஆனால், கம்யூனிஸ்டுகள் வன்முறையில் நம்பிக்கை கொண்டவர்கள். அவர்கள் சமாதான சக வாழ்வை ஒப்புக் கொள்ளவில்லை. உலகு முழுதும் கம்யூனிஸ்ட் ஆதிக்கத்தின் கீழ் வரவேண்டும் என்பதே அவர்களின் நோக்கம். இந்நோக்கம் ஈடேற அவர்கள் (அவசியம் ஏற்படின்) வன்முறையையும் மேற்கொள்ள ஆயத்தமாக இருக்கிறார்கள். இதுவரையில் எந்த ஒரு நாடும் அமைதியான முறையில் சோஷலிச நாடாக ஆயிற்று என்று வரலாறு கூறவில்லை.

## திட்டமிட்ட பொருளாதாரம்

நாடு முழுமைக்கும் திட்டமிடுவதையே திட்டமிட்ட பொருளாதாரம் என்கிறோம். ஒவ்வொரு குடும்பமும், ஒவ்வொரு கம்பெனியும் வருகிற ஆண்டுக்கு இவ்வளவு செலவு செய்ய வேண்டும், இவ்வளவு மிச்சம் பிடிக்க வேண்டும், இவ்வளவு பண்டங்களை உற்பத்தி செய்ய வேண்டும், பண்டங்களின் உற்பத்தியை இவ்வளவு பெருக்க வேண்டும் என்றெல்லாம் திட்டம் தீட்டுகின்றன. ஆயினும் இதைத் திட்டமிட்ட பொருளாதாரம் என்று கூறமுடியாது. திட்டமிட்ட பொருளாதாரத்தினுல்தான் ஒரு நாடு முன்னேற முடியும் என்பதும் உண்மையன்று. பிரான்சிலும் ஓரளவு திட்டமிட்ட பொருளாதாரம் இருக்கிறது; கிழக்கு ஜெர்மனியிலும் திட்டமிட்ட பொருளாதாரம் இருக்கிறது. இவையிரண்டைக் காட்டிலும் மேற்கு ஜெர்மனியின் வளர்ச்சி வீதம் அதிகமாக இருக்கிறது. இத்தனைக்கும் மேற்கு ஜெர்மனியில் திட்டமிட்ட பொருளாதாரம் இல்லை. அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும், ஸ்வீடனிலும், ஜப்பானிலும் திட்டமிட்ட பொருளாதாரமில்லை. இத்தாலியிலும் சோவியத் யூனியனிலும் திட்டமிட்ட பொருளாதாரம் இயங்குகிறது. ஸ்விடனைக் காட்டிலும் இத்தாலியின் வளர்ச்சி வீதம் அதிகமாகவும், அமெரிக்காவைக் காட்டிலும் சோவியத் யூனியனின் வளர்ச்சி வீதம் அதிகமாகவும், சோவியத் யூனியனைக் காட்டிலும் ஜப்பானின் வளர்ச்சி வீதம் அதிகமாகவும் இருக்கிறது. இதிலிருந்து திட்டமிட்ட பொருளாதாரத்திற்கும், பொருளாதார வளர்ச்சிக்கும் இடையே இன்றியமையாத உறவில்லை என்று தெரிகிறது.

## இந்திய ஐந்தாண்டுத் திட்டங்கள்-குறிக்கோள்கள்

1. தேசிய வருமானத்தையும் இந்தியர் ஒருவரின் சராசரி வருமானத்தையும் பெருக்குவதும்,

2. தொழில்களையும், வேளாண்மையையும் விரைவாக வளர்ப்பதும்,

3. அதிகவேலை வாய்ப்புகளைப் படைப்பதும்,

4. வருமானத்தில் ஏற்றத் தாழ்வுகளைக் குறைப்பதும்.

5. பிராந்தியங்களுக்குள் நிலவும் ஏற்றத்தாழ்வுகளைக் குறைப்பதும், நம் ஐந்தாண்டுத் திட்டங்களின் நோக்கங்களாகும். நான்காவது திட்டத்தில்.

6. விலைவாசிகள் ஏருமல் பார்த்துக் கொள்வதும்,

7. இறக்குமதிகளையும், பிற நாட்டு உதவியையும் குறைப்பதும், ஏற்றுமதிகளை ஆண்டுதோறும் 7% அதிகரிப்பதும் நோக்கங்களாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கின்றன. இந்நோக்கங்கள் எத்துணை நிறைவேறியிருக்கின்றன என்பதை இப்பொழுது பார்ப்போம்.

### முதல் ஐந்தாண்டுத் திட்டம் (1951 – 1956)

| திட்டக்குறி அளவு செலவு | நடைமுறையில் ஆன செலவு | வளர்ச்சி வீதம் | | சேமிப்பு | | விலைவாசி ஏற்றம் அல்லது சரிவு |
|---|---|---|---|---|---|---|
| | | திட்டக் குறி | நடைமுறை | திட்டக் குறி | நடைமுறை | |
| கோடி ரூபாய் | | | | | | |
| 2,360 | 1,960 | 11 % | 17·5 % | — | 7 % | — 13 % |

## இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம் (1956 - 1961)

| திட்டக்குறி அளவு செலவு | நடைமுறையில் ஆன செலவு | வளர்ச்சி விதம் | | சேமிப்பு | | விலைவாசி ஏற்றம் |
|---|---|---|---|---|---|---|
| | | திட்டக் குறி | நடைமுறை | திட்டக் குறி | நடைமுறை | |
| கோடி ரூபாய் | | | | | | |
| 4,800 | 4,600 | 25 % | 21 % | 10 % | 9·72 % | 30 % |

## மூன்றும் ஐந்தாண்டுத் திட்டம் (1961 - 1936)

| திட்டக்குறி அளவு செலவு | நடைமுறையில் ஆன செலவு | வளர்ச்சி விதம் | | சேமிப்பு | | விலைவாசி ஏற்றம் |
|---|---|---|---|---|---|---|
| | | திட்டக் குறி | நடைமுறை | திட்டக் குறி | நடைமுறை | |
| கோடி ரூபாய் | | | | | | |
| 7,500 | 8,630 | 25 % | 12½ % | 11·5 % | 10·8 % | 32 % |

## ஓராண்டுத் திட்டங்கள் (1966 - 1969)

| | நடைமுறையில் ஆன செலவு | வளர்ச்சி விதம் | | சேமிப்பு | விலைவாசி ஏற்றம் |
|---|---|---|---|---|---|
| | | திட்டக்குறி | நடைமுறை | நடைமுறை | |
| 1966 — 67 | 2221 | | | | |
| 1967 — 68 | 2242 | —— | | 8·8 % | 30 % |
| 1968 — 69 | 2337 | | | | |

நான்காம் திட்டம் (1969–1974)

| திட்டக்குறி அளவு செலவு | வளர்ச்சி வீதம் குறி அளவு | சேமிப்பு குறி அளவு | விலைவாசி ஏற்றம் |
|---|---|---|---|
| 15,902 | 27½ % | 13·2 % | சீராக இருக்கும் (ஏறுது) |

வேலை வாய்ப்பு

| முதல் திட்டத்தின் இறுதியில் வேலை இல்லாதோரின் எண்ணிக்கை | இரண்டாம் திட்டத்தின் இறுதியில் வேலை இல்லாதோரின் எண்ணிக்கை | மூன்றும் திட்டத்தின் இறுதியில் வேலை இல்லாதோரின் எண்ணிக்கை | நான்காம் திட்டத்தின் இறுதியில் வேலை இல்லாதோரின் எண்ணிக்கை |
|---|---|---|---|
| | (மில்லியனில்) | | |
| 1·1 | 6·5 | 10·5 | 14 |

இருபது ஆண்டுகளுக்கு மேலாகத் திட்டங்களை நிறைவேற்றியும், வேலையில்லாதோரின் தொகை பெருகியே வந்திருக்கிறது. இதைத்தவிர 5 மில்லியன் பேர் குடியிருக்க வீடின்றிச் சாலைகளில் வசிக்கிறார்கள். இவர்களில் 90% நகரங்களில் இருக்கிறார்கள். இந்தியாவில் கிராமங்களில் 718 நூறாயிரம் வீடுகளும், நகரங்களில் 119 நூறாயிரம் வீடுகளும் தேவைப்படுகின்றன. ஆண்டுதோறும் வீட்டுத்தட்டுப்பாடு 20 நூறாயிரம் வீதம் அதிகரிக்கிறது. ஆனால் ஆண்டுதோறும் நூறாயிரம் வீடுகளே கட்டப்படுகின்றன. 837 நூறாயிரம் வீடுகளைக் கட்டுவதற்கு ரூ 33,000 கோடி வேண்டும்.

## இந்தியரும் பிற நாட்டாரும்

“பல இடங்களிலும் ஒருவர் செய்யும் வேலையின் அளவு சராசரி பாதிக்கும் குறைவாக இருக்கிறது என்பதைப்பற்றி எனக்கு ஐயமில்லை” என்று 30–4–1964இல் அப்பொழுது இந்திய நிதியமைச்சராக இருந்த திரு. டி. டி. கிருஷ்ணமாச்சாரி டில்லி மேலவையில் கூறினர். இந்தியாவில் ஒரு மில்லியன் டன் உருக்கு உற்பத்திக்கு 15,000 தொழிலாளர்கள் வேண்டியிருக்கின்றனர். ஜப்பானில் 1⅓ மில்லியன் டன் உருக்கு உற்பத்திக்கு 4,250 தொழிலாளர்கள் தான் வேண்டியிருக்கிறார்கள். மேல் மட்டத்தில் செயலாளர் பதவியில் இருந்தாலும் அல்லது கீழ் மட்டத்தில் இருந்தாலும் ஊதிய உயர்வு கோருகிறார்கள்; ஆனால் அவ்வூதியத்திற்கு ஏற்ப உழைக்க ஆயத்தமாக இல்லை. 7–5–1968 அன்று எடுத்த புள்ளிவிவரத்தின்படி டில்லி அரசாங்கத்திற்குச் சொந்தமான 81 தொழில் முனைவுகளில் ஏறக்குறைய 15,000 பேர் உபரியாக இருக்கின்றனர். இந்தியாவில் ஒரு ஏக்கரில் நெல் பயிரிடுவதற்கு 900மணி நேரம் வேண்டியிருக்கிறது. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் 12 மணி நேரத்தில் ஒரு ஏக்கரில் நெல் பயிரிட்டு அறுவடை செய்துவிடுகிறார்கள். இந்தியாவில் தொழிலாளர்களிடையே போதிய கட்டுப்பாடில்லாததால் சிறிய காரணங்களுக்காகவும், அரசியல் காரணங்களுக்காகவும் அடிக்கடி வேலை நிறுத்தம் செய்கிறார்கள். இது வருந்துதற்குரியது. நார்வே நாட்டில் கடந்த முப்பது ஆண்டுகளாக யாதொரு பெரிய வேலை நிறுத்தமும் நடைபெறவில்லை. சோவியத் யூனியனில் தொழிலாளர் சங்கங்கள் வேலை நிறுத்தம் செய்வது சட்டப்படி தடுக்கப்படவில்லை. ஆயினும் வேலை நிறுத்தம் செய்வதைத் தடுப்

பதைத் தொழிலாளர் சங்கங்கள் தங்களுடைய முக்கியமான கடமையாகக் கொண்டுள்ளன. 1946-இல் மின்சார ஊழியர்கள் சங்கம் வேலை நிறுத்தம் செய்தது. சோவியத் யூனியனில் தொழிலாளர்களுக்கு வேலை நிறுத்தம் செய்யும் உரிமை இருக்கிறது என்பதை உலகிற்கு உணர்த்தவே இவ்வேலை நிறுத்தம் நடத்தப்பட்டது. தமிழ் நாட்டில் அண்மையில் சிம்சன் நிறுவனங்களைச் சேர்ந்த ஊழியர்கள் அரசியல் காரணங்களுக்காக வேலை நிறுத்தம் செய்தனர். இது வருந்துதற்கு மட்டுமன்றிக் கண்டித்தற்கும் உரியது.

## சமுதாய ஈட்டுறுதி அல்லது காப்புறுதி

ஒருவர் நோய்வாய்ப்பட்டாலும், வேலையிலிருந்து ஓய்வு பெற்றாலும், விபத்துக்கு உள்ளானாலும் வேலையிலிருந்து நீக்கப்பெற்றாலும், அல்லது இவ்வுலகத்திலிருந்தே விடை பெற்றுக்கொண்டாலும், அவருடைய உழைப்பாற்றல் குறைகிறது. வருமானம் குறைகிறது. ஒருவர் இறந்தாலோ அல்லது வேலையின்றி இருந்தாலோ, அவருக்கு ஊதியம் இல்லை. முதலாளித்துவ நாடுகளான டென்மார்க்கும், நார்வேயும் தங்கள் நாட்டின் நிகர வருமானத்தில் 13%மும்—ஸ்விடன் சிறிது கூடுதலாகவும், பிரிட்டன் 12%மும் அமெரிக்க ஐக்கிய நாடுகள் 6%மும் சமுதாய ஈட்டுறுதி நலன்களுக்குச் செலவழிக்கின்றன. இவற்றில் மருத்துவச் செலவும், பெண்களுக்குப் பேறுகாலச் செலவும்,(இறந்தவர்களின்) அடக்கச் செலவும், விபத்துக்களில் ஊனமுற்றோர்களுக்கு இழப்பீடும், வேலையின்மை ஈட்டுறுதியும் அடங்கும். சோவியத் யூனியனில் வேலையின்மை ஈட்டுறுதி தவிரப் பிற ஆதாயங்கள் மக்களுக்குக் கிடைக்கின்றன. சோவியத் யூனியனில் வேலையின்றி யாரும் இல்லாததால் வேலையின்மை ஈட்டுறுதி கொடுக்கப்படவில்லை எனக் கூறுகின்றனர். 1932-ஆம் ஆண்டில் சோவியத் அரசாங்கம் வேலையின்மை ஈட்டுறுதியை அகற்றியது. இதனால் அங்கு வேலையின்றி யாரும் இல்லை என்று கொள்ளப்படுகிறது. எனக்குத் தெரிந்த வரையில் ஸ்விடன் நாட்டில்தான் மிகவும் அதிகமான சமுதாய ஈட்டுறுதி ஆதாயங்கள் தரப்படுகின்றன. குறைந்த வருமானமும் 15 வயதுக்கு உட்பட்டு இரண்டு குழந்தைகளேனும் உடைய அன்னையர்களுக்கு, ஆண்டு விடுமுறையின்போது இலவசப் போக்குவரத்து வசதி அளிக்கப்படுகிறது. வேலையிலிருந்து ஓய்வுபெற்ற முதியோர்களுக்கு வீட்டுப்படி தரப்படுவதுடன், வாழ்க்கைச் செலவு அதிகரித்தால் அவர்களுக்குப் படியும் தரப்படுகிறது. பதவிக் காலத்தில் ஊதியமாகக் கிடைத்த தொகையில் மூன்றில் இரண்டு பங்கை ஓய்வுகால ஊதியமாகப் பெறுகின்றனர். இந்த முறை வேறெந்த நாட்டிலும் நிலவவில்லை.

## இந்தியாவில்

1848 இல் இயற்றப்பட்ட ஊழியர் அரசு காப்புறுதிச் சட்டத்தின் (The Employees State Insurance Act) படி. ஆலைகளில் நிரந்தரமாக ஊழியம் செய்யும் தொழிலாளர்களுக்குக் காப்புறுதி அளிக்கப்பட்டது. இந்த ஆலைகளில் யந்திர விசை பயன்படுத்தப் படவேண்டும். இருபது பேருக்கு மேல் ஊழியம் செய்ய வேண்டும். திங்கள் கூலி அல்லது சம்பளம் ரூ. 500க்குமேல் போகக் கூடாது. இது ஆலைத் தொழிலாளர்களுக்கு மட்டுமன்றி எழுத்தர்கள் போன்ற குறைந்த சம்பளம் வாங்குவோர்க்கும் பொருந்தும். இச்சட்டத்தின்படி தொழிலாளர்கள் தங்கள் ஊதியத்திற்கு ஏற்றவாறு குறைந்தது வாரத்திற்குப் 13 காசுகளாவது சந்தாவாகச் செலுத்தவேண்டும். நாள் ஒன்றுக்கு ஒரு ரூபாய்க்கும் குறைந்த கூலி பெறுபவர்கள் யாதொரு சந்தாவும் செலுத்த வேண்டியதில்லை. ஆலை அதிபர்கள் தொழிலாளர் ஒவ்வொருவருக்கும் வாரம் ஒன்றுக்கு குறைந்த அளவு 42 காசும், அதிக அளவு ரூ. 2-50-ம் சந்தாவாகச் செலுத்தவேண்டும்.

இச்சட்டத்தின் வாயிலாகத் தொழிலாளர்கள் ஐந்துவகை ஆதாயங்களைப் பெறுகிறார்கள்.

1. நோய்வாய்ப் பட்டிருப்பவர்களுக்கு ஆண்டொன்றுக்கு 56 நாட்களுக்கு ரொக்க உதவி கிடைக்கும். இவ்வுதவி அவர் ஏற்கனவே வாங்கிய கூலியில் பாதியாகும்.

2. மருத்துவ உதவி. ஊழியர் அரசு காப்புறுதிக் கார்பரேஷன் (Employee's State Insurance Corporation) நடத்தும் மருத்துவ மனைகளில் கிடைக்கும். மருத்துவ மனையைச் சேர்ந்த மருத்துவர்கள் நோயாளிகளை அவர்களின் வீட்டிலேயே பார்க்க முடிந்தாலும் இவ்வுதவி கிடைக்கும். அண்மைக் காலத்தில் புற்றுநோய், என்புருக்கி, குட்டம், சித்தக்கோளாறு இவற்றினால் அவதியுறுபவர்களுக்கும் இவ்வுதவி அளிக்கப்படுகிறது. ஊன முற்றவர்களுக்குச் செயற்கைக் காலும், கையும், அளிக்கப்படுவதுடன் பல்லிழந்தவர்களுக்குச் செயற்கைப் பல்லும் கட்டப்படுகிறது.

3. கருவுற்ற மகளிருக்கு மூன்று திங்களுக்குப் பேறு கால ஆதாயம் அளிக்கப்படுகிறது, இஃது அவர்கள் முன்பு வாங்கிய கூலியில் பாதியாகும்.

4. ஊனமுற்றோர்களுக்கும் உதவி அளிக்கப்படுகிறது. சிறிது காலத்திற்குக் கடப்படாமல் போனவர்களுக்கு அவர்கள் குணமடையும் வரை அவர்கள் முன்பு வாங்கிய ஊதியத்தில் 7/12 பங்கு ஆதாயத் தொகையாக அளிக்கப்படுகிறது. நிரந்தரமாக வேலை செய்ய இயலாமல் போனவர்களுக்கு அவர்கள் இறக்கும்வரை இவ்வாதாயம் கிடைக்கும்.

5. காப்புறுதி செய்துகொண்ட தொழிலாளர் தொழில் விபத்தில் இறந்தாலும் சரி, அல்லது காயமுற்று இறந்தாலும் சரி, அவரது குடும்பத்தினருக்கு உதவி கிடைக்கும். இறந்தவரின் மனைவிக்கு அவள் மறுமணம் செய்து கொள்ளும் வரையிலும், அல்லது இறக்கும் வரையிலும் உதவித்தொகை கிடைக்கும். இறந்தவரின் குழந்தைகளுக்கு அவர்கள் பதினைந்தாவது வயது வரை உதவி அளிக்கப்பெறும். நன்றாகப் படித்தால் பதினைந்து வயதுக்கு மேலும் இவ்வுதவி கிடைக்கும்.

ஏறக்குறைய 35 லக்ஷம் தொழிலாளர்களுக்கு இவ்வாதயங்கள் கிடைக்கின்றன. இதிலுள்ள குறைபாடுகளாவன,

1. ஆலைத் தொழிலாளர்களில் பாதிப் பேருக்குத்தான் இவ்வாதயங்கள் கிடைக்கின்றன.

2. வேளாண்மையில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளர்களுக்கு இவ்வாதயங்கள் கிடையாது. அவர்கள்தாம் நம் நாட்டிலுள்ள தொழிலாளர்களில் நூற்றுக்குத் தொண்ணூற்றெட்டு பேராவர்.

3. வேலையின்றி இருப்பவருக்கு யாதொரு உதவியும் அளிக்கப்படவில்லை. இது ஒரு பெரும் குறைபாடாகும். முதலாளித்துவ நாடுகளான அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் பிரிட்டனிலும் ஸ்வீடன் போன்ற பிற நாடுகளிலும் வேலையின்றி இருப்போருக்கு உதவித் தொகை அளிக்கப்படும்பொழுது, நாத்தழும்பேற சோஷலிசம் பற்றிப் பேசும் நம் நாட்டில் வேலையின்றி இருக்கும் எல்லோருக்கும் உதவி அளிக்கப்படாதது விந்தையே. சமுதாய நலக் காப்புறுதித் திட்டங்களை முழுதும் நிறைவேற்றாமல், நாம் பொதுவுடமை பற்றிவாய் கிழியப் பேசுவது மக்களை ஏமாற்றுவதாகும்.

## வேளாண்மை

இந்தியா ஒரு வேளாண்மை நாடு. இந்தியர்களில் நூற்றுக்கு எழுபது பேர் வேளாண்மையில் ஈடுபட்டிருக்கின்றனர். ஆயினும் சுதந்திரம் பெற்றதிலிருந்தே நாம் தொடர்ந்து உணவுத் தானியங்களை இறக்குமதி செய்து வந்திருக்கிறோம். உண்மையில் 1937-இல் பர்மா இந்தியாவிலிருந்து பிரிக்கப்பட்டதிலிருந்தே நாம் உணவுத் தானியங்களை இறக்குமதி செய்து வந்திருக்கிறோம். அப்பொழுது ஆண்டொன்றுக்கு 15-இல் இருந்து 20 லக்ஷம் டன் அரிசியை இறக்குமதி செய்தோம். 1947-இல் இந்தியாவிலிருந்து பாக்கிஸ்தான் பிரிந்தது. கோதுமை அதிகம் விளையும் பகுதிகளான மேற்கு பஞ்சாப்பும், ஸிந்தும், இந்தியாவிலிருந்து பிரியவே நாம் கோதுமையையும் இறக்குமதி செய்ய வேண்டியதாயிற்று.

## உணவுத் தானியங்களின் இறக்குமதி

| ஆண்டு | (டன்னில்) | ஆண்டு | (டன்னில்) |
|---|---|---|---|
| 1951 | 48,00,000 | 1960—61 | 37,47,000 |
| 1952 | 39,00,000 | 1961—62 | 24,01,000 |
| 1953 | 20,00,000 | 1962—63 | 30,46,000 |
| 1954 | 8,00.000 | 1963—64 | 32,85,000 |
| 1955 | 6,00,000 | 1964—65 | 66,90,000 |
| 1956 | 67,00,000 | 1965—66 | 77,55,000 |
| 1957 | 11,16,000 | 1966—67 | 1,08,05,000 |
| 1958 | 32,52,000 | 1967—68 | 67,83,000 |
| 1959 | 30,82,000 | 1968—69 | 48,22,000 |

**இந்த ஆண்டில் (1972-73) மூன்று லக்ஷம் டன் கோதுமையை இந்திய அரசாங்கம் இறக்குமதி செய்யவிருக்கிறது.**

| திட்ட காலம் | இறக்குமதியின் அளவு (லக்ஷம் டன்னில்) | இறக்குமதியின் பெறுமானம் (கோடி ரூபாய்) |
|---|---|---|
| முதல் திட்டம் | 88 | 600 |
| இரண்டாம் திட்டம் | 117 | 800 |
| மூன்றும் திட்டம | 322 | 1,100 |

**உணவுத் தானியங்களின் உற்பத்தி அளவு அவை பயிரிடப்படும் நிலத்தின் அளவைப் பொருத்திருக்கவில்லை என்பது கீழ்க்கண்ட புள்ளி விவரங்களினால் தெரியும்**

| நாட்டின் பெயர் | சாகுபடியாகும் நிலத்தின் பரப்பு (மில்லியன் ஏக்கரில்) |
|---|---|
| இந்தியா | 320 |
| அமெரிக்க ஐக்கிய நாடுகள் | 330 |
| சோவியத் யூனியன் | 504 |

இந்தியாவில் ஒரு குடியானவருக்கு இருக்கும் சராசரி நிலத்தின் அளவு ஏறக் குறைய ஆறு ஏக்கராகும்; தமிழ் நாட்டில் 3½ ஏக்கராகும்; ஜப்பானில் 2½ ஏக்கராகும். இங்ஙனமிருந்தும் தன் தேவைக்குப்போக வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதற்கு ஜப்பானில் உபரி அரிசி இருக்கிறது. இந்தியா விலும், அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் ஏறக் குறைய ஒரே அளவு நிலம் பயிரிடப்பட்டா லும், இந்தியா அண்மைக்காலம் வரை பிற நாடுகளிலிருந்து முக்கியமாக அமெரிக்காவிலி ருந்து உதவியை நம்பியிருந்தது. 1970—71-இல் இந்தியா மூன்று லக்ஷம் டன் அரிசியை இறக்குமதி செய்தது. சோவியத் யூனியனில் 504 மில்லியன் ஏக்கர் சாகுபடி செய்யப் பட்டாலும், அது உணவுத் தானியங்களில் தன்னிறைவு பெற்றிருக்கிறதே தவிர, பிறநாடு களுக்கு உணவுத் தானியங்களை ஏற்றுமதி செய்யக்கூடிய நிலையில் இல்லை. அதேசமயம் அமெரிக்கா நூறு நாடுகளுக்கு உணவுத் தானியங்களை ஏற்றுமதி செய்து வருகிறது. சில ஆண்டுகளுக்கு முன்பு ஒரே ஆண்டில் இந்தியாவுக்கு மட்டுமே அமெரிக்கா ஒரு கோடி டன்னுக்கு மேல் உணவுத்தானியம் அனுப்பியுள்ளது. இதில் கணிசமான பகுதி இலவசமாக அனுப்பப்பட்டது. இந்தியா விலும் சோவியத் யூனியனிலும் ஏராளமான நிலம் பயிரிடப்பட்டாலும், விளைச்சல் மிகவும் குறைவாக உள்ளது. சோவியத் யூனியனில் 11 ஏக்கருக்கு ஒரு குடியானவர் இருக்க அமெரிக்காவில் 57 ஏக்கருக்கு ஒரு குடியான வரே இருக்கிறார். சோவியத் யூனியனில் 48 மில்லியன் குடியானவர்கள் வேளாண்மை யில் ஈடுபட்டிருக்கிறார்கள். ஆனால் அமெரிக் காவில் 6 மில்லியன் குடியானவர்களே இருக் கிறார்கள். இதேபோன்று அமெரிக்காவில் 70 ஏக்கருக்கு ஒரு டிராக்டர் வீதம் இருக் கவும், சோவியத் யூனியனில் 485 ஏக்கருக்கு ஒரு டிராக்டரே இருக்கிறது. மேற்கு ஐரோப்பிய நாடுகளான இத்தாலி, ஸ்பெயின், போர்ச்சுக்கலைத் தவிர்த்து, வேறெந்த நாட் டைக் காட்டிலும் சோவியத் யூனியனில் ஆளொன்றுக்குக் கிடைக்கும் இறைச்சி குறைவாகவே உள்ளது. சோவியத் முன்னாள் பிரதமர் குருஷேவ் ஒரு அமெரிக்கருக்குக் கிடைக்கும் இறைச்சியின் அளவு ஒரு சோவியத் குடிமகனுக்கும் கிடைக்க வேண் டும் என்று விரும்பினார். அமெரிக்கர் ஒரு வருக்கு ஆண்டொன்றுக்குச் சராசரி 162 பவுண்டு இறைச்சி கிடைக்கிறது; சோவியத் குடிமகனுக்கு 61 பவுண்டு இறைச்சியே கிடைக்கிறது. சோவியத் நாட்டில் எல்லோ ருக்கும் போதிய அளவு உணவு கிடைக்கிறது. ஆனால் மேற்கு ஐரோப்பிய நாடுகளுடனும் அமெரிக்காவுடனும் ஒப்பிடும்பொழுது தரம் மிகவும் குறைவாக இருக்கிறது. எடுத்துக் காட்டாக சோவியத் மக்களுக்கு, வேண்டிய ரொட்டியும், உருளைக்கிழங்கும் கிடைக்கிறது; ஆனால் போதிய இறைச்சி, கோழிகள், முட் டைகள், பால், காய்கறிகள், பழங்கள் கிடைப்பதில்லை.

## கூட்டுப் பண்ணைகள் (Collective Farms)

கம்யூனிஸ்டு நாடுகள் தொழில் துறையில் முன்னேறியிருந்தாலும், வேளாண்மைத் துறையில் போதிய முன்னேற்றம் அடைய வில்லை. இதற்குக் காரணம் நிலம் தனியார் உடைமையாக இ றி கூட்டுப்பண்ணைகளா கவும், அரசாங்கப் பண்ணைகளாகவும் இருப் பதுதான். இதற்கு ஒரு எடுத்துக்காட்டு போதும். சோவியத் யூனியனில் கூட்டுப் பண்ணைகளில் வேலை செய்யும் குடியானவர் கள் ஒவ்வொருவருக்கும் ½ ஏக்கரிலிருந்து 2½ ஏக்கர் நிலம் சொந்த உபயோகத்திற்குக் (அனுபவத்திற்கு) கொடுக்கப்பட்டிருக்கி றது. இது தஞ்சாவூர் மாவட்டத்தில் நிலக் கிழார்கள் பண்ணையாட்களின் உபயோகத் திற்குத் தந்திருக்கும் ஆட்கொல்லையைப் போன்றது. இது மானியம் எனவும் வழங்கும். ஒரு பண்ணையாளுக்கு 60-இல் இருந்து 75 குழிவரை மானியமாக தரப்படும். (ஒரு குழி என்பது 12 அடி நீளமும், 12 அடி அகலமும், கொண்ட ஒரு பகுதியாகும்). இப்படித் தரப்பட்டிருக்கும் நிலத்தின் அளவு சோவி யத் யூனியனில் சாகுபடியாகும் நிலப் பரப்பில் 3% ஆகும். ஆனால் இம்மூன்று சதவீத நிலத்

திலிருந்து சோவியத் யூனியனில் கிடைக்கும் உணவுப் பண்டங்களின் அளவு வருமாறு; இறைச்சி-49%; பால்-49%; உருளைக்கிழங்கு 65%; முட்டை-82%; இதிலிருந்து கம்யூனிஸ்டுப் புரட்சி ஏற்பட்டு ஐம்பத்தைந்து ஆண்டுகள் சென்ற பின்பும் சோவியத் மக்கள் நிலத்தில் தனியார் உடைமையை மறக்கவில்லை என்றும், கூட்டுப் பண்ணைகளிலும், அரசாங்கப் பண்ணைகளிலும் பாடுபடுவதைக் காட்டிலும், தங்கள் சொந்த அனுபவத்தில் இருக்கும் நிலங்களில் மிகவும் உற்சாகத்துடன் பாடுபடுகின்றனர் என்றும் தெரிகிறது.

இந்தியாவில் 5,277 கூட்டு வேளாண்மைச் சங்கங்கள் (Joint Farming Societies) இருக்கின்றன. இவற்றில் 1,652 இழப்பிலும், 1,490, இழப்பும், இலாபமும் இன்றியும் 2,135 இலாபத்திலும் இயங்குகின்றன. இவை மேலே கூறியவற்றை உறுதிப்படுத்துகின்றன.

### வாழ்க்கைத்தரம்

ஒரு இந்தியரின் சராசரி வருமானம் 77 டாலராகும். 1966-இல் எடுக்கப்பட்ட புள்ளி விவரங்களின்படி பிறநாடுகளில் ஒருவரின் சராசரி வருமானம் வருமாறு: பாகிஸ்தான்-108; பிரேஸில்-252; சப்பான்-921; பிரிட்டன்-1560 அமெரிக்க ஐக்கிய நாடுகள்-3,303; சோவியத் யூனியனிலும், கிழக்கு ஐரோப்பிய நாடுகளிலும் வாழ்க்கைத்தரம் இந்தியா போன்ற பின்தங்கிய நாடுகளைக் காட்டிலும் கூடுதலாகவும், அமெரிக்கா, கனடா, ஆஸ்திரேலியா பிரிட்டன், போன்ற நாடுகளைக் காட்டிலும் குறைவாகவும் இருக்கிறது. இதையே வேறு வகையாகவும் கூறலாம். வட அமெரிக்காவில் 100 பேருக்கு 72 ரேடியோ பெட்டிகளும், ஐரோப்பாவில் 23-ம் ஓஷியானியாவில் 21-ம், ஆப்பிரிக்காவிலும், ஆசியாவிலும் 2-ம் இருக்கின்றன. 1970-ஆம் ஆண்டு எடுக்கப்பட்ட புள்ளி விவரத்தின்படி அமெரிக்காவில் மூவருக்கு ஒரு காரும், பிரிட்டனில் அறுவருக்கு ஒன்றும், சோவியத் யூனியனில் 200 பேருக்கு ஒன்றும் இருக்கின்றன.

**இந்தியர் ஒருவரின் சராசரி வருமானம்**

| ஆண்டு | 1960-61 ஆண்டைய விலைகளின் படி (ரூபாயில்) | அவ்வப்பொழுது நிலவிய விலைகளின் படி (ரூபாயில்) |
|---|---|---|
| 1960—61 | 306 · 4 | 306 · 4 |
| 1961—62 | 310 · | 316 · 4 |
| 1962—63 | 308 · 3 | 326 · 4 |
| 1963—64 | 318 · 2 | 366 · 4 |
| 1964—65 | 333 · 1 | 419 · 8 |
| 1965—66 | 306 · 8 | 421 · 2 |
| 1966—67 | 301 · 4 | 470 · 8 |
| 1967—68 | 322 . 5 | 551 · 4 |
| 1968—69 | 321 · 4 | 542 · 3 |

## சமத்துவம்

கம்யூனிசம் வந்தால் எல்லோருக்கும் சம ஊதியம் கிடைக்கும் என்று பலர் தவருக எண்ணிக் கொண்டிருக்கின்றனர். இது மார்க்ஸின் கருத்தன்று. ஒவ்வொருவரும் ஆற்றலுக்கு ஏற்றவாறு உழைக்க வேண்டும்; முடைகளுக்கு ஏற்ப ஊதியம் பெற வேண்டும் என்றுதான் அவர் கூறினர். இதிலிருந்து மனிதரின் ஆற்றல்கள் வேறுபடுகின்றன என்பதும், முடைகள் வேறுபடுகின்றன என்பதும். புலனுகும். ஆகவே, ஊதியங்களும் வேறுபடும். இதைவிடத் தெளிவாக ஸ்டாலின் கூறுகிருர். சம ஊதியம் என்பது சிறு முதலாளிகளின் (Petty bourgeois) மூளையில் உதித்ததாகும்; அனைத்துப் பண்டங்களையும் சமமாகப் பகிர்ந்து அளிக்க வேண்டும் என்ற மனப்பான்மையில் தோன்றியதாகும்; முற்காலத்தில் கம்யூனிஸத்தைப்பற்றிக் குடியானவர்கள் என்ன எண்ணினர்களோ அந்தச் சிந்தனையிலிருந்து முகிழ்த்ததாகும். அதே சமயம் ஊதியத்தில் ஏற்றத்தாழ்வு என்பது, தொழிலாளர்களைத் தம்முடைய உழைப்பின் அளவிலும், தரத்திலும் கவனம் செலுத்தும்படி அவர்களுடைய பருப்பொருள் நலனைப் பேணிக் காக்கிறது. இதனுல் தொழிலாளர்களின் உற்பத்தித்திறன் அதிகரிக்கவும் அது உந்துகோலாக இருக்கிறது.'' 1941-இல் ஸ்டாலின் பொருளியல் வல்லுநர்களின் மாநாட்டில் நிகழ்த்திய வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த சொற்பொழிவுக்குப் பின்பு கம்யூனிஸ்டுக் கட்சியின் அனைத்து ஒன்றிப்பு மாநாடு கீழ்க்கண்ட தீர்மானத்தை நிறைவேற்றியது. ஊதியத்தில் சமத்துவம் வேண்டும் என்ற உளுத்துப்போன பழக்கத்தை நாம் முழுதும் வேரறுக்க வேண்டும். இதிலிருந்து கம்யூனிஸ்டுகளும், மார்க்ஸிஸ்டுகளும் சம ஊதியத்தை விரும்பவில்லை என்பது தெளிவு. சம ஊதியம் என்ற கருத்து மார்க்ஸ் காலத்திற்கு முன்பு வாழ்ந்த பபூப் (Babeuf) என்பவரால் பரப்பப்பட்டது. இவர் ஒரு பிரஞ்சுக்காரர்; பிரஞ்சுப் புரட்சியின் பொழுது வாழ்ந்தவர். அண்மைக்காலத்தில் இறந்துபோன பிரிட்டிஷ் நாடகாசிரியரான ஜார்ஜ் பெர்னுட்ஷாவும், இந்தியாவில் காந்தியடிகளும் எல்லோருக்கும் சம ஊதியம் அளிக்க வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்தினர். ''உலகம் பொருமைப்படத்தக்க அளவுக்கு, இந்தியா, முன் மாதிரியாக ஒரு சுதந்தரமான நாடாக வாழ்ந்து காட்டவேண்டும் என்றுல், தோட்டிகள், மருத்துவர்கள், வழக்குரைஞர்கள், ஆசிரியர்கள், வணிகர்கள் ஏனையோர் அனைவருக்கும் ஒரே ஊதியம் அளிக்கப்பட வேண்டும். உழைக்காதவர் பிழைக்காதவர் என்ற விதியும் நடைமுறையில் நிறைவேற்றப்பட வேண்டும்.'' (காந்தி) இது மிகவும் புரட்சிகரமான கருத்து என்பதில் ஐயமில்லை. ஆனுல் எத்தனைபேர் இக் கருத்தை ஒத்துக் கொள்வார்கள் என்பது கேள்விக்குரிய பிரச்சினையாகும்.

## நேருவும் பிறரும்

''திட்டங்களை நிறைவேற்றுவதற்குத் தடங்கலாக இருந்தாலொழிய அரசாங்கம் எதனையும் எடுத்துக்கொள்ளாது. நீங்கள் விரும்பினுல், சோஷலிஸம் அல்லது கம்யூனிஸம் உங்களிடம் இருக்கும் செல்வத்தைப் பிரித்துக் கொடுப்பதற்குத் துணை செய்யலாம். ஆனுல் இப்பொழுது இந்தியாவில் பிரித்துக் கொடுப்பதற்குச் செல்வம் இல்லை; இருக்கின்ற ஏழ்மையைப் பிரித்துக் கொடுக்கலாம். நான் கம்யூனிஸத்தை எதிர்ப்பவனுமல்ல; சோஷலிஸத்தை எதிர்ப்பவனும் அல்ல. நான் இந்தியாவுக்காகத்தான் இருக்கிறேன அன்றி வேறு யாருக்காகவும் அல்ல. சோஷலிஸத்தின் வளர்ச்சி என்பது ஆளும் கணத்தின் (உத்தியோகஸ்தர்களின்) வளர்ச்சியே ஆகும். கம்யூனிஸ்டுகளாக ஆக வேண்டும் என்ற எண்ணம் எங்களுக்கில்லை.'' (நேரு) வலதுசாரி கம்யூனிஸ்டுக் கட்சியைச் சேர்ந்த திரு ஜோஷியின் கூற்று வருமாறு. ''சிந்தனையில் விடாப்பிடியாக இருப்பது நம் கட்சியைப் பற்றிக் கொண்டுள்ள பாவமாகும். சுதந்தரமாகவும் படைப்புத்திறனுடனும் சிந்திப்பதற்கு மாறுக, நாம் ரஷ்ய அனுபவத்தையோ அல்லது சீன அனுபவத்தையோ அல்லது இரண்டையுமோ ஈயடித்தான் காப்பி அடிப்

பதனுல், இந்தியர்கள் முன்னேறிச் செல்வதற்கான சொந்தமான வழியைக் கண்டுபிடிக்கத் தவறிவிட்டோம்.'' 10–6–1968-இல் இப்பொழுது இந்திய அரசாங்கத்தின் திட்ட அமைச்சராக இருக்கும் திரு. சி. சுப்பிரமணியம் கூறியதாவது; ''சோஷலிசம் என்றால் அனைத்துத் தனியார் உடைமையையும் அழிப்பதோ அல்லது தனியார் முனைவையும் அழிப்பதோ அல்லவென்றும், சமுதாய நலனையும் சமுதாயக் காப்புறுதியையும் பேணுவதே அதன் பிரிவு என்றும், எவ்வளவு விரைவில் நாம் தெளிவுபடுத்துகின்றோமோ, அவ்வளவு இந்நாட்டுக்கு நல்லது.''

## ஏற்றத் தாழ்வுகள்

ஏற்றத் தாழ்வுகளைக் குறைப்பது நமது ஐந்தாண்டுத் திட்டங்களின் தலையாய நோக்கங்களில் ஒன்றாகும். ஆனால் திட்டங்களின் விளைவாக ஏற்றத் தாழ்வுகள் அதிகரித்திருக்கின்றன என்பதைத் திட்டக் குழுவே ஒப்புக்கொண்டுள்ளது. செல்வந்தர்கள் பெரும் செல்வந்தர்கள் ஆகியிருக்கிறார்கள். கீழ் மட்டத்திலுள்ள 60% மக்களுக்கு நாட்டின் வருமானத்தில் 31% கிடைக்கிறது. மேல் மட்டத்திலுள்ள 40% மக்களுக்கு நாட்டின் வருமானத்தில் 69% கிடைக்கிறது. டாடா குடும்பத்தினர் ரூ. 417 கோடி முதலீடு செய்யப்பட்டுள்ள 53 கம்பெனிகளை நிருவகிக்கின்றனர். பிர்லா குடும்பத்தினர் 151 கம்பெனிகளை நிருவகிக்கின்றனர். இவற்றில் போடப்பட்டுள்ள முதலீடு 292 கோடியாகும்,

## எது வேண்டும் ?

பழைய காலத்திலிருந்தே இரண்டு வேறுபட்ட கருத்துக்கள் நிலவி வந்திருக்கின்றன. ஒரு சாரார் மனிதனைத் திருத்த வேண்டும் என்று கூறி வந்திருக்கின்றனர். இவர்களில் இயேசு கிறிஸ்து போன்ற சமயப் பெரியார்களும், திருவள்ளுவர் போன்ற அறமுரைத்த பெரியார்களும், காந்தியடிகள் போன்ற அரசியல் பெரியார்களும் அடங்குவர். ''தீதும் நன்றும் பிறர்தரவாரா'' என்ற கணியன் பூங்குன்றனார் கருத்தையும்,

> நாடா கொன்றோ காடா கொன்றோ
> அவலா கொன்றோ மிசையா கொன்றோ
> எவ்வழி நல்லவர், ஆடவர்
> அவ்வழி நல்லை வாழிய நலனே.

என்ற கருத்தையும் ''பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம் கருமமே கட்டளைக் கல்'' என்ற வள்ளுவரின் கருத்தையும்,

> ''நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும் தன்னை
> நிலைகலக்கிக் கீழ் இடுவானும்-நிலையினும்
> மேன்மேல் உயர்ந்து நிறுப்பானும் தன்னைத்
> தலையாகச் செய்வானும் தான்.''

என்ற நாலடியாரின் கருத்தையும் நோக்குக.

தனியார் உடைமையினால் தான் இப்பொழுது உலகத்தில் நிலவும் தீமைகள் யாவும் தோன்றியன என்று ஒருவர் சாடுவதைக் கேட்கும்பொழுது ஒவ்வொருவரும் யாதாயினும் ஒருவகையில் பிறரின் நண்பராக வாழலாம் என்ற கருத்துக்குச் செவி சாய்ப்பதுடன் மக்கள் அதை நம்பவும் செய்கிறார்கள். ஆனால் இவை கற்பனையே. இத்தீமைகள் யாவும் வேறொரு மூலத்திலிருந்து தோன்றின. அதுதான் மனிதனின் மோசமான இயல்பாகும் என்று அரிசுடாட்டில் கூறுகிறார். கம்யூனிஸ்டுகள் இதற்கு மாறாகப் புறச்சூழ்நிலையை மாற்றியமைத்தால் மனித இயல்பைத் திருத்திவிடலாம் என்கிறார்கள். இது ஓரளவுதான் உண்மையே அன்றி முற்றும் உண்மையன்று. பிறரை அடக்கி ஆளவேண்டும் என்ற நினைப்பு செல்வந்தர்கள் சிலருக்கு மட்டுமின்றி முரடர்களுக்கிருப்பதும் பொய், பொறாமை, களவு, சூது, சினம், கொலைவெறி, முதலிய குணங்கள் மனிதர்களிடையே பரவலாகக் காணப்படுவதும் இதற்குச் சான்றாகும். ஆயினும் நம் நாட்டில் நிலத்திற்கு உச்சவரம்பு விதித்தது போன்று நகர்ப்புற உடைமைகளுக்கும் உச்ச வரம்பு விதிக்கவேண்டும். அதேசமயம் குறைந்த அளவு ஒவ்வொருவருக்கும் இவ்வளவு உடைமை இருக்க வேண்டும் என்றும் சட்டம் விதிக்கவேண்டும். இது முடியாமல் போனால் எல்லோருக்கும் வேலை வாய்ப்பு

அளிக்க வேண்டும் என்பதை ஒப்புக் கொண்டு, இதை அடிப்படை உரிமைகளில் ஒன்றாகச் சேர்க்கவேண்டும். இப்பொழுது அரசாங்கக் கொள்கையின் கட்டளைக் கோட்பாடுகள் (Directive Principles of State Policy) என்ற அதிகாரத்தில் இடம் பெற்றிருக்கிறது. அதனால் இப்பொழுது வேலை இன்றி இருக்கும் ஒருவர் வேலைகோரி அரசாங்கத்தை எதிர்த்து நீதிமன்றத்தில் வழக்குத் தொடுக்க முடியாது. அடிப்படை உரிமைகளில் இதைச் சேர்த்துவிட்டால் நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்து வெற்றியும் பெறலாம். இதே போன்று ஒரே அளவு வேலைக்கு ஒரே அளவு கூலி (Equal pay for Equal work) என்பதையும் கட்டளைக் கோட்பாடுகள் அதிகாரத்திலிருந்து அகற்றி, அடிப்படை உரிமைகள் அதிகாரத்தில் சேர்க்கவேண்டும்.

## முடிவுரை

இதுகாறும் கூறியவற்றிலிருந்து நாட்டில் வருமானத்தைக் கணிசமான அளவு பெருக்குவதிலோ, விலைவாசிகளை ஏறாமல் தடுத்து நிறுத்துவதிலோ, வேலைவாய்ப்புக்களைப் பெருக்குவதிலோ, ஏற்றத்தாழ்வுகளைக் குறைப்பதிலோ, தொழில் துறையில் முன்னேற்றம் பெறுவதிலோ நம் ஐந்தாண்டுத் திட்டங்கள் தோல்வியே கண்டுள்ளன என்று விளங்கும். இதற்குக் காரணம் திட்டங்கள் ஓரளவு செம்மையாகத் திட்டப் பெற்றிருந்தும், சரிவர நிறைவேற்றப் படாமையேயாகும். மேலும் நம் நாட்டில் "சும்மா இருப்பதே சுகம்" என்ற போலி தத்துவம் நிலவுகிறது. இதற்கு ஒரே தீர்வு நாம் அனைவரும் கடினமாகப் பாடுபட வேண்டும் என்பதும், பாடுபட்டால் பலன் உண்டு என்பதுமாகும். 15, 16-ஆம் நூற்றாண்டுகளில் தென் அமெரிக்காவில் உள்ள பெரு என்ற நாட்டில் இங்காசு (Incas) என்ற வம்சத்தினர் அரசோச்சினர். அவர்கள் நாட்டு மக்கள் எங்ஙனம் உழைத்தார்கள் என்பதற்குச் சான்று வருமாறு:

| | | | |
|---|---|---|---|
| 1 | குழந்தைகள் | அகவை 5 வரை | பேனைக் களையவேண்டும் |
| 2 | இளஞ்சிறார்கள் | 5–10 ,, | பறவைகளை ஓட்டவேண்டும் |
| 3 | சிறுவர்கள் | 10–18 ,, | ஆடுகளை மேய்க்க வேண்டும் |
| 4 | இளைஞர்கள் | 18–25 ,, | பெற்றோர்களுக்கு ஒத்தாசையாக உழைக்க வேண்டும் |
| 5 | வயது வந்தவர்கள் | 25–50 ,, | வேளாண்மையில் ஈடுபட வேண்டும்; படையில் சேர்ந்து பணிபுரிய வேண்டும் |

இங்ஙனம் கடுமையாக உழைத்ததால் அந்நாட்டில் பசி, பட்டினியால் யாரும் இறந்ததில்லை என்று வரலாற்று ஆசிரியர்கள் கூறுகிறார்கள். பாரதியார், கரோமி, கரோமி, கரோமி, என்கிறார். இதன்பொருள் உழை, உழை, உழை என்பதாகும். இங்ஙனம் செய்தால் நாமும் பிழைத்துக்கொள்வோம்; நம் நாடும் உருப்படும். வெறும் பேச்சுக்களினாலோ, முழக்கங்களினாலோ, ஆரவாரங்களினாலோ பலனில்லை.

ஒன்றே செய்யவும் வேண்டும். ஒன்றும் இன்றே செய்யவும் வேண்டும். இன்றும் இன்னே செய்யவும் வேண்டும்.



# மேலைமொழி நூலாரின் மேலோட்டக் கொள்கைகள்

திரு. ஞா. தேவநேயப் பாவாணர்

இற்றை அறிவியல்களெல்லாம் மேனாடுகளில் தோன்றி வளர்ந்து வருகின்றமையின் அனைத்துறைகளிலும் மேலையர் சொல்வதெல்லாம் மேலான அறிவியலுண்மையெனப் பலர் கருதுகின்றனர்.

தமிழ் உலக முதல் உயர்தனிச் செம்மொழியாதலாலும், மொழிநூல் முதன்முதல் தமிழிலேயே கருக்கொண்டமையாலும், அமைப்பில் மட்டுமன்றி இருவகை வழக்கிலும் தமிழே சிறந்து வந்திருப்பதனாலும், மொழிநூற்கு அடிப்படையான இலக்கணம் கி. மு. 10-ஆம் நூற்றாண்டிலேயே தமிழில் முழுநிறைவாகத் தோன்றிவிட்டமையாலும், சமற்கிருத இலக்கணத்திற்குத் தமிழிலக்கணமே மூலமாதலாலும், மொழிநூல் என்னும் அறிவியல் குமரி நாட்டுத் தமிழர் கண்டதின் வளர்ச்சியேயன்றி, மேலையர் புதுவதாகப் புணர்த்ததாகாது.

முதன்முதல் தமிழகத்தில் வந்து வழங்கிய அயன்மொழி வடமொழியே யாதலால், அக்காலத்து மொழிகளைத் தென்மொழி வடமொழியென இரு வகுப்பாகவும், தென்மொழியைச் செந்தமிழ் கொடுந்தமிழ் என இரு வகையாகவும், செந்தமிழை இயற்சொல் (Primitives) திரிசொல் (Derivatives) என இரு கூறாகவும், வகுத்து; கொடுந்தமிழ் நாட்டுச் சிறப்புச் சொற்களை மட்டும் திசைச்சொல் (Provincia ism) எனத்தழுவி; திரிசொற்களை யெல்லாம் முதனிலை, ஈறு, உருபு, இடைநிலை, புணர்ச்சி, சாரியை, திரிபு (விகாரம்) என ஏழுறுப்பாகப் பகுத்து, இருவகைச் சொற்கும் இயற்பொருள் ஆக்கப்பொருள் ஆட்சிப்பொருள் வேர்ப்பொருள் ("மொழிப் பொருட் காரணம்") என்னும் நால்வகைப் பொருளுங்கண்டு; வலித்தல் மெலித்தல் தொகுத்தல் விரித்தல் நீட்டல் குறுக்கல் என்றும், போலி என்றும், சிதைவு என்றும், குறை என்றும், மரூஉ என்றும், சொற்றிரிபு முறைகட்குப் பெயரிட்டும்; கி. மு. 7-ஆம் நூற்றாண்டில் தோன்றிய தொல்காப்பியத்திற்கு முன்பே, மொழிநூற்கு அடிகோலி விட்டனர் நம் மூதறிஞரான முன்னோர்.

தொல்காப்பியம், "முந்து நூல் கண்டு முறைப்பட எண்ணிப்" புலந்தொகுத்த சார்பிற் சார்பு நூலாதலின், மேற்கூறிய மொழிநூற் கூறுகளுள், வடசொல் என்பது தவிர ஏனையவெல்லாம், தலைக்கழகக் காலத்தினின்று வழிவழி வந்தனவேயாம். ஆதலால், பிற்காலத் திரிமொழிகளாகிய ஆரியத்தையும் அரைச் செயற்கை இலக்கிய நடைமொழியாகிய சமற்கிருதத்தையும் அடிப்படையாக வைத்தாய்ந்து, மேலையர் உண்மைக்கும் உத்திக்கும் மாறாகக்கூறும் போலி நெறிமுறைகள் கொள்ளத்தக்கனவல்ல. அவையாவன:

## 1. மலைவாணரெல்லாம் பழங்குடி மக்களெனல்

மொழியில்லாத முதற்கால (Primitive) அநாகரிக மாந்தரெல்லாம், இயற்கை விளைவுண்டு மரத்திலும் குகையிலும் தங்கி மலையில் வதிந்தது உண்மையே. ஆயின், நீலமலைத் துடவரும் கோத்தரும் பெலுச்சித் தானப்பிராகுவியரும், முதற்கால மாந்தர் வழியினர் அல்லர். அவர்கள் நாகரிகக் காலத்தில் கொள்ளைக்கும் போருக்கும் அஞ்சிப் பாதுகாப்பைத்தேடி, குறிஞ்சி நிலத்திலிருந்தும் முல்லை நிலத்திலிருந்தும், சிறுபான்மை மருத நிலத்திலிருந்தும், மலையேறி உச்சிக்குச் சென்று குடிபுகுந்தவரின் வழியினரே. இதை அவர் ஊணுடையுறையுளும் தொழிலும் மொழியும் காட்டும். அவர்கள் மொழி கீழ் நிலத்து நாகரிக மொழியின் கொச்சைத் திரிபே.

| எ-டு | தமிழ் | துடவம் |
|---|---|---|
| | யான், நான் | ஒன் |
| | ஐயன் (தந்தை) | இன், எயி |
| | மகன் | மக் |
| | எருது | எஸ்த் |
| | ஒன்று | ஒக் |
| | உறங்கு | வற்க்ஸ் |
| | கும்பிடு | குபிட் |

முந்துகாலத் தமிழர் நிலை குமரி நாட்டிலேயே கழிந்து விட்டது.

## 2. சொற்குறுக்கமெல்லாம் வேர்ச் சொல்லெனல்

ஒரு மொழியின் சொற்கள் முந்துநிலையிலும் கொச்சை நிலையிலும் குறுகிநிற்கும். மலைவாணர் பேசுவது கொச்சை நடையாதலின், அவர் சொற்கள் பெரும்பாலும் ஓரசையாகவும் ஓரெழுத்தாகவும் குறுகி நிற்பது இயல்பு. இதை வேர்ச்சொல்லாகக் கருதி இற்றை மலைவாணரைப் பழங்குடி மக்கள் என்பதற்குச் சான்றாகக் கொள்வர் மேலையர்.

| எ-டு | தமிழ் | பிராகுவி |
|---|---|---|
| | ...ன் யான்) | |
| | இரு | அர் |
| | அவர்கள் | ஒவ்க் |
| | வாய்கள் | பாக் |

'எது மூலம்? எது திரிபு?' என்பது, சொல்லமைப்பை நோக்கினால் தெரியவரும்.

## 3. இலக்கியச் சொற்பொருள் வரிசையே இயற்கைச் சொற்பொருள் வரிசையெனல்

ஒரு சொல்லின் பல வடிவங்களும் பொருள்களும் தோன்றிய காலவொழுங்கை, அவை முதன்முதலாகத் தோன்றிய பொழுதே அறிய முடியும். இலக்கியத்திற் புதிதாகத் தோன்றியவை தவிரப் பிறவெல்லாம், பழைய மொழி நிலையில் தோன்றிய வரிசைப்படியன்றி, அவ்வவ்விடத்தின் தேவைக்கேற்றவாறே, முன்னது பின்னும் பின்னது முன்னுமாக ஆளப்பெறும். ஆதலால், இலக்கியத்தை அடிப்படையாகக் கொண்டு, ஒரு சொல்லின் வடிவையோ பொருளையோ முன்னது பின்னதென்று துணியமுடியாது. ஆயின், இயற்கையையும் உளநூலையும் தழுவி ஏரண முறைப்படி, சொற்பொருள் வரிசையொழுங்கைப் பெரும்பாலும் உய்த்துணரலாம்.

பள்ளி என்னுஞ் சொல்லிற்கு, படுக்கை, தூக்கம், படுக்கையறை, அறை, வீடு, இடம், விலங்கு துயிலிடம், சாலை, அறச்சாலை, மடம், பள்ளிக்கூடம், தவப்பள்ளி, அரண்மனை, கோவில், சமணபுத்தர் தொழுகைமனை, பணிக்களம், அரசன் துறவி ஆகியோர் கல்லறை, இடைச்சேரி, சிற்றூர், நகரம் முதலிய பல பொருள்கள் உள. அவற்றுள், இடம் என்பது வீடு என்பதன் பின்னரே தோன்றியிருத்தல் வேண்டும். ஆயின், இற்றைத்தமிழ் நூல்களுள் முதலதாகிய தொல்காப்பியத்தில்,

"சொல்லிய பள்ளி நிலையின வாயினும்" (எழுத். 18) என்று, பள்ளி என்னும் சொல் இடம் என்னும் வழிப்பொருளில் ஆளப்பட்டிருப்பதால், அதையே முதற்பொருளாகச் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அகரமுதலி குறித்துள்ளது. இங்ஙனமே, மேலைமொழி நூலாரும், இலக்கியத்தில் முந்தியாளப்பட்ட வடிவும் பொருளும் முந்தியவையென்றும், பிந்தியாளப்பட்ட வடிவும் பொருளும் பிந்தியவையென்றும், கொண்டிருக்கின்றனர்.

பள்ளி என்னும் சொல்லின் முதனிலை பள்ளத்தை அல்லது தாழ்மட்டத்தைக் குறிப்பதால், படுக்கை என்பதே அதன் முதற்பொருளாகும். நிற்கையினும் இருக்கையும், இருக்கையினும் படுக்கையும் அதனிற் படுக்கும் இடம் அல்லது விரிப்பும் தாழ்மட்டமாயிருத்தல் காண்க. பள்ளி கொண்டான் பள்ளியெழுச்சி என்னும் வழக்குகளையும் நோக்குக. பள்-படு-படுக்கை, படை, பாடி, பாடை, பாடு. பாட்டரம் = தட்டையரம். படை என்பது முதலில் அடிப்படையையே குறித்தது.

ஆரிய மொழிகள் திரிமொழிகளாதலால், அவற்றின் சொற்பொருள்கள் அவற்றிலேயே தோன்றியனவல்ல.

## 4. எல்லா மொழிகளும் இடுகுறித் தொகுதிகள் எனல்.

"எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே" என்பது தொல்காப்பியம் (பெயரியல், 1) இங்ஙனஞ் சொல்வதும் சொல்லக் கூடியதும் தமிழ் ஒன்றே. ஏனெனின், பெரும்பாற் சொற்களை இன்னும் இயல் வடிவிற் கொண்டுள்ளது அஃதொன்றே. ஏனை மொழிச்சொற்கள் பெரும்பாலும் திரிவடிவிலும் சிதைவடிவிலுமிருப்பதால், அவற்றின் வேர்ப்பொருளைக் காணல் இயலாது.

எ-டு. :—

| தமிழ் | பிறமொழி | பொருள் |
|---|---|---|
| மாறு—மாற்றம் | மாட்ட (தெலுங்கு) | சொல் |
| இடைகழி | தேஹலீ (சமற்கிருதம்) | வீட்டின் நடை |
| (இடைகழி—டேகழி—டேழி—தேழி | (கொச்சை திரிபு) டேகழி என்பதன் | திரிபே 'தேஹலீ') |
| இஞ்சிவேர் (இஞ்சு—இஞ்சி) | ஜிஞ்சர் (ஆங்கிலம்) | இஞ்சி |
| பசு-பை-பைது-பைதல் | பைதொஸ் (கிரேக்கம்) | பையன் |
| வள்-வர்-வார்-வாரணம்-வாரண | மாரினஸ் (இலத்தீன்) | கடற்குரிய |

தமிழிலும் பல சொற்களைக் கண்ட அல்லது கேட்டமட்டில் அவற்றின் வேர்ப்பொருளைக் காணமுடியாது. சிலவற்றில் அது விளங்கித் தோன்றும்; சிலவற்றில் மறைந்து நிற்கும். மறைந்து நிற்பவற்றை ஆய்ந்தே காணல் வேண்டும். அதனால், "மொழிப் பொருட் காரணம் விழிப்பத் தோன்று" என்றார் தொல்காப்பியர். (உரி. 96).

எ-டு. :—

சுல்—சுடு—சுடல்—சுடலை
(விழிப்பத் தோன்றுவது)

எ-டு. —

புல்—புள்—புழல்—புடல்—புடலை
(விழிப்பத் தோன்றாதது)

மேலைமொழி நூலார் இயன்மொழியாகிய தமிழை அடிப்படையாகக் கொள்ளாது திரிமொழியாகிய சமற்கிருதத்தை அடிப்படையாகக் கொண்டு ஆய்ந்ததனாலேயே, வேர்ப்பொருள் காணாது குன்று முட்டிய குருடர் போல் இடர்ப்பட்டு, எல்லா மொழிகளும் இடுகுறித்தொகுதிகளே என்று முடிபு செய்தனர்.

## 5. இந்திய நாகரிகம் ஆரியர் கண்டது எனல்.

தமிழ் வரலாற்றையும் தமிழர் வரலாற்றையும் ஆழ்ந்து ஆராயாது, தமிழர் நண்ணிலக் கடற்கரை நாடுகளினின்று வந்தவரென்றும், கலவையினத்தாரென்றும், வேத ஆரியரால் நாகரிகப்படுத்தப்பட்டவரென்றும், குருட்டுத்தனமாகவும் குரங்குப் பிடியாகவும் கொண்டுள்ளனர். இதற்கு ஆராய்ச்சியின்மை மட்டுமன்றி, இனவுணர்ச்சியும் கரணியமாகும்

குமரிநாடு முழுகிப்போனதும், முதலிரு கழக நூல்களும் இறந்துபட்டதும், மதத்துறையில் தமிழும் குமுகாயத்துறையில் தமிழரும் தாழ்த்தப்பட்டிருப்பதும், இவற்றிற்கு மாறாக, இந்திய நாகரிக இலக்கியம் இன்று பெரும்பாலும் சமற்கிருதத்திலிருப்பதும், சமற்கிருதம் தேவமொழியென்றும் பிராமணர் பிறப்பிலுயர்ந்தவரென்றும் உயர்த்தப்பட்டிருப்பதும், மேனாட்டார் மேலோட்டமாகக் காணும் வேற்றுமை நிலைமைகளாகும்.

## 6. சமற்கிருதம் ஆரியத்தின் மூலம் எனல்.

தமிழின் அல்லது தமிழரின் பிறந்தகம் குமரிநாடென்றும், தமிழ் திரிந்து திரவிடமும் திரவிடம் திரிந்து ஆரியமும் ஆயிற்றென்றும், மேனாட்டினின்று வந்து வழக்கற்ற ஆரியம் வடநாட்டுப் பிராகிருதங்களொடு கலந்து வேத மொழியாயிற்றென்றும், வேதமொழி தமிழொடு கலந்து சமற்கிருதம் என்னும் இலக்கிய நடைமொழி (Literary dialect) தோன்றிற்றென்றும், உண்மையறியாத அல்லது அறிய விரும்பாத மேலை மொழி நூலார், சமற்கிருதத்தையே ஆரியத்தின் மூலமென்று கொண்டு. சட்டைக்கேற்ப உடம்பை வெட்டுவதுபோலப் பல ஒவ்வாத நெறிமுறைகளைக் கொண்டு, வண்ணனை மொழி நூல் (Descriptive Linguistics) என்னும் வழுவியற் போலியறிவியலை வளர்த்து வருகின்றனர். இதன் விளக்கத்தை, இனிவெளிவரும் என் A Guide to Western Tamilologists என்னும் ஆங்கில நூலிற் கண்டு தெளிக.



# நாடகத் தமிழ்

( பேராசிரியர் ச. பாலசுந்தரம், கரந்தைப் புலவர் கல்லூரி )

**தோற்றுவாய் :**

முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம் பொருளாய்ப் பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியதாய்ப் பிறங்கும் தமிழ் மொழி கல்தோன்றி மண்டோற்றுக் காலத்து வாளொடு முன்றோன்றி மூத்த குடியினராய தென்னக மக்களின் சிந்தையிற் செழித்துத் தெய்வ நலங்கமழச் சீரிய இலக்கிய இலக் கணங்களைப் படைத்துக் காலத்தால் அழியா மற் கன்னித் தன்மையொடு விளங்கும் பெற் றியைக் கடற்புவி தோன்றிய கற்றறி சான் றோர் கணித்துப் போற்றி நுணித்தாராய்ந்து உளமுவந்து வியந்து உயிரோடுலவும் உயர் தனிச் செம்மொழிகளுள் ஒப்பற்ற மொழி இஃதென உரைத்தேத்துகின்றனர். வழக் குஞ் செய்யுளும் ஆயிருமுதலின் எழுத்தும் சொல்லும் பொருளும் நாடிப் புலந்தொகுத்த ஒல்காப் புலமைத் தொல்காப்பியனார் இத் தொன்மொழியின் ஒண்மை நோக்கித் "தமி ழென்கிளவியும் அதனோரற்றே" எனத் தனித் தெடுத்து இலக்கணங்கூறி இன்புற்றனர்.

மொழி என்பது மக்கள் தத்தம் கருத் துக்களையும் உணர்வுகளையும் உணர்த்தவும் அவ்வாறே உணரவும் தோன்றி வளரும் மக்களாக்கப் பொருளாயதோர் கருவி என்ப. எனவே, காட்சிப் பொருளும் கருத் துப் பொருளுமாகிய எல்லாப் பொருள்களை யும் உணரவும் உணர்த்தவும் வாய்ப்புடைய யாவும் மொழியாம் என்பதனை எதிர்மறுத் துணருந்திறத்தால் ஏற்றுக்கொள்ளலாம். அவ்வாற்றான் உடலுறுப்புக்களின் செயற் பாடுகளும் எழுத்தல்லா ஓசைகளும் கருத் துக்களைப் புலப்படுத்துமேல் மொழியின் நிலையை எய்துமென்பதில் ஐயமில்லை. அதனானன்றே "கண்ணொடு கண்ணினை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள் என்ன பயனுமில" என்பது புகுமுகம் புரிதலென் னும் மெய்ப்பாடாகிக் காதலர்தம் உள்ளத்து வேட்கையை ஒருவர் ஒருவருக்கு உணர்த் தும் ஓசையில் உரையாய் மிளிர்கின்றது. இவ்வாறே

"பறைபடப் பணிலம் ஆர்ப்ப ... ...
... ... வாயாகின்றே தோழி ஆய்கழல்
சேயிலை வெள்வேல் விடலையொடு
தொகுவளை முன்கை மடந்தை நட்பே"

(குறுந். 23)

என்பதனுள், பறைஒலியும் வளையிசையும், உடன்போகிய தலைவியைத் தலைவன் அவ னூர்க்கண் மணந்துகொள்ளும் நிகழ்ச்சியினை எழுத்தல்லா ஓசைக் குறிப்பால் செவிலிக் குணர்த்தி உரையாய்த் திகழ்கின்றன.

இவ்வொலிகளும் ஓசைகளும் அநுகர ணமாய் இருக்குமளவில் பொருள் பயவாத மூல இசையாக நிற்கும். இவ் இசைமொழிக்கு முதற்காரணமாய்த் தலைமுதலாக அண்ணமீ றுக எண்வகை உறுப்புக்களால் செப்ப முற்று எழுத்துருவாகித் தனித்தும் தொடர்ந் தும் இயங்கிப் பொருளறிவுறுக்குங்கால் கிளவி (சொல்) ஆகும்.

இவ்வாறு செய்கை-ஓசை-கிளவி என் னும் மூன்று நிலைகளாய் விளங்கிப் பொரு ளுணர்த்தும் திறன் உலகிடை வழங்கும்

எல்லா மொழிகளுக்கும் பொதுவெனினும், மொழிக்கண் நிகழும் மூவகைப் பாங்கினை யும் முற்ற உணர்ந்து இயல், இசை, நாடகம் என முப்பாலாக வகுத்தும் முத்தமிழெனத் தொகுத்தும் வழங்கி வளர்த்து வருகின்ற வித்தகம் தமிழ்மொழிவாணர் தமக்கே உரிய சிறப்பாகும்.

அன்றியும், தண்டமிழின் தகவினைத் தக்காங்கு ஆராயின் இயல் இசை நாடகம் என்பவை தனித்தனி நின்று சால்புறலே யன்றி அவை தம்முள் கலந்து நின்று காட்சி தரும் மாட்சியையும் உணரலாம். கலக்குங் கால் மலரும் இதழும்போல வேற்றுமை தோன்றக் கலத்தலும், பாலும் நீரும் போல ஒற்றுமை தோன்றக் கலத்தலும், என இரு வகையாகக் கலந்து நிற்றலையும் காணலாம். நாடகத்துள் இசையும் இயலும் வேற்றுமை நயத்தோடு விரவி நிற்பதும், இசையுள் நாடகம் வேற்றுமை நயத்தோடும் இயல் ஒற்றுமை நயத்தோடும் இணைந்து நிற்பதும், இயலுள் ஏனைய இரண்டும் ஒற்றுமை நயத்தொடு கலந்து நிற்பதும் உற்றுநோக்கின் தெற்றெனப் புலப்படும். அதனுன் இயற்றமிழைப் பொதுவாக முத் தமிழ் என்று புகல்வதும் வழக்காறுயிற்று.

இயற்றமிழுள் தொடர் மொழிகளுள் மட்டுமன்றி ஒருமொழிச் சொற்களிலும் இக் கூறுபாடுகளைக் காணலாம், ஆழ்ந்து நோக் கின் இம் முத்திறத்தாலும் தமிழ் மொழிச் சொற்கள் அமைந்துள்ளமையை நன்கு காணலாம். எடுத்துக் காட்டாக ஆனை (யானை) என்பது பிற விலங்கினும் வேறுபட் டதாய்த் திண்மையும் பருமையும் உடைய தாய் இருத்தலின் வியப்பிற்குரிய மெய்ப் பாட்டினடிப்படையில் "ஆ" (ன்+ஐ— சாரியைகள்) எனவும்; ஈக (ஈதல்) என்பது இதழ் விரிந்து கண் சுருங்கிப் பற்கள் தோன்ற இளிவுக்குரிய மெய்ப்பாட்டினடிப் படையில் "ஈ" எனவும்; தெவ் (பகை) என்பது விழிசுழன்று புருவம் சுருங்க நாவா னது மேலண்ணத்தைத் தொட்டு நிமிர, கீழிதழை மேல்வாய்ப்பல் லழுத்த வெகுளிக் குரிய மெய்ப்பாட்டினடிப்படையில் தோன் றிக் காட்சியளவானே உணரநிற்பதைக் காணலாம்.

இனி, யாழ், குயில், கூகை. விண், ஒலி என்பவை தொடரோசை பற்றியும், மஞ்ஞை, தட்டை, தண்ணுமை என்பவை நடைஓசைபற்றியும் தோன்றிய இசைச்சொற் களாம். இவற்றை ஞ்யாழ்ம்ழ்ழ் எனவும் மஞ்ஞைம்ஞைம்ஞை எனவும் ஒலித்துச் செவியளவானே கேட்டுணரலாம்.

இவ்வாறு வரும் நாடகச் சொற்களும் இசைச் சொற்களுமல்லாத மலை, கடல், நாடு, தீ, வளி, நீர், ஆடு, குதிரை, மாந்தர், மக்கள் கதிர், மதி,—உள்ளம், மென்மை, நன்று, தீது முதலாய சொற்கள் வரலாற்று முறைமை யால் மனக்குறிப்பானே உணர்ந்தறியும் இயற் சொற்களாம். இவை இவ்வாறுதல் பற்றியே

"உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை
இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றி
... ... ... ... ... ... ...
தத்தம் மரபின் சென்றுநிலை மருங்கின்
எச்சொல் லாயினும்
பொருள்வேறு கிளத்தல்" என்று

வேர்ச் சொல்லாகிய உரிச் சொல்லிற்கு இலக் கணம் கூறிப் போந்தார் தொல்காப்பியர். இவற்றுள் பண்பென்பது பெரும்பாலும் காட்சியாற் கண்டுணரும் நாடகச் சொற்க ளாம், இசை செவியானுணரும் இசைச் சொற்களாம், குறிப்பு ஐம்புலன் வாயிலாக அகக்கரணத்தால் உணரும் இயற்சொற்க ளாம், என்க.

## முன்னுரை :

இவ்வாறு பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே தமிழறிஞர் தாம் நுண்ணுணர் வோடு செவ்விதின் அமைத்த இத் தீந்தமிழ் நாளடைவில் திருந்திய வடிவம் பெற்றுத் தொகையும் தொடருமாக முளைவிட்டு இலக் கண வேரூன்றி உரையும் செய்யுளுமாகப் பாமணங் கமழ இலக்கியக் கனிகளாகப்

பழுக்கத் தொடங்கிப் பல்கிப் பன்னெடுங் காலத்திற்கு நின்று பயனளிக்கும் பல துறைகளிலும் வளர்ந்தது. அருளறிவு சான்ற நல்லிசைப் புலவர்கள் முத்தமிழுள் இறுதி நின்று வித்தகமளிக்கும் இயற்றமிழையே மிகுதியும் போற்றி வளர்க்க, ஏனை இசைத்தமிழும் நாடகத் தமிழும் அவற்றவற்றினியல்புக் கேற்ப அவ்வத்துறை வல்லுநர்களால் வளர்க்கப்பெற்று வரலாயின என உய்த்துணரலாம்.

இடைச் சங்கத்தின் இறுதிக் காலத்து வாழ்ந்தவராகக் கருதப்பெறும் தொல்காப்பியர் காலத்திற்குப் பன்னூறுண்டுகளுக்கு முன்பே இசைத்தமிழும் நாடகத்தமிழும் தனித்தனிப் பிரிவாகச் செழித்து வளர்ந்து செம்மையுற்றிருந்தன என்பதற்கு இற்றைக்குள்ள தமிழ் நூல்களுள் மூத்ததும் முதன்மையானதுமான தொல்காப்பியத்துள்

''அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
உளவென மொழிப இசையொடு சிவணிய
நரம்பின் மறைய என்மனார் புலவர்''
''இசைப்பு இசையாகும்''
''நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்''
''கலியே பரிபாட் டாயிரு பாங்கினும்
உரிய தாகும் என்மனார் புலவர்''
''பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருளும்
கண்ணிய புறனே நானான் கென்ப''

என வரும் நூற்பாக்களே வெள்ளிடை விலங்கலென நின்று தக்க சான்று பகர்கின்றன. இந்நூற்பாக்களை ஊன்றி நோக்கின் இவற்றுள் வரும் கருத்துக்கள் யாவும் தொல்காப்பியர் தம் கூற்றாகக் கூறாமல் 'என்மனார் புலவர்' 'என்ப' என வழிநூல் வாய்பாடுபட விளம்பப்பெற்றுள்ளமை காணலாம். எனவே, தொல்காப்பியர் காலத்தில் இசை, நாடகம் பற்றிய இலக்கண-இலக்கிய நூல்கள் பல இருந்திருத்தல் வேண்டுமென்பதில் ஐயமில்லை. தொல்காப்பியர் இயற்றமிழுக்கு மட்டும் இலக்கணங் கூறப்புகுந்து அதனையும் தொகுத்துச் (மிகச்சுருக்கமாக) செய்தளித்துள்ளமையின் தொல்காப்பியத்தைக் கொண்டு இசை, நாடகம் பற்றி விளக்கமாகத் தெரிந்துகொள்ளும் வாய்ப்பில்லாமற் போய்விட்டது. எனினும், தொல்காப்பியத்தின் துணையால் நாடகத் தமிழின் பண்டைநிலையை ஒரளவு உய்த்துணரலாம்.

## முத்தமிழ் :

மொழி நிலையில் நோக்குங்கால் முத்தமிழ் என்பது ஒரு பொருளையே சுட்டுமாயினும் வகை செய்து காணுங்கால் மூன்றாக விரிந்து பொருள் தருவதைக் காணலாம். அவை இயற்றமிழ் – இசைத்தமிழ் – நாடகத்தமிழ் என்பனவாம். இத் தொகை மொழிகள் இந் நிலையினின்று மாறித் தமிழியல், தமிழிசை, தமிழ்நாடகம் எனவும் நிற்கும். இவ்வாறு நிற்குங்கால் இவற்றின் பொருள் மிகவும் வேறுபடும். இவற்றைத் தோற்றுவாயில் கூறியாங்கு நோக்கின் இயற்றமிழுள் இசை, நாடகங்கள் இயைந்தும், இசைத்தமிழுள் இயல், நாடகங்கள் ஒன்றியும், நாடகத் தமிழுள் இயல், இசை விரவியும் நிற்பதை உணரலாம். இவ்வாறு இவை தம்முள் கலவாமல் தனித்தனியே நிற்குமாயின் இயற்றமிழ் வெறும் சொல்லடுக்காகவும், இசை வெறும் ஓலமாகவும், நாடகம் வெறும் உறுப்பசைவாகவும் நின்று மணமில்லா மலர் போலவும் உயிரில்லா உடல்போலவும் பொருளுணர்வாகிய பயனைத் தராமற் கழியும். இவை ஒவ்வொன்றும் மற்றொவ்வொன்றிற்கும் உணர்வும் உயிரும்போல் இன்றியமையாது நின்று உதவுவன. அதனாற்றான் அருந்தமிழ்ச் சான்றோர் மூன்றையும் ஒன்றாக்கி முத்தமிழ் என வழங்கினர். இந்நுண்மை விரிக்கின் பெருகும்.

## மொழியும் கலையும் :

இனி இம்முத்தமிழும் கருத்தை அறிவிக்கும் மொழியளவில் நிற்பின் மலராத முகையும், கனியாத காயும், பயிலாத அறிவும் போல மன்பதைக்கு உணர்வின்பத் துன்ப வாழ்வின்

பயனை நல்க மாட்டா. அவை கலையாக முகிழ்த்து முதிரும் போதுதான் புலன்களுக்கு அப்பாற்பட்ட மனத்தையியக்கி மனிதப் பிறவியின் பயனாகிய உள்ளுணர்வின்பத்தினை அளிக்கவல்லன வாகின்றன. இயற்றமிழ் கலையாகப் பழுக்கின்ற போது உரையும் பாவுமாய் நூலும் செய்யுளுமாகி அறிவுக்கு ஆக்கத்தை நல்கி அருளும் பொருளும் பயக்கின்றது. இசைத்தமிழ், கலையாக மலரும் போது உருவும்தருவுமாய்க் கிளைத்துப் பண்ணும் திறனும் புணர்ந்து சீரும் பாணியும் செறிந்து யாழொடும் முழவொடுங்கூடிச் செவிக்கும் சிந்தைக்கும் இருவகை இன்பத்தையும் பயக்கின்றது. நாடகத்தமிழ், கலையாக விரியும்போது இயலொடும் இசையொடுங்கலந்து ஆடலும் அவினயமும் பொருந்தி, சுவையும் தெளிவும் முற்றி, அறிவுக்கு ஒளியும் வாழ்விற்கு வழியும் காட்டிச் சிந்தைக்குத் தேனாகிச் செவிக்கு உணவாகி விழிக்கு விருந்தாகி இயலும் இசையும் தரும் நயமிகு பயனெல்லாம் நல்குகின்றது.

எப்பொருளும் தன் இயற்கை நலம் குன்றாமல் கலையுருவாகின்ற போதுதான் நிலை பேறடைகின்றது. கலைமுற்றாதாயின் மதிக்கு முழுமையில்லை. கருங்கல்லும் செம்பொன்னும் வெண்பஞ்சும் நெட்டியும் கட்டையும் கலையுருவாகிய நிலையில் அவை பயக்குந் தொலையா இன்பத்தைத் துய்த்துத் துய்த்துக் கழிபேருவகை அடைகின்றது இவ்வுலகு. கலையின்பத்தை நாடிநாடிக் களிக்கின்றது கல்வியுலகு. இயற்கையே கலையின் வடிவம், இறைவனே கலையின் உரு எனத் தெருளுறு காட்சியர் செப்புவர். கலையே மக்களை மாக்களினின்று வேறுபடுத்திக் தெய்வத்தன்மையை எய்துவிக்கின்றது. இம்முறையால் நாடகத் தமிழும் கலையாகுங்கால் நயனும் நலனும் நல்கி இன்பும் பண்பும் வழங்கி மன்பதையை வாழ்விக்கின்றது; வளர்க்கின்றது.

## கலையின் வகையும் இயல்பும் :

சான்றோர்கள் கலையை அறிவுக்கலை, அழகுக்கலை என இருவகையாகப் பிரித்துக் கூறுவர். இவ்விரு பிரிவுள் நாடகம் அழகுக் கலையைச் சார்ந்ததாகும். இசை, சிற்பம், ஓவியம், முதலானவையும் அழகுக் கலைகளே யாம். அழகுக் கலையைக் கவின்கலை என்றும் கூறுவர். கேட்பதற்கும் காண்பதற்கும் அழகின்பத்தை அளிப்பதனால் மட்டும் இப் பெயர்கள் அமையவில்லை. இக்கலைகளின் நிலையுணர்ந்து கலந்து அவற்றைத் துய்ப்போரின் அகவைக்கும், அனுபவத்திற்கும் ஆற்றலுக்கும் அறிவிற்கும் ஏற்பத் துய்க்குந் தொறும் துய்க்குந்தொறும் அவரவர்க்குத்தக புதிய புதிய கற்பனை நலம் பூத்துச் சிந்தனை விரிந்து ஒளியும் தெளிவும் வழங்கித் தெவிட்டாத இன்பக் கடலில் ஆழ்த்துவதனால் அழகுக் (ஆழ்தல் = ஆழ்கு – அழகு) கலையென்றும்—அறிவும் நிறைவும் வந்து கவித் தலினாலே கவின்கலை என்றும் பெயர்பெற்றன என்று கருதல் வேண்டும். இக்கவின்கலைகள் பருப்பொருளாலாயினவும் நுண்பொருளாலாயினவும் என இருதிறத்தன அவற்றுள் சிற்பம் முதலியன பருப்பொருளாலாயவை. இசை முதலியவை நுண்பொருளாலாயவை. நாடகம் இவ்விரண்டாலும் ஆன ஒன்று.

பொதுவாகக் கலை என்பது நாகரிகம், பண்பாடு ஆயவற்றைப்போல உலகிலுள்ள எல்லா நாட்டிற்கும் இனத்திற்கும் இயல்பாகவே உரிமையுடையது. மக்களினத்திற்கெல்லாம் பொதுவாக உள்ள கலை, நாகரிகம் பண்பாடுகள் அல்லாமல் அவ்வந்நாட்டிற்கும் இனத்திற்கும் சிறப்பாகவும் இவை உண்டு. மனித நாகரிகம், மனிதப் பண்பு என்பது பொது. எகிப்திய நாகரிகம், சுமேரிய நாகரிகம், ஆரிய நாகரிகம், தமிழ் நாகரிகம் என்பது சிறப்பு. இவ்வாறே பண்பாட்டையும் கலையையும் பிரித்துணரலாம். எனினும், பண்பாடு நாகரிகம் இவற்றினியல்புக்கும் கலையினியல்புக்கும் மிகப்பெரிய வேறுபாடு உண்டு. மனித நாகரிகம் அறிவியற் கலையின் துணையால் வளர வளர உலகில் உள்ள நாடுகள் காலத்தாலும் இடத்தாலும் மிக நெருங்குதலும் பல்வேறு இனமக்கள் அரசியல் வாணிகம் முதலிய காரணங்களால் நாடுகளுக்குள் ஊடுருவுதலும் ஆங்

காங்கே நிலையாகத் தங்குதலும் வரலாறு காட்டும் இயல்புகளாம். இவ்வாறு மக்களினம் ஒன்றோடு ஒன்று நெருங்குதலால் அவ்வவ் வினத்திற்கே உரிய நாகரிகமும் பண்பாடும் கலையும் ஓரளவு மற்றோரினத்தின் நாகரிகம் பண்பாடு கலைகளோடு கலப்பது தவிர்க்க முடியாததாகின்றது. இருப்பினும் சில நாடுகளும் இனங்களும் தத்தம் தனித்தன்மை பெரிதும் கெடாதவாறு பேணி ஒழுகுதலும், சில பேணுதொழுகி நாளடைவில் மறந் தொழுகுதலும் சில தமது தனித்தன்மையை வலிந்து நீக்கிப் பிறவற்றை விரும்பி ஏற்று ஒழுகுதலும் வழக்காக நிகழ்வதனை வரலாறு காட்டி நிற்கின்றது. இவ்வாறு தத்தம் தனித்தன்மையைப் பேணுதலிலும் —கலத்த லிலும் நன்மையும் உண்டு, தீமையும் உண்டு. எதுஎது கலக்கலாம், எவ்வளவில் கலக்க லாம், எது கலத்தல் கூடாது என்பதனை அறி வுலகம் கணித்து அளவுபடுத்தல் வேண்டும். பொதுவாகப் பண்பாடு கலத்தல் தவறு. நாக ரிகம் அளவின்றிக் கலப்பது தவறு. கலை கல வாமல் இருப்பது தவறு, [இக்கருத்தின் வன்மை மென்மைகளைத் தனிக் கட்டுரையில் ஆராய வேண்டுதலின் இவற்றை விரிக்க வில்லை,] இவ்விலக்கணத்தை அளவுகோலா கக்கொண்டு நோக்கினால் தமிழ் நாடகக்கலை யின் வாழ்வையும் வளர்ச்சியையும், தாழ்ச்சி யையும் வீழ்ச்சியையும் ஓரளவு உணர்ந்து கொள்ளலாம். பிறகலைகளுக்கும் இஃது ஓரளவு பொருந்தும்.

## பொருளுரை — நாடகத்தமிழ் தோற்றம்

முத்தமிழுள் முதற்கண் தோன்றியது நாடகத் தமிழேயாம். பின்னர் இசையும் அதன் பின்னர் இயலும் தோன்றியுள்ளன. இயலானது இசை (ஒலி) யின் அடிப்படை யில் அளவைக்குட்பட்டுத் தோன்றி நிகழும். இசை இயற்கையாகவும் ஒன்றனை ஒப்பாக நிகழ்த்துதல் காரணமாகவும் தோன்றியியங் கும். இயற்கை இசை என்பது ஆ ஈ ஓ ஐ ய்ம் என்றாற்போல இன்ப துன்ப உணர்வு களையும் வியப்பு விருப்பு அச்சம் வெகுளி முதலிய சுவைகளையும் வெளிப்படுத்தும் ஓரசைவு ஒலிகளாம். ஒப்ப நிகழ்த்தல் இசையாவது விலங்கொடு விலங்காக மக்கள் வாழ்ந்த காலத்தில் தம்மினத்திற்கு உணர்த்த வும் உணவு முதலிய பயன் கொள்ளவும் ஆடு மாடு புலி யானை முதலிய விலங்குகளின் குரல் போலவும், புறா, கிளி, குயில் முதலிய பறவை களின் ஒலிபோலவும் ஒலித்த பல அசைவு ஒலிகளாம். (இசை நூலாரும் ஆடு மாடு குதிரை யானை வண்டு மயில் அன்னம் இவற் றின் குரல் ஒலிகளையே அடிப்படையாகக் கொண்டு ஐந்தும் ஏழுமாகிய இசை ஓசை களை வகுத்துள்ளமை ஈண்டுக் கருதற்பாலது) நாடகமாவது போலச் செய்தல் ஒன்றையே அடிப்படையாகக் கொண்டது. ஆதலின், இதுவே செய்கை மொழியாய் முதற்கண் தோன்றியது என்பதைத் தெளியலாம். அஃதாவது யானையை உணர்த்தத் தன் உடம்பை அசைத்தும், பறவைகளை உணர்த் தத் தன் இருகைகளை விரித்து அசைத்தும், குரங்கை உணர்த்த முகத்தைக் குவித்தும் உடம்பைக் கோணியும், வெகுளியை உணர்த் தப் புருவத்தை ஏற்றி வாயிதழை மடித்தும் காட்டும் உறுப்பசைவுகளாகும். இன்றும் இவ்வியல்புகளை ஊமையரிடத்துக் காண லாம். இம்முறையில் நாடகம் முதலாவதாக வைக்கப்படும் சிறப்பினது எனினும் வைப்பு முறையில் இறுதி இடத்தை அடைந்ததற்குப் பல காரணங்கள் உண்டு. இது நிற்க.

## சொல்லாய்வு :

நாடகம் என்னும் சொல் தமிழ்ச் சொல்லா ஆரியச்சொல்லா என்பதில் அறிஞர் களுக்குள் கருத்து வேறுபாடுகள் உண்டு. எனினும் இது தனித்தமிழ்ச் சொல் என்பதற் குரிய வாய்ப்புக்களே மிகுதியாக உள. பொதுவாக எல்லா மொழிகளிலும் பொருள் தோன்றிய பின்புதான் அதனைச்சுட்டி வழங் குவதற்குரிய சொல் தோன்றும். இவ்வியல் புக்கு மாறாக வேறு பிற மொழிகளில் சிற்சில சொற்கள் உளவாயினும் தமிழ் மொழியின்கண் உள்ள எல்லாச் சொற்களும் காரணத்தோடேயே தோன்றியுள்ளன.

இதனைத் தொல்காப்பியம் ''எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே'' ''மொழிப் பொருட் காரணம் விழிப்பத் தோன்று'' என்னும் நூற்பாக்களால் வலியுறுத்தும்.

இந்நெறியில் நோக்கின் 'நாடகம்' என்னும் சொல்லும் காரணப் பெயரே என்பதைக் காணலாம் .என்னை காரணம்? நாடகம் என்பது நாடு + அகம் என இருபகுதிகள் கொண்ட ஒட்டுச் சொல். இவற்றுள் முன்னது ஈரசையும் பின்னது ஓரசையுமாம். இனி இந் நாடு என்பது 'நாட்' என்ற மூலப்பகுதியோடு அரையிதழ் குவிதலால் தோன்றும் குற்றியலுகர விகுதி பெற்று நிற்பதை யறியலாம். இந்த 'நாட்' என்பது 'நட்' (நடு) என்னும் மூலப்பகுதியின் நெட்டொலி உருவமாம். ஆதலின் இவ்விரு மூலப்பகுதிகளினின்றும் முறையே (நட்)–நடு–நடல்–நடன் நடி–நடர்–நட–நடை–நடலை–நடவு–நட்டல் எனவும் (நாட்) நாடு–நாடல்–நாட்டு–நாட்டம்–நாடி எனவும் பலசொற்கள் தோன்றியுள்ளன. இவற்றுள் குற்றொலி முறையில் தோன்றியுள்ள சொற்கள் பருவுறுப்புக்களின் செயல்களையும் நெட்டொலி முறையிற்றோன்றியுள்ள சொற்கள் நுண்ணுறுப்புக்களின் செயல்களையும் புலப்படுத்துதலை ஓர்ந்துணரலாம். (நட = இயங்கு, நடு = ஊன்று, நடி = அசை எனவும்; நாடு = ஆராய், காண், கருது நாட்டு, நிலை பெறச்செய், தோற்றுவி; நாட்டம் = காட்சி, நோக்கம் எனவும் முறையே காண்க.) 'நடநவிலியல்பு'', ''யூபம் நட்டவியன்களம் பலகொல்'', ''நாட்டிய மரபின் நெஞ்சுகொளினல்லது''. ,'நாட்டல் வலியவென்மனார் புலவர்'', ''நாட்ட மிரண்டும் கூட்டி யுரைக்கும்'', ''நாடாது நட்டலிற் கேடில்லை'', ''நாடொறும் நாடுக'' எனவரும் ஆன்றோர்தம் செய்யுள் வழக்குகளால் இவற்றின் பொருள்களைத் தெளியலாம்.

ஆதலின் நாட் + அகம் = நாடகம் என்பது கண்ணுற் காண்பது–காட்சியை அகத்தே பெறுவது – என்னும் பொருளைப் புலப்படுத்தலைக் காணலாம். காக்கை காகம் என வருதல் போல நாட்டகம் என வருதற்பாலது நாடகம் என வந்தது. நாட் + இயம் = நாட்டியம் என்பது காட்சியொடு இயக்கத்தை அடிப்படையாகக் கொண்டது என்னும் பொருளையும், நடம் என்பது இயக்கத்தை அடிப்படையாகக் கொண்டது என்னும் பொருளையும், நடன்–நடி என்பன நடமிடுபவன்–நடமிடுபவள் என்னும் பொருளையும் தருதலைக் காணலாம். நிறையுவாக் காலத்து முன்னிரவின் முற்பகுதியே மாலையாகும் எனினும், மறையுவாக் காலத்து அப்பொழுதையும் மாலை என்றாற் போல புலவர்கள் நடம்–நடனம்–நாட்டியம் என்பவற்றையும் நாடகம் என்ற சொல்லால் ஒரோவிடத்து வழங்கி வந்தனர். கடைச் சங்க காலத்தும் அதற்குப் பின்பும் நாடகம் என்பது நடம், நடனம், நாட்டியம் என்ற பொருளிலேயே வழங்கத் தலைப்பட்டு விட்டது. ஆதலின், இடைச்சங்க நூலாகிய தொல்காப்பியத்துள் வரும் ''நாடக வழக்கினும்'' என்பதற்குப்பொருள் கூறுங்கால் தடுமாற்றம் ஏற்பட்டுவிட்டது.

தொல்காப்பியர் காலத்தும் அவர் காலத்துக்கு முன்னும் இந்த நாடகம் என்னும் சொற்பொருளைப் பெரும்பாலும் கொண்டு வழங்கிய சொற்களுள் ஆடல், கூத்து, பண்ணை, கெடவரல் ஆகிய இந் நான்குமே காணக் கிடைக்கின்றன. இவற்றுள் பின்னவை மிகவும் அருகிவிட்டன. முன்னவையுள் ஆடல் என்பது விளையாட்டு, வீணுட்டு, கொண்டாட்டு என நாடகப் பாங்கிலும், கோதாட்டு, பாராட்டு, சீராட்டு, தாலாட்டு என இயலிசைப் பாங்கிலும் வழங்குகின்றன. கூத்து என்பது பண்டைய பொருள்மாட்சி சுருங்கி இழிந்த பொருளில் வழங்கி வருகின்றது. அருமறை வழங்கிய அம்பலவாணன் ஆன்மாக்கள் உய்ய விரும்பி மேற்கொண்டு நிகழ்த்திய அருங்கலையாகிய ''கூத்து'' தமிழ் மக்களின் சோர்வால் அடைந்த தாழ்நிலையை என்னென்பது?

இந்த நாடகம் என்னும் சொல், மொழிப் பெயரோடு கூடி வழங்குங்கால் நாடகத் தமிழ்–தமிழ்நாடகம் என இருதிறனுக விளங்

கும் என்பது முன்பே குறிக்கப்பெற்றது. இவையிரண்டும் சொல்லளவில் சிறு வேறு பாடுடைய எனினும் பொருளளவில் பெரிதும் வேறுபாடுடையவை. பிறமொழிகளுக்கு உதவக்கூடிய நிறைந்த செழிப்போடு இற்றைக்கும் தமிழில் நாடகத்தமிழ் உண்டு, ஆனால் தமிழ் நாடகம்? — இவ்விருபதாம் நூற்றாண்டில்தான் பிற நாட்டிலக்கியங்களின் தொடர்பால் சிறிது வளரத் தொடங்கியுள்ளது.

நாடகத்தமிழ் என்பது நாடகப்பாங்கமைந்த சொற்கள், நாடகமரபு விளக்கம், நாடக இலக்கணம், நாடக இலக்கியம் ஆயவற்றை விளக்கும் அறிமுறை நூல்களைக் குறிக்கும். 'தமிழ்நாடகம்' என்பது ஏதேனும் ஒரு கருத்தையோ நிகழ்ச்சியையோ வரலாற்றையோ விளக்க இயலிசை கலந்த கலையமைப்போடு காலமும் இடமும் கவினுற இணைத்துக் காட்சி முறையில் உருவாக்கப்பட்ட செயல்முறை நூலைக் குறிக்கும். இக்குறிப்புக்கள் நூல்வடிவமாகவும் இருக்கலாம். நாடகத்தமிழைக் கூத்து நூல் என்றும் தமிழ்நாடகத்தைக் கூத்து என்றும் குறிப்பர் சான்றோர். (தமிழ் எனும் மொழித் தொடர்பைக் குறிக்கும் சொல்லைத் தொகுத்து நாடகம் என்ற அளவில் மட்டும் வழங்கும்போது அதுகாட்சி நாடகத்தையே குறிக்கும்)

இனி, இந்நாடகத்தை ஆடற்கூத்து (Dance), காட்சிக்கூத்து (Drama) என இரு வகையாகப் பிரித்துக் காணும் வகையில் பண்டை நூல்கள் அமைந்திருந்தன எனக் கருதலாம். இவற்றுள் ஆடற்கூத்தினை நாட்டியம் என்று இடைக்காலத்தார் வழங்கினர். இதனைத் தனிக்கூத்து, இணைக்கூத்து, குழுக்கூத்து என முத்திறமாகவும், காட்சிக் கூத்தினைத் தனிக்காட்சி, தொடர் காட்சி என இருதிறமாகவும் காணுதல் தகும்.

அவற்றுள் தனிக்கூத்து, யாழும் குழலும் இசைக்கக் கஞ்சமும் முழவும் ஒலிக்க, ஆடலாசிரியன் திரைமறைவிலோ மேடையின் பக்கத்திலோ இருந்து குறிப்புக் காட்டவாரம்பாடுவோர் பண்ணொடு கலந்த பாட்டும் உரையும் நிகழ்த்த ஏதேனும் ஒரு நிகழ்ச்சியை அல்லது ஒரு கருத்தினை அல்லது ஒரு பொருளின் இயல்போடு கூடிய செயலினை விறல்பட நடித்துக் காட்டுதலாகும். இஃது அரச அவையிலும் பெருமக்கள், வீரர்கள் கூடிய களங்களிலும், பொதுமக்கள் கூடும் மன்றங்களிலும் நிகழும். இணைக்கூத்து, பெண்டிரோ அல்லது ஆடவரோ அல்லது இருவரும் இணைந்தோ அவ்வாறு ஒரு நிகழ்ச்சியினை அல்லது ஓர் உணர்வினை நடித்துக் காட்டுதலாகும். குழுக்கூத்து, பெரும்பாலும் யாழும்குழலுமின்றி முழவு முதலிய தாள ஒலியோடு கைகோத்தும் கைகொட்டியும் காமமும் வீரமும் பொருளாக நிகழும். இக்கூத்துப் பெரும்பாலும் உண்டாட்டு நிகழ்ச்சியிலும், திருவிழா முதலிய காலங்களிலும், வெற்றி பெற்றுவரும் அரசனின் தேர்க்கு முன்னும் பின்னும், ஏர்க்களம் போர்க்களம் ஆகிய களங்களிலும் நிகழும். இக்கூத்துக்கள் திரை முதலிய இல்லாத, அணி செய்யப்பெற்ற மேடைகளிலும் பொது மன்றங்களிலும் நிகழும். இவற்றுள் சில, ஆடவர் மட்டும் ஆடும் இயல்பு உடையவை. இவ்வகை ஆடற்கூத்துக்கள் சிறுபான்மை கதை தழுவியும் வரும். கதை தழுவி வருங்கால் மேடை திரை முதலிய அணிகளோடு யாழ் முதலியவைகளும் இணைந்து நிகழும். இவ்வகைக் கூத்தியற்றுவோரைக் **கூத்தர், களவர், கண்ணுளர், விறலியர்** எனப்பழந் தமிழ் நூல்கள் கூறும்.

இவ் ஆடற்கூத்தினை வேத்தியல் பொதுவியல் என்றும், வசைக்கூத்து, புகழ்க்கூத்து, வரிக்கூத்து. வரிச்சாந்திக்கூத்து, சாந்திக் கூத்து, விநோதக் கூத்து, ஆரியக்கூத்து, தமிழ்க்கூத்து, இயல்புக்கூத்து, தேசிக்கூத்து, வென்றிக்கூத்து, அவினயக்கூத்து என்றும் இவ்விரண்டாகப் பல வகையாகப் பிரித்துணர்த்துவர். இவை ஒவ்வொன்றிலும் பல பிரிவுகள் உண்டு. கூத்தநூல் எத்துணை வளமாகவும் செழிப்பாகவும் பண்டு விளங்கின என்பதற்கு வரிக்கூத்தின் பிரிவாக அடி

யார்க்கு நல்லார் உரையிடைக் காணப்பெறும் கீழ்வரும் சிலகூத்தின் பெயர்களே சான்றும், ''அவையாவன: வரிக்கூத்தினைக் கண்கூடுவரி —காண்வரி—உள்வரி — புறவரி—கிளர்வரி— தேர்ச்சிவரி காட்சிவரி—எடுத்துக்கோள்வரி என எட்டு வகையாகக் கூறுவர். இனி சிந்து பிழுக்கை. சந்தி, ஓர்முலை, கொந்தி, கௌசி, குடப்பிழுக்கை, கந்தன்பாட்டு, ஆலங்காட்டாண்டி. பருமணல், நெல், இச்சி, சூலம், தருநட்டம், தூண்டில், பாம்பாட்டி, கடவுள், சடை, வீரம், மகேசம், காமன், வாமனரூபம், விகடம், பத்திரம், கொற்றி, வாள். பப்பரப்பெண்டு, அத்தசம், பாரம், தகுணி, சித்து, முண்டிதம், அன்னப் பறை, பண்டிதன், புட்பபாணம், இறை பரா, பத்தன், குரவை, பப்பரை, காவதன், பித்தன், மாணி, பெரும் பிழுக்கை, கட்களி விளையாட்டு, பறைக்குடும்பு, கோற்கூத்து, கிழவன், கிழவி. கிள்ளு, பிருண்டி, விகடாங் கம், செம்பொன், அம்மனை, பந்து, கழங் காடல், காளி, வண்டு, பிச்சி, சடாதரி, விடை, பிடார், நிருத்தம், தளிப்பாட்டு, சாது ரங்கம், சோணுண்டு, மலையாளி, வேதாளி, வாணி, குதிரை, சிலையாடு, வேடு, தலை விளக்கு, குறப்பெண்டு, இருளன், இருளி, பல்லாங்குழி, பகடி. பகவதி, தோள்வீச்சு, (தோணோக்கம்) சாழல், உந்தி, அவலிடி, ஊராளி, யோகினி, பாரன் குணலை, அந்திக் களி, கொய்முள்ளிப்பூ, ஐயன்பாட்டு, பள்ளி, (பள்ளு,) கும்பீடு, நாட்டம், குணட்டம், குணலை, சும்மைப்பூ, சோனகம், மஞ்சரி, உழமை, (உழவு) பறைமை முதலியன'' இவற்றுள் சில தொல்காப்பியத்திலும், சங்க இலக்கியங்களிலும், இடைக்காலப் பிரபந்தங் களுள் ஒன்றாகிய கலம்பகத்திலும், திருவாச கம், திவ்யப்பிரபந்தங்களிலும் காணப்படுகின் றன. சில சிறுசிறு வேறுபாட்டுடன் இக் காலத்தும் நிகழ்ந்து வருகின்றன.

இனி ஆடல் வகையுள் கடையம், மரக் கால், குடை, துடி, அல்லியம், மல், கும்பம், பேடு, பாவை, பாண்டரங்கம், கொடு கொட்டி முதலிய பதினொன்றும் சிறப்புடை யவை. இவ் ஆடல்கள் பெரும்பாலும் கதைகளுள் வரும் நிகழ்ச்சியை வெளிப்படுத் துவன. ஆடல் கூத்தினுள் வரும் கதைக்கும் காட்சிக் கூத்தினுள் வரும் கதைக்கும் பெரி தும் வேறுபாடுண்டு.

காட்சிக் கூத்தினைக் கூத்து என்றும் நாடகம் என்றும் வழங்குவர். காட்சிக் கூத்து கதை தழுவியே வரும் அவினயம் இன்றி மெய்ப்பாடு சிறந்துவரும். ஆடற் கூத்தினுள் நடிப்போர் பாட்டும் உரையும் நிகழ்த்தார். காட்சிக் கூத்தினுள் நடிப் போரே பாட்டும் உரையும் இசைப்பர். காட் சியினுள் வரும் கதை–மெய்க்கதை, பொய்க் கதை, இரண்டும் சேர்ந்த கலப்புக் கதை என மூவகைப்படும். மெய்க் கதையை வரலா றென்றும் பொய்க்கதையைப் புனைந்துரைக் கதை என்றும் கூறலாம். இவை பலவகைப் படும். காட்சிக் கூத்தினை நிகழ்த்துவோரைக் கூத்தர், பொருநர், இயவர், கண்ணுளர், கடம்பர், கடியர் (கடி=விளக்கம். அஃ தாவது வேடம் புனைதல்) விறலியர் எனப் பழந்தமிழ் நூல்கள் கூறும். பொருநர்= ஒப்பாக வேடம் புனைபவர்; கண்ணுளர்= காட்சி நலம் தோன்ற வேடம் புனைபவர்; விறலியர்=மெய்ப்பாடு தோன்ற ஆடுபவர்; இயவர் என்பது இயம் (வாத்தியம்) இசைப் போரையும் வேடம் புனைந்து இயங்குவோ ரையும் பொதுவாகக் குறிக்கும். குதித்தாடு பவர் கூத்தர். இக்காரணப் பெயர்களால் பண்டை நாடகவளம்பற்றி ஓரளவு அறிய லாம். இனிக் காட்சிக் கூத்தாகிய நாடகத் தைப்பற்றிய பண்டைய நிலையைக் காண் போம்.

### காட்சிக் கூத்தாகிய தமிழ் நாடகக் கலை

ஒரு பொருள் கலைவடிவம் பெறுகின்ற போதுதான் நிலைபெற்று நிலையாய பயனை நல்குகின்றதென்பதும் அக்கலை காலந்தோ றும் உலகத்தோடு ஒட்டித் தீதொரீஇ நன் றின்பாலுற்று வளரும்போதுதான் மாட்சி மையுறும் என்பதும்பற்றி முன்னுரையிற் குறித்தோம். கடைச்சங்க காலத்தும், முத்

தமிழ்க் காப்பியமாகிய சிலப்பதிகாரம் தவிர இடைக்காலத்தும், அடியார்க்கு நல்லார் உரையிற் காணப்பெறும் சில நூற்பெயர் களைத் தவிர நாடகம் பற்றிய முழுமையான நூல்கள் ஒன்றும் கிடைக்கவில்லை. ஏன்? நாடகத்துறை நூல்களன்றி இசைத்துறை பற்றிய நூல்களும் கிடைக்கவில்லை ; சிலப் பதிகாரத்தில் வரும் இசைபற்றிய சிலபாக்களும் இலக்கணக் குறிப்புக் களும் அடியார்க்கு நல்லார் உரையிடைக் காணப்பெறும் இசைநூல்களின் பெயர்களும் தவிர முழுமையான இசைநூல்கள் கிடைக்க வில்லை, ஏன்? (இடைக்காலத் தெழுந்த தேவாரத் திருமுறை நூல்கள் இசைத் தமிழ் இலக்கியங்களேயாகும்.) இவ்விரு துறைகளும் வளராமல் ஒழிந்ததற்குரிய காரணத்தைத் தனியே ஆய்தல் வேண்டுத லின் அதுநிற்க.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் மேலை நாட்டிலக்கியங்களின் தொடர்பால் மறு மலர்ச்சியுற்று இவ்விருபதாம் நூற்றாண்டில் ஓரளவு வளர்ந்து செழித்துவரும் தமிழ் நாட கக்கலை இடையில் இரண்டாயிரம் ஆண்டு கள் உறங்கிக் கொண்டிருந்ததை எண்ணும் போது தமிழர்களின் நாடகக்கலை உணர்வை என்னென்பது? இயற்றமிழைப் பொறுத்த வரையில் இலக்கண இலக்கிய அமைப்பிலும் வெளிப்பாட்டிலும் பெரிதும் வடமொழி நூல் களையே பின்பற்றித் தமிழறிஞர்கள் தம் நூல் களை இயற்றினர்களென்றும். யாப்பு முறை யிலும் அணியமைப்புக்களிலும் சிற்றிலக்கியங் களிலும் வடமொழி முறைகளே ஆதிக்கம் பெற்றன'' எனறும்கூறும் சில ஆய்வாளர்கள் வடமொழியில் இதிகாச புராணங்களைப்போல நாடகமும் தனி இலக்கியப் பிரிவாக வளர்ந்து சிறப்புற்றுள்ளமையை அறிவார்கள். கடைச் சங்க காலத்திலும் அதனை ஒட்டியும்வாழ்ந்த அசுவகோசர், பாணபட்டர்—பாசன், காளி தாசன் போன்ற பெருங் கவிஞர்கள் புவி புக ழும் நாடகங்களைப் படைத்துள்ளனர். அவ் வடமொழிவாணர் காலத்துத் தமிழகத்தில் தலைசிறந்த புலவர்கள் வாழ்ந்திருந்தனர். இயற்றமிழை வளர்க்க வடமொழிமுறைகளை இரவல் வாங்கியதாகக்கருதப்பெறும் இவர் கள் நாடகத் துறையை மட்டும் இரவல் பெருமைக்குக் காரணம் என்னை? வடமொழி யில் நாடக வாயிலாகப் புலப்படுத்தும் கருத்துக்களைத் தமிழில் அகமும் புறமும் பற்றிய இலக்கண நெறியால் செம்மையா கவும் சிறப்பாகவும் புலப்படுத்த இயலும் எனப் பண்டைத் தமிழ்ப் பாவலர்கள் உணர்ந்திருந்தார்கள் போலும். ஆதலின் அந்நெறிபற்றியே நாமும் பண்டை நாடகக் கலையின் நிலையினை ஆய்ந்துணர்தல் வேண்டும்.

## முத்தமிழின் பயன்பற்றி முன்னோர் துணிபு :

மொழியாலாகிய நூற் பயனைக் குறிக்கு மிடத்து ''அறம்பொரு ளின்பம்வீ டடைதல் நூற் பயனே'' என்பர் ஆன்றோர். அஃதா வது அறம்பொருள் வாயிலாக இன்புற்றுப் பின் வீடடைதல் என்பது அவர்தம் கருத்து. முடிவான பயன் வீடுபேறு; அஃதாவது விடு தலை பெறல், எதனினின்று விடுதலை பெறல்? துன்பமாகிய கட்டினின்றும் விடுபடல்: அழியா இன்பம் அடைதல். அதனாற்றான் வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன் கண்ட முதல் நூலின் வழியே நூல்களைச் செய்தனர் என்ப. இவ்வகையில் இயற் றமிழ் அறநெறியை உணர்த்திப் பொருள் முறைகளை விளக்குவனவாகவும், இசைத் தமிழ் அறம்பொருளிவற்றிற்கு அப்பாற் பட்ட இன்பநிலையை உணர்த்துவனவாகவும், நாடகத் தமிழ் அம்மூன்றின் அடிப்படையில் வீடுபேற்றை எய்துவிப்பனவாகவும் கருதப் பெற்றன. அதனாற்றான் இறைவனை இசை யின் பயனானவன் என்றும், நள்ளிருளில் நட் டம் பயின்றாடும் நாதன் என்றும் அருளாளர் கள் கூறியுள்ளனர். இசை, துயர்துடைத்து இன்பம் நல்கவல்லது; இசை இறைவனைப் போற்றி ஈர்க்கவல்லது. உலகத்துப் பண்டை இசை அமைப்புக்களும் இசை இலக்கியங் களும் இறைத் தொடர்பாகஉள்ளமை இக் கருத்தை வலியுறுத்தும். நாடகம் தெய்வத் தன்மையுடையது; நாடகம் தெய்வத்திற்

குரியது; தெய்வ நிலையைக் காட்டுவது; தெய்வத்தை எய்துவிப்பது; தெய்வமாக்குவது. அதனாற்றான் "நாடகத்தால் உன்னடியார் போல் நடுவே நான் நடித்து" என்றும், "கோமான் நின் திருக்கோயில் தூகேன், மெழுகேன், 'கூத்தாடேன்' சாமாறே விரைகின்றேன்" என்றும், "பண்கள் தலைக்கொள்ளப் பாடிப் பறந்தும் குனித்துழலாதார்; மண்கொள் உலகிற் பிறப்பார்" என்றும் "கும்பிட்டு நட்டமிட்டாடிக் கோகுகண் டுழலாதார்; தம் பிறப்பாற் பயனென்னே', என்றும் அருளாளர்கள் கூறிச் சென்றுள்ளனர். நாடகம் உலகவியலுக்கப் பாற்பட்ட தெய்விகநிலை என்பதனாற்றான் என்றும் ஒரு தன்மையராய்ப் பிறப்பு முதலிய பத்தும் ஒத்த தலைவன்தலைவி ஒழுகலாற்றை நாடக வழக்கம் என முன்னோர் நவின்றதாகத் தொல்காப்பியர் செப்புகின்றார். பண்டைய தெய்வச் சிற்பங்களும் ஓவியங்களும் நாடக அவினயப் பாங்கிலேயே சமைந்திருப்பதும், நாடக முத்திரைகள் தெய்வப் பெயர்கள் பெறுவதும், பதினோராடல் முதலியவை கடவுளரின் செயல்களாக அமைந்திருப்பதும், இடைக்காலத் தற்கால நாடகங்கள் பெரும்பாலும் இதிகாச புராணங்களின் வரலாறுகளை அடிப்படையாகக் கொண்டிருப்பதும் நாடகத் தோற்றத்தையும் அதன் பயனையும் நன்கு புலப்படுத்தும். இக்காலத்தே எல்லாக் கலைகளும் மக்களின் புலன் வாழ்வையும் புறவாழ்வையும் மையமாக வைத்துச் சிந்தித்து இயற்றப்படுதலின் இசை நாடகங்களின் தெய்வீகத் தன்மை நன்கு உணர இயலாமற் போகின்றது.

பழந்தமிழ் நாடகக் கலையைச் சங்க நூல்களில் வரும் குறிப்புக்களையும் தொல்காப்பியப் பொருளதிகார அமைப்பையும் கொண்டுதான் உணரவேண்டியுள்ளது. கடைச்சங்க காலத்திற்கு முன்பிருந்தனவாக யாதொரு தொடர்நிலைச் செய்யுள் நூலும் கிட்டாமை தமிழர்க்குப் பெரியதொரு குறையேயாம். இத்தகைய அல்லூழுக் கிடையே நின்ற நல்லூழ்காரணமாகத் தொல்காப்பியமேனும் முழுமையாகக் கிடைத்துள்ளது. இந்நூலில்லையேல் பண்டைத் தமிழரின் பாங்கினையறிய வாய்ப்பில்லாமலேயே போயிருக்கும். தொல்காப்பியமோ இயற்றமிழ் இலக்கண நூல். அதுவும் தொகுத்து (சுருக்கி) இயற்றப்பெற்ற சிறு நூல். என் செய்வது? மேலும் இந்நூற் கருத்துக்களை விளக்கவந்த உரையாசிரியர்களும் ஒருவருக்கொருவர் மாறுபட்ட கருத்துக்களை வலியுறுத்துகின்றனர். உண்மைப் பொருள் யாது? நூற்பாக்கள் காட்டும் செம்பொருளைமட்டுங் கொண்டு பண்டை நாடகக் கலையின் இயல்பை ஒருவாறு காண முயல்வோம். அதனை அறிய வடமொழி அமைப்பினையும் மேலைநாட்டார் நாடக மரபினையும் பற்றிச் சிறிது தெளிவுபடுத்திக் கொள்ளுதல் நலமாகும்.

வடமொழி நாடகங்கள் பெரும்பாலானவை புராண இதிகாசக் கதைகளையும் அவற்றின் பகுதிகளையும் பொருளாகக் கொண்டு கவிதை நடையில் யாக்கப்பெற்றுள்ளன. நாடகக் கதை அமைப்பை இயோனி என்னும் வகையில் பிரித்து, அவற்றை நாடகம், பிரகரணம் முதலிய பத்து வகையாகவும் பிறவாறும் வகுத்துக் கொண்டு முகம் பிரதிமுகம் முதலிய ஐந்து சந்திகளும் பொருந்த காலம் இடம் செயல் ஆயவற்றின் பொருத்தம் திகழ நடித்துக் காட்டியுள்ளனர். நாடகத் தலைவர் தலைவியரை நான்கு வகையாகவும் பிறவகையாகவும் பிரித்து இடையிடையே துணை நடிகர்களும் விதூடகனும் வர, சூத்திரதாரனால் கதையும் நிகழ்ச்சியும் அறிமுகப்படுத்தப் பெற்று நடந்து வந்துள்ளன.

மேலைநாட்டுப் பழைய நாடகங்களும் ஏறக்குறைய வடமொழி நாடக அமைப்பைப் போலவே நிகழ்ந்துள்ளன. அவை பகலில் ஒரு திரையுள்ள மேடையிலேயே பெரும்பாலும் நிகழ்ந்தன என ஆய்வாளர் கூறுகின்றனர். இக்கால நாடகங்கள் நாற்றிசை நாகரிகமும் கலைப்பண்பும் கூடிப் பழமரபும் ஓரளவு மிளிரப் பலவகை உத்திகளோடு நிகழ்ந்து வருகின்றன. நாடகம்

என்ற அளவில் நம் கற்பனையில் தோற்ற மளிப்பவை இக்கால நாடகங்களேயாம். இவற்றின் அமைப்பைக் காண்போம்.

ஒரு நாடகத்திற்குக் கதை, அக்கதையினைக் கவர்ச்சியாக நினைவூட்டும் பெயர், நடிகர், காட்சியமைப்பு, பின்னணிகள், துணை வாத்தியங்கள் ஆகியவை இன்றியமையாதவை. கதை என்ருல் அதனுள் வரும் பாத்திரங்களின் வரலாறு முழுமையும் கொள்ளாமல் இன்றியமையாத நிகழ்ச்சிகளேயும் சுவையும் பயனும் மிக்க செயல்களையும் கருத்துக்களையும் தொகுத்துக் காண்போருக்குத் தொடர்பு விளங்குமாறும் அவர்களே பிற நிகழ்ச்சிகளை உய்த்துணருமாறும் காட்சிகளை அமைத்துக்கொள்ளுதலாகும்.

நடிகர்களைக் கதையில்வரும் உறுப்பினர்களின் தோற்றம் பண்பு அகவைகளுக்கு ஏற்பத் தகுதியானவர்களாகத் தேர்ந்து, அவர்களுக்குப் பொருந்த உரையாடல்களை அமைத்துக்கொடுக்க, நடிகர்கள் அவ்வவ் வுறுப்பினர்களின் குணமும் செயலும் தோன்ற மெய்ப்பாடு காட்டிப் பேசியும் பாடியும் நடிப்பர். நிகழ்ச்சிக்கு ஏற்ற திரைகளையும் துணைப்பொருள்களையும் அமைத்துக் காட்சியைச் சிறக்கச் செய்வர். காட்சிக்குரிய திரை அமைப்பில் இடமும் காலமும் தெற்றெனப் புலப்படுமாறு அமைப்பர். திரை முதலியவற்ருல் இடமும் காலமும் புலப்பட வாய்ப்பில்லாதபோது செயல்களாலும் உரைகளாலும் புலப்படச் செய்வர். எடுத்துக்காட்டாக ஒரு பாத்திரம் கடல் கடந்து அயல்நாடு செல்வதாகக் கதை வருமானுல் கடல் திரையை அமைத்துக் கப்பல் செல்வதுபோலக் காட்டுவர். இன்றேல் வேறு இரு பாத்திரங்கள் கப்பலில் சென்ற நிகழ்ச்சியைப் பேசிப் புலப்படுத்துவர். வைகறைக் காட்சியைக் காட்டவேண்டியிருப்பின் நீலத்திரைக்குப் பின்னுல் விளக்கை வைத்து கதிரவன் தோன்றுவதுபோலக் காட்டுவர். இன்றேல் ஒரு சேவல் கூவுவது போலவோ, ஓர் உழவன் கலப்பையைத் தாங்கிச் செல்வதுபோலவோ காட்டி உரையால் விளக்குவர். எனவே ஒரு நாடகக் காட்சிக்கு இடம், காலம்,- இடத்தையும் காலத்தையும் விளக்கும் சூழ்நிலைகள், அவற்றைப் புலப்படுத்தும் பொருள்கள்—கதை உறுப்பினர்— கதை நிகழ்ச்சியைப் புலப்படுத்தும் நடிகரின் மெய்ப்பாடு உரையாடல் செயல் யாவும் இன்றியமையாதனவாகும். எடுத்துக்காட்டாகச் சீதையை இராமனுக்கு மணமுடிக்க வேண்டும் என்று கருதிய விசுவாமித்திரர் இராமனைச் சனகனுடைய அவைக்கு அழைத்துச் சென்று மன்னர்கள் வீற்றிருக்கும் பகுதியில் அமரச் செய்தார். அவர் சனக முனிவரோடு அமர்ந்துள்ளார். வளைக்கப்படவேண்டிய வில் மேடையில் இருக்கிறது. மன்னர் பலர் அந்த வில்லைப் பார்த்துத் தங்களால் இயலாதென்று அஞ்சி நீங்கிய நிலையில் சனகன் படும் கவலை நீங்க இராமன் இச்சிலையை(தனுசை)வளைக்கவேண்டும் என்று விசுவாமித்திரர் எண்ணுகிருர். இராமன் வில்லைப்பற்றிய எவ்வித எண்ணமுமில்லாமல் அமர்ந்திருக்கிருன். விசுவாமித்திரர் இராமனைப் பார்க்கிருர். அப்பார்வை நீ இந்த வில்லை வளைத்துச் சானகியை மணக்க வேண்டும் என்று கட்டளையிடுகின்றது. இராமனும் அக்கட்டளையை ஏற்றுக்கொண்டு தலையைச் சிறிதே அசைத்துத் தன் பணிவான உடன்பாட்டை முகத்தால் தெரிவித்து அவ்வில்லை நோக்குகிருன். இக் காட்சியை மேடையில் காணும்போது ஆரவாரமோ, உரையாடலோ பெருமளவிற்கு மெய்ப்பாடுகளோ வேண்டுவதில்லை காட்சியளவானே யாவும் விளங்கும். இவற்றை விளங்க எழுதிக்காட்டினுல் அது **நாடகத் தமிழ்**. நடித்துக் காட்டினுல் **நாடகக் கலை**. இக்காட்சியின் குறிப்புக்கள் **தமிழ் நாடகம்** எனப்படும். எனவே நாடகம் பற்றிய விளக்கம் படிப்போருக்கும் குறிப்பு நடிப்போருக்கும் வேண்டுமாதலின் முன்னது நாடகத் தமிழ் என்றும் பின்னது தமிழ் நாடகம் என்றும் கொள்ளப் படும். இடையில் உள்ள நாடகக்கலை காண்போருக்கு மட்டுமேயாம். இந்நிகழ்ச்சியைக் கம்பர் நாடகத்தமிழ் அமைப்பில் கூறுவதைக் காண்க.

"நினைந்தமுனி பகர்ந்தவெலாம் நெறியுன்னி
அறிவனும்தன்
புனைந்தசடை முடிதுளக்கிப் போரேற்றின்
முகம்பார்த்தான்
வனைந்தனைய திருமேனி வள்ளலும்அம்
மாதவத்தோன்
நினைந்தவெலாம் நினைந்தந்த நெடுஞ்சிலையை
நோக்கினன்"

இவ்வாறு முழுதும் கவிக்கூற்றால் அமைந்த காட்சியே நாடகத் தமிழுக்குச் சிறந்ததாகும்.

எனவே படிப்போரை எல்லையாக வைத்து நாடகத் தமிழும், காண்போரை எல்லையாக வைத்துத் தமிழ் நாடகமும் வளர வேண்டுமென்பது புலனாகின்றது. படிப்போர் நாடகத்தமிழ் வழங்கும் புலவர்களைப் பேணிக்காத்துப் பெருமைப்படுத்தலும் காண்போர் தமிழ் நாடகத்தைக் கலையோடு வழங்கும் கூத்தரையும் பொருநரையும் விறலியரையும் பேணிக்காத்துப் பெருமைப்படுத்தலும் வேண்டும். கடைச்சங்க கால நூல்களில் வரும் வேந்தர்களும் மன்னர்களும் வள்ளல்களும் புலவர்களைப் பாராட்டிப் பெருமை செய்ததுபோலக் கூத்தர் முதலிய கலைஞரைப் போற்றிப் பாராட்டியதாகக் காணப்பெறவில்லை. அதனால்தான் கடைச்சங்க காலத்தில் வாழ்ந்த இக்கலைஞர்கள் இசையையும் நடனத்தையும் காத்தொழுகிய அளவிற்கு நாடகத்தைப் பேணியொழுகவில்லை. இந்நிலை இசைக்கும் நடனத்திற்கும் காளடைவில் வந்துசேர்ந்ததனால் இசைத்தமிழும் ஆடற்கூத்துக்களும் வீழத் தலைப்பட்டன. இத் தெய்வீகக் கலைகளைப் போற்றாமையோடு தமிழ்மக்கள் அக்கலைஞர்களை இழிநிலைக்காளாக்கித் தாழ்வுபடுத்தியதனால் அக்கலைகளும் தாழ்ந்தன. சமண பௌத்த சமயக் கோட்பாடுகளும் இசை, நாடகக் கலைகளின் வீழ்ச்சிக்கு ஓரளவு காரணமெனினும் முன்னவைபோல வன்மையான காரணங்களாகா. இதனைத் தனிக் கட்டுரையில் ஆய்தல் வேண்டுதலின் இவ்வளவில் நிறுத்தித் தமிழ் நாடகம் பற்றிப் பார்ப்போம்.

**நாடக வழக்கு :**

தமிழ் நாடகக் குறிப்பு நூல்களும் இலக்கணங்களும் இடைச்சங்க முதற்சங்க காலங்களில் நிறைய இருந்து நாடகக்கலை செழிப்பாகத் திகழ்ந்திருக்க வேண்டுமென்பதை "நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்" எனவரும் தொல்காப்பியத் தொடர் உறுதி செய்கின்றது. இந்நூற்பா அமைந்துள்ள இடமும் நூற்பாவின் கருத்தும் தமிழ் நாடகக் கலை செழித்திருந்ததை வலியுறுத்துகின்றன. இந்நூற்பா அகத்திணையியலின் இறுதியில் அமைந்து நல்லிசைப் புலவர்கள் அறிவு நலஞ்சான்ற இலக்கியங்களை எப்படிச் செய்தனர்—செய்தல்வேண்டும் என்பதனைக் கூறுகின்றது. அஃதாவது புலனெறி வழக்கு இலக்கியம்) நாடகம் உலகியல் ஆகிய இருவகை வழக்கையும் கூட்டிச் செய்யப்படும் என்று கூறுகின்றது. வழக்கு என்ற சொற்பொருளை விளக்கவந்த ஆசிரியர் "வழக்கெனப்படுவது உயர்ந்தோர் மேற்றே" என்று கூறுகின்றார். இவ்வழக்கு என்பதனை இலக்கண நோக்கில் காணும்போது செய்யுள் வழக்கு உலக வழக்கு என வருதலை அறியலாம். அவை முறையே யாப்பமைதி நிறைந்த செய்யுளையும் அஃதில்லாத உரைநடையையும் குறிக்கும். உரைநடையை வழக்கென்று வாளா கூறுதலும் உண்டு. இந்நூற்பாவில் உலகவழக்கென்னாது "உலகியல்" வழக்கென்று சொற்பொருள் நயம் தோன்ற விளக்கிக் கூறியுள்ளார். மேலும் இதனை வரிசை முறையில் வைக்கும் போது நாடக வழக்கினை முதலாக வைத்துள்ளார் ஆதலின் நாடக வழக்கென்பது உலக வழக்கினும் உயர்ந்து இலக்கியத்திற்குச் சிறப்பைத் தருவதென்பது பண்டையோர் கருத்தென அறியலாம்.

இனி இத்தொடரில் வரும் நாடகம் என்ற சொல் நாட்டியத்தைக் குறிக்காது என்பது யாவர்க்கும் எளிதில் விளங்கும். கடைச்சங்க காலத்திலும் அதற்குப் பின்னும் நாடகம் என்பது பெரும்பாலும் ஆடற்கூத்தினையே குறித்துவருகின்றது. தொல்காப்பியர் காலத்திலும் இச்சொல் ஆடற்கூத்து

என்ற பொருளில் வழங்கியிருக்குமாறல் அதனை அவர் இவ்விடத்தில் கூறுவதற்கு எட்டுணையும் இயைபில்லை. எனவே இது காட்சிக் கூத்தாகிய நாடகத்தையே குறிக்கின்றது என்பதில் ஐயமில்லை. இனி இச்சொற்கு உரைகண்டார் யாவரும் நாடக வழக்காவது புனைந்துரை வழக்கென்றே ஆழுங்காறுது அமைந்து சென்றனர். புனைந்துரை என்பதற்கு அழகுபடக் கூறுதல் என்பதும் பொருளாயினும் பெரும்பாலும் அது பொய்யுரை என்னும் பொருளில்தான் வழங்கிவருகிறது, தொல்காப்பியர் புனைந்துரை என்னும் சொல்லை யாண்டும் கையாள வில்லை. இல்லது மொழிதல் எனவருமிடங்களில் 'பொய்ம்மொழி' என்றே கூறுவார். பொய்ம்மொழி என்பது பொருளொடு புணராதது என்பது அவர் கருத்து (செய். 71)) அகப்பொருள் என்பது பொருளொடு புணராப் பொய்ம்மொழியா ?

மேலும் மக்களின் குறிக்கோள் பொருளாகிய இலக்கியம் மக்கள் வாழ்வின்கண் நிகழும் பல்வேறு இன்பதுன்ப நிகழ்ச்சிகளைச் சுவைபடக் கூறுவதாகும். பிறப்பு முதல் இறப்புவரை ஒருவருடைய வாழ்வைக்கூறும் வரலாறுபோல்வதன்று. வரலாறுகூட ஒருவர் வாழ்க்கையில் நிகழும் எல்லாவற்றையும் விடாமற் கூறுவதன்று. தேவைப்படும் இன்றியமையாதவற்றைத் தொகுத்துக் கூறுவதேயாகும். இலக்கியம் மக்கள் வாழ்க்கை நிகழ்ச்சியைப் பற்றியதெனினும் ஓர் ஆணும் பெண்ணும் கூடிவாழும் வாழ்க்கையில் எல்லா நிகழ்ச்சிகளும் வரமாட்டா. ஓர் ஆடவனுக்கோ பெண்ணுக்கோ இருக்க வேண்டிய பண்புகள் யாவும் ஒருவரிடத்தே முழுதும் அமைவதில்லை. ஆதலின், பொதுமையில் குறிப்பிட்டுப் பெயர் கூறுமல் ஒரு தலைவனையும் ஒரு தலைவியையும்பற்றி இலக்கியம் செய்யும்போது, உலகில் பல்வேறு தலைவன் தலைவியரிடையே நிகழும் சிறந்த செய்திகளை யெல்லாம் எடுத்துத் தொகுத்து அவர்பால் நிகழ்ந்ததாகப் புனைந்து அவரொடு காலமும் இடமும் துணையுறுப்புக்களும் பொருந்தக் கூட்டிக் கூறுதலேயாம். இதுவே நாடக வழக்காம். எடுத்துக் காட்டாக இராமாயணத்தை நாடகமாக நடிக்கவேண்டின் அதிக அளவாறல் பதினைந்து இரவுகள் நடிக்கலாம். குறைந்த அளவு ஐந்து நாழிகைப் பொழுதினும் நடிக்கலாம், கதையோ பல்லாண்டுகள் நிகழ்ந்தவை இராமன் காட்டில் வாழ்ந்த காலமே பதினன்கு ஆண்டுகள் இப்பதினன்கு ஆண்டுக்கால நிகழ்ச்சியைச் சில நாழிகைப் பொழுதில் நாலைந்து காட்சிகளில் அமைத்துக் காட்டி விடுவார்கள். குகன் நட்பு, பாதுகை தரல், சூர்ப்பணகை வேண்டல், மாயமான்காட்சி, மாரீசன்வதம் இராவணன் வரவு, சிறை எடுத்தல், சடாயுப் போர், இராமன் துயரம், சுக்ரீவன் வரவு, வாலி மோட்சம், அசோக வனக்காட்சி, சேது பந்தனம், இராம இராவணப்போர் இப்படிக் குறிப்பிட்ட சிலகாட்சிகளை அழகுற அமைத்துக் கதை முழுதும் உணருமாறு நடித்துக் காட்டப்பெறும். இவ்வாறே வேண்டாத அல்லது சிறப்பில்லாத நிகழ்ச்சிகளை நீக்கிச் சுவையும் உணர்வும் மிக்க பகுதிகளைத் தொகுத்துக் காட்டுதலே நாடக வழக்காம். இந்த நாடக நிகழ்ச்சிகள் பொய்யாகுமோ ? எனவே மக்களின் இயல்பான வாழ்வில் நிகழும் சிறப்பில்லாத, வேண்டாத பகுதிகளை நீக்கிப் பல்வேறு மக்களிடையே நிகழும் சிறந்த நிகழ்ச்சிகளை ஒருவரிடம் நிகழ்வதாகத் தொகுத்துக் காலமும் இடமும் பொருந்த அணி நயம்படக் கூறுதலின் இலக்கியத்திற்கு நாடக வழக்குச் சிறந்ததெனக் கொள்ளப்பட்டது.

அலைதாவது ஒப்பாரும் மிக்காரும் இல்லாத ஒரு தன்மையரான பன்னிராட்டைப் பிராயத்தாளும் பதினறட்டைப் பிராயத்தானும் ஒன்றி உயர்ந்த பாலதாணையினல் கூதிர்காலத்துக் குறிஞ்சி நிலப்பகுதியில் ஒருவர் ஒருவரைக் கண்டு காதல்மேவிக் கந்தருவ மணத்தாற் கூடிப்பிரிவர், பின் சின்னுட்கள் தலைவன் இடையாமத்தே சென்று தலைவியைக் கண்டு மகிழ்வான். பின்னர் பாங்கன் வாயிலாகக் கூடிமகிழ்வான். இவற்றைத் தலைவியின் உயிர்த்தோழியாகிய பாங்கி அறிவாலும் நிகழ்ச்சிகளாலும் அறிவாள். பாங்கி

துணையாகத் தலைவன் தலைவியை அடைவான். பாங்கி தலைவனின்காதல் மெய்ம்மையாக முகிழ்க்கும் பொருட்டு இரவுக்குறி பகற்குறி முதலிய நிகழ்த்தி வரைவு கடாவுவாள். தலைவன் காலந்தாழ்த்தினால் தலைவி நெய்தல் நிலத்திலிருந்து முன்னிரவுக் காலத்தில் வருந்துவாள். பின்னர்த் தோழி செவிலியிடம் அறத்தொடு நிலைவகையால் தலைமக்கள் நட்பைப் புலப்படுத்துவாள். ஊரார் இந் நிகழ்ச்சியை அரைகுறையாக அறிந்து அலர் எழுப்புவர். தலைவியின் பெற்றோர் அத்தலைவனுக்கு மணம் செய்து கொடுக்க எளிதாக உடன்படாத நிலையில் தலைவன் மடலேறு கூறுவான். பின்னர் தலைவியைப் பெற்றோர் அறியாமல் பாலைநிலத்தில் நண்பகற் பொழுதில் உடன் அழைத்துச் சென்று விடுவான். ஊரார்க்கெல்லாம் புலனாகிவிடும். பின்பு சான்றோர் முன்னிலையில் மணம் நிகழும். மணம் நிகழ்ந்தபின் தலைவன் பலகலையும் அறியத் தலைவியைப் பிரிந்து மூன்றாண்டு எல்லைக்குள் வருவான். அவன் பிரிந்தகாலைத் தலைவி முல்லை நிலத்திலிருந்து மாலைக் காலத்தில் வருந்துவாள். தலைவன் பின்னர் பகை மன்னரோடு போரிடப் பிரிவான்; இருபெரு மன்னர்களிடையேயுள்ள பகையை நீக்கத் தூதாகச் செல்வான்; ஊரில் இருக்கும்போது தன் ஆட்சியில் இருக்கும் கோவில் முதலிய அறநிலையங்களைக் காவல் புரியவும் ஆவன புரியவும் செல்வான், வணிகம் முதலிய செய்து பொருளீட்டவும் பிரிவான். சிலபோது தலைவியை உடனழைத்துச்செல்ல நேர்ந்தால் கடல்கடந்து கப்பலில் தலைவியை அழைத்துச் செல்லுதல் கூடாது. தலைவன் பிரிந்த காலத்தில் எல்லாம் தலைவி முல்லை நிலத்தில் வீட்டிலிருந்தோ, நெய்தல் நிலத்தில் கடற்கரையிலிருந்தோ வருந்துவாள். பின்னர்த் தலைவன் பரத்தையரோடு இன்பு கொள்ளவும், காமக் கிழத்தியோடு தங்கவும். சேரிப்பரத்தையரோடு விளையாடவும் பிரிவான், தலைவி முனிவு கொண்டு ஊடுவாள். தலைவன் அவள் அடி பணிந்து ஊடலைத் தவிர்க்க முயலுவான். விருந்து முதலிய காரணங்களால் தலைவி ஊடல் தணிவாள். பின்பு இன்பமாக வாழ்ந்து மக்களைப் பெற்று மனையறம் காத்துச் சுற்றத்தோடு மகிழ்ந்து இளமை நீர்ந்தபின் காட்டின்கண் சென்று நோன்பு முதலிய இயற்றிப் பின்னர்த் துறவு பூண்டு வீடடைவார்கள்.

இவ்வாறு அகப்பொருள் கோவை இலக்கியங்கள் இயம்புகின்றன. அகப்பொருள் இலக்கணம் இந்நெறியிலேயே அமைந்துள்ளன. இவ்வளவும் ஒருவருடைய வாழ்வில் நிகழுமா? அறப்புறங்காவல் செய்பவன் அரசன். கடல்கடந்து பொருளீட்டச் செல்பவன் வணிகன். ஆனால் இலக்கியம் ஒரு தலைவனுக்கே இவ்வளவும் கூறும். ஒரு தலைவன் ஒப்பற்றவன் சான்றோன் என முதற்கண் கூறியப் பின்னர் பரத்தையர் முதலான பல பெண்டிரோடு அவன் தொடர்பு கொள்ளுவதாக இலக்கியம் கூறும். இது முறையா? இல்லை. பின்னர் ஏன் இவ்வாறு கூறுகின்றனர்? அதுதான் நாடக வழக்கு. தலைமக்களிடத்தில் நிகழும் இப் பல்வேறு நிகழ்ச்சிகளைத் தொகுத்துக் கூறுவதும், ஒரு தலைமக்கள் வாழ்வைக் கூறும்போதும் புணர்ச்சியைக் குறிஞ்சி நிலத்தோடும் பிரிவைப் பாலை நிலத்தோடும் இவ்வாறே பிறவற்றையும் அவ்வவ்வொழுகலாற்றிற்கு ஏற்ற நிலத்தோடும் அவற்றிற்குரிய காலத்தோடும் கூறுவதும் தாம் நாடக வழக்கு. இத்தகு இலக்கியங்களில் வரும் நிகழ்ச்சிகள் யாவும் உலகியல் வழக்கேயாம்.

எனவே தொல்காப்பியர் தம் காலத்திலிருந்த நாடகக்கலை, நாடக இலக்கியம், நாடகமரபிலக்கணம்-நடிப்பிலக்கணம் முதலாயவற்றை விளக்கும் நூல்களையும், நாடகக்கலைக் காட்சியையும் பயின்றும் பார்த்தும் நன்குணர்ந்தே இவ்வாறு கூறியுள்ளார் என்பது புலனாகும்.

தொல்காப்பியர் முத்தமிழுள் இயற்பகுதி ஒன்றற்கே இலக்கணம் தொகுத்துச் செய்தாராதலின் ஏனைய இருபகுதிகளை அவர் சுட்டி விளக்கவில்லையெனினும் இயற்றமிழ்ப் பகுதிக்கு வேண்டும் இசை நாடகப்பகுதிகளைக் கூறவேண்டிய அளவிற்கு விளங்கக் கூறியுள்ளார். அவற்றைக் கொண்டுதான்

பண்டை இசை நாடக நிலையினை அறிந்து கொள்ளவேண்டும். (இயற்றமிழுள் ஏனை இருகூறுகளும் கலந்தே இலக்கியக்கலை நிகழும் என்று முன்பே குறிக்கப்பட்டது) ஈண்டு நாடகப்பகுதியை மட்டும் காண்போம்.

இயற்றமிழைப் பாட்டு உரை நூல் வாய்மொழி பிசி அங்கதம் முதுசொல் என ஏழாக வகுத்தும், பாட்டினை வெண்பா முதலிய நான்காகவும், உரையினைப் பாட்டிடை வைத்த குறிப்பு முதலிய நான்காகவும் விரித்து ஓதுவார். பாட்டுப்பற்றிய இலக்கணம் செய்யுளியலுள் விரிவாக ஓதப்படுகின்றது. அவற்றுள் எழுத்தும் சொல்லும் யாப்பும் அணியும் நீங்கப் பொருள்பற்றியவையாக வருவன திணை, கைகோள், கூற்று, கேட்போர், களன், காலம், பயன், மெய்ப்பாடு, எச்சம், முன்னம், பொருள் துறை எனப் பன்னிரண்டாம். இவை புறத்திற்கும் பொதுவாயினும் அகத்திற்கே சிறத்தலின் பின்வந்த இலக்கண ஆசிரியர்கள் இவற்றை அகப்பாட்டுறுப்புக்கள் என்றே கூறிச் சென்றனர். இவையாவும் நாடகக் கூறுகளே எனத் தெற்றெனப் புலப்படும்.

இவற்றுள் திணை என்பது; நிலம் பொழுது கருப்பொருள், ஒழுக்க நிகழ்ச்சியாகிய உரிப்பொருள்களாம். கருப்பொருள்: தெய்வம் உணவுப் பொருள் விலங்கு மரஞ்செடி கொடிகள் மலர்கள் முதலாயின. கைகோள் என்பது களவு நிலையாகிய காதலின் தொடக்க முதலான நிகழ்ச்சியும், கற்பு நிலையாகிய இல்லறம் பொருளீட்டல் முதலியவும் மகப்பேறு விருந்தாற்றல் முதலியவும் ஆம், பொருளீட்டல் முதலாய பகுதிகளை விரிக்கின் புறப்பொருளாய் வண்மை காவல் வீரம் அறம் மறம் யாவும் தோன்றும். கூற்று கேட்போர் என்பவை உரையாடல். முன்னம் பயன் என்பவை உரையாடலுள் பொதிந்து கிடக்கும் உணர்ச்சிகளையும் கருத்துக்களையும் புலப்படுத்துவன. மெய்ப்பாடு என்பது நடிப்பு. களம் என்பது நிகழ்ச்சியின் களம் காலம் என்பது நிகழ்ச்சியின் எல்லை. பொருள் என்பது உணர்ந்து கொள்ளவேண்டிய கருத்து. துறை என்பது ஆசிரியன் கூறும் விளக்கம் ஒரு நாடகக் காட்சியோடு ஒப்பிட்டுக் கூறின் நாடக அரங்கு, அதன்கண் அமைந்துள்ள திரை, அத் திரையமைப்புக்கு வேண்டிய பொருள்கள் முதற்பொருளும் கருப்பொருளுமாம், அக்காட்சியில் வரும் நடிகர்கள் கூறுவோர் கேட்போராம். அக்காட்சியின் இடம் கால அளவு களனும். நடிகன் பேச்சினால் அறிந்து கொள்ளும் உள்ளுறைப் பொருள்கள் முன்னமாம். நடிப்பே மெய்ப்பாடாகும். நாடக உரையாடலுள் அடைப்புக்குறியில் நாடகஆசிரியன் தரும் விளக்கமும் மேடையில் கட்டியங்காரன் கூறும் விளக்கமும் துறையாம்.

இவற்றை ஓர் அகப்பாடல் வாயிலாகக் காண்போம். குறிஞ்சி நிலத்தில் களவுக் காலத்தில் தலைவனுடைய பிரிவாற்றலியலாத தலைவி ஒருத்தி, தன்னுடைய வாழ்வு நலனையே கருதும் அறிவுடைய தோழியானவள் தலைவனைப் பல்கால் பகற்குறி வரச்செய்து மறுத்துப்பின் இரவுக்குறி வரச்செய்து, அதனையும் இப்பொழுது மறுத்துத் தலைவனைத் திருப்பியனுப்பும் நிலைக்கண்டு ஆற்றாளாய், இரங்கிப் பசப்பூறி, அலைத்தொடு தன்முன் நிற்கிருள் அத்தலைவியிடம் தோழி "நீ தலைவனோடுறைய மிகவும் விரும்புகின்றாய் என எனக்குத் தெரியும். இப்பிறும் எதிர்காலத்தைக் கருதிச் சிறிது கடுமையான சூழ்ச்சியைச் செய்துள்ளேன். நீ வருந்தற்க; வாழ்க" என்கின்றாள் இதோ அந்தப்பாட்டு.

> 'மகிழ்நன் மார்பே வெய்யை யால் நீ
> அழியல் வாழி தோழி நன்னன்
> நறுமா கொன்று நாட்டிற் போகிய
> ஒன்று மொழிக் கோசர் போல
> வன்கட் சூழ்ச்சியும் வேண்டுமாற் சிறிதே"
> [குறுந். 73]

இது களவொழுக்க நிகழ்ச்சியாதலின் தலைவி மனைக்குப் பின்புள்ள குன்றின் சாரலில் இடையாமத்தே நிகழ்கின்றது. தோழி தலைவன் தன் மறுப்பு மொழிகேட்டு வருந்திச் செல்வதை இரக்கத்தோடு பார்த்துக் கொண்டு நிற்கிருள். தலைவன் மறைந்தபின் மரத்தருகே நின்ற தலைவி வேட்கை நிறைவு

றும் என்ற நிலைமாறி ஆற்றுமை மேலிடத் தலைவன் வருத்தத்தையும் எண்ணி அருளின்றி வன்கண்மை செய்து நிற்கும் தோழியின் முன்வந்து அவனை நோக்கி நிற்கிறாள். தலைவியின் பார்வையால் அவள் உள்ளக் கருத்தையெல்லாம் உணர்ந்த தோழி மேற்கண்டவாறு கூறினாள். தோழி செய்யும் இவ்வன்கண் சூழ்ச்சி தலைவன் மணந்து கொள்ளுவதாகிய வெற்றியைத் தருமோ எனக்கவன்றலேயே வினவுகிறாள் தலைவி. அதனை உணர்ந்த தோழி தலைவி அறிந்துள்ள அண்மைக்கால வரலாறென்றை மேற்கோள் காட்டுவாளாய் நன்னனின் காவல் மரத்தை வெட்டிப் போரிட்டு வென்ற கோசர்களின் அரசியல் சூழ்ச்சியைக் கூறுகின்றாள். இக்காட்சியை மேடையில் காண்போர் தலைவன் வந்து என்ன பேசியிருப்பான், தோழி மறுமொழி என்ன என்பதெல்லாம் தெளிவாக உணர்வர்.

இச்செய்யுளுள் தோழியின் உரையாடலைத் தவிர வேறு வருணனைகள் சிறிதுகூட இல்லாமல் ஒரு நாடகக் காட்சிக்குரிய இடம் பொழுது சூழ்நிலை காலவரையறை முன்பின் தொடர்புகளைக் காட்டி இக்காதலர்களின் நுண்மையான உணர்ச்சிகளையும் உளவியலையும் தெளிவாகப் புலப்படுத்தியுள்ளார் இவ்வாசிரியர்.

இப்பாடலின் உறுப்புக்களை நோக்குங்கால் திணை குறிஞ்சி-கைகோள் களவு-கூற்று தோழிகூற்று – கேட்போர்தலைவி – களன் இரவுக்குறி மறுத்தல்–காலம் எதிர்காலம்–பயன் தலைவன் வரைந்து கோடல்-மெய்ப்பாடு அசைவு பற்றிய இளிவரலும் தறுகண்மை பற்றிய பெருமிதமும்-எச்சம் அலர் மாற்றல்-முன்னம் தலைவிஆற்றியிருக்க வேண்டல்-பொருள் குறிஞ்சிநிமித்தம் – துறை உறுப்பு இல்லை. இவ்வுறுப்புக்களின் வாயிலாக இப்பாடலின் நாடகப் பாங்கு மிக விளக்கமாதலைக் காணலாம். இவ்வாறே சங்கப்பாடல்களில் பெரும்பாலானவை நாடகத் தமிழ் நெறியிலேயே அமைந்துள்ளமையைக் காணலாம். கலித்தொகை. அகநானூறு பரிபாடல் இவற்றில் ஒன்றிற்கு மேற்பட்ட பல காட்சிகளைக் கொண்ட அங்கம் என்னும் நாடக உறுப்புக்கள் நிறைந்த பாடல்கள் பலவுள.

**நிறைவுரை :**

இவ்வாறு நாடகக் கலையின் நுட்பமும் விளக்கமும் தோன்றத் தொல்காப்பியம் காட்சிக்கு வேண்டிய இடம் காலம் முதலியவற்றை எழுதிணையாகவும் ஆறு பெரும்பொழுதாகவும் சிறுபொழுதாகவும் வகுத்து அந்நிலத்தில் காலத்தால் தோன்றும் பொருள்களைக் கருப்பொருளாக அமைத்துத் தலைவன் தலைவி தோழி செவிலி பாங்கன் கண்டோர் முதலாக உறுப்பினர்களை வகுத்து, அவர்கள் பேசும் முறைகளைப் பிறரொடு கூறல் நெஞ்சொடு கூறல் என வகுத்து, உவமை நயந்தோன்ற உயர்திணைப் பொருளோடும், புள், விலங்கு, கானல் முதலிய அஃறிணைப் பொருளோடும் பேசும் நிலையைச் சுட்டி அகத்திற்கும் புறத்திற்கும் உரிய மெய்ப்பாடுகளையும், குறிப்பாற்பேசும் உள்ளுறைகளையும் நெறிப்படுத்திப் பாத்திரங்களின் பண்பு நலங்களையும் செயல்களையும் வரையறுத்துரைப்பதனை நோக்கின், அவர்காலத்து நாடகக்கலை இக்காலத்து நிகழும் நாடகப் பாங்கினும் பலபடி உயர்ந்த நிலையில் இருந்திருக்க வேண்டும் என்பது புலனாகும். இடைக்காலத்தில் நாடகக் கலைஞர்கள் பெரிதும் வீழ்ச்சியுற்றதனால் நாடகத்துறை வளராதொழிய அகப்பொருளிலக்கணத்தை விளக்குவான் எழுந்த துறைப்பாடல்களைப் புலவர்கள் கோவைப்படுத்திப் பின்னர் புதிய யாப்பு முறையில் கோவைகள் பாடத் தொடங்கினர். கோவை நூல்கள் யாவும் நாடகத்தமிழின் ஒரு கூறு எனலாம். நிறைவுடைய நாடகத்தமிழ் இலக்கியங்களாகா. தமிழ் மக்கள் தம் சோர்வாலும் நெறி பிறழ்ச்சியாலும் தேக்கமுற்றிருக்கும் நாடகக் கலையினைத் தமிழ் நெறியோடு வளர்த்துப் போற்றி மகிழ்ந்து மாண்புற வாழத் தமிழன்னை அருள் புரிவாளாக.

★

# கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின்

# முதல் இராசேந்திர சோழன் செப்பேடுகள்

## கி. பி. 1020

பேராசிரியர் சி. கோவிந்தராசன்
(பழம்பொருள், கல்வெட்டு ஆராய்ச்சியாளர்) கரந்தைப் புலவர் கல்லூரி, கரந்தை.

பண்டைத் தமிழகத்தை ஆட்சிசெய்த சேர சோழ பாண்டிய பல்லவ மன்னர்களின் உண்மை வரலாற்றினை அறிந்து எழுதுவதற்கு உறுதுணையாகக் கிடைத்துள்ள சான்றுகள் செப்பேட்டுச் சாசனங்களும், கல்வெட்டுகளும், ஒரு சில தமிழ் இலக்கியங்களுமேயாகும்.

கி. பி. 850 முதலாக நானூற்று முப்பது ஆண்டுகள் தொடர்ந்து நின்ற பிற்காலச் சோழ மன்னர் ஆட்சிக் காலத்தில், அவர்களால் வழங்கப்பட்ட அறச்செயல்களைப் பற்றிய செப்பேட்டுச் சாசனங்களில் பல செப்பேடுகள், சோழ நாட்டில் ஏற்பட்ட ஆட்சி மாறுதல் காலங்களிலும், வெள்ளையர் ஆட்சிக் காலத்திலும் நமக்குக் கிடைக்காமற் போயின. எஞ்சியவற்றுள் காலத்தால் அழிந்தும் மண்ணிற் புதைந்தும் போயின போக, ஒரு சிலவே மக்களிடையே இருக்கலாமாயினும், அவற்றைத் தம் முன்னோர்க்கு அக்கால மன்னர் அளித்த சாசனப்பட்டயங்கள் என்று தவறுகக் கருதி, தானும் படித்தறியாமல் பிறரிடமும் காட்டாமல் மறைத்து வைத்துப் பாதுகாப்பதால், அவை இருந்தும் பயனில்லாமல் இருக்கின்றன. சில செப்பேடுகள் அறியாமையால் உருக்கப்பெற்றும், மேல்நாட்டு வணிகரிடம் விற்கப்பட்டும், செப்புப் பாத்திரங்களாக உருப்பெற்றும் போயின. இத்தகைய இடையூறுகட்கெல்லாம் தப்பிய நிலையில். கி. பி. 1949 வரையில் நமக்குக் கிடைத்துள்ள சோழர் காலச் செப்பேட்டுச் சாசனங்கள் ஆறு தொகுதிகளாகும்.

இவை, செப்புத்தகட்டில் தனியேடாகவும், தொகுதியாகவும் செய்திகட்கேற்ப வழங்கப்பெற்றுள்ளன. பல ஏடுகளுடைய செய்தியாயின் அவை, அரசுக்குரிய இலச்சினை பொறிக்கப்பட்ட உறுதியான உலோக வார்ப்பு வளையத்தில் கோக்கப்பட்டிருக்கும்.

செப்புத்தகட்டில் எழுதப்பட்டிருக்கும் சாசனங்களைத்தவிர, கலப்பை, கோடரி போன்ற உலோகத்தாலான பொருள்களிலும் சாசனங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. கி. பி. 13-ஆம் நூற்றாண்டில் வழங்கிய தமிழ் ஏழுத்துக்களில் சித்திரமேழி பெரியநாட்டார் என்னும் ஊர்ச்சபையார் செய்துள்ள சாசனம் ஒன்று, வெண்கலத்திலே செய்யப்பட்ட அவர்களுடைய இலச்சினையாகிய கலப்பை உருவத்தின் மீது பொறிக்கப்பட்டுள்ளது. சாசனங்களை எழுதிவைப்பதற்குப் பயன்படுத்தப்பட்ட உலோகங்கள் பலவாயினும், செம்புதான் மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை இதுகாறும் கிடைத்துள்ள செப்பேட்டுச் சாசனங்களே உறுதி செய்கின்றன. சாசனங்கள் அனைத்தும் தேவதானமாகவும் பிரமதேயமாகவும் செய்யப்பட்ட அறச்செயல்களையே உணர்த்துகின்றன.

### 1. சுந்தரசோழன் செப்பேடுகள் :

ஆறு செப்பேட்டுத் தொகுதிகளுள் பழமையானது கி. பி. 957 – 970 வரையில் சோழநாட்டை ஆட்சி செய்த சுந்தரசோழன் என்னும் இயற்பெயருடைய இரண்டாம் பராந்தகனால் வெளியிடப்பட்ட அன்பில் செப்பேடுகளாகும்.

சோழநாட்டில், காவிரிக்கு வடகரையிலுள்ள அன்பில் என்னும் ஊரினைய அநிருத்த பிரமாதிராசன் என்பான், சுந்தரசோழனுக்கு அமைச்சனாக இருந்தான். அவனுக்குத் திருவழுந்தூர் நாட்டிலுள்ள கருணாகரமங்கலம் என்னும் ஊரினை இறையிலியாக இவ்வேந்தன் வழங்கினான். இது குறித்து அளிக்கப்பெற்ற செப்பேடுகள் அன்பிற் செப்பேடுகள் எனப் பெயர் பெற்றன. இச்சாசனம், சுந்தரசோழனின் ஆட்சியாண்டு 4-இல், (கி. பி. 960.) வெளியிடப்பட்டதாகும்.

### 2. ஆனைமங்கலச் செப்பேடுகள் :
### (The Larger Leiden Plates)

இச்செப்பேட்டுச் சாசனம், முதல் இராசராசன் தனது ஆட்சியாண்டு இருபத்தொன்றில் (கி. பி. 1006-ல்) கடார நாட்டு மன்னன் சூளாமணிபந்மன் என்பவன் சோழநாட்டில் "சத்திரிய சிகாமணி வளநாட்டுப் பட்டனக் கூற்றத்து நாகப்பட்டனத்துத் தம் பெயரால் எடுப்பிக்கின்ற சூளாமணிபந்ம விகாரத்துப் பள்ளிக்கு (பௌத்த விகாரம்) வேண்டும் நிவந்தத்துக்கு சத்திரிய சிகாமணி வளநாட்டுப்பட்டனக்கூற்றத்து ஆனைமங்கலம்" என்னும் ஊரைப் பள்ளிச்சந்தமாகச் செய்து அதன் வருவாயான நெல் எண்ணாயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்து முக்கலனே ஒரு தூணிக்குறுணி ஒரு நாழியும் பள்ளிச் சந்த இறையிலியாக வரியிலிட்டுக் கொடுத்துள்ளான். அப்பௌத்த விகாரம் இராசேந்திரன் காலத்திற்றான் முடிவுபெற்றது. எனவே, முதல் இராசேந்திரன் தன் தந்தையின் அறச் செயலைச் செப்புப்பட்டயங்களில் வரைந்தளித்துள்ளான். இதுவே ஆனைமங்கலச் செப்பேடுகள் என்று பெயர் பெற்றதாகும். இச்செப்பேடுகளைக் கி. பி. பத்தொன்பதாம் நூற்றாண்டில் மேலைநாட்டு வணிகர் உலோக விலைக்குப் பெற்றுத் தமது நாட்டிற்கு எடுத்துச் சென்றனர். இதுபோது இச்செப்பேடுகள், ஆலந்து நாட்டில் லீடன் என்னும் நகரிலுள்ள பொருட்காட்சிச் சாலையில் இடம் பெற்றிருப்பதால் இதனை 'லீடன் பட்டயங்கள்' என்றழைப்பர். இச்சாசனம் 21-ஏடுகளுடன் கூடியதாகும்.

இதைப்போலவே, அளவில் சிறியதாக முதற் குலோத்துங்கன் காலத்தில் வெளியிடப்பட்ட ஆனைமங்கல நிவந்தச் செப்பேடுகளும் இக்காட்சி சாலையில் இடம் பெற்றிருப்பதால், அளவிலும் எண்ணிக்கையிலும் பெரியதான இச்செப்பேட்டுத் தொகுதியினை "பெரிய லீடன் பட்டயங்கள்" என்று பெயரிட்டுள்ளனர்.

### 3. திருவாலங்காட்டுச் செப்பேடுகள்:

இச்செப்பேடுகள் திருவாலங்காட்டில் எழுந்தருளியிருக்கும் அம்மை நாச்சியாருக்கும், திருவாலங்காடுடைய மகாதேவருக்கும், முதலாம் இராசேந்திரசோழன் இருபத்தைந்தரை வேலி நிலத்தைத் தேவதான இறையிலியாக நிவந்தம் செய்துள்ளதைக் கூறுவனவாகும். இவைகள், 1905-இல் கண்டுபிடிக்கப்பட்டன. 31-செப்பேடுகளுடன் கூடிய இவை, சோழர் கால இலச்சினையுடன் கூடிய வளையத்தில் கோக்கப்பட்டுள்ளன. இதிலுள்ள வடமொழிப்பகுதி (பிரசஸ்தி) 137-பாடல்களுடன் கூடியதாக இருக்கின்றது. தமிழ்ப்பகுதி 524-வரிகளை உடையது.

வடமொழிப் பாடல்களை ஆக்கியவர் சங்கரர் மகனும், சிறந்த புலவருமான நாராயணன் ஆவர். செப்பேடுகளில் தானச் செய்திகளைச் செதுக்கியவர் காஞ்சிபுரத்தில் தோன்றிய ஆராவமுதரும் அவரது தம்பியராகிய அரங்கன், தாமோதரன் என்பவர்களும் மேற்குறித்த ஆராவமுதர் மகனார் புருடோத்தமனும் ஆவர்.

இச்செப்பேடுகள் முதல் இராசேந்திர சோழனுடைய ஆறுவது ஆட்சியாண்டில் (கி. பி, 1018-ல்) தோன்றியனவாகும். இவற்றின் முதற்பகுதியாகிய வடமொழிப்பாடல் பகுதி (பிரசஸ்தி) சோழர் வரலாற்றுக்குரிய பல அரிய செய்திகளைப் புதிதாகத் தந்திருப்பதுடன், முதல் இராசேந்திரசோழனுடைய வரலாற்றைத் தெளிவு செய்வதற்குரிய பல நிகழ்ச்சிகளையும் கூறுகின்றது.

## 4. சாராலச் செப்பேடுகள் :

இச்செப்பேடுகள் முதல் இராசேந்திர சோழனின் மூன்றுவது பிள்ளையும், சோழ நாட்டை, கி. பி. 1063–1070 வரையில் ஆட்சி செய்தவனும், ஆகவமல்ல குலகாலன் என்ற சிறப்புப்பெயரைப் பெற்றவனுமான இராசகேசரி வீரராசேந்திரனால் வெளியிடப்பட்டனவாகும். சித்தூர் மாவட்டத்திலுள்ள சாரால என்னும் ஊரில் இச்செப்பேடுகள் கிடைத்தன. இவ்வரசனுடைய ஆட்சியாண்டு ஏழில் (கி. பி 1070-இல்) பெருங்கொடை வழங்கிய செய்தியை இச்செப்பேடுகள் குறிக்கின்றன. (Ep. Ind, Vol XXV, No. 25)

## 5. சிறிய ஆனைமங்கலச்செப்பேடுகள் (The Smaller Leiden Plates)

மூன்றே ஏடுகளுடன் கூடிய இச்செப்பேடுகள் லீடன் காட்சிசாலையிலேயே இடம் பெற்றுள்ளன. இவை, முதல் குலோத்துங்க சோழனால், ஆட்சியாண்டு இருபதில் (கி. பி. 1090 இல்) கடாரத்தரசன் சோழ நாட்டில், "கேய மாணிக்க வளநாட்டுப் பட்டனக் கூற்றத்துச் சோழகுல வல்லி பட்டன நாட்டு எடுப்பித்த ராஜேந்திரசோழப் பெரும்பள்ளிக்கும், ராஜராஜப் பெரும் பள்ளிக்கும் பள்ளிச்சந்த இறையிலியாக" ஆனைமங்கலத்தில் ஒரு பகுதியுடன் மூஞ்சிக்குடி, ஆமூர், நாணலூர், சந்திரபாடி, புத்தாக்குடி, உதயமார்த்தாண்டநல்லூர் ஆகிய ஊர்களிலிருந்து ஆயிரக்கணக்கான கலம் நெல் பெறுவதாக நிவந்தம் செய்துள்ள செய்தியைத் தெரிவிக்கின்றன. அளவில் சிறியதான இச்செப்பேடுகள் "சிறிய லீடன் பட்டயங்கள்" என்று பெயர் பெற்றுள்ளன.

## 6. கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் செப்பேடுகள் :

கி. பி. 1949இல், கரந்தை தமிழ்ச் சங்கத்திற்கு இச்செப்பேடுகள் கிடைத்தன. முதல் இராசராச சோழனின் அருமை மகனும், பேராற்றல் படைத்த வீரனும், கி. பி. 1012 முதல் 1044 வரையில் சோழர் பேரரசை யாண்டும் பரப்பிக் **கங்கைகொண்ட சோழன்** என்ற சிறப்புப் பெயருடன் விளங்கிய முதல் இராசேந்திரனால் ஆட்சியாண்டு எட்டில் (கி. பி. 1020 இல்) வெளியிடப்பட்ட செய்திகளை உடையவாகும். இவற்றின் பழமை, இற்றைக்குத் தொள்ளாயிரத்து ஐம்பத்திரண்டு ஆண்டுகட்கு முற்பட்டதாகும்.

தமிழகத்தில் இதுவரையில் கிடைத்துள்ள செப்பேட்டுத் தொகுதிகளில் இவை எண்ணிக்கையிலும் அளவிலும் மிகப்பெரியவாகயிருப்பது வரலாற்றுச் சிறப்புடையதொன்றாகும். இச்செப்பேடுகள், 1949-ஆம் ஆண்டில், சங்கப்பேரன்பரும், நாட்டுத் தொண்டருமாகிய கரந்தைக்காந்தியெனும் தி. ந. ச. அ. சாம்பசிவம் பிள்ளையவர்களால் சங்கத்திற்கு அளிக்கப்பட்டனவாகும். இந்திய அரசாங்கத் தொல்லெழுத்துப்படிவத்தார் (*Government Epigrpdhist for India*) 11-3-1950-ல் இவைகளை எடுத்துச்சென்று, மைப்படிகள் எடுத்துள்ளதைத் தொடர்ந்து. "கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் முதல் இராசேந்திரசோழன் செப்பேடுகள்" என்ற பெயரால் தமிழக வரலாற்றில் இடம் பெறச் செய்துள்ளனர். இச்செப்பேடுகள் பற்றி அண்ணாமலைப்பல்கலைக் கழக வரலாற்று ராய்ச்சிப் பேராசிரியர் திரு வை. சதாசிவப் பண்டாரத்தார் முன்னுரையொன்றெழுதித் தமிழ்ப் பொழில் துணர் 33, மலர் 3 இல் கி. பி. 1957-ஜூன்) வெளியிட்டார். அது போது செப்பேடுகளின் முதற்பகுதியன

(இச்செப்பேட்டு முகப்பினைப் பற்றிப் படத்துடன் தமிழ்ப்பொழில் துணர்-33, மலர் 7இல் (கி. பி. 1957) விரிவாகக் கட்டுரை எழுதியுள்ளேன்.

**சாசனம் :**

தமிழகத்தை ஆண்ட மன்னர்கள் வழங்கிய அறச்செயல்களைப்பற்றிய உத்தரவுகளே சாசனங்கள் என்று பெயர் பெற்றன. சாசனம் என்பதற்கு, உத்தரவு, கட்டளை என்பது பொருளாகும். முதலில் அரசனின் கட்டளைகளைக் குறித்து வந்த சாசனம் என்ற சொல், நாளடைவில் அறப்பொருளைப் பெற்றவர் அப்பொருளின் உரிமையை அனுபவிப்பதற்குரிய அடிப்படைச் சான்றாகக் கொண்ட பத்திரங்களாயின.

அரசன் கூறிய அறக்கட்டளைகளை முதலில் செப்புப்பட்டயங்களில் எழுதுவதில்லை. அவை அக்கால வழக்கப்படி பனையோலைகளில் (பத்திரங்களில்) எழுதப்பட்டு அரசியலதிகாரிகளால் முறையே தணிக்கை செய்யப்பெற்று, சான்றுயினோர் கையொப்பமிட்ட நிலையில், அரசியல் கணக்கிலும் வரியிலும்எத்தகைய பிழையும் ஏற்படாமல் எழுதப்பெறும் தானம் பெற்றவருக்கு ஒரு பிரதி கொடுக்கப்பெறும்.

பனையோலைச்சாசனங்கள் நீண்டகாலம் இருப்பனவல்லவாதலினாலே, தக்க இடங்களில் அவ்வறச்செயலைக் கல்லில் வெட்டி வைப்பதுடன், செப்பேடுகளிலும் பொறித்தளிப்பது அரசனின் ஆணையாகவே இருந்தது. இதனை, " கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்ளக் கடவாராகவும் " என்னும் கல்வெட்டுப்பகுதிகள் உணர்த்துகின்றன.

**செப்பேடுகளில்–சாசன அமைப்பு :**

ஐம்பத்தேழு ஏடுகளாகக் கிடைத்திருக்கும் இச்செப்பேடுகளில், முழுமையான சாசனச் செய்தியமைப்புடன், ஒரு தொகுதியாக இருப்பவை ஐம்பத்தைந்து ஏடுகளேயாகும். முதல் இராசேந்திரன் செய்துள்ள அறக்கட்டளைகளை உணர்த்தும் இச்செப்பேடுகள் முப்பெரும் பிரிவுடைய ஒரு தொகுதியாகவுள்ளன.

**முதல் மூன்று ஏடுகள்,** பழைய கிரந்த எழுத்துக்களில், எழுபத்தேழு வடமொழிச் செய்யுட்களாலான, மன்னர் மரபுப் புகழ்ச்சியுரைப் பகுதியாகும் (பிரசஸ்தி). **அடுத்துள்ள இருபத்திரண்டு ஏடுகள்** அறத்திற்குரித்தான ஐம்பத்தோரூர்களின் பெயர்களுடன் ஊர்கட்குரிய எல்லைகள், அளவு, தரம், வருவாய் ஆகியவற்றைத் தெரிந்துக் குறித்துரைக்கும் தமிழெழுத்துப் பகுதியாகும். **மற்றைய முப்பது ஏடுகள்,** தானம் பெற்ற அந்தணப் பெரியார்களை அவ்வவர்க்குரிய கோத்திர சூத்திரத்துடன் குறிப்பதோடு, கிராம ஊழியர், சாசனம் எழுதியவர், சாசனம் வெட்டியவர், அவ்வவர்க்குரிய நிலப்பங்கு ஆகியவற்றையும் முறையாக அறிவிக்கும் கிரந்த வெழுத்துப் பகுதியாகும்

**எஞ்சியதாகவுள்ள இரண்டேடுகளும்,** இம்மூலச் சாசனத்திற்குப் பிரதியாகச் செய்யப் பெற்றவைகளுள் எஞ்சியதாகக் கிடைத்துள்ளன. அவற்றில் பொறிக்கப் பட்டுள்ள செய்திகளால், இவை பிரதிச் செப்பேடுகட்குரியன என்பதையும், வளையம் சிதைந்த நிலையில் கிடைத்துள்ள சோழவரசின் இலச்சினையுடன் கூடிய மற்றொரு முகப்பும் அறிவிக்கின்றன. இவற்றின் எஞ்சிய ஏடுகளும் வளையமும் அறியாதார் கைப்பட்டு அழிந்தனபோலும் !

ஏடுகளில் இருபுறமும் எழுத்துக்கள் செதுக்கப்பட்டுள்ளன. பக்கத்திற்கு 24–வரிகளும், வரிக்கு 45 முதல் 50-க்குக் குறையாத எழுத்துக்களும் உள்ளன. எழுத்துக்களை செதுக்குவதற்கு முன்னர்ச் சிற்பாசாரியன் ஏடுகளில் வரிக்கோடுகள் வரைந்து அதன் மீதே எழுத்துக்களைச் செதுக்கியுள்ளதை, ஏடு, 9, 20, 22–ஆகியவற்றில் தெளிவாகக் காணமுடிகின்றது,55- ஏடுகளில், வடமொழிச்செய்யுளமைந்த முதல் மூன்று ஏடுகள் நீங்க, தானக்கட்டளை விளக்கமமைந்த

22-ஏடுகள் ஒரு தொடராகவும், தானம் பெற்றோரையும் முறைமைகளையும் கூறும் 30-ஏடுகள் ஒரு தொடராகவும், உள. ஏடுகளி லுள்ள துளைகட்கு மேல் தொடர் எண்கள் குறிக்கப்பட்டிருப்பதுடன் 'திரிபு' என்ற எழுத்திலச்சினையும் பொறிக்கப்பட்டுள்ளன

## சோழ மன்னர் மரபுப் புகழ்ச்சியுரை : (பிரசஸ்தி)

ஸ்வஸ்திஸ்ரீ என்ற மங்கலச் சொல் லுடன், "காஷ்மீர பங்க" என்று தொடங் கும் முதலிரண்டு வடமொழிச் செய்யுட் களும், 'திருமாலின் திருப்புயங்கள் சோழர் மரபுக்குச் செல்வத்தைக் கொழிக்கச் செய்வ தாக, சோழர்மரபு கடல் சூழ்ந்த இந்நில வுலகத்தை நீடூழிக் காலம் காப்பதாக' என் னும் வாழ்த்துரைகளை வழங்குகின்றன.

மூன்றாவது செய்யுளிலிருந்து பதின் மூன்றாவது செய்யுள் முடிய முற்காலச் சோழர் மரபு முறையாக விளக்கப்பட்டுளது. அவை, மனு, இட்சுவாகு, மாந்தாதா, முசுகுந்தன், சிபி, சோழன், இராசகேசரி, பரகேசரி, சுரகுரு, உபரிசரவசு, கரிகாலன் ஆகியோர் தோன்றினர்கள் என்பதும் கரிகாலன் மரபில் எண்ணற்ற வேந்தர்கள் தோன்றி விண்ணுலகடைந்தனர் என்பதும் ஆகும்.

பதினான்காவது செய்யுளிலிருந்து முப்பத் தொன்பதாம் செய்யுள் முடிய பிற்காலச் சோழமன்னர்களான. விசயாலயன்; அவன் மகன் ஆதித்தன்; அவன் மகன் பராந்தகன்; அவன் மகன் அரிஞ்சயன்; அவன் மகன் பராந்தகன் II; அவன் மகன் இராசராசன்; அவன் மகன் மதுராந்தகன் (இராசேந்திரன்) என்ற அளவில் சோழமன்னர்களை முறைமை தப்பாது கூறுகின்றன

தொடர்ந்து 40–75 வரையிலுள்ள செய் யுட்களில் முதல் இராசேந்திரனின் பிறப்பு இளமைப்பருவம், அரசு, ஆற்றல், புகழ் ஆகியவற்றைப் பற்றி விரிவாக விளக்கப் பட்டுளது.

இறுதியாக நிற்கும் 76, 77 ஆகிய இரண்டு செய்யுட்களில், சாசனம் எழுதிய வர், சாசனம் வெட்டியவர் ஆகிய இருவரும் குறிக்கப்பெறுகின்றனர். இவ்வளவில் மன்னர் மரபுப் புகழ்ச்சியாம் பிரசஸ்திப்பகுதி நிறைவு பெறுகின்றது.

வரலாற்றுக்குரிய 77-வடமொழிச் செய் யுட்களால் அமைந்ததும், முற்கால, பிற் கால, சோழமன்னர்களின் மரபினையும், அவ்வவரின் ஆற்றல்களுடன் அரிய செயல் களையும், உவமைகளாலும் வருணனைகளா லும் விரிவாகவும் சிறப்பாகவும் அழகாகவும் எடுத்துக் கூறுவதுமாகிய இப்பகுதி, இது வரையில் வந்துள்ள சோழமன்னர் வரலாற் றுள் புதிய செய்திகள் பலவற்றைத் தருவ தாக அமைந்துள்ளதால், அவற்றுள் ஒரு சிலவற்றை ஈண்டு எடுத்துக்காட்டுதல் சிறப் புடையதாகும்.

## மனு :

"உலகங்கள் அனைத்திற்கும் ஒரு கண் ணாக விளங்கும் கதிரவனிடமிருந்து அரசர் களுக்கெல்லாம் முதல்வனான மனு தோன்றி னான்". (வ. செ. 3)* இச்செய்தியால் சோழர் குல மன்னருள் முதல்வன் மனு என்று கருதப்பட்டது புலனாகின்றது. அவன் கதிரவனிடமிருந்து தோன்றினான் என்ற செய்தி சோழர் சூரிய குலத்தவர் என்பதைத் தெரிவிக்கின்றது.

## இராசகேசரி, பரகேசரி :

மனுவிலிருந்து தொடரும் மன்னருள் ஏழு, எட்டாவதாக, "இராசகேசரி, பரகேசரி என்ற புகழ்பெற்ற அரசர்கள் தோன்றினார் கள். அவ்விருவரின் பெயர்களும் சோழர் குலத்தில் தொடர்ந்து தோன்றிய மன்னர் கட்கு முறையே மாறிமாறி வழங்கும் ஆணை யாயிற்று" (வ. செ. 7, 8)

* வ. செ. = வடமொழிச் செய்யுள்

(3) "மேலைச்சளுக்கிய குலத்தை வேர றுக்க நோக்கமுற்றிருந்த இராசராசன், பெருந்தானை ஒன்றனைத் தன் மகன் இராசேந்திரன் பால் அனுப்பினான்"
(T. உலகநாதபிள்ளை, இராசராசன் வரலாறு, பக்–35.)

முதல் இராசராசன் வரலாற்றில் தொடர்ந்து வந்துள்ள இவ்வையத்தினைப் போக்கி, 'இராசராசன் சத்தியாசிரயனுடன் குதிரை மீதிருந்து நேருக்குநேர் வாட்போர் புரிந்து வெற்றி பெற்றதோடு, சளுக்கிய நாட்டுப்பெருஞ்செல்வத்தினையும் கைப்பற்றி வந்தான்' என்ற உண்மை வரலாற்றினை இவ் வடமொழிச் செய்யுட்பகுதிகள்; சிறந்த வருணனைகளுடன் விளக்கமாக உறுதி செய்கின்றன.

(வ. செ. 29–35) அவை வருமாறு ;

"இராசராசன் ஊழிக்காலத்துக் கடல் போன்ற தனது படையைத் திருப்பிவிட்டு, ஒரு நொடியில் தான் ஒருவனாகவே குதிரையில் ஏறிக்கொண்டு மிக்க வேகத்துடன் வந்துகொண்டிருந்த சத்தியாசிரயனுடைய படையை விண்ணினின்றும் வேகத்துடன் விழுகின்ற கங்கையைச் சிவபெருமான் சடையினால் தாங்கியதைப் போல் விளையாட்டாகத் தனது கொடிபோன்ற வாளினால் ஏற்றான்."

"கேசவனுக்கு ஒப்பானவனும் கேசவன் என்னும் பெயருள்ளவனுமான சத்தியாசிரயனுடைய சேனைத் தலைவன் இராசராசனால் போரில் உயிருடன் பிடிக்கப்பட்டான்."

"இராசராசன் குதிரைகளின் வரிசைகளாகிற அலைத்தொகுதியை உடையதும், யானைகளாகிற முதலைகளால் சூழப்பட்டதும், காலாட்களின் கூட்டங்களாகிற கொந்தளிக்கும் நீர்ப்பரப்பை உடையதும், மண்ணுலகத்தையே மறைப்பதுவுமான சத்தியாசிரயனுடைய படையாகிற கடலைத் தனது புயங்களாகிய மந்தரமலையினால் வலிமையுடன் கடைந்து, புகழாகிற மதியுடன் வெற்றித் திருமகளையும் விரைவில் ஏற்றுக் கொண்டான்."

"மனு வம்சத்திற்குக் கொடி போன்றவனும், எமனுக்கொப்பானவனுமான அவன் (இராசராசன்) ஒரே குதிரையுடன் வலிமை பொருந்திய சத்தியாசிரயனை இரத்த ஆறுகள் சூழ்ந்த போர்க்களத்தினின்றும் ஒரே நொடியில் ஓடச்செய்து, அவனது தோள்வலியால் ஈட்டப்பட்ட மதம் பொருந்திய யானைகள் குதிரைகள், இரத்தினங்கள், பெண்கள், குடைத் தொகுதிகள், கொடிகள் இவை யாவற்றையும் பறித்துக் கொண்டான்."

## இராசேந்திரன் பிறப்பு :

முதல் இராசேந்திரனது பிறப்பைக்கூறும் 39-ஆம் செய்யுள், "கலியின் வலியை சிதைப்பதற்காகத் திருமாலே உலகில் பிறந்து விட்டார்" என்று எவனைச் சிறப்பித்துச் சொல்லுவார்களோ அப்படிப்பட்டவனும், மனு குலத்திற்கு அணியாக விளங்குகின்றவனுமாகிய மதுராந்தகன் என்னும் அரசனை அறிவு சான்ற இராசராசன் தோற்றுவித்தான்." என்று கூறுகின்றது. மதுராந்தகன் என்பது முதல் இராசேந்திரனின் இளமைப் பெயராகும்.

## மான்யகேட வெற்றி :

மான்யகேடம் என்னும் பெயருடைய மேலைச்சளுக்கியரது தலைநகரை, இராசராசன் தான் அங்கு நிகழ்த்திய போர்க்காலங்களில் கைப்பற்றாது போனதால், தமது வாழ்நாளில் "மான்ய கேடத்தை நான் பிடிக்காத வரையில் கிரிஹர விகாரம் * செய்வதில்லை" (வ. செ. 51) என்று சூளுரை செய்திருந்த நிலையில் இறந்தான். தந்தையின் சூளுரையை நிறைவேற்றி வைப்பதற்காக மதுராந்தகன் அத் தலைநகரைக் கைப்பற்ற உறுதி கொண்டான்

* கிரிஹர விகாரம் – மலைபோன்று உயர்ந்த அடுக்கு மாடமாளிகை

"மான்யகேடத்தை விரனை மதுராந்தக தேவன் தண்டத்தினல் எரித்து, அவர்களுடைய அழுக்கற்ற புகழ்க் குவியல்களுடன், பல பொருள்களையும் ஊர்திகளையும், தனது தலைநகரில் இருந்து கொண்டே பறித்துக் கொண்டான்". (வ. செ. 55)

இவ்வாறு, மான்யகேடத்தை இராசேந்திரன் தலைநகரில் இருந்தவாறே, தனது தந்தையின் சூளுரையை நிறைவேற்றும் உறுதியால், தனது படைகளை ஏவிக் கைப் பற்றிய நிகழ்ச்சி இதுவரையில் இராசேந்திரன் வரலாற்றில் இடம்பெருத புதிய செய்தியாகும்.

## கங்கையைக் கைக்கொண்டது :

இராசேந்திரன் தனது ஆட்சியாண்டு பன்னிரண்டில் (கி. பி. 1024) கங்கைக் கரை வரையில் படையெடுத்துச் சென்று கங்கை நீரைக் கொணர்ந்து, தாம் அமைத்த புதிய நகரைத் தூய்மை செய்தான் என்று வரலாறுகள் கூறும். இவ்வாறு கங்கைவரையில் படையெடுத்துச்சென்ற நிகழ்ச்சியை

"எல்லா அரசர்கட்கும் விளக்குப்போன்றவனும் நற்குணங்கள் நிறைந்தவனுமான அவன் (இராசேந்திரன்) கங்கையைக் கொண்டு வருவதற்காகத் தவம் பூண்டு உடல் மெலிந்த பகீரதனுடைய கதையைக் கேட்டுச் சிரித்துக் கொண்டே, அதன் கரையிலுள்ள அரசர்களுடைய முடிகளாலேயே கங்கை நீரைத் தன் நாட்டுக்கு அழைத்து வந்துவிட்டான்" என்று 64-வது செய்யுள் அழகுடன் விளக்குகின்றது.

## அறம் செய்த ஆண்டு :

மதுராந்தகன், "தனது தாயின் பெயரால் காவிரியின் சுவையுள்ள நீர்ப் பெருக்கின் சாரத்தைப் பெற்ற திரிபுவன மாதேவி என்னும் பெயருள்ள அக்ரஹாரத்தை ஐம்பத்தொரு கிராமங்களோடு கூடினதாகச் செய்தான்"

"மதுராந்தகன் என்னும் இவ்வரசன் தான் பட்டத்திற்கு வந்த ஆண்டில், ஆயிரத்துடன் எண்பதும் கூடின எட்டாவது ஆண்டினை அடைந்தவனாய், நாளும் விழாக்கள் நிறைந்த தனது நாட்டில் நிலைத்த செல்வம் படைத்த பல ஆசிரமங்களை (பிர்மதேயங்களை) அந்தணச் . சிரேஷ்டர்களுக்கு அன்புடன் கொடுத்தான்." (வ. செ. 67, 68)

இதில் குறிக்கப்படும் ஆண்டு எண், ஆயிரத்துடன் எண்பதும் கூடின எட்டாவது ஆண்டு என்பதாகும் (1000 + 80 + 8 = 1088). இதில் ஆயிரத்துடன் எண்பது (விக்கிரம சகாத்தம்–1080) ஆட்சியாண்டுத் தொடக்கமும், அதிலிருந்து எட்டாவது ஆண்டு (1088) இச்செப்பேடுகளிலுள்ள அறச்செயல் ஏற்பட்ட காலமுமாகும்.

இதுவரையில் கூறப்பெற்றுள்ள செய்திகள் யாவும் இச்செப்பேடுகளின் முதற்பகுதியான மூன்று ஏடுகளில் கண்ட மன்னர் மரபுப் புகழ்ச்சியுரையாகும் (பிரசஸ்தி) வடமொழிச் சுலோகங்களின் மொழிபெயர்ப்புள் சில பகுதிகளாகும். இச்செய்திகள் பிற்காலச் சோழர் வரலாற்றில் புதிதாக இணைக்கப்பெற வேண்டிய சிறந்த பகுதிகளாகும்.

இவற்றுள் சிலவற்றிற்கும், மற்றைய செய்யுட்களில் வரலாற்றுச் சிறப்புடையனவற்றுக்கும் உரிய விளக்கங்களை இதன் "ஆராய்ச்சி உரை" என்ற தலைப்பிலுள்ள இதன் இரண்டாம் பகுதியில் காணலாகும்.

## இறையிலி நிலதான விளக்கம் :

கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் செப்பேடுகளில் காணப்படும் முதல் இராசேந்திரனல் அந்தணர்கட்கு அளிக்கப்பட்ட பிரமதேய நிலதான முறையினை ஆராய்வோமாளுல், சோழவரசர்கள் எவ்வகையில் ஆய்வு செய்து, குறையில்லாமல் நிலதானம் செய்துள்ளனர் என்ற விளக்கம் தெளிவாகக் கிடைக்கின்றது. அம்முறைமை பின்வருமாறு :

(1) சிறந்த காரணத்திற்காகவோ, நினைவுக்குரிய நாளின் பொருட்டோ, பிற நிமித்தமாகவோ, அரசன் இத்தகைய அறத்தினைச் செய்ய வேண்டுமென்ற கருத்தினை, அவையோருள் சிறந்த ஆச்சாரியரோ, அமைச்சரோ, பிறரோ அரசனிடம் விண்ணப்பம் செய்வர்.

(2) அரசனால் தானம் செய்யப்படும் பொருள் நன்செய் புன்செய் நிலமாயின், குறிப்பிட்ட நிலப்பகுதியை, முதலாவதாக, நிலவளவு செய்யும் அதிகாரிகள் சென்று, நிலமுள்ள ஊர் நிலத்தின் தரம், விளைவு நிலை, வருவாய், வரி, இறைவகைகள் ஆகியவற்றை நேரில் கண்டு குறிப்பெடுத்து அளந்து வந்த கணக்கினை அரசனிடம் சேர்ப்பிப்பர்.

(3) அரசன் அக்கணக்கினைத் தன்கருமமாராயும் அதிகாரிகளிடம் கொடுத்துத் தணிக்கை செய்ய உத்தர விடுவான், இதனை 'ஆணத்தி' என்று கூறுவர்.

(4) அரசனுடைய கருமமாராயும் அதிகாரிகள் அந்நிலக்கணக்கினை ஆய்ந்து முறைப்படுத்தி, நாட்டு நிர்வாகத்திற்குரிய வரி, இறை, நாட்டளவு ஆகிய துறைகட்குரிய அதிகாரிகளின் பார்வைக்கு அனுப்புவர்.

(5) அவ்வதிகாரிகள் பழைய நிலக் கணக்குகளோடு ஒப்புப்பார்த்துத் தணிக்கை செய்த பின்னர்,

(6) அரசுக்குரிய எவ்வகை வரிகட்கும், முன்புள்ள அறநிலங்கட்கும் உரிய துறைகளின் தலைவர்கள், மூலப்பதிவேடுகளில் அந்நிலப் பகுதிக்குள்ள எல்லாவகையான கணக்குகளுடனும் சரிபார்த்து ஆராய்வதுடன் அப்பகுதியில் முன்னர் நிலனும் புலனுமுடையாரின் உரிமைகளையும், கோயில்கள், குளங்கள், நீர்ப்பாசனவழிகள், பொதுவழிகள், பொதுவிடங்கள் ஆகியவற்றையும் நீக்கியளந்த கணக்குப்படி, எஞ்சிய நிலப்பகுதி இறைவரி அந்தராயங்கள் நீக்குதற்கு ஏற்புடையதாகுமா என்பதை ஆராய்ந்து இறையிலி செய்ய ஒப்புதலளிப்பர்.

(7) அதன் பின்னர் அரசன் தகுதிவாய்ந்த அரசியலதிகாரிகளை நியமித்து, அவர்களுடன் அவ்வறப்பகுதிக்குரிய "நாட்டவர் உடனிருந்து பிடிசூழ்ந்து பிடாகை நடந்து எல்லைகட்குக் கல்லும் கள்ளியும் நட்டு அறவோலை செய்யவும்" எனும் கட்டளையுள்ள ஓலையை நாட்டவர்க்கு அனுப்புவன்.

(8) ஓலையைப் பெற்ற நாட்டவர் அரசனுடைய ஆணையின்படி நியமிக்கப்பெற்ற அவ்வதிகாரிகளுடனிருந்து தான நிலங்களின் அல்லது ஊர்களின் எல்லைகளை உரிய ஊர்க் கணக்குப்படி யளந்து, எல்லைகட்கு அடையாளமிட்டு ஊர்ச்சபையாரிடம் ஒப்படைப்பர்.

(9) ஊர்ச்சபையார்கள் தானநிலத்தை இறையிலியாக அறவோலை செய்து, அரசனுடைய ஆணையை நிறைவேற்றுமுகத் தான் ஆட்சியாண்டுடன் தானம் பெற்றவருக்கு நிலவுரிமை செய்து கொடுப்பர்.

(10) பின்னர், அரசனுடைய ஆணைப்படியோ, சபையாரின் முடிவுப்படியோ, அவ்வறவோலைக்குப் படியாக என்றும் அழியாத நிலையில் சான்றாக நிற்கும் கல்வெட்டாகவும், செப்பேட்டுச் சாசனமாகவும் செய்து வைப்பர்.

இம்முறைப்படியே இச்சாசன அமைப்பு விளங்குவதை எளிதில் நன்கு உணரலாகும்.

[செப்பேடுகளிலுள்ள செய்திகளை, சாசன முறைப்படி சுருக்கிக் கூறியுள்ளதுடன், ஏற்ற இடங்களில், சாசனத்தொடர்களை உள்ளவாறே ஆங்காங்கு எடுத்துக்காட்டுதலினால், வரலாற்றாராய்ச்சிக்குரிய செய்திகள் விளக்கமாதலுடன், இராசேந்திரசோழனுடைய ஆட்சியாண்டு எட்டில் நாட்டதிகாரிகளாகவும், பிற அரசியலதிகாரிகளாகவும் இருந்தவர்களின் பெயர்களையும் அறிந்து கொள்ளலாகும். இயன்ற அளவில் வரலாறுகவே கூறியுள்ள இப்பகுதியில் காணப்பெறும் அதிகாரிகளின் பெயர்களுள் பல, இதுவரையில் இராசேந்திரன் வரலாற்றுக்குக் கிடைக்கப்பெறாத பெயர்களாகும்.]

### தானம் செய்ய – விண்ணப்பம் :

முதல் இராசேந்திரன் வியாக்ர அக்ர காரத்தில் (பெரும்பற்றப்புலியூரில்) இருந்த மாளிகையில் இருந்தபோது, ''அவ்வக்ர காரம் முழுவதையும் அங்கு வாழ்ந்திருந்த அந்தணப் பெரியோர்கட்கு நிர்வாரத்துக் கொடுத்தான்'' (வ. செ. 65.)

அதன் பின்னர் ஒருநாள், ''இராசேந்திர னுடைய அமைச்சருள் வியாழனுக்கு ஒப் பானவரும், இராசேந்திரனின் மற்றொரு உடல் போன்றவரும், நல்வழியைக்கடைப் பிடிக்கும் நல்லோர்கட்கெல்லாம் தலைவரும், கல்வி என்னும் ஆறுகட்கெல்லாம் கடல் போன்றவரும், ஸ்ரீஜகநாதன் என்ற பெய ருள்ளவருமான இவ்வரசனுடைய அமைச்சர், இலக்குமி திருவிளையாடும் இடமான வேத மறிந்த பிராமணர்கட்குப் பிர்மதேயமாக கிராமங்களை யளிக்க விண்ணப்பம் செய்பவ ராய் இருந்தார்'' (வ. செ. 70)

அவருடைய விண்ணப்பப்படியே, இராசேந்திரன் தனது தாய் திரிபுவனமாதேவி யின் பெயரால், நித்தவிநோத வளநாட்டில் விளங்கி வந்த 'திரிபுவனமாதேவி அக்ரஹா ரம்' என்னும் கிராமத்தையும் அதைச் சூழ்ந் திருந்த கிராமங்களையும் ஒன்றாகச் சேர்த்து ஒரூராக்கி, ஆசிரமங்களுடன் அந்தணச் சிரேஷ்டர்களுக்குப் பிரமதேய தானமாகக் கொடுக்க விரும்பினேன்.

அரசனுடைய விருப்பப்படியே அதிகாரி கள், நித்தவிநோத வளநாடு அதைச்சார்ந்த விரசோழ வளநாடு ஆகியவற்றுள் தொகுதி யாக அமைந்திருந்த ஐம்பத்தோரூர்களை, தனித்தனியே அளந்தும், எல்லாவற்றையும் சேர்த்து ஒரூராய் அளந்தும் வந்த கணக்கை அரசனிடம் சேர்ப்பித்தனர்.

### தானத்தின் தோற்றம் :

இராசேந்திரசோழன், தனது ஆட்சி யாண்டு எட்டு (கி. பி. 1020) நாள் 107இல் பெரும்பற்றப்புலியூர் மாளிகையிலுள்ள 'இராஜேந்திரசோழ பிர்மாதிராஜன்' என்ற பெயருள்ள கீழைமண்டபத்தில் விரதமேற் றிருந்த பொழுது, பிர்மதேய தானத்தைச் செய்ய முற்பட்டான். இச்செய்தி நான்கா வது ஏட்டிலிருந்து தொடங்குகின்றது.

ஸ்வஸ்திஸ்ரீ என்ற மங்கலச் சொல் உடன் தொடங்கும் இப்பகுதியிலிருந்து, இராசேந்திரன் தானே திருவாய் மொழிவ தாகக் கட்டளைகள் அனைத்தும் எழுதப் பட்டுள்ளன. தொடக்கப்பகுதி –

''ஸ்வஸ்திஸ்ரீ கோனேரின்மை கொண் டான் நித்த விநோத வளநாட்டு விரசோழ வளநாட்டு வெண்ணிக் கூற்றத்து நாட் டார்க்கும், பிர்மதேயக்கிழவர்க்கும், தேவ தானப்பள்ளிச்சந்தக் கணி முற்றாட்டு வெட் டிப்பேற்றுப் பழவரச் சாலாபோகம் உள் ளிட்ட ஊர்களிலார்க்கும், நகரங்களிலார்க் கும், நமக்கு யாண்டு எட்டாவது, நாள் நூற் றேழினால் நாம் பெரும்பற்றப்புலியூர் விட்ட வீட்டின் உள்ளால் மாளிகையின் கீழைமண் டபம் இராஜேந்திர சோழ பிர்மாதிராஜனில் நாமுண்ணு விருந்து.

நித்த விநோத வளநாட்டு விரசோழ வளநாட்டு நாட்டுப்பொது திரிபுவன மாதேவிப்பேரேரியும், இவ் வேரியரயர்கள் கமுகுகொள்ளி வெட்டிப்பேறும், நாட்டுப் பொது ஊர் நத்தமும், நாட்டுப்பொது சிறு பற்றைக்காடும் என்றளந்துவந்த நிலமும், இந் நாட்டு நெற்குப்பைத் திருமால் காடனும், தஞ்சை நாட்டுக்கோனும், வேளாண் அரங்க னும் உள்ளிட்டார் பற்றும்'' கூடியதாக, அளந்து வந்த ஊர்கள்.

### தான நிலங்கட்குரிய ஊர்கள் - 51 :

1. செம்பங்குடி. 2. குளப்பாடு. 3. துளார். 4. நல்லம்பர். 5. திரிபுவனமா தேவிநல்லூர். 6. விச்சூரான சிக்கர். 7. முஞ் ஞாவல். 8. கூத்தனூர். 9. கமுகன்சேந்தன் குடி. 10. வைகுந்தநல்லூர். 11. மகிமாலய

நல்லூர். 12, கிழமாத்தூர். 13. பரகேசரி நல்லூர். 14. பெண்ணுகடம்; 15, உறந்தூர். 16. சிறையூர். 17. கீழ்சோற்றுத்துறை. 18. நெடுவாயில். 19. ஏறுபாடி; 20. புளிகைக்குடி. 21. பெருங்குடி. 22 முண்டனூர். 23. தாமோதரநல்லூர். 24. அரசூர். 25. வளுவநல்லூர். 26. குணசீலநல்லூர். 27. செய்யாநல்லூர். 28, சிற்றுலிநல்லூர். 29. நித்தவிநோதநல்லூர். 30. வேங்கூர். 31. நியாயநடைநல்லூர். 32. சேந்தமங்கலம். 33. இகழாநிலை நல்லூர். 34. விரநாராயண மங்கலம். 35. கருவூர். 36. கோவிந்தநல்லூர். 37. வீரசோழ நல்லூர். 38. கொஞ்ஞாப்பூர். 39. மணிமங்கலம். 40. துறையாநல்லூர். 41. வாமனநல்லூர். 42. ஆதநல்லூர். 43. சிறுமுன்னியூர். 44. மேட்டு மேற்குடி. 45. பூதமங்கலத்துப் பால்காடன் காரிகுறிச்சி 46. பருத்தி நியமத்துத் திறப்பான தேவதானக்குடி. 47. விளங்குடி. 48. வெண்ணிக்கணிமுற்றாட்டி-றங்கல் நெடுங்கணக்குடி 49. பூதமங்கலத்துப்பால் அயலூரட்டிக்காணி 50. பள்ளிச் சந்தமிறங்கின ஸ்ரீகரண மங்கலமான கொட்டாரக்குடிப்பள்ளி 51. புறக்குடி — என்பனவாகும்.

## பிர்மதேயமாகச்செய்வன :

"ஆக இவ்வூர்கள், வெண்ணிக்கூற்றத்து முதல் தவிர்ந்து, இவ்வூர்களும் முன்காணியுடையாரைமாற்றி குடிமைக்கிக் காராண்மை மீயாட்சியும், மிகுநிக் குறையும் உள்ளடங்க வெள்ளான் வகையில் முதல்யாண்டு எட்டாவது முதல் தவிர்ந்து, வெள்ளானூர்களை பிர்மதேயமாகச் செய்வன. பிர்மதேயம் மர்யாதி இறைகட்டும்படி இவ்வூர்களுக்குத் தவிர்ந்து இவ்வூர்களில் நாட்டுப்பொது திரிபுவனமஹாதேவிப் பேரேரியும், இவ்வேரியரயர்கள் கமுகுகொள்ளி வெட்டிப் பேறும், நாட்டுப்பொதுவூர் நத்தமும், நாட்டுப்பொதுச் சிறுபற்றைக்காடு மென்றளந்து வந்தபடி"

## பிர்மதேயநில அளவும் வருவாயும் ;

பிர்மதேயத்திற் கென்று 51 - ஊர்களிலும் அளந்து வந்த நிலக்கணக்குகள் இதற்கு மேல் தொடர்ந்து கூறப்படுகின்றன. ஊரின் தரம், நன்செய் புன்செய், நீக்குதற்குரிய நிலங்கள், பாய்கால், ' தொடர்கால்வாய், கோயில், பொதுவிடங்கள் ஆகியவற்றை நீக்கியளந்ததாக எஞ்சியதும், பிர்மதேயமாக்கப் பட்டதுமாகிய நிலம் இவ்வளவு, அதன் வருவாய் இவை என்ற வகையில் தெளிவாகவும் நுட்பமான சிறு அளவுகளுடனும் இறையிலிக்குரிய நிலப்பகுதிகள் கூறப்பட்டுள்ளன. எடுத்துக் காட்டாக, செம்பங்குடி என்ற ஊரளவுக் கணக்கினைக் காண்போம்.

"செம்பங்குடி அளந்தபடி நிலன் நூற்று முப்பத்தேழே யாறுமாக்காணி யரைக்காணி முந்திரிகைக்கீழ் நான்மாவரையிலும்; இவ்வூர்ப் பிடாரி கோயிலும், திருமுற்றமும், ஐயன்கோயிலும் திருமுற்றமும் இவ்வூர் நிலத்தை ஊடறுத்துப்போன சிங்களாந்தகன் வாய்க்காலும், இவ்வூர் நிலத்தை ஊடறுத்துப்போய் மயிமாலயநல்லூருக்குப் பாயும் வாய்க்காலும், இவ்வூர் நிலத்தை ஊடறுத்துப்போம் கருணைக்காலான மும்முடிச்சோழப் பேராற்றுலும், இவ்வூர் நிலத்தை ஊடறுத்துப்போன சுந்தர சோழ வாய்க்காலும், இவ்வூர்ச் சுடுகாடுமாக நிலன் அரையே மும்மாவரை முந்திரிகைக்கீழ் எட்டுமா முக்காணிக்கீழ் முக்காலே ஒரு மா நீக்கி, நிலன் நூற்று முப்பத்தரரையே இரண்டுமா முக்காணி முந்திரிகைக்கீழ் அரை மாவரைக்காணி முந்திரிகைக்கீழ் நான்கு மாவினல் நெல்லு நாலாயிரக்கலமும், மீன் பாட்டம் காசு மூன்றும்."

இவ்வாறே, ஐம்பத்தோரூர்கட்கும் அளவைகளும் வருவாய்களும் முறையாக ஒன்பதாவது ஏடு முடியக் கூறப்பட்டுள்ளன.

### திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலம்–உருவாதல் :

ஆக இவ்வூர்கள் வெவ்வேறு முதலும் பழம்பெயரும் இராசேந்திரன் ஆட்சியாண்டு எட்டாவது (கி. பி. 1200) முதல் தவிர்ந்து ஒரூராய் அளந்தபடி நிலன், மூவாயிரத் தொருநூற்று முப்பத்தைஞ்சே நான்மாவரை முந்திரிகைக்கீழ் முக்காலே இரண்டுமா முக்காணி யரைக்காணிக்கீழ் எழுமா முக் காணியிலும்.

நீக்க வேண்டிய நிலன்–ஊர்நத்தங்கள், கோயில்கள். அவற்றின் திருமுற்றங்கள், நந்த வனங்கள், கம்மாளச்சேரி, பறைச்சேரி, சுடு காடு, குளங்கள்–கரைகள், திரிபுவனமாதேவி பேரேரி-கரை, புறவூர்களுக்கு நீர்பாயப்போன சுந்தரசோழன் வாய்க்கால், சிங்களாந்தகன் வாய்க்கால், கருவாய்க்காலான மும்முடிச் சோழப்பேராறு, காமபதாகை வாய்க்கால், வெண்ணி நீரோடுகால், ஆகிய பகுதிகளும் ஓடைகளும் என்று அளந்துவந்த நிலம், அறு நூற்றொருபத் தொன்பதே ஆறு மாக்காணி முந்திரிகைக்கீழ் மாகாணி முந்திரிகைக்கீழ் முக்காலேமுக்காணிக்கீழ் முக்காலே யொரு மாவரைக்கீழரையே இரண்டுமாவும்,

நீக்கி நின்ற நிலன், இரண்டாயிரத்து ஐந்நூற்று ஒருபத்தைந்தே முக்காலே மூன்றுமா மாக்காணிக்கீழ் முக்காலேயொரு மாவரைக்கீழரையே இரண்டுமாவிலும்,

ஆண்டொன்றுக்கு நிலவருவாய் என்று கணக்கிட்டு வந்த நெல்லும் காசும்-ஐம்பத் தோராயிரத்து ஐம்பதின் கலமும், மீன் பாட்டங் காசு முப்பத்திரண்டரையும் அக் கம் அறுபத்தைஞ்சும்,

ஆயிரத்தெண்பது சதுர்வேதி பட்டர் கட்கு பிர்மதேய இறையிலியாக, நித்த விநோத வளநாட்டு வீரசோழ வளநாட்டு திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலமென் னும் பெயரால், யாண்டு எட்டாவது முதல் பிரமதேயமாக இறையிலி செய்து

### இணைத்த ஊர்கள் :

'இவ்வூர்களோடும் முன்னுடைய பிராம ணர் நிலன் தாங்களே பெற்று தங்கள் நிலத் தால் வந்த இறை தாங்களே செலுத்துவ தாக நாட்டு வரியிறைக் கணக்கில் முன்ன ருள்ள உதயமார்த்தாண்ட சதுர்வேதி மங் கலம், ஸ்ரீபூதி ஆகிய இரண்டூர்களையும். திரிபு வன மாதேவிச்சதுர்வேதி மங்கலத்தோடும் கூடின ஒரூராகக்கொண்டு, யாண்டு எட்டா வது முதல் இவ்வூர்கள் வரியிலிட்டுக் கொள்க' என்று இராசேந்திரசோழன் அதி காரிகட்கு உத்தரவிட்ட முறையில் திரிபுவன மாதேவிச் சதுர்வேதிமங்கலம் பிர்மதேய மாக, அரசனால் பெயர்தரப்பட்டு உருவா கியது.

### ஓலையும் உத்தரவும் :

இவ்வாறு அரசன் விளக்கமுடன் கட் டளையிட்ட செய்தியை, அரசனுடைய திரு வாய் மொழிகேட்டு ஓலையிலெழுதுபவர் எழுதினார். இதனை "ஆக இப்படி வரியி லிட்டுக்கொள்கவென்று நாம் சொல்ல, நம் ஓலை எழுதும் ஜயங்கொண்ட சோழமண்ட லத்து ஊற்றுக்காட்டுக்கோட்டத்துப் பாலை யூர் நாட்டுப் பாலையூர் கிழவன் அரையன் மும்முடிச்சோழன் எழுதினேன்." (இச்செய்தி ஏடு பத்தில் கூறப்பட்டுளது)

### அரசகட்டளை ஆராய்வு :

அரசன் கூறும் அறச்செயல்களையோ, பிற அரசியல் உத்தரவுகளையோ ஓலையில் முறைபெற எழுதியபின்னர், அரசனாணைப் படி அரசியலதிகாரிகள் அவ்வவர்க்குரிய அலுவல் முறைப்படி வரிசையாக ஆராய்ந்து குற்றங்குறைகளை நீக்கி, வகைப்படுத்தி, சீர்செய்து ஒப்புதலளிப்பர். இத்தகுதியுடன் அரசன் திருவாய் மொழிந்தருளியபடி எழு தப்பட்ட கட்டளை ஓலையை ஆராயும் அதி காரிகளை அரசனே 'நம் ஓலைநாயகம், நம் கருமமாராய்பவர்' என்று கூறியதாக யாண் டும் சாசனத்துள் எழுதப்பட்டுள்ளன. இம் முறைப்படி, எவ்வெத் துறைகட்குரிய அதி காரிகள் ஆய்வு செய்துள்ளனர் என்பதைத் தொடர்ந்து காணலாகும்.

1. **ஓலைநாயகம்** என்னும் அதிகாரிக ளான, (1) நராக்கன் கிருஷ்ணன் இராமனுன இராசேந்திரசோழ பிர்மாதிராயன். (2) அரை யன் இராஜராஜனுன விக்ரமசோழச்சோழிய வரையன். (3) அரைகுருடையான் சராயிர வன் பல்லவயனுன உத்தமசோழப் பல்ல வரையன். (4) பாளூர் அம்பலத்தாடியான முடிகொண்ட சோழ விழுப்பரையன் ஆகிய நால்வரும், ஓலையில் குறிக்கப்பட்ட செய்தி களைச் சரிபார்த்தனர். பின்னர்,

2 **அரச கரும மாராய்பவர்** என்னும் அரசியல் துறைப்படி, அரசனுடைய அலுவல் களையும் செயல்களையும் உடனிருந்து ஆராய் பவராகிய அதிகாரிகளான, (1) நராக்கன்மா ராயன் ஜனநாதனுன இராசேந்திர சோழபிர் மாதிராஜன். (2) காஞ்சிவாயிலுடையான் உதயதிவாகரன் தில்லையாளியான இராஜ ராஜ மூவேந்த வேளான். (3) இராஜாதித் தன் கூத்தாடியான பரகேசரி விழுப்பரையன். (4 பரமேஸ்வர சர்வகிருத்யாஜிமாவடிகள் ஸ்ரீதர ஸ்ரீபட்ட சோமயாஜி ஆகியோர், அவ் வோலையைப் பார்த்த பின்னர்,

3. **அரச கரும அணுக்கத்தினர்** என் னும் அதிகாரிகளான, (1) வயலூர் கிழவன் தத்தன் சேந்தனுன ராஜேந்திரசோழ அணுக் கப்பல்லவரையன். (2) பரகேசரிநல்லூருடை யான் மாணிக்கன் எடுத்தபாதமான சோழ மூவேந்தவேளான். (3) சிறிஞார் கிழவன் தன் னிச்சை ஆதித்தன். (4) வைப்பூர் கிழவன் தீரன் பாஸ்கரன் ஆகியோர் பார்த்துச் சரி சொல்ல, தொடர்ந்து,

4. **புரவு வரித்திணைக் களத்துக் கண் காணி** எனும் நிலவரி நிர்வாகத்துறையின் தலைமையதிகாரியான விசலூர் கிழவன் கண பதி அழகியான், அறக்கட்டளைக்குரிய ஊர் களின் முன்புள்ள பெயர், வரிவகை ஆகிய வற்றைக் கண்காணிப்புச் செய்தான். பின்னர்,

5. **புரவு வரித்திணைக் களம்** எனும் நிலவரி நிர்வாகத் துறையதிகாரிகளான (1) பூஞ்சாற்றூருடையான் நக்கன் அரங்கன் (2) தலையூருடையான் நக்கன் தாமோதிரன் (3) அழிஞ்சில் மங்கலமுடையான் நாகன் நக்கன், (4) பெரும்பேடுகிழான் பட்டன் வாசுதேவன் ஆகியோர் வரிமுறையைத் தணிக்கை செய்ய,

6 **வரிப்பொத்தகம்** என்னும், அர சிறைக் கணக்கு அதிகாரியான இறையான் சேரி கிழவன் புழமதனிராமன் பார்த்து,

7. **முகவெட்டி** என்னும் அரசியல் நிர் வாகத்துறைகளின் மூலக் கணக்கோலைகளை நிர்வகிக்கும் பொறுப்புள்ள அதிகாரிகளான, (1) உவர்க்குடி கிழான் அரையன் கணபுரம் (2) இலுப்பையூருடையான் இராமன் அம லன். (3) வீராணமுடையான் நூற்றெண்மன் கருணாகரன். (4) பனையூருடையான் காவிதி வெண்காடன் ஆகியோரிடம் ஒப்படைத் தான். அவர்கள் தத்தமது கணக்குகளுடன் சரிபார்த்த பின்னர்,

8. **வரிப் பொத்தகக்கணக்கு** என்னும், அரசிறைக் கணக்குகளை எழுதும் அதிகாரி, செல்காருடையான் நரதுங்கன் கருத்தன், பிர்மதேயமாக்கும் நிலங்கட்குரிய கணக் கொடு இறையிலி அளவையும் எழுத, அதை,

9. **வரியிலிடு** என்னும், அரசியல் நில வரிக்கணக்கில் புதிய வரிவகைகளைச் சேர்க் கும் பூதிக்குடையான் சிங்கன் புலியன் பார் வையிட்டு வரிப் பொத்தகக்கணக்கில் இறை யிலியாக இட்டெழுதி, கட்டளை ஓலையை நிறைவு செய்தான்.

10 **பட்டோலை** என்னும், அரசனது கட் டளை ஓலைகளை அதிகாரிகள் சரிபார்த்து நிறைவு செய்த பின்னர், ஓலையைத் திருமுக மாக எழுதும் அதிகாரி நரிக்குடையான் சத்தி இராமன் அதனைத் திருமுகமாக எழுதினன்.

11. **ஒப்புதல்** இவ்வாறு முறையே அரச கட்டளைகளை ஆராய்ந்து தணிக்கை செய்யும் துறைகளின் தலைமையதிகாரிகள் ஒன்றுக விருந்து, ஆட்சியாண்டு எட்டாவது நாள்

நூற்றெழுபதினால் * வரியிலிட்டுக் கொடுத்த ஐம்பத்தோரூர்களும் ஒரூராக, திரிபுவனமா தேவிச்சதுர்வேதி மங்கலம் என்னும் பெயரால், யாண்டு எட்டாவது முதல், பிரம தேயமாகவும் - என்று ஒப்புதல் கையொப்பமிட்டுத் தந்தனர்.

## அறவோலை செய்ய ஆணை :

கட்டளை ஓலை தணிக்கை செய்யப்பெற்ற பின்னர், பிரமதேயமாகும் திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலத்திற்குப் பேரெல்லையிட்டு அறவோலை செய்ய வேண்டுமென்று கருதிய இராசேந்திரன்

(1) வீரசோழ வளநாட்டினை அளந்து வகை செய்கின்ற **கண்காணி நாடுவகை** செய்கின்ற களத்தூர் கிழவன் சிறியான் ஆதித்தன். (2) **புரவுவரித்திணைக்களம்** அதிகாரி பூஞ்சிற்றூருடையான் நக்கன் அரங்கன். (3) விளாநாட்டு இராசேந்திரசோழ சதுர்வேதிமங்கலத்துக் **கவுணியன்** கிருஷ்ணமாற் பட்டன் ஆகிய மூவரையும் அரசனே பேர் தந்து, அவர்களுடன் தானத்திற்குரிய ஊரவர்களும் உடன்நின்று எல்லைகளைத் தெளிவாகத் தெரிந்து காட்டி, "பிடி சூழ்ந்து பிடாகை நடந்து எல்லைகட்குக் கல்லும் கள்ளியும் நாட்டி அறவோலை செய்து போகவும்" என்று திருவாய் மொழிந்தான்.

அரசன் மொழியைத் **திருமந்திரவோலை** ஜெயங்கொண்ட சோழ மண்டலத்து ஊற்றுக்காட்டுக் கோட்டத்துப் பாலையூர் கிழவன் அரையன் முடிகொண்டசோழன் எழுதினான், அத்திருமுகத்தினை திருமந்திர ஓலை நாயகம் செய்கின்றவராக முன்னர் கூறப்பட்ட நால்வரும் பார்த்து ஒப்புதல் செய்தனர். (ஏடு-11) தொடர்ந்து அறவோலைப்படி சாசனம் செய்யப்பட்டுள்ளது.

## எட்டாவது ஆட்சியாண்டின் மெய்க் கீர்த்தி :

தொடர்ந்து ஏடு-11இல் முதல் இராசேந்திரனின் ஆட்சியாண்டு எட்டு அளவிற்குரிய மெய்க் கீர்த்தி அறவோலைத் திருமுகத்தின் முகப்பாக வரையப்பட்டுளது, "ஸ்வஸ்திஸ்ரீ திருமன்னிவளர" என்று தொடங்கும் இம் மெய்க் கீர்த்தியில், இடைதுறை நாடு, வனவாசி, கொள்ளிப்பாக்கை, மண்ணைக்கடக்கம், ஈழம், பழந்தீவு, பரசுராமன் சாந்திமத்தீவு ஆகிய ஏழு நாடுகளை இராசேந்திரன் வென்றுள்ளான் என்ற அளவில் வரலாறு குறிக்கப்பட்டுள்ளது.

## அறவோலைத் திருமுகம்–செயற்படல்:

அறவோலைத் திருமுகத்தை பிரமதேய ஊரவர்கட்கு, அரசனால் பெயர் தரப்பெற்ற அதிகாரிகள் மூவரும் கொண்டு சென்றனர். அதற்கு மேல்,

"கோப்பரகேசரி வன்மரான ஸ்ரீ இராசேந்திர சோழ தேவர்க்கு யாண்டு எட்டாவது நாட்சிழ் நாட்டோமுக்குத் திருமுகம் வர நாட்டோமும் திருமுகம் கண்டு எதிரெழுந்து சென்று தொழுது வாங்கித் தலைமேல்வைத்து, பிடிசூழ்ந்து பிடாகை நடந்து, கல்லும் கள்ளியும் நாட்டி அறவோலை செய்த நித்தவிநோத வளநாட்டு வீரசோழ வளநாட்டுப் பிர்மதேயம் திரிபுவனமா தேவிச் சதுர்வேதிமங்கலத்துக்கு" நாற்புறப் பேரெல்லைகளையும் குறித்து, அவ்வவற்றிற்குக் கல்லும் கள்ளியும் அடையாளமாக நட்டு, உள்ளடங்கிய இடங்களை விளக்கி எழுதி, உரிமை செய்வனவும் பெறுவனவும் ஆகியவற்றை நாட்டோருடன் அதிகாரிகள் வரையறை செய்தனர்.

அரசனுடைய திருமுகப்படி, நாட்டுப் பெருமக்கள் அளந்து எல்லையிட்டதற்குட்

* ஆட்சியாண்டு எட்டு நாள் 107இல் அரசனால் கூறப்பட்ட தானக்கட்டளை, ஓலையில் எழுதப்பெற்று அதிகாரிகளால் தணிக்கை செய்யப்பெறுதற்கு, இடையே 63 நாட்கள் கழிந்துள்ளன.

பட்டதும், 51-ஊர்களடங்கிய பெருநிலப் பரப்பானதுமான, திரிபுவனமாதேவிச்சதுர் வேதிமங்கலத்துள்ளமைந்த இடங்களையும் நிலையியல் இயங்கியற் பொருள்களையும். அவற்றிற்குரிய பிரமதேயத்தார் பெறும் உரிமைகளையும், ஊர்ப்பொதுவானவற்றையும், என்றும் எத்தகைய மாறுபாடும் ஏற்படாத வகையில், எவ்வாறு வரையறை செய்து குறித்துள்ளனர் என்பதுடன், சோழர் காலத்தில் உண்டான இறையிலி நிலச் சாசனங்களின் ஒழுங்குமுறை (வியவஸ்தை) எத்தகையது என்பதையும், இப்பகுதிகள் நன்கு புலப்படுத்துவதாகும்.

## எல்லைகட்குட்பட்டவை :

"நீர்நிலமும், புன்செயும். ஊரிருக்கையும், ஸ்ரீகோயில்களும் திருநந்தவனங்களும், கம்மாளச்சேரிகளும், பறைச்சேரிகளும், சுடுகாடுகளும், பனையும், மனைப்படைப்பையும், கடையும் கடைத்தெருவும், மன்றுங்கன்று மேய்பாழும், ஏரியும், குளமும், கொட்டகாரமும், கிடங்கும், கேணியும், புற்றுந்தெற்றியும், காடும், பிடிலிகையும், குளமும், உவரும், ஓடையும். உடைப்பும், ஆறும், ஆறிடுபடுகையும், ஆளமுங்குழியும், மீன்பயில்பள்ளமும், தென்பயில் பொதும்பும், மேல்நோக்கியமரமும், கீழ்நோக்கிய கிணறும், உள்ளிட்டு நீர் பூசி நெடும்பாம் பெறிந்து உடும்போடி ஆமை தவழ்ந்த தெவ்வகைப்பட்டதும். உண்ணிலம் ஒழிவின்றிக் காரண்மை மீயாட்சியும், மிகுதிக்குறைமையும் உள்ளடங்க, இப்படி பெற்றதற்குப் பெற்ற வியவஸ்தை"

## உரிமைசெய்தவை :

"பிரமதேய நிலத்துக்கு நீர்க்கீழ்தவாறு வாய்க்கால் குத்திப்பாய்ச்சவும் வாரவிடவும் பெறுவதாகவும் இவ்வூர் நிலத்துக்கு நீர் பாயும் வாய்க்காலதன் கீழ்நடை நீர் பாயவும் வரவிடவும் பெறுவதாகவும்; இவ்வாய்க்கால்கள் அன்னியர் குறங்கறுத்துக் குத்தவும், குற்றேத்தம் பண்ணவும் கடை நீர் இறைக்கவும் இவது கடைக்கவும் பெறுவதாகவும்; சென்னீர் பொதுவினை செய்யாதிதாகவும், அன்னீரடைத்துப் பாச்சப்பெறுவதாகவும்;

தட்டோட்டால் மாடமாளிகை எடுக்கப்பெறுவதாகவும்; துரவு கிணறு இழிச்சப் பெறுவதாகவும்; காவும் தெங்கும் இடப் பெறுவதாகவும்; தமனகமும் மருவும் ஒரு வேலியும், செண்பகமும் செங்கழுநீரும் மல்லிகையும் மாவும் பலாவும் கமுகும் பனையும் கொடியும் உள்ளிட்ட பல்லுருவிற் பயன்மரம் இடவும் நடவும் பெறுவதாகவும்; பெருகு செக்கு இடப்பெறுவதாகவும்; இவ்வூர் நிலத்தை ஊடறுத்துப் புறவூர்களுக்குப் பாயும் வாய்க்கால்கள் கீழ்நடை நீர் பாயவும் வாரவும் பெறுவதாகவும்;

## பெறத்தகாதவை :

ஊராட்சியும், வட்டிநாழியும், பிதாநாழியுங் கண்ணாலக்காணமும், வண்ணாரப்பாறையும், குசக்காணமும், நீர்க்கூலியும், ஈழம் பூட்சியும், இலைக்கலமும், தறிப்புடவையும், தரகும், தட்டார் பாட்டமும், இடைப் பாட்டமும், ஆட்டுக்கிறையும், நல்லாவும், நல்லெருதும், நாடுகாவலும், ஊரடுபோக்கும், சிற்படியும், உல்கும், ஓடக்கூலியும், மன்றுபாடும், மாவறையும், தீயெரியும்........ எவ்வகைப்பட்ட வரியும் கோக்கொள்ளாதாகவும்

இப்படிப் பெற்றதற்குப்பெற்ற வியவஸ்தை பரிஹாரமும் பெற்ற இவ்வூர் காராண்மை மீயாட்சி மிகுதிக்குறையையும் உள்ளடங்க" (எடு-20)

நித்தவிநோத வளநாட்டு வீரசோழ வளநாட்டு திரிபுவனமாதேவிச் சதுர்வேதிமங்கலமென்னும் திருநாமத்தால் பிரமதேயமாக யாண்டு எட்டாவது முதல், பிடிகுழ்ந்து பிடாகை நடந்து கல்லுங் கள்ளியும் நாட்டி அறவோலை செய்து கொடுத்தோம் நாட்டோம்"

என்று எழுதி நாட்டவர், கைச்சான்றிட்டு, ஊர்ச்சபையோரிடம் அறவோலையை ஒப்படைத்தனர்.

**ஊர்ச்சபையோர்கள் அறவோலையை நிறைவு செய்தல் :**

அறவோலையைப் பெற்ற புரவுவரித் திணைக்களநாயகம் எழுவரும், **வெண்ணிக் கூற்றத்துள் அடங்கிய** (1) முல்லைவாயில் (2) மதநாலயமங்கலம். (3) பாப்பாரகுளத்தூர், (4) **அவநிகேசரி, சதுர்வேதிமங்கலம்,** (5) கொட்டையூர், (6) **நகரம் சோழவிச்சாதிர சதுர்வேதிமங்கலம்,** (7) **தேவன் மங்கலத்தூர், வெண்ணி நகரம்,** (9) பெரும்நங்கை மங்கலம். (10) **அவாயச் சதுர்வேதிமங்கலம்** (11) நியமமங்கலம், (12) **பூண்டியாகிய ஒலோகமாதேவிச் சதுர்வேதிமங்கலம்** (13) **வெண்ணுப்புத்தூர்.** (14) **நெற்குன்றத்தூர் ஆகிய** பதினான்கு ஊர்களின் சபையோரும்

''இப்பரிசு நாட்டாரொடும் உடனின்று பிடாகை நடந்து கல்லும் கள்ளியும் நாட்டி **அறவோலை** செய்து கொடுத்தோம் சபையோம்'' என்று நிறைவு செய்து, இவை என்னெழுத்தென்று யாவரும் கைச்சான்றிட்டுள்ளனர்.

**வரியிலீடு :**

நிறைவேறிய அறவோலையை ''**வரியி**லிட்டுக்கொள்கவென்று. உய்யக்கொண்டார் வளநாட்டு வெண்ணாட்டு கேரளாந்தகச்சதுர்வேதிமங்கலத்து நராக்கன் மாராயன் ஜனநாயனை ராஜேந்திரசோள பிர்மாதிராஜனுஞ் சொல்ல, இவன் சொன்னபடியே, நங்கரும மாராயும் அதிகாரிகள் ஒப்புதல் செய்ய,

**பிர்மதேயம் யாண்டு எட்டாவது நாள் முன்னூற்றெண்பதினால்** * வரியிலிட்டுக் **குடுத்து பரதேத்திச் சென்றது.''** [1]

என்று அரசனுடைய திருவாய்மொழியாக **சாசனம்** நிறைவு கூறப்பட்டதன் பின்னர், நாட்டுப்பெருமக்கள் ஐவர் கைச்சான்றுகளைச்சரிபார்த்து ஒப்பம் செய்தளித்துள்ளனர். (ஏடு-12-25)

**அறவிளக்கம்.**

இவ்வாறாக, தானம் பெற்ற 1080 சதுர்வேதிபட்ட சிரேஷ்டர்களின் பெயர்கள், முறையே, கோத்திரம், சூத்திரம், பங்கு ஆகியவற்றுடன் கூறப்பட்டுள்ளதுடன் பிர்மதேய இறையிலி ஊர்கட்குரிய சமுதாயத் தொழிலாளர்களான உகச்சர், நாவிதர், ஆகியோருக்கும் தொழிலுக்கேற்ப இறையிலியாக அளிக்கப்பட்ட நிலப்பங்குகள் கூறப்பட்டுள்ளன. தொடர்ந்து, பிடாரியார் கோயில்கள், ஐயன்கோயில்கள், சிவன்கோயில்கள், திருமால்கோயில்கள், சமணப்பள்ளிகள், நந்தவனங்கள், ஊர்ப்பொதுச் செலவுகள், ஆகியவற்றுக்கும் தனித்தனியே பங்கு நிலங்கள் விடப்பட்டுள்ளன. இவ்வாறப் பாகுபாட்டினைச் செப்பேட்டில் உள்ளவாறே தொடர்ந்து காணலாகும்.

**பிர்மதேய பட்டர்கள்-பெயரும், பங்கும் :**

செப்பேட்டுத் தொகுதியின் மூன்றுவது பகுதியாகிய முப்பது ஏடுகளில், தொடர் எண் 26 முதல் 52-ஆம் ஏடு முடிய, இருபத்தேழு ஏடுகளில் தானம் பெற்ற 1080 சதுர்வேதிபட்ட சிரேஷ்டர்களின் பெயர்கள், முறையே கோத்திரம், சூத்திரம், பங்கு, ஆகியவற்றுடன் கூறப்பட்டுளது, அவற்றுள் சில –

''இவ்வூர் விஸ்வாமித்ர ஹோத்ரத்து த்ருவஸ்தம்பஸூத்ரத்து கொடுங்கை அதிராச்ரன் ஸ்ரீவத்ஸகங்க பட்டனுக்குப்பங்கொன்று||''

* நாள் 380, என்பதற்குரிய விளக்கம், இதன் ஆராய்ச்சியுரைப்பகுதியுள் காண்க.
1. பரதேத்திச்சென்றது = புதிய இறையிலி நிலவுரிமை நிறைவேற்றப்பட்டது.

இந்நாட்டு முடிச்சோழநாட்டு ஜநநாம சதுர்வேதிமங்கலத்து ஆத்ரேய ஹோத்ரத்து வைசானஸ ஸூத்ரத்துக் கேசவன் திரு வரங்கபட்டனுக்குப் பங்கொன்று|| ''

'' இவ்வூர் லோஹித ஹோத்ரத்து காத் யாயன ஸூத்ரத்து புலிப்புரத்து மஹா ஸேனன் ஸ்ரீமாதவ கிரமவித்தனுக்கு பங் கொன்று|| ''

''நடுவிற் கோயிலான் முடிகொண்ட சோழ விண்ணகர்க்கு அர்ச்சனு போகப் பங்கு இரண்டில், நித்தவிநோத வளநாட்டு வெண்ணிக் கூற்றத்து ஒலோகமஹாதேவிச் சதுர்வேதிமங்கலத்து, காஸ்யப ஹோத்ரத்து வைசானஸ ஸூத்ரத்து தேவதத்தன் ஆனந்த பிடாரபட்டனுக்குப் பங்கொன்று (ஏடு-எண். 46) என்பனவாகும். இவற்றைப் போன்றே வேறு பல ஹோத்ர, சூத்ரங்களு டன் பிற சதுர்வேதி பட்டர்கள் குறிக்கப் பெற்றுள்ளனர்.

## உகச்சப்பங்கு :

தொடர்ந்து, பிரமதேய இறையிலி ஊர் கட்குரிய சமுதாயத் தொழிலாளர்களான உகச்சர், நாவிதர், குயவர் ஆகியோருக்கும் தொழிலுக்கேற்ப இறையிலியாக அளிக்கப் பட்ட நிலப்பங்குகள் அவ்வவர் பெயர் களுடன் கூறப்பட்டுள்ளன.

'' திரிபுவனமாதேவிச் சருப்பேதி மங் கலத்துப் பிடாகை குளப்பாட்டு உவச்சன் அமலன்தேவனுக்கு உகச்சப் பங்கொன்று|| ''

''திரிமேற்றளியான திரிபுவனமஹாதேவி விண்ணகர்க்கு உகச்சப்பங்கு, மேற்படியூர் உகச்சன் கரிகாலன் மண்டகவனுக்கு உகச் சப்பங்கொன்று|| ''

## நாவிதப்பங்கு:

''நாவிதப்பங்கு|| நித்தவிநோத வள நாட்டு வீரசோழநாட்டு திரிபுவன மாதேவிச் சருப்பேதி மங்கலத்துப் பிடாகை திரிபுவன மாதேவி நல்லூர் நாவிதன், பிரமன் திருவடி களுக்கு நாவிசப்பங்கு அரை !!''

இந்நாட்டு ஆலூர் கூற்றத்து மனுகுல சூளாமணிச் சருப்பேதி மங்கலத்து நாவிசன் மண்டகனுபகனுக்கு நாவிசப்பங்கு அரை||'' (ஏடு 52 53.) இவற்றைப் போன்றே உகச்ச நாவிதப்பங்குகள் பல குறிக்கப்பட்டுள்ளன.

## கோயில்கட்கு-நிலப்பங்கு :

''இவ்வூர் ஸ்ரீகைலாசமான ஸ்ரீராஜராஜ ஈஸ்வரமுடையார்க்கு நிலம் எண் வேலி|| இவ் வூர் நடுவிற் ஸ்ரீகோயிலான் முடிகொண்ட சோழ விண்ணகர் தேவர்க்கு நிலம் எண் வேலி|| இவ்வூர் திருமேற்றளியான திரிபுவன மாதேவி விண்ணகர தேவர்க்கு நிலன் நால் வேலி|| இவ்வூர் ஜநநாம விண்ணகர தேவர்க்கு நிலம் எண்வேலி|| இவ்வூர் கேரளாந்தக விண்ணகர் தேவர்க்கு நிலம் மூவேலி|| இவ் வூர் ஸூப்ரமண்ய தேவர்க்கு நிலம் வேலி|| இவ்வூர் சபையார்க்கு நிலம் வேலி|| இவ்வூர் மஹாஸாஸ்தாவுக்கு நிலம் வேலி || இவ்வூர் பிடாரியார்க்கு நிலம் வேலி || இவ்வூர் திரிபு வன மாதேவிப் பேரேரிக்கரைக் கணபதி யார்க்கு நிலம் மூவேலி|| இவ்வூர் பிடாகை குளப்பாட்டு ம தேவர்க்கு நிலம் ஒரு வேலி|| கூத்தனூர் மாதேவர்க்கு நிலம்அரை|| சிறை யூர் மாதேவர்க்கு நிலம் அரை|| உறத்தூர் மாதேவர்க்கு நிலம் வேலி||'' (ஏடு-52, முன் புறம்)

சோற்றுத்துறை மாதேவர்க்கு நிலம் 'று' மா|| முஞ்ஞாவல் மாதேவர்க்கு நிலம் அரை|| மயின்மாலய நல்லூர் மாதேவர்க்கு நிலம் அரை|| மேட்டுமேற்குடி மாதேவர்க்கு நிலம் கால்|| சிக்கல் மாதேவர்க்கு நிலம் அரை|| நியாயநடை நல்லூர் மாதேவர்க்கு நிலம் கால்|| பரகேசரி நல்லூர் மாதேவர்க்கு நிலம் அரை|| கூத்தனூர் விஷ்ணுக்களுக்கு நிலம் அரை|| முஞ்ஞாயில் விஷ்ணுக்களுக்கு நிலம் அரை|| புலியக்குடி விஷ்ணுக்களுக்கு நிலம் அரை|| சிறையூர் பிடாரியார்க்கு நிலம்.

ஒருமா சோற்றுத்துறைப் பிடாரியார்க்கு நிலம் ஒருமா மயின்மாலைய நல்லூர் பிடாரியார்க்கு நிலம் ஒருமா பெண்ணாகடத்துப் பிடாரியார்க்கு நிலம் ஒருமா கோவிந்தநல்லூர் பிடாரிக்கு நிலம் ஒருமா மேட்டுமேற்குடிப் பிடாரிக்கு நிலம் நாலுமா'' (ஏடு-53. பின்புறம்) இவற்றிற்கெல்லாம் பங்கீடு செய்தது போக எஞ்சிய நிலங்களை—

## வேத சாத்திர ஆகம புராண வளர்ச்சிக்கு—இறையிலி :

மீமாங்ச பட்ட விருத்தி நிலம் ஐவேலி, வேதாந்தபட்ட விருத்தி நிலம் ஐவ்வேலி, பிரகரணப்பட்ட விருத்தி நிலம் நால்வேலி, பவிழியக் கிடைப்புறத்துக்கு நிலம் ஒருவேலி, வாஜஸனேயக் கிடைப்புறம் ஒருவேலி, ஸாமதோறக்கிடப்புறம் நிலம் ஒருவேலி, காப்பியக் கிடைப்புறம் நிலம் ஒருவேலி, தலவக்காரக் கிடைப்புறம் நிலம் ஒருவேலி, ரகூவரவதாரக்கிடைப்புறம் நிலம் ஒருவேலி,

ஸத்திமூலஸ்ரயம் ஓதுவிப்பானுக்கு நிலம் ஒரு வேலி, பாரதம் வாசிப்பானுக்கு நிலம் ஒரு வேலி, அம்பலம் மெழுகித் தொட்டி நீர்த்தண்ணீரட்டுவானுக்கு நிலம் ஒரு வேலி, விஷ்வேஷ்ஸ்ரத்துக்கு நிலம் ஒரு வேலி.

ஆகிய வேத, வேதாந்த, வியாகரண, ஆகமபுராண வளர்ச்சிக்கும், பிராமணீயங்கட்கும் அவர்கட்குரிய ஊழியர்க்கும் முறையே பங்கு நிலங்கள் இறையிலியும், பட்டவிருத்தியுமாக அளிக்கப்பட்டுள்ளன.

## செப்பேட்டுச் செய்தியை எழுதியவரும் வெட்டியவரும் :

இவ்வாறாக தான நிகழ்ச்சிகள் முழுவதும் நிறைவாக எழுதப்பெற்ற பின்னர் இச்செப்பேட்டுச் சாசனத்தினை எழுதியவர், வெட்டியவர் ஆகியவர்கட்குரியதாக நிலமளிக்கப்பட்ட செய்தி விளக்கப்பட்டுள்ளது.

''செப்பேட்டின் முற்பகுதியாகும் மன்னர் மரபுப் புகழ்ச்சி உரையுள், பக்கத்து கிராமத்தில் வாழ்கிறவரும் சங்கராரியருடைய பிள்ளையுமான நாராயணனால் இந்த சாசனம் செதுக்கப்பட்டு சாஸ்வதமாக்கப் பண்ணப்பட்டது'' (வ. செ 76)

''திரிபுவனமாதேவிப் பேராசிரியரும், ராஜேந்திரனுக்குப் பேராசிரியரும் இந்த சாசனத்தை எழுதினார்கள். இருவரும் சிற்பங்களிலும் ஆகமங்களிலும் மெய்ப்பொருளை நன்குணர்ந்தவர்கள்,'' (வ. செ. 77)

இவைகளைக் கொண்டு செப்பேடுகளில் சாசனச் செய்திகளை வெட்டியவர் பெயர் தெரிகின்றதே தவிர, சாசனத்தை எழுதிய பேராசிரியர்களின் பெயர்களை அறிய முடியவில்லை. இக்குறையை 55-ஆம் ஏட்டில் சாசனச் செய்திகளின் நிறைவாக,

''இவ்வூர் ஸாஸனம் வெட்டி பூஜ்ஜையாகப்பெற்ற காஷ்மகாரி கிருஷ்ணரங்கநான திரிபுவன மஹாதேவிப் பேராசிரியனுக்கு துணி நிலம் வேலி. இவ்வூர் ஸாஸனம் வெட்டி பூஜ்ஜையாகப் பெற்ற காஷ்மகாரி ஆராவமுது புருஷோத்தமனை ராஜேந்திர ஸிம்ஹப் பேராசிரியனுக்கு துணி நிலம் வேலி. தானம் பெற்ற அந்தண சிரேஷ்டர்கள் ஏடு முப்பது உ உ உ'' இப்பகுதியால், முதல் இராசேந்திரசோழன் தாயாகிய திரிபுவன மாதேவியின் பேராசிரியர், இராசேந்திரனுடைய பேராசிரியர் யாவரென்பதும், அவ்வவர்க்குரிய பெயர்களும் நன்கு புலனாவதுடன். செப்பேட்டுச் செய்திகள் நிறைவு பெறும் முறையையும் அறியலாகும்.

## காப்புரை :

கல்வெட்டு செப்பேடு ஆகியவற்றில் வரும் அறச்செயல்களுக்கு இறுதியாக, பயனும், காப்புரையும், வாழ்த்துரையும் கூறப்பெறுதல் மரபாகும். இவற்றில் ஒன்றிரண்டு குறைந்து வருதலுமுண்டு. அம்முறை இச்செப்பேடுகளின் முதற்பகுதியாகும் மன்னர் மரபுப் புகழ்ச்சியுரையுள் கூறப்படுகின்றது.

"இம்மைக்கும் மறுமைக்குமான வேத மார்க்கமாகிற நிதியின் தத்துவத்தைக் காட்டும் ஞான விளக்காய் இருப்பவனும், தன்னை வணங்கிய அரசர்களுடைய முடிகளில் பளபளவென மின்னுகிற பாதபிடத்தை உடையவனுமான இந்த இராசேந்திர சோழன் தன் தலையை வணங்கினவனாய் இந்த சதுர்வேதிமங்கலம் நன்கு காப்பாற்றப் படவேண்டும் என்ற நம்பிக்கையுடன் வருங் காலத்து அரசர்களைத் தாழ்ந்து யாசிக்கின்றான்" (வ. செ. 73) என்று காப்புரை கூறப் பட்டுளது.

## வாழ்த்துரை :

"இந்த சதுர்வேதிமங்கலம் பலவித மான வேள்விகளில் அழகுவிட்டு ஒளிரும் தீக் கொழுந்துகளால் பிரகாசமாக காண்பிக்கப் பட்ட திவ்யமான புண்ய மார்க்கத்தை உடையதும், நல்வழியை உபதேசிக்கும் தொழிலில் நிலைத்த புத்தியை உடைய அந்தணர்கட்கு வந்தடையும் இடமாகவும் ஆஸ்ரமமாகவும் ஊழிக்காலத்தளவும் விளங் கட்டும்." (வ செ. 74)

என்ற வாழ்த்துரை சிறப்பாகக் கூறப் பெற்றுளது * சாசனத்தின் இறுதியில் கூற வேண்டிய காப்புரையும் வாழ்த்துரையும், முதலில் இடம் பெற்றுள்ளதற்குரிய காரணத் தினை ஆராய்வோமானால், கி. பி. 1020-ல் பிர்ம தேய அறச்செய்திகள் 52-ஏடுகளில் வெட்டி முடித்த பின்னர், கி. பி. 1024-ல், அதாவது நான்காண்டுகட்குப் பிறகே, வடமொழிச் செய்யுட்பகுதி மூன்று ஏடுகளில் வெட்டப் பட்டு, வளையத்தில் கோக்கப்பட்டுள்ளன என்பது புலனாகும். இக்கருத்தைத் தொடர் எண் இல்லாமல் இருக்கும் இம்மூன்று ஏடு களும், அவற்றிலுள்ள வடமொழிச்செய்யு ளால் பெறப்படும் செய்திகளும் நன்கு உணர்த்துகின்றன.

## க. த. ச. செப்பேடுகளின் செய்திச் சுருக்கம் :

முதல் இராசேந்திரசோழன், தனது ஆட்சியாண்டு 8, நாள் 107இல் தனது தாயின் பெயரால் 51 ஊர்களை ஒன்றாகச் சேர்த்து, திரிபுவனமாதேவிச் சதுர்வேதிமங்கலமென்று பெயரிட்டு, 1080-சதுர்வேதி பட்டர்கட்கு பிர்மதேய இறையிலியாக வழங்க முற் பட்டான்.

பிர்மதேயமாகக் குறிப்பிடப்பட்ட நிலங் களை அதிகாரிகள் அளந்துவர்தபடி தானம் செய்யும் அறக்கட்டளைக் கணக்கினை அதி காரிகள் நாள் 170-ல் சரிபார்த்துத் தணிக்கை செய்தளித்தனர்.

மேல், அரசன் அறவோலை செய்யக்கட் டளை யிட்டபடி, அதிகாரிகளும் ஊரவரும் பிடி சூழ்ந்து பிடாகை நடந்து எல்லையிட்டு ஒப்புதல் செய்ய, ஊர்ச்சபையார் அற வோலையை நாள் 380இல் நிறைவேற்றி, வரி யிலிட்டுப் பிரமதேயம் நிகழுமாறு செய்தனர்.

பிர்மதேயமாக அளந்து வந்த நிலன் 3135-வேலியும் மிகுதிக் குறையுமாகும். அதில் 1080-சதுர்வேதிபட்டர்களுக்கு பங் கீடாக அளிக்கப்பட்ட நிலன் 2515½ வேலி யும் மிகுதிக்குறையுமாகும். இதன் ஆண்டு வருவாய் 51050-கலம் நெல்லும், மீன்பாட் டம் காசு 32½உம், அக்கம் 62உம் ஆகும்.

எஞ்சிய நிலன் 620 வேலியும் மிகுதிக் குறையும், ஸ்ரீகோயில்கட்டும், ஊர்ப்பொது விடங்கட்டும், ஊர்ச்சமுதாயத்தொழிலாளர்க் கும் சாசனம் எழுதியவருக்கும் வெட்டிய வர்க்கும் என, பங்காகவும், தனித்தும் இறையிலி, பட்டவிருத்தி என்ற முறை யிலும் அளிக்கப்பட்டு திரிபுவன மாதேவிச் சதுர்வேதிமங்கலத்துப் பிர்மதேயச் சாசனம் நிறைவுபெற்று விளங்குகின்றது.

* மன்னர் மரபுப் புகழ்ச்சியுரை (பிரசஸ்தி) கி. பி. 1024–25இல் எழுதப்பெற்ற பின்னரே செப்பேட்டுச் சாசனம் நிறைவு பெற்ற நிலையில் வெளியிடப்பட்டுள்ளது. விளக்கம் இதன் ஆய்வுரைப்பகுதியில் கூறப்பெற்றுளது.

**கருத்துரை :**

முதல் இராசேந்திரசோழன் கி. பி. 1020-இல் செய்த பிர்மதேய அறச்செயலைக் கூறும் இச்செப்பேட்டுத் தொகுதியிற் காணப்படும் செய்திகளினால். கி. பி. 11-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் சோழவரசியல் எவ்வாறு நிகழ்ந்திருக்கின்றதென்பதுடன், அக்காலச் சோழவரசியலில் இருந்த அதிகாரிகளையும், அரசன் அறக்கட்டளைகளை எவ்வாறு செய்வானென்பதையும், அறத்திற்குரிய நிலபுலன்கள் எம்முறையில் அளவு செய்யப்பெற்று, வரி இறை ஆகியவை விதிக்கப்பெறும் என்பதையும், அறச்சாசனங்கள் எம்முறையில் அதிகாரிகளால் ஆய்வு செய்யப்பெற்ற பின்னர், ஊர்ச்சபையோரால் நிறைவு செய்யப்பட்டு, தானத்திற்குரியாருக்கு உரிமை செய்யப்பெறும் என்பதையும், சோழநாட்டின் உட்பிரிவுகளிலொன்றாகிய நித்தவிநோதவளநாடு-வெண்ணிக்கூற்றம் ஆகிய சிறந்த பகுதிகளில் அடங்கிய ஊர்களையும், ஊர்ச்சபைகளையும் சோழரின் முடியாட்சி நிகழ்ந்ததாயினும் அதில் ஊர்ச்சபையாரின் குடியாட்சியே நிகழ்ந்துள்ளது என்ற உண்மை நிலையையும், சோழநாட்டின் நீர்வளத்திற்கான கால்வாய்கள், பேராறுகள், ஆறுகள், ஏரிகள் ஆகியவைகளின் பெயர்களுடன், அவைகளால் வளம்பெறும் பகுதிகளையும், நித்தவிநோத வளநாட்டிலும், வீரசோழ வளநாட்டிலும் இருந்த கோயில்களையும் நன்கு அறியலாகும்.

மற்றும், இச்செப்பேடுகளின் பிரசஸ்திப் பகுதியால், சோழ மன்னரின் மரபு வழியில் புதிய வரலாற்றுச் செய்திகள் பல புலனாதனுடன், முதல் இராசேந்திரனுடைய வரலாற்றிலும் புதிய செய்திகள் அமைந்திருப்பது அறிஞருலகம் அறியத்தக்கதாகும்.

# ஆராய்ச்சி உரை

**பிர்மதேய ஊர்களில் ஆராய்ச்சி :**

பதினோராம் நூற்றாண்டின் முற்பகுதியில் (1020) முதல் இராசேந்திரசோழனால் வெளியிடப்பட்ட இச்செப்பேட்டுத் தொகுதியுள் காணப்படும் செய்திகளினால், முற்காலச்சோழர் வரலாற்றுள், மனு, கரிகாலன், இராசகேசரி, பரகேசரி ஆகிய பண்டைச் சோழவரசர்கட்குரிய சிறப்பான செய்திகளைப்பற்றியும், விசயாலய சோழன் முதலாகத் தொடங்கிய பிற்காலச் சோழருள், முதல் இராசராசன் சத்தியாசிரயன் போர், இராசேந்திரனின் சிறப்பியல்புகள், அவனது பேராசிரியர், திரிபுவனமாதேவியின் பேராசிரியர் ஆகிய வரலாற்றுப் புதிய செய்திகளையும், பிற்காலச் சோழரின் ஆட்சிக்காலங்களாக ஆராய்ச்சியாளர் கணித்துக்கூறியுள்ள காலவரையில், இராசேந்திரனுடைய ஆட்சித் தொடக்கம் வேறுபடுதலையும், இதுவரையில் விளக்கியுள்ள சாசனச் செய்திகளிடையே, ஆங்காங்கே குறிப்பாகக் கூறியுள்ளேன். அவற்றிற்குரிய விளக்கங்களைப் புலப்படுத்துவதுடன், பிற சிறந்த வரலாற்றிடங்களையும் ஆராய்ந்து சான்றுகளுடன் கூறுவதே "ஆராய்ச்சி உரை" என்னும் தலைப்பிலமைந்த இப் பகுதியாகும்.

மற்றும், திரிபுவனமாதேவிச் சதுர்வேதிமங்கலமெனும் பெயருடன் அன்று இராசேந்திரனால் அமைக்கப்பட்ட பிர்மதேய ஊர்களையும் அவற்றிலுள்ள கோயில்களையும், செப்பேட்டில் கண்டுள்ள எல்லைகளைப் பின்பற்றிய முறையில், யான் நேரில் காணும் முயற்சியுடன் 1954 முதலாக ஒரு சில ஆண்டுகள் தொடர்ந்து ஆராய்ச்சி செய்ததின் பயனாக, இன்றும் செப்பேட்டில் குறிக்கப் பெற்றுள்ள ஊர்களுள் பல, பழம் பெயர்களுடன் தஞ்சையிலிருந்து நாகைக்குச் செல்லும் புகைவண்டிப்பாதையில் கோயில்வெண்ணி என்று இப்பொழுது கூறப்பெறும் சிற்றூ

ரைச் சூழ்ந்ததாக அமைந்திருப்பதைக் காண முடிந்தது. சோழ மண்டலத்தின் உட்பிரிவாகிய நித்தவிநோத வளநாட்டு, வீரசோழ வளநாட்டு வெண்ணிக்கூற்றத்துள் அடங்கிய ஊர்ச்சபைகள் இவையென்பதை மேலே உரிய இடத்தில் தொகுத்துக் கூறியுள்ளேன். இதுவரையில் திட்டமிட்டறியவியலாதிருந்த வெண்ணிக்கூற்றத்துளடங்கிய ஊர்ச் சபைகள் சோழர்கால அரசியலில் உயர்ந்த தகுதிகளுடன் விளங்கியவைகளாகும்.

**நித்த விநோத வளநாடும்–பிரிவும் :**

இது, சோழநாட்டிலமைந்த ஒன்பது வளநாடுகளுள் சிறந்ததொன்றும். தஞ்சை மாவட்டத்திலுள்ள மன்னார்குடி வட்டத்தின் வடக்குப்பகுதியும், அரிசிலாற்றுக்குத் தெற்குப் பரப்பும், தஞ்சாவூர் வட்டத்தின் கிழக்குப் பகுதியும், பாபநாசம் வட்டத்தின் மேற்குப்பகுதியும் கூடிய வளம் நிறைந்த பகுதியே நித்தவிநோத வளநாடாகும். இவ் வளநாட்டுள், ஆவூர் கூற்றம், நல்லூர் நாடு, காந்தார நாடு, கரம்பை நாடு, கிழார் கூற்றம, பாம்புணிக்கூற்றம், முடிச்சோழநாடு, பொய்யூர் கூற்றம், பூண்டிநாடு என்ற பிரிவுகள் உள்ளன. இதன் தென் சிறையாக இணைந்திருந்ததே வீரசோழவளநாடு. இரண்டு வளநாட்டிலும் இடம்பெற்றிருந்ததும் வெண்ணிநகரப்பெருங்குறி சபையோடு கூடியதுமான கூற்றமே வெண்ணிக்கூற்றமாகும்.

சிற்றூர்களாக, பழம்பெயர்களுடன் இன்றிருக்கும் ஊர்களின் நீர்வளத்திற்குரியதாகவும், எல்லைகளாகவும் செப்பேடுகளில் குறிக்கப்பெற்ற சிங்களாந்தகன் வாய்க்கால், மயிமாலய வாய்க்கால், சுந்தரசோழ வாய்க்கால், செய்யா நல்லூர் வாய்க்கால், புள்வேளூர் வாய்க்கால், கெஞ்ஞாப்பூர் வாய்க்கால், காமபதாகை வாய்க்கால், துளாருக்குப்பாயும் வாய்க்கால், வெண்ணில் நீரோடுகால், திரிபுவனமாதேவிப் பேரேரி, வெண்ணியாறு, கருணைக்காலான மும்முடிச் சோழப்பேராறு—ஆகியவற்றை இன்றும் காணமுடிந்தது. அவற்றுள் ஒருசில வாய்க்கால்களின் பெயர்கள் மாற்றமடைந்திருப்பினும், ஊர் எல்லைகளாக அவை குறிக்கப்பெற்றிருப்பதைக்கொண்டும் அதே வழியில் ஊர்களின் ஊடேயும் புறமாயும் அவைகள் செல்வதைக் குறிக்கும் குறிப்புக்களைக் கொண்டும் அன்று இடப்பட்டிருந்த பெயர்களால் அவைகளைத் திட்டமிட்டு அறியலானேன்.

திரிபுவனமாதேவிப் பேரேரி, இன்று தஞ்சை நாகை புகைவண்டிப் பாதையில், தஞ்சைக்குக் கிழக்கே மூன்றுவதாகவுள்ள சாலியமங்கலம் என்னும் ஊரிற்கும், அடுத்துள்ள அம்மாப்பேட்டைக்கும் இடையே அமைந்துள்ளதாகும். அன்று மிகப்பெரிய ஏரியாக இருந்து, காலப்போக்கில் தூர்க்கப்பட்டு இன்று சிறிய வடிவில் திருக்களாவுடையார் கோயிலைச் சூழ்ந்ததாக இருக்கின்றது. அன்று மிகப்பெரிய ஏரியாக இருந்ததென்பதை திருக்களாவுடையார் கோவிலிலுள்ள முதல் இராசேந்திரன் கல்வெட்டொன்று கூறுகின்றது.(A. R. No 403 of 1902)

இவ்வேரியின் வடகரைப் பகுதிகளை யான் ஆராய்ச்சி செய்தபோது, பதின்மூன்றும் நூற்றாண்டில் சைவ வைணவ சமயப் பூசலால் அழிவுற்றுத் தரையில் சிதைந்து புதைந்து கிடக்கும் விக்கிரமசோழ விண்ணகரத்தினைக்கண்டு, அதிலமைதிருந்த கல்வெட்டுகளைப்படியெடுத்து ஆராய்ச்சியுரையுடன் "தமிழ்ப்பொழி"யில் வெளியிட்டேன். கல்வெட்டில் அவ்வூர் 'திரிபுவனவீரபுரம்' என்று குறிக்கப்பட்டுளது. ஏரிக்கு வடபால் சுறுமுன்னியூரின் எல்லையாக அன்று குறிக்கப்பட்ட கருணைக்காலான சுந்தரசோழன் பேருறு, இன்று வெட்டாறு என்னும் பெயருடன் அப்பகுதியில் இடம் மாறுமல் ஓடுகின்றது.

ஏரியின் வடகரையில் உள்ளதாக செப்பேட்டில் குறிக்கப்பட்ட ஏகவீரியம்மை எனும் பீடாரியார் கோயிலும், ஏரிக்கரைப் பிள்ளையார் கோயிலும், திருப்பாற் கடல்

என்னும் பகுதியிலமைந்த திருமால் கோயிலும், ஐயன் கோயிலும் இன்றும் உள்ளன. முன்னியூரின் வடபால் பள்ளிச்சந்தமிறங்கினதாகக் குறிப்பிடப்படும் பகுதியில், அழிந்து நிலத்தகத்தே புதையுண்டிருந்த செங்கற்களாலான சமணக்கோயிலையும் அதற்குரிய பார்சுவநாதர் சிலையையும் கண்டுபிடித்தேன். அச்செய்தி 20—10—60 ல் வெளிவந்த நாளிதழ் சிலவற்றுள் வெளியாகியது.

## இராசேந்திரன் பிர்மதேயதானம் செய்ததேன்?

இராசேந்திரன் தன் தாயின் பெயரால் திருபுவனமாதேவிச் சதுர்வேதிமங்கலத்தை உண்டாக்கி, பிர்மதேய இறையிலியாக 1080 சதுர்வேதிபட்டர்கட்குத் தானமாக நீர்வார்த்துள்ளான். இத்தானத்தை, பெரும்பற்றப் புலியூர் மாளிகையில் உண்ணாவிருந்தபோது (விரதமேற்றிருந்தபோது) அந்தண அமைச்சர் ஸ்ரீஜகநாதன் என்பவர் விண்ணப்பிக்க அதன்படியே செய்துள்ளான் என்பது செப்பேடுகள் தரும் செய்தியாகும்.

சதுர்வேதிபட்டர்கட்கு நீர்வார்த்து நிலதானம் செய்ததோடு சைவ, வைணவ கோயில்கட்கு நிவந்தமாகவும், வேத ஆகம வியாகர்ண விருத்திக்கும், வேள்வியாசிரியர்கட்கும் பட்டவிருத்தியாகவும் நிலங்களளித்துள்ளான். இவற்றைக்கொண்டும், இவன் பின்பற்றி நடந்த வாழ்க்கை, சூழ்நிலை ஆகியவற்றைக்கொண்டும், செப்பேட்டில் காணப்படும் மிகப்பெரிய தானத்தினை இவன் செய்யக் காரணமென்னவென்று காண முயல்வது இயல்பேயாம்.

### (1) இராசேந்திரன் பின்பற்றி நடந்த வாழ்க்கை:—

**"சன்மார்க்கத்தில் இருப்பவன்"**
**—(வ. செ. 47.)**

**"இம்மைக்கும் மறுமைக்குமான வேத மார்க்கமாகிற குகையின் தத்துவத்தைக் காட்டும் ஞான விளக்காக இருப்பவன்."**
—(வ. செ. 72.)

**"எல்லா சாஸ்திரங்களையும் கடந்த அறிவை உடையவன் இராசேந்திரன்."**
—(வ. செ. 75.)

என்பது புலப்படும்.

(2) இவனுக்குரிய அரசியல் சுற்றம்:— அமைச்சர் சதுர்வேதி ஸ்ரீஜகநாதன்; ஆச்சாரியர் சர்வசிவ பண்டிதர், லகுலீச பண்டிதர்; ஆசிரியர்–காஷ்மகிராரி ஆராவமுது புருஷோத்தமனான இராசேந்திர ஸிம்ஹப் பேராசிரியர், அரச கரும மாராய்பவர்-கிழார் கூற்றத்து புள்ளமங்கலத்து பரமேஸ்வர சர்வ கிரத்யாஜி, திட்டைக்குடி மாவடிகள் ஸ்ரீதர பட்ட சோமயாஜி-ஆகிய சதுர்வேதிகளும் பட்டர்களும் ஆச்சாரியர்களுமாக இருந்துள்ளனர். இதனால் இராசேந்திரன் வேதியரைப்பேணிப் பெருமை பெற்றவனென்பது போதரும்.

(3) இந்நிலையில், இவனது ஆட்சியாண்டு எட்டில் இவனுக்குற்ற தீங்கொன்று நீங்கியதற்குச் செய்த நிவந்தமாக, இவன் மகன் இராசாதிராசன் கல்வெட்டொன்றில், "இராசேந்திரசோழ தேவர்க்கு எட்டாவதில் கலிகடிந்த பட்சத்தில்" கொங்கு நாட்டு உத்தம சோழபுரத்திலுள்ள கரபுர ஈசுவரர்க்கு நிவந்தமொன்று செய்ததாகக் குறிப்பொன்று காணப்படுகின்றது. (A. R. No 61 of 1888)

இவனுடைய ஆட்சியில் மக்கள் குறையின்றி வாழ்ந்திருந்தனர் என்பதை வரலாறுகள் தெளிவாக உரைப்பதால், கல்வெட்டில் குறிக்கப்பட்ட கலியென்பது பஞ்சகாலத்தைக் குறிப்பதாக இல்லை. கலியன் என்பது சனி என்னும் கோளுக்குரிய பெயர்களுள் ஒன்றாகும். எனவே, வேதாகமமுடைய பெரியோர்களுடன் இணைந்த வாழ்க்கையுடைய இவன், சோதிடத்தையும் பின்பற்றியவனாக இருந்திருத்தல் இயல்பே

யாம். இவனது ஆயுளுக்குரிய கோள் நிலைக ளுள் சனியின் திசையில் இவனுக்குற்பட்ட துன்பத்திற்குக் கழுவாயாகவே தானங் களும் அறங்களும் செய்திருக்க வேண்டு மென்று புலப்படுகின்றது. இதனையே இராசாதிராசன் கல்வெட்டும் கலிகடிந்த தாகக் கூறுகின்றது.

இவ்வாறு, இவனுக்குற்ற துன்பம் யாதெனக் காணும்போது, அவ் வெட்டா வது யாண்டிலேயே தனது தாயின் பெய ரால் பிர்மதேய நிலதானம் செய்திருப்பதால் இவன் தாய் திரிபுவனமாதேவி அவ்வாண் டில் இறந்ததினுல் உண்டான துன்பத் தையே குறிக்கின்றது எனலாம். அக்காலத் திலேதான் கங்கைகொண்ட சோழபுரத்தை யும் கோயிலேயும் இவன் உருவாக்கிக் கொண்டிருந்தான். தஞ்சையை விட்டுப் புதிய நகரொன்றினை உருவாக்கிக் கொண் டிருக்கும்போது, அன்பிற்குரிய தாய் இறந் தது இவனுக்குற்ற பெருந்துன்பமாகவும் புதிய நகரும் கோயிலும் உருவாகிவருவ தற்குத் தீநிமித்தமாகவும் கருதப்படுதல் இயல்பேயாம்.

எனவே, சாத்திரங்கள் தரும் நெறிப்படி நவக்கிரக சாந்தியாக வேள்விகள் நிகழப் பட்டவிருத்திகளும், கோயில்கட்கு நிவந் தங்களும் செய்ததோடு அதே காலத்தில்,

''எல்லா வேதங்களிலும் கரைகண்ட வர்களான அந்தண சிரேஷ்டர்களுக்கு வியாக்ரா அக்ரஹாரம் (பெரும்பற்றபுலியூர்) முழுவதையும் நீர்வார்த்துக் கொடுத்தான்.'' (வ செ. 65.)

''பல ஆஸ்ரமங்களை அந்தண சிரேஷ் டர்களுக்குக் கொடுத்தான்.'' (வ. செ. 68.)

அவற்றுடன், தன் தந்தை இராசராசன் திருவிசலூர் கோயிலில் துலாபாரதானமும் அரசி உலகமாதேவியார் இரணியகருப்ப தானமும் செய்ததைப் போலவே,

'' தன் தாயின் பெயரால் திரிபுவனமா தேவி என்றும் பெயருள்ள அக்ரஹாரத்தை மற்ற கிராமங்களோடு கூடினதாகச் செய்து வேத வொலியால் செவிடு பண்ணப்பட்ட திசைகளையுடையதாகவும் உலகத்தினுள் சாரமாகவும் செய்தான்'' (வ. செ. 67.)

இவ்வாறு சதுர்வேதி பட்டர் ஆயிரத் தெண்மருக்கு பிர்மதேயமாக ஊர்களை நீர் வார்த்துக் கொடுத்து, அதன் பயனாக தாய்க் குரிய மறுமைக் கடனையும் செய்து, புதிய தலைநகரை முழுமையாக்கும் மனநிறைவை யும் கொண்டான் இராசேந்திரன் என்பது புலனாகும்.

இராசேந்திரன் நவக்கிரக சாந்தி செய் துள்ளான் என்பதை, பிற கோயில்களில் இல்லாத புதுமையுடன் கங்கை கொண்ட சோழீச்சரத்திலுள்ள, ஒரே கல்லில் அமைக்கப்பட்ட நவக்கிரக பீடமும், நவக் கிரக விமானமும் உறுதிப்படுத்துகின்றன.

## தஞ்சையை விட்ட மன்னன் தங்கியிருந்த மாளிகை.

கி பி. 1014 க்குமேல், புதியதொரு தலைநகரை காவிரிக்கு வடக்கே அமைக்கத் தொடங்கிய இராசேந்திரன், எங்கிருந்து ஆட்சி செய்தானென்பதையும், தஞ்சையை விட்டு நீங்கிய காரணத்தினையும் இதுவரையில் வரலாறுகள் தெளிவு செய்தில. இதற்கோர் நல்விளக்கமாக இச்செப்பேட்டில் மன்னர் மரபுப் புகழ்ச்சியுரையுள் சில பகுதிகள் அமைந்துள்ளன.

இராசேந்திரன் பிர்மதேயதானம் செய்த இடம், ''பெரும்பற்றபுலியூர் விட்டவீட்டின் உள்ளால் மாளிகையின் கீழை மண்டபம் பிர்மாதிராஜனில்'' ஆகுமென்பதை ஏடு நான்கிலுள்ள உரைநடைப்பகுதி உணர்த்து கின்றது.

அவன் தங்கியிருந்த இடமாக,
''அரசர்கட்கு சூடாமணி போன்றவனும்,

வியாக்ரா அக்ரஹாரத்தில் வாழ்ந்தவனு மான இராசேந்திரன் எல்லா வேதங்களிலும் கரைகண்டவர்களான அந்தணச் சிரேஷ்டர் களுக்கு அக்ரஹாரம் முழுவதையும் நீர்வார்த் துக்கொடுத்தான்'' (வ. செ. 65) என்னும் செய்யுட்பகுதி விளக்குகின்றது.

எனவே, இராசேந்திரன் தஞ்சையை விட்ட அளவில் தங்கியிருந்த இடம் பெரும் பற்றபுலியூரெனும் வியாக்ரா அக்ரஹாரம் என்பது போதரும். இந்நகர் முதல் பராந்த கன் முதலாக சோழ மன்னர் போற்றிவரும் தில்லை நகரென்றும் பெயர் பெற்ற சிவத்தல மாகும். சைவ நெறியினனுகிய இராசேந்திரன் இத்தலத்தில் தங்கியிருந்ததென்பது இயல் பானதேயாகும். மற்றும், இராசேந்திரன் புதிய நகரொன்றினைப் பெரிய கோயிலுடன் அமைத்தது கி. பி. 1014க்கு மேலாகும். (கங்கைகொண்டசோழபுரம்) இப்புதிய நகர் பெரும்பற்றபுலியூர்க்குத் தென்மேற்கே இரு பது கல் தொலைவில் உருவானதாகும். புதிய நகரும் கோயிலும் தாம் விரும்பியவாறு மாளி கை அரண் ஆகியவற்றுடன் அமைக்கப் பெறுவதை, அவ்வப்போது அரசன் சென்று கண்காணித்துவருதற்கு ஏற்ற இடமாக இருந்தது பெரும்பற்றபுலியூராகும். அதற் கேற்ப, அரசன் தங்குவதற்குரிய மாளிகை யொன்றும் அங்கிருந்தது குறிப்பிடத்தக்க தாகும்.

எனவே, வியாக்ரா அக்ரஹாரமெனும் பெரும்பற்றபுலியூரிலேயே, புதிய நகர் உரு வாகிய காலமாகிய கி. பி. 1022 வரையில் இராசேந்திரன் தங்கியிருந்து அரசு செலுத்தி ருனென்னும் உண்மை புலனுகின்றது.

## மெய்க்கீர்த்தி, பிரஸஸ்தி.

மெய்க்கீர்த்தியென்பது, அரசனுடைய வீரச் செயல்களையும், புகழுக்குரிய பிற செயல்களையும் தொகுத்துச் செய்யுள் நடை யில் கூறப்பெறுவதாகும். இவ்வழக்கு முதல் இராசராசன் காலத்திலிருந்தே கல்வெட்டு களில் தொடர்ந்துளது. பன்னிருபாட்டியல், வச்சணந்திமாலை ஆகிய பண்டைத் தமிழி லக்கண நூல்களில் இதற்குரிய வரையறை கூறப்பட்டுளது. அதன்படியே, மங்கலச் சொல்லுடன் தொடங்கி, தமிழில் அகவற்பா நடையில் வேந்தன் மெய்ப்புகழெல்லாம் சொல்லியும், அந்தத்து அவன் வரலாறு கூறி யும் ஆட்சியாண்டினை அமைத்துக்கூறியும் நிறைவு பெறுவது மெய்க்கீர்த்தியாகும்.

'பிரசஸ்தி' என்பது, அறம் செய்யும் அரசனுடைய முன்னேர்களின் பாரம்பரியத் தினை, வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட தாக புராண இதிகாசங்களில் கூறப்பட்டவை முதலாகத் தொகுத்துரைப்பதுடன், அறம் செய்வானுடைய வீரம் புகழ் ஆகியவற்றை யும் வருணனைகளுடன் விரித்துக்கூறும் பகுதி யாகும். இப்பகுதி பண்டைத் தமிழகக் கல் வெட்டுகளிலும், செப்பேடுகளிலும் கிரந்த எழுத்துக்களாலான வடமொழிச் சுலோகங் களாகவே உள்ளன.

"பிரசஸ்தியை, தமிழில் மெய்க்கீர்த்தி யென்பர்'' என்று, திரு T. N. சுப்பிரமணியம் அவர்கள், தென்னிந்திய கோயிற் சாசனங் கள், பாகம்-3, பகுதி, உ, பக்கம் 356-ல் கூறுவர்.

பிரசஸ்தி வடமொழிச் சுலோகங்களால் வரையப்பெறுவது. மெய்க்கீர்த்தி தமிழ்ச் செய்யுள் நடையுடன் தமிழில் வரையப்பெறு வது. பிரசஸ்தி முறை வேறு. மெய்க்கீர்த்தி முறை வேறு என்பதை மேலே காட்டியுள் ளேன்.

இதனை, இச்செப்பேடுகள் நன்கு புலப் படுத்துகின்றன. செப்பேடுகளுள் முதல் மூன்று ஏடுகளில் பிரசஸ்தி பொறிக்கப்பட் டுள்ளது. பின், பதினேராவது ஏட்டில் மெய்க்கீர்த்தி தமிழில் வரையப்பட்டுள்ளது. சோழர் கால மெய்க்கீர்த்திகள் அனைத்தும் தமிழ்ச் செய்யுள் நடையிலேயே அமைக்கப் பட்டிருப்பது தனிச் சிறப்புடையதாகும். **பிரசஸ்தியை அறவோலைச் சாசனங்களின் முகவுரை என்றும் கூறலாம்.**

## சோழ மன்னர் வரிசையில் முரண்பாடு :

பிற்காலச் சோழர் மரபைத் தோற்றுவித்த விசயாலயன் முதல் இராசேந்திரன் வரையில் முறையே சோழ நாட்டாட்சியை ஏற்று நடத்திய, விசயாலயன், ஆதித்தன். முதல்பராந்தகன், கண்டராதித்தன். அரிஞ்சயன், சுந்தரசோழன் (பராந்தகன் II.) உத்தம சோழன், இராசராசன், இராசேந்திரன் என்ற ஒன்பது மன்னர்களை வரலாற்றறிஞர் முறைப் படுத்திக் கூறியுள்ளனர்.

இச்செப்பேட்டிலுள்ள மன்னர் மரபு வழிப்புகழ்ச்சியுரையுள் இதற்கு முரணாக, விசயாலயன், ஆதித்தன், பராந்தகன், அரிஞ்சயன், சுந்தரசோழன், இராசராசன், இராசேந்திரன் என்ற ஏழு அரசர்களே மகன் வழி முறைமையுடன் தொடர்பாகக் கூறப்பட்டுள்ளனர்.

இராசேந்திரனால் பார்வையிடப் பெற்றுள்ள இச்செப்பேட்டில், அவனுக்கு முன்னோரானவரும், வரலாற்றாசிரியர்களால் சைவ சமயத்துறையிலும் பிறவகையிலும் சிறப்பாகக் கூறப் பெற்றுள்ளவருமான கண்டராதித்தன் (கி பி 950–957) அவன் மகன் உத்தமசோழன் (கி பி 970–985) ஆகிய இருவரனுடைய பெயர்களும் சோழ மன்னர் வரிசையில் இடம் பெறாதிருப்பது வியப்புக்குரியதாகும்.

முதல் பராந்தகனின் இரண்டாம் புதல்வனான கண்டராதித்தன் ஆட்சி செய்து இறந்த பிறகு அரிஞ்சயன், இரண்டாம் பராந்தகனான சுந்தர சோழன் ஆகியோர் பதினேந்தாண்டுகள் ஆட்சி செய்துள்ளனர் அதன் பிறகே கண்டராதித்தனின் மகனான உத்தம சோழன் ஆட்சிப் பெற்று பதினேந்தாண்டுகள் அரசு நடத்தியுள்ளான். இவர்கள் இருவரும் ஆட்சி பெற்றிருந்த முறைமையை நுட்பமாக ஆராய்வோமாயின், இராசேந்திரன், இவர்கள் ஆட்சி பெற்றது அரசமுறைமைக்கு முரண்பாடாக அமைந்ததினாலேயே இவர்களின்பெயர்களை மன்னர் மரபினின்றும் நீக்கியுள்ளானென்று தெரிகின்றது. ஆனால், கி பி 957-ல், ஓராண்டு சோழவரசைக் காத்திருந்த அரிஞ்சயன் பெயரை இணைத்துள்ளான் என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கதொன்றும். இவ்வாறு, இராசேந்திரனுடைய மனம் வெறுப்புக்குள்ளானதற்குரிய காரணத்தினை விளக்குதல் இன்றியமையாததொன்றும்,

1. முதல் பராந்தகனுடைய முதல் மகனும், பெருவீரனுமாகிய இராசாதித்தன் ஆட்சி பெறுவதற்கு முன்னரே, ''யானை மேல் துஞ்சின தேவர்'' என்று குறிக்கப் பெற்ற அளவில், போரில் இறந்துள்ளான். அவன் இறந்ததினாலேயே இரண்டாம் மகனான கண்டராதித்தன் தந்தைக்குப்பின்னர் ஆட்சியைப் பெற்றுள்ளான். இராசாதித்தன் இறந்தது இயற்கையாலல்ல, போர்நிகழ்ச்சியினாலேயாம், அப்போரில் அவனைக் கொன்றது யார் என்பது விளங்காததொன்றாகவுளது.

2. அடுத்து ஆட்சிக்கு வந்த கண்டராதித்தனின் தம்பி அரிஞ்சயன், தன் மகன் சுந்தர சோழனுக்கு உரியவயது வராத காரணத்தால், ஓராண்டு ஆட்சி செய்த பின்னர் மகனை அரசனாக்கியதாக வரலாறுகள் கூறுகின்றன. அரசு பெறுவதற்கு ஏற்புடையதாகக் கருதப்படும் வயதில் ஓராண்டு குறைந்ததினால் அதை நிறைவு செய்ய அரிஞ்சயன் ஆட்சியை மேற்கொள்ள வேண்டியதில்லை. மிகவும் இளமையுடைய பிள்ளையே அரசுரிமைக்குரியதாயின், தக்கவர் ஆட்சிப் பொறுப்பை பலவாண்டுகள் ஏற்றுச் செல்வது அரச முறைமைக்குரியதேயாகும். ஆனால் அரிஞ்சயன் ஓராண்டு அரசைக்காத்துத் தன் மகனிடம் ஒப்படைத்துள்ளான். இதில், வயதைப்பற்றிய குறையேற்பட்டதாகக் கருத இடனில்லை. கண்டராதித்தன் ஆட்சி செய்து முடிந்தவுடன், இளம்வயதினனான அவன் மகன் உத்தம சோழனுக்கு அரசுரிமை வழங்க முயற்சிகள் நிகழ்ந்திருக்க வேண்டும். அவ்வாறு ஏற்படாமல், இராசாதித்தன் இறந்த பிறகு அவன் தம்பி கண்ட

ராதித்தன் அரசு பெற்ற வகையில் கண்டரா தித்தன் இறந்த பிறகு அவன் தம்பி அரிஞ்ச யன் அம்முறையே அரசையேற்று முறையா கத் தன் மகன் சுந்தர சோழனிடம் ஒப்படைத் துள்ளான். இவ்வருஞ்செயலை நினைவில் வைத்தே முதல் இராசராசசோழன். தன் பாட்டனுக்கு மேற்பாடி என்னும் ஊரில் பள்ளிப்படையாக "அறிஞ்சிகை ஈச்சரம்" எடுத்துள்ளான் இராசேந்திரனும் செப் பேட்டில் சிறப்பாகப் புகழ்ந்துள்ளான்,

3. இரண்டாம் பராந்தகனாகிய சுந்தர சோழனுக்கு ஆண்மக்கள் இருவர். மூத்த வன் ஆதித்த கரிகாலன். இளையவன் அருண் மொழிதேவன் (இராசராசன்) தந்தைக்குப் பின் அரசு பெறுவதற்குரிய தகுதிகள் அனைத் தும் பெற்றதோடு, பாண்டியனை வென்று, "பாண்டியனை சுரமிறக்கின பெருமாள்" என்ற விருதுப்பெயருடன் திகழ்ந்த ஆதித்த கரிகாலனை, சோழவரசுக்குரிய அமைச்சர் சிலர் வஞ்சனையால் கொன்றனர், இந்நிகழ்ச் சியால் மனமுடைந்து பொன் மாளிகையி லிருந்த சுந்தர சோழனும் இறந்தான், அடுத்து அருண்மொழிதேவனை இராச ராசன் ஆட்சி பெறுதற்குரிய தகுதிகளுடன் இருந்தும், அரு முயற்சியுடன் காலங்கருதி யிருந்த உத்தம சோழன் அரசுரிமையைக் கைப்பற்றியுள்ளான். அவன் பதினைந்தாண்டு கள் அரசு பெற்றிருந்த பின்னரே, ஐம்ப துக்கு மேல் வயதடைந்திருந்த இராசராசன் அரசுபெற முடிந்தது.

இவ்வாறு, இராசாதித்தன் போரில் கொல்லப்பட்ட பின்னர் கண்டராதித்தன் அரசு பெற்றதும், உத்தம சோழனுக்கு அரசு கிடைக்க நிகழ்ந்த முயற்சிக்கு மாறாக, முறைமையுடன் அரிஞ்சயன் அரசை ஏற்றுக் காத்து சுந்தர சோழனுக்குக் கொடுத்ததும், ஆட்சிக்குரிய திறனெல்லாம் படைத்த ஆதித்த கரிகாலன் வஞ்சனையாளரால் கொல் லப்பட்டதும், பொன் மாளிகையில் சுந்தர சோழன் மனமுடைந்து இறந்துபட்டதும். கி பி. 950 முதலாக 970 வரையில் நிகழ்ந்த சோழவரசுக்குத் தொடர்ந்து வந்த அரசியல் உட்பகைச் சூழ்ச்சிகளின் விளைவுகளேயாகும். அரசுரிமை பெறுவதற்கு உரிமையில்லாமல் காலங்கடந்திருந்த உத்தம சோழன், விரை வில் அரசுபெறும் நோக்கமுடன் நிகழ்ந்த செயல்களென்றும் கூறலாகும்.

இந்நிலையில், சிவனடியாராக உயர்ந் திருந்த கண்டராதித்த தேவருடன், சைவப் பற்றுடன் திருப்பணிகளையும் நிவந்தங்களை யும், பிர்மதேயங்களையும் செய்துள்ளதாகக் கல்வெட்டுகளில் காணப்படும் அவன் மனைவி செம்பியன்மாதேவி, மகன் உத்தம சோழன் ஆகியோருடைய அறச் செயல்களைக் கொண்டு வரலாற்றாசிரியர்கள் இவர்களை உயர்வாகவே கூறியுள்ளனர். நெடுங்காலம் வாழ்ந்திருந்த செம்பியன் மாதேவிக்கு, தன் மகன் உத்தம சோழன் அரசுபெற்று ஆட்சி செய்ய வேண்டுமென்ற ஆசை நெடுநாட் களாகவே இருந்ததென்று சொல்லலாம். மேலேகண்ட அறச்செயல்களெல்லாம் மக்க ளின் நல்லெண்ணத்தைப் பெறும் நோக்கு டைய அரசியல் திறனாகுமென்பதில் ஐய மில்லை. அரசியலில் நிகழும் சூழ்ச்சிகளையும் திறன்களையும் வெளிப்படையாக அறித லென்பது இயலாததொன்றும். எனவேதான் அவற்றை "இராஜ தந்திரம்" என்று சான் றோர் செப்பினர்.

மற்றும் சங்க காலத்தில் வள்ளண்மையி லும் ஆட்சியிலும் சிறந்திருந்த கோப்பெருஞ் சோழனை, ஆட்சியை விரும்பிய அவன் மக்களே எதிர்த்துள்ளனர்.

தாயத்தினனை அழிக்கும் நோக்கமே பெரிதென்று, மாலிக்காபூரை அழைத்துவந்து பழம்பெருமை பெற்ற பாண்டிய நாட் டையே பறிகொடுத்துள்ளான் சுந்தர பாண்டி யன். வடஇந்தியாவில் வரலாற்றுக் காலந் தொட்டு விளங்கிய வம்சங்களின் மன்னர் வரலாறுகளை எழுதிய ஆசிரியர்கள் அவ்வர சர்களின் குணநலன்களையும் அவர்கள் செய்த தீமைகளையும் உள்ளபடியே அறிந்து விரிவாக எழுதியுள்ளார்கள். நம் தமிழக வரலாற்றை எழுதிய ஆசிரியர்கள் எல்லா அரசர்களும்

உயர்பண்பும் செயலும் உடையவர்களென்றே பெரும்பான்மையும் எழுதியுள்ளார்களே தவிர, மனிதப் பண்பியல்கட்குரிய நன்மை தீமைகளை அவர்கள் பால் கண்டதாக எழுதவில்லை என்பது இங்கு நினைவு கொள்ளத்தக்கதாகும்.]

இதுவரையில் சோழர் வரலாற்றில் குறிக்கப்பெறுந் செய்திகளைக் கொண்டே, கண்டராதித்தன், அவன் மகன் உத்தம சோழன் ஆகியோருடைய ஆட்சிகள் சோழர் மரபு வழிக்கு முரண்பாடாக வந்ததால், முதல் இராசேந்திரன் தனது பிர்மதேயச் சாசனத்தில் அவர்களின் பெயர்களை நீக்கிய நிலையில் சோழ மன்னர் பாரம்பரியத்தினைத் தொடர்பாக உணர்த்தியுள்ளான்.

1. ''பராந்தகன் இமையோருலகைக் காப்பாற்றுவதில் ஈடுபட்டபோது, அவனுடைய மகனை அரிஞ்சயன் என்பவன் மானிட உலகத்தைக் காப்பாற்றும் பொறுப்பை ஏற்றான்.'' (வ. செ, 22.)

* இப்பகுதியில் கண்டராதித்தனுடைய ஆட்சி நீக்கப்பட்டுளது.

(2) அரசர்களுள் சிறந்த பராந்தகன் (சுந்தரசோழன்) வானுலகைக் காப்பதற்குச் சென்றபொழுது, அரசர்களின் முடிவரிசைகளால் தழுவப்பட்ட பாதபீடத்தை உடையவனும், சோழ மரபிற்கு விளக்கு போன்றவனுமான இராஜராஜன் என்னும் அவனுடைய மகன், ஆதிசேடனுடைய உடலின் அழகைப் பற்றுகிற புயத்தினால் சுமை பொருந்திய இவ்வுலகைத் தாங்கினான்.'' (வ. செ. 26)

* இப்பகுதியில், உத்தமசோழன் ஆட்சி நீக்கப்பட்டுள்ளது.

இவ்வாறு, மன்னர் மரபுப் புகழ்ச்சியுரையுள், இராசேந்திரன், மகன் வழி முறைமையாகச் சோழ மன்னர்களைக் குறித்திருப்பதையும், திட்டமாகக் கண்டராதித்தன் அவன் மகன் உத்தம சோழன் ஆகிய இருவரும் நீக்கப்பட்டுள்ள செய்தியையும் கண்டு, அதற்குரிய காரணத்தினை யான் மேலே விளக்கியுள்ள உரையினால் தெளியலாகும்.

மற்றும், செம்பியன்மாதேவியார் தமது திருப்பணிகள் அறச் செயல்கள் ஆகியவற்றைக் கூறும் கல்வெட்டுகளில், தான் கருவிருந்து பெற்ற மகனை உத்தம சோழன் என்பதை வலியுறுத்தும் செய்தியாக, ''உத்தம சோழ தேவரை திருவயிறு வாய்க்கப்பெற்ற செம்பியன் மாதேவியார்'' என்று கூறிக்கொள்வதும் மேற்குறித்த செய்திகளோடு ஒப்பிட்டுச் சிந்திக்கத்தக்கதாகும்.

## அறவோலை நிறைவேறிய காலக் கணிப்பு.

திரிபுவனமாதேவிச் சதுர்வேதிமங்கலத்துக்குரிய பிர்மதேய அறவோலையை, நாட்டு வழக்குப்படி, ஊர்ச்சபையார் நிறைவு செய்து அளித்தது ''பிர்மதேய எட்டாவது நாள் முன்னூற்றெண்பதினால்'' என்று செப்பேடு 22-ல் தெளிவாகக் குறிக்கப்பட்டுளது

திங்களொன்றுக்கு மதிப்பக்கம் 30-நாட்களாக, ஆண்டொன்றிற்கு 360-நாட்களே கூடியதாகும். சாசனத்தில் நாள் முன்னூற்றெண்பது என்று குறிப்பிடப்பட்டுளது. இதைக் காணின், கருத்துக் குறைவாகச் செப்பேட்டில் நாட்பிழை ஏற்பட்டது போலுமென்றே தோன்றும். ஆனால் சோழர் காலக் கணக்கதிகாரிகள் ஒரு சாண் அளவுள்ள நிலத்திற்கும் கணக்களவிட்டுக் கூறும் திறமையாளரென்பதை இச்செப்பேட்டின்கண் அளவுப் பகுதிகள் நன்கு உணர்த்துகின்றன. எனவே, நாளினைக் குறிப்பதில் தவறு செய்திலர் என்பதை சோழர் கால வழக்குப்படி விளக்குதல் நன்றாம்.

இராசேந்திர சோழன் பிர்மதேயமாக நீர்வார்த்துக் கொடுத்தது,

(1) "ஆட்சியாண்டு எட்டு நாள்-107ல்."

பிர்மதேய ஊர்களை அளவிட்டு, எல்லை யிட்டு, வருவாயுடன் வரியிலிட்டு அதிகாரிகள் அரசனிடம் கொடுத்தது,

(2) "யாண்டு எட்டாவது, நாள்-170ல்."

அதன்மேல் அரசன் தானம் செய்யப் பட்ட பிர்மதேய நாட்டோருக்கு அறவோலை யாக்க ஆணை செய்தனுப்பிய திருமுகத்தை அவர்கள் பெற்றது,

(3) "யாண்டு எட்டாவது, நாட்கீழ்."

மேற்கண்ட மூன்று காலங்களில் முதலி ரண்டு காலங்கட்கு யாண்டும் நாளும் எண் ணால் குறித்துச் சாசனம் எழுதியவர், மூன்ரு வதாக, யாண்டை மட்டில் எண்ணால் கூறி, நாளை "நாட்கீழ்" என்று குறிப்பதேன்?

அரசன் தானம் செய்த ஆண்டில், அற வோலை நிறைவு பெறுதற்குரிய ஆய்வுகள் நிறைவுபெருது மேலும் காலம் கூடுமாயின் அந்நாளினையும் தொடங்கிய ஆண்டுக்குரிய 360-நாளுடன், தொடர்ந்து செல்லும் நாளா கவே கணிப்பது அக்கால வழக்கென்பது இதனால் புலனாகின்றது. அதற்குரிய அறிகுறி யாகவே நாளின் எண்ணிக்கையைக் குறிக்கா மல் "நாட்கீழ்" என்று சாசன வழக்குச் சொல்லால் எழுதியுள்ளனர். பின்னர் பிர்ம தேயத்திற்குரிய ஊர்ச்சபையார்கள் சாசன நிறைவாக எல்லைகளைக் கண்டு தணிக்கை செய்து அறவோலையை நிறைவாக்கி இறை யிலி செய்து கொடுத்த காலத்தை அறுதி யிட்டுக் குறிக்குமிடத்தில் "பிர்மதேய எட் டாவது நாள் முன்னூற்றெண்பதினால்" என்று தெளிவாகக் குறித்துள்ளனர். இதில் யாண்டு "பிர்மதேய எட்டாவது" என்று சிறப்புப் பெயருடன் குறிக்கப்படுவதும், நாள் அப் பிர்மதேய யாண்டுக்குரிய தொடர் நாளாக நாள் முன்னூற்றெண்பதென்று குறிக்கப்படுவதும் சாசன வழக்காகும்.

இவ்வாறு, யாண்டும் நாளும் கூருமல், தொடர் ஆண்டுக் கணக்குடன், யாண்டு ஒன்பது, நாள் இருபது என்று குறிப்பதாயின்; பிர்மதேய இறையிலி தொடங்கிய யாண்டு இது என்பது தெளிவாகாமல் சாசனச் செய்தி யில் குற்றமுண்டாகும். எனவே தான் சாசனம் எழுதியவர், நாட்கீழ் என்றும், பிர்ம தேயயாண்டென்றும் நிலவுரிமை எழுதும் வழக்குச் சொற்களால் குறித்துள்ளார் என் பது தெளிவாகும்.

## செப்பேட்டுச் சாசனம் வெளியிட்ட காலம்.

முதல் இராசேந்திர சோழனால் வெளியி டப்பட்டுள்ள இச்செப்பேட்டிலுள்ள மெய்க் கீர்த்தியில் கண்டுள்ள "யாண்டு எட்டாவது நாள் கிழ்" என்பதாகும். இதனால், எட்டா வது யாண்டு நிறைந்து ஒன்பதாவது யாண் டின் தொடக்கம் (கி. பி. 1020-21) என்று குறிப்பிடலாம். இக்கால அளவிற்குள் இரா சேந்திரன் வென்றுள்ள நாடுகளாக மெய்க் கீர்த்திகளில் குறிப்பிடப்படுவன, இடை துறை நாடு, வனவாசி, கொள்ளிப்பாக்கை, மண்ணைக்கடக்கம், ஈழமண்டலம், பழந் தீவுகள், சாந்திமத்தீவு ஆகிய ஏழு நாடுகளே யாகும்.

ஆனால் சாசனத்தின் முகவுரைப் பகுதி யாகும் வடமொழிச் செய்யுட் பகுதியில் (பிரசஸ்தி) இராசேந்திரன் வென்றுள்ள நாடு களாகக் குறிக்கப்படுவன காம்போஜம், சக் கரக்கோட்டம், மான்யகேடம், சிங்ஹள தேசம் (இலங்கை) கடாரம், கங்கை வெற்றி ஆகியவைகளாகும்.

இவற்றைக்கொண்டு ஆராய்வோமானால் இராசேந்திரனுடைய வடநாட்டுப் படை யெடுப்பில், ஆட்சியாண்டு 8 - 9 அளவில் கிடைத்துள்ள வெற்றிகளை மெய்க்கீர்த்தி உரைக்கின்றது என்பதும், அவ்வாண்டிற்கு மேல் கிடைத்துள்ள வெற்றிகளை வடமொ ழிச்செய்யுள் உரைக்கின்றதென்பதும் அறிய லாகும்.

இராசேந்திரன் கங்கைக் கரையில் ஆரிய அரசரை வென்று, அவர்கள் தலையில் கங்கை நீரைக்கொணர்ந்து தாம் புதிதாக அமைத்த நகரைப் புனிதப்படுத்தியது ஆட்சியாண்டு பன்னிரண்டில் (கி. பி. 1024) என்றும், கடல் கடந்து பெற்ற கடார வெற்றி பதின்மூன்றும் ஆண்டிலென்றும் வரலாற்றாராய்ச்சியாளர்கள் தெளிவு செய்துள்ளனர்.

எட்டாவது ஆட்சியாண்டில் பிர்ம தேயம் ஏற்பட்டபோது, கடல் கடந்த வெற்றியோ, கங்கைக்கரைப் படையெடுப்போ நிகழவில்லை என்பதை மெய்க்கீர்த்தி உணர்த்துகின்றது. ஆனால், முகவுரையாகும் பிரசஸ்தியில் கங்கை கடார வெற்றிகளை இராசேந்திரன் அடைந்ததாகக் கூறப்பட்டுள்ளது.

(1) ''இராசேந்திரனுடைய பராக்கிரம மாகிற தீயானது தைலபனுடைய சந்ததியை எரித்து விட்டது என்னும் செய்தி வியக்கத் தக்கதன்று; ஏனெனில், கடலைக் கடந்து கடாரத்தை நன்றாக எறிந்து விட்டான் என்கிற மற்றொரு அற்புதத்தினால்''. (வ.செ. 62)

(2) ''கங்கையைக் கொண்டு வருதற்காகத் தவம்பூண்டு மெலிந்த பகீரதனுடைய கதையைக் கேட்டுச் சிரித்துக் கொண்டு, அதன் கரையிலுள்ள அரசர்களுடைய முடிகளாலேயே கங்கையைத் தன் நாட்டுக்கு அழைத்துவந்துவிட்டான்''. (வ. செ. 64)

இவ்வாறு, கி. பி. 1024, 25-ல் நிகழ்ந்த கங்கை, கடார வெற்றிகளை, கி. பி. 1020-ல் உண்டான பிரசஸ்தி முன்னதாகவே கூறுவதாக எவ்வகையிலும் கொள்ளவியலாது. ஆதலினால், சாசனம் கி. பி. 1020-ல் தோன்றியதாயினும், அதைச் செப்பேடுகளில் முறையாகப் பொறித்து வெளியிடுவதற்கு இடைப்பட்டதாக ஏறத்தாழ நான்காண்டுகள் கழிந்துள்ளன.

இவ்விடைக்காலத்தே இராசேந்திரன் புதிதாக அமைத்துவரும் நகரைப் புனிதப்படுத்தும் முயற்சியாகக் கங்கை நீரைக் கொணரவும், பகைவரை அடக்கவும், வடநாட்டில் படையெடுத்திருந்ததால், செப்பேட்டுச் சாசனத்தினை வெளியிடும் நிகழ்ச்சி காலம் கடந்தது போலும்! அக்காலம் வரையில் இராசேந்திரன் வடக்கே பெற்றிருந்த கங்கை வெற்றியையும், கடல் கடந்து பெற்ற கடார் வெற்றியையும், வடமொழிச் செய்யுளை கி. பி. 1024–25-ல் எழுதிய ஆசிரியர் செய்யுளில் கூறி, செப்பேடுகளில் பொறித்துச் சாசன முகவுரையாகத் தந்துள்ளார் என்பது நன்கு விளங்குகின்றது.

எனவே, இச்சாசனம் கி. பி. 1020-ல் ஏற்பட்டதாயினும், பிரசஸ்தியுடன் கூடிய செப்பேடு கி. பி, 1024–25-ல் நிறைவு பெற்றதாக வெளியிடப்பட்டுளதென்பது போதரும்.

இராசேந்திரனுடைய ஆட்சியாண்டு ஆறில் உண்டான திருவாலங்காட்டுத் தேவதானப் பட்டய பிரசஸ்தி, இவனது கங்கை, கடார வெற்றியைக் கூறுவதாலும், பிர்ம தேய சாசனத்தை எழுதியவரும் வெட்டியவரும் அத்தேவதானப் பட்டயங்களை உருவாக்கியிருப்பதாலும், இவ்விரண்டு செப்பேட்டுச் சாசனங்களும் ஓரே காலத்தில் நிறைவிக்கப்பெற்று வெளியிடப்பட்டுள்ளன என்பது புலனாகின்றது.

## இராசேந்திரன் ஆட்சி பெற்ற காலம்?

முதல் இராசேந்திரன் ஆட்சி பெற்ற யாண்டு, கி. பி. 1012 என்று பிற்காலச் சோழர் வரலாறுகளில் திட்டமாகக் குறிக்கப்பட்டுளது. இராசேந்திரனால் வெளியிடப் பெற்றுள்ள திரிபுவனமாதேவிச் சதுர்வேதி மங்கலத்துப் பிர்மதேயமென்று பெயர்பெறும் இச்செப்பேட்டிலுள்ள மன்னர் மரபுப் புகழ்ச்சியுரையில் இவ்வாட்சியாண்டு பற்றிய விளக்கமொன்றுளது அச்செய்யுள்,

"மதுராந்தகன் என்னும் இவ்வரசன்
தான் பட்டத்துக்கு வந்த ஆண்டில்,
ஆயிரத்துடன் எண்பதும் கூடின
எட்டாவது ஆண்டினை அடைந்தவனாய்
நாளும் விழாக்கள் நிறைந்த தனது
நாட்டில் நிலைத்த செல்வம் படைத்த
பல ஆஸ்ரமங்களை அந்தணச்சிரேஷ்
டர்களுக்கு அன்புடன் கொடுத்தான்".

என்பதாகும். (வ செ. 68)

இதில் பிர்மதேயம் செய்யப்பட்டதைக் குறிக்கின்ற ஆண்டு எண் ஆயிரத்துடன் எண்பதும் கூடின எட்டாவது ஆண்டாகும் (1080+8=1088). இதில் ஆயிரத்துடன் எண்பதும் என்பது இராசேந்திரனது ஆட்சி யாண்டுத் தொடக்கமும், அதிலிருந்து எட்டாவது யாண்டில் பிர்மதேயம் நிகழ்ந்துள்ளதால், "கூடின எட்டாவது ஆண்டு" (1088) என்றும் கூறப்பட்டுளது.

இதில் குறிக்கப்பட்டுள்ள ஆண்டின் கால அளவுக்கு, சோழ மன்னர் ஆட்சிக் காலங்களில் அவர்களது கல்வெட்டுகளில் பின்பற்றப்பட்டுள்ளதும், தமிழகத்தில் வழக்கிலிருந்ததுமான, சாலியவாகன ஆண்டு, கலியுக ஆண்டு, விக்ரம ஆண்டு இவற்றிற்குக் கணக்கிடுவோமானால், இற்றைக்கு கி. பி. 1973க்கு, சாலியவாகன ஆண்டு-1894. கலியுக ஆண்டு-5073. விக்ரம ஆண்டு-2029. இவை ஒவ்வொன்றுடனும் கணக்கிட்டால், சாலிடவாகன ஆண்டுக்கு இராசேந்திரன் ஆட்சி ஏற்ற ஆண்டாவது கி. பி. 1159-ம், கலியுக ஆண்டு மிகுதியாகவும் வருவதால் எவ்வகையினும் பொருந்தியதாக இல்லை. எஞ்சிய விக்ரம ஆண்டுக்குக் கணக்கிடும் போது, கி. பி. 1024-ல் ஆட்சி தொடங்கியதாகின்றது. இக்கால அளவு வரலாறுகள் குறிப்பிடும் ஆண்டுக்குச் சார்பாகவே காணப்படுகின்றது. ஆட்சியாண்டின் தொடக்கம் கி. பி. 1024 ஆயின் அதிலிருந்து எட்டாவது யாண்டில் இராசேந்திரன் பிர்மதேயம் செய்துள்ளதால் அவ்வாண்டு கி. பி. 1032 ஆகும். இராசேந்திரனுடைய கல்வெட்டுகளுள் சில விக்ரம ஆண்டினைக்குறிப்பதால், வடமொழிச் செய்யுள் தரும் ஆண்டு விக்ரம ஆண்டென்பது பொருந்தியதாகவேயுளது.

இதனால் விசயாலயன் முதலாகத் தொடரும் சோழ மன்னர் ஆட்சிக்கால அளவு முறையில் ஒரு புதிய திருப்பம் உண்டாதலை அறிஞர் ஆராய்தல் இன்றியமையாதது தோன்றும்.



கிரந்தைத் தமிழ்ச் சங்கம்

